பாபாசாகேப்

# டாக்டர் அம்பேத்கர்

நூல் தொகுப்பு :

தொகுதி 16





டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம்: ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

''சிறந்தவராக மட்டுமே இருக்கக் கூடிய ஒருவர் மிகச் சிறந்தவராக இருப்பவரை மிஞ்சி விடுமளவுக்கு எதுவும் செய்யக்கூடாது. சிறந்தவராக இருப்பவரை நல்லவரும், நல்லவராக இருப்பவரைக் கெட்டவரும் மிஞ்சிவிடக் கூடாது என்ற கருத்தியலான கோட்பாடு குறித்து எவரும் சண்டையிட்டுக் கொள்ள மாட்டார்கள்...

ஆனால் மனிதன் வெறும் இயந்திரமல்ல. அவன் சிலர்பால் அனுதாபமும் மற்றவர்கள்பால் வெறுப்பும் கொண்ட மானுடப் பிறவியாக இருக்கிறான். ''மிகச் சிறந்த'' மனிதனுக்கும் கூட இது பொருந்தும். அவனும்கூட வர்க்க அனுதாபங்கள் நிறைந்த உணர்வுகளையும் வர்க்க வெறுப்புணர்களையும் கொண்டவனாக இருக்கிறான். இக்கருத்துக்களுக்கு உரிய மதிப்பளிக்கும் அதேவேளையில் ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்த ''மிகச் சிறந்த'' மனிதன், அடிமை வர்க்கத்தின் கண்ணோட்டத்தில் மிக மோசமானவனாக இருக்கக்கூடும். ஒருவர் மற்றவரின் பாலான தங்களது அணுகுமுறையின் விஷயத்தில் ஆளும் வர்க்கங்களுக்கும் அடிமை வர்க்கங்களுக்கும் இடையிலான வேறுபாடானது ஒரு தேசத்தைச் சேர்ந்த நபர் மற்றொரு தேசத்தைச் சேர்ந்த நபரின் பாலான அணுகுமுறையை போன்றதேயாகும்.''

- *டாக்டர் அம்பேத்கர்*

'தீண்டப்படாதவர்களுக்கு காங்கிரசும் காந்தியும் சாதித்தது என்ன?'

This Volume XVI in Tamil forms the First part of the English Edition Volume 9: **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - published by the Education Department, Government of Maharashtra, 1990.**

முதற் பதிப்பு : 1999



விலை : ரூ. 40/-

நூலகப் பதிப்பு: ரூ. 135

வெளியீட்டாளர் :

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்
நல அமைச்சகம்,
இந்திய அரசு,
25, அசோகா சாலை,
புதுடில்லி.

விற்பனை நிலையம்:

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41 B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.

அச்சிட்டோர்:

பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,
142, ஜானி ஜான் கான் ரோடு,
ராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொலைபேசி: 8532441, 8532973.

## ஆலோசனைக்குழு

**திருமதி மேனகா காந்தி**
*நலத்துறை இராஜாங்க அமைச்சர்*
*(தனிப்பொறுப்பு)*
*இந்திய அரசு*

**திரு. தர்மசிங் மௌர்ய**
*செயற்குழு உறுப்பினர்*
*டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்*

**திரு. டி.கே. மணவாளன்,**
*செயலாளர், நல அமைச்சகம்*

**திரு. ஏ.கே. சௌத்ரி,**
*இணைச் செயலாளர், நல அமைச்சகம்*
*மற்றும் உறுப்பினர் - செயலாளர்*
*டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்*

***நிர்வாகப் பதிப்பாளர் (தமிழ்) :***
***டாக்டர் எஸ். பெருமாள்,*** *எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.,*

ஆங்கில நூல் தொகுப்பாளர் :

திரு. வஸந்த் மூன்
*மும்பை*

தமிழ் நூல் பதிப்பாளர் :

*டாக்டர் எஸ். பெருமாள்*

மொழிபெயர்ப்பாளர்கள் :

*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*
*திரு. நா. ஜெயராமன்*

ஒப்புநோக்கியோர் :

*திரு. அ. பிச்சையா (அசரீரி)*

பிழைதிருத்த உதவி:

*திருமதி பிரியா கமல், எம்.காம்.,*

# அணிந்துரை

நம் நாட்டின் தேசத் தந்தை மகாத்மா காந்தியும், பாரத ரத்னா டாக்டர் அம்பேத்கரும் இருபதாம் நூற்றாண்டில் நாம் பெற்ற இருபெரும் மாமனிதர்களாவர். இவர்கள் ஆற்றியுள்ள பணிகள் சாதாரணமான எவராலும் மதிப்பிட முடியாதவை. அவர்களைப் பற்றி நாம் அறிந்து கொள்ள வேண்டுமானால் அவர்களுக்கு இருந்த அர்ப்பணிப்பு, நேர்மை, ஆழ்ந்த ஈடுபாடு, அரசியலறிவு, பொதுமக்களோடு கொண்டிருந்த தொடர்பு ஆகிய தகுதிகள் நமக்கு இருக்க வேண்டும். இந்த மாமனிதர்கள் இருவரும் தீண்டாமை ஒழிப்பிற்கு அரும்பாடுபட்டவர்கள். இதற்காக இவர்கள் மேற்கொண்ட அணுகுமுறைகள் சூழ்நிலைகளுக்கு ஏற்ப வேறுபட்டதாயினும், அவர்களின் நோக்கமும் பிரச்சினைகளை அவர்கள் அறிந்து கொண்டிருந்த முறையும் ஒன்றாகவே இருந்தன. பொதுமக்களின் கருத்தைச் சாதகமாக்கிச் சமூக எழுச்சியைக் கொண்டு இந்தத் தீமையை ஒழிக்க வேண்டும் என்று மகாத்மா காந்தி கருதினார். சமூக மாற்றத்திற்குப் போராட்ட முறையே ஏற்றது என்று டாக்டர் அம்பேத்கர் வலியுறுத்தினார். இந்தப் பின்னணியில் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் எழுதிய நூலே ''தீண்டப்படாதவர்களுக்கு காங்கிரசும் காந்தியும் சாதித்தது என்ன?'' என்பதாகும்.

தீண்டாமை என்னும் சமூகத் தீமை இந்திய அரசியலமைப்புச் சட்டப்படி தண்டனைக்கு உரியதாகும். அரசியலமைப்புச் சட்டத்தின் இந்த குறிக்கோள்களின்படி சமூக மாற்றத்தை உருவாக்குவதில் நமது அரசு உறுதிபூண்டுள்ளது. டாக்டர் அம்பேத்கரின், ''தீண்டப்படாதவர்களுக்கு காங்கிரசும் காந்தியும் சாதித்தது என்ன?'' என்னும் நூலின் தமிழாக்கம், தமிழ் மக்களுக்கும், சமூகப் பணியாளர்களுக்கும் அரசியல்வாதிகளுக்கும் எழுச்சியையும் ஊக்கத்தையும் அளிப்பதாகும்.

நல்வாழ்த்துக்கள்!

மேனகா காந்தி
(திருமதி மேனகா காந்தி)
நலத்துறை இராஜாங்க அமைச்சர்
(தனிப் பொறுப்பு), இந்திய அரசு

புதுடில்லி

## வாழ்த்துரை

பாரத ரத்னா டாக்டர் பாபாசாகேப் பி.ஆர். அம்பேத்கர், இந்திய நாட்டின் புகழார்ந்த தவப்புதல்வர்களில் ஒருவராகவும், நம் தாய்நாட்டின் உண்மையான தேசபக்தராகவும் விளங்கிய வர். அதோடு, சட்டவல்லுநராக, சிந்தனையாளராக, நூலாசிரிய ராக, தீவிர சீர்திருத்தவாதியாக, அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கியவராக, ஆற்றல் மிக்க பேச்சாளராகப் பலதுறைகளில் வல்லுநராக விளங்கியவர். ஒடுக்கப்பட்ட மக்களின் உரிமை களைப் பேணிக்காப்பதற்குத் தம் வாழ்நாள் முழுவதும் அயராது போராடியவர். நமது சமுதாயத்தில் நலிந்த பிரிவினராக உள்ள மக்களின் முன்னேற்றத்திற்கு இடையறாது பணியாற்றுவோருக்கு அவருடைய வாழ்வும், தொண்டும் ஊக்கத்தையும் எழுச்சியை யும் தருவதாகும். இவை அனைத்திற்கும் மேலாக, இந்திய நாட்டின் ஒற்றுமைக்கும், சுதந்திரம், சமத்துவம், சகோதரத் துவம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்த சமுதாயம் உருவாவதற்கும் உரத்த குரலெழுப்பிய சிறப்புக்குரியவர்.

நூல்களைப் படிப்பதில் டாக்டர் அம்பேத்கர் பேரார்வம் கொண்டவர், அதனை வாழ்வின் முன்னேற்றத்திற்கும் கல்வி வளர்ச்சிக்கும் பெரும் சாதனமாகக் கருதியவர். பகவான் புத்தர், கார்ல் மார்க்ஸ், கபீர், மகாத்மா பூலே முதலிய பெரியவர்களின் சிந்தனைகளின் தாக்கத்தை அவருடைய நூல்களில் காணலாம்.

இந்திய அரசு வெளியிட்டு வரும் டாக்டர் அம்பேத்கர் அவர் களின் நூல் தொகுதிகள் தமிழக மக்களுக்கும் நம் நாட்டிலுள்ள நலிந்த மக்களின் முன்னேற்றத்திற்கும் தமது ஆற்றலையும், அரிய நேரத்தையும் அர்ப்பணித்துப் பாடுபட்டு வரும் சமூகப் பணியாளர்களுக்கும் பெரும் மகிழ்ச்சியையும் எழுச்சியையும் அளிக்கும் என நம்புகின்றேன்.

(ஒ-ம்.)

**டாக்டர் எம்.எஸ். அகமது**

புதுடில்லி

இணைச் செயலாளர் /
உறுப்பினர் செயலாளர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
சமூகநீதி மற்றும் அதிகாரமளிப்புத்துறை,
இந்திய அரசு,

# தமிழ் நூல் பதிப்பாசிரியர் உரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கிலத்தில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் பி.ஆர். அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசையில் ஒன்பதாம் தொகுதி, தமிழில் இரு பகுதிகளாக வெளியிடப்படுகின்றது. தமிழில் முதல் பகுதி பதினாறாவது தொகுதியாகவும், இரண்டாம் பகுதி பதினேழா வது தொகுதியாகவும் அமைந்துள்ளது.

இந்திய மக்களிடையே தீண்டப்படாதவர்கள் என்றொரு வகுப்பினர் எப்படி உருவானார்கள், தீண்டாமை வழக்கம் எப்போது உருவானது என்பது பற்றிய நேர்மையான ஆய்வு நெடுங்காலமாகப் புறக்கணிக்கப்பட்டு வந்துள்ளது. இந்தக் குறையைப் போக்கும் வகையில் விரிவான ஆதாரங்களின் அடிப்படையில் தீண்டாமையின் தோற்றமும் விளைவுகளும் விரிவாக இந்த நூலில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. பெருந் தொகையினரான மக்கள் மனிதாபிமானமற்ற கொடுமை களுக்கு ஆளாகி வந்திருப்பது ஒழிந்திட வேண்டும் என்னும் நல்லறிவு பரவுவதற்கு இந்த நூல் மிக இன்றியமையாதது.

ஆங்கில மொழியில் சிறந்த சிந்தனைக் களஞ்சியமாக விளங்கும் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்களை மக்க ளுக்குப் பயன்படும் வகையில் தமிழிலும் ஏனைய இந்திய மொழிகளிலும் வெளியிடும் மகத்தான பணியை மேற்கொண் டுள்ள இந்திய அரசின் நலத்துறையும், டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷனும் பாராட்டுதலுக்கு உரியவை. இந்த நூல்களை மொழிபெயர்க்கும் பணியைப் பலர் மேற்கொள்வதால் மொழி நடையிலும், சொல்லாட்சியிலும் வேறுபாடு ஏற்படுவது தவிர்க்க இயலாததாகியுள்ளது. இந்தக் குறைகளைத் தமிழ் மக்கள் பொறுத்துக் கொள்வார்கள் என நம்புகின்றோம்.

இந்த அரிய பணியில் ஈடுபட்டுள்ள மொழிபெயர்ப்பாளர் கள், ஒப்புநோக்குவோர் ஆகிய யாவரும் நன்றிக்குரியவர்கள். முந்தைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியையும் மக்கள் வரவேற்று ஏற்பார்கள் என நம்புகின்றோம்.

**எஸ். பெருமாள்**
தமிழ்நூல் பதிப்பாசிரியர்.

# தீண்டப்படாதவர்களுக்கு காங்கிரசும் காந்தியும் சாதித்தது என்ன?

**பி.ஆர். அம்பேத்கர்**

''எங்களுடைய எஜமானர்களாக இருப்பது உங்களுடைய நலன்களுக்கு உகந்ததாக இருக்கக்கூடும். ஆனால் உங்களுடைய அடிமைகளாக இருப்பது எங்களுக்கு எவ்வாறு ஏற்புடையதாக இருக்கும்?''

- துசிடிடெஸ்

*(1945 ஆம் ஆண்டு பிரசுரத்தின்
மகாராஷ்டிர அரசாங்கத்தாரின் மறுபதிப்பு)*

# முன்னுரை

''1882இல் இங்கிலாந்தில் நாடாளுமன்றத்திற்கு ஒரு புதிய தேர்தல் நடைபெற்றது. அதில் லார்டு சாலிஸ்பரியின் தலைமையிலான கன்சர்வேடிவ்கள் தோற்றனர், திரு. கிளாட்ஸ்டோனின் தலைமையிலான லிபரல்கள் வெற்றிபெற்றனர். இத்தேர்தலைப் பற்றிய குறிப்பிடத்தக்க விஷயம் என்னவெனில் தேர்தலில் தமது கட்சி தோல்வியடைந்த போதிலும்கூட லார்டு சாலிஸ்பரி - நாடாளுமன்ற மரபுகளுக்கு முரணானவிதத்தில் - லிபரல் கட்சியின் தலைவருக்கு, தமது பதவியை விட்டுக் கொடுக்க மறுத்துவிட்டார். நாடாளுமன்றம் கூடியபோது மகாராணியார் தமது சிம்மாசனத்திலிருந்து வழக்கமான நயத்துடன் லார்டு சாலிஸ்பரியின் அரசாங்கத்தினுடைய சட்டமன்றத் திட்டம் அடங்கிய உரையை ஆற்றினார், மாட்சிமை பொருந்திய மகாராணிக்கு நன்றி தெரிவிக்கும் வழக்கமான மசோதாவும் அரசாங்கத் தரப்பிலிருந்து கொண்டு வரப்பட்டது. லார்டு சாலிஸ்பரியின் அரசாங்கம் ஒரு சட்டவிரோதமான அரசாங்கமாகும். ஓர் அரசாங்கம் அமைப்பதற்கு ஒரு கட்சியின் உரிமைக்கு ஒரே அத்தாட்சியான நாடாளுமன்றம் பெரும்பான்மையை அங்கீகரித்த பிரிட்டிஷ் அரசியல் சட்டத்தின் அடிப்படைக் கோட்பாடுகளுக்கு அது ஒரு சவாலாக இருந்தது. சவாலை ஏற்றுக்கொண்ட லிபரல்கள் அந்த மசோதாவுக்கான திருத்தத்தை முன்வைத்தனர். தனக்குப் பெரும்பான்மை இல்லை என்ற உண்மையைப் பொருட்படுத்தாது பதவியில் தொடருவது குறித்துப் பிடிவாதமாக இருப்பதற்காக லார்டு சாலிஸ்பரியின் அரசாங்கத்தைக் கண்டனம் செய்ய அந்தத் திருத்தம் விழைந்தது. அத்திருத்த மசோதாவை முன்வைக்கும் கடமை மறைந்த லார்டு (அப்போது திரு.) அஸ்குயித் வசம் ஒப்படைக்கப்பட்டது. - ''காசா ஃபினிட்டா எஸ்த்: ரோமா லோகுடா எஸ்த்'' (ரோம் திருவாய் மலர்ந்து விட்டது, சச்சரவு முடிவுக்கு வரவேண்டும்) எனும் இப்போது புகழ்பெற்றுவிட்ட சொற்றொடரை திரு. அஸ்குயித் திருத்தத்திற்கு ஆதரவான தமது உரையில் பயன்படுத்தினார். இச்சொற்றொடரை முதலில் பயன்படுத்தியவர் செயின்ட் அகஸ்டின் ஆவார். ஆனால் அவர் வேறு பின்புலத்தில் அதைப் பயன்படுத்தினார். ஒரு மத சம்பந்தமான முரண்பாட்டின் போது அது பயன்படுத்தப்பட்டது. போப்பின் அரசுரிமைக்கான அடித்தளமாக அது பயன்படுத்தப்பட்டது. நாடாளு மன்ற ஜனநாயகத்தின் அடிப்படைக் கோட்பாட்டை உருவகப்படுத்தும் ஓர் அரசியல் முதுமொழியாக திரு. அஸ்குயித்

அதைப் பயன்படுத்தினார். மக்கள் செல்வாக்குள்ள அரசாங்கத் திற்கு ஆதாரமாக உள்ள அடிப்படைக் கோட்பாடான அரசியல் பெரும்பான்மைக்கே ஆளும் உரிமை என்பது இன்றைக்கு ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. அது சாலிஸ்பரியின் அரசாங்கத்திற்கு எதிராக உடனடியான பலனைத் தந்தது, நாடாளுமன்ற ஜனநாயகம் எங் கெல்லாம் செயல்படுகிறதோ அங்கு தேர்தல்களில் தோல்வியடை யும் எல்லாக் கட்சிகளுக்கும் எதிராக அது பலனளிக்க வேண்டும்.

1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்திற்கிசைய 1937 பிப்ரவரியில் இந்தியாவில் நடைபெற்ற மாகாண சட்ட மன்றங் களுக்கான தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்பட்டபோது இந்த முது மொழி என் நினைவுக்கு வந்தது. காங்கிரஸ்காரர்கள் உண்மையில் ''காசா ஃபினிட்டா எஸ்த்: இந்தியா லோகுடா எஸ்த்'' என்று கூற வில்லை. ஆனால் தேர்தலில் காங்கிரசை எதிர்த்து நின்ற கட்சிகளைப் பொறுத்தவரை, தேர்தலின் முடிவுகள் அதையே பிரகடனம் செய்வது போல் தோன்றின. வட்டமேசை மாநாட்டிலும், நாடாளுமன்றக் கூட்டுக் கமிட்டியிலும் முழுமையாக ஐந்தாண்டுகள் காங்கிரசுக்கு எதிராக தீண்டத்தகாதவர்களுக்குத் தலைமைதாங்கிச் சென்ற என் னால் தேர்தல் முடிவுகள் என்னைப் பாதிக்காததுபோல் பாவனை செய்ய முடியவில்லை. எனக்குள் எழுந்த கேள்வி இதுதான்: தீண்டத் தகாதவர்கள் காங்கிரசின் பக்கம் சாய்ந்து விட்டனரா? அத்தகைய ஒரு விஷயத்தை என்னால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடிய வில்லை. ஏனெனில் தீண்டத்தகாதவர்கள் - காங்கிரசின் தங்கத் துக்கு மயங்கி துரோகமிழைக்குமாறு எப்போதும் தூண்டப்பட்ட ஒரு சில காங்கிரஸ் கைக்கூலிகளைத் தவிர - அரசியல் பாதுகாப்பு நடவடிக்கைகளுக்கான தங்களது கோரிக்கைகள் ஒவ்வொன்றையும் இறுதி நிமிடம் வரை அங்குலம் அங்குலமாகத் திரு. காந்தியும் காங் கிரசும் எவ்வாறு எதிர்த்துவந்தனர் என்பதை மறந்து ஒட்டுமொத்த மாக காங்கிரசின் பக்கம் போய் இருக்கக் கூடும் என்பதை என்னால் நம்ப முடியவில்லை.ஆகவே 1937இல் நடைபெற்ற தேர்தலின் முடிவுகளை ஆய்வு செய்ய முடிவு செய்தேன்.

தீண்டத்தகாதவர்களின் கண்ணோட்டத்திலிருந்து இத்தகைய ஓர் ஆய்வு அத்தியாவசியமானது என்பதில் நான் தீவிர நம்பிக்கை கொண்டிருந்த அதேசமயம், அப்பணி நத்தை வேகத்தில்தான் முன்னேறியது. அதற்கு மூன்று காரணங்கள் உள்ளன. இதர எழுத்துப் பணிகளுக்கு முன்னுரிமையளிக்க வேண்டியிருந்ததால்

சிறிது காலத்திற்கு இப்பணியை ஒத்திவைக்க வேண்டியதாகி விட்டது. இதர எழுத்துப் பணியின் அவசரத்தன்மை ஓரளவுக்கு முன்னுரிமையைக் கோரியது. அதை மறுக்க இயலவில்லை. இரண்டாவதாக, தேர்தல்கள் நடைபெற்று முடிந்த உடனேயே நாடாளுமன்றத்திற்குச் சமர்ப் பிக்கப்பட்ட 1937 ஆம் ஆண்டின் தேர்தல் முடிவுகள் சம்பந்தமான அறிக்கை தேர்தல்களைப் பற்றிய புள்ளிவிபரங்களுக்கான முக்கிய ஆதாரமாக இருந்தபோதிலும் எனது நோக்கத்திற்கு அது பற்றாக் குறையாகவும் போதுமானதல்லாததாகவும் இருந்தது. தாழ்த்தப் பட்ட ஜாதியைச் சேர்ந்த வாக்காளர்கள் எவ்வாறு வாக்களித்தனர், தாழ்த்தப்பட்ட சாதியைச் சேர்ந்த வேட்பாளர்கள் பெற்ற வாக்குகள் எத்தனை என்பதைக் காட்டும் தனியான புள்ளி விபரங்களை அது வழங்கவில்லை. இந்து வாக்காளர்களுக்கும் தாழ்த்தப்பட்ட ஜாதியைச் சேர்ந்த வாக்காளர்களுக்கும் இடையில் எந்தவிதமான தெளிவான வேறுபாடுமின்றி பல்வேறு தொகுதிகளில் வாக்காளர்கள் எவ்வாறு வாக்களித்தனர் என்பதை மட்டுமே காட்டும் புள்ளிவிபரங்களை அது கொண்டிருந்தது. ஆகவே, தாழ்த்தப்பட்ட சாதியைச் சேர்ந்த வாக்காளர்களின் வாக்குகள் வினியோகத்தையும் ஒவ்வொரு தாழ்த்தப்பட்ட சாதி வேட்பாளரும் பெற்ற வாக்குகளின் எண்ணிக்கையையும் பற்றிய புள்ளி விபரங்களை எனக்கு அனுப்புமாறு வேண்டிக் கொண்டு பல்வேறு மாகாண அரசாங்கங்களுக்கும் சுற்றறிக்கைக் கடிதங்களை அனுப்ப வேண்டியிருந்தது. இது இன்றியமையாதவாறு எனது பணிகளைத் தாமதப்படுத்தியது. மூன்றாவதாக, இந்த நூலில் பிற்சேர்க்கையாகக் கொடுக்கப்பட்ட புள்ளிவிபரப் பட்டியல்கள் காட்டுவது போன்று தேர்தல் முடிவுகளை ஆய்வு செய்வது ஒரு சலிப்பூட்டும் பணியாக இருந்தது.

இவ்வாறு இந்தப் பணி பலகாலம் தொடர்ந்தது. இந்தத் தாமதத்திற்காக நான் மிகவும் வருந்துகிறேன். இடைப்பட்ட காலத்தில் காங்கிரஸ் எந்த அளவுக்கு குறும்புகள் செய்தது என்பதை நானறிவேன். தீண்டத்தகாதவர்களைப் பிரதிநிதித்தவப்படுத்துவதற்கான தனது உரிமை கோரலுக்கு வலுச்சேர்ப்பதற்காக தேர்தல் முடிவுகளை காங்கிரஸ் விளம்பரம் செய்தது. விளம்பரத்தின் முக்கியமான விஷயமே, தாழ்த்தப்பட்ட சாதியினருக்காக ஒதுக்கப்பட்ட மொத்தம் 151 இடங்களில் என்னால் அமைக்கப்பட்ட சுதந்திரத் தொழிலாளர் கட்சி 12 இடங்களில் மட்டுமே வெற்றி பெற்றது என்று பறைசாற்றியதாகும். மீதமுள்ள இடங்களை காங்கிரஸ் கைப்பற்றியது. தீண்டத்தகாதவர்களைக் காங்கிரஸ்தான் பிரதிநிதித்துவப்படுத்துகிறது

என்று பிரசாரம் செய்வதே இதன் நோக்கம். இப்பொய்ப்பிரசாரம் சிலரை நம்பவைத்துவிட்டது போல் தோன்றுகிறது. திரு. எச்.என். பிரெய்ல்ஸ் ஃபோர்டு போன்றவர்கூட காங்கிரசின் இந்த அபத்த மான கூற்று தமது ''சப்ஜெக்ட் இந்தியா'' என்ற நூலில், அக்கூற்றைச் சரிதானா என்று பார்க்க முயலாமல், அதையே உண்மை என்று ஏற்றுக்கொண்டு அப்படியே பிரசுரித்திருக்கிறார். எனது இந்த நூலில் கொடுக்கப்பட்டிருக்கும் தேர்தல் முடிவுகள் பொய்ப் பிரசாரத்தின் நெற்றியில் ஆணி அடித்தது போல் அமையும். ஏனெனில் தேர்தல் முடிவுகளைப் பற்றிய காங்கிரஸ் கூற்று அப்பட்டமான நெறிபிறழ் வாகும். உண்மையைச் சொன்னால் 1937 ஆம் ஆண்டின் தேர்தல் முடிவுகள் தீண்டத்தகாதவர்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதாகக் கூறும் காங்கிரசின் கூற்றை நிச்சயமாக நிரூபிக்கத் தவறுகிறது. காங்கிரசின் கூற்றை ஆதரிப்பதற்குப் பதிலாக தேர்தல் முடிவுகள் காட்டுவது இதோ: (1) மொத்தம் 151 இடங்களில் காங்கிரஸ் 73 இடங்களை மட்டுமே பெற்றது; (2) அநேகமாக எல்லாத் தொகுதி களிலும் தங்களது சொந்த வேட்பாளர்களை நிறுத்தி, காங்கிரசை எதிர்த்து தீண்டத்தகாதவர்கள் போட்டியிட்டனர்; (3) காங்கிரஸ் வெற்றி பெற்ற 73 தொகுதிகளில் பெரும்பாலானவற்றில் இந்து வாக்காளர்களின் உதவியுடன் வெற்றி பெற்றதால் அவர்கள் எந்த விதத்திலும் தாழ்த்தப்பட்ட சாதியினரைப் பிரதிநிதித்துவப்படுத்த வில்லை; (4) உண்மையில் காங்கிரஸ் வெற்றி பெற்ற 151 இடங் களில் தாழ்த்தப்பட்ட ஜாதியினரின் பெரும்பான்மையான வாக்கு களுடன் அது வெற்றிபெற்றது 38 இடங்களில் மட்டுமேயாகும். சுதந்திரத் தொழிலாளர் கட்சியைப் பொறுத்தவரை 1937இல் தேர்தலுக்கு ஒரு சில மாதங்களுக்கு முன்பு தான் ஆரம்பிக்கப்பட்டது. அது பம்பாய் மாகாணத்தில் மட்டுமே இயங்கி வந்தது. இதர மாநிலங் களில் கிளைகளை அமைப்பதற்கு நேரமில்லாமல் போயிற்று. பம்பாய் மாகாணத்தில் மட்டுமே சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் வேட் பாளர்கள் தேர்தலில் போட்டியிட்டனர். அங்கு சுதந்திரத் தொழி லாளர் கட்சியினர் வியத்தகு வெற்றிகளைப் பெற்றனர். பம்பாய் மாகாணத்தில் தாழ்த்தப்பட்ட ஜாதியினருக்கு ஒதுக்கப்பட்டிருந்த 15 இடங்களில் அது 13 இடங்களிலும், 2 பொதுத் தொகுதிகளிலும் வென்றது. ஆகவே, தாழ்த்தப்பட்ட சாதியினருக்கென்று ஒதுக்கப் பட்ட எல்லா இடங்களையும் காங்கிரஸ் கைப்பற்றிவிட்டது, சுதந்திரத் தொழிலாளர் கட்சி தோல்வியடைந்தது என்ற கூற்று ஓர் அப்பட்டமான பொய் என்பதை நிரூபிக்கும் பணியை இறுதியில் நான் நிறைவுசெய்துவிட்டேன் என்பதில் மகிழ்ச்சியடைகிறேன். இந்த விஷயத்தில் ஆர்வம் கொண்டிருப்பவர்களுக்கும் உண்மையை

அறிய விரும்புபவர்களுக்கும் இந்த நூல் ஆர்வமூட்டுவதாகவும், பயனுள்ளதாகவும் இருக்கும் என்று நம்புகிறேன்.

இந்த முன்னுரையை நிறைவு செய்வதற்கு முன்னர் ஏதோ ஒரு வகையில் எனக்கு ஒத்துழைப்பு வழங்கிய அனைவருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். எனது சுற்றறிக்கைக்குப் பதிலளித்து நான் கேட்டபடி கூடுதல் புள்ளி விபரங்களை சிரமம் பாராமல் எனக்கு அனுப்பித் தந்த மாகாண அரசாங்கங்களுக்கும் நான் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன். அட்ட வணைகளைத் தயாரிக்கும் மிகக் கடினமான பணியில் உதவிபுரிந்த, ஒரு சமயத்தில் உ.பி. காங்கிரஸ் அரசாங்கத்தின் நாடாளுமன்றச் செயலாளராக இருந்த திரு. கரன்சிங் கானே, பி.ஏ., எம்.எல்.ஏ., அவர்களுக்கும் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன்.''

மேற்கண்ட முன்னுரையைப் படித்து உள்ளடக்க அட்ட வணையை ஒப்பிட்டுப் பார்க்கும் வாசகர், இந்த நூல் தனது எல்லை களை மீறி பல விஷயங்களைக் கூறுகிறது என்பதை உடனடியாகக் காண்பார். முன்னுரையின் முன்பகுதிக்கும் உள்ளடக்க அட்ட வணைக்கும் என்ன சம்பந்தம் என்று தெரிந்துகொள்ள ஆர்வமுள்ள வர்கள் விரும்புவர். இந்த நூல் தனது இப்போதைய இறுதி வடிவத்தில் அதன் நகல் வடிவத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டிருக் கிறது என்ற உண்மையில்தான் இதற்கான விளக்கம் பொதிந் துள்ளது. இந்த நூல் தனது அசல் வடிவத்தில், இப்போது இயல் IV, V, VI, VII மற்றும் IXஇலும் புள்ளிவிவரப் பிற்சேர்க்கையிலும் பரந்த அளவில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களை மிகச் சுருக்க மாகவே வழங்கியது. முன்னுரையின் முந்தையப் பகுதி நூலின் அசல் வடிவத்திற் கானதாகும். அதனால்தான் அதை நான் அடைப்புக் குறிக்குள் அடக்கியிருக்கிறேன். அசல் வடிவத்திலிருந்து நூலின் இறுதி வடிவம் ஏன் இவ்வளவு வித்தியாசமானதாக மாறிற்று என்று ஆர்வமுடையவர்கள் வினவக்கூடும். இதற்கான விளக்கம் மிக எளிமையானது, அதன் அசல் வடிவத்தில் அச்சுப்படிகளை ஒரு நண்பரும் சக ஊழியருமான ஒருவர் திருத்தி வந்தார். இந்த நூலின் நோக்கத்தில் திருப்தியடையாத அவர், தீண்டத்தகாதவர்களைப் பிரதிநிதித்துவப் படுத்துவதாக சொல்லும் காங்கிரசின் கூற்றைத் தோலுரித்துக் காட்டுவதற்கு தேர்தல் முடிவுகளை மட்டுமே ஆய்வு செய்வது போதாது என்று வலியுறுத்தினார். நான் இன்னும் அதிக

மான விஷயங்களைச் சேர்க்க வேண்டும், தீண்டத்தகாதவர்களின் வாழ்க்கையை மேம்படுத்த காங்கிரசும் திரு. காந்தியும் பெரும் சாதனைகள் புரிந்திருப்பதாகத் தம்பட்டமடித்துக் கொண்டிருப்பதை தீண்டத்தகாதவர்களுக்கு அம்பலப்படுத்தித் தோலுரித்துக் காட்ட வேண்டும், உண்மைகளைத் திரித்துக் கூறி தனது தரப்பு வாதமே நியாயமானது என்று காங்கிரஸ் நம்பச் செய்துள்ள வெளிநாட்டவருக்கும் உண்மையைப் புரியவைக்க வேண்டும் என்று அவர் கூறினார். இந்த நூல் ஏற்கெனவே அச்சுப்படி வடிவத்திலிருக்கிறது என்ற உண்மையினால் தோன்றிய பிரச்சினைகளைத் தவிர, எனது இதர பணிகளுடன் இந்த நூலை இன்னும் விரிவாக எழுதுவது எனது சக்திக்கப்பாற்பட்டதாகக் கூடத் தோன்றியது. எனது நண்பர் இதையெல்லாம் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. ஆகவே அவருடைய திட்டத்தை நான் ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. முதலில் எழுதப்பட்ட நூல் அச்சில் 75 பக்கங்களுக்கு வந்திருக்கும், அதை மறுபடியும் வடிவமைத்து விரிவுபடுத்த வேண்டியதாயிற்று. இந்த நூலின் இப்போதைய வடிவம் ஒரு முழுமையான மாற்றமாகும். தீண்டத்தகாதவர்களின் பிரச்சினை யைப் பொறுத்தவரை 1917லிருந்து இன்றுவரை காங்கிரசும் திரு. காந்தியும் புரிந்த செயல்களை இது படம்பிடித்துக் காட்டுகிறது. ஆனால் தீண்டத்தகாதவர்கள் பற்றி அவர்கள் என்ன செய்தார்கள் என்ற விபரங்களை இதுவரை யாரும் கூறியது கிடையாது. சுயராஜ் யத்தின் ஆதரவாளர் அல்லது அகிம்சையின் தூதுவர் என்ற தமது புகழைவிட தீண்டத்தகாதவர்களின் காவலர் என்ற தமது புகழையே திரு. காந்தி அதிகமாக மதித்தார் என்பதை அனைவரும் அறிவர். வட்டமேசை மாநாட்டில் தீண்டத்தகாதவர்களுக்காகப் பாடுபடுவது தாம் ஒருவரே என்று அவர் உரிமையுடன் கூறினார். அந்த கௌரவத்தை வேறுயாருடனும் பகிர்ந்து கொள்ள அவர் விரும்பவில்லை. அவருடைய கூற்று மறுக்கப்பட்டபோது அவர் எவ்வாறு வெகுண்டெழுந்தார் என்பது எனக்கு நினைவிருக்கிறது. தீண்டத்தகாதவர்களின் தலைவராக மட்டுமே திரு. காந்தி தன்னைக் கூறிக்கொள்ள வில்லை. காங்கிரசுக்கும் தாமே காவலர் என்று உரிமை கொண்டாடினார். தீண்டத்தகாதவர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளுக்குப் பரிகாரம் காண காங்கிரஸ் சூளுரையேற்றுள்ளது என்று கூறும் அவர், தீண்டத்தகாதவர்களுக்கு அரசியல் ரீதியான பாதுகாப்பு நடவடிக்கைகளை வழங்கும் எந்த முயற்சியும் தேவையற்றது, தீங்கு பயப்பது என்று வாதிடுகிறார். ஆகவே திரு. காந்தியின் இக்கூற்றுக் களையும் காங்கிரசையும் பற்றி

எந்த ஒரு விரிவான ஆய்வும் இதுவரை மேற்கொள்ளப்படாதது வருத்தத்திற்குரிய ஒரு விஷயமாகும்.

இந்த ஆய்வு இந்த வகைப்பட்ட முதலாவது முயற்சியாக இருந்தபோதிலும்கூட திரு. காந்தியின் கண்மூடித்தனமான பக்தர்களாக இருந்துவரும் இந்துக்களிடம் இதற்கு ஆதரவு இராது: உண்மையில் இது அவர்களுடைய ஆத்திரத்தை நிச்சயம் தூண்டிவிடும். ''திரு. காந்தியிடம் எச்சரிக்கையாக இருங்கள்'' என்ற முடிவுக்கு இந்த நூல் வரும்போது நிலைமை வேறுவிதமாக எப்படி இருக்கும்? பரந்த கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால் இந்துக்கள் ஆத்திரமடைவதற்குக் காரணம் எதுவும் கிடையாது. திரு. காந்தியை இவ்வாறு கருதும் இந்தியாவிலுள்ள ஒரே வகுப்பினர் தீண்டத்தகாதவர்கள் மட்டுமல்ல. திரு. காந்தியைப் பற்றிய இதே கருத்தை முஸ்லீம்களும், சீக்கியர்களும், இந்தியக் கிறித்தவர்களும் கொண்டிருக்கின்றனர். உண்மையில் இந்துக்கள் இப்பிரச்சினை குறித்து ஆராய்ந்து பின்வரும் கேள்வியை எழுப்ப வேண்டும்: தாம் முஸ்லீம்கள், சீக்கியர்கள், தாழ்த்தப்பட்ட சாதியினரின் நண்பர் என்று திரு. காந்தி கூறி வந்த போதிலும் அதை எந்த வகுப்பினரும் நம்புவதில்லை. இந்த அவநம்பிக்கைக்குக் காரணம் என்ன? இன்றைக்கு திரு. காந்தியைப் போன்ற ஒரு தலைவர் அனைவராலும் அவநம்பிக்கையுடன் பார்க்கப்படுவது போன்ற ஒரு சோக சம்பவம் வேறு இருக்க முடியாது என்பது எனது கருத்தாகும். ஆனால் இந்துக்களின் எண்ணம் நிச்சயமாக இவ்வாறு இருக்காது என்று கூறுவேன். வழக்கம் போல அவர்கள் இந்த நூலைக் குறைகூறுவார்கள். என்மீது வசைமாரி பொழிவார்கள். ஆனால் மூதுரை சொல்வது போன்று, ''நாய்கள் குரைத்தாலும் ஒட்டகங்கள் முன்னேறிச் சென்று கொண்டிருக்கும்.'' அதேபோன்று எனக்கு எதிரானவர்கள் என்ன கூறினாலும் நான் எனது கடமையைச் செய்து கொண்டிருக்க வேண்டும். ஏனெனில் வால்டேர் கூறியது போன்று: தமது காலத்தைப் பற்றி எழுதும் ஒருவர் தாம் கூறிய எல்லா விஷயங்களுக்காகவும், கூறாத விஷயங்களுக்காகவும் தாக்குதலுக்கு உள்ளாகக் கூடும் என்று எதிர்பார்க்க வேண்டும். உண்மையையும் சுதந்திரத்தையும் நேசிப்பவர், எதையும் எதிர்பார்க்காதவர், எதற்கும் அஞ்சாதவர், எதற்கும் ஆசைப்படாதவர், தமது எழுத்துப் பணிகளுக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர் இத்தகைய சிறு குறைபாடுகளால் நம்பிக்கை இழந்துவிடக் கூடாது.

இந்த நூல் மிகவும் பருமனாகி விட்டது. இது மிகுதியான விளக்கங்களுடனும் சொன்னதையே திருப்பிச் சொல்லும் காரணத்தினாலும் இவ்வாறு ஆகிவிட்டது என்று கூடச் சொல்லலாம். இதை நான் நன்கு உணர்ந்திருக்கிறேன். ஆனால் இந்த நூலை நான் குறிப்பாகத் தீண்டப்படாதவர்களுக்காகவும் வெளிநாட்டவர்களுக்காகவும் தான் எழுதியிருக்கிறேன். மேற்கூறப்பட்ட இரு தரப்பினருக்கும் சம்பந்தப்பட்ட உண்மைகளைப் பற்றிய விபரங்கள் தெரியுமென்று நான் கருதவில்லை. எனது மனதிலுள்ள குறிப்பிட்ட வாசகர்களுக்காக உண்மைகளையும் வாதங்களையும் முன்வைப்பது எனக்கு அவசியமாகும். பண்பட்ட விவரம் தெரிந்த வாசகர்களின் கலை உணர்வையும், அவர்களது நுட்ப விவர ஆர்வத்தையும் திருப்திபடுத்துவது இங்கு எனது நோக்கமல்ல.

அரசியல் பாதுகாப்பு நடவடிக்கைகளுக்காக தீண்டத்தகாதவர்களின் இயக்கம் சம்பந்தமான தகவல்களின் ஒரு முழுமையான தொகுதியாக இந்த நூலைப் படைப்பதே எனது விழைவாகும். அதற்காக, புள்ளி விபரங்கள் தன்மை கொண்ட விஷயங்கள் மட்டுமல்லாது பல பிற்சேர்க்கைகளையும் நான் இணைத்துள்ளேன். இந்த இயக்கம் சம்பந்தப்பட்ட அதிகாரப்பூர்வமான, அதிகாரப்பூர்வமல்லாத பொருத்தமான தஸ்தாவேஜுகளை இந்நூல் உள்ளடக்கியுள்ளது. தீண்டத்தகாதவர்களின் பிரச்சினையில் அக்கறையுள்ள அனைவரும் இத்தகவல்களைப் பெறுவதில் மகிழ்ச்சியடைவர் என்று கருதுகிறேன். ஒரு பொதுவான வாசகர், பிற்சேர்க்கைகளில் மிகமிக அதிகமான விபரங்கள் தரப்பட்டுள்ளதாகப் புகார் கூறக்கூடும். ஒரு பொதுவான வாசகருக்கு எளிதில் கிட்டக்கூடிய தகவல்களைத் தீண்டத்தகாதவர்கள் பெறும் வாய்ப்பு இல்லை என்பதையும் இங்கு மீண்டும் நான் கூறவேண்டும். இதில் பின்பற்றப்படும் சோதனை முறை தீண்டத்தகாதவர்களுக்கு தானே தவிர பொதுவான வாசகருக்கு அல்ல.

இறுதியாக ஒரு வார்த்தை, இந்த நூலில் பல இடங்களில் ஒடுக்கப்பட்ட வர்க்கங்கள், தாழ்த்தப்பட்ட சாதியினர், அரிஜனங்கள், அடிமைப்படுத்தப்பட்ட வர்க்கங்கள் என்ற பல்வேறு சொல் வழக்குகளை நான் பயன்படுத்தியிருப்பதை வாசகர்கள் கவனிக்கக் கூடும். குறிப்பாக இந்தியாவிலுள்ள நிலைமைகள் நன்கு பரிச்சயமில்லாதவர்களுக்கு இது குழப்பத்தை ஏற்படுத்தக் கூடும் என்பதை நான் அறிவேன். ஒரேசீரான சொல் வழக்கைப் பயன்படுத்துவது

எனக்கும் மகிழ்ச்சியளித்திருக்கும். இத்தவறு ஒட்டு மொத்தமாக என்னுடையது மட்டுமல்ல. தீண்டத்தகாதவர்களைக் குறிப்பிடு வதற்காக ஏதேனும் ஒரு சமயத்தில் அதிகாரப்பூர்வமாகவோ அல்லது அதிகாரப்பூர்வமற்ற முறையிலோ இப்பெயர்களனைத்தும் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன. இந்திய அரசாங்கச் சட்டத்தின் கீழ் பயன்படுத்தப்பட்ட சொல் ''தாழ்த்தப்பட்ட ஜாதியினர்'' என்பதாகும். ஆனால் இது 1935க்குப் பின்னர்தான் வழக்கிற்கு வந்தது. அதற்குமுன்னர் அவர்கள் திரு. காந்தியினால் ''அரிஜனங்கள்'' என்றும் அரசாங்கத்தினால் ''ஒடுக்கப்பட்ட வர்க்கங்கள்'' என்றும் அழைக்கப்பட்டனர். இத்தகைய ஒரு நிலைமையில் ஒரு குறிப்பிட்ட பெயரை நிர்ணயம் செய்வது சாத்தியமில்லை. அது ஒரு கட்டத்தில் சரியான சொல்வழக்காகவும் வேறொரு சமயத்தில் தவறானதாகவும் இருக்கக்கூடும். எனினும் அவை ஒரே வர்க்கத்தைக் குறிப்பிடுபவை என்பதை நினைவில் கொண்டால் எல்லா சிரமங்களையும் வாசகர் சமாளித்து விடக்கூடும்.

சிறப்புப் பெயரகராதியைத் தயாரித்தளித்ததற்காக பேராசிரியர் மனோகர் சிட்னீசுக்கும், அச்சுப்படிகளைத் திருத்துவதில் உதவி புரிந்த திரு. எஸ்.சி. ஜோஷிக்கும் நன்றியுடையவனாகின்றேன்.

ஜுன் 24, 1945 — பி.ஆர். அம்பேத்கர்

22, பிருத்விராஜ் சாலை,
புதுடில்லி.

# சமர்ப்பணம்

(11) நவோமி கூறினார்: எனது புதல்விகளே மீண்டும் திரும்புங்கள்; நீங்கள் ஏன் என்னுடன் வருகிறீர்கள்? (12) உங்கள் வழியில் செல்லுங்கள்... (14) அவர்கள் தங்களது குரலை உயர்த்தினர். மீண்டும் அழுதனர். அர்பா அவளது மாமியாரை முத்தமிட்டாள்; ஆனால் ரூத் அவளை அணைத்துக் கொண்டாள். (15) அவள் கூறினாள், பார், உனது நாத்தனார் அவளது ஆட்களிடம் திரும்பிச் சென்றுவிட்டாள். அவளுடைய கடவுளர்களிடம் நீயும் திரும்பிவிடு. (16) ரூத் கூறினாள், அவர்களை விட்டுப்பிரியுமாறு என்னைக் கேட்காதே; அல்லது உன்னைப் பின்தொடர்வதிலிருந்து திரும்புமாறு என்னைக் கெஞ்சாதே; நீ எங்கு சென்றாலும் நானும் உடன் வருவேன்; உன்னுடைய மனிதர்கள்தான் என்னுடைய மனிதர்கள். உன்னுடைய கடவுள்தான் என்னுடைய கடவுள். (17) நீ எங்கு இறந்துபடுகிறாயோ நானும் அங்கு இறப்பேன். நீ எங்கு புதைக்கப்படுகிறாயோ அங்கேயே என்னையும் ஆண்டவர் புதைப்பார். மரணம் தான் உங்களையும் என்னையும் பிரிக்க முடியும்.

நாம் ஒன்றாக அமர்ந்து பைபிளைப் படித்து வந்தபோது இந்தப் பத்தியின் இனிய பண்பும் வளர்ச்சிக் கனிவும் உன்னை எந்த அளவுக்குப் பெரிதும் கவர்ந்து விட்டது என்பது எனக்கு நன்கு நினைவிருக்கிறது. இப்பகுதியை மீண்டும் நீ படிக்க விரும்புவாய் என்பதையும் நான் அறிவேன். இப்போது இதனை நினைவு கூர வேண்டிய அவசியம் என்ன என்று வினவுவாய் என்பதும் எனக்குத் தெரியும். ''உனது மக்களே எனது மக்கள். உனது கடவுளே எனது கடவுள்'' என்ற ரூத்தின் வாசகத்தின் மதிப்பைப் பற்றிய விவாதத்தில் நாம் ஈடுபட்டிருந்த சந்தர்ப்பம் உனக்கு நினைவிருக்கிறதா என்று எண்ணிப்பார்க்கிறேன். எனக்கு அது நன்கு நினைவிலிருக்கிறது. நமது கருத்து வேறுபாட்டையும் என்னால் நன்கு நினைவுகூர முடிகிறது. ஒரு சிறந்த மனைவிக்கே உரிய உண்மையான உணர்வுகளை வெளிப்படுத்துவதில்தான் அதன்மதிப்பு புதைந்துள்ளது என்று நீ கூறிவந்தாய். இந்தப் பத்தி ஒரு சமூகவியல் மதிப்பைக் கொண்டிருக்கிறது என்ற கருத்தை முன்வைத்தேன். பண்டைய சமுதாயத்திலிருந்து நவீன சமுதாயத்தை வேறுபடுத்திப் பார்க்க இது உதவியது என்ற பேராசிரியர் ஸ்மித்தின் கருத்தே உண்மையானது. ரூத்தின் ''உனது மக்களே எனது மக்கள், உனது கடவுளே எனது கடவுள்'' என்ற கூற்று பண்டைய சமுதாயத்தின் முக்கிய சிறப்பம்சமாகவும் அது மனிதனையும் கடவுளையும் கொண்ட சமுதாயமாகவும் இருந்தது என்பதை விளக்கியது. அதேசமயம் நவீன சமுதாயம் மனிதனை

மட்டுமே கொண்டிருக்கும் ஒரு சமுதாயமாக இருக்கிறது (நான் மனிதன் என்று கூறும்போது அதில் பெண்களும் அடங்கியுள்ளனர்). அப்போது எனது கண்ணோட்டம் உனக்கு ஏற்புடையதாக இருக்க வில்லை. இந்த விஷயம் குறித்து ஒரு நூலை எழுதுமாறு என்னை வற்புறுத்துவதில் நீ அக்கறை கொண்டிருந்தாய். நானும் அவ்வாறே செய்வதாக வாக்களித்திருந்தேன். ஏனெனில் கீழைநாட்டைச் சேர்ந் தவன் என்ற முறையில் இன்னும் பழமையானதொரு சமுதாயத்தைச் சேர்ந்தவன் நான், அதில் மனிதனைவிட கடவுள் மிகமிக முக்கிய மான உறுப்பினராக இருக்கிறார். இந்தக் கட்டத்தில் எனக்கு முக்கிய மானது, உரையாடலின்போது நான் நூல் எழுதுவதில் வெற்றி பெறுவேனாகில் அதை உனக்கு அர்ப்பணிக்கிறேன் என்று நான் அளித்த வாக்குறுதி சம்பந்தப்பட்ட பகுதியேயாகும். பேராசிரியர் ஸ்மித்தின் கருத்து என் முன்னால் ஏராளமான வாய்ப்புக்களைத் திறந்துவிட்டது, எனது விழைவுகளை ஈடேற்றும் நம்பிக்கையும் எனக்கு வந்தது. இக்கருத்தை ஒரு புத்தக வடிவில் உருவாக்கும் வாய்ப்புக்கள் இப்போது மிகவும் குறைவேயாகும். அரசியல் என்ற சூழலில் நான் சிக்கியிருப்பது உனக்குத் தெரியும், அது என்னை எழுத்துப் பணிகளில் ஈடுபடுவதற்கான கால அவகாசத்தைத் தருவ தில்லை. நான் அந்தச் சூழலிலிருந்து எப்போது வெளியே வருவேன் என்பதே எனக்குத் தெரியாது. யுத்தம் தொடங்கியது முதல் எனது வாக்குறுதியை நிறைவேற்றத் தவறி விட்டேன் என்ற உணர்வு என்னைப் பீடித்து வருகிறது. அதேபோன்று நீ போருக்குப் பலியாகி இறந்துவிடக் கூடும், எனக்கு நேரம் இருந்து அந்த நூலை எழுதி முடித்துவிட்டாலும் அதைப் பெறுவதற்கு இருக்க மாட்டாயோ என்ற பயமும் என்னை உலுக்கி வந்தது. ஆனால் எதிர்பாராதது நடந்துள்ளது. மரணம் எனும் கோரப் பிடியிலிருந்து விடுபட்டு நீ இருக்கிறாய். உனக்கு அர்ப்பணிப் பதற்காக இதோ ஒரு நூல் தயாராக இருக்கிறது. இத்தகைய இரு சம்பவங்களின் மகிழ்ச்சியான சேர்க்கை யானது, எல்லையின்றி ஒத்தி வைப்பதை விட என்னுடைய சொல்லை, நான் முழுமையாக வெளிக் கொணருவதில் வெற்றி கண்ட இந்த நூலை அர்ப்பணிப்பதன் மூலம் நிறைவேற்ற வேண்டும் என்ற கருத்து எனக்குத் தோன்றியது. நூலின் உட்கருத்து வேறான தாக இருந்த போதிலும் இது பயனற்ற மாற்று ஏற்பாடல்ல. இதை நீ ஏற்றுக் கொள்வாயா?

பி.ஆர்.ஏ.

பெறுநர்

எஃப்

உன்னுடைய பிரசன்னத்தில்தான் மகிழ்ச்சியின் முழுமையே இருக்கிறது.

# பொருளடக்கம்

## பின்னிணைப்புகள்

# இயல் 1

# ஒரு விநோதமான சம்பவம்

# தீண்டப்படாதவர்களையும் காங்கிரஸ் ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்கிறது

1917 ஆம் ஆண்டில் கல்கத்தாவில் நடைபெற்ற இந்திய தேசியக் காங்கிரசின் வருடாந்திரக் கூட்டத்தொடரில் ஒரு விநோதமான சம்பவம் நிகழ்ந்தது. அக்கூட்டத்தொடரில் பின்வரும் தீர்மானத்தைக் காங்கிரஸ் இயற்றியது:

> ''ஒடுக்கப்பட்ட மக்களின் மீது வழிவழியாகத் திணிக்கப்பட்டு வந்த அனைத்து குறைபாடுகளை - எரிச்சலூட்டுகின்ற அடக்கி ஒடுக்கும் தன்மை கொண்ட குறைபாடுகளை, கணிசமான அளவுக்கு இன்னல்களையும் அசௌகரியங்களையும் அந்த வர்க்கங்களுக்கு ஏற்படுத்தி வந்த குறைபாடுகளை - அகற்றுவதன் தேவையை, நீதியை, நியாயத்தை இந்திய மக்கள் உணர வேண்டுமென்று இக்காங்கிரஸ் வலியுறுத்துகிறது.''

அக்கூட்டத் தொடருக்குத் திருமதி. அன்னிபெசன்ட் தலைவராக இருந்தார். அத்தீர்மானத்தை மதராசைச் சேர்ந்த திரு. ஜி.ஏ. நடேசன் முன்மொழிந்தார். பம்பாயைச் சேர்ந்த திரு. புலாபாய் தேசாய், மலபாரைச் சேர்ந்த திரு. ராமய்யர், டில்லியைச் சேர்ந்த திரு. ஆசப் அலி அத்தீர்மானத்தை ஆதரித்தனர். அத்தீர்மானத்தை முன்மொழிந்த திரு. நடேசன் கூறியதாவது:

> ''தாய்மார்களே, பெரியோர்களே, - பல ஆண்டுகளாக இப் பிரச்சினை இதர மேடைகளிலும் பெரும் கவனத்தை ஈர்த்து வருகிறது; ஆனால் விஷயாலோசனைக் கமிட்டி இந்தக் கூட்டத் தொடரின் முக்கியத்துவத்தைக் கருத்தில் கொண்டு, இந்தியாவுக்கு சுயாட்சிக்கான ஒரு திட்டத்தை வரைந்த பின்னர், சுயாட்சிக் கடமைக்கு நம்மை நாமே தயார் செய்து கொள்ள வேண்டியது அவசியம் என்று கருதிற்று. இவ்வகையில் நமது முதலாவது மாபெரும் கடமை எல்லாவிதமான சமத்துவமின்மையையும் அநீதிகளையும் அகற்றுவதற்குப் பாடுபடுவதேயாகும். மிக மோசமான,

எரிச்சலூட்டக்கூடிய, அடக்கி ஒடுக்கும் தன்மை கொண்ட குறைபாடுகளை அகற்றுமாறு இத்தீர்மானம் உங்களைக் குறிப்பாகக் கேட்டுக் கொள்வதை நீங்கள் காண்பீர்கள். உங்களுடைய மத உணர்வுகளைப் புண்படுத்தாமல், உங்க ளுடைய மதப் பாரம்பரியத்தின் மிகச் சிறந்த குணாதிச யங்களைக் கைவிடாமல், இந்த மக்களைப் பள்ளிகளில் அனுமதிக்காதிருத்தல் போன்ற இத்தகைய அபத்தமான கட்டுப்பாடுகளை அகற்ற வேண்டு மென்று உங்களையும் என்னையும் பிறரையும் கேட்டுக் கொள்ளும் உரிமை காங்கிரசுக்கு உள்ளது என்று கருதுகிறேன். இந்த நாட்டின் சில பகுதிகளில் இந்த மக்களுக்கு பொதுக் கிணறைப் பயன்படுத்தும் உரிமையும் கூட மறுக்கப் படுகிறது. இந்தக் கட்டுப்பாடுகளும் மறைய வேண்டும். அதற்காகப் பாடுபட மானுட இனத்தவரனைவரையும் கேட்டுக் கொள்ளும் உரிமையும் கூட காங்கிரசுக்கு உள்ளது.... நம்மை நாமே உயர்த்திக் கொள்ள முயலுவதில், இந்த அவமானகர மான கட்டுப்பாடுகளைப் போக்க முயலுவதில் நாம் இந்திய மானுடத்தன்மையையே உயர்த்தியவர்களாவோம்; நமக்குப் பொறுப்புள்ள சுயாட்சி வழங்கப்படவிருக்கும் போது எல்லா வர்க்கங்களையும் எல்லா மதங்களையும் சேர்ந்த இந்தியர்கள் முழுமையான உரிமைகளை, பொது வான சமூக உரிமைகளைக் கொண்டிருக்கிறார்கள், எல்லாப் பள்ளிகளிலும் அனைவரும் கல்வி கற்க முடியும், எல்லா உயர்கல்வி நிலையங்களுக்கும் செல்ல முடியும் என்று சொல்லிக் கொள்ளக் கூடிய நிலைமையில் இருப்போம். அப்போதுதான் இந்திய மானுடத் தன்மை தனது உண்மையான, மிகச் சிறந்த, கண்ணியமான பாரம்பரி யங்கள் மிளிர மேன்மையடையும்.''

இத்தீர்மானத்தை ஆதரித்து உரையாற்றிய திரு. புலாபாய் தேசாய் சுட்டிக்காட்டியது வருமாறு:

''நாம் போதித்துவரும் மனிதனின் சமத்துவம் சகோ தரத்துவம் ஆகிய கோட்பாடுகளுக்கு நமது சகோதரர்கள் சிலர் அனுபவித்துவரும் துன்பங்கள் மிகப்பெரிய அடி யாகும். இன்று காலையில் நீங்கள் நிறைவேற்றிய தீர்மானத் தின் பகைப்புலனில், நமது சொந்த சகோதரர்களை உயர்த்த முடியாத நிலையில் இருப்போமானால், எந்த முகத்தைக்

கொண்டு நாம் பிரிட்டிஷ் ஜனநாயகத்தையோ அல்லது வேறு எந்த சக்தியையோ அணுகமுடியும்? "உங்களுடைய சொந்த மக்களின் ஒரு பகுதியினர் சமூகரீதியாக இழிவுப் படுத்தப்படும் மடமையை ஒழித்துக் கட்டும் சக்தி உங்களுக்கு இல்லையே" என்று அவர்கள் எள்ளி நகையாடுவார்கள். நமது சுய-உதவியைக் கொண்டு மட்டுமே நம்மால் இதைச் செய்ய முடியும். இந்த விஷயத்தில் நம்மைத்தவிர வேற எந்த சக்தியையும் நாம் அணுக வேண்டிய தேவை இல்லை. உங்களுக்கு முன்பாக இத்தீர்மானத்தை முன்மொழிய அனுமதித்ததன் மூலம் காங்கிரஸ் மகத்தான அடியெடுத்து வைத்திருக் கிறது என்பது நிரூபணமாகியுள்ளது. இத்திசை வழியில் இந்த கொடிய அவல நிலை நீடிப்பது இந்துமதத்தின் பெயருக்கே ஓர் அவமானமாகும். ஆகவே, நீதி, நேர்மை ஆகியவற்றின் அடிப்படையில் இத்தீர்மானம் கோரும் நியாயங்களை நீங்கள் அவர்களுக்கு எவ்வாறு மறுக்கமுடியும்? அதை நீங்கள் செய்யத் தவறினால் எந்த நியாயத்துடன் எந்த முகத்துடன் நீங்கள் சுயாட்சியைக் கோரமுடியும்?

திரு. ராமய்யர் கூறியதாவது:

"தாழ்த்தப்பட்ட வர்க்கங்களைப் பிணைக்கும் தளைகளைத் தகர்த்தெறியக் கூடிய சமூக சுதந்திரத்திற்கு இத்தீர்மானம் அறைகூவல் விடுக்கிறது. அவர்களே இந்நாட்டின் பாதங்கள், நீங்களும் நானும் சுயாட்சி என்ற குன்றின்மீது ஏறவேண்டுமெனில் நாம் முதலில் நமது பாதங்களைப் பிணைத்திருக்கும் தளைகளைத் தகர்த்தெறிய வேண்டும். அப்போதுதான் நமக்கு சுயாட்சி வரும்... நீங்கள் ஒரேசமயத்தில் அரசியல் ஜனநாயகவாதிகளாகவும் சமூக எதேச்சாதிகாரிகளாகவும் இருக்க முடியாது. ஒரு சமூக அடிமையாக இருக்கும் ஒரு மனிதன் அரசியல் ரீதியாகச் சுதந்திரமானவனாக இருக்க முடியாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். அரசியல் ரீதியாக மட்டுமன்றி எல்லாவழிகளிலும் ஒன்றுபட்ட இந்தியா என்ற காட்சியைக் காணுவதற்காக நாமனைவரும் இங்கு வந்திருக்கிறோம். ஆகவே நம்மில் பிராமணர்களாக இருப்பவர்களும், உயர்ஜாதிகளைச் சேர்ந்தவர்களும் நமது கிராமங்களுக்குச் சென்று நமது சொந்த மனிதர்களுக்கு எதிராக, நமது சொந்த நாட்டின் சமூக அதிகார

வர்க்கத்தினரை எதிர்த்துப் போராடிவரும் தாழ்ந்த ஜாதி மக்களின் தளைகளைத் தகர்த்தெறிவோம்.''

திரு. ஆசப் அலி கூறியதாவது:

''ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் பிரச்சினை மிகக் கடினமான பிரச்சினைகளில் ஒன்றாகும். அதிகார வர்க்கத் தினரின் பாகுபாடான, எதேச்சாதிகாரமான செயல்கள் அவமானகரமானவை என்று இந்தியர்களாகிய நாம் கூறி வருகிறோம். ஆனால் இந்தியர்களாகிய நம்மை அவமானத் தால் தலைகுனிய வைப்பது இப்போது ஒடுக்கப்பட்ட மக்களின் - தீண்டத்தகாதவர்களின் முறை யாகியுள்ளது. துரதிருஷ்டத்திற்குப் பலியான இத்தகைய கோடிக்கணக் கான மக்கள் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தங்களது இழி வான தொழில்களில் ஈடுபட்டு வாய்மூடி மௌனிகளாக உழன்று வருகின்றனர். நாட்டின் கொடூரமான, சற்றும் நேர்மையற்ற 'சம்பிரதாயங்கள் அவர்களை வீசி எறிந்த இழிநிலை என்ற அதலபாதாளத்திலிருந்து அவர்கள் ஒருபோதும் வெளி யேறியதில்லை. மற்றவர்களுக்கு அது நம்பிக்கை எனும் வசந்தகாலமாகவோ அல்லது கனவு நனவாகும் கோடை காலமாகவோ இருந்திருக்கக்கூடும். ஆனால் இந்த அதிருஷ்டமற்ற ஜந்துக்களுக்கு அது நம்பிக்கையற்ற இருளின் பனிக் காலமாகவே இருந்தது. மனித உரிமைகளை எய்த வேண்டும். அவற்றைப் பேணிக் காக்க வேண்டும் என்று வாய் கிழியக் கூக்குரலிடுபவர் களே தங்களுக்குக் கீழுள்ள மற்றவர்களின் நியாயமான உரிமைகளைப் பற்றி சற்றும் கவலைப்படாமல் இருப்பது விதியின் கோரவிளையாட்டு போல் தோன்றுகிறது. மற்ற வர்கள் தவறுகளும் புரிந்துவிட்டு அவற்றுக்குப் பரிகாரம் காண்பதற்காகப் போர்க்களத்தில் ரத்தம் சிந்திக் கொண் டிருக்கும் வேளையில் அத்தவறுகளினால் மானுட இனத் தின் வாய்மூடி மௌனிகளாக உள்ள ஒரு பிரிவினர் துன்புற்று வருவது நியாயமோ, நேர்மையோ ஆகுமா? தங்களை இந்த நிலைக்கு ஆளாக்கிய கொடுமையான மரபுகளையும் மீறி ''தீண்டத்தகாதவர்களும்'' கூட மனிதப் பிறவிகள்தானே, அவர்களும் இந்த மண்ணின் குழந்தைகள் தானே, தங்களுக்குத் தாங்களே உயர்ந்தவர்கள் என்று பட்டம் சூட்டிக் கொண்டவர்களின் உடம்பில் ஓடுவது

> போன்று அவர்களுடைய உடம்பிலும் அதே 'சிவப்பு ரத்தம்'தானே ஓடுகிறது. ஒடுக்கப்பட்ட வர்க்கத்தினரும் கூட உலகச் சூழ்நிலைகளில் தங்களை விட மேலானவர்களைப் போன்று'அதே சலுகைகளைப் பெற உரிமையுள்ளவர்கள்தான். மனிதனின் பிறப்புரிமையைப் பெறுவதிலிருந்து அவர்களைத் தடை செய்ய முடியாது. ஒடுக்கப்பட்ட வர்க்கங்கள் என்று இருப்பதே இந்தியர்களுக்கு ஒரு நிரந்தர அவமானமாகும். இந்த அவமானத்தை வேரறுப்பதற்காகத் தான் அவர்கள் வேண்டிக் கொள்கின்றனர்.''

இத்தீர்மானத்தைக் காங்கிரஸ் நிறைவேற்றியதையும், அதை முன்வைத்து ஆதரித்தவர்கள் இத்தகைய கண்ணியமான சொற்களைப் பயன்படுத்தியதையும் ஒரு விநோதமான சம்பவம் என்று நான் ஏன் விளக்க வேண்டுமென்று பலர் வியக்கக்கூடும். இதற்கு முன் நடைபெற்ற சம்பவங்களை அறிந்தவர்கள் இது ஒன்றும் முறையற்ற வர்ணனை அல்ல என்பதை ஒப்புக் கொள்வர். இது பல காரணங்களுக்காக விநோத மானதாக இருந்தது.

முதலாவதாக, அக்கூட்டத் தொடரின் தலைவராக மறைந்த திருமதி. அன்னி பெசன்ட் இருந்தார். அவர் ஒரு பிரபலமான பொது வாழ்வுப் பிரமுகராக இருந்தார். அவருடைய பல சிறப்பம்சங்களுக்காக இந்தியாவின் வருங்கால வரலாற்றியலாளர்கள் அவரை நினைவு கூர்வார்கள். அடையாறைத் தலைமையிடமாகக் கொண்ட பிரம்ம ஞான சபையை அவர்தான் தோற்றுவித்தார். ஓய்வுபெற்ற பதிவாளரான ஒரு பிராமணரின் புதல்வர் திரு. கிருஷ்ணமூர்த்தியை ஒரு வருங்கால மீட்பராக உருவாக்குவதற்கு திருமதி. அன்னிபெசன்ட் பாடுபட்டார் என்பது அனைவருக்கும் தெரியும். திருமதி. அன்னி பெசன்ட் ஹோம்ரூல் லீக் இயக்கத்தைத் தோற்றுவித்தார். அவருக்கு ஒரு கௌரவமான இடத்தைப் பெற்றுத்தர திரு. அன்னி பெசன்டின் நண்பர்கள் அவருக்கு இன்னும்பல சிறப்புகள் இருந்ததாகக் கூறக் கூடும். அவர் எப்போதேனும் தீண்டத்தகாதவர்களின் நண்பராக இருந்தாரா என்பது எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்தவரை தீண்டத்தகாதவர்களின்பால் இயல்பான வெறுப்புணர்வு கொண்டிருந்தார். பொதுப் பள்ளிக்கூடங்களில் தீண்டத்தகாதவர்களின் குழந்தைகளை அனுமதிக்கலாமா, அனுமதிக்கக் கூடாதா என்ற பிரச்சினை சம்பந்தமாகத் தமது கருத்தை 1909 பிப்ரவரியில் வெளியான இந்தியன் ரெவ்யூ என்ற ஏட்டில் ''ஒடுக்கப்பட்ட வர்க்கங்களை மேம்படுத்தல்''

என்ற கட்டுரையில் திருமதி. அன்னி பெசன்ட் பின்வருமாறு தெரிவித்தார்:

''ஒவ்வொரு நாட்டிலும் சமூகக் கோபுரத்தின் அடித்தளமாக பெரிய வர்க்கத்தைச் சேர்ந்த மக்கள், அறியாமையில் மூழ்கியவர்களாக, இழிவுபடுத்தப்பட்டவர்களாக, பேச்சு மொழியிலும் பழக்கவழக்கங்களிலும் தூய்மை யற்றவர்களாக உள்ளனர். சமுதாயத்திற்குத் தேவையான பல பணிகளைச் செய்கின்றனர். எந்த சமுதாயத்தின் தேவைகளை அவர்கள் பூர்த்தி செய்கின்றனரோ, அதே சமுதாயம் அவர்களை இழிவுபடுத்தி ஒதுக்கிவருகிறது. இங்கிலாந்தில் இந்த வர்க்கம் ''மூழ்கிய பத்து'' என்று அழைக்கப்படுகிறது. அதற்குக் காரணம் மொத்த மக்கள் தொகையில் இந்த வர்க்கத்தினர் பத்தில் ஒரு பகுதியாக உள்ளனர். இந்த வர்க்கம் எப்போதும் பட்டினியின் விளிம்பில் இருந்துவருகிறது, குறைந்தபட்ச கூடுதல் நெருக்குதல்கள் அவர்களை வாழ்க்கையின் விளிம்புக்கே தள்ளிவிடுகின்றன. ஊட்டச்சத்து இன்மையினால் இந்த வர்க்கம் துன்புற்று வருகிறது, அதனால் ஏற்படும் வியாதிகளுக்கும் இரையாகி வருகிறது. மிகக்கீழான வகைப்பட்ட நரம்பு மண்டல அமைப்புக் கொண்ட எல்லா ஜீவ ராசிகளையும் போலவே இந்த வர்க்கமும் இனப்பெருக்க வளங்கொண்டதாக இருக்கிறது. ஆனால் இவர்களுடைய குழந்தைகள் விரைவில் மடிந்து விடுகின்றனர். தகுந்த உணவின்றி, எலும்பும்தோலுமாக, தோற்றக் கேடுகளுடன் காணப்படுகின்றனர். அந்த வர்க்கத்தின் சிறந்த வகையினர் தேர்ச்சியற்ற தொழிலாளர்களாக உள்ளனர். அவர்கள் தோட்டிகளாக, துப்புரவுத் தொழிலாளிகளாக, துறைமுகத்தில் தினக்கூலிகளாக, பழ விற்பனையாளர்களாக உள்ளனர்; அந்த வர்க்கத்தின் மோசமான வகைப்பட்டவர்கள் குடிகாரர்களாக, சோம்பித் திரிபவர்களாக, முரட்டுத்தனமான ஒழுக்கக்கேடர்களாக, மனம்போன போக்கில் செல்பவர்களாக, நாடோடிகளாக, குற்றவாளிகளாக, முரடர்களாக, சமுதாயத்திற்கு எந்த வகையிலும் பயனற்றவர்களாக மாறி விடுகின்றனர். முதலாவது வகையினர் உண்மையானவர்களாகவும் நல்ல உழைப்பாளிகளாகவும் உள்ளனர்; இரண்டாவது வகையினர் தொடர்ந்து கட்டுப்பாட்டின்கீழ் வைக்கப்பட வேண்டியவர்கள், தங்களது உணவை ஈட்டுவதற்கு கட்டாயமாக உழைக்கும்படி செய்யப்பட வேண்டி

யவர்கள். இந்தியாவின் மொத்த மக்கள் தொகையில் இந்த வர்க்கத் தினர் ஆறில் ஒரு பகுதியினராக உள்ளனர். இவர்கள் 'ஒடுக்கப்பட்ட வர்க்கத்தினர்' என்று அழைக்கப்படுகின்றனர். ஆரியப் படையெடுப்பாளர்களினால் வெற்றி கொள்ளப் பட்டு அடிமைப்படுத்தப்பட்ட, நாட்டின் பூர்வ குடிமக்கள் என்பதிலிருந்து இப்பெயர் தோன்றியிருக்கிறது. அவர்கள் உணவு, உடல், குடியிருக்கும் இடம் எதுவானாலும் தூய்மை ையப் பற்றி கிஞ்சித்தும் கவலைப்படாதவர்களாக இருக் கின்றனர்; ஆனால் திருமணங்கள் சிறிது சம்பிரதாயங் களுடன் நடத்தப்படுகின்றன. குழந்தைகள் அன்புடன் பேணப்படுகிறார்கள், அவர்களிடத்தில் காட்டுமிராண்டித் தனமோ, வன்முறையோ அல்லது குற்றம்புரியும் குணமோ இல்லை. குற்றம் புரியும் வகுப்பினரான பரம்பரைத் திருடர் கள் போன்றவர்கள் தனித்து வாழுகின்றனர். அவர்கள் ஒடுக்கப்பட்ட மக்களில் பெரும்பான்மையாளராக இருக்கும் தோட்டிகளுடன், துப்புரவுத் தொழிலாளர்களுடன், உழவுத் தொழில் செய்பவர்களுடன், இதர எளிய கைவினைஞர் களுடன் கலப்பதில்லை. அவர்கள் முரட்டுத்தனமற்ற, பணிவான, சுறுசுறுப்பானவர்களாக, மிகவும் கீழ்ப்படிந்து நடப்பவர்களாக, தேவைகள் ஏதும் இல்லாதபோது களிப் புடன் இருப்பவர்களாக, கெட்டிக்காரர்களாக அதே சமயம் வரையறுக்கப்பட்ட அறிவாற்றல் கொண்டவர் களாக உள்ளனர்; உண்மை, நற்குடிமைப் பண்புகள் போன்றவற்றை முற்றிலும் அறியாதவர்களாக உள்ளனர் - இவர்கள் வேறு எவ்வாறு இருக்க முடியும்? - ஆனால் இவர் கள் பிரியமுடையவர்களாக, சிறிதே அன்பு செலுத்தி னாலும் அதற்கு நன்றியுடையவர்களாக, 'இயற்கையான வாழ்க்கைப் பற்றுடையவர்களாக' உள்ளனர். உண்மை யில் அவர்கள் எளிய பயனுள்ள ஆயினும் கண்ணியமான வாழ்க்கைக்குத் தேவையான சிறந்த பொருள்களை வழங்கு கின்றனர்,...

''இவர்களுக்கு இழைக்கப்பட்ட காட்டுமிராண்டித்தன மான கொடுமைகளுக்காக வருத்தப்படுபவர்களினால், சுதந்திரங்களைக் கோரும் இந்தியர்கள் மற்றவர்களுக் கும் மதிப்பளிக்க வேண்டும் என்று கருதுபவர்களினால், தங்களுக்குத் தேவை என்று உரிமைகோரும் விஷயங்

களில் மற்றவருக்கும் ஒரு பங்கு வழங்க வேண்டும் என்று எண்ணுபவர்களினால் இவர்களுக்கு என்ன செய்ய முடியும்?

''எல்லா இடங்களையும் போன்று இங்கும் கல்வி என்ற நெம்புகோலைக் கொண்டுதான் இவர்களை நம்மால் மேம்படுத்த முடியும், ஆனால் தொடக்கத்திலேயே ஒரு சிரமம் ஏற்படுகிறது, ஏனெனில் இரக்க உணர்வு, தர்ம சிந்தனை போன்ற உன்னத உணர்வுகளால் உந்தப்பட்டு சமுதாயத்தின் ஒரு வர்க்கம், சூழ்நிலைகளைக் கவனமாக வும் விரிவாகவும் பரிசீலனை செய்யாமல் ஒடுக்கப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த குழந்தைகளை, உயர் வர்க்கங் களைச் சேர்ந்தவர்களின் புதல்வர்கள் படிக்கும் பள்ளி களில் சேர்க்க வேண்டுமென்றும், இந்தக் கொள்கைக்கு ஆதரவாக இல்லாதவர்கள் சகோதரத்துவ உணர்வற்ற வர்கள் என்றும் குற்றம் சாட்டுகின்றனர். ஆகவே சகோதரத் துவம் என்றால் சமன்படுத்துவது என்று அர்த்தமா. ஒரு குடும்பத்தில் மூத்த குழந்தைகளையும் கைக் குழந்தை களையும் ஒரே மாதிரி நடத்த முடியுமா என்று கேட்பதும் அவசியமாகிறது. இவ்வாறு கூறுவது ஆர்வமேலீட்டினா லன்றி அறிவாற்றலினால் அல்ல. இயற்கைக்குகந்ததும் அல்ல - இது சகோதரத்துவத்திற்குப் பதிலாக சமத்துவத் தைக் கோருவதாகும். செயற்கையான சமத்துவத்தை உருவாக்குவதற்காக பலதலைமுறைகளாகப் பெற்ற கல்வியின் பலன்களை பண்பட்டவர்களும் பண்பு நயம் மிக்கவர்களும் கைவிட்டு விடவேண்டும் என்று கோருவ தாகும். இது வருங்காலத்தின் முன்னேற்றத்திற்கு அழிவு கரமானதாக இருக்கும், தற்காலத்தின் மேம்பாட்டுக் கும் பயனற்றதாக இருக்கும். ஒடுக்கப்பட்ட மக்களின் குழந்தைகளுக்கு முதலில் தூய்மை, வெளிநடத்தையில் நாகரிகம், கல்வியின் அடிப்படைக் கூறுகள் மதம் மற்றும் ஒழுக்கப் பண்புகள் ஆகியவை கற்றுத் தரப்பட வேண்டும். அவர்களது உடலில் துர்நாற்றமும் மதுபான நெடியும் மூக்கைத் துளைக்கும் வாசனை கொண்ட உணவின் நெடியும் வீசுவதாக இருக்கிறது. அவர்கள் பல தலை முறைகளாக இப்படித்தான் வாழ்ந்து வருகின்றனர்; நேர்த்தியான தனிநபர் தூய்மை சம்பந்தமான பழக்க

வழக்கங்களில் பயிற்சி பெற்ற பரம்பரையிலிருந்து பெறப் பட்ட உடல்களையும் சுத்தமான உணவு வகைகளை உண்டும் வந்த குழந்தைகளுடன் ஒரே வகுப்பறையில் அருகாமையில் அமருவதற்கு தங்களுடைய உடல்களை தகுதிவாய்ந்தவையாக்க அக்குழந்தைகள் சில தலை முறைகளேனும் சிறந்த சுத்தமான உணவை உண்டு வாழவேண்டும். ஒடுக்கப்பட்ட வர்க்கத்தினரின் உடற் கூறியல் தூய்மையை அதே மட்டத்திற்கு நாம் உயர்த்த வேண்டும். தூய்மையற்றவர்களின் நிலைக்குத் தூய்மை யானவர்களை இழுத்துச் செல்லக்கூடாது, இது செய்யப் படும் வரை நெருக்கமான தொடர்பு விரும்பத்தகுந்த தல்ல. நாம் இந்தக் குழந்தைகளையோ அல்லது அவர் களின் பெற்றோர்களையோ அவர்கள் இவ்வாறு இருப் பதற்காகக் குறைகூறவில்லை; நாம் எவரும் உணரக் கூடிய உண்மையைத்தான் கூறுகிறோம். இந்தக் குழந்தை களுக்கு ஒரு பள்ளியில் அன்றாடம் முதலில் நடத்தப் படும் பாடம் ஒரு குளியல், பின்னர் தூய்மையான உடை; இரண்டாவதாகத் தூய்மையான முழுமை யான உணவு; தங்களது அன்றாடக் குளியலை விடிகாலை யிலேயே முடித்துக் கொண்டு, நல்ல உணவு ஊட்டப் பட்டு பள்ளிக்கு வரும் குழந்தைகளுக்கான பள்ளியில் இந்த ஆரம்பத் தேவைகளை வழங்க முடியாது.

''இக்குழந்தைகளின் ஆசிரியர்கள் எதிர்கொள்ளும் மற்றுமொரு சிரமம் தொற்றுவியாதிகளாகும்; முதலாவ தாக ஓர் உதாரணத்தைப் பார்ப்போம். அவர்களுடைய அசட்டையான போக்குகள் காரணமாக அவர்களிடையே காணப்படும் மிகவும் பொதுவான எளிதில் தொற்றக் கூடியது கண்நோய். மதராசில் உள்ள எங்களது பஞ்சமப் பள்ளிகளில் இந்நோயைக் கண்டுபிடித்துத் தடுப்பதற் காக ஆசிரியர்கள் எப்போதும் கவனமாக இருக்கிறார்கள். அக்குழந்தைகளுடைய கண்கள் தினமும் கழுவிச் சுத்தம் செய்யப்படுகின்றன. நோய் ஏற்படுவது இதனால் தடுக்கப் படுகிறது. இத்தகைய மோசமான வியாதிகளிலிருந்து தங்களது குழந்தைகளைப் பாதுகாக்க அன்றாடம் கவனம் மேற்கொள்ளும் பெற்றோர்கள் வேண்டுமென்றே அவர் களை இத்தகைய தொற்றுநோய்களுக்கு இலக்காக அனு மதிப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியுமா?

''இந்த ஆதரவற்ற குழந்தைகளின் பழக்கவழக்கங்களை, மென்னயத்துடன் பேணி வளர்க்கப்பட்ட குழந்தைகள் பார்த்துப் பின்பற்றுவது விரும்பத் தகுந்ததல்ல. உதாரணமாகச் சிறந்த மனப்பாங்குகள் தொடர்ச்சியான, கடுமையான சுயகட்டுப்பாட்டின், மற்றவர்களுடைய வசதி வாய்ப்புக்களைப் பற்றி எண்ணிப் பார்ப்பதன் பயனாகும்; சிறப்பான முறையில் வளர்க்கப்பட்ட பெற்றோர்கள் மற்றும் ஆசிரியர்களிடமிருந்து குழந்தைகள் நற்பாங்கினைத் தெரிந்துகொள்கின்றனர். இரண்டாவதாக பொருத்தமான நீதிபோதனை, கண்டிப்பு ஆகிய வற்றினாலும் தெரிந்து கொள்கின்றனர். இத்தகைய குழந்தைகள் பள்ளியில் இவ்வாறு பயிற்சி பெறாத குழந்தைகளுடன் பழகினால் அவர்களைச் சுற்றிலும் அவர்கள் காணும் சம்பவங்களின் வழியில் விரைவிலேயே சென்று விடுவார்கள். நீண்ட பயிற்சியினால் நல்ல பழக்கங்கள் நிரந்தரமாக நம்மிடம் தங்கும்வரை, துல்லியமாக இருப்பதைவிட அரைகுறையாக இருப்பதும் கவனமாக இருப்பதைவிட கவனக்குறைவாக இருப்பதும் மிகமிக எளிதாகும். நல்ல பழக்கவழக்கங்களும் அடக்கமும் பரம்பரையாக உள்ள குடும்பங்களைச் சேர்ந்த குழந்தைகளின் பாரம்பரியத்தைப் பறித்துவிட வேண்டுமா? இக்கொள்கையினால் யாரும் செழுமையடையப் போவதில்லை. மாறாக இது தேசத்தையே அதலபாதாளத்திற்கு இட்டுச் சென்றுவிடும். மென்மையான பேச்சு, சிறந்த வளமான குரல், இனிய பண்புகள் ஆகிய இவை நெடிய கலாசாரத்தின் மதிப்புமிக்க பலன்களாகும், இவற்றை செயலறச் செய்வது உண்மையான சகோதரத்துவம் ஆகாது...

''இங்கிலாந்தில், எல்லா வர்க்கங்களையும் சேர்ந்த சிறுவர்களையும் சிறுமிகளையும் அருகருகில் வைத்துக் கல்வி புகட்டுவது விரும்பத்தகுந்ததாக ஒருபோதும் கருதப்பட்டதில்லை. சமமற்றவர்களை சமமாக நடத்தும் இத்தகைய கோரமான செயல் அங்கு வெறுப்பையே உருவாக்கும். ஈட்டன், ஹாரோ ஆகியவை உயர் வர்க்கத்தினருக்கான பள்ளிகளாகும். ரக்பி, வின்செஸ்டர் ஆகியவையும்கூட கனவான்களுக்கான பள்ளிகளே. ஆயினும்

அவை ஓரளவுக்கு உயர்குடியினரின் அந்தஸ்தை விடக் குறைந்தவைதான். பின்னர் முக்கியமாக மாகாணங்களி லுள்ள மத்திய தர வர்க்கத்தைச் சேர்ந்தவர்களின் பிள்ளை கள் செல்லும் ஏராளமான பள்ளிகள் உள்ளன. பின்னர் போர்டு பள்ளிகள், அங்கு கைவினைஞர்கள் மற்றும் பொதுவான உடலுழைப்பில் ஈடுபட்டுள்ள தொழிலாளர் வர்க்கத்தினரின் பிள்ளைகள் படிக்கிறார்கள். இவை எல்லாவற்றிற்கும் கீழே ஆதரவற்ற வழிதவறிய குழந்தை களுக்கான ''கந்தல் பள்ளிகள்'' உள்ளன. இது அப்பள்ளி யில் கல்வி கற்பவர்களையும் அவற்றை நடத்தும் எண் ணற்ற தரும ஸ்தாபனங்களையும் குறிக்கிறது. இங்கி லாந்தில் யாரேனும் ஒருவர், கந்தல் பள்ளிகளில் படிக்கும் குழந்தைகளை ஈட்டனிலும் ஹாரோவிலும் சேர்க்க வேண்டும் என்ற யோசனையைக் கூறினால் அவருடன் யாரும் வாதிட மாட்டார்கள், அந்த நபர் எள்ளி நகை யாடப்படுவார். சகோதரத்துவத்தின் பெயரால் இங்கு அதேபோன்ற யோசனைகள் கூறப்படும்போது, அத னுடைய அபத்தத்தன்மையை மனந்திறந்து சுட்டிக்காட்டு வதற்கு மக்கள் சங்கோஜப்படுவதுபோல் தோன்றுகிறது. இது ஒடுக்கப்பட்ட வர்க்கங்களுக்கு இழைக்கப்பட்ட கொடூரமான தவறுகளுக்கு எதிரான வன்முறை சார்ந்த வெறும் எதிர்ச் செயலே இந்த யோசனை என்பதை அவர் கள் உணருவதில்லை. இது விழித்துக்கொண்ட மனச்சாட்சி யின் கூக்குரல். தனது உணர்வுகளை வழிநடத்திச் செல் லும் சரியான காரணங்களைத் தேட இன்னமும் சமயம் கிடைக்கவில்லை என்பதை அவர்கள் உணருவதில்லை. சமூக வேறுபாடுகளின்பால் அரசாங்கப் பள்ளிகள் கவனம் செலுத்துவதில்லை என்று சிலசமயங்களில் கூறப்படு கிறது. அதன்மூலம் அவர்கள் தாங்கள் தங்களது உணர் வில் ''அன்னியர்களாக'' இருப்பதைக் காட்டிக் கொள் கின்றனர். தங்களுடைய சொந்த மக்களின் புதல்வர்கள் விஷயத்தில் அவர்கள் இவ்வாறு நடந்துகொள்ள மாட் டார்கள். ஆயினும் இந்தியர்களின் புதல்வர்கள் விஷயத் தில், அவர்களை சுத்தமானவர்களையும் அசுத்தமான வர்களையும் ஒன்றாக அடைத்துவைக்கும் விஷயத்தில் அவர்கள் கவனக்குறைவாக இருக்கக்கூடும். ஒரு பள்ளி யில் பண்பட்ட வர்க்கத்தினரின் புதல்வர்கள் மட்டுமே அனுமதிக்கப்படும் பொழுது அந்த இளைஞர்களின்

> "குரலில்" இருக்கும் வேறுபாடுகளைக் காண்பது எளிது. இங்கிலாந்தில் தங்களது சொந்தப் பிள்ளைகளை ஆங்கிலேயர்கள் பாதுகாப்பதுபோல, கரடுமுரடான செல்வாக்குகளிலிருந்து தங்களது புதல்வர்கள் பாதுகாக்கப்படும் பள்ளிகளுக்கே அவர்களை அனுப்புவது இந்தியர்களின் நலன்களுக்கு உகந்ததாக இருக்கும்."

★ ★ ★

இத்தீர்மானம் இயற்றப்பட்டது ஒரு விநோதமான சம்பவம் என்று வருணிப்பதை ஒருவர் நியாயப்படுத்துவது ஏன் என்பதற்கான இரண்டாவது காரணம் அது காங்கிரசின் பிரகடனப்படுத்தப்பட்ட கொள்கைக்கு முற்றிலும் எதிரானது என்ற உண்மையில் பொதிந்துள்ளது. காங்கிரசின் "ஆக்கப் பூர்வமான திட்டம்" ஒவ்வொரு தெருமுனையிலிருந்தும் கூவப்படும் இந்த நாட்களில், ஒத்துழையாமை மற்றும் சிவில் கீழ்ப்படியாமை என்ற ஒரு தீவிரமான இயக்கத்திற்குப் பின்னர் காங்கிரஸ் சற்றே இளைப்பாறிக் கொண்டிருக்கும் இச்சமயத்தில் இந்த அறிக்கை இன்றைய காங்கிரஸ்காரர்களுக்கும் அவர்களது நண்பர்களுக்கும் ஆச்சரியத்தை ஏற்படுத்தக் கூடும். காங்கிரசின் வருடாந்திரக் கூட்டத் தொடர்களுக்குத் தலைமை வகித்த தலைவர்களின் உரைகளிலிருந்து எடுக்கப்பட்ட பின்வரும் பகுதிகள், காங்கிரசின் நோக்கங்கள் மற்றும் குறிக்கோள்களில் சமூக சீர்திருத்தப் பிரச்சினைகளுக்கு இடமளிக்காதிருப்பதே காங்கிரசின் கொள்கை என்ற உண்மையே மோசமானதாகும்.

முதலாவதாக, 1886 ஆம் ஆண்டில் கல்கத்தாவில் நடைபெற்ற இந்திய தேசியக் காங்கிரசின் இரண்டாவது கூட்டத் தொடருக்குத் தலைமையேற்ற திரு. தாதாபாய் நவ்ரோஜியின் உரையைப் பார்ப்போம். சமூக சீர்திருத்தக் கொள்கையின்பால் தமது தலைமை உரையில் காங்கிரசின் அணுகுமுறையைக் குறிப்பிட்டு அவர் கூறியதாவது:

> "சமூக சீர்திருத்தப் பிரச்சினைகளை காங்கிரஸ் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டு வந்துள்ளது ('ஆம் ஆம்' என்ற கைதட்டல்கள், குரல்கள்). இதில் நாம் எதுவும் செய்யத் தவறியதற்காக நம்மீது குற்றம் சாட்டப்படுகிறது. என்றென

விட சமூக சீர்திருத்தத்திற்கான அவசியத்தை அதிகம் உணர்ந்தவர்கள் இந்திய தேசியக் காங்கிரசில் எவரும் நிச்சயமாகக் கிடையாது; ஆனால் கனவான்களே, எல்லா வற்றிற்கும் உரிய நேரம், உரிய சூழ்நிலைகள், உரிய கட்சிகள், உரிய இடங்கள் என்று ஒன்று இருக்கிறது (ஆரவாரம்); நமது அரசியல் அபிலாஷைகளை நமது ஆட்சியாளர்களுக்கு எடுத்துரைப்பதற்காகத்தான் நாம் இங்கு ஓர் அரசியல் அமைப்பாகக் கூடியிருக்கிறோமே தவிர சமூக சீர்திருத்தங்களை விவாதிப்பதற்காக அல்ல. இவற்றை அசட்டை செய்வதாக நீங்கள் எங்களைக் குறைகூறினால் கணிதவியலின் அப்ட்ரூசர் பிரச்சினை கள் அல்லது புலன் கடந்த நுண்பொருள் ஆராய்ச்சி குறித்து விவாதிக்காததற்காக நீங்கள் காமன்ஸ் சபையை யும் சம அளவில் குறைகூற வேண்டியிருக்கும். ஆனால் இதைத் தவிர, இங்கு இந்து மதத்தைச் சேர்ந்த எல்லா ஜாதியினரும் உள்ளனர். அவர்களிடையே அவர்கள் ஒரே மாகாணத்தைச் சார்ந்தவர்களாயினும் சம்பிரதாயங்களும் சமூக ஏற்பாடுகளும் பரந்த அளவில் வேறுபடுகின்றன. பல்வேறு பிரிவுகளைச் சேர்ந்த முகமதியர்களும், கிறிஸ்த வர்களும் உள்ளனர். பார்சிகள், சீக்கியர்கள், பிரமோக்கள் இன்னும் பல பிரிவினர் உள்ளனர் - உண்மையில் ஒவ் வொரு நபரும், எண்ணற்ற வர்க்கங்களைச் சேர்ந்தவர் களும்தான் இந்தியாவின் ஒட்டுமொத்த மக்களாக அமை கின்றனர் (பலத்த கரவொலி). இங்கு கூடியுள்ள அனைத்து வர்க்கத்தினரும் ஒவ்வொரு தனிப்பட்ட வர்க்கத்திலும் தேவைப்படும் சமூக சீர்திருத்தங்களை விவாதிப்பது எப்படி?.... அந்தந்த வர்க்கத்தைச் சேர்ந்த உறுப்பினர் கள் மட்டுமே அவர்களுக்குத் தேவைப்படும் சீர்திருத்தங் களைப் பற்றிப் பயனுறுதியுடன் எடுத்துக் கூறமுடியும். ஒரு தேசியக் காங்கிரஸ், தேசம் முழுவதும் பங்கெடுத்துக் கொள்ளும் பிரச்சினைகளுடன் தன்னைக் கட்டுப் படுத்திக் கொள்ளவேண்டும். சமூக சீர்திருத்தங்களுக்குப் பாடுபடுதல் மற்றும் இதர வர்க்கப் பிரச்சினைகளை வர்க்கக் காங்கிரசுகளுக்கு விட்டுவிடவேண்டும்...''

இதே விஷயம், 1887இல் நடைபெற்ற காங்கிரசின் மூன் றாவது வருடாந்திரக் கூட்டத் தொடருக்குத் தலைமை வகித்த மாண்பு

மிகு திரு. பத்ருதீன் தியாப்ஜியினாலும் குறிப்பிடப்பட்டது. திரு. தியாப்ஜி கூறியதாவது:

> ''இந்தக் காங்கிரஸ் சமூக சீர்திருத்தங்கள் சம்பந்தமான பிரச்சினைகளை விவாதிக்கவில்லை என்பதை நமது நடவடிக்கைகளுக்கெதிரான ஓர் ஆட்சேபனையாக வலியுறுத்தப்பட்டுள்ளது... இந்தக் காங்கிரஸ் எந்த ஒரு வர்க்கத்தின் அல்லது ஜாதியின் பிரதிநிதிகளை உள் ளடக்கியிருக்கவில்லை. இந்தியாவின் ஒரு பகுதியை மட்டும் பிரதிநிதித்துவப்படுத்தாது எல்லா வெவ்வேறு பகுதிகளையும் எல்லா வெவ்வேறு வர்க்கங்களையும் இந்தியாவின் எல்லா வெவ்வேறு ஜாதிகளையும் பிரதி நிதித்துவப்படுத்துகிறது என்பதைப் பார்க்கும்போது இந்த ஆட்சேபனை எனக்கு வினோதமாகத் தோன்றுகிறது என்பதை நான் ஒப்புக் கொண்டாக வேண்டும். எந்த ஒரு சமூக சீர்திருத்தப் பிரச்சினையும் இந்தியாவின் ஒரு குறிப்பிட்ட பகுதியை அல்லது சில குறிப்பிட்ட ஜாதி யினரை மட்டுமே பாதிக்கும் என்பதாலும் ஆகவே, கனவான்களே, முசல்மான்களாகிய நாங்களும் கூட எங்க ளுக்கே உரிய சமூகப் பிரச்சினைகளைத் தீர்க்க வேண்டி யுள்ளது. அதேபோல எங்களுடைய இந்து மற்றும் பார்சி நண்பர்களுக்கும் தீர்க்கப்பட வேண்டிய பிரச்சினைகள் உள்ளன என்றாலும் கூட, இப்பிரச்சினைகளைத் தீர்ப்ப தற்கு குறிப்பிட்ட ஜாதிகளின் தலைவர்களே பாடுபட வேண்டும் (கரவொலி). ஆகவே கனவான்களே, நாம் மேற்கொள்ளக்கூடிய ஒரே அறிவார்ந்த, உண்மையில் ஒரே சாத்தியமான போக்கு என்னவாக இருக்க வேண்டு மெனில் இந்தியா முழுவதையும் பாதிக்கக்கூடிய பிரச் சினை பற்றி விவாதிப்பதுடன் நாம் நிறுத்திக் கொள் வதும், ஒரு குறிப்பிட்ட பகுதி அல்லது ஒரு குறிப்பிட்ட ஜாதியை மட்டுமே பாதிக்கக்கூடிய பிரச்சினைகள் பற்றி விவாதிப்பதிலிருந்து ஒதுங்கியிருப்பதுமேயாகும் என்று நான் கருதுகிறேன்.''

காங்கிரசின் எட்டாவது கூட்டத் தொடரில் தமது தலைமை உரையில் திரு. டபிள்யூ. சி. பானர்ஜி தமது உணர்வுகளைப் பின்வரு மாறு தெரிவித்தபோது இந்த விஷயம் 1892இல் மூன்றாவது முறை யாகக் குறிப்பிடப்பட்டது:

''நமது விமர்சகர்களில் சிலர் நமது விவகாரங்களைப் பற்றி நமக்குத் தெரிந்ததை விட அவர்களுக்கு அதிகமாகத் தெரியும் என்று எண்ணிக்கொண்டு, அரசியல் விஷ யங்களில் நாம் குட்டையைக் குழப்பக்கூடாது. அரசி யலை ஒதுக்கிவைத்து விட்டு சமூக விஷயங்களுக்கு நம்மை நாமே அர்ப்பணித்துக் கொண்டு நமது நாட்டின் சமூக அமைப்பை மேம்படுத்தப் பாடுபட வேண்டுமென்று நமக்கு அறிவுரை கூறிவருகின்றனர்; சமூக விஷயங் களைப் பகிரங்கமாக விவாதிப்பதில் அவ்வளவாக நம்பிக்கை இல்லாதவர்களில் நானும் ஒருவன்; அந்த விஷயங்களை அதே சமூக அமைப்பைச் சேர்ந்த ஒரு ஜாதியின் தனிப்பட்ட நபர்களிடம் அதன் மேம்பாட் டிற்குத் தங்களால் இயன்றதை செய்யுமாறு விட்டுவிட வேண்டும் என்று கருதுகிறேன். பொது இடங்களில் சமூக விஷயங்கள் விவாதிக்கப்படும்போது மக்கள் எந்த அள வுக்கு உணர்ச்சி வசப்படுகின்றனர் என்பதை நாமறி வோம். அண்மையில் இதுபோன்ற ஒரு சம்பவத்தை நாம் கண்டோம். வைசிராயின் சட்ட மேலவையில் வயது சம்மத மசோதா அறிமுகப்படுத்தப்பட்டபோது இது நிகழ்ந்தது. அந்த நடவடிக்கை சம்பந்தமாக ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளின் சிறப்பு களைப் பற்றி ஒரு வார்த்தை கூட சொல்ல நான் விரும்ப வில்லை. பகிரங்க மாக ஒரு பகைமை நிலவும் நேசமற்ற உணர்வில் இத்தகைய ச ூக விஷயங்கள் விவாதிக்கப்படும்போது பொது மக்களுடைய மனது எந்த அளவுக்கு குழப்ப மடைகிறது என்பதை விளக்கவே நான் இதைக் குறிப் பிடுகிறேன்... சமூக சீர்திருத்தம் என்றால் என்ன என்பதை நாமனைவரும் ஒரே உணர்வில் புரிந்து கொள்வ தில்லை. நமது புதல்விகளும் நம்முடைய புதல்வர்களைப் போன்று அதே கல்வியைப் பெற வேண்டும், அவர்களும் பல்கலைக் கழகங்களில் பயில வேண்டும். அவர்களும் கூட கற்றறிந்த தொழில்களில் ஈடுபட வேண்டும் என்று நம்மில் சிலர் ஆர்வத்துடன் இருக்கிறோம்; மற்றவர்கள் இளம் வயதிலேயே குழந்தைகளுக்குத் திருமணம் செய்து கொடுத்துவிடாதிருப்பதில் திருப்தியடைகின்றனர்; குழந்தைப் பருவத்திலேயே விதவைகளாகி விடுப வர் கள் தங்களுடைய வாழ்நாள் முழுவதும் விதவைகளாக இருந்துவிடக்கூடாது என்று இவர்கள் கருதுகின்றனர்.

இன்னும் சிலர் சமூகப் பிரச்சினைகள் அவைகளாகவே ஒரு தீர்வுக்கு வர வேண்டும் என்று கருதி வாளாவிருப்பர்.. தனது சக்திகளனைத்தையும் அரசியல் விஷயங்களுக் காக, அரசியல் விஷயங்களுக்காக மட்டுமே அர்ப்பணித்துக் கொண்ட ஓர் அப்பழுக்கற்ற அரசியல் அமைப்பாக மட்டுமே காங்கிரஸ் தொடங்கப்பட்டது, அவ்வாறே இருந்து வந்துள்ளது, அவ்வாறே எப்போதும் இருந்து வரும் என்று நான் திடமாக நம்புகிறேன். நமது பணி களின் ஓர் அங்கமாக சமூக விஷயங்களைச் சேர்த்துக் கொள்ளாததற்காக நம்மீது குறைகூறுபவர்கள் நமது சொந்த நாட்டவர்களாயினும் வேறு எந்த நாட்டவர் களாயினும் சரி, வயது சம்மத மசோதாவினால் நாமனை வரும் காதைப் பிடித்துத் திருகப்பட்டது போன்று சமூக விஷயங்களிலும் நம்மைக் காதைப் பிடித்துத் திருகி ஒப்புக்கொள்ளச் செய்ய முடியும் என்றும், இதன்மூலம் அவமானகரமான முடிவுக்கு நாம் வரக்கூடும் என்றும் அவர்கள் இரகசியமாக விருப்பம் கொண்டுள்ளனர் என்று நான் ஐயுறுகிறேன். அவர்கள் நமது நன்மை விரும்பிகள் அல்ல, சமூகப் பிரச்சினைகளை விவாதிப் பதற்கு மட்டுமே காங்கிரஸ் தகுதிபெற்றது என்று இத் தகைய விமர்சகர்கள் கூறுவதைக் காணும்போது அவர் களை தூர விலக்கி வைப்பதே சிறந்ததாக இருக்கும் என்று கருதுகிறேன்...''

''நமது சமூக அமைப்பை நாம் சீர்திருத்தம் செய்யும் வரை அரசியல் சீர்திருத்தம் செய்யும் தகுதியை நாம் பெற்றிருக்க மாட்டோம் என்று கூறுபவர்களைப் பொறுமை யுடன் சகித்துக்கொள்ள முடியாதவர்களில் நானும் ஒருவன். இந்த இரண்டிற்கும் இடையில் எந்தத் தொடர் பையும் என்னால் காணமுடியவில்லை. உதாரணமாக, ஒரே அதிகாரியிடமிருந்து நீதிமன்ற நடவடிக்கைகளை யும் நிர்வாக நடவடிக்கைகளையும் பிரிக்க வேண்டு மென்று பல ஆண்டுகளாக நாம் யோசனை கூறிவந்த அரசியல் சீர்திருத்தங்களில் ஒன்றை எடுத்துக் கொள் கிறேன். அப்பட்டமான அரசியல் சீர்திருத்தமான இதற் கும் சமூக சீர்திருத்தத்திற்கும் இடையில் என்ன தொடர் பிருக்க முடியும்? இதேபோன்று நாம் ஆதரித்து வந்த

நிரந்தரக் குடியேற்றம் குறித்த, காடுகள் மற்றும் இதர நடவடிக்கைகள் சம்பந்தமான சட்டத்திருத்தத்தையும் எடுத்துக் கொள்ளுங்கள்; நான் மீண்டும் கேட்கிறேன். இதற்கும் சமூக சீர்திருத்தத்திற்கும் என்ன சம்பந்தம்? நமது விதவைகள் மறுமணம் செய்து கொள் ளாமல் இருக்கிறார்கள், மற்ற நாடுகளில் நடப்பதைவிட நமது பெண்களுக்கு விரைவில் திருமணம் செய்து கொடுத்து விடுகிறோம் என்ற காரணத்தினால் நாம் அவற்றிற்குத் தகுதியற்றவர்களாகிவிட்டோமா? நமது மனைவியரும் புதல்விகளும் நம்முடன் காரில் நண்பர்கள் வீட்டுக்கு வருவதில்லை என்ற காரணத்தினால், நமது புதல்வியரை நாம் ஆக்ஸ்ஃபோர்டுக்கும் கேம்பிரிட்ஜுக்கும் அனுப்புவதில்லை என்ற காரணத்தினால் நாம் அவற்றுக்குத் தகுதியற்றவர்களாகி விட்டோமா? (மகிழ்ச்சி ஆரவாரம்).

1895 இல் புனாவில் நடைபெற்ற காங்கிரஸ் கூட்டத் தொடருக்குத் தலைமை வகித்த திரு.சுரேந்திரநாத் பானர்ஜிதான் இந்த விஷயத்தைக் கடைசிமுறையாகக் குறிப்பிட்ட காங்கிரஸ் தலைவராவார். தமது தலைமை உரையில் இந்த விஷயத்தைத் தொட்டுக் காட்டிய திரு. பானர்ஜி கூறியதாவது:

''நமது முகாமில் கருத்துவேறுபாடுகள் இருப்பதை நம்மால் சகித்துக்கொள்ளமுடியாது. இது ஒரு இந்து காங்கிரஸ் என்று சிலர் நம்மிடம் கூறிவருகின்றனர். ஆயினும் நமது முகம்மதிய நண்பர்கள் இங்கு குழுமியிருப்பது இந்த கூற்றுக்கு முற்றிலும் மாறுபட்டதாக இருக்கிறது. இது ஏதோ ஒரு குறிப்பிட்ட சமூகப் பிரிவினரின் காங்கிரஸ் அன்று. இந்துக்கள் மற்றும் முகம்மதியர்களின், கிறிஸ்தவர்களின், பார்சிகளின், சீக்கியர்களின், காங்கிரசாகும்; தமது சமூகங்களை சீர்திருத்த விரும்புவர்கள் மற்றும் விரும்பாதவர்களின் காங்கிரசாகும். இங்கு நாம் ஒரு பொதுவான அணியில் திரண்டிருக்கிறோம் - இங்கு நாமனைவரும் நமது சமூக, மத வேறுபாடுகளைக் களைய ஒப்புக்கொண்டிருக்கிறோம்; ஒரே குடிமன்னரின் பிரஜைகளாக இருந்துகொண்டு ஒரே அரசாங்கத்தின் கீழ் ஒரே அரசியல் அமைப்புகளின் கீழ் வாழ்ந்து கொண்

டுள்ள நாம் பொதுவான உரிமைகளையும் குறைகளையும் கொண்டுள்ளோம் என்ற பொதுவான உண்மையை அங்கீகரிக்கிறோம். நமது உரிமைகளைப் பாதுகாத்து விரிவுபடுத்தவும் நமது குறைகளைப் போக்கவுமான கண்ணோட்டத்துடன் இந்தக் காங்கிரசை நாம் உருவாக்கியுள்ளோம். தங்களது புதல்விகள் எந்த வயதில் மணம் செய்துகொள்ள வேண்டுமென்பது குறித்து உடன்பாடு காணமுடியாத மருத்துவ நிபுணர் குழுவினரின் நடவடிக்கை அவர்களது அறிவியலின் கோட்பாடுகளுக்கு இசைவானதாக இருந்தபோதிலும் கூட அவர்கள் ஏன் வேறுபட்டிருக்கின்றனர், அல்லது தங்களது விதவைப் பெண்களுக்கு மறுமணம் செய்விக்கவேண்டுமா, கூடாதா என்பதைப் பற்றி அவர்களுக்கிடையே ஏன் ஒற்றுமை இல்லை என்பது குறித்து எல்லாம் நாம் என்ன கூற முடியும்? .... நமது இயக்கம் ஓர் அரசியல் இயக்கம். இது ஒரு சமூக இயக்கமல்ல; எனது வழக்கறிஞர் நண்பர்களை ஏன் மருத்துவ நிபுணர்களாக இருக்கவில்லை என்று புகார் கூற முடியாதோ அதேபோல நாம் ஏன் ஒரு சமூக அமைப்பாக இருக்கவில்லை என்பதை ஒரு புகாருக்குரிய விஷயமாகக் கூறமுடியாது. அரசியல் விஷயங்கள் சம்பந்தமாகவும் கூட சிறுபான்மையினரின் கருத்துக்களுக்கு நாம் அளித்துவந்த மதிப்பு அத்தகையதாகத்தான் இருந்து வருகிறது. 1887 இல் ஒரு சமயம் நமது தலைவராக இருந்தவரும், பம்பாய் உயர்நீதிமன்ற நீதிபதியாக நியமிக்கப்பட்டபோது தேசியப் பாராட்டுதலைப் பெற்றவருமான திரு.பத்ருதீன் தியாப்ஜியின் முன்முயற்சியின் பேரில் என்று கருதுகிறேன், ஒரு வர்க்கத்தினரிடையே- அவர்கள் காங்கிரசில் சிறுபான்மையினராக இருந்த போதிலும் கூட நடைமுறையில் ஒருமித்த கருத்து நிலவும்போது ஒரு குறிப்பிட்ட பிரச்சினையை விவாதிக்கக்கூடாது அதை உடனடியாகக் கைவிடவேண்டும் என்ற ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.''

''நம்முடையதைப் போன்ற ஓர் அமைப்பிற்கு விசேட அபாயம் நேரிடும்போது அதிலிருந்து அது பாதுகாக்கப்பட வேண்டும்... எதிர்ப்பையும் சச்சரவையும் தோற்றுவிக்கும் விதைகள் உள்ளிருந்தே உருவாகும் அபாயத்தை எதிர்த்துப் போராட வேண்டும்.

## II

இந்த அறிக்கைகளைப் பற்றிய இரு பிரச்சினைகளுக்கு விளக்கங்கள் தேவைப்படுகின்றன. தலைவர்கள் குறிப்பிட்ட சமூக சீர்திருத்தக்கட்சி எது என்பதைத் தெரிந்துகொள்வது முதலாவ தாகும். சமூக சீர்திருத்தப் பிரச்சினைக்கும் காங்கிரசுக்கும் உள்ள உறவு குறித்து ஒரு காங்கிரஸ் தலைவர் பிரஸ்தாபிப்பது அவசிய மெனக் கருதிய கடைசி சந்தர்ப்பம் 1895 இல் காங்கிரசில் திரு. சுரேந்திரநாத் பானர்ஜி உரையாற்றியதுதான். 1895க்குப் பின்னர் ஏன் எந்தத் தலைவரும் அந்த விஷயத்திற்கு முக்கியத்துவம் தருவது அவ சியமெனக் கருதவில்லை என்பது இரண்டாவதாகும்.

1885ல் பம்பாயில் இந்திய தேசியக் காங்கிரஸ் தோற்றுவிக்கப் பட்டபோது, இத் தேசிய இயக்கம் பிரத்தியேகமாக அரசியல் இயக்க மாக மட்டும் இல்லாமல் அரசியல் பிரச்சினைகளைக் கருத்தில் கொள்வதுடன் இந்திய சமூகப் பொருளாதாரத்தைப் பாதிக்கக்கூடிய பிரச்சினைகளையும் கூட விவாதிக்க வேண்டும், சமூக அவலங்கள், சமூகத்தீமைகளனைத்தையும் போக்குவதன் மூலம் இந்து சமுதாயத் திற்குப் புத்துணர்வு ஊட்டுவதற்காக மிகச்சிறந்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்று இந்த இயக்கத்தின் தலைவர்கள் உணர்ந்தனர் என்பதைக் குறிப்பிடுவது முதலாவது பிரச்சினையைப் புரிந்துகொள்வதற்கு அவசியமாகும். இதே கண்ணோட்டத்துடன், பம்பாயில் நடைபெற்ற முதலாவது காங்கிரஸ் கூடிய சந்தர்ப்பத்தில் திவான்பகதூர். ஆர். ரகுநாத் ராவும் திரு.நீதிபதி (அப்போது ராவ் பகதூர்) எம்.ஜி.ரானடேயும் சமூக சீர்திருத்தம் குறித்து உரையாற் றினர். 1886ல் கல்கத்தாவில் மேற்கொண்டு எதுவும் செய்யப்பட வில்லை. காங்கிரஸ் சமூகப் பிரச்சினைகளில் அக்கறை கொள்ள வேண்டுமா அல்லது சமூகப் பிரச் சினைகளை விவாதிப்பதற்கு தனி யாக ஓர் அமைப்பை ஏற்படுத்த வேண்டுமா என்பது சம்பந்தமாக காங்கிரஸ் இயக்கத்தின் தலைவர்களிடையேயும் நன்கு கல்வி கற்ற இந்திய சிந்தனையாளர்களிடையேயும் இதர தலைவர்களிடை யேயும் விவாதம் தொடர்ந்து நடைபெற்று வந்தது. இந்திய சமூகப் பொருளாதாரம் சம்பந்தமான விஷயங்களைப் பரிசீலனை செய் வதற்காக இந்திய தேசிய சமூக மாநாடு என்ற பெயரில் தனியாக ஓர் அமைப்பைத் தொடங்க வேண்டுமென்று தீவிர ஆலோசனை களுக்குப் பின்னர் தீர்மானிக்கப்பட்டது. இத்தீர்மானத்தில் பங்கு வகித்தவர்களில் திவான் பகதூர் ஆர்.ரகுநாத் ராவ், திரு.மகாதேவ் கோவிந்த் ரானடே, திரு.நரேந்திரநாத் சென், திரு. ஜானகிநாத் கோசல்

ஆகியோர் அடங்குவர். அந்த மாநாட்டின் பிறப்பிடமாக இருந்த பெருமை சென்னையைத் தான் சாரும். ஏனெனில் 1887 டிசம்பரில் சென்னையில்தான் முதலாவது இந்திய தேசிய சமூக மாநாடு நடைபெற்றது. தமது காலத்தில் பிரதான ராஜியவாதியாக இருந்த மறைந்த ராஜா சர்.டி.மாதவராவ், கே.சி.எஸ்.ஐ அதற்குத் தலைமை வகித்தார். ஆனால் இந்த முதலாவது மாநாட்டில் அவ்வளவாகப் பணிகள் எதுவும் நடைபெறவில்லை. அப்போது கூடியிருந்த உறுப்பினர்கள் இதர முக்கியத் தீர்மானங்களிடையே நமது சமுதாயத்தின் அந்தஸ்தையும் நமது சமூகப் பயன்பாடுகளையும் மேம்படுத்துவற்குத் தேவையான நடவடிக்கைகளைப் பரிசீலனை செய்து மேற்கொள்ளவும், இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் வருடாந்திர தேசிய மாநாடுகளை நடத்துவதற்குமான தேவையை அங்கீகரிக்கவும், மாநாடுகளின் மாகாண உபகமிட்டிகளை ஏற்படுத்தி ஒழுங்கமைக்கவுமான நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் முடிவு செய்தனர். அந்த மாநாடு பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளக்கூடிய சமூக விஷயங்களில் தொலைதூரக் கடல் பயணங்கள் செய்வதற்குள்ள இடையூறுகள், திருமணங்களுக்கு செய்யப்படும் அழிவுகரமான செலவினங்கள், திருமணங்களுக்கான வயது வரம்பை நிர்ணயித்தல், இளம் விதவைகளுக்கான மறுமணம், இளம் பெண்களை முதியவர்களுக்கு மறுமணம் செய்துகொடுப்பதனால் ஏற்படும் தீமைகள், ஒரே ஜாதியின் உபபிரிவுகளுக்கிடையே கலப்பு மணங்கள் மற்றும் திருமணங்கள் குறித்து விவாதிக்கப்பட்டு தீர்மானிக்கப்பட வேண்டும் என்று ஒப்புக்கொள்ளப்பட்டது.

வெவ்வேறு சமூகப் பிரச்சினைகளை சமாளிப்பதற்கு வெவ்வேறு உபகமிட்டிகள் இருக்கவேண்டும் என்று கருதப்பட்டது. சில அடிப்படைக் கோட்பாடுகளையும் இக்கோட்பாடுகளை மீறுவதற்கான தண்டனைகளையும், இத்தகைய தண்டனைகளுக்குக் கட்டுப்பட ஒப்புக்கொள்ளும் சமூக சீர்திருத்தக் கட்சியின் உறுப்பினர்கள் சம்பந்தமாக அவற்றை நடைமுறைப்படுத்தி செயல்படுத்தும் பொறுப்பு உபகமிட்டிகளிடம் ஒப்படைக்கப்படும். 1. உப கமிட்டிகளே அவற்றை செயல்படுத்தும் அல்லது 2. சாத்தியமாகும் போதெல்லாம் அவர்களுடைய ஆன்மீகத் தலைவர்கள் மூலமாக, அல்லது 3. சிவில் நீதிமன்றங்களின் மூலமாக, அல்லது இவையெல்லாம் பயனளிக்காவிட்டால் தமது சொந்த சூளுரை ஏற்றுக் கொண்ட உறுப்பினர்கள் விஷயத்தில் விதிகளை அமல்படுத்துவதற்கு ஏதுவாக அரசாங்கத்திற்கு விண்ணப்பித்தல் ஆகிய வழிமுறைகள் மூலம் செயல்படுத்தப்படும்.

இந்து சமுதாயத்தைப் பீடித்துள்ள பல சமூக அவலங்களை விவாதிப்பதற்காகத் தனக்குச் சொந்தமாக ஒரு தனி அமைப்பை சமூக சீர்திருத்தக் கட்சி உருவாக்கியிருந்த அதேசமயம் சமூக சீர்திருத்தப் பிரச்சினைகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்ட காங்கிரசின் போக்கு குறித்து முழுமையாக அவர்கள் அதிருப்தி யடைந்திருந்தனர். அரசியல் சீர்திருத்தத்திற்கு முன்னோடியாக சமூக சீர்திருத்தம் இருக்க வேண்டுமா, கூடாதா என்பதை ஒரு பிரச் சினையாக்குவதில் அவர்களில் சிலர் துடிப்புடன் இருந்ததுடன் ஒரு முடிவு எடுக்கப்படவேண்டுமென்றும் விரும்பினர். இதில் அவர் களுக்கு பல நண்பர்கள் ஆதரவளித்தனர். அவர்களிடையே இந்திய அரசாங்கத்தையும் காணமுடிந்தது. ''இந்திய அரசாங்கம் ஆற்ற வேண்டிய கடமைகள் என்ன என்பதை பிரிட்டிஷாருக்குக் கற்றுத் தருவதற்கான'' முயற்சிகளைச் செய்வதற்குப் பதிலாக சமூக சீர்திருத் தத்தின்பால் தங்களது கவனத்தை இந்தியர்கள் திருப்ப வேண்டும் என்று வைசிராயின் நிர்வாகக்குழுவின் ஓர் உறுப்பினரான சர். ஆக்லேண்ட் கால்வின் மிகத் தெளிவாகவும் உறுதிபடவும் கூறினார்.

மேலே குறிப்பிட்ட காங்கிரஸ் தலைவர்களின் உரைகளில் சமூக சீர்திருத்தம் குறித்த அவர்களது மேற்கோள்களை இப்போது எளிதில் புரிந்து கொள்ள முடியும். சமூக அவலங்களை அகற்றுவதி லிருந்து தன்னை விடுவித்துக்கொண்ட காங்கிரசுக்கு எதிராக சமூக சீர்திருத்தக்கட்சி செய்த விமர்சனத்திற்கு இவை ஒரு பதிலேயாகும்.

1895க்குப் பின்னர் தமது தலைமை உரையில் எந்த ஒரு காங் கிரஸ் தலைவரும் சமூக சீர்திருத்தப் பிரச்சினைகளை ஏன் குறிப்பிட வில்லை என்ற இரண்டாவது கேள்விக்கு, 1895க்கு முன்னர், சமூக சீர் திருத்தமா, அரசியல் சீர்திருத்தமா என்பது குறித்து காங்கிரசாரிடையே இரு விதக் கருத்துக்கள் நிலவின என்பதுதான் பதிலாகும். ஒரு கருத்து சம்பந்தமான கண்ணோட்டத்தை திரு.தாதாபாய் நௌரோஜி, திரு. பத்ருதீன் தியாப்ஜி, திரு.சுரேந்திரநாத் பானர்ஜி ஆகியோர் ஆதரித் தனர். மற்றொரு கருத்து சம்பந்தமான கண்ணோட்டத்தை திரு. டபிள்யூ.சி.பானர்ஜி வெளியிட்டார். முதலாவது கருத்து சமூக சீர் திருத்தத்திற்கான தேவையை அங்கீகரித்தது. ஆனால், காங்கிரஸ் கூட்டத்தொடர் அதற்கான இடமல்ல என்று கருதியது. இரண்டாவது கருத்து சமூக சீர்திருத்தத்திற்கான தேவையை மறுத்தது; சமூக சீர் திருத்தம் இன்றி அரசியல் சீர்திருத்தம் ஏற்படமுடியாது என்ற கருத் துக்குச் சவால்விட்டது. காங்கிரசில் இருந்த இந்த இரு கருத்தோட்டங் களும் அடிப்படையில் ஒன்றுக்கு ஒன்று எதிரானதாக இருந்தபோதிலும்

கூட அவை 1895 வரை ஒன்றின்பால் ஒன்று பகைமை கொள்ள வில்லை. முன்னதாகக் கூறப்பட்ட கருத்தோட்டமே மேலோங்கிய நிலையில் இருந்தது. அதன் விளைவாக இந்திய தேசியக் காங்கிரசும் சமூக மாநாடும் இரு இணையான அமைப்புகளாகச் செயல்பட்டன. ஒவ்வொன்றும் தனது சொந்த குறிப்பிட்ட நோக்கங்கங்களுக்காகவும் குறிக்கோள்களுக்காகவும் பாடுபட்டன. இந்த இரு அமைப்புகளுக் கும் இடையில் நல்லெண்ணம், ஒத்துழைப்பு ஆகிய உணர்வுகள் மேலோங்கியிருந்தன, தேசியக் காங்கிரஸ் மற்றும் சமூக மாநாட்டின் கூட்டத் தொடர்கள் ஒன்றன்பின்ஒன்றாகத் தொடர்ந்து ஒரே பந்தலி லேயே நடைபெற்றன. காங்கிரஸ் கூட்டத்தொடரில் கலந்து கொண்ட வர்களில் பெரும்பாலானவர்கள் சமூக மாநாட்டில் கலந்து கொண் டனர். ஆயினும் சமூக சீர்திருத்தத்திற்கு எதிரான பிரிவைச் சேர்ந்த காங்கிரஸ்காரர்களின் கண்களுக்கு சமூக மாநாடு ஓர் உறுத்தலாக இருந்தது. சமூக மாநாட்டிற்கு காங்கிரசில் உள்ள முனைப்பான பிரி வினர் ஆதரவு அளித்து வந்ததையும் அதற்கு இடமளிக்கும் உணர்வை யும், குறிப்பாக காங்கிரஸ் பந்தலை அந்தக் கூட்டத் தொடரை நடத்து வதற்குப் பயன்படுத்த அனுமதித்த விஷயத்தையும் கண்டு இந்தப் பிரிவினர் கலக்கமடைந்தனர். 1895 இல் புனாவில் காங்கிரஸ் கூடிய போது சமூக சீர்திருத்தத்தை எதிர்க்கும் இந்த பிரிவினர் கலகம் செய்த துடன் காங்கிரஸ் பந்தலை சமூகமாநாடு பயன்படுத்த காங் கிரஸ் அனுமதிக்குமானால் அதைத் தீக்கிரையாக்கப் போவதாகவும் அச்சுறுத்தினர். சமூக மாநாட்டிற்கான இந்த எதிர்ப்புக்கு இந்தியாவில் ஏராளமாக இருந்த சமூகப் பழமை வாதிகள் மற்றும் அரசியல் தீவிரவாதிகளில் ஒருவரான மறைந்த திரு. திலகர் தலைமை வகித்தார். இவர்தான் 'சுயராஜ்யம் எனது பிறப்புரிமை'' என்ற முழக் கத்தின் தந்தையாவார். இந்த முழக்கம்தான் காங்கிரஸ் பதாகை களில் இன்றைக்கு மின்னுவதை நாம் காண்கிறோம். காங்கிரசில் இருந்த சமூக சீர்திருத்த ஆதரவுக்கட்சி தனது எதிரிகளை[1] எதிர்த்துப் போராடத் தயாராக இல்லாததே இக்கிளர்ச்சி வெற்றியடைந்ததற்கு

1. சமூக மாநாடு காங்கிரஸ் பந்தலைப் பயன்படுத்துவது சம்பந்தமாகத் திரு. திலகரின் கட்சி எழுப்பிய பிரச்சினை குறித்து திரு. ரானடேக்கு திரு. சுரேந்திரநாத் பானர்ஜி எழுதிய கடிதத் திலிருந்து காங்கிரசில் இருந்த சமூக சீர்திருத்த ஆதரவுக் கட்சி அந்த சவாலை ஏற்றுக் கொள்ள விரும்ப வில்லை என்பது தெளிவாகிறது. அக்கடிதத்தில் அவர் கூறியதாவது, ''நமது விவாதங்களி லிருந்து சமூகப் பிரச்சினைகளைத் தவிர்ப்பதற்கான முழு முதற்காரணம் என்ன வெனில், நாம் இத்தகைய பிரச்சினைகளை விவாதித்தோமானால் அது ஆழ்ந்த கருத்து வேறுபாடுகளுக்கு இட்டுச் செல்லக் கூடும். அது பிளவில் முடியக்கூடும், ஆகவே ஒரு பிளவைத் தடுப்பது முதலாவது முக்கியத்துவமுள்ள விஷயமாகும். எதிர்த்தரப்பின் வேண்டு கோள் மிகவும் நியாயமற்றதுதான்; ஆனால் சில சமயங்களில் பெரும் தீமைகளைத் தவிர்ப் பதற்காக நாம் நியாயமற்ற கோரிக்கைகளுக்கு இணங்க வேண்டியுள்ளது.''

பிரதான காரணமாகும். இந்தக் கலகம் ஒரு தாக்கத்தை ஏற்படுத்திற்று. சமூகசீர்திருத்தம் சம்பந்தமான எந்தப் பிரச்சினையையும் அது எவ்வளவு அவசரமானதாக இருந்தாலும் காங்கிரஸ் அவற்றை விவாதத்திற்கு அனுமதியாது என்ற தீர்வை அது ஏற்படுத்திற்று.[1] தங்களது தலைமையுரைகளில் 1895க்குப் பின்னர் எந்த ஒரு காங்கிரஸ் தலைவரும் சமூக சீர்திருத்தப் பிரச்சினையை ஏன் குறிப்பிடவில்லை என்பதற்கு இதுவே விளக்கமாகும். 1895 இல் தனது நடவடிக்கையின் மூலம் முழுக்க முழுக்க சமூகத் தீமைகளைக் களைவதிலோ அல்லது தணிப்பதிலோ அக்கறையில்லாத, ஆர்வமில்லாத ஓர் அரசியல் அமைப்பாக காங்கிரஸ் மாறியது.

## III

இந்தப் பின்னணியில் இருந்து பார்க்கும்போது 1917இல் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் பற்றி காங்கிரஸ் இயற்றிய தீர்மானம் ஒரு விநோதமான சம்பவம் என்பது தெளிவாகிறது. 32 ஆண்டுகளாக இயங்கிவந்த போதிலும் கூட காங்கிரஸ் முன் எப்போதும் இத்தகைய விஷயத்தைச் செய்தது கிடையாது. தனது அறிவிக்கப்பட்ட கொள்கைக்கும் இது மாறானதாக இருந்தது.

1917 இல் ஒரு தீர்மானத்தை இயற்றவேண்டியது அவசியம் என்று ஏன் காங்கிரஸ் கருதிற்று? தீண்டப்படாதவர்களைப் பற்றி அக்கறைகொள்ள அதைத் தூண்டியது எது? அதனால் அது பெற விரும்பிய லாபம் என்ன? அது யாரை ஏமாற்ற விரும்பியது? அதனுடைய பார்வையின் கோணத்தில் ஏற்பட்ட மாற்றத்தின் காரணமாகவா அல்லது ஏதேனும் உள் நோக்கம் காரணமாகவா? இக் கேள்விக்கான பதிலைக் காண இரு வெவ்வேறு தலைவர்களின் கீழ் பம்பாயில் நடைபெற்ற இரு தனித்தனியான கூட்டங்களில் 1917 இல் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இயற்றிய பின்வரும் தீர்மானங்களின் பால் கவனத்தைத் திருப்ப வேண்டும். இக்கூட்டங்களில் முதலாவது 1917 நவம்பர் 11 அன்று திரு. நாரயண் சந்தவார்க்கரின் தலைமையில்

---

1. மாநாட்டுக்கு எதிராக காங்கிரசில் சமூக சீர்திருத்த எதிர்ப்புக் கட்சி நடத்திய கலகத்தை சில முன்னாள் சமூக சீர்திருத்தவாதிகள் வரவேற்றனர். ''காங்கிரஸ் பந்தல் சமூக மாநாட்டினால் பயன்படுத்தப்படுவதை அனுமதிக்கவில்லை என்பது எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது. ஏனெனில் காங்கிரஸ் சமூக மாநாட்டுடன் இணைந்து செயல்படுவதாக ஆங்கிலேயர்களுக்குக் காட்டப்பட்டு வந்த ஏமாற்று வேலையின் முகமூடி கிழித்தெறியப்பட்டது. சமூக மாநாட்டுடன் இணைந்து செயலாற்ற காங்கிரஸ் உண்மையில் விரும்பவில்லை என்பதை இப்போது ஆங்கிலேயர்கள் தெளிவாகப் புரிந்துகொள்வார்கள்'' என்று திவான் பகதூர் ஆர். ரகுநாத் ராவ் திரு. ரானடேக்கு எழுதினார்.

நடைபெற்றது. அக் கூட்டத்தில் பின்வரும் தீர்மானங்கள்[1] இயற்றப் பட்டன.:

> ''முதலாவது தீர்மானம்: பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு விசுவாசமாக இருத்தல் மற்றும் நேசநாடுகளுக்கு வெற்றி கிட்ட பிரார்த்தித்தல்.''

> ''இரண்டாவது தீர்மானம் கூட்டத்தில் இறுதிப் பெரும் பான்மை யினரால் நிறைவேற்றப்பட்டது. எதிர்ப்பாளர் கள் கிட்டத்தட்ட ஒருடஜன் பேரே இருந்தனர். இந்திய தேசியக் காங்கிரசும் அகில இந்திய முஸ்லீம் லீகும் பரிந் துரை செய்த இந்திய நிர்வாகத்தைச் சீர்திருத்தும் திட்டத் திற்கு அங்கீகாரத்தை தெரிவித்தது.''

> ''மூன்றாவது தீர்மானம் ஒருமனதாக நிறைவேற்றப் பட்டது. இந்தியாவிலுள்ள தாழ்த்தப்பட்ட வகுப்புகளைச் சேர்ந்த மக்கள் தீண்டப்படாதவர்களாகக் கருதப்படுவ தாலும், அவ்வாறே நடத்தப்படுவதாலும், அவர்கள் நடத்தப் படும் விதத்தினால் அவர்களுடைய நிலைமை தரம் தாழ்ந் திருப்பதாலும், கல்வி விஷயத்தில் அவர்கள் மற்றவர் களைவிடப் பின்தங்கியிருப்பதாலும், தங்களது மேம் பாட்டிற்கு நேர்மையான வாய்ப்புகளைப் பெறமுடியாத நிலையில் இருப்பதாலும் தாழ்த்தப்பட்ட மக்களின் இப் பொதுக்கூட்டம், அரசாங்கம் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளக்கூடிய சட்டமன்றங்களின் சீர்திருத்தம் மற்றும் புனரமைப்பு ஆகியவற்றுக்கான திட்டத்தில், மேற் கூறப்பட்ட வர்க்கங்களின் நலன்களுக்கு உரிய மதிப் பளிக்க வேண்டும் என்று கருதுகிறது. தங்களது எண் ணிக்கைக்கு ஈடான வீதாசாரத்தில் மேற்கூறப்பட்ட சட்ட மன்றங்களுக்குத் தங்களது பிரதிநிதிகளைத் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமையை அந்த வர்க்கங் களுக்கு வழங்குவதன் மூலம் அவர்களுடைய நலன் களைப் பாதுகாப்பதில் பிரிட்டிஷ் அரசாங்கம் கனிவுடன் நடந்துகொள்ளுமாறு இக்கூட்டம் வேண்டிக்கொள்கிறது.''

---

1. இந்தியாவிலுள்ள வைஸ்ராய்க்கும், இந்தியா மந்திரிக்கும் சமர்ப்பிக்கப்பட்ட மகஜர்கள் (1918). நாடாளுமன்ற ஆவணம் சி.டி. 9178 பக்கம் 74-75.

''இக் கூட்டத்தில் ஒருமனதாக நிறைவேற்றப்பட்ட நான்காவது தீர்மானம் வருமாறு: 'தாழ்த்தப்பட்ட மக்களின் கீழான நிலைக்கு அவர்களது கல்வியறிவின்மையும் அறியாமையுமே காரணம் என்பதாலும், எந்த ஒரு சமுதாயத்தின் சமூக மேம்பாடும் அதன் உறுப்பினர் களிடையே ஒட்டுமொத்தமாகக் கல்வி பரவுவதைப் பொறுத்தே உள்ளது என்ற உண்மையினாலும் கட்டாய, இலவசக் கல்வி முறையை முடிந்த அளவுக்கு வேகமாக செயல்படுத்த வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறது.''

ஒருமனதாக இயற்றப்பட்ட ஐந்தாவது தீர்மானம் வருமாறு: ''தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின்மீது மதமும் சம்பிரதாயமும் திணித்த எல்லாக் குறைபாடுகளையும் அகற்றுவதன் அவசியத்தை, நீதியை, நேர்மையை இந்திய மக்கள் அனைவருக்கும் பிரகடனம் செய்யும் ஒரு தெளி வான, சுதந்திரமான தீர்மானத்தை இந்திய தேசியக் காங் கிரஸ் அதன் வரவிருக்கும் கூட்டத்தொடரில் நிறைவேற்று மாறு கேட்டுக்கொள்ளும் அதிகாரத்தை இப்பொதுக்கூட் டத்தின் தலைவருக்கு வழங்குகிறது. மிகவும் துயர மளிக்கும் அடக்கி ஒடுக்கும் தன்மை கொண்ட இக்குறை பாடுகளினால், அரசுப் பள்ளிகள், மருத்துவ மனைகள், நீதிமன்றங்கள், அரசாங்க அலுவலகங்கள் மற்றும் பொதுக்கிணறுகளைப் பயன்படுத்துதல் போன்றவற்றில் நுழைவதைத் தடைசெய்வதன்மூலம் அந்த வர்க்கங்கள் கடும் இன்னல்களுக்கும் சங்கடங்களுக்கும் உள்ளாக்கப் படுகின்றனர். சமூக மூலகாரணங்களைக் கொண்டிருக்கும் இக்குறைபாடுகள் சட்டத்திலும் நடைமுறையிலும் அர சியல் குறைபாடுகளுக்கு இட்டுச் செல்வதனால் இவை இந்திய தேசியக் காங்கிரசின் அரசியல் பணியிலும் மற்றும் பிரசாரத்தினுள்ளும் நியாயமாகவே வருகின்றன.''

'' தீண்டப்படாதவர்கள் மற்றும் தாழ்த்தப்பட்டவர் களைத் தவிர இதர ஜாதிகளைச் சேர்ந்த இந்துக்களனை

வரையும், குறிப்பாக அரசியல் உரிமைகளுக்கு உரிமை கொண்டாடும் உயர்ஜாதிக்காரர்களை தமது சொந்த நாட்டில் மிகமோசமான முறையில் அந்த வர்க்கத்தினரை நடத்திவந்துள்ள அவர்களை தாழ்த்தப்பட்ட வர்க்கங்களிலிருந்து இழிநிலை என்ற கறையை அகற்றுவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு ஆறாவது தீர்மானம் வேண்டிக் கேட்டுக் கொள்கிறது.''

முதலாவது கூட்டம் நடந்து முடிந்த ஒரு வாரத்திற்குப் பின்னர் 1917 நவம்பரில் இரண்டாவது கூட்டமும் நடைபெற்றது. பிராமணர் அல்லாத கட்சியின் தலைவரான பாபுஜி நாம்தேவ் பகாடே என்பவர் அதற்குத் தலைமை வகித்தார். இக்கூட்டத்தில் பின்வரும் தீர்மானங்கள்[1] ஒருமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்டன:

''(1) பிரிட்டிஷ் சிம்மாசனத்துக்கு விசுவாசமாக இருத்தல்.

''(2) 1917 நவம்பர் 11 அன்று நடைபெற்ற கூட்டத்தில் அறுதிப் பெரும்பான்மையுடன் நிறைவேற்றப்பட்டதாக அறிவிக்கப் பட்டிருந்தாலும் மீறி காங்கிரஸ்-லீக் திட்டத்திற்கு இக்கூட்டம் தனது ஆதரவை வழங்க முடியாது.''

''(3) எல்லா வர்க்கத்தினரும் குறிப்பாக தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் நாட்டின் நிர்வாகத்தில் பயனுறுதியுடன் பங்கு கொள்ளும் நிலைமை ஏற்படும் வரை, இந்தியாவின் நிர்வாகம் பெருமளவில் பிரிட்டிஷாரின் கட்டுப்பாட்டில்தான் இருக்க வேண்டும் என்று இக்கூட்டம் கருதுகிறது.''

''(4) இந்திய மக்களுக்கு அரசியல் சலுகைகளை வழங்க பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவு செய்திருக்கும் பட்சத்தில், தங்களது அரசியல் மற்றும் சிவில் உரிமைகளை உறுதிப்படுத்துவதற்காகப் பல்வேறு சட்டமியற்றும் அமைப்புகளில் தீண்டப்படாதவர்க்கென்று சொந்தப் பிரதிநிதிகளை அரசாங்கம் அனுமதிக்க வேண்டுமென்று இக்கூட்டம் வேண்டிக் கொள்கிறது.''

---

1. வைசிராயிடமும் இந்தியா மந்திரியிடமும் சமர்ப்பிக்கப்பட்ட மகஜர்கள், பக்கம் 75

> ''(5) பாகிஷ்கிரித் பாரத் சமாஜின் (இந்திய தாழ்த்தப் பட்டவர்களின் சங்கம்) நோக்கங்களை அங்கீகரிக்கும் இக்கூட்டம் அதன் சார்பாக திரு. மாண்டேகுவைச் சந்திக்க அனுப்பப்பட விருக்கும் பிரதிநிதிக் குழுவையும் ஆதரிக் கிறது.''

> ''(6) தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் சிறப்புத் தேவை களைக் கவனித்துவரும் அரசாங்கம் ஆரம்பக் கல்வியை இலவசமானதாகவும் கட்டாயமானதாகவும் ஆக்க வேண்டு மென்று இக்கூட்டம் வேண்டிக் கேட்டுக் கொள்கிறது. தாழ்த்தப்பட்ட வர்க்கங்களைச் சேர்ந்த மாணவர்களுக்கு உதவித் தொகைகள் வழங்குவதன் மூலம் விசேட வசதி களை வழங்குமாறு அரசாங்கத்தை இக்கூட்டம் கேட்டுக் கொள்கிறது.''

> ''(7) மேற்கண்ட தீர்மானங்களை வைஸ்ராய்க்கும் பம்பாய் அரசாங்கத்திற்கும் அனுப்பி வைப்பதற்கு இக் கூட்டம் தலைவருக்கு அதிகாரமளிக்கிறது.''

சர் நாராயண் சந்தவார்கரின் தலைமையின் கீழ் பம்பாயில் நடைபெற்ற தங்களது கூட்டத்தில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் இயற்றிய தீர்மானத்திற்கும், தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரை மேம் பாடடையச் செய்வது குறித்து 1917 ஆம் ஆண்டின் காங்கிரஸ் தீர்மானத்திற்கும் இடையில் ஒரு நெருங்கிய தொடர்பு இருப்பது தெளிவாகிறது. 1917 ஆம் ஆண்டில் நடைபெற்ற அரசியல் சம்ப வங்களைப் பார்க்கும்போது இத்தொடர்பை எளிதாகப் புரிந்து கொள்ள முடியும். 1917இல் தான் அல்லது சரியாகச் சொல்லப் போனால் 1917 ஆகஸ்டு 20 அன்றுதான் இந்தியாவுக்கான வெளி யுறவுச் செயலாளராக இருந்த மறைந்த திரு. மாண்டேகு இந்தியா வுக்கான மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கத்தினுடைய புதிய கொள்கையை காமன்ஸ் சபையில் அறிவித்தார். ''பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஓர் ஒருங்கிணைந்த பகுதி என்ற முறையில் இந்தியா வில் பொறுப்புள்ள அரசாங்கத்தை முற்போக்கான முறையில் நனவாக்கும் கண்ணோட்டத்துடன் சுயாட்சி அமைப்புக்களைப் படிப்படியாக உருவாக்குவதே'' அக்கொள்கையாகும். மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கத் தரப்பிலிருந்து இத்தகைய ஏதோ ஒரு கொள்கைப் பிரகடனத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த

முன்னணி இந்திய அரசியல்வாதிகள், இத்தகைய ஒரு கொள்கையை எதிர்பார்த்து இந்தியாவின் அரசியல் சட்ட கட்டமைப்பில் மாற்றங் களை ஏற்படுத்துவதற்கான திட்டங்களைத் தயாரித்துக் கொண் டிருந்தனர். அவ்வாறு உருவாக்கப்பட்ட பல திட்டங்களில் இரு திட்டங்களின் மீது பொதுமக்களின் கவனம் குவிந்திருந்தது. அதில் ஒன்று ''பத்தொன்பதின் திட்டம்'' என்று அழைக்கப்பட்டது. இரண் டாவது ''காங்கிரஸ்-லீக் திட்டம்'' என்று அழைக்கப்பட்டது. முத லாவது திட்டம் அப்போதைய தேர்ந்தெடுக்கப்பட்ட 19 கூடுதல் உறுப்பினர்களினால் முன்வைக்கப்பட்டது. இரண்டாவது திட்டம் காங்கிரஸ் மற்றும் லீகினால் ஆதரிக்கப்பட்ட அரசியல் சீர்திருத் தங்களுக்கான ஒப்புக்கொள்ளப்பட்ட திட்டமாகும். இது லக்னோ ஒப்பந்தம் என்றும் அறியப்பட்டது. 1916இல், திரு. மாண்டேகுவின் அறிவிப்பு வருவதற்கு ஓராண்டிற்கு முன்னர் இந்த இரு திட் டங் களும் நடப்பிற்கு வந்தன.

இந்த இரு திட்டங்களில், காங்கிரஸ் தனது சொந்தத் திட் டத்தை மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கம் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதில் அக்கறை கொண்டிருந்தது. அந்த நோக்கத்தைக் கருத்தில் கொண்டிருந்த காங்கிரஸ், காங்கிரஸ்-லீக் திட்டத்திற்கு ஒரு தேசிய கோரிக்கை என்ற அந்தஸ்தையும் தன்மை யையும் வழங்குவதில் குறியாக இருந்தது. இந்தியாவில் உள்ள எல்லா சமூகங்களின் ஆதரவு இத்திட்டத்திற்கு இருந்தால் மட்டுமே இது நடைபெற முடியும். இத்திட்டத்தை முஸ்லிம் லீக் ஏற்றுக் கொண் டிருந்த காரணத்தினால் முஸ்லீம் சமுதாயத்தினரின் ஆதரவைப் பெறுவது என்ற பிரச்சினை எழவில்லை. அடுத்தபடியாக எண் ணிக்கையில் அதிகமானவர்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினராவர். முஸ்லீம்களைப் போன்று நன்கு கட்டுக்கோப்பானவர்களாக இல்லாத போதிலும் அரசியல் ரீதியாக அவர்கள் மிகவும் தெளிவுபெற்றவர் களாக இருந்தனர் என்பதை அவர்களுடைய தீர்மானங்கள் காட்டு கின்றன. அவர்கள் அரசியல் ரீதியாகத் தெளிவுபெற்றவர்களாக இருந்தது மட்டுமன்றி அவர்கள் எப்போதும் காங்கிரஸ் எதிர்ப் பாளர்களாக இருந்தனர். உண்மையில் 1895இல் காங்கிரஸ் பந்தல், சமூக அநீதிகளை எடுத்துரைப்பதற்காகப் பயன்படுத்த சமூக மாநாட் டிற்கு அனுமதியளிக்கப்படுமானால் பந்தலைத் தீக்கிரையாக்கி விடுவதாக திரு. திலகரின் ஆதரவாளர்கள் அச்சுறுத்தியபோது, தீண்டப்படாதவர்கள் காங்கிரசுக்கு எதிராகப் பேரணி ஒன்றை நடத்தி அதன் உருவ பொம்மையையும் கொளுத்தினர். காங்கிரசின் பாலான

இந்த இயல்பான வெறுப்பு அதுமுதல் தொடர்ந்தது. 1917இல் பம்பாயில் நடைபெற்ற தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் இந்த இரு கூட்டங்களில் இயற்றப்பட்ட தீர்மானங்கள், காங்கிரசின்பால் தாழ்த்தப் பட்ட வர்க்கங்களின் மனதில் இந்த வெறுப்பு இருந்து வந்தது என்பதற்குப் போதுமான அத்தாட்சியாக விளங்குகின்றது. காங் கிரஸ்-லீக் சீர்திருத்தத் திட்டத்திற்குத் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் ஆதரவை பெறுவதில் காங்கிரஸ் ஆவல்கொண்டிருந்த அதேசமயம், அந்த ஆதரவைப் பெறுவதற்கான வாய்ப்பே இல்லை என்பதையும் அறிந்திருந்தது. இப்போது காங்கிரஸ் செய்துவருவது போன்று லஞ்ச லாவண்யத்தின் மூலம் மக்களைக் கெடுக்கும் கலையை காங்கிரஸ் அப்போது பயன்படுத்தவில்லையாதலால் - அப்போது காங்கிரஸ் அக்கலையை ஏற்கவில்லை - அது காங்கிரசின் ஒரு முன்னாள் தலைவரான மறைந்த சர். நாராயண் சந்தவார்க்கரின் சேவைகளைப் பயன் படுத்திக் கொண்டது. தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் மிஷன் சொசைட்டியின் தலைவர் என்ற முறையில் அவர் தாழ்த்தப்பட்ட வர்க்கத் தினரிடையே கணிசமான செல்வாக்குப் பெற்றிருந்தார். அவருடைய செல் வாக்கின் பலனாகவும் அவர் மீதிருந்த மதிப்பின் காரணமாக வும் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரில் ஒரு பிரிவினர் காங்கிரஸ் லீக் திட்டத்திற்கு ஆதரவளிக்க ஒப்புக்கொண்டனர்.

தீர்மான வாசகம் கூறுவதுபோன்று அது காங்கிரஸ் - லீக் திட்டத்திற்கு நிபந்தனையற்ற ஆதரவை வழங்கவில்லை. தாழ்த்தப் பட்டவர்களின் சமூக அவலங்களை அகற்றுவதற்கான ஒரு தீர் மானத்தை காங்கிரஸ் நிறைவேற்ற வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில்தான் ஆதரவு வழங்க அது ஒப்புக் கொண்டது. சர். நாராயண் சந்தவார்க்கர் மூலமாகப் பேசித் தீர்க்கப்பட்ட தாழ்த்தப்பட்ட வர்க் கங்களுடனான ஒப்பந்தத்தின் தனது பங்கை காங்கிரஸ் தனது தீர் மானத்தின் மூலம் நிறைவு செய்தது.

தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் குறித்த 1917 ஆம் ஆண்டின் காங் கிரஸ் தீர்மானத்தின் மூலகாரணத்திற்கும், சர் நாராயண் சந்தவார்க் கரின் தலைமையின் கீழ் இயற்றப்பட்ட தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் தீர்மானங்களுக்கும் இடையில் உள்ள தொடர்பை இது விளக்கு கிறது. காங்கிரஸ் தீர்மானத்திற்குப் பின் ஓர் உள்நோக்கம் இருந்தது என்பதை இது நிரூபிக்கிறது. அந்த நோக்கம் ஆன்மிக நோக்கமல்ல. அது ஓர் அரசியல் நோக்கமாக இருந்தது.

காங்கிரஸ் தீர்மானத்திற்கு என்ன நேர்ந்தது? ''தங்களுக்கு அரசியல் உரிமைகள் வேண்டுமென்று உரிமை கோரும் உயர்

ஜாதியினரை, தங்களது சொந்த நாட்டால் இந்த வர்க்கங்களை மிக மோசமாக நடத்தி வந்துள்ள உயர்ஜாதியினரை, தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் மீது படிந்துள்ள அவமானக் கறையை அகற்றுவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு'' தங்களது தீர்மானத்தில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் கேட்டுக் கொண்டனர். தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் இக் கோரிக்கையைப் பூர்த்தி செய்ய காங்கிரஸ் என்ன செய்தது? தனக்குக் கிடைக்கப்பெற்ற ஆதரவுக்குப் பகரமாகக் காங்கிரஸ் தனது தீர்மானத்தில் தெரிவிக்கப்பட்டிருந்த உணர்வுகளுக்குச் செயல்வடிவமளிக்க தீண்டாமைக்கு எதிராக ஓர் இயக்கத்தை முன்னின்று நடத்தும் கடமையைக் கொண்டிருந்தது. ஆனால் காங்கிரஸ் எதுவும் செய்யவில்லை. அத்தீர்மானம் இயற்றப் பட்டதே ஓர் ஈவிரக்கமற்ற செயலாக இருந்தது. காங்கிரஸ்-லீக் திட்டத்திற்குத் தங்களது ஆதரவைத் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் நல்கியதற்கான ஒரு நிபந்தனையை சம்பிரதாயமாக நிறைவேற்றியதாகவே அது இருந்தது. தீண்டாமை என்ற மனிதனுக்கு மனிதன் இழைக்கும் மனிதத் தன்மையற்ற கொடுமைகளை எதிர்த்து மனசாட்சி உறுத்தல் அல்லது நியாயமான கோப உணர்வு எதுவும் இன்றி காங்கிரஸ்காரர்கள் இருப்பதுபோல் தோன்றுகிறது. அவர்கள் இயற்றிய தீர்மானத்தை அன்றே அவர்கள் மறந்துவிட்டனர். அந்தத் தீர்மானத்தைப் பொறுத்த வரை அது வெற்றுக் காகிதமாகத்தான் இருந்தது. அதனால் எந்தப் பயனும் ஏற்படவில்லை.

தீண்டப்படாதவர்களுக்குக் காங்கிரஸ் என்ன செய்தது என்பது பற்றிய வரலாற்றில் முதலாவது அத்தியாயம் இவ்வாறு நிறைவுற்றது.

# இயல் 2

# ஓர் அருவருப்பான காட்சி

## காங்கிரஸ் தனது திட்டத்தைக் கைவிடுகிறது

### I

திரு. காந்தி 1919இல் இந்திய அரசியலில் நுழைந்தார். அதற்குப் பின்னர் வெகுவிரைவிலேயே அவர் காங்கிரசைக் கைப்பற்றினார். அவர் காங்கிரசைக் கைப்பற்றியதுடன் நில்லாது அதை முற்றிலுமாக சுத்தப்படுத்தி அடையாளம் தெரியாத அளவுக்கு மாற்றியும் விட்டார். மூன்று முக்கிய மாற்றங்களை அவர் அறிமுகப்படுத்தினார். பழைய காங்கிரசுக்கு அதிகாரங்கள் ஏதும் இருக்கவில்லை. அது தீர்மானங்களை நிறைவேற்றுவதுடன் மட்டும் நிறுத்திக் கொண்டது, அவற்றின் மீது பிரிட்டிஷ் அரசாங்கம் ஏதேனும் நடவடிக்கை எடுக்கும் என்ற நம்பிக்கையுடன் இருந்தது. பிரிட்டிஷ் அரசாங்கம் நடவடிக்கை எதுவும் எடுக்கவில்லை எனில், காங்கிரஸ் அடுத்த ஆண்டும் அதற்கு அடுத்த ஆண்டும் அது திரும்பவும் அதே தீர்மானத்தை மீண்டும் இயற்றியது. பழைய காங்கிரஸ் முற்றிலும் அறிவு ஜீவிகளின் ஒரு கும்பலாகத் தான் இருந்தது. அது வெகுஜன செயல்பாட்டில் நம்பிக்கை கொண்டிராததால் அரசியல் இயக்கத்தில் அவர்களுடைய செயலூக்கமான பங்கெடுப்பைப் பெறுவதற்கு பொதுமக்களிடம் செல்லவில்லை. பொதுமக்களை ஈடுபடுத்திக் கிளர்ச்சிகளை நடத்துவதற்குப் பழைய காங்கிரசிடம் அமைப்போ நிதி வசதியோ இருக்கவில்லை. தனது பலத்தின் அளவைப் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குப் புரிய வைப்பதற்காக வியத்தகு அரசியல் பேரணிகளை நடத்துவதிலோ அல்லது பொதுமக்களின் ஆர்வத்தைக் கவருவதிலோ அது நம்பிக்கை கொண்டிருக்கவில்லை. இவையனைத்தையும் புதிய காங்கிரஸ் மாற்றியமைத்தது. தனது கட்சியில் அனைவரும் உறுப்பினராகலாம் என்று கூறி அது காங்கிரசை ஒரு வெகுஜன அமைப்பாக ஆக்கியது. ஆண்டொன்றுக்கு நான்கு அணாக்கள் செலுத்தக்கூடிய எவரும் காங்கிரசின் உறுப்பினராக ஆக முடியும். தனது தீர்மானங்களுக்குப் பின்னால் உறுதியான ஆதரவையும் அது திரட்டிக் கொண்டது.

ஒத்துழையாமை மற்றும் சிவில் கீழ்ப்படியாமைக் கொள்கையை ஏற்றுக் கொண்டதன் மூலம் அது மக்களின் ஆதரவைப் பெற்றது. ஒத்துழையாமை மற்றும் சிவில் கீழ்ப்படியாமைப் பேரணிகளை நடத்துவதையும் கைதாகி சிறை நிரப்புவதையும் அது கொள்கை யாகக் கொண்டது. நாடு தழுவிய அமைப்பைத் தொடங்கி காங்கிர சுக்கு ஆதரவாகப் பிரசாரத்தையும் துவக்கியது. சமூக மேம்பாட்டிற் கான ஓர் ஆக்கபூர்வமான திட்டம் என்றழைக்கப்பட்ட ஒரு திட் டத்தை அது முன்வைத்தது. இந்த நடவடிக்கைகளுக்குத் தேவையான நிதி திரட்டுவதற்காக அது கோடி ரூபாய் நிதியத்தைத் தொடங்கியது. அது திலகர் சுயராஜ்ய நிதி என்றழைக்கப்பட்டது. இவ்வாறு 1922 வாக்கில் காங்கிரஸ் திரு. காந்தியினால் முற்றிலுமாக மாற்றி யமைக்கப்பட்டது. புதிய காங்கிரஸ், பெயரைத் தவிர பழைய காங் கிரசிலிருந்து முற்றிலுமாக மாறுபட்டிருந்தது.

சமூக மேம்பாட்டிற்கான ஆக்கபூர்வமான திட்டம் காங் கிரசின் ஒரு முக்கிய சிறப்பம்சமாக இருந்தது. 1922 பிப்ரவரியில் பர்டோலியில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காங்கிரசின் காரியக் கமிட்டியினால் அது வரையப்பட்டது. அது பர்டோலி திட்டம் என்றும் அறியப்பட்டது. திட்ட விவரங்களைக் கோடிட்டுக் காட்டிய தீர்மான வாசகம் பின்வருமாறு அமைந்திருந்தது:

''எல்லாக் காங்கிரஸ் அமைப்புகளும் பின்வரும் நடவடிக் கைகளில் ஈடுபட வேண்டுமென்று காரியக்கமிட்டி அறிவுறுத்து கிறது:

(1) காங்கிரசில் குறைந்தபட்சம் ஒருகோடி உறுப்பினர் களையேனும் சேர்த்தல்.

★ ★

(2) ராட்டையைப் பிரபலப்படுத்துதல் மற்றும் கைத்தறி மற்றும் கையால் பின்னப்பட்ட கதர் துணிகளின் உற்பத்தியை ஒழுங்கமைத்தல்.

★ ★

(3) தேசியப் பள்ளிகளை அமைத்தல்

★ ★

(4) தாழ்த்தப்பட்ட வகுப்பினரை ஒரு சிறந்த வாழ்க்கை வாழ ஒருங்கமைத்தல், அவர்களுடைய சமூக, மன மற்றும் தார்மிக

சூழ்நிலைகளை மேம்படுத்தல், தங்களுடைய குழந்தைகளை தேசியப் பள்ளிகளுக்கு அனுப்ப அவர்களைத் தூண்டுதல், இதர பிரஜைகள் அனுபவிக்கும் சாதாரண வசதிகளை அவர்களுக்கு வழங்குதல்.

★ ★

(5) குடிப்பழக்கத்திற்கு அடிமையானவர்களிடையே குடி ஒழிப்பு இயக்கத்தை ஆரம்பித்து, மறியல் செய்வதற்குப் பதிலாக அவரது வீட்டிலேயே குடிப்பழக்கமுடையவருக்கு அதைக் கைவிட வேண்டுகோள் விடுப்பதில் அதிக நம்பிக்கை வைத்து வீடுவீடாகச் சென்று பிரசாரம் செய்தல்.

★ ★

(6) எல்லா சச்சரவுகளையும் தனிப்பட்ட முறையில் தீர்த்து வைப்பதற்காக கிராம மற்றும் நகரப் பஞ்சாயத்துக்களை அமைத்தல், பொதுக் கருத்தின் சக்தியின் மீதும் பஞ்சாயத்தின் முடிவுகள் அவற்றிற்குக் கீழ்ப்படிவதை உறுதிசெய்வதற்குரிய விதத்தில் அதன் உண்மை நிலையின் மீதும் நம்பிக்கை வைத்தல்.

★ ★

(7) எல்லா வர்க்கங்கள் மற்றும் இனங்களிடையே ஒற்றுமையையும் பரஸ்பர நல்லெண்ணத்தையும் வளர்த்து வலியுறுத்துவதற்காக - அதை ஏற்படுத்துவதே ஒத்துழையாமை இயக்கத்தின் நோக்கமாகும் - கருத்து வேறுபாடுகளையும் மீறி நோய்வாய்ப்பட்ட அல்லது விபத்து நேர்ந்த காலத்தில் அனைவருக்கும் உதவி வழங்கக் கூடிய ஒரு சமூக சேவைத்துறையை அமைத்தல்.

★ ★

(8) திலகர் நினைவு சுயராஜ்ய நிதியின் வசூல்களைத் தொடருதல், 1921 ஆண்டுக்கான தமது வருடாந்திர வருவாயில் குறைந்தபட்சம் நூறில் ஒருபங்குத் தொகையைச் செலுத்துமாறு ஒவ்வொரு காங்கிரஸ்காரரையும் அல்லது காங்கிரஸ் அனுதாபியையும் கேட்டுக்கொள்ளுதல். திலகர் நினைவு சுயராஜ்ய நிதியிலிருந்து ஒவ்வொரு மாகாணமும் ஒவ்வொரு மாதமும் தனது வருவாயிலிருந்து 25 சதவிகிதத்தை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு அனுப்ப வேண்டும்.''

★ ★

1922 பிப்ரவரி 20 அன்று டில்லியில் நடைபெற்ற அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் கூட்டத்தில் உறுதிசெய்யப் படுவதற்காக இத்தீர்மானம் முன்வைக்கப்பட்டது. கூட்டமும் அவ்வாறே செய்தது. ஆக்கப்பூர்வமான இத்திட்டத்தில் உள்ள பல்வேறு இனங்களுக்கு என்ன நேர்ந்தது என்பதை விவரிப்பதில் எனக்கு அக்கறையில்லை. தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் சம்பந்தப்பட்ட ஒரே ஒரு இனத்தில் தான் நான் அக்கறை கொண் டிருக்கிறேன், அந்தப் பகுதியைப் பற்றித் தான் நான் ஆய்வு செய்ய உத்தேசித்திருக்கிறேன்.

தீண்டப்படாதவர்கள் சம்பந்தப்பட்ட பர்டோலி தீர்மானத் தின் இந்தப் பகுதியையும் மீறி நடைபெற்ற விதியின் கதையை கட்டம் கட்டமாக நான் விவரிக்கிறேன். இக்கதையின் தொடக்கமாக, அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியினால் பர்டோலி தீர்மானம் உறுதி செய்யப்பட்ட பின்னர், இந்த விஷயம் மேல் நடவடிக்கைக்காக காரியக் கமிட்டியிடம் ஒப்படைக்கப்பட்டது. 1922 ஜூனில் லக்னோ வில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி இந்த விஷயத் தைப் பரி சீலனைக்கு எடுத்துக் கொண்டது. தீண்டப்படாதவர்களின் மேம்பாடு சம்பந்தப்பட்ட பர்டோலி பிரச்சினையின் அப்பகுதி குறித்து காரியக் கமிட்டி பின்வரும் தீர்மானங்களை நிறைவேற்றியது:

> ''இக்கமிட்டி இதன் வாயிலாக, சுவாமி சிரதானந்தஜி, திருமதி. சரோஜினி நாயுடு, திருவாளர்கள் ஐ.கே. யாஜ்னிக், ஜி.பி. தேஷ்பாண்டே ஆகியோரடங்கிய ஒரு கமிட்டியை, நாடெங்கிலும் உள்ள தீண்டப்படாதவர்கள் என்றழைக்கப் படுகிறவர்களின் சூழ்நிலைகளை மேம்படுத்துவதற்காக ஏற்றுக்கொள்ளப்படவிருக்கும் நடைமுறை சாத்தியமான நடவடிக்கைகளை உள்ளடக்கிய ஒரு திட்டத்தை உருவாக் கவும் இக்கமிட்டியின் அடுத்த கூட்டத்தில் பரிசீலனை செய் வதற்காக முன்வைக்கவும் நியமிக்கிறது. இப்போதைக்கு அத் திட்டத்திற்காகத் திரட்டப்படவிருக்கும் தொகை ரூ. இரண்டு லட்சமாக இருக்கும்.''

1922 ஜூனில் லக்னோவில் நடைபெற்ற தனது கூட்டத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் முன்பு காரியக் கமிட்டி யினால் இத்தீர்மானம் முன்வைக்கப்பட்டது. காரியக் கமிட்டியின் தீர்மானத்தில் கூறப்பட்டிருந்தபடி ரூபாய் இரண்டு லட்சத்திற்குப் பதிலாக ''தற்போதைக்கு இத்திட்டத்திற்காகத் திரட்டப்படவிருக்கும்

தொகை ரூபாய் ஐந்து லட்சமாக இருக்க வேண்டும்'' என்று கூறும் ஒரு திருத்தத்தைச் செய்த பின்னர் காரியக் கமிட்டி அத்தீர்மானத்தை ஏற்றுக்கொண்டது.

இக்கமிட்டியை நியமிக்கும் தீர்மானத்தை காரியக்கமிட்டி ஏற்றுக்கொள்ளும் முன்னர் அதன் உறுப்பினர்களில் ஒருவரான சுவாமி சிரத்தானந்தர், அக்கமிட்டியின் உறுப்பினர் பதவியிலிருந்து தமது ராஜினாமாவை சமர்ப்பித்தார் என்று தெரிகிறது. ஒரு கமிட்டியை நியமிக்கும் தீர்மானத்தைக் காரியக் கமிட்டி நிறைவேற்றிய அதே கூட்டத்தில் அதே விஷயம் குறித்த பின்வரும் மற்றொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது:

> ''தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் பணிக்கான ஒரு திட்டத்தை வரைவதற்கான ஒரு முன்பணத்திற்காக 1922 ஜுன் 8 அன்று சுவாமி சிரத்தானந்தஜியிடமிருந்து வந்த கடிதம் வாசிக்கப்பட்டது. அக்காரணத்திற்காக நியமிக்கப்பட்ட உபகமிட்டியின் கன்வீனராக திரு. காங்காதர் ராவ் பி. தேஷ்பாண்டேயை நியமிக்கத் தீர்மானக்கப்பட்டது, கூடிய விரைவில் ஒரு கூட்டத்தை நடத்துமாறு அவர் கேட்டுக்கொள்ளப்படவும் சுவாமி சிரத்தானந்தாவின் கடிதத்தை உபகமிட்டிக்கு அனுப்பவும் தீர்மானிக்கப்பட்டது.''

இந்த ஆர்வமூட்டும் தீர்மானத்தின் வரலாற்றில் ஒரு கமிட்டியை உருவாக்குவது இரண்டாவது கட்டத்தைக் குறிக்கிறது.

இக்கமிட்டியை நியமிக்கும் தீர்மானம் குறித்த அடுத்த குறிப்பு, 1922 ஜுலையில் பம்பாயில் நடைபெற்ற காங்கிரஸ் காரியக் கமிட்டியின் நடவடிக்கைக் குறிப்புகளில் காணப்படுகிறது. அக்கூட்டத்தில் கமிட்டி பின்வரும் தீர்மானத்தை இயற்றியது:

> ''தமது ராஜினாமாவை மறுபரிசீலனை செய்யுமாறும் திரும்பப் பெற்றுக் கொள்ளுமாறும் சுவாமி சிரத்தானந்தாவை வேண்டிக் கொள்ளுமாறும், தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் உபகமிட்டியின் அவசரச் செலவுகளுக்காக திரு. ஜி.பி. தேஷ்பாண்டேக்கு ரூ. 500/- செலுத்து

மாறும் பொதுச் செயலாளர் கேட்டுக் கொள்ளப் படுகிறார்.''

1922 ஆம் ஆண்டைப் பொறுத்தவரை இத்துடன் அந்த விஷயம் முடிந்துவிட்டது. அதற்குமேல் எதுவும் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. 1923 ஆம் ஆண்டும் வந்தது. தீண்டப்படாதவர்களை மேம்பாடடையச் செய்வதற்கான திட்டம் செயல்படுத்தப் படுவதற்கு எதுவும் செய்யப்படவில்லை என்பதைக் கண்ட காரியக் கமிட்டி 1923 ஜனவரியில் கயாவில் கூடிய கூட்டத்தில் இந்த விஷயத்தைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டு பின்வரும் தீர்மானத்தை நிறைவேற்றியது:

''சுவாமி சிரத்தானந்தாவின் ராஜினாமா சம்பந்தமாக, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் உபகமிட்டியின் மீதமுள்ள உறுப்பினர்களே கமிட்டியாக செயல்படுவார்கள் என்றும் திரு. யாஜ்னிக் கன்வீனராக இருப்பார் என்றும் தீர்மானிக்கப்படுகிறது.''

அதற்குப் பின்னர் 1923 மேயில் பம்பாயில் கூடிய அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி பின்வரும் தீர்மானத்தை இயற்றியது:

''தீண்டப்படாதவர்களின் நிலைமை சம்பந்தமான பிரச்சினை தேவையான நடவடிக்கைகளுக்காக காரியக் கமிட்டிக்கு அனுப்பப்பட வேண்டும் என்று தீர்மானிக்கப் பட்டது.''

தீண்டப்படாதவர்களின் பிரச்சினையை ஒரு விசேடக் கமிட்டியின் வசம் ஒப்படைக்கும் தீர்மானத்தின் வரலாற்றில் இரண்டாவது கட்டம் இங்கு நிறைவுபெறுகிறது. 1923 மேயில் பம்பாயில் நடைபெற்ற தனது கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் அதன் வரலாற்றின் மூன்றாவது கட்டத்தைக் குறிக்கிறது. அத்தீர்மான வாசகம் பின்வருமாறு:

''காங்கிரஸின் கொள்கைக்கு ஆதரவாக தீண்டப்படாதவர்கள் என்றழைக்கப்படுபவர்களை நடத்தும் முறையில் சிறிது அபிவிருத்தி காணப்பட்டுள்ள அதேசமயம், இந்த வகையில் இன்னும் செய்யப்பட வேண்டிய பணிகள் ஏராளம் உள்ளன என்றும், தீண்டப்படாதவர்களின் பிரச்

சினை குறிப்பாக இந்து சமுதாயம் சம்பந்தப்பட்டதாக இருப்பதால், இந்து சமுதாயத்தினிடையே இருந்து இத் தீமையை அகற்றும் கடும் முயற்சிகளை மேற்கொள் ளவும், இந்த விஷயத்தை தன் பொறுப்பில் ஏற்றுக் கொள்ளவும் அகில இந்திய இந்து மகாசபையை அது கேட்டுக்கொள்கிறது என்றும் தீர்மானிக்கப்பட்டது.''

அத்தீர்மானம் எவ்வாறு ஆரம்பித்து எவ்வாறு முடிவுற்றது என்ற சோகமான கதை இதுதான். திடீரெனத் தோன்றிய மின்னல் போன்ற இத்தீர்மானத்திற்கு எத்தகைய அவமானகரமான முடிவு இது!

தீண்டப்படாதவர்களின் பிரச்சினையை காங்கிரஸ் எவ் வாறு கைகழுவிவிட்டது என்பதை இப்போது பார்ப்போம். இப் பிரச்சினையை இந்து மகாசபையிடம் ஒப்படைத்ததன் மூலம் அது வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சியிருக்க வேண்டியதில்லை. தீண்டப்படாதவர்களின் மேம்பாடு குறித்த பணியை மேற்கொள் வதற்கு இந்து மகாசபையை விட சற்றும் பொருத்தமற்ற ஓர் அமைப்பு வேறெதுவும் இருக்கமுடியாது. தீண்டப்படாதவர்களின் பிரச் சினையை சிரமேற்கொண்டு தீர்க்க சற்றும் தகுதியற்ற ஓர் அமைப்பு இருக்கிறதென்றால் அது இந்துமகாசபைதான். அது ஒரு தீவிரவாத இந்து அமைப்பாகும். மதரீதியாகவும் கலாசார ரீதியாகவும் இந்து மதத்தின் எல்லா அம்சங்களையும் எல்லா வழிகளிலும் பேணிக் காப்பதே அதன் நோக்கமும் குறிக்கோளுமாகும். அது சமூக சீர்திருத்த சங்கமல்ல. அது ஓர் அப்பழுக்கற்ற அரசியல் அமைப்பு, அதன் பிரதானக் குறிக்கோளும் நோக்கமும் இந்திய அரசியலில் முஸ்லீம் களின் செல்வாக்கை எதிர்த்துப் போராடுவதேயாகும். தனது அர சியல் வலிமையைப் பேணிக் காப்பதற்காக அது தனது சமூக ஒருமைப் பாட்டைப் பராமரிக்க விரும்புகிறது. சமூக ஒருமைப்பாட்டைப் பராமரிக்கும் அதன் வழிமுறை ஜாதி அல்லது தீண்டப்படாமையைப் பற்றிப் பேசாதிருப்பதேயாம். தீண்டப்படாதவர்களின் பணியை மேற்கொள்வதற்காக இத்தகைய ஓர் அமைப்பைக் காங்கிரஸ் எவ் வாறு தேர்வு செய்தது என்பது எனது புலன்களுக்கு எட்டாத ஒன்றாக இருக்கிறது. ஒரு சங்கடமான பிரச்சினையிலிருந்து எப்படியேனும் தப்பித்து அதைக் கைகழுவிவிட காங்கிரஸ் விரும்பியது என்பதையே இது காட்டுகிறது. இப்பணியை சிரமேற்கொள்ள இந்துமகா சபை முன்வரவில்லை என்பது உண்மைதான். ஏனெனில், அதற்கான ஆர்வம் அதனிடம் இல்லை. மேலும் நிதி ஒதுக்கீட்டிற்கான எந்த

ஒரு உறுதிமொழியும் தராமல் இப்பணியை மேற்கொள்ளுமாறு ஒரு தீர்மானத்தை மட்டும் காங்கிரஸ் நிறைவேற்றியது. ஆகவே அத் திட்டம் ஓர் இழிவான, அவமானகரமான முடிவைச் சந்தித்தது.

மிகவும் படாடோபமாகத் தொடங்கிய தீண்டப்படாதவர் களை மேம்படுத்தும் திட்டத்தை காங்கிரஸ் ஏன் கைவிட்டது என்று இந்த அத்தியாயத்தை முடிக்குமுன்னர் அறுதியிட்டுக் கூறுவது பய னுள்ளதாக இருக்கும். அத்திட்டம் இரண்டு முதல் ஐந்து லட்ச ரூபாய்க்கு மிகைப்படாமல் சிக்கனமானதாக இருக்க வேண்டும் என்று காங்கிரஸ் விழைந்தது. ஆனால் அக்கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது காங்கிரசால் ஏற்றுக்கொள்ளவோ அல்லது நிரா கரிக்கவோ முடியாத அளவுக்கு ஒரு பெரிய திட்டத்தைக் காங்கிரஸ் முன்கொண்டு வந்து நிறுத்த சுவாமியை அனுமதிப்பதை விட கமிட்டியில் சுவாமி சிரத்தானந்தாவை சேர்த்ததில் ஒரு தவறு செய்து விட்டதாக அவர்கள் உணர்ந்தனர். முதலிலேயே அவரைக் கன்வீன ராக[1] ஆக்க மறுத்து பின்னர் கமிட்டியைக் கலைத்து அப்பணியை இந்துமகாசபையிடம் ஒப்படைப்பது சிறந்தது என்று காங்கிரஸ் எண்ணியது. இத்தகைய ஒரு முடிவுக்கு சூழ் நிலைகளும் எதிராக இருக்கவில்லை. சுவாமி, தீண்டப்படாதவர்களின் மகத்தான, மிகவும் உண்மையான ஆதரவாளராக இருந்தார். கமிட்டியில் அவர் அங்கம் வகித்துப் பணியாற்றி யிருப்பாரேயானால் அவர் மிகப் பெரியதொரு திட்டத்தை உருவாக்கியிருப்பார் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. அவர் கமிட்டியில் இடம்பெறுவதை காங்கிரஸ் விரும்பவில்லை என்பதையும், தீண்டப்படாதவர்களின் லட்சியத்திற்காக காங்கிரஸ் நிதிகளிலிருந்து அவர் பெருந்தொகையைக் கோரியிருப்பார் என்று பயந்ததையும், காங்கிரசின் அப்போதைய பொதுச் செயலாளரான பண்டிட் மோதிலால் நேருவுக்கும் அவருக்கும் இடையில் நடை பெற்ற கடிதப் போக்குவரத்திலிருந்து தெளிவாகிறது, அக்கடிதப் போக்குவரத்து பின்னிணைப்பில் அச்சிடப்பட்டுள்ளது. இந்த முடிவு சரியானது என்றால், அத் தீர்மானத்தை இயற்றிய காங்கிரசின் சொற் களில் உண்மை எந்த அளவுக்கு வெறுமையாக இருந்தது என்பதையே அது காட்டுகிறது.

1. திரு. தேஷ்பாண்டேயைக் கன்வீனராக நியமிப்பதில் காங்கிரஸ் குறியாக இருந்தது என்பதே சுவாமி சிரத்தானந்தாவின் கரங்களில் விஷயங்களை விட்டு வைக்க அவர்கள் விரும்பவில்லை என்ற உண்மையைக் காட்டுகிறது. எந்தப் பணியும் நடைபெறுவதை அவர்கள் விரும்பவில்லை என்பதை திரு. தேஷ்பாண்டே யின் தேர்வு சுட்டிக்காட்டுகிறது. அதற்குக் காரணம் திரு. தேஷ்பாண்டே ஓர் ஆசாரமான பிராமணர், தீண்டப்படாதவர்களின் நலனில் அவர் எந்தவித அக்கறையும் கொண்டிருக்கவில்லை என்பதேயாகும்.

அத்திட்டம் புரட்சிகரமானது என்ற காரணத்தினால்தான் காங்கிரஸ் அதைக் கைவிட்டதா? அத்தீர்மானம் எந்த வகையிலும் புரட்சிகரமான தீர்மானமல்ல. அத்தீர்மானத்திற்கு ஓர் இணைப்பாகக் காரியக்கமிட்டி சேர்த்த குறிப்பிலிருந்தும், அதை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி அங்கீகரித்ததிலிருந்தும் இது தெளிவாகும். அக் குறிப்பு கூறியதாவது:

> ''தீண்டப்படாதவர்களுக்கு எதிரான தவறான எண்ணம் இன்னமும் வலுவாக உள்ள இடங்களில் காங்கிரசின் நிதிகளிலிருந்து தனிப்பட்ட பள்ளிகளும் தனிப்பட்ட கிணறுகளும் பராமரிக்கப்பட வேண்டும். இத்தகைய குழந்தைகளை தேசியப் பள்ளிகளில் சேர்க்கவும், பொதுக் கிணறுகளைப் பயன்படுத்த தீண்டப்படாதவர்களை அனுமதிக்கவும் எல்லா முயற்சிகளும் மேற்கொள்ளப் பட வேண்டும்.''

ஆகவே, தீண்டாமையை ஒழிப்பதில் காங்கிரஸ் முனைப்பாக இருக்கவில்லை என்பது தெளிவாகிறது. தனிப்பட்ட பள்ளிகள் தனிப் பட்ட கிணறுகள் என்ற கொள்கையை அது ஏற்றுக் கொண்டது. தீண்டப்படாதவர்களின் நிலைமையை மேம்படுத்தும் முயற்சியைத் தவிர அத்தீர்மானம் வேறெதையும் செய்யவில்லை. இத்தகைய தொரு உரமற்ற, மென்மையான திட்டத்தையும் கூட காங்கிரஸ் நிறைவேற்ற முடியாமல் இருந்தது. அதை ஈவிரக்கமோ அல்லது அவமானமோ இன்றி கைவிட்டது.

## II

தன்னிடம் நிதி வசதி இல்லாத காரணத்தினால்தான் காங்கிரஸ் இத்திட்டத்தைக் கைவிட்டதா? இல்லை. 1921இல் காங்கிரஸ் திலகர் சுயராஜ்ய நிதியைத் தொடங்கியிருந்தது. எவ்வளவு தொகையைக் காங்கிரஸ் வசூலித்தது? பின்வரும் அட்டவணை அதுகுறித்த சில கருத்துக்களை வழங்குகிறது. அந்த நிதிக்குப் பொதுமக்கள் ஒரு கோடியே முப்பது லட்சம் ரூபாய் வழங்கியிருந்தனர். பர்டோலியில் காரியக்கமிட்டி வரைந்த காங்கிரசின் ஆக்கப்பூர்வமான திட்டத்திற்கு நிதியுதவி செய்யவும் காங்கிரசின் பிரசாரத்தை மேற்கொள்ளவும் அந்த நிதி வசூலிக்கப்பட்டது. இவ்வளவு பெரிய தொகையை காங் கிரஸ் எவ்வாறு செலவிட்டது? 1921, 1922 மற்றும் 1923 ஆம் ஆண்டு களின்போது காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியத் தொகைகளின் பட்டியலிலிருந்து, இந்த நிதி என்னென்ன காரியங்களுக்குப் பயன் படுத்தப்பட்டது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

## அட்டவணை - 1

## திலகர் சுயராஜ்ய நிதி

### வரவு

| | 1921 | 1922 | 1923 | மொத்தம் |
|---|---|---|---|---|
| | ரூ.அ.பை. | ரூ.அ.பை. | ரூ.அ.பை. | ரூ.அ.பை |
| பொது வசூல், பிற்சேர்க்கை எண். I | 64,31,779 15 10 | 3,92,430 2 6½ | 2,64,288 9 1 | 70,88,498 11 5½ |
| குறிப்பிட்ட (ஒதுக்கீடு செய்யப்பட்ட) நன்கொடைகள் அல்லது மானியங்கள் பிற்சேர்க்கை எண். II | 37,32,230 2 10½ | 9,45,552 1 4½ | 7,10,801 10 3 | 53,88,583 14 6 |
| | 1,01,64,010 2 8½ | 13,37,982 3 11 | 9,75,090 3 4 | 1,24,77,082 9 11½ |
| சேர்க்கவும்: இதர வருவாய்கள், இதர நிதிகள், பஞ்சம், வெள்ளம், மாகாண உறுப்பினர் கட்டணம், இணைப்பு போன்றவை 1921-23ஆம் ஆண்டுகளுக்கு | — | — | — | 5,42,332 5 7½ |

★ இந்திய வருடாந்திரப் பதிவேடு - 1923 பக். 112.

## I. 1921 இல் ஒப்புதலளிக்கப்பட்ட மானியங்கள்[1]

I. 1921 ஜனவரி 31, பிப்ரவரி 1, 2, 3 ஆகிய தேதிகளில் கல்கத்தாவில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டியினால் ஒப்புதலளிக்கப்பட்ட மானியங்கள்:

1. ஒவ்வொரு மானியத்திற்கும் பின்னால் உள்ள அடைப்புக் குறிகளுக்குள் உள்ள ரோமன் எண்கள், மானியங்கள் வழங்குவதற்காகக் காரியக் கமிட்டி இயற்றிய தீர்மானங்களைக் குறிக்கிறது.

1. தங்களது தொழிலைக் கைவிடும், ஆதரவு தேவைப்படும் வழக்கறிஞர்களின் உதவிக்காக மகாத்மா காந்தியின் வசம் ஒப்படைக் கப்படும் ரூ. 1,00,000 (IV).

2. உயர்திரு சி. ராஜகோபாலாசாரியாரிடமிருந்து 1921 ஜனவரி 31 ஆம் தேதியிட்ட பின்வரும் தந்தி வாசிக்கப்பட்டது:

> ''கூட்டத்தில் கலந்துகொள்ள இயலாமைக்கு வருந்து கிறேன். தமிழ்நாடு, கேரளா, கர்னாடகாவின் ஒரு பகுதிக் கான முழுநேர பொதுத் தொண்டர்கள் கிட்டத்தட்ட நூறு பேர் தேர்வு செய்யப்பட்டுள்ளனர், அவர்களில் கிட்டத் தட்ட நாற்பது வழக்கறிஞர்கள் தங்களது தொழிலை உதறிவிட்டு வந்துள்ளனர். வசூலிக்கப்படவிருக்கும் திலகர் நிதியிலிருந்து மாதம் ஒன்றுக்கு ரூ. 5600/- பெற அனுமதிக் கவும். மாணவர்களின் இயக்கம் அதிவேகமாக முன் னேறிக் கொண்டிருக்கிறது, ஆயினும் செய்தி ஏடுகள் அதுகுறித்த செய்திகள் எதையும் பிரசுரிப்பதில்லை. குறைந்த பட்சம் இரண்டு மாதங்களுக்கேனும் பெற்றோரின் எதிர்ப்பையும் மீறி இயக்கத்தைத் தொடரவேண்டும். இதற்காக மாதம் ஒன்றுக்கு ரூபாய் மூவாயிரம் அவசியம் தேவைப்படும். கிலாபத் ரசீதுகளைப் போன்று வசதியான தொகைகளுக்காக காங்கிரசின் பெயரில் சுயராஜ்ய நிதிக்கு ரசீது வழங்கும் அதிகாரத்தைக் கமிட்டி தந்தி மூலம் வழங்க வேண்டும். எல்லாக் கடன்களையும் மூன்று மாதங்களில் அடைத்துவிட முடியும் என்று உறுதிபட நம்புகிறேன். பெரிய தொகைகள் கிடைக்கும் என்று நம்பிக்கை இல்லை. சென்னை''.

இப்போதைக்கு சென்னை மாகாணத்தின் தமிழ், கேரளா மற்றும் கர்னாடகப் பகுதிகளுக்கு ஒருமாதத்திற்குத் தேவையான தொகை ரூ. 8600/- வழங்குவதெனவும், வருங்காலத்திற்கான நிதி யைப் பொறுத்தவரை இந்த விஷயத்தை காரியக் கமிட்டியின் அடுத்த கூட்டத்தில் முன்வைப்பதெனவும் தீர் மானிக்கப்பட்டது. (XX)

**II.** 1921 மார்ச் 31, ஏப்ரல் 1 ஆகிய நாட்களில் பெஜவாடாவில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள் வருமாறு:

"3. பிரசாரத்தை மேற்கொள்ளவும் நிதி வசூலிக்கவும் உ.பி. காங்கிரஸ் கமிட்டியின் செயலாளர் பண்டிட் மோகன் லால் நேருவுக்கு மொத்தத் தொகையாக ரூ. 6000/- வழங்குதல் (V).

4. தலைவர், செயலாளர்கள், காசாளர் ஆகியோரின் அலுவலகச் செலவினங்களுக்காக நடப்பு ஆண்டின் மீதமுள்ள காலத்திற்கு ரூ. 17,000த்தை அனுமதிக்கலாம், மேற்கூறப்பட்ட தொகையிலிருந்து மாதமொன்றுக்கு ரூ. 300-ஐ திரு. சி. ராஜகோபாலாச்சாரியாருக்கு அவரது செயலாளரின் செலவுக்காகவும் தலைவரின் ஸ்டெனோ-டைபிஸ்டின் செலவுக்காகவும் ஒதுக்கீடு செய்யப்படு கிறது. (VII)

5. 1,400, பிராட்வே, நியூயார்க்கிலுள்ள அமெரிக்காவின் இந்தியா ஹோம்ரூல் லீகைச் சேர்ந்த திரு. டி.வி.எஸ். ராவுக்குத் தந்தி மூலம் 1,000 டாலர் தொகை அனுப்பப் பட்டது (VIII)".

**III.** மானியங்களுக்கான விண்ணப்பங்கள் அனைத்தையும் பரிசீலனை செய்வதற்காக ஒரு மானியங்கள் உபகமிட்டியை 1921 ஜூலை 31 ஆம் தேதியிட்ட தனது தீர்மானம் எண். 18 வாயிலாக காரியக் கமிட்டி நியமித்தது. அந்த உபகமிட்டியில் திரு. காந்தி, பண்டிட் மோதிலால் நேரு, சேத் ஜம்னாலால் பஜாஜ் ஆகியோர் இடம் பெற்றிருந்தனர். பல கூட்டங்களின்போது மானியங்கள் உபகமிட்டி பின்வரும் மானியங்களுக்கு ஒப்புதல் அளித்தது:

"6. பீகாரில் சுதேசிப் பணிகளுக்கு மானியமாக ரூ. ஒரு லட்சம் வழங்கவும் அதே காரணத்திற்காக ரூ. 4 லட்சத்தைக் கடனாக வழங்கப் பரிந்துரை செய்யவும் ஒப்புதலளிக்கப் பட்டது. (i)

7. சுதேசிப் பணிகளுக்காக மத்திய மாகாணங்களின் (இந்துஸ்தானி) மாகாண காங்கிரஸ் கமிட்டிக்குக் கடனாக ரூ. 35,000 வழங்குதல் (ii)

8. உ.பி.யில் பஞ்ச நிவாரணத்திற்காக ரூ. 25,000 (iii)

9. பஞ்சநிவாரணத்திற்காகவும் ஜக்ராவோன் பள்ளிக்காக வும் பஞ்சாப் மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 25,000 (iv)

10. மலபாரில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணம் வழங்குவதற்கான தந்திவழி விண்ணப்பத்திற்கு ரூ. 50,000 (v)

11. பனாரஸ் நகரில் உள்ள காந்தி ஆசிரமத்திற்கு ரூ. 15,000 (vi)

12. பள்ளிப்பாடு ஆசிரமத்திற்கு ரூ. 10,000 (vii)

13. மசூலிப்பட்டணத்திலுள்ள ஆந்திர ஜாதீய கலா சாலைக்கு ரூ. 15,000 (viii)

14. கர்ஜாத் (மகாராஷ்டிரா) தாலுகா காங்கிரஸ் கமிட்டியின் செயலாளருக்கு ரூ. 10,000 (xx)

15. சிஞ்ச்வாட் (மகாராஷ்டிரா) அனாதை வித்தியார்தி கிரிகாவுக்கு ரூ. 10,000 (x)

**16. (1) திரு. கே.ஜி. பட்டாடே, துணைப் பொதுச் செயலாளர், இந்திய தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் மிஷன் சொசைட்டி, (2) கல்லிடைக்குறிச்சி தேசியப் பள்ளி, வித்தியா சங்கம், (3) ராஜமுந்திரி தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் மிஷன் ஆகியோரது விண்ணப்பங்கள், உபகமிட்டி வெளியிட்ட அறிவுரைகளுக்கேற்ப இல்லை என்று கூறி நிராகரிக்கப்பட்டன. (xiii)**

17. சுதேசிப் பணிகளுக்காகவும் ராட்டை நூற்பு மற்றும் கைத்தறியைப் பிரபலப்படுத்துவதற்காகவும் செலவிடுவதற் காக கேரள மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 10,000 (xx)

18. மதராஸ் மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 60,000.

19. உ.பி. மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 1,50,000 ஒதுக்கப்பட்டது. (xxiii)

20. சிந்து மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 63,000. (xxiv)

21. ஆந்திராவில் ஒப்படைக்கப்பட்ட மாவட்டங்கள் பஞ்ச நிவாரணத்திற்காக ரூ. 25,000 (xxv).

22. மகாராஷ்டிர மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 20,000 (xxvi)

23. சுதேசிப் பணிகளுக்காகவும் ராட்டை நூற்பு மற்றும் கைத்தறியைப் பிரபலப்படுத்துவதற்காகவும் கஞ்சம் மாவட்ட காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 20,000 வழங்கப்படலாம் (xxvii)''.

1921 நவம்பர் 6 ஆம் தேதியிட்ட தீர்மானம் எண். 8 மூலம் காரியக் கமிட்டி உபகமிட்டியைக் கலைத்து மானியங்களுக்கு ஒப்புதல் அளிக்கும் பிரச்சினையைத் தனது பொறுப்பில் எடுத்துக் கொண்டது.

IV. 1921 நவம்பர் 3, 5,6 ஆகிய தேதிகளில் டில்லியில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள் வருமாறு:

''24. கையால் நூல் நூற்பதற்கும் கதர்த் துணி உற்பத்தி செய்வதற்கும் பஞ்சு வாங்குவதற்காக அஸ்ஸாமைச் சேர்ந்த திரு. புகானுக்கு ரூ. 25,000 (ix)

25. ஆந்திராவின் குண்டூர் மாவட்டத்திலுள்ள கிருஷ்ணாபுரத்திற்கு ரூ. 5000 (x)

26. ஆந்திரா ஜாதீய கலாசாலைக்குக் கூடுதல் மானியமாக ரூ. 10,000 (xi)

27. ராஜமுந்திரி தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் மிஷனுக்கு ரூ. 1000 (xii)

28. அங்கலூர் ஜாதீய பரிஸ்ரமாலயத்திற்கு ரூ. 5000 (xiii)

29. ஆந்திராவிலுள்ள கவுதாரத்திற்கு ரூ. 3000 (xiv)

*30. பொதுவான சுதேசிப் பணிகளுக்காக ஆந்திர மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 15,000* (xv)

*31. மசூலிப்பட்டணம் மாவட்ட காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 3000* (xvi)

*32. கைநூற்பு நூல் மற்றும் கதர் உற்பத்திக்காக உத்கல் மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 30,000* (xvii)

*33. தங்களது தொழிலைக் கைவிட விரும்பிய தானா மாவட்ட கள் இறக்குவோருக்கு உதவ ரூ. 3000* (xviii)

*34. நாக்பூர் திலகர் வித்யாலயாவுக்கு ரூ. 5000* (xix)

*35. நாக்பூர் அசகியோகாஸ்ரமத்துக்கு ரூ. 5000* (xx)

*36. கதர் மற்றும் சர்க்கா நூல் உற்பத்தியை அதிகரிப்பதற்காக ஆஜ்மீர் மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 25,000* (xxi)

*37. குஜராத்திற்கு சாத்தியமானால் ரூ. 18,00,000 அல்லது எந்த வகையிலேனும் ரூ. 10,00,000* (xxii)

*38. மலபாரில் பாதிக்கப்பட்டவர்களின் நிவாரணத்திற்காக திரு. சி. ராஜகோபாலாச்சாரியாருக்கு உடனடியாக அனுப்பப்பட வேண்டிய தொகை ரூ. 40,000* (xxiii)''

V. *1921 நவம்பர் 22 மற்றும் 23 ஆகிய தேதிகளில் பம்பாயில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக்கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள் வருமாறு:*

*''39. பஞ்சாபின் ரோஷ்டாக்கில் உள்ள ஜாட் ஆங்கிலோ-சமஸ்கிருத உயர்நிலைப் பள்ளிக்கு ரூ. 10,000* (iii)

*40. பஞ்ச நிவாரணத்திற்காகவும் சுதேசிப் பணிகளுக்காகவும் பீஜப்பூர் மாவட்ட காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 25,000* (iii)

41. மதராசில் பணி நீக்கம் செய்யப்பட்ட ஆலைத் தொழிலாளர்களுக்கு சுதேசிப் பணிகள் வழங்குவதில் உதவ ரூ. 30,000 (iii)".

## II. 1922இல் ஒப்புதலளிக்கப்பட்ட மானியங்கள்

I. 1922 ஜனவரி 17 அன்று பம்பாயில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள் வருமாறு:

"42. உ.பி. மாகாண காங்கிரஸ் கமிட்டியின் ரூ. 50,000த்திற்கான விண்ணப்பம் ஏற்கெனவே ஏற்றுக்கொள்ளப் பட்டது. சுதேசிப் பணிகளுக்காகக் கூடுதல் மானியமாக ரூபாய் ஒரு லட்சத்திற்கான விண்ணப்பத்தை இறுதி முடிவுக்காக மகாத்மா காந்திக்கு அனுப்பப்பட்டது. (ii)

43. ஒப்புதலளிக்கப்பட்ட மானியமான ரூ. 50,000த்தில் மீதமுள்ள ரூ. 25,000த்திற்கான அஸ்ஸாம் மாகாண காங்கிரஸ் கமிட்டியின் விண்ணப்பத்தை இறுதி முடிவுக்காக மகாத்மா காந்திக்கு அனுப்ப முடிவு செய்யப்பட்டது (vi)"

II. 1922 பிப்ரவரி 26 அன்று டில்லியில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள் வருமாறு:

"44. மகாத்மா காந்தி தயாரித்துள்ள வெளிநாட்டுத் திட்டத்திற்கான ஆரம்பச் செலவினங்களுக்காக ரூ. 10,000 (i)

45. நடப்பு ஆண்டிற்கான அலுவலகச் செலவினங்களுக்காக ரூ. 14,000 (iv)".

III. 1922 மார்ச் 17 மற்றும் 18 தேதிகளில் அகமதாபாதில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள்:

"46. கதரைப் பெருமளவில் உற்பத்தி செய்யவும் விற்பனை செய்யவுமான நடவடிக்கைகளை ஒழுங்கமைக்க ரூ. 3,00,000 (i)

47. உ.பி. மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ஏற்கெனவே அனுமதிக்கப்பட்ட ரூ. 50,000த்திலிருந்து ரூ. 10,000 வழங்குதல் (ix).

48. பொதுவான காங்கிரஸ் பணிகளுக்காகக் கேரள மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 5000; மலபாரில் நிவாரணப் பணிகளுக்காக அனுமதிக்கப்பட்ட தொகையான ரூ. 84,000த் திலிருந்து இத்தொகை கழித்துக் கொள்ளப் படும். மேற்கூறப்பட்ட தொகையான ரூ. 84,000த்திலிருந்து ரூ. 20,000த்தை நிவாரணப் பணிகளுக்காக அனுப்ப முடிவு செய்யப்பட்டது (x).

49. ரோஹ்டாக்கிலுள்ள ஆங்கிலோ-வெர்னாகுலர் பள்ளிக்கு ரூ. 10,000 (xi).

50. ஆந்திராவில் ஒப்படைக்கப்பட்ட மாவட்டங்களில் பஞ்சநிவாரணப் பணிகளுக்காக ஒதுக்கப்பட்ட தொகையான ரூ. 25,000த்திலிருந்து ரூ. 15,000த்தை ஆந்திர மாகாண காங்கிரஸ் கமிட்டியைப் பிரதிநிதித்துவப்படுத்தும் திரு. டி. பிரகாசத்திற்கு அனுப்ப முடிவு செய்யப்பட்டது (xii).

**IV.** 1922 ஏப்ரல் 20, 21, 22 ஆகிய தேதிகளில் கல்கத்தாவில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள் வருமாறு:

"51. குஜராத்தில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரிடையே கல்வியை ஒழுங்கமைப்பதற்காக அந்த்யஜா காரியாலயாவிற்கு ரூ. 5000 (v).

52. கதர் பணிகளுக்காக மட்டுமே அர்ப்பணிக்கப்பட்ட காரியங்களுக்காக தக்காண ஹைதராபாத்தைச் சேர்ந்த மவுல்வி பத்ருல் ஹசனுக்குக் கடனாக ரூ. 40,000 (vi).

53. இன்டிபென்டன்ட் ஏட்டை மீண்டும் தொடங்கி அதை காங்கிரசின் கொள்கை வழியில் நடத்த, நேஷனலிஸ்டு ஜர்னல்ஸ் லிமிடெட் நிறுவனத்திற்கு ரூ. 25,000

வழங்கவும் கடன்தொகைக்காக கம்பெனியின் சொத்துக்கள் மீது பற்றுரிமை வழங்கவும் முடிவு செய்யப்பட்டது (xix)".

V. 1922 மே 12, 13, 14, 15 ஆகிய தேதிகளில் பம்பாயில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள் வருமாறு:

''54. ஏற்கெனவே வழங்கப்பட்ட ரூ. 5000த்திற்கும் கூடுதலாக அகமதாபாதிலுள்ள அந்த்யஜா காரியாலயாவிற்கு ரூ. 17,381 (x).

55. அத்திட்டத்தைத் தொடங்குவதற்கு உள்ளூரிலேயே போதுமான நிதிகள் வசூலிக்கப்பட்டு, அவ்வாறு தொடங்கப்பட்ட திட்டம் சிறப்பாகச் செயல்படுகிறது என்று காரியக்கமிட்டி திருப்தியடையாதவரை, ஷகதாரா தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் குடியேற்றத்திற்காக பஞ்சாப் மாகாண காங்கிரஸ் கமிட்டியின் ரூ. 1,25,000த்திற்கான விண்ணப்பத்தைப் பரிசீலிக்க முடியாது என்று தீர்மானிக்கப்பட்டது (xi).

56. அகமத்நகர் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் முதியோர் இல்லத்திற்காக ரூ. 5000 ஒதுக்குவது என்று தீர்மானிக்கப்பட்டது. மேலும் ஸ்தல முயற்சிகளைக் கொண்டு அந்த இல்லம் தொடங்கப்பட்டு திருப்திகரமாகச் செயல்பட்டு வருகிறது என்று காரியக்கமிட்டி திருப்தியடையும்போது அத்தொகை வழங்கப்படும் என்றும் பரிந்துரைக்கப்படுகிறது. (xii)

57. திரு. எஸ். ஸ்ரீனிவாச ஐயங்கார் விண்ணப்பித்திருப்பது போன்று மதராசில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கான பணிகளுக்கென ரூ. 10,000 ஒதுக்கீடு செய்யவும், அத்தொகையை மாகாணக் காங்கிரஸ் கமிட்டி மூலமாக இக்கமிட்டிக்கு விண்ணப்பம் அனுப்பப்படும் போதும், ஸ்தல முயற்சிகளின் வாயிலாக குறைந்தபட்சம் சம அளவிலான தொகை வசூலிக்கப்படும் என்று இக் கமிட்டி திருப்தியடையும்போதும் வழங்க வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. (xiii)

58. ஆந்திராவில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக் கான பணிகளுக்காக திரு. டி. பிரகாசத்திற்கு ரூ. 7000 (xxiv)".

59. சிந்து மாகாணத்தில் கதர் பணிக்காக.

VI. 1922 ஜுன் 6, 7 மற்றும் 10 தேதிகளில் லக்னோ வில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதல் அளித்த மானியங்கள் வருமாறு:

"60. அவசர செலவுகளுக்காக ஸ்ரீமான் ராஜ கோபாலாச்சாரியருக்கு ரூ. 1,000 முன்பணம் வழங் குதல்.

"61. வங்காளத்திலிருந்து அஸ்ஸாமுக்கு சேவை புரியச் செல்லும் ஆறு பணியாளர்களின் செலவுக்காக மாதம் ஒன்றுக்கு ரூ. 180 வீதம் அடுத்த மூன்று மாதங் களுக்கு வழங்க அனுமதிக்கப்படுகிறது.(vi)"

VIII. 1922 ஜுலை 18 மற்றும் 19 தேதிகளில் பம்பாயில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள் வருமாறு:

"62. அஸ்ஸாமுக்கு ரூ. 5000 (i)

63. கதர் பணிக்காக ஆந்திராவுக்கும் உத்கலுக்கும் தலா ரூ. 1,50,000 கடனாக வழங்குதல் (x)."

IX. 1922 நவம்பர் 18, 19, 25 தேதிகளில் கல்கத்தாவில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள் வருமாறு:

"64. குஜராத்திற்கு மானியமாக ரூ. 3,00,000 (xii)

65. சிவில் கீழ்ப்படியாமை விசாரணைக் கமிட்டி யின் செலவுகளுக்காக ரூ. 16,000 (xxi)

## III. 1923 இல் ஒப்புதலளிக்கப்பட்ட மானியங்கள்

1. 1923 ஜனவரி 1, 2 ஆகிய தேதிகளில் கயாவில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள் வருமாறு:

''66. தீண்டப்படாமையைப் போக்குவதற்காகவும் பொறுமையையும் சமுதாயங்களுக்கிடையிலான ஒற்றுமையை வளர்க்கவும் இந்திய தேசிய சமூக மாநாட்டின் பொதுச் செயலாளருக்கு ரூ. 3000 (xxii).

67. கயாவில் நடைபெற்ற காங்கிரசின் தீர்மானங்களைத் தொடர்ந்து பிரசாரத்தை மேற்கொள்ளும் என்ற நிபந் தனையின் பேரில் அலகாபாதின் ஒரு இந்தி நாளேடான நவயுகாவுக்கு உதவித் தொகையாக ரூ. 1200 (xxxi)

68. காங்கிரஸ் விளம்பர பீரோவுக்கு ரூ. 10,000 (xxxii)

II. 1923 பிப்ரவரி 23 மற்றும் 26 தேதிகளில் அலகாபாதில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள் வருமாறு:

69. தமிழ் தேச மாகாணக் கமிட்டியின் தாழ்த்தப்பட்டவர்க்கத்தினருக்கான பணிகளுக்காக ரூ. 10,000 (vi).

70. பண்டிட் ஜவாஹர்லால் நேருவின் விண்ணப்பத்தின் பேரில் உ.பி. மாகாண காங்கிரஸ் கமிட்டிக்குக் கடனாக ரூ. 15,000 வழங்கப்படலாம் (x).

72. பெனாரசிலுள்ள காந்தி ஆசிரமத்துக்காக உ.பி. மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு வழங்கப்பட்டது ரூ. 5000 (xi)".

III. 1923 மே 23, 24, 25, 26, 27 மற்றும் 28 தேதிகளில் பம்பாயில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக் கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள்:

''73. நாட்டின் பல்வேறு மாகாணங்களில் மிகுதியாக உள்ள கதர் துணிகளை விற்பனை செய்வதற்காக குஜராத் மாகாண காங்கிரஸ் கமிட்டிக்குக் கடனாக ரூ. 5 லட்சம் (V)

74. கதர்ப் பணிகளுக்காக வங்காள மாகாண காங்கிரஸ் கமிட்டிக்குக் கடன் வழங்கப்படவிருக்கும் தொகை ரூ. 50,000 (viii).

75. பீகார் ராஷ்டிரீய வித்யாலயாவுக்கு ரூ. 15,000 (xii)

76. சத்தியவதி வித்தியாலயாவுக்கு ரூ. 10,000.

77. ஸ்வவலம்பன் ராஷ்டிரீய பாடசாலைக்கு ரூ. 5000 (xiv)

78. காங்கிரஸ் தொழிலாளர் கமிட்டி தீர்மானிக்கும் பணிகளை மேற்கொள்வதற்காக டாக்டர் சதாயேக்கு ரூ. 5000 (xxxiv)".

**IV.** 1923 ஜூலை 7, 8, 11, 12 ஆகிய தேதிகளில் நாக்பூரில் நடைபெற்ற தனது கூட்டத்தில் காரியக்கமிட்டி ஒப்புதலளித்த மானியங்கள் வருமாறு:

''79. மதராஸ் மாகாணத்தில் இந்துஸ்தானியைக் கற்றுத் தரும் பணிக்காக இந்தி சாகித்ய சம்மேளனச் செயலாளர் திரு. பிரஜராஜுவுக்கு ரூ. 20,000 (ix)

80. நாக்பூரில் சத்தியாக்கிரக இயக்கத்துக்கு உதவி வழங்கும் முக்கிய நோக்குடன் பொதுவான காங்கிரஸ் பணிகளுக்குப் பயன்படுத்தப்படுவதற்காக மத்திய மாகாணங்கள் இந்துஸ்தானி மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ரூ. 2000 (xi)".

செலவினங்களின் இந்த இனவாரியான கணக்கிலிருந்து பொதுநிதிகளை காங்கிரஸ் நல்ல முறையில் நிர்வாகம் செய்ததா அல்லது தவறாக நிர்வகித்ததா என்பது பற்றிய சரியான கருத்தை வாசகர் பெறமுடியாத நிலையில் இருக்கக்கூடும். எந்த ஒரு கோட்பாட்டினடிப்படையிலேனும் இச்செலவினங்கள் முறைப்படுத்தப் பட்டிருந்தவையா? மாகாணங்களின் தேவைகளுக்கேற்ப அது வினியோகிக்கப்பட்டதா? பின்வரும் அட்டவணையைப் பரிசீலிக்கவும்:

## அட்டவணை 2

| மாகாணங்கள் | வழங்கப் பட்ட தொகை | மக்கள் தொகை+ | மொத்த மக்கள் தொகையின் விகிதத்துக்கு மக்கள் தொகையின் அடிப்படையில் வழங்கப் பட்ட தொகையின் விகிதாசாரம் | ஆண்டு தோறும் செலுத்தப் பட்ட மானியங்களின் விகிதாசாரம் |
|---|---|---|---|---|
| | ரூ. | | | |
| பொது-அகில இந்தியா* | 4,94,000 | 227,238,000 | - | 10 |
| பம்பாய் | 26,90,381 | 16,012,623 | 8 | 54.3 |
| மதராஸ் | 5,05,000 | 42,319,000 | 18 | 10.1 |
| பிகார் மற்றும் ஒரிசா | 5,65,000 | 33,820,000 | 15 | 11.3 |
| உ.பி. | 3,11,200 | 45,376,000 | 20 | 6.26 |
| சிந்து | 1,13,000 | 3,279,377 | - | 2.2 |
| அஸ்ஸாம் | 51,080 | 6,735,000 | 3 | 1.1 |
| வங்காளம் | 50,000 | 46,241,000 | 20 | 1.0 |
| மத்திய மாகாணம் | 47,000 | 12,780,000 | 5 | .95 |
| பஞ்சாப் | 45,000 | 20,675,000 | 9 | .9 |
| ஹைதராபாத் | 40,000 | - | - | .81 |
| ஆஜ்மீர் | 25,000 | - | - | .5 |
| வெளிநாடு | 20,000 | - | - | .28 |
| மொத்தம் | 49,50,661 | | | |

★ பர்மா மற்றும் சுதேச சமஸ்தானங்கள்

\+ சைமன் கமிஷன் அறிக்கையிலிருந்து இப்புள்ளி விவரங்கள் எடுக்கப்பட்டன. தொகுதி -1, 1921 ஆம் ஆண்டில் காணவும்.

மானியங்கள் கலாசார அலகுகளின் அடிப்படையிலும் அவற்றின் சம்பந்தப்பட்ட அளவின் அடிப்படையிலும் வினியோகிக்கப்பட்டதா? பின்வரும் புள்ளி விபரங்களை ஒப்பிட்டுப் பார்க்கவும்:

அட்டவணை - 3

| மொழிவாரியான பகுதிகள் | மொத்த மானியத் தொகை | மானியத் தொகை | மாகாணத்திற்கான மானியத்தின் வீதாச்சாரம் | மாகாணங்களின் மக்கள் தொகையை ஒப்பிடும்பொழுது அப்பகுதியின் மக்கள் தொகையின் வீதாசாரம் |
|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | | |
| பம்பாய் மாகாணம் | 26,90,381 | - | - | 100 |
| - குஜராத், | - | 26,22,381 | 97.4 | 18 |
| மகாராஷ்டிரம் | - | 43,000 | 1.6 | 69 |
| கர்னாடகம் | - | 25,000 | 0.93 | 13 |
| மத்திய மாகாணங்கள், | 47,000 | - | - | 100 |
| மராத்தி மாவட்டங்கள், | - | 10,000 | 21.2 | 45 |
| இந்துஸ்தானி மாவட்டங்கள், | - | 37,000 | 78.7 | 55 |
| மதராஸ் மாகாணம் | 5,05,000 | - | - | 100 |
| தமிழ்நாடு, | - | 1,03,000 | 20.4 | 38 |
| ஆந்திரா, | - | 3,02,000 | 60.0 | 52 |
| கேரளா | - | 1,00,000 | 19.6 | 10 |
| பீகார் மற்றும் ஒரிசா | 5,65,000 | - | - | 100 |
| பீகார் | - | 5,15,000 | 91.0 | 73 |
| ஒரிசா | - | 50,000 | 0.9 | 27 |

எந்தவிதமான அறிவுப்பூர்வமான கோட்பாட்டின் அடிப் படையிலும் இத்தொகைகள் வினியோகம் செய்யப்பட வில்லை என்பது இப்புள்ளி விபரங்களிலிருந்து தெளிவாகிறது. இந்த மானி யங்களுக்கும் மக்கள் தொகைக்கும் இடையிலும், மானியங்களுக்கும் கலாசார அலகுகளின் கோரிக்கைளுக்கிடையிலும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. ஒன்றரைக் கோடி மக்கள் தொகையைக் கொண்ட பம்பாயைப் போன்ற ஒரு மாகாணம் 27 லட்சம் ரூபாயைப் பெறுகிறது. அதேசமயம் ஒவ்வொன்றும் கிட்டத்தட்ட நான்கு கோடி மக்கள் தொகையைக் கொண்ட உ.பி. மற்றும் மதராஸ் மாகாணங் கள் தனித்தனியாக 5 லட்சம் ரூபாயைப் பெறுகின்றன. பம்பாய் மாகாணத்தை எடுத்துக் கொள்வோம். அது மகாராஷ்டிரம், குஜராத் மற்றும் கர்னாடகம் ஆகிய மூன்று கலாசார அலகுகளைக் கொண் டிருக்கிறது. பம்பாய் மாகாணத்துக்குக் கொடுக்கப்பட்ட ரூபாய் 26 லட்சத்து 90 ஆயிரத்திலிருந்து, மாகாணத்தின் 18 சதவிகித மக்கள் தொகையை மட்டுமே கொண்ட குஜராத் ரூபாய் 26 லட்சத்து 22 ஆயிரத்தை பெற்றது. அதாவது மொத்தத் தொகையில் 97.4 சத விகிதம். 69 சதவிகித மக்கள் தொகையைக் கொண்டிருந்த மகாராஷ் டிரம் ரூபாய் 43,000 த்தையே பெற்றது அல்லது மொத்தத் தொகையில் 1.6 சதவிகிதம். 13 சதவித மக்கள் தொகையைக் கொண்டிருந்த கர்நாடகம் ரூ. 25,000த்தையே பெற்றது; அல்லது மொத்த மானியத்தில் 9 சத விகிதம். மத்திய மாகாணங்களின் மொத்த மானியமான ரூ.47,000த் திலிருந்து, 55 சதவிகித மக்கள் தொகையைக் கொண்டிருந்த இந்துஸ் தானி மாவட்டங்கள் ரூ.37,000த்தைப் பெற்றன அல்லது மொத்தத் தொகையில் 78.7 சதவிகிதத்தைப் பெற்றன. அதே சமயம் 45 சத விகிதம் மக்கள் தொகையைக் கொண்ட மராத்தி பேசும் மாவட் டங்கள் ரூ.10,000த்தை மட்டுமே பெற்றன; அதாவது 21.2 சத விகிதம். பீகாரிலும் ஒரிசாவிலும் மொத்த மானியத் தொகையான ரூபாய் ஐந்து லட்சத்து 65 லட்சத்து 65 ஆயிரத்தில், 78 சதவிகித மக்கள் தொகையைக் கொண்ட பீகார் மட்டுமே ரூ. ஐந்து லட்சத்து 15 ஆயிரத்தை அல்லது மொத்தத்தொகையில் 91 சதவிகிதத்தைப் பெற்றது. அதேசமயம் 27 சதவிகித மக்கள் தொகையைக் கொண் டிருந்த ஒரிசா ரூபாய் 50 ஆயிரத்தை அல்லது மொத்த மானியத் தொகையில் 9 சதவிகிதத்தையே பெற்றது. மதராஸ் மாகாணத்தின் மூன்று பகுதிகளிலும் மானியங்களின் வினியோகத்தில் இதே போன்ற சமத்துவமின்மையைக் காணமுடியும்.

இதில் கோட்பாடு எதுவும் இல்லை என்பது மட்டுமன்றி நிதியை விநியோகிப்பதில் அவமானகரமான விதத்தில் சிறப்புச்

சலுகை காட்டும் போக்கு நிலவியது. திரு.காந்தியின் மாகாணமான குஜராத், மூன்றாண்டுகளில் வினியோகிக்கப்பட்ட மொத்தத் தொகையான ரூபாய் 49 1/2 லட்சத்தில் 26 1/4 லட்ச ரூபாயைப் பெற்றது. அதே சமயம் இந்தியாவின் மீதமுள்ள பகுதிகள் ரூபாய் 23 லட்சங்களை மட்டுமே பெற்றன. 29 1/2 லட்சம் மக்கள் தொகையைக் கொண்ட குஜராத் 26 1/4 லட்சத்தைப் பெற்றது. அதேசமயம் 23 கோடி மக்கள் தொகையைக்கொண்ட இந்தியாவின் மீதமுள்ள பகுதிகள் ரூ.28 லட்சத்தை மட்டுமே பெற்றன என்பதுதானே இதற்கு அர்த்தம்!!

தடைகள் இல்லை. கட்டுப்பாடு இல்லை. என்ன காரணத்திற்காகப் பணம் வழங்கப்பட்டது, யாருக்காக வழங்கப் பட்டது என்பதை அறிந்தார் இல்லை. பின்வரும் புள்ளிவிவரங்களைக் காண்க.

அட்டவணை - 4

| பணம் ஒதுக்கீடு செய்யப்பட்டு தனி நபர்கள் வசம் வைக்கப்பட்டிருந்ததுடன் அவை எந்த ஒரு குறிப்பிட்ட காரணத்திற்காகவும் பயன்படுத்தப்படாதிருந்தது | | எந்தக் காரணத்திற்காக ஒதுக்கப்பட்டது என்றும் உத்தரவாதத்தைக் குறிப்பிடாமலும் ஒதுக்கீடு செய்யப்பட்ட தொகைகள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| மௌல்வி பத்ருல்ஹசன். | 40,000 | குஜராத்திற்கு .... | 3,00,000 |
| டி.பிரகாசம் ... | 7,000 | குஜராத்திற்கு .... | 18,00,000 |
| சி.ராஜகோபாலசாரியார் .. | 1,000 | குஜராத்திற்கு .... | 3,00,000 |
| பரஜாஜ் ... ... ... | 20,000 | | |
| திரு.காந்தி... .... | 1,00,000 | | |

பணம் பெற்றுக் கொண்டவர்கள் வசம் வைக்கப் பட்டிருந்த இப்பெருந் தொகைகள் கணக்கில் காட்டப்பட்டனவா அல்லது இவ்வளவு பெரிய தொகைகளைப் பெற்றுக் கொண்டவர்கள் பெயரில்லாத பணம் பெறுபவர்களுக்குக் கொடுப்பதற்காக வைத்திருந்தனரா என்பது தெரியவில்லை. இக்கேள்விகளுக்குத் திருப்திகரமான பதில்கள் இருந்தாலும்கூட இந்த ஊதாரித்தனமான விரயமான அவசரகால நிதிகளைப் பற்றிய விபரங்களைக் கண்டறிவது கடினம் என்பதில் ஐயமேதும் இல்லை. மனசாட்சியின் எந்தவிதமான உறுத்தலும் இன்றி தங்களுடைய சொந்தத் தொகுதிகளை ஊட்டி வளர்ப்பதற்காகப் பொதுப் பணத்தைக் காங்கிரசின் கொள்கைக்காகத்

தலைவர்கள் புரிந்த பொறுப்பற்ற கொள்ளையையே இந்த சோகமான சம்பவம் குறிக்கிறது.

பிந்தைய ஆண்டுகளில் செலவழிக்கப்பட்ட மீதமுள்ள 1 கோடியே 30 லட்சத்தை காங்கிரஸ்காரர்கள் திட்டமிட்டு முறையாகக் கொள்ளையடித்த கதையைத் தொடருவது தேவையற்றது. பொதுப் பணத்தை இந்த அளவுக்குத் திட்டமிட்டு கொள்ளையடித்த சம்பவம் ஒருபோதும் நிகழ்ந்ததில்லை என்பதைக் கூறுவது போதுமானது. சுயராஜ்யநிதியிலிருந்து இப் பணத்தை வழங்குதற்கான காரணங் களில் ஒன்றாக இருந்த தீண்டப்படாதவர்களின் மேம்பாட்டிற்குப் பெருந்தொகை எதுவும் செலவழிக்கப்பட்டதாக மானியங்களின் இப்பட்டியல் காட்டவில்லை என்பதைக் காண்பதே உடனடி ஆர்வத் திற்கான விஷயமாகும். சுயராஜ்ய நிதியிலிருந்து தீண்டப்படாதவர் களின் மேம்பாட்டுக்கு அதிகமாகச் செலவு செய்வதே காங்கிரசின் கடமையாக இருக்கும் என்று எவரும் எதிர்பார்த்திருக்கக் கூடும். நாட்டின் நலன்கருதி தங்களது தொழிலைத் துறந்து விட்டதாகக் கூறும் எண்ணற்ற வழக்கறிஞர்களுக்கு அவர்களது கூற்று உண்மை தானா என்றுகூட விசாரணை செய்யாமல் அவர்களைப் பராமரிக்க பல்லாயிரக்கணக்கான ரூபாய் செலவிடப்பட்டபோது, பொது நிதியிலிருந்து யாசகம் பெற்று வாழ்வதற்காக தங்களது தொழிலைக் கைவிட்டுவிட்ட கள் இறக்குவோருக்கு உணவளிக்க பல்லாயிரக்கணக் கான ரூபாய்கள் செலவழிக்கப்பட்டபோது, நேர்மையின்மை என்ற அடையாளங்களைத் தங்களது முகங்களில் தேக்கிவைத்திருந்த இன்னும் பல திடீர் திட்டங்களுக்காகப் பணம் செலவழிக்கப்பட்ட போது, குறிப்பாக முக்கியச் செலவினமாக இல்லாவிடினும் குறைந்த பட்சம் தீண்டப்படாதவர்களுக்கென ஒரு செலவினத்தை இப்பட்டி யலில் அவர்கள் சேர்த்திருக்க வேண்டும். ஆனால் அத்தகைய எதை யும் காங்கிரஸ் செய்யவில்லை. மாறாக, தீண்டப்படாதவர்களின் மேம்பாட்டுக்காகத் தனியாக ஒரு நிதியைத் தொடங்கவேண்டு மென்று காங்கிரஸ் பிரேரணை செய்தது. இத்தனிப்பட்ட தீண்டப் ப்படாதவர்கள் நிதியின் பரிமாணம் எத்தகையதாக இருக்க வேண்டு மென்று முடிவு செய்யப்பட்டது? அது ஐந்து லட்சமாக இருக்கும் என்று அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி நிர்ணயித்தது. தீண்டப் படாதவர்களின் மேம்பாடு போன்ற ஒரு முக்கியமற்ற, லாபமில் லாத பணிக்கு இது மிகப் பெரிய தொகையாகும் என்று காரியக் கமிட்டி உணர்ந்ததுடன் அத்தொகையை ரூ. இரண்டு லட்சமாகக் குறைத்தது. ஆறுகோடி தீண்டப்படாதவர்களுக்கு வெறும் இரண்டு லட்சம்!!

தீண்டப்படாதவர்களைக் காப்பாற்றுவதற்காக காங்கிரஸ் நிர்ணயித்த மிகப்பெரிய தொகை இதுதான். உண்மையில் இதிலிருந்து எவ்வளவு தொகை பெறப்பட்டது? புள்ளி விபரங்கள் இதோ:

அட்டவணை 5

| நோக்கம் | அனுமதிக்கப்பட்ட தொகை |
|---|---|
| | ரூ. |
| ராஜமுந்திரி தாழ்த்தப்பட்ட வர்க்க மிஷன் | 1,000 |
| அந்த்யஜா காரியாலயா, அகமதாபாத் | 5,000 |
| அந்த்யஜா காரியாலயா, அகமதாபாத் | 17,381 |
| ஆந்திராவில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கான பணிகள் | 7,000 |
| தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கான பணிகளுக்கான தேசிய சமூக மாநாடு | 3,000 |
| தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கான பணிகளுக்கான தமிழ் மாவட்ட பி.சி.சி. கமிட்டிக்கு | 10,000 |
| மொத்தம் | 43,381 |

தீண்டப்படாதவர்களை முன்னேறச் செய்வதற்கு மிகுந்த முக்கியத்துவம் வழங்கப்பட ஆக்கப்பூர்வமான, பர்டோலி திட்டமென்று அறியப்பட்ட திட்டத்தை நிறைவேற்றுவதற்காக செலவிடப்பட்ட ரூ.49 1/2 லட்சத்தில் காங்கிரஸ் ரூ.43,381 மட்டுமே பெற முடிந்தது. நேர்மையின்மைக்கு இதைவிட ஓர் அப்பட்டமான உதாரணம் வேறு இருக்க முடியுமா? காங்கிரஸ் வாய் கிழியக் கூறிவந்த தீண்டப்படாதவர்களின் பாலான பாசம் எங்கே போயிற்று? தீண்டப்படாதவர்களை முன்னேறச் செய்யப் பாடுபடும் காங்கிரசின் விருப்பம் எங்கே போயிற்று? தீண்டப்படாதவர்களைப் பொறுத்தவரை பர்டோலி தீர்மானம் ஓர் ஏமாற்று வேலை என்று கூறுவது தவறாக இருக்குமா?

இங்கு ஒரு கேள்வியைக் கேட்க எவரும் கடமைப் பட்டுள்ளார்: காங்கிரஸ் முகாமில் தீண்டப்படாதவர்களின் லட்சியத்தில் இவ்வளவும் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது திரு.காந்தி எங்கே போனார்? இக்கேள்வி மிகவும் பொருத்தமானது, ஏனெனில் சுயராஜ்யத்தை அடைவதற்கும் தீண்டப்படாமையை ஒழிப்பதற்கும் இடையில் உள்ள நெருக்கமான உறவைப் பற்றி காங்கிரசில் சேர்ந்தது முதல் திரு.காந்தி வலியுறுத்தி வந்திருக்கிறார். திரு.காந்தியின் ஏடான யங் இந்தியாவின் 1921 நவம்பர் 8 ஆம் தேதியிட்ட இதழில் திரு. காந்தி பின்வருமாறு எழுதினார்:

''நமது திட்டத்தில் தீண்டப்படாமைக்கு இரண்டாமிடத்தை வழங்க முடியாது. இக்கறையை அகற்றவில்லையெனில் சுயராஜ்யம் என்பது ஓர் அர்த்தமற்ற சொல்லாகவே இருக்கும். தங்களது பணியைத் தொடருவதில் சமூக பகிஷ்கரிப்பையும், பொது வெறுப்பையும் கூட தொழிலாளர்கள் வரவேற்க வேண்டும். சுயராஜ்யத்தை எய்தும் நிகழ்வுப் போக்கில் தீண்டப்படாமையைப் போக்குவதுதான் மிகச் சக்திவாய்ந்த ஓர் அம்சம் என்று கருதுகிறேன்.''

அதற்கேற்ப அவர், சுயராஜ்யத்திற்கு எதிராக பிரிட்டிஷாருடன் கூட்டு வைத்துக் கொள்ளவேண்டாம் என்றும் மாறாக, ஒரு பொதுவான லட்சியத்துக்காக இந்துக்களுடன் சேர்ந்து சுயராஜ்யத்தைப் பெற உதவவேண்டும் என்றும் தீண்டப்படாதவர்களை வற்புறுத்திவந்தார். 1920 அக்டோபர் 20 ஆம் தேதியிட்ட யங் இந்தியாவில் எழுதிய ஒரு கட்டுரையில் திரு. காந்தி தீண்டப்படாதவர்களுக்குப் பின்வரும் விதமாக வேண்டுகோள் விடுத்தார்:

''நாட்டின் இத்தாழ்த்தப்பட்ட உறுப்பினர்களுக்கு முன்னால் மூன்று வழிகள் உள்ளன. தங்களது பொறுமையின்மையில் அவர்கள் அடிமைப்படுத்தும் அரசாங்கத்தின் உதவியைக் கோரக்கூடும். அவர்களுக்கு உதவியும் கிட்டும். ஆனால் அவர்களது நிலைமை எரியும் நெருப்பிலிருந்து கொதிக்கும் எண்ணெயில் விழுந்தது போலாகிவிடும். இன்று அவர்கள் அடிமைகளுக்கு அடிமைகளாக உள்ளனர். அரசாங்க உதவியைக் கோருவதன் மூலம் அவர்கள் தங்களது சொந்த உற்றார் உறவினர்களை அடக்கி ஒடுக்கப் பயன்படுத்தப்படுவார்கள். தங்களுக்கு எதிராகப் பாவம் செய்யப்படுவதற்குப் பதிலாக அவர்களே பாவிகளாகம் மாறிவிடுவார்கள். இந்த வழியை முஸ்லிம்கள் முயன்று தோற்றுவிட்டனர். முன்பைவிட இப்போது தங்களது நிலைமை மோசமடைந்திருப்பதை அவர்கள் உணர்ந்துள்ளனர்.

சீக்கியர்களும்கூட இந்த வழி முறையை முயன்று தோல்விகண்டனர். இன்றைக்கு இந்தியாவில் சீக்கியர்களைப் போன்று அதிக அளவில் அதிருப்தி யடைந்துள்ள சமுதாயம் வேறெதுவும் இல்லை. ஆகவே அரசாங்க உதவி என்பது ஒரு தீர்வாகிவிடாது.

இரண்டாவது வழி, இந்து மதத்தை விட்டு ஒட்டு மொத்தமாக இஸ்லாமுக்கோ கிறிஸ்தவ மதத்திற்கோ செல்வது. உலகாயத நன்மைக்காக மதம் மாறுவதை நியாயப்படுத்த முடியுமானால் அதை ஏற்குமாறு எந்தவிதத் தயக்கமுமின்றி நான் அறிவுரைகூறுவேன். ஆனால் மதம் என்பது உணர்வு சம்பந்தப்பட்ட விஷயம். உடல்ரீதியான எந்த ஒரு வசதிக்குறைவும் ஒருவருடைய மதத்தைத் துறப்பதற்குக் காரணமாக இருக்க முடியாது. பஞ்சமர்களை மனிதாபிமானமற்ற முறையில் நடத்துவது இந்து மதத்தின் ஓர் அங்கம் என்றால் அதை நிராகரிப்பதுதான் அவர்களுக்கும், மதத்தின் பேரால் மூட நம்பிக்கை கொள்ளாத அதனுடைய புனிதத்தின்பேரால் எல்லாத் தீமைகளையும் மன்னிக்காத என்னைப் போன்றவர்களுக்கும் ஒரு தலையாய கடமையாகும். ஆனால் தீண்டப்படாமை என்பது இந்து மதத்தின் ஓர் அங்கமல்ல என்று கருதுகிறேன். அதனுடைய மிகையான அம்சங்களை சகல முயற்சிகளையும் பயன்படுத்தி அகற்ற வேண்டும். இந்து மதத்திலிருந்து இக்கறையை அகற்றுவதையே தங்களது குறிக்கோளாகக் கொண்டிருக்கிற இந்து சீர்திருத்தவாதிகளின் ஒரு படையே இப்போது தோன்றியிருக்கிறது. ஆகவே மத மாற்றம் என்பது எந்த வகையிலும் ஒரு மாற்றாகிவிட முடியாது.

பின்னர், இறுதியாக, ஒரு கடமை சார்ந்த விஷயமாக அல்லாமல் தங்களது சொந்த விருப்பத்தின் பேரில் பஞ்சமர்கள் அல்லாத இந்துக்கள் வழங்குவது போன்ற இத்தகைய உதவியுடன் சுய-உதவி மற்றும் சுய-தற்சார்பு என்னும் அம்சம் வருகிறது. இங்குதான் ஒத்துழையாமையைப் பயன்படுத்துவது வருகிறது. இந்து மதத்திற்கெதிரான கண்டனம் என்ற முறையில் பஞ்சமர்கள், தங்களது விசேடக் குறைகள் தீர்க்கப்படாதவரையிலும் இதர இந்துக்களுடனான எல்லாத் தொடர்புகளையும் சம்பந்தங்களையும் நிச்சயமாக நிறுத்திக் கொள்ள முடியும். எனக்குத் தெரிந்தவரை ஒத்துழையாமையின் மூலம் பஞ்சமர்களுக்குத் தலைமையேற்று வெற்றிகரமாக வழிநடத்திச் செல்லக் கூடிய தலைவர்கள் எவரும் அவர்களிடையே இல்லை.

ஆகவே, இப்போதைய அரசாங்கத்தின் அடிமைத்தனத்தைத் தகர்த்தெறிவதற்காக இப்போது நடைபெற்றுக் கொண்டிருக்கும்

மகத்தான தேசிய இயக்கத்தில் மனமுவந்து கலந்து கொள்வதுதான் பஞ்சமர்களுக்கு மிகச் சிறந்த வழியாக இருக்கும். இத்தீங்கிழைக்கும் அரசாங்கத்தை எதிர்த்து ஒத்துழையாமையில் ஈடுபடுவது இந்திய தேசமாக அமைந்துள்ள பல்வேறு பிரிவினரிடையே ஒத்துழைப்புக்கு வழிவகுக்கும் என்பதைக் காண்பது பஞ்சம நண்பர்களுக்கு எளிதான தாகும்.''

அதே கட்டுரையில் திரு. காந்தி இந்துக்களுக்குப் பின்வருமாறு கூறினார்:

> ''அரசாங்கத்திற்கு எதிராக ஒத்துழையாமையில் இந்துக்கள் வெற்றிகரமாக ஈடுபட விரும்பினால் அவர்கள் முசல்மான்களுடன் சேர்ந்து பொதுவான லட்சியத்தை உருவாக்கிக் கொண்டதைப் போல பஞ்சமர்களுடனும் பொதுவான லட்சியத்தை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும்.''

1920 டிசம்பர் 29 ஆம் தேதியிட்ட யங் இந்தியாவில் அவர் இந்த எச்சரிக்கையைத் திரும்பவும் விடுத்தார். அதில் அவர் கூறியதாவது:

> ''அரசாங்கத்திற்கு எதிராக ஒத்துழையாமை என்றால் ஆளப்படுபவர்களிடையே ஒத்துழைப்பு என்று அர்த்தமாகும். தீண்டப்படாமை என்ற பாவத்தை இந்துக்கள் போக்கவில்லை எனில் இன்னும் ஓராண்டிலோ அல்லது நூறு ஆண்டுகளிலோ சுயராஜ்யம் கிட்டாது... இந்து-முஸ்லீம் ஒற்றுமையின்றி எவ்வாறு சுயராஜ்யத்தை எய்த முடியாதோ அதேபோன்று தீண்டப்படாமையின் பாவங்களைப் போக்காமலும் சுயராஜ்யத்தை எய்த முடியாது.''

பர்டோலி தீர்மானத்தில் நிர்ணயிக்கப்பட்டது போன்று தீண்டப்படாதவர்களின் நிலைமையை மேம்படுத்தும் காங்கிரசின் கொள்கை நடைமுறைப்படுத்தப்படுவதை திரு. காந்தி உறுதி செய்வார் என்றே ஒருவர் எதிர்பார்க்கக்கூடும். உண்மை என்னவெனில் திரு. காந்தி வாய்ச்சொல்லில் வீரம் காட்டியதைத் தவிர இந்த மேம்படுத்தும் திட்டத்தில் கிஞ்சித்தும் ஆர்வம் காட்டவே இல்லை. அவர் உண்மையிலேயே மனது வைத்திருந்தால் அவர் வேறொரு கமிட்டியை நியமித்திருக்கக் கூடும். உண்மையில் மனம் வைத்திருந்தால் அவர் காங்கிரஸ்காரர்களால் திட்டமிட்டு நடத்தப்பட்ட

கொள்ளையிலிருந்து திலகர் சுயராஜ்ய நிதியின் பெரும்பகுதியை அவர் காப்பாற்றி தீண்டப்படாதவர்களின் நலனுக்கு அதை ஒதுக்கியிருக்கக் கூடும். விநோதமான முறையில் அவர் வாய்மூடி மௌனியாக, அக்கறையேதுமின்றி இருந்தார். எந்தவிதமான மன உறுத்தலும் இன்றி இருந்த திரு. காந்தி எவரும் நம்ப முடியாத அளவுக்கு மிகவும் வினோதமான வாதங்களின் மூலம் தீண்டப்படாதவர்களின் லட்சியத்தின்பால் தமது அக்கறையின்மையை நியாயப்படுத்தி வந்தார். 1920 அக்டோபர் 20 ஆம் தேதியிட்ட யங் இந்தியாவில் அவற்றைக் காணலாம்:

> ''ரத்தக் கறைபடிந்த தங்களது கரங்களைக் கழுவுமாறு ஆங்கிலேயர்களை நாம் கேட்டுக் கொள்வதற்கு முன்னால் இந்துக்களாகிய நாம் நமது ரத்தக்கறை படிந்த கரங்களைக் கழுவிக் கொள்ள வேண்டாமா? இது ஒரு சரியான, நியாயமான கேள்வியாகும். எனது சொந்த அடிமைத்தனத்திலிருந்து என்னையே விடுவித்துக் கொள்ளாமல் ஓர் அடிமை நாட்டின் உறுப்பினர் ஒருவரினால் ஒடுக்கப்பட்ட வர்க்கத்தினரை அவர்களுடைய அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்க முடியுமானால் இன்றைக்கு நான் அதையே செய்வேன். ஆனால் அது சாத்தியமில்லாத பணியாகும். ஒரு நியாயமான விஷயத்தை செய்வதற்குக் கூட சுதந்திரம் இல்லாதவன்தான் ஓர் அடிமை''.

திரு. காந்தி பின்வருமாறு கூறி கட்டுரையை நிறைவு செய்தார்:

> ''அந்த நிகழ்வுப் போக்கு தொடங்கிவிட்டது, பஞ்சமர்கள் வேண்டுமென்றே அதில் பங்கு கொண்டாலும், பங்கு கொள்ளவில்லை என்றாலும் மீதமுள்ள இந்துக்களால், தங்களுடைய சொந்த முன்னேற்றத்தைப் பாதிக்காமல் அவர்களை அசட்டை செய்ய முடியாது. ஆகவே பஞ்சமர் பிரச்சினை எனக்கு உயிருக்குயிரானதாக இருந்த போதிலும் கூட நான் தேசிய ஒத்துழைப்பின்பால் பிரத்தியேக கவனம் செலுத்துவதில் திருப்தியடைகிறேன். மகத்தானதொரு விஷயத்தில் குறையானதும் அடங்கியுள்ளது என்று நியாயமாகக் கருதுகிறேன்.''

தீண்டப்படாதவர்களுக்கு காங்கிரஸ் என்ன செய்தது என்பது பற்றிய இரண்டாவது அத்தியாயம் இவ்வாறு நிறைவு பெறுகிறது.

பற்றிய இரண்டாவது அத்தியாயம் இவ்வாறு நிறைவு பெறுகிறது. கற்பனையில் பரிவு காண்பதற்கு திரு. காந்தி எவ்வாறு கற்றுக் கொண்டார் என்ற உண்மையை உணருவதுதான் இச்சோக சம்பவத்தின் வருத் தத்திற்குரிய பகுதியாகும். மாயைகளின் உலகில் வாழ திரு. காந்தி விரும்புகிறாரா என்பது சந்தேகத்திற்குரிய விஷயமாகும். தம்முடைய நெஞ்சிற்கினிய கருத்தை ஆதரிக்கும் வாதங்கள் என்ற முறையில் அவற்றைப் பயன்படுத்துவதற்காக மாயைகளை உருவாக்க அவர் விரும்புகிறார் என்பதில் ஐயமேதும் இல்லை. தீண்டப்படாதவர் களின் மேம்பாட்டிற்காகத் தனிப்பட்ட முறையில் பொறுப்பேற்றுக் கொள்ளாததற்காக அவர் கூறும் காரணமே திரு. காந்தியின் இப் பழக்கத்திற்கு மிகச் சிறந்த சான்றை வழங்குகிறது. இந்துக்களுக்கு எதிராகச் செயல்படக்கூடாதென்றும் ஏனெனில் அவ்வாறு செய் தால் அவர்கள் தங்களது உற்றார் உறவினருக்கு எதிராகச் செயல் படுவதாகும் என்றும் தீண்டப்படாதவர்களுக்குக் கூறுவதைப் புரிந்து கொள்ள முடியும். ஆனால் இந்துக்கள் தீண்டப்படாதவர்களைத் தங்களது உற்றார் உறவினர்களாகக் கருதுகிறார்கள் என்று ஊகம் செய்வது ஒரு மாயையைத் தோற்றுவிப்பதாகும். தீண்டப்படாமை யைப் போக்கும் கடமையை மேற்கொள்ளுமாறு இந்துக்களைக் கேட்டுக்கொள்வது ஒரு சிறந்த அறிவுரையாகும். ஆனால், தீண்டப் படாதவர்களை மனிதாபிமானமற்ற முறையில் நடத்தி வந்தமைக் காக இந்துக்களிடம் அவமான உணர்வு மேலோங்கியுள்ளது என்றும், அவர்கள் தீண்டாமையை ஒழித்துக்கட்டாதிருக்க மாட்டார்கள் என்றும், தீண்டாமையை அகற்றுவதைத் தவிர வேறு எதையும் செய் வதில்லை என்று இந்து சீர்திருத்த வாதிகளின் குழுவொன்று சூளுரை மேற்கொண்டிருக்கிறது என்றும் உறுதியளிக்குமளவுக்குச் செல்வது, தீண்டப்படாதவர்களையும், உலகத்தையும் முட்டாளாக்கும் ஒரு மாயையின் செப்பிடு வித்தையேயாகும். ஒட்டுமொத்தமாக உள்ள ஒன்றுக்குக் கிடைக்கும் அனுகூலம் அதன் ஒரு பகுதிக்கும் கிடைக்கும் என்றும் அந்த ஒரு பகுதியை மட்டும் கவனித்துக் கொண்டிருப்பதற்கு மட்டுமே ஒருவர் தமது நேரத்தைச் செலவழித்துக் கொண்டிருக்க வேண்டியதில்லை என்றும் வாதிடுவது தர்க்க ரீதியானதாக இருக்கக் கூடும். ஆனால் ஒரு பகுதி, தீண்டப் படாதவர்களைப் போன்ற ஒரு தனிப்பட்ட பகுதி ஒட்டு மொத்தமான இந்து மதத்தின் ஒரு பகுதி என்று யூகிப்பது என்பது தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்வதாகும். திரு. காந்தியின் மாயைகளின் காரணமாக தீண்டப்படாதவர்களும் இந்த நாடும் எத்தகைய சோகசம்பவங்களைச் சந்திக்க வேண்டி



# இயல் 3

# ஓர் அற்பமான பேரம்

## அதிகாரத்தைக் கைவிட காங்கிரஸ் மறுப்பு

அரசியல் சட்டம் செயல்படும் விதம் குறித்து விசாரணை செய்து அவசியமானது என்று கருதப்படுகிற மாற்றங்களைத் தெரிவிப்பதற்காக ஒரு ராஜாங்கக் கமிஷனைப் பத்தாண்டுகளின் முடிவில் நியமிப்பதென்பது மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கத்தின் மீது ஒரு கடப்பாட்டை விதிக்கும் ஷரத்தாக 1919 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தில் இடம் பெற்றிருந்தது. அதற்கேற்ப 1928 இல் சர். ஜான் சைமனின் தலைமையில் ஒரு ராஜாங்கக் கமிஷன் நியமிக்கப்பட்டது. கமிஷனின் உறுப்பினர்களில் இந்தியர்களும் இடம் பெறுவர் என்று இந்தியர்கள் எதிர்பார்த்தனர். ஆனால் அப்போது இந்தியாவுக்கான அயல் துறைச் செயலாளராக இருந்த லார்டு பிர்கென்ஹட் கமிஷனில் இந்தியர்கள் சேர்க்கப்படுவதை எதிர்த்தார், அதை ஒரு நாடாளுமன்றக் கமிஷனாக ஆக்க வேண்டுமென்று வலியுறுத்தினார். இதனால் காங்கிரசும் லிபரல்களும் ஆத்திரமடைந்ததுடன் அதை ஓர் அவமானமாகவும் கருதினர். அவர்கள் கமிஷனை பகிஷ்கரித்ததுடன் அதற்கு எதிராகப் பெரும் கிளர்ச்சியிலும் ஈடுபட்டனர். இந்த எதிர்ப்புணர்வை மட்டுப்படுத்துவதற்காக, கமிஷனின் பணிகள் முடிவுற்ற பின்னர், இந்தியாவுக்கான புதிய அரசியல் சட்டம் நிர்ணயிக்கப்படும் முன்னர் இந்தியர்களின் பிரதிநிதிகள் ஒரு விவாதத்திற்கு அழைக்கப்படுவர் என்று மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கம் அறிவித்தது. இந்த அறிவிப்புக்கேற்ப, நாடாளுமன்றத்தின் பிரதிநிதிகளுடனும் மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கத்துடனும் ஒரு வட்டமேசை மாநாட்டில் பங்குகொள்ள இந்தியர்களின் பிரதிநிதிகள் அழைக்கப்பட்டனர்.

1930 நவம்பர் 12 அன்று மாட்சிமை பொருந்திய ஐந்தாவது ஜார்ஜ் மன்னர், இந்திய வட்டமேசை மாநாட்டை முறையாகத்

துவக்கிவைத்தார். இந்தியர்களின் கண்ணோட்டத்தில் அந்த வட்ட மேசை மாநாடு மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த ஒரு சம்பவமாக இருந்தது. இந்தியாவுக்கான ஓர் அரசியல் சட்டத்தை உருவாக்கும் விஷயத்தில் தங்களை கலந்தாலோசிக்க வேண்டும் எனும் இந்தியர்களின் உரிமையை மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கம் அங்கீகரித்ததில்தான் அதன் முக்கியத்துவம் பொதிந்துள்ளது. தீண்டப்படாதவர்களைப் பொறுத்தவரை அது அவர்களது வரலாற்றில் ஒரு திருப்புமுனையாக அமைந்தது. ஏனெனில் இரண்டு பிரதிநிதிகளின் மூலம் தனித் தனியாகப் பிரதிநிதித்துவப்படுத்துவதற்காக தீண்டப்படாதவர்கள் முதன்முதலாக அனுமதிக்கப்பட்டனர். நானும் திவான் பகதூர் ஆர்.சீனிவாசனுமே அப்பிரதிநிதிகள். தீண்டப்படாதவர்கள் இந்துக்களிலிருந்து ஒரு தனிப்பட்ட கூறாக மட்டுமல்லாமல், இந்தியாவுக்கான அரசியல் சட்டத்தை உருவாக்குவதில் கலந்தாலோசிக்கப்படும் உரிமையையும் பெற்றிருக்கிறார்கள் என்ற முக்கியத்துவம் கொண்டவர்களாகவும் கருதப்பட்டனர் என்பதையே இது அர்த்தப்படுத்திற்று.

அந்த மாநாட்டின் பணிகள் ஒன்பது கமிட்டிகளுக்குப் பிரித்துத் தரப்பட்டன. இக் கமிட்டிகளில் ஒன்று சிறுபான்மையினர் கமிட்டி என்று அழைக்கப்பட்டது. வகுப்புப் பிரச்சினைக்குத் தீர்வு காணும் மிகக் கடினமான பணி அதற்கு ஒதுக்கப்பட்டது. இக் கமிட்டியே மிக முக்கியமான கமிட்டி என்பதை உணர்ந்த பிரதமர் மறைந்த ராம்சே மேக்டொனால்டு அதன் தலைவர் பொறுப்பை தாமே ஏற்றுக்கொண்டார். சிறுபான்மையினர் கமிட்டியின் நடவடிக்கைக் குறிப்புகள் தீண்டப்படாதவர்களுக்கு மகத்தான முக்கியத்துவமுடையவையாகும். ஏனெனில் காங்கிரசுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் இடையில் நிகழ்ந்த பல விஷயங்களும், அவர்களுக்கிடையில் கசப்புணர்வுக்கு இட்டுச்சென்ற விஷயங்களும் அக்கமிட்டியின் நடவடிக்கைக் குறிப்புகளில் இடம்பெற்றுள்ளன.

வட்டமேசை மாநாடு கூடியபோது, தீண்டப்படாதவர்களைத் தவிர மீதமுள்ள வகுப்பார் முன்வைத்த அரசியல் கோரிக்கைகள் அனைவரும் அறிந்தவை. உண்மையில் 1919 ஆம் ஆண்டின் அரசியல் சட்டம் அவர்களை சட்டரீதியான சிறுபான்மையினராக அங்கீகரித்ததுடன், அவர்களது பாதுகாப்பு மற்றும் பந்தோபஸ்து சம்பந்தப்பட்ட ஷரத்துக்கள் அதில் இடம் பெற்றிருந்தன. அவர்களைப்

பொறுத்தவரை அந்த ஷரத்துக்களை விஸ்தரிப்பது அல்லது அவற்றின் வடிவத்தை மாற்றியமைப்பதுதான் பிரச்சினையாக இருந்தது. தாழ்த்தப் பட்ட வர்க்கத்தினரைப் பொறுத்தவரை நிலைமை வேறுவிதமாக இருந்தது. 1919 ஆம் ஆண்டின் அரசியல் சட்டத்திற்கு முன்னதாக வெளிவந்த மான்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை, அவர்களது பாது காப்புக்கு அரசியல் சட்டத்தில் வழி காணப்பட வேண்டும் என்று ஐயத்திற்கிடமற்ற விதத்தில் கூறியிருந்தது. ஆனால் துரதிருஷ்டவச மாக அரசியல் சட்டத்தின் விளக்கங்கள் உருவாக்கப்பட்டபோது, நியமனத்தின் மூலம் சட்ட மன்றங்களில் அடையாளப் பிரதிநிதித் துவம் வழங்குவதைத் தவிர அவர்களுடைய பாதுகாப்புக்காக எந்த வித ஷரத்துக்களையும் உருவாக்குவது கடினம் என்பதைக் கண்டது. இந்துக்களின் கொடுமைகளுக்கும் அடக்குமுறைகளுக்கும் எதிரான தங்களது பாதுகாப்புக்காகத் தீண்டப்படாதவர்கள் அவசியம் என்று கருதும் பாதுகாப்பு நடவடிக்கைகளை உருவாக்குவதுதான் செய்யப் படவேண்டிய முதலாவது விஷயமாகும். வட்ட மேசை மாநாட் டின் சிறுபான்மையினர் கமிட்டிக்குக் குறிப்பு ஒன்றைச் சமர்ப்பித் ததன் மூலம் நான் அதைச் செய்தேன். என்னால் உருவாக்கப்பட்ட பாதுகாப்பு நடவடிக்கைகளைப் பற்றிய ஒரு கருத்தை வழங்குவதற் காக அக்குறிப்பின் வாசகத்தை இங்கு மீண்டும் வழங்குகின்றேன்:

**சுயாட்சி உரிமை பெற்ற இந்தியாவின் வருங்கால அரசியல் சட்டத்தில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் அரசியல் ரீதியான பாதுகாப்புக்காக இந்திய வட்டமேசை மாநாட்டுக்கு வழங்கப் பட்ட திட்டம்.**

சுயாட்சி உரிமைபெற்ற இந்தியாவில் பெரும்பான்மை ஆட்சி யின் கீழ் தங்களை உட்படுத்திக்கொள்ள தாழ்த்தப்பட்ட வர்க்கத் தினர் சம்மதிக்கக்கூடிய நிபந்தனைகள் வருமாறு:

சுயாட்சி உரிமைபெற்ற இந்தியாவில் பெரும்பான்மை ஆட்சியின் கீழ் தங்களை உட்படுத்திக்கொள்ள தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் சம்மதிக்கக்கூடிய நிபந்தனைகள் வருமாறு:

## நிபந்தனை எண்: 1

## சமமான குடியுரிமை

பரம்பரைக் கொத்தடிமைகள் என்ற தங்களது இப்போதைய நிலையில் பெரும்பான்மை ஆட்சிக்குத் தங்களை ஆட்படுத்திக் கொள்ள தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் சம்மதிக்க முடியாது. பெரும் பான்மை ஆட்சி ஏற்படுத்தப்படுவதற்கு முன்னர் தீண்டப்படாமை என்ற அமைப்பிலிருந்து அவர்கள் விடுதலை பெறுவது ஒரு நிறை வேற்றப்பட்ட உண்மையாக இருக்கவேண்டும். அது பெரும்பான்மை யினரின் விருப்பத்திற்கு விடப்படக்கூடாது. நாட்டின் இதர பிரஜை களுக்குச் சமமாக எல்லாவிதமான பிரஜா உரிமைகளையும் பெறத் தகுதியுள்ள சுதந்திரக் குடிமக்களாக தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் ஆக்கப்பட வேண்டும்.

(அ) தீண்டப்படாமை ஒழிக்கப்படுவதை உறுதி செய்யவும் பிரஜா உரிமையில் சமத்துவத்தை உருவாக்கவும் பின்வரும் அடிப் படை உரிமையை இந்தியாவின் அரசியல் சட்டத்தின் ஓர் அங்கமாக ஆக்க பிரேரணை செய்யப்படுகிறது.

## அடிப்படை உரிமை

யு . எஸ் . ஏ . அரசியல் சட்ட திருத்தம் XIV மற்றும் அயர் லாந்து அரசாங் கத்தின் சட்டம் 1920, 10 மற்றும் 11. ஜியோ V சி . எச் . 67 , பிரிவு 5 (2)

''இந்தியாவிலுள்ள மாநிலங்களின் அனைத்துப் பிரஜை களும் சட்டத்தின்முன் சமமானவர்கள், சமமான குடியுரிமைகளைப் பெற்றவர்கள். தீண்டப்படாமை யின் காரணமாக நாட்டின் எந்த ஒரு பிரஜைக்கு எதிராக வும் நடப்பிலுள்ள எந்த ஒரு சட்டம், விதிமுறை, ஒழுங்கு, சம்பிரதாயம் அல்லது சட்டத்தின் விளக்கம் ஆகியவற்றைப் பயன்படுத்தி எந்த ஒரு தண்டனை, குறைபாடு, ஊனம் ஆகியவற்றைத் திணிக்கவோ அல்லது வேறு படுத்திக்காட்டவோ, இந்த அரசியல் சட்டம் நடப்பிற்கு வந்த நாளிலிருந்து இந்தியாவில் எந்தப் பயனும் இல்லாது போகும்.

எல்லா அரசியல் சட்டங்களிலும் இவ்வாறுதான் உள்ளது. பேராசிரியர் கெய்த்தின் குறிப்புகளைக் காண்க. ஓ.எம். டி. 207 பக். (56).

ஆ.1919 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்க சட்டத்தின் பிரிவுகள் 110 மற்றும் 111ஐப் பயன்படுத்தி நிர்வாக அதிகாரிகள் இப்போது அனுபவித்து வரும் விலக்குகள் மற்றும் விதிவிலக்குகளை ஒழிக்கவும், நிர்வாகச் செயல்பாடுகளுக்கான அவர்களது பொறுப்புகளை ஐரோப்பிய பிரிட்டிஷ் பிரஜையின் விஷயத்தில் இப்போது இருப்பதைப் போன்று ஒரே மாதிரியானதாக்கப்பட வேண்டும். எல்லா அரசியல் சட்டங்களிலும் இவ்வாறுதான் உள்ளது.

நிபந்தனை எண் II :

## சம உரிமைகளை சுதந்திரமாக அனுபவித்தல்

சம உரிமைகளுக்கான ஒரு பிரகடனத்தினால் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கு எந்தவிதப் பயனும் இல்லை. சமமான பிரஜா உரிமைகளைத் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் பிரயோகிக்க முயலுவார்களேயானால் அவர்கள் ஆசாரமான சமுதாயத்தின் மொத்த சக்தியையும் எதிர்கொள்ள வேண்டியிருக்கும் என்பதில் ஐயமெதுவும் இருக்க முடியாது. உரிமைகள் சம்பந்தமான இரு பிரகடனங்கள் வெறும் வாய்வார்த்தைகளாக இல்லாமல் அன்றாட வாழ்வின் எதார்த்தங்களாக இருக்க வேண்டுமானால் தாங்கள் இப்பிரகடனப் படுத்தப்பட்ட உரிமைகளை அனுபவிப்பதில் ஏற்படும் தலையீடுகளினால் தோன்றும் துன்பதுயரங்களிலிருந்து போதுமான பாதுகாப்பளிக்கப்பட வேண்டும் என்று தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் கருதுகின்றனர்.

அ. ஆகவே குற்றங்கள், நடைமுறை மற்றும் தண்டனைகள் சம்பந்தப்பட்ட 1919 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தின் பாகம் XI உடன் பின்வரும் பிரிவை சேர்க்க வேண்டுமென்று தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் பிரேரணை செய்கின்றனர் :

பொதுவாக யு.எஸ். சட்டங்களும் ஏப்ரல் 9, 1866 மற்றும் மார்ச் 1, 1875 ஆம் தேதிய சிவில் உரிமைகள் பாதுகாப்புச் சட்டங்களும் நீக்ரோக்களின் விடுதலையைக் கருத்தில் கொண்டு அவர்களுடைய நலனுக்காக இயற்றப்பட்டவை.

## (i) பிரஜா உரிமையில் அத்துமீறும் குற்றம்

''எல்லா வர்க்கங்களைச் சேர்ந்த நபர்களுக்கும் பிரயோகப்படுத்தக்கூடிய சட்டரீதியான காரணங்களைத் தவிர தீண்டப்படாமை என்ற எந்த ஒரு முன் நிபந்தனையைப் பொருட்படுத்தாமல் எந்த ஒரு நபருக்கும் எந்தவிதமான தங்குமிடங்களையும், அனுகூலங்களையும், வசதிகளையும், விடுதிகள், கல்வி நிறுவனங்கள், சாலைகள், நடைபாதைகள், தெருக்கள், குளங்கள், கிணறுகள் மற்றும் நிலம், வான் அல்லது நீர்வழிப் போக்குவரத்துகள், தியேட்டர்கள் அல்லது இதர பொதுப் பொழுதுபோக்குமிடங்கள், புகலிடங்கள் அல்லது வசதிகள் ஆகியவை பொதுமக்கள் பயன்படுவதற்காக லைசென்ஸ் வழங்கப்பட்டிருந்தாலும் அவற்றை முழுமையாக அனுபவிப்பதை எந்த ஒரு நபருக்கு யார் மறுத்தாலும் அவர் மேற்கூறப் பட்ட இரு விளக்கங்களுக்காகவும் ஐந்தாண்டுக் கால சிறைத் தண்டனைக்கும் அபராதம் செலுத்துவதற்கும் உள்ளாவார்.''

ஆ. தங்களது உரிமைகளை அமைதியான வழியில் அனுபவிப்பதில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கு ஆச்சாரமான தனிநபர்கள் ஏற்படுத்தும் தடைகள் மட்டுமே ஒரே அச்சுறுத்தல் அல்ல. தடைகளின் பொதுவான வடிவம் சமூக பகிஷ்காரம் ஆகும். ஆசாரமான வர்க்கங்களின் கரங்களில் உள்ள வெல்லற்கரிய ஆயுதம் அதுவேயாகும். அதைக்கொண்டு, தீண்டப்படாதவர்களின் எந்த ஒரு நடவடிக்கையையும் - அது அவர்களுக்கு ஜீரணிக்க்முடியாத விஷயமாக இருக்கும்பட்சத்தில் - அவர்கள் அடக்கி ஒடுக்கிவிடுகின்றனர். அது எவ்வாறு செயல்படுகிறது, அது எந்த சந்தர்ப்பங்களில் நடைமுறைக்குக் கொண்டுவரப்படுகிறது போன்றவை 1928ல் பம்பாய் அரசாங்கத்தினால் ''தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் (தீண்டப்படாதவர்கள்) மற்றும் மாகாணத்தில் உள்ள பூர்வகுடி இனங்களின் கல்வி, பொருளாதார சமூக நிலைமையை விசாரிப்பதற்கும் அவர்களுடைய மேம்பாட்டிற்கான நடவடிக்கைகளைப் பரிந்துரை செய்யவும்'' நியமிக்கப்பட்ட கமிட்டியின் அறிக்கையில் நன்கு விளக்கப்பட்டுள்ளன. அதிலிருந்து எடுக்கப்பட்ட ஒரு பகுதி வருமாறு:

## தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரும் சமூக பகிஷ்காரமும்

''102. பொது உபயோக வசதிகளனைத்தையும், பயன்படுத்துவதற்கான உரிமைகளைத் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்குப் பெற்றுத் தருவதற்குப் பல்வேறு பரிகாரங்களை நாம் பரிந்துரை செய்திருந்த போதிலும், இன்னும் பல காலத்திற்கு அவற்றை அவர்கள் பிரயோகிப்பதில் சிரமங்கள் இருந்து கொண்டிருக்கும் என்று அஞ்சுகிறோம். முதலாவது சிரமம் அவர்களுக்கெதிராக ஆசாரமான வர்க்கங்களின் பகிரங்க வன்முறையாக இருக்கும் என்று அஞ்சுகிறோம். ஒவ்வொரு கிராமத்திலும் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் ஒரு சிறிய சிறுபான்மையினராகவே உள்ளனர். அவர்களை எதிர்த்து ஆசாரமானவர்கள் மிகப் பெரும்பான்மையினராக உள்ளனர். எந்தவகையிலேனும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் எந்த ஒரு உத்தேச அத்துமீறலிலிருந்தும் தங்களது நலன்களையும் கௌரவத்தையும் பாதுகாப்பதில் அவர்கள் உறுதியாக உள்ளனர் என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். ஆசாரமான வர்க்கத்தினர் வன்முறையைப் பயன்படுத்துவதன் மீது போலீசார் வழக்குத் தொடரும் அபாயம் இருப்பதால் ஓரளவுக்கு வன்முறை மட்டுப்படுத்தப்பட்டுள்ளது. அதன் விளைவாக இத்தகைய சம்பவங்கள் அரிதாகவே நிகழ்கின்றன.

''தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் இன்றைய பொருளாதார நிலைமையிலிருந்து இரண்டாவது சிரமம் தோன்றுகிறது. மாகாணத்தின் பெரும்பாலான பகுதிகளில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்குப் பொருளாதார சுதந்திரமே இல்லை. ஆசாரமான வர்க்கத்தினரின் நிலங்களில் குடியானவர்களாகச் சிலர் தங்கள் விருப்பம் போல் பயிரிடுகின்றவர். மற்றவர்கள் ஆசாரமான வர்க்கத்தினரால் வேலைக்கமர்த்தப்பட்ட பண்ணைத் தொழிலாளர்களாக ஈட்டும் பொருளை நம்பி வாழ்கின்றனர், மீதமுள்ளவர்கள் கிராம ஊழியர்கள் என்ற முறையில் தங்களுக்கு செய்யப்படும் சேவைகளுக்குப் பகரமாக ஆசாரமான வர்க்கங்கள் வழங்கும் உணவு அல்லது தானியங்களை நம்பி உயிர் வாழ்கின்றனர். தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் துணிந்து தங்களது உரிமைகளைப் பயன்படுத்த முனையும்போது ஆசாரமான வர்க்கத்தினர் அந்த தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கு எதிராகத் தங்களது பொருளாதார வலிமையை ஓர் ஆயுதமாகப் பயன்படுத்தி தங்களது

நிலங்களிலிருந்து தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரை வெளியேற்றிய, அவர்களை வேலையிலிருந்து நிறுத்திய, கிராம சேவகர்கள் என்ற முறையில் அவர்கள் பெற்று வந்த ஊதியங்களை நிறுத்திய எண்ணற்ற சம்பவங்களை நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். பொதுவாக பயன்படுத்தப்படும் நடைபாதைகளைப் பயன்படுத்துவதிலிருந்து தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரைத் தடுக்கவும் வாழ்வுக்குத் அத்தியாவசியப் பொருட்களை கிராம வணிகர் அவர்களுக்கு விற்பதைத் தடுப்பதையும் உள்ளிட்ட ஒரு பரவலான அளவில் இந்த பகிஷ்கரிப்பு அடிக்கடி திட்டமிடப்படுகிறது. சாட்சியங்களின் கூற்றுப் படி சில சமயங்களில் மிகச் சாதாரணமான காரணங்களே கூட தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கு எதிராக சமூக பகிஷ்காரத்தைப் பிரகடனம் செய்வதற்குப் போதுமானவையாகும். பொதுக் கிணற்றைப் பயன்படுத்தும் தங்களது உரிமையைத் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் பிரயோகிப்பதைத் தொடர்ந்தே இத்தகைய பகிஷ்கரிப்புகள் அடிக்கடி நடைபெறுகின்றன. தாழ்த்தப் பட்ட வகுப்பைச் சேர்ந்த ஒரு நபர் பூணூல் அணிந்து கொண்டாலோ, சிறுநிலப் பகுதியை வாங்கி விட்டாலோ, நல்ல உடைகளை அல்லது அணிகலன்களை அணிந்து கொண்டாலோ, அல்லது பொதுவான தெருவழியாக குதிரைமீது மணமகனை அமரவைத்து கல்யாண ஊர்வலம் ஒன்றை நடத்தி விட்டாலோ மிகக் கடுமையான பகிஷ்கரிப்பு பிரகடனப்படுத்தப் பட்ட சம்பவங்களும் ஏராளமாக உள்ளன.

''தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரை அடக்கி ஒடுக்குவதற்காகக் கண்டுபிடிக்கப்பட்ட ஆயுதங்களிலேயே சமூக பகிஷ்காரம் என்ற இந்த ஆயுதத்தைவிடப் பயனுறுதியானது வேறு எதுவும் இருக்குமா என்பது நமக்குத் தெரியாது. பகிரங்கமான வன்முறை என்ற வழிமுறைகூட இதன்முன்பு மங்கிவிடுகிறது. ஏனெனில் அது மிகவும் மோசமான, அழிவுகரமான பலன்களை விளைவுகளை ஏற்படுத்துகிறது. தொடர்பு சுதந்திரம் என்ற தத்துவத்துக்கு ஒத்துப் போகின்ற சட்டரீதியான வழிமுறை என்று கருதப்படுவதால் அது மிகவும் ஆபத்தானதாகிறது. தங்களது மேம்பாட்டிற்கு அவசியமான பேச்சு சுதந்திரம் செயல் சுதந்திரம் ஆகியவற்றைத் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கு நாம் உத்தரவாதம் செய்ய வேண்டுமானால் பெரும்பான்மையினர் புரியும் இக்கொடுமையை இரும்புக்கரம் கொண்டு ஒழிக்க வேண்டும் என்பதை ஒப்புக் கொள்கிறோம்.''

தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் கருத்தில், தங்களது உரிமைகளுக்கும் விடுதலைக்கும் எழுந்துள்ள இந்த வகை அச்சுறுத்தலைச் சமாளிக்கும் ஒரேவழி, சமூக பகிஷ்கரிப்பை சட்டத்தின் மூலம் தண்டிக்கப்படக்கூடிய குற்றமாக ஆக்குவதேயாகும். ஆகவே, 1919 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தின் குற்றங்கள், நடைமுறைகள் மற்றும் தண்டனைகள் சம்பந்தமான பாகம் XI இல் சேர்க்கப்பட்டுள்ள ஷரத்துக்களுடன் பின்வரும் பிரிவுகளையும் இணைக்க வேண்டும் என்று வலியுறுத்த அவர்கள் கடமைப்பட்டுள்ளனர்.

## I. பகிஷ்கரிப்பு ஒரு குற்றம் என்று வரையறுக்கப்படுகிறது.

i) பின்வரும் சந்தர்ப்பங்களில் ஒரு நபர் மற்றொருவரைப் பகிஷ்கரிப்பதாகக் கருதப்படுவார். யாரொருவர் (அ) எந்த ஒரு வீட்டையோ அல்லது நிலத்தையோ வாடகைக்குவிடவோ அல்லது பயன்படுத்தவோ அல்லது கைக்கொள்ளவோ மறுக்கிறாரோ, அல்லது மற்றொரு நபருடன் செயல்தொடர்பு கொள்ளவோ, கூலிக்கு வேலை செய்யவோ அல்லது வியாபாரம் செய்யவோ, அல்லது அவருக்கு எந்தவித வேலையையும் செய்யவோ அவரிடமிருந்து சேவையைப் பெறவோ, அல்லது வியாபாரத்தின் சாதாரணப் போக்கில் பொதுவாகச் செய்யப்படும் இத்தகைய விஷயங்கள் குறித்த நிபந்தனைகளின் பேரில் மேற் கூறப்பட்ட எந்த ஒரு விஷயத்தையும் மறுப்பவர் அல்லது

ஆ) அரசியல் சட்டத்தில் பிரகடனப்படுத்தப்பட்ட எந்த ஒரு அடிப்படை உரிமை அல்லது இதர பிரஜா உரிமைகளுக்கு முரணாக இல்லாத சமுதாயத்தில் நடப்பிலுள்ள சம்பிரதாயங்களுக்கு உரியமதிப்பளித்து யாரொருவர் சமூக, தொழில் ரீதியான அல்லது வர்த்தக உறவுகளிலிருந்து ஒதுங்கியிருக்கிறாரோ அத்தகைய நபருடன், அல்லது

இ) அவருடைய சட்டரீதியான உரிமைகளைப் பிரயோகிப்பதில் அத்தகைய இதர நபருடன் எந்தவகையிலேனும் தீங்கு செய்தாலோ, தொந்தரவு செய்தாலோ அல்லது தலையிட்டாலோ.

இதுவும் பின்வரும் ஷரத்துக்களும் 1922 ஆம் ஆண்டின் பர்மா பகிஷ்கரிப்பு எதிர்ப்பு சட்டத்திலிருந்து எடுக்கப்பட்டுப் பொருத்தமான ஒரு சில மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன.

## II. பகிஷ்கரிப்புக்கான தண்டனை

எந்த ஒரு நபரும் சட்டரீதியாகச் செல்வதற்கு உரிமை பெற்ற எந்த ஒரு செயலை செய்ததனாலும், அல்லது சட்ட ரீதியாக செய்யத்தவறுவதற்கு உரிமைபெற்ற எந்த ஒரு செயலையும் செய்யத் தவறியதனாலும் அல்லது சட்டரீதியாகச் செய்யக் கடமைப்பட்டிராத எந்த ஒரு செயலையும் செய்ய எந்த ஒரு நபரையும் தூண்டும் ஆவலுடன் அல்லது அவர் சட்டரீதியாகச் செய்வதற்கு உரிமையுள்ள எந்த ஒரு செயலையும் செய்யத் தவறுவதற்கும் அல்லது அத்தகைய நபரின் உடலுக்கு மனத்திற்கு, புகழுக்கு அல்லது உடமைக்கு, அல்லது அவருடைய வியாபாரத்தில் அல்லது வாழும் வகையில் தீங்கு விளைவிக்கும் எண் ணத்துடன் அத்தகைய நபரை அல்லது அத்தகைய நபரிடம் அக்கறை கொண்ட எந்த ஒரு நபரையும் பகிஷ்கரிப்பது சிறைத்தண்டனைக் குரியதாகும். இரு விளக் கங்களின்படியும் அது ஏழாண்டு சிறைத்தண்டனையாகவோ அல்லது அபராதமாகவோ அல்லது இரண்டும் சேர்ந்தோ இருக்கும்.

குற்றம்சாட்டப்பட்ட நபர் யாருடைய தூண்டுதலின் பேரிலும் செயல்படவில்லை அல்லது வேறொரு நபருடன் சேர்ந்து கூட்டாக இக்குற்றத்தைப் புரியவில்லை அல்லது எந்த ஒரு சதித்திட்டத்தையும் தொடர்ந்து இது நடைபெறவில்லை அல்லது எந்தஒரு உடன்படிக்கையின் பேரில் அல்லது கூட்டாக பகிஷ்கரிப்பு நடத்தப்படவில்லை என்பதில் நீதிமன்றம் திருப்தியடையுமானால் இப்பிரிவின்கீழ் எந்த ஒரு குற்றமும் நடைபெற்றதாகக் கருதப்படமாட்டாது.

## III. பகிஷ்கரிப்பைத் தூண்டுவதற்கு அல்லது ஊக்குவிப்பதற்கான தண்டனை

அ) யாரொருவர் ஒரு பிரேரணையை பகிரங்கமாக செய்கிறாரோ அல்லது பிரசுரிக்கிறாரோ அல்லது சுற்றுக்கு விடுகிறாரோ, அல்லது

ஆ) வேண்டுமென்றே எந்த ஒரு அறிக்கை, வதந்தி அல்லது செய்தியை தயாரித்து, பிரசுரித்து அல்லது சுற்றுக்கு விடுகிறாரோ அல்லது அவ்வாறு நடைபெறுவதற்கான வாய்ப்பு இருப்பதாகக் கருதுவதற்குக் காரணத்தைச் செய்கிறாரோ, ஏற்படுத்துகிறாரோ அல்லது

இ) வேறு எந்த வகையிலேனும் எந்த ஒரு நபரை யும் அல்லது நபர்களின் வர்க்கத்தையும் தூண்டிவிடு கிறாரோ அல்லது ஊக்குக்கிறாரோ அவர் ஐந்தாண்டுகள் வரையிலான சிறைத்தண்டனையைப் பெறுவார் அல்லது அபராதத்தைச் செலுத்துவார் அல்லது இரண்டையும் அனுபவிப்பார்.

விளக்கம்: இங்கு குறிப்பிட்ட தன்மை கொண்ட எந்த ஒரு செயலினாலும் ஒரு நபர் பாதிக்கப்பட்டாலோ அல்லது பாதிப்புக்கு உள்ளாகக்கூடிய வாய்ப்பு இருந்தாலோ இப்பிரிவின் கீழ் ஒரு குற்றம் புரியப்பட்டதாகக் கருதப் படும். அந்த நபரின் பெயரோ அல்லது வர்க்கமோ குறிப் பிடப்பட மாட்டாது. ஆனால் அவருடைய செயல் அல்லது ஏதேனும் குறிப்பிடப்பட்ட விதத்தில் செயல்படுத்துவதி லிருந்து ஒதுங்கியிருத்தலே குறிப்பிடப்படும்.

## IV. பகிஷ்காரம் செய்வதாக அச்சுறுத்துவதற்கு தண்டனை

எந்த ஒரு நபரும் தாம் சட்டரீதியாகச் செய்ய உரிமை பெற்றுள்ள எந்த ஒரு செயலையும் செய்ததன் விளைவாக அல்லது தாம் செய்யத் தவறுவதற்குச் சட்டரீதியாக உரிமை பெற்றுள்ள எந்தஒரு செயலையும் செய்யத் தவறியதற்காக அல்லது தாம் சட்டப் படி செய்யக் கடமைப்பட்டிராத எந்த ஒரு செயலையும் செய்வதற்கு எந்த நபரையும் தூண்டும் எண்ணத்துடன் அல்லது தாம் சட்டப் படி செய்ய உரிமையுள்ள எந்தச் செயலையும் செய்யத் தவறுவதற் காக அத்தகைய நபரை அல்லது அத்தகைய நபரின் மீது அக்கறை கொண்ட எந்த ஒரு நபரையும் பகிஷ்கரிப்பு செய்வதாக அச்சுறுத் துவது ஐந்தாண்டுகள் நீடிக்கக்கூடிய சிறைத்தண்டனை அல்லது அபராதம் அல்லது இரண்டுக்கும் உரியதாகும்.

விதிவிலக்கு: பின்வருபவை பகிஷ்கரிப்பு அல்ல

i. நியாயமான தொழிலாளர் பிரச்சினையைத் தொடர்ந்து செய்யப்படும் எந்த ஒரு செயலும்

ii. வியாபாரப் போட்டியின்போது செய்யப்படும் எந்த ஒரு செயலும்.

குறிப்பு: இக்குற்றங்களனைத்தும் வழக்குரிமைக்குட்பட்ட குற்றங்களாகக் கருதப்படும்.

நிபந்தனை எண் - III

## வேறுபடுத்திக் காட்டுவதற்கு எதிரான பாதுகாப்பு

வருங்காலத்தில் இயற்றப்படக்கூடிய சட்டம் அல்லது பிறப்பிக்கப்படக்கூடிய நிர்வாக உத்தரவின் மூலம் பாகுபாடு காட்டப் படுவோமோ என்ற அச்சத்தை தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் கொண்டிருக்கின்றனர். ஆகவே தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கெதிராக வேறுபாடு தெரியச் செய்யும்விதத்தில் பாகுபடுத்தும் அதிகாரத்தை சட்டமன்றத்துக்கோ அல்லது நிர்வாகத்துக்கோ சாத்தியமில்லை என்று சட்டம் கூறாதவரையில் பெரும்பான்மை ஆட்சிக்கு தங்களை உட்படுத்திக் கொள்ள அவர்களால் முடியாது.

ஆகவே, இந்தியாவின் அரசியல் சட்டரீதியான சட்டத்தில் பின்வரும் சட்டமுறையான ஷரத்துக்கள் சேர்க்கப் பட வேண்டும் என்ற பிரேரணை செய்யப்படுகிறது:

"இந்தியாவின் டொமினியனின் அதிகார எல்லைக்கு உட்பட்ட எல்லாப் பிரதேசங்களிலும் தீண்டப்படாமை என்ற எந்த ஒரு முந்தைய நிபந்தனையையும் பொருட் படுத்தாமல் நாட்டின் பிரஜைகளின் உரிமைகளை அத்து மீறும் விதமாக இந்தியாவிலுள்ள எந்த ஒரு சட்ட மன்றமோ அல்லது நிர்வாகமோ ஒரு சட்டத்தை இயற் றவோ அல்லது ஓர் உத்தரவைப் பிறப்பிக்கவோ, விதி

அல்லது ஒழுங்குமுறையை ஏற்படுத்தவோ தகுதி பெற்ற தாகாது.

1) ஒப்பந்தங்களைச் செய்து நடைமுறைப்படுத் தவோ, வழக்குத் தொடரவோ, உடந்தையாக இருக் கவோ, சாட்சியம் கூறவோ, மரபுரிமையாகப் பெறவோ, வாங்கவோ, குத்தகைக்கு விடவோ, விற்கவோ, நிலம் அல்லது தனிப்பட்ட உடைமைகளைக் கையகப்படுத் தவோ அல்லது மாற்றிக் கொடுக்கவோ,

2) சிவில் மற்றும் ராணுவப்பணியில் நுழைவதற் கான தகுதியைப் பெறவும், நாட்டின் எல்லா வர்க்கங் களையும் சேர்ந்த பிரஜைகளின் உரிய, போதுமான பிரதி நிதித்துவத்தை வழங்குவதற்குத் தேவைப்படக்கூடிய விதத்தில் அத்தகைய நிபந்தனைகள் மற்றும் வரையறை களைத் தவிர எல்லாக் கல்வி நிறுவனங்களிலும் சேரு வதற்கான தகுதியைப் பெறவும்,

3) ஒவ்வொரு இனம், வர்க்கம், ஜாதி, நிறம் அல்லது சமயத்தைச் சேர்ந்த அனைத்துப் பிரஜைகளுக்கும் ஒரே மாதிரியாகப் பிரயோகிக்கப்படுத்தக்கூடிய அத்தகைய நிபந்தனைகள் மற்றும் வரையறைகளைத் தவிர, தங்கு மிடங்கள், அனுகூலங்கள், வசதிகள், கல்வி நிறுவனங் கள், சாலையோர விடுதிகளில் சலுகைகள், நதிகள், நீரோடைகள், கிணறுகள், குளங்கள், சாலைகள், பாதை கள், தியேட்டர்கள், பொதுவான பொழுதுபோக்குமிடங் கள் ஆகியவற்றை முழுமையாகவும் சமஅளவிலும் அனுபவிப்பதற்கான உரிமை பெற்றிருத்தல்,

4) பொதுமக்களுக்காகவும் அல்லது ஒரே நம்பிக்கை மற்றும் மதத்தைக் கொண்டிருக்கும் நபர்களுக்காகவும் அர்ப்பணிக்கப்பட்ட அல்லது உருவாக்கப்பட்ட, பரா மரிக்கப்படும் அல்லது உரிமம் வழங்கப்பட்ட எந்த ஒரு மதம்சார்ந்த அல்லது தரும ஸ்தாபனத்தின் அனுகூலங் களைப் பாகுபாடின்றிப் பகிர்ந்துகொள்ளவல்ல, தகுதி யுடையவர் என்று கருதப்படுதல்.

5) ஏனையோருக்கு இல்லாத எத்தகைய தண்டனைக்கும் அபராதத்துக்கும் தீண்டாமை காரணமாக உட்படாதிருத்தல், இதர பிரஜைகள் அனுபவிப்பது போன்று, தனி நபர் மற்றும் ஆஸ்தியின் பந்தோ பஸ்துக்கான எல்லா சட்டங்கள் மற்றும் நடைமுறைகளின் முழுமையான மற்றும் சமமான பயன்களைக் கோரிப் பெறுதல்.

நிபந்தனை எண். IV

## சட்டமன்றங்களில் போதுமான பிரதிநிதித்துவம்

தங்களது வளவாழ்வை எய்தும் காரணத்திற்காக சட்டமன்ற மற்றும், நிர்வாக செயல்பாடுகளில் செல்வாக்குச் செலுத்துவதற்குப் போதுமான அரசியல் அதிகாரத்தைத் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கு வழங்க வேண்டும். இதைக் கருத்தில் கொண்டு அவர்கள் தேர்தல் சட்டத்தில் பின்வரும் ஷரத்துக்கள் சேர்க்கப்பட வேண்டுமென்று கோருகின்றனர். அப்போதுதான் அவர்களுக்குப் பின்வரும் உரிமைகள் கிட்டும்:

1. நாட்டின் மாகாண மற்றும் மத்திய சட்டமன்றங்களில் போதுமான பிரதிநிதித்துவம் பெறுவதற்கான உரிமை.

2. (அ) வயது வந்தோருக்கு வாக்குரிமை மூலமும், (ஆ) முதல் பத்தாண்டுகளில் தனித் தொகுதிகள் மூலமும் அதன் பின்னர் இட ஒதுக்கீட்டுடன் கூடிய கூட்டுத் தொகுதிகள் மூலமும் தங்கள் சொந்த நபர்களைத் தங்களது பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமை.

வயது வந்தோர் வாக்குரிமை இல்லாத கூட்டுத் தொகுதிகளை தாழ்த்தப்பட்டோர் மீது அவர்களது விருப்பத்திற்கு மாறாக திணிக்கலாகாது.

*பின்குறிப்பு:* இதர வகுப்பினருக்கு அனுமதிக்கப்படும் பிரதிநிதித்துவத்தின் அளவு தெரியவரும்வரை, தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கான போதிய பிரதிநிதித்துவத்தை அளவுசார்ந்த விகிதத்தில் விளக்க முடியாது. தங்களுக்கு அனுமதிக்கப்படுவதை விட எந்தஒரு வகுப்பினருக்கும் விசேட விகிதங்களில் தீர்வு காணப்படும் பிரதிநிதித்துவத்திற்கு தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் சம்மதிக்கமாட்டார்கள் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இந்த விஷயத்தில் ஒரு பாதகமான நிலையில் வைக்கப்பட அவர்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். எப்படியாகினும் பம்பாய் மற்றும் மதராசின் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கு உரிய மதிப்பளிக்கப்படவேண்டும். மாகாணங்களில் இதர சிறுபான்மையினருக்கு அனுமதிக்கப்பட்டுள்ள பிரதிநிதித்துவத்தின் அளவைப் பொருட்படுத்தாது இது செய்யப்பட வேண்டும்.

## நிபந்தனை எண். V

## அரசுப் பணிகளில் போதுமான பிரதிநிதித்துவம்

சட்டத்தைத் தவறாகப் பயன்படுத்தி அல்லது தங்கள் வசம் ஒப்படைக்கப்பட்ட தனி அதிகாரங்களைத் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கு எதிராகத் தவறாகப் பயன்படுத்தி, நீதி, நேர்மை, நல்ல மனசாட்சி ஆகியவற்றுக்குச் சற்றும் மதிப்பளிக்காமல் ஜாதி இந்துக்களுக்கு சாதகமாக அரசுப் பணிகளைத் தங்களது ஏகபோகமாக்கிக் கொண்டுள்ள உயர்ஜாதி அதிகாரிகளின் கரங்களில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் பெரும் இன்னலை அனுபவித்து வந்துள்ளனர். அரசுப் பணிகளில் ஜாதி இந்துக்களின் ஏகபோகத்தை ஒழிப்பதன் மூலமும் அப்பணிகளில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் உள்ளிட்ட அனைத்து வகுப்பினருக்கும் போதுமான பங்கு கிடைக்கும் விதத்தில் அரசுப் பணிகளுக்கான தேர்வை முறைப்படுத்துவதன் மூலமும்தான் இத் தீங்கு தவிர்க்கப்படமுடியும். இதற்காக அரசியலமைப்பின் ஒரு பகுதியாக சட்டமாக இயற்றப்படுவதற்கு தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் பின்வரும் பிரேரணைகளைச் செய்ய வேண்டியுள்ளது:

1) இந்தியாவிலும் இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மாகாணத்திலும் பொதுசேவைகளுக்கு ஊழியர்களைத் தேர்வு செய்யவும் கட்டுப்படுத்தவுமான பொறுப்பை மேற்கொள்வதற்கு அரசுப் பணியாளர் தேர்வாணையம் ஒன்று நிறுவப்படும்.

2) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் எந்த ஒரு உறுப்பினரும் சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட ஒரு தீர்மானத்தின் மூலம் தவிர வேறு எந்தவகையிலும் பணிநீக்கம் செய்யப்படமாட்டார். அதேபோன்று அவரது பணிஓய்வுக்குப் பின்னர் அரசாங்கத்தில் வேறு எந்தப் பதவிக்கும் அவர் நியமிக்கப்பட மாட்டார்.

3) வகுத்தளிக்கப்படும் திறமை சோதனைகளுக்கு உட்பட்டு அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் கடமை வருமாறு:

அ) எல்லா வகுப்பினரையும் பிரதிநிதித்துவப் படுத்தும் விதத்தில் உரியமுறையில் பொதுப்பணிக்கு ஆட்களை சேர்த்தல், மற்றும்

ஆ. எந்த ஒரு குறிப்பிட்ட பணி சம்பந்தமாகவும் பல்வேறு வகுப்பினரின் பிரதிநிதித்துவத்தில் இப்போதுள்ள அளவுக்கேற்ப வேலைவாய்ப்பில் அவ்வப்போது முன்னுரிமையை முறைப்படுத்தல்.

### நிபந்தனை எண். VI

## ஊறு விளைவிக்கத்தக்க செயல்பாடுகள் அல்லது நலன்களை அசட்டை செய்தலுக்கெதிரான பரிகாரம்

வருங்காலத்தில் பெரும்பான்மை ஆட்சியானது ஆசார மானவர்களின் ஆட்சியாக இருக்கும் என்ற உண்மையைக் கருத்தில் கொண்டு அத்தகையதொரு பெரும்பான்மை ஆட்சி தங்களிடம் பரிவுடன் நடந்து கொள்ளாது என்றும் தங்களுடைய நலன்களுக்கு

ஊறுவிளைவிக்கக் கூடிய சாத்தியக்கூறுகள் இருப்பதாகவும் தங்களுடைய ஜீவாதாரத் தேவைகள் அசட்டை செய்யப்படக் கூடிய வாய்ப்பு உள்ளதையும் கவனத்தில் கொள்ளாதிருக்க முடியாது என்று தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் அஞ்சுகின்றனர். இதற்கு எதிராக வகை செய்யப்பட வேண்டும், ஏனெனில் குறிப்பாக, எவ்வளவுதான் போதுமான அளவுக்குப் பிரதிநிதித்துவம் பெற்றிருந்தாலும்கூட, எல்லா சட்டமன்றங்களிலும் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் சிறுபான்மையினராகவே இருப்பர். அரசியல் சட்டத்தில் தங்களுக்கு வழங்கப்பட்டுள்ள குறைகள் தீர்க்கும் வழிமுறைகளைத் தாங்கள் பெறவேண்டியது மிகவும் அவசியம் என்று தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் கருதுகின்றனர். ஆகவே இந்தியாவின் அரசியலமைப்பு சட்டத்தில் பின்வரும் ஷரத்து சேர்க்கப்பட வேண்டும் என்று பிரேரணை செய்யப்படுகிறது:

''1. ஒவ்வொரு மாகாணத்திலும் மாகாணத்திற்காகவும், இந்தியாவிலும் இந்தியாவிற்காகவும் சட்டத்தினால் ஏற்படுத்தப்பட்ட சட்டமன்றம் மற்றும் நிர்வாக அமைப்பு அல்லது எந்த ஒரு அதிகார அமைப்பும், தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் கல்வி, சுகாதார ஏற்பாடுகள், அரசுப் பணிகளுக்குத் தேர்வு செய்தல், மற்றும் அவர்களின் சமூக, அரசியல் முன்னேற்றம் சம்பந்தப்பட்ட இதர விஷயங்களுக்குப் போதுமான ஏற்பாடுகளைச் செய்வது அவற்றின் கடமையும் கடப்பாடாகவும் இருக்கும். அவர்களை ஒருதலைப்பட்சமாகப் பாதிக்கும் எதையும் செய்யக்கூடாது.

பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டம் 1867, பிரிவு 93.

''2. எந்த ஒரு மாகாணத்திலும் அல்லது இந்தியாவிலும் இந்தப் பிரிவின் ஷரத்துக்கள் மீறப்படும் இடங்களில், எந்த ஒரு மாகாண அதிகார அமைப்பின் எந்த ஒரு செயல் அல்லது முடிவை எதிர்த்து கவுன்சிலிலுள்ள கவர்னர்-ஜெனரலுக்கு முறையீடு செய்யலாம். இந்த விஷயத்தைப் பாதிக்கக் கூடிய ஒரு பொதுவான அதிகார அமைப்பின் எந்தஒரு செயல் அல்லது முடிவையும் எதிர்த்து வெளியுறவுத்துறைச் செயலருக்கு முறையீடு செய்யலாம்.

"3. இத்தகைய ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் கவுன்சிலில் உள்ள கவர்னர் ஜெனரலுக்கோ அல்லது அயல் துறைச் செயலருக்கோ, மாகாண அதிகார அமைப்போ அல்லது மத்திய அதிகார அமைப்போ, இப்பிரிவின் ஷரத்துக்களை உரிய முறையில் பிரயோகிப்பதற்குத் தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்ளவில்லை என்று தோன்றினால் அப்போது இத்தகைய ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அந்தந்த சந்தர்ப்பத்திற்குத் தேவைப் படும் சூழ்நிலைகளைப் பொறுத்து மட்டுமே கவுன்சிலில் உள்ள கவர்னர் ஜெனரல் அல்லது அயல்துறைச் செயலாளர் ஒரு மேல் முறையீடு உரிமை பெற்ற அதிகார அமைப்பாகச் செயல்பட்டு, அவர்கள் தகுதியானது என்று கருதும் முறையில் பிரயோகிப்பதற்கான பரிகார நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல். எந்த அதிகார அமைப்பிற்கு எதிராக முறையீடு செய்யப்பட்டதோ அதன்மீது அவர்களது முடிவு கட்டுப்படுத்துவதாக இருக்குமாறு கட்டளையிட முடியும்."

நிபந்தனை எண். VII

## துறைசார்ந்த சிறப்பு அக்கறை

தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் ஆதரவற்ற, நலக்கேடான, சத்தற்ற நிலைமைக்கு அந்தஸ்தில் சமத்துவத்தையோ அல்லது நடத்தப்படுவதில் சமத்துவத்தையோ கொண் டிருக்க தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரை அனுமதியாத ஒட்டுமொத்த ஆசாரமான மக்களின் விடாப்பிடியான எதிர்ப்பே காரணமாகும். அவர்களது பொருளாதார நிலைமையைப் பற்றிய வரையில், அவர்கள் ஏழ்மையில் வாடுகின்றனர் அல்லது அவர்கள் நிலமற்ற கூலித் தொழிலாளர் வர்க்கத்தினர் என்று மட்டும் கூறுவது போதாது. ஆனால் அவர்களைப் பற்றிய இந்த இரு கருத்துக்களுமே உண்மையானவை. தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் ஏழ்மைக்கு முக்கியக் காரணம் சமூக ரீதியில் அவர்களைப் பற்றிய தவறான எண்ணங்களேயாகும். பொருளீட்டுதற்கான பல தொழில்கள் அவர்களுக்குக் கிடைக்காமல் போகின்றன. இந்த உண்மைதான் சாதாரண ஜாதி இந்துத் தொழிலாளியிடமிருந்து தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரை வேறுபடுத்திக் காட்டுகிறது. இதுவே

அடிக்கடி இந்த இரு பிரிவாருக்கும் இடையில் குழப்பங்களுக்கும் மூலகாரணமாகி விடுகிறது. தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கெதி ராகக் கடைப்பிடிக்கப்படும் கொடுமைகளின், அடக்குமுறையின் வடிவங்கள் மிகவும் பலதரப்பட்டவை என்பதையும் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளும் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் ஆற்றல் மிகவும் குறைவு என்பதையும் மனதில் கொள்ள வேண்டும். இது தொடர்பாக நமக்குக் கிடைக்கும் புள்ளிவிபரங்கள், இந்தியா வெங்கிலும் இவை சாதாரணமாக நடக்கக்கூடியவையேயாகும் என்பதைக் காட்டுகின்றன. அவை 1892 நவம்பர் 5 ஆம் தேதியிட்ட மதராஸ் அரசாங்கத்தின் வருவாய் வாரியத்தின் நடவடிக்கைக் குறிப்பு களின் சுருக்கம் எண்.723 இல் நன்கு விவரிக்கப்படுகின்றன. அதி லிருந்து எடுக்கப்பட்ட ஒரு பகுதி வருமாறு:

"134. இதுவரை சுட்டிக்காட்டப்பட்டவை அடக்கு முறையின் ஒரு சில வடிவங்கள் மட்டுமேயாகும். அவற்றை மேலோட்ட மாகவேணும் குறிப்பிட்டாக வேண்டும். கீழ்சாதிக்காரர்களின் கீழ்ப்படியாமையைத் தண்டிப்பதற்காக அவர்களது எஜமானர்கள் -

அ) கிராம நீதிமன்றங்கள் அல்லது குற்றவியல் நீதிமன்றங் களில் பொய்வழக்குத் தொடருதல்.

ஆ) பறையர்களின் கால்நடைகள் வெளியே போகாதவாறு பார்த்துக்கொள்ளவும், அவர்கள் கோயிலுக்குச் செல்லும் வழியில் தடை ஏற்படுத்தவும் பறைச்சேரியைச் சுற்றிலும் உள்ள அரசாங்கப் புறம்போக்கு நிலங்களை அரசாங்கத்திற்கு விண்ணப்பித்துப் பெற்று விடுதல்.

இ) பறைச்சேரிக்கு எதிராக அரசாங்கக் கணக்கில் ஏமாற்றுத் தனமாக மிராசி பெயர்களைப் பதிவு செய்தல்.

ஈ) குடிசைகளைத் தரைமட்டமாக்கி பின்கட்டில் உள்ள செடி கொடிகளை அழித்தல்.

உ) நினைவுக்கெட்டாத காலந்தொட்டே உள் குத்தகை தாரராக உள்ளவர்களுக்கு குடியிருப்பு உரிமையை மறுத்தல்,

ஊ) பறையர்களின் பயிர்களை வலுக்கட்டாயமாக அறு வடை செய்தல், எதிர்த்தால் அவர்கள்மீது திருட்டுக் குற்றமும் கலக மும் செய்ததாகக் குற்றம் சுமத்துதல்.

எ) பொய்யான தகவல்களைக் கொடுத்து அவர்களைப் பத்திரங்களில் கையெழுத்திடச் செய்து அவர்களைப் பின்னர் அழித்து விடல்.

ஏ) தங்களுடைய வயல்களிலிருந்து நீர் செல்வதைத் துண்டித்துவிடல்.

ஐ) நிலச் சொந்தக்காரருக்குத் தரவேண்டிய பாக்கித் தொகைக்காக சட்டரீதியான தாக்கீது ஏதுமின்றி கீழ்க் குடிதாரர் களின் சொத்துக்களை ஜப்தி செய்தல்.

''135. இத்தகைய கொடுமைகளுக்குப் பரிகாரம் காண்பதற்கு சிவில் மற்றும் குற்றவியல் நீதிமன்றங்கள் உள்ளன என்று கூறப் படலாம். நீதிமன்றங்கள் இருப்பது உண்மைதான். ஆனால் முதலாம் சார்லஸ் மன்னரை எதிர்த்து காமன்ஸ் சபையின் உரிமைகளை ஆத ரித்த ஜான் ஹேம்டனைப் போன்றவர்கள் இல்லை. நீதிமன்றங் களுக்குச் செல்ல ஒருவருக்குத் துணிவு இருக்க வேண்டும். வழக் கறிஞர்களை அமர்த்திக் கொள்ளப் பணம் இருக்கவேண்டும்; நீதி மன்றச் செலவினங்களைச் சமாளிக்க வேண்டும். வழக்கின்போதும் மேல்முறையீடுகளின்போதும் வாழவழிவகைகள் இருக்க வேண் டும். மேலும் பெரும்பாலான வழக்குகள் முதல் நீதிமன்றத்தின் முடிவுகளைப் பொறுத்தே உள்ளன; இந்த நீதிமன்றங்களில் தலைமை வகிக்கும் நீதிபதிகள் சில சமயங்களில் ஊழல் செய்யும் அதிகாரி களாக உள்ளனர். அவர்கள் பொதுவாக, இதர காரணங்களுக்காகத் தாங்கள் சார்ந்திருக்கும் பணம் படைத்த நிலப்பிரபுத்துவ வர்க்கத்தின ராக இருப்பதால் அவர்களுக்குப் பரிவு காட்டுகின்றனர்.

''136. அதிகாரவர்க்கத்துடனான இந்த வர்க்கத்தினரின் செல் வாக்கை மிகைப்படுத்தமுடியாது. இந்திய நாட்டவரிடம் இவர் களது செல்வாக்கு மிக மிக அதிகமானது. ஐரோப்பியர்களுடன் இன் னும் அதிக அளவில் உள்ளது. மிக உயர்ந்த பதவியிலிருந்து மிகக் குறைந்த பதவிவரை இந்த வர்க்கத்தினரின் பிரதிநிதிகளே அதிகமாக உள்ளனர். தங்களது நலன்களைப் பாதிக்கக்கூடிய எந்த ஒரு பிரே ரணையும் இல்லாவிடினும்கூட அப்பிரேரணையின் தொடக்கம் முதல் அது செயல்படுத்தப்படும் வரை அவர்களால் பெருமளவுக்குச் செல்வாக்குச் செலுத்த முடியும்.''

இத்தகைய சூழ்நிலைகளைக் கருத்தில் கொண்டு பார்க்கும் போது அரசாங்கத்தின் அனைத்து நடவடிக்கைகளின் முன்னணியில் இக்கடமை முன்வைக்கப்படாவிடில், வாய்ப்புக்களில் சமத்துவத்தை அரசாங்கத்தின் தரப்பிலிருந்து நிச்சயமான கொள்கை மற்றும் தீர்மானகரமான முயற்சியின் மூலம் நடைமுறையில் நனவாக்காவிடில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் மேம்பாடு என்பது வெறும் கனவாக மட்டுமே இருக்கும் என்பதில் ஐயமேதும் இருக்க முடியாது. இந்த இலக்கை எய்துவதற்காகத் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் பிரேரணை என்னவெனில், இந்திய அரசாங்கச் சட்டத்தில் ஒரு பிரிவைச் சேர்ப்பதன் மூலம் தங்களது பிரச்சினைகளைக் கவனிக்க ஒரு துறையை என்றென்றைக்குமாக பராமரிக்க வேண்டியதன் அரசியல் சட்டரீதியான கடப்பாடாக இந்தியாவின் அரசாங்கத்தின் மீது அரசியல் சட்டரீதியான சட்டம் திணிக்க வேண்டும் என்பதேயாகும். அது பின்வருமாறு அமைந்திருக்கும்:

''1. இந்த அரசியல் சட்டம் அறிமுகப்படுத்தப்படுவதுடன் அதேசமயத்தில் அதன் ஓர் அங்கமாக, தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் நலன்களைக் கண்காணிக்கவும் அவர்களுடைய வளவாழ்வை ஊக்குவிக்கவுமான நோக்கத்திற்காக ஓர் அமைச்சரின் பொறுப்பில் ஒரு துறை இந்திய அரசாங்கத்தில் உருவாக்கப்பட வேண்டும்.

''2. மத்திய சட்டமன்றத்தின் நம்பிக்கையைப் பெற்றிருக்கும் காலம் வரை அந்த அமைச்சர் பதவியில் நீடிப்பார்.

''3. அவருக்கு சட்டத்தின் வாயிலாக வழங்கப்படும் எந்த ஒரு அதிகாரத்தையும் கடமைகளையும் பிரயோகிப்பதில், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு எதிரான சமூக அநீதி, கொடுமை அல்லது அடக்குமுறை சம்பந்தப்பட்ட செயல்களைத் தடுக்கக்கூடிய நடவடிக்கைகளைத் தயாரித்தளித்து பயனுறுதியுடன் செயல்படுத்தவும், ஒருங்கிணைக்கவும் தேவை என்று கருதப்படக்கூடிய எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள்வது அந்த அமைச்சரின் கடமையாக இருக்கும்.

''4. ''கவர்னர்-ஜெனரலுக்கு பின்கண்டவை சட்டரீதியானதாக இருக்கும்:

அ) கல்வி, சுகாதாரம் போன்றவை சம்பந்தப்பட்ட எந்த ஒரு சட்டமியற்றுதலையும் தொடர்ந்து எழக்கூடிய, தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் வளவாழ்வு சம்பந்தமாக அனைத்து அல்லது

எந்த அதிகாரங்கள் அல்லது கடமைகளை அமைச்சருக்கு மாற்றித் தருதல்.

ஆ) அமைச்சரின் அதிகாரத்தின் கீழ் அவருடைய ஒத்துழைப்புடன் செயல்படுத்துவதற்காக ஒவ்வொரு மாகாணத்திலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் வளவாழ்வு செயலகங்களை நியமித்தல்.

நிபந்தனை எண். VIII

## தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரும் அமைச்சரவையும்

சட்டமன்றங்களில் உறுப்பினர்களைப் பெற்றிருப்பதன் மூலம் அரசாங்க நடவடிக்கைகளில் செல்வாக்கைச் செலுத்துவதற்கு எப்படி தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் அதிகாரம் பெற்றிருப்பது அவசியமோ அதுபோல அரசாங்கத்தின் பொதுவான கொள்கையை வகுக்கும் வாய்ப்பையும் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் பெற்றிருப்பது விரும்பத் தக்கதாகும். அமைச்சரவையில் அவர்கள் இடம்பெற்றிருந்தால் மட்டுமே இதை அவர்களால் செய்யமுடியும். ஆகவே இதர சிறுபான்மையினருக்கு இணையாக அமைச்சரவையில் பிரதிநிதித்துவப்படுத்தப் படும் தங்களது தார்மீக உரிமைகள் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்று தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் கோருகின்றனர். இந்த நோக்கத்தைக் கருத்தில் கொண்டு தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் பிரேரணை **செய்வதாவது:**

தமது மந்திரிசபையில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் பிரதிநிதித்துவத்தைப் பெறமுயலுவதற்கு கவர்னர் மற்றும் கவர்னர் ஜெனரலின் மீது ஒரு கடப்பாடாக அறிவுறுத்தலின் ஒப்பந்தப் பத்திரத்தில் சேர்க்க வேண்டும்.

## II

தீண்டப்படாதவர்களின் இந்தக் கோரிக்கைகள் என்னவாயிற்று, சிறுபான்மையினர் கமிட்டியின் உறுப்பினர்கள் அவற்றை எவ்வாறு ஏற்றுக்கொண்டனர் என்பதை வட்டமேசை மாநாட்டுக்கு சிறுபான்மையினர் கமிட்டி வழங்கிய அறிக்கையைப் பரிசீலனை

செய்தால் புரிந்து கொள்ளலாம். அந்த அறிக்கையிலிருந்து சில பகுதிகளை இங்கு வழங்குகிறேன்.

"5. ஆகவே வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்திற்கும் தொகுதிகளின் நிர்ணயிக்கப்பட்ட வீதாசாரங்களுக்கும் ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும் என்று பல்வேறு கமிட்டிகளினால் கோரிக்கைகள் முன்வைக்கப்பட்டன. ஒரு சிறுபான்மை வகுப்பிற்கு ஒதுக்கப்படும் தனித்தொகுதிகளின் எண்ணிக்கையானது எந்த வகையிலும் மக்கள் தொகையில் அதன் வீதாசாரத்திற்குக் குறைவாக இருக்கக்கூடாது என்றும் வலியுறுத்தப்பட்டது. இதை எய்தக்கூடிய வழிமுறைகள் முக்கியமாக மூன்று ஆகும்: 1. நியமனம் 2. வாக்காளர் தொகுதிகள் மற்றும் 3. தனித் தொகுதிகள்.

"6. நியமனம் செய்வது ஒருமனதாக எதிர்க்கப்பட்டது.

"7. வகுப்புகளுக்குத் தொகுதிகளின் ஒரு வீதாசாரத்தை ஒதுக்குவது என்ற ஷரத்துடன் கூட்டுத் தொகுதிகள் பிரேரணை செய்யப்பட்டன. இவ்வாறு செய்வதன் மூலம் தேர்தல்களுக்குக் கூடுதல் ஜனநாயக வடிவத்தை வழங்க முடியும். அதேசமயம் தொகுதி முறையின் நோக்கமும் எய்தப் பெறும். இத்தகையதொரு தேர்தல் முறை சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவத்தைப் பெற்றுத்தரும் அதேசமயம் அப் பிரதிநிதித்துவம் உண்மையானதாக இருக்கும் என்ற உத்தர வாதத்தை அது வழங்கவில்லை. ஆனால் அது தனது செயல்பாட்டில் நியமனம் அல்லது பெரும்பான்மை வகுப்பினரால் சிறுபான்மை இனப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுவதை அர்த்தப் படுத்தக்கூடும் என்ற ஐயப்பாடுகளும் தெரிவிக்கப்பட்டன.

உண்மையில் இது ஒருவகையான வகுப்புவாரிப் பிரதிநிதித்துவமேயாகும் என்பதும் நடைமுறையில் வகுப்புவாரித் தொகுதிகளின் கூடுதல் நேரடி வடிவத்திற்கு எல்லாவிதமான ஆட்சேபனைகளையும் கொண்டிருந்தது என்றும் சுட்டிக்காட்டப்பட்டது.

"8. பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படக்கூடிய ஒரே ஒரு கோரிக்கை தனித் தொகுதிகளேயாகும் என்பதை விவாதம், உறுதிப் படுத்தியது. இத்திட்டத்திற்கான பொதுவான ஆட்சேபனைதான் முன்னதாக இந்தியாவில் பெரும் விவாதத்திற்குரிய விஷயமாக இருந்தது. தீர்வு காண்பதற்கு மிகவும் கடினமான பிரச்சினையை அது

உள்ளடக்கியிருந்தது. அதாவது பல்வேறு மாகாணங்களிலும் மத்தியிலும் வகுப்புவாரியாக ஒதுக்கீடு செய்யப்படுமானால், சுதந்திரமான அரசியல் கருத்தின் அல்லது உண்மையான அரசியல் கட்சிகளின் வளர்ச்சிக்கு இடமிருக்காது. மேலும் இப்பிரச்சினை இந்து மக்கள் தொகையிலிருந்து தாங்கள் கழிக்கப்பட்டு, தேர்தல் காரணங்களுக்காக ஒரு தனிப்பட்ட வகுப்பினராகத் தங்களைக் கருத வேண்டுமென்ற தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரது பிரதிநிதிகளின் கோரிக்கையினால் மிக மோசமான சிக்கலுக்குள்ளாகியது.

''9. வகுப்புவாரியாகத் தொகுதிகள் பிரிக்கப்படுவதற்கு எதிராகத் தோன்றியுள்ள மிகத் தெளிவான ஆட்சேபனைகளைச் சமாளிப்பதற்காக ஒரு பகுதி மட்டுமே - உதாரணமாக 80 அல்லது 90 சதவிகிதம் மட்டுமே - ஒதுக்கப்பட வேண்டும் என்றும், மீதமுள்ளவை பகிரங்கமான தேர்தல் மூலம் நிரப்பப்பட வேண்டும் என்றும் யோசனை வழங்கப்பட்டது. ஆயினும் இது தங்களுக்குத் தேவையான உத்தரவாதங்களை வழங்கும் என்று சில வகுப்பினரால் கருதப்படவில்லை.''

''10. உபகமிட்டியின் ஓர் உறுப்பினரான மவுலானா முகமது அலி பிரேரணை செய்த திட்டத்தின்படி - இவரது மரணத்திற்காக வருந்துகிறோம் - எந்த ஒரு வகுப்புவாரி வேட்பாளரும் கூடுமானவரை குறைந்தபட்சம் 40 சதவிகித வாக்குகளைப் பெறாவிடில் தேர்ந்தெடுக்கப்படக்கூடாது; இதர வகுப்பினரின் வாக்குகளும் கூட கருத்தில் கொள்ளப்பட வேண்டும். இத்தகையதொரு திட்டம் வகுப்புவாரிப் பதிவேடுகளைப் பராமரிப்பதை அவசியமாகும். ஆகவே தனி தொகுதிகளுக்கு எதிராக வலியுறுத்தப்பட்டது போன்ற ஆட்சேபனைகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது என்பதும் சுட்டிக்காட்டப்பட்டது.

''11. ஆண்களைப் போன்று அதே அடிப்படையில் தேர்தலுக்குத் தகுதியுடையவர்களாக இருக்கக்கூடிய பெண்களின் சார்பாக, தனித் தொகுதிகள் அல்லது கூட்டுத் தொகுதிகளில் வேட்பாளர்களின் ஒதுக்கீடுகளுக்கான எந்த ஒரு கோரிக்கையும் முன்வைக்கப்படவில்லை. ஆனால் அரசியல் வாழ்வில் பெண்கள் செயலூக்கமான பாத்திரத்தை வகிக்கும் கருத்தை பொதுமக்கள் மனத்தில் பிரபலப்படுத்துவதற்காகவும் சட்டமன்றத்தில் அவர்களுக்கு இடைக்காலப் பிரதிநிதித்துவத்தைப் பெறுவதற் காகவும் முதல்மூன்று கவுன்சில்களில் மொத்த இடங்களில் 5 சதவிகிதத்தைப் பெண்களுக்காக ஒதுக்க

வேண்டுமென்று வலியுறுத்தப் பட்டது. அவர்களது இடங்கள் வீதாசாரப் பிரதிநிதித்துவத்தின் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப் பினர்களின் வாக்குகளைக்கொண்டு நியமனம் மூலம் நிரப்பப்பட வேண்டும் என்று யோசனை கூறப்பட்டது.

''12. புதிய அரசியல் சட்டம் வெற்றிகரமாகச் செயல்படு வதற்கு மாகாண நிர்வாக அமைப்பில் முக்கியமான சிறுபான்மை வகுப்பினர் பிரதிநிதித்துவம் பெறுவது மகத்தான நடைமுறை முக்கியத்துவமுடைய விஷயமாகும் என்ற உபகமிட்டியின் பரிந்துரை எண் II (மாகாண அரசியல் சட்டம்) மீது ஒரு பொதுவான உடன்பாடு நிலவியது. மேலும் இதே அடிப்படையில் மத்திய நிர்வாக அமைப்பு களில் தனியாகவோ அல்லது கூட்டாகவோ தங்களது பிரதிநிதித் துவத்திற்காக சிறிய சிறுபான்மை இனத்தவரின் சார்பாக ஒரு கோரிக்கை முன்வைக்கப்பட்டது, அல்லது இது சாத்தியமில்லை என்று காணப்பட்டால், ஒவ்வொரு மந்திரிசபையிலும் சிறுபான்மை யினரின் நலன்களைப் பாதுகாக்கும் சிறப்பான கடமையைப் பெற்ற அமைச்சர் இடம்பெற வேண்டும் என்றும் கோரப்பட்டது.''

(ஆறாவது வரியில் வரும் முகம்மதியர்கள் என்ற சொல் லுக்கு பின்னால் டாக்டர் அம்பேத்கரும் சர்தார் உஜ்ஜல் சிங்கும் ''இதர முக்கிய சிறுபான்மையினர்'' என்ற சொற்களைச் சேர்த்தனர்.)

இதுபோன்ற ஒரு திட்டத்தின் கீழ் கூட்டுப் பொறுப்பேற்கும் நிர்வாகிகளின் செயல்பாடுகளில் உள்ள சிரமங்கள் சுட்டிக்காட்டப் பட்டன.

''13. நிர்வாகத்தைப் பொறுத்தவரை, மாகாண மற்றும் மத்திய அரசுப் பணிகளுக்கான தேர்வைச் செய்யும் பொறுப்பு அரசுப் பணித் தேர்வாணைக் குழுக்களிடம் ஒப்படைப்பது என்று ஒப்புக் கொள்ளப்பட்டது. திறமையின் உகந்த தரத்தைப் பராமரிக்க வகை செய்யும் அதேசமயம் பொதுப்பணிகளில் நேர்மையான, போதுமான பிரதிநிதித்துவம் வேண்டுமென்ற பல்வேறு வகுப்பினரின் கோரிக்கை களுக்கும் இணக்கமாக நடந்துகொள்ளுமாறு அதற்கு அறிவுறுத்தப் பட்டது.

''16. உடன்பாட்டிற்கான எந்த ஒரு வாய்ப்பையும் கொண்டு பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு தேர்தல் கோட்பாட்டை வகுப்புகளின் மீது திணிக்கமுடியாது என்பது தெளிவுப்படுத்தப் பட்டுள்ளது. அதன்

ஏதேனும் சில அம்சங்கள் அவற்றின் எதிர்ப்புக்கு உள்ளாக நேரிடும். ஆகவே ஓர் உடன்பாடு ஏற்படாத பட்சத்தில் தனித் தொகுதிகள் அவற்றின் குறைபாடுகள் மற்றும் சிரமங்களுடன் புதிய அரசியல் சட்டத்தின் கீழ் தேர்தல் ஏற்பாடுகளின் அடிப்படையாகத் தக்க வைத்துக் கொள்ளப்படும் என்பது தெளிவாக இருந்தது. இதிலிருந்து வீதாசாரப் பிரச்சினை தோன்றும். இத்தகைய சூழ்நிலைகளில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் கோரிக்கைகள் போதுமான அள வுக்குப் பரிசீலிக்கப்பட வேண்டியிருக்கும்.

★ ★

''18. நியாயமான விதத்தில் தங்களுடைய கோரிக்கைகள் ஏற்றுக்கொள்ளப்படாதவரை இந்தியாவுக்கான எந்த ஒரு சுயாட்சி உரிமையுள்ள அரசியல் சட்டத்திற்கும் தங்களால் சம்மதமளிக்க முடியாது என்ற தங்களது அறுதியான முடிவில் சிறுபான்மையினரும் தீண்டப்படாத வர்க்கத்தினரும் உறுதியாக இருந்தனர்.''

மத்திய அரசாங்கத்தின் வடிவம் மற்றும் செயல்பாடுகளை விவாதிப்பதற்கான வட்டமேசை மாநாட்டினால் நியமிக்கப்பட்ட மற்றுமொரு கமிட்டியான சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டியானது, சமஷ்டி சட்டமன்றங்களின் இயைபு சம்பந்தமாக தீண்டப்படாத வர்களின் பிரச்சினையைப் பரிசீலிக்க வேண்டியிருந்தது. மாநாட் டுக்கு அது அளித்த அறிக்கையில் கூறியதாவது:

> ''சிறுபான்மையினரின் உபகமிட்டியினுடைய எந்த ஒரு அறிக்கையையும் பொறுத்து, சாத்தியமானால் இரு சபை களிலும் நிச்சயமாகக் கீழ்சபையில், குறிப்பிட்ட சிறப்பு நலன் களுக்கு அதாவது, தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர், இந்தியக் கிறிஸ்தவர்கள், ஐரோப்பியர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள், நிலப்பிரபுக்கள், வர்த்தகர்கள், தொழிலாளர்கள் ஆகியோரின் பிரதிநிதித்துவதிற்கான ஷரத்து சேர்க்கப்படவேண்டும் என்று ஒருமித்த கருத்து நிலவியது.''

## III

வட்டமேசை மாநாட்டின் முதலாவது கூட்டத்தொடர் நிறைவுறுவதற்கு முன்னதாக இரு கமிட்டிகளின் அறிக்கைகளும்

மாநாட்டின் முன்வைக்கப்பட்டு மாநாட்டினால் நிறைவேற்றப் பட்டன. விவரங்கள் குறித்து உடன்பாடு இல்லாதிருந்த போதிலும் கூட அரசியல் மற்றும் அரசியலமைப்புச் சட்டரீதியான காரணங் களுக்காகத் தீண்டப்படாதவர்கள் ஒரு தனிப்பட்ட இனமாக அங்கீ கரிக்கப்படும் உரிமை பெற்றவர்கள் என்று ஒரு மனதாக ஏற்றுக் கொள்ளப் பட்டது.

வட்டமேசை மாநாட்டின் முதலாவது கூட்டத்தொடர் நிறை வடைந்தபோது, வட்டமேசை மாநாட்டின் இந்த முடிவின்பால் தனது அணுகுமுறை என்ன என்பதே தெரியாமல் இருந்த இந்த நாட்டின் ஒரே கட்சி காங்கிரஸ்தான். இதற்கு காரணம் வட்ட மேசை மாநாட்டைக் காங்கிரஸ் பகிஷ்கரித்ததும், அரசாங்கத்திற் கெதிராக சிவில் கீழ்ப்படியாமை மேற்கொள்வதில் அதிக முனைப் புடன் இருந் ததுமேயாகும். வட்ட மேசை மாநாட்டின் இரண்டாவது கூட்டத் தொடர் நடைபெற வேண்டிய சமயம் வந்தபோது மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கத்திற்கும் காங்கிரசுக்கும் இடை யில் ஒரு சமரசம் ஏற்பட்டது. அதன் விளைவாக, அதில் கலந்து கொள் ளவும், மாநாடு எதிர்கொண்டிருக்கும் பல பிரச்சினைகளின் தீர்வுக்கு தனது பங்களிப்பைச் செய்யவும் காங்கிரஸ் ஒப்புக்கொண்டது. மாநாட்டின் முதலாவது கூட்டத்தொடரில் பிரதிநிதிகள் வெளிப் படுத்திய நல்ல மனோநிலை, மகிழ்ச்சிகரமான உறவு, விட்டுக் கொடுக்கும் உணர்வு ஆகியவற்றைக் கண்ட அனைவரும் ஒவ்வொரு கூட்டத்தொடரிலும் இதே நிலைமை நீடிக்கும் என்று நம்பினர். காங் கிரஸின் வருகையின் பயனாக ஓர் உடன்பாட்டை எய்துவதில் முன்னேற்றத்தின் விகிதம் அதிகமாக இருக்கும் என்று உண்மை யில் எதிர்பார்க்கப்பட்டது. முதல் வட்டமேசை மாநாட்டில் ஓர் உடன்பாடு காணப்படவில்லை எனில் அதற்குக் காரணம் காங்கிரஸ் அதில் கலந்து கொள்ளாததேயாகும் என்று காங்கிரசின் நண்பர்கள் கூறிவந்தனர்.

ஆகவே இம்முறை மாநாட்டை வெற்றியை நோக்கிக் காங் கிரஸ் இட்டுச் செல்லும் என்று அனைவரும் ஆவலுடன் எதிர்பார்த் தனர். துரதிருஷ்டவசமாகக் காங்கிரஸ் தனது பிரதிநிதியாகத் திரு. காந்தியைத் தேர்வு செய்தது. இந்தியாவின் வருங்காலத்தை வழி நடத்திச் செல்வதற்கு இவரைவிட மோசமான ஒருவர் தேர்வு செய்யப் பட்டிருக்க முடியாது. அனைவரையும் ஒன்று படுத்தும் சக்தி என்ற முறையில் அவர் ஒரு தோல்வியேயாவார். திரு.காந்தி தம்மைத் தன்னடக்கம் மிக்க ஒரு மனிதராகக் காட்டிக் கொள்கிறார். மாநாட்

டில் அவரது நடத்தையானது வெற்றிக்கான வாய்ப்புக்கள் பெருகி வரும்போது தம்மால் மிகவும் சிறிய மனம் படைத்தவராக இருக்க முடியும் என்பதை அவர் வெளிப்படுத்தினார். தாம் வருவதற்குச் சற்று முன்னர் அரசாங்கத்துடன் செய்து கொண்ட தமது வெற்றிகர மான சமரசத்தின் பயனாக, திரு. காந்தி காங்கிரஸ் அல்லாத பிரதி நிதிகள் அனைவரையும் வெறுப்புடன் நடத்தினார். ஏதேனும் ஒரு சாக்குப் போக்கு கிடைக்கும்போதெல்லாம் அவர்களிடம் அவர்கள் பயனற்றவர்கள் என்றும், காங்கிரசின் பிரதிநிதி என்றமுறையில் அவர் மட்டுமே நாட்டைப் பிரதிநிதித்துவப்படுத் துவதாகவும் கூறி அவர்களை அவமானப்படுத்தினார். இந்தியப் பிரதிநிதிக் குழுவை ஒன்றுபடுத்துவதற்குப் பதிலாக திரு. காந்தி பிளவை அதிகப்படுத் தினார். அறிவாற்றல் என்ற கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது திரு.காந்தி தம்மை அதிக விபரமற்றவராக நிரூபித்துக்கொண்டார். மாநாடு எதிர்நோக்கிய பல அரசியல் சட்டரீதியான, வகுப்புவாதப் பிரச்சினைகள் குறித்த விவாதத்தின் போது திரு.காந்தி பலமுறை பலரது வாதங்களைப் பாராட்டினார். ஆனால் அவர் ஆக்கப்பூர்வ மான தன்மை கொண்ட எந்தவித கருத்துக்களையோ அல்லது யோசனைகளையோ வழங்கவில்லை. அவர் ஒரு வினோதமான மனிதராகத் தம்மைக் காட்டிக்கொண்டார். தாம் ஒரு கோட்பா டென்று கருதுவது குறித்த எந்த ஒரு சமரசத்தையும் எல்லா வழி களிலும் எதிர்ப்பதாக சிலசமயங்களில் அச்சுறுத்துவார். அதேசமயம் மற்றவர்கள் அதை ஒரு தவறாகக் கருதினர். அடிப்படைக் கோட் பாடுகள் சம்பந்தப்பட்ட விஷயங்கள் குறித்து எந்த சமரசமும் செய்து கொள்ளக்கூடாது என்று அவர் உபதேசம் செய்தார். ஆனால் அதே சமயம் மற்றவர்களுக்குத் தோன்றக்கூடிய பிரச்சினைகள் குறித்து அவர் மிக மோசமான சமரசங்கள் செய்து கொள்வதைப் பற்றி சிறிதும் கவலைப்பட மாட்டார்.

வட்டமேசை மாநாட்டின் இரண்டாவது கூட்டத்தொடரில் தீண்டப்படாதவர்களின் கோரிக்கைளின்பால் திரு.காந்தி மேற்கொண் டிருந்த அணுகுமுறை அவருடைய மனப்பாங்கில் உள்ள இந்த விநோத மான குணத்தை மிகத் தெளிவாக எடுத்துரைக்கிறது. வட்டமேசை மாநாட்டின் இரண்டாவது கூட்டத் தொடருக்காகப் பிரதிநிதிகள் குழுமியிருந்தபோது சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டி முதல்முறை யாகக் கூடியது. 1931 செப்டம்பர் 15 அன்று சமஷ்டிக்கட்டமைப்புக் கமிட்டியில் ஆற்றிய தமது முதலாவது உரையிலேயே திரு. காந்தி தீண்டப்படாதவர்களின் பிரச்சினையைக் குறிப்பிட்டார். திரு. காந்தி கூறியதாவது:

''காங்கிரஸ் தொடக்கம் முதலே ''தீண்டப்படாதவர்களின்'' பிரச்சினை என்றழைக்கப்படும் லட்சியத்தை மேற்கொண்டிருந்தது. ஒவ்வொரு வருடாந்திரக் கூட்டத்தொடரிலும் காங்கிரஸ் தனது பிற்சேர்க்கையாக சமூக மாநாட்டையும் நடத்திய காலம் ஒன்றிருந்தது. அதற்குத் தமது இதர பல நடவடிக்கைகளுக்கு இடையேயும் ரானடே தமது ஆற்றல்களை முழுவதுமாக அர்ப்பணித்தார். அவரது தலைமையில் இயங்கிய சமூக மாநாட்டின் திட்டத்தில் தீண்டப்படாதவர்கள் தொடர்பான சீர்திருத்தம் முக்கிய இடத்தைப் பெற்றிருந்ததை நீங்கள் காணமுடியும். ஆனால் 1920ல் காங்கிரஸ் ஒரு பரந்த நடவடிக்கையை எடுத்தது. தனது அரசியல் நடவடிக்கைகளில் ஒரு முக்கிய அம்சமாக தீண்டப்படாமையை அகற்றும் பிரச்சினையைக் கொணர்ந்தது. தனது அரசியல் திட்டத்தில் ஒரு முக்கிய இனமாக அதை ஆக்கியது. சுயராஜ்யத்தை எய்துவதற்கு இன்றியமையாததென்று இந்து- முஸ்லீம் ஒற்றுமையை - அதன்மூலம் அனைத்து வர்க்கங்களிடையேயும் ஒற்றுமையை இது அர்த்தப்படுத்துகிறது - காங் கிரஸ் எவ்வாறு கருதுகிறதோ அதே போன்று தீண்டப் படாமை ஒழிக்கப்படுவதையும் காங்கிரஸ், முழுமையான சுதந்திரத்தை எய்துவதற்கான ஓர் இன்றியமையாத நிபந்தனையாகக் கருதிற்று. 1920ல் காங்கிரஸ் மேற்கொண்ட நிலைப்பாடு இன்றளவுக்கும் மாறாது இருக்கிறது; ஆகவே ஆரம்பம் முதல் காங்கிரஸ் தன்னை விவரித்துக் கொண்டிருப்பதுபோன்று அதாவது தேசியம் என்ற சொல்லின் உண்மையான அர்த்தத்திற்கேற்ப நடந்து கொண்டிருப்பதை நீங்கள் காணமுடியும்.''

பர்டோலி திட்டத்தில் சேர்க்கப்பட்டபடி தீண்டப்படாதவர்களின் மேம்பாட்டிற்கான 1922 ஆம் ஆண்டுத் திட்டத்தை நிறைவேற்ற காங்கிரஸ் எவ்வாறு தவறியது, அப் பிரச்சினையை இந்துமகா சபையிடம் எவ்வாறு அது ஒப்படைத்தது என்பதை நன்கு தெரிந்து வைத்திருக்கும் எவரும் திரு.காந்தி கூறுவது உண்மையல்ல என்று கூறத் தயங்கமாட்டார். தீண்டப்படாதவர்கள் முன்வைத்துள்ள கோரிக்கைகள் குறித்து திரு. காந்தி எந்தவிதமான கொள்கைப் போக்கைக் கடைப்பிடிக்கப் போகிறார் என்பதற்கான அறிகுறி எதுவும் அந்த உரையில் காணப்படவில்லை. ஆயினும் அக்

கொள்கைப் போக்கிலிருந்து அவர் விலகிச் செல்வதை[1] என்னால் காணமுடிந்தது. ஆனால் தமது நிலைபாடு என்னவாக இருக்கப் போகிறது என்று வெகுகாலம் கற்பனையில் திளைக்க அவர் விட வில்லை. 1931 செப்டம்பர் 17 அன்று நடைபெற்ற சமஷ்டிக் கட் டமைப்புக் கமிட்டியின் கூட்டம் அவருக்குத் தேவையான சந்தர்ப் பத்தை வழங்கியது. சமஷ்டி சட்டமன்றங்களின் உறுப்பினர்களைத் தேர்வுசெய்யும் பிரச்சினை கூட்டத்திற்கான நிகழ்ச்சி நிரலில் சேர்க்கப்பட்டது. அந்த விஷயம் குறித்த தமது கருத்துக்களைத் தெரிவித்த திரு. காந்தி பின்வரும் அறிக்கையை வெளியிட்டார்:

> ''விசேட நலன்களைக் கொண்ட விசேடத் தொகுதி களின் மூலம் பிரதிநிதித்துவம் - என்ற உபதலைப்பு (V) க்கு நான் வருகிறேன். இங்கு நான் காங்கிரசின் சார்பாகப் பேசுகிறேன். இந்து - முஸ்லீம்- சீக்கியர் குழப்பத்தை சிறப்பான கவனத்திற்குரியதாகக் கருதுவதற்கு காங்கிரஸ் தன்னைத்தானே சமரசம் செய்துகொண்டுள்ளது. அதற்கு வரலாற்று ரீதியான திடமான ஆதாரங்கள் உள்ளன. ஆனால் அந்த சித்தாந்தத்தை எந்த உருவத்திலும் அல்லது வடிவத்திலும் காங்கிரஸ் விஸ்தரிக்காது. விசேட நலன் களின் பட்டியலை நான் செவிமடுத்தேன். தீண்டப்படாத வர்களைப் பொறுத்தவரை டாக்டர் அம்பேத்கர் கூறு வதை நான் இன்னமும் முழுமையாகப் புரிந்து கொள்ள வில்லை. ஆனால் தீண்டப்படாதவர்களின் நலன்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதில் டாக்டர் அம்பேத்கருடன் காங்கிரசும் கவுரவத்தைப் பகிர்ந்துகொள்ளும். இந்தியா வின் குறுக்கிலும் நெடுக்கிலுமாக உள்ள எந்த ஓர் அமைப்பு அல்லது எந்த ஒரு தனிநபரின் நலன்களை யும் போலவே காங்கிரசுக்கும் அவை மிகத் தெளிவாகத் தெரியும். ஆகவே எந்த ஒரு கூடுதல் சிறப்புப் பிரதிநிதித் துவத்தையும் நான் வன்மையாக எதிர்க்கிறேன்.''

இது தீண்டப்படாதவர்களுக்கு எதிராக திரு.காந்தியும் காங் கிரசும் பிரகடனம் செய்த போரேயன்றி வேறல்ல. எப்படியாயினும்

1. வட்டமேசை மாநாட்டின் முதலாவது கூட்டத் தொடரில் கலந்து கொள்ளச் செல்லு முன்னர் பம்பாயில் திரு. காந்தியை நேர்காணும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது, அப்போது அவர் அரசியல் காரணங்களுக்காக ஒரு தனிப்பட்ட சக்தியாக தீண்டப்படாதவர் களைக் கருதுவதில் தமக்கு உடன்பாடில்லை என்று என்னிடம் அவர் கூறினார்.

இது காங்கிரசுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் இடையிலான போரில் முடிவடைந்தது. திரு.காந்தியின் இப்பிரகடனம் காரணமாக, இப் பிரச்சினையை விவாதிப்பதற்கான முக்கிய அமைப்பான சிறு பான்மையினர் கமிட்டியில் திரு. காந்தி என்ன செய்வார் என்பதை நான் அறிந்திருக்கிறேன்.

தீண்டப்படாதவர்களை வஞ்சிக்கவும், இந்துக்கள், முஸ்லீம் கள், சீக்கியர்கள் ஆகிய மூன்று தரப்பினருக்குமிடையில் ஒரு தீர்வைக் கொணர்வதன் மூலம் வகுப்புப் பிரச்சினைகளை முடிவுக்குக் கொண்டு வரவும் திரு. காந்தி திட்டமிட்டுக் கொண்டிருந்தார். சிறு பான்மையினர் கமிட்டி கூடுவதற்கு முன்னர் முஸ்லீம்களுடன் தனிப்பட்டமுறையில் அவர் பேச்சு வார்த்தைகளை நடத்திக் கொண் டிருந்தார். ஆனால் அவை முடிவடையவில்லை. அதன் விளைவாக 1931 செப்டம்பர் 28 அன்று சிறுபான்மையினர் கமிட்டி கூடிய போது தேசியவாத முஸ்லீம் கண்ணோட்டத்தைப் பிரதிநிதித்துவப் படுத்திய சர். அலி இமாம் விவாதத்தைத் தொடங்கி வைத்தார். அப்போது அவர் கூறியதாவது:

> ''முஸ்லீம் பிரதிநிதிக் குழுவைப் பொறுத்தவரை பேச்சுவார்த்தைகள் ஏதேனும் நடைபெறுகின்றனவா என்பதைத் தனிப்பட்டமுறையில் நான் அறியேன். அத்தகைய பிரேரணைகள் எவையேனும் இப்போது பரிசீலனையில் உள்ளனவா என்பதை அறியும் வாய்ப் பும் எனக்கில்லை. நான் பொதுவாகக் கேள்விப்பட்ட வரை ஏதே ஒருவகையான உடன்பாடு எய்தப்பட்டிருக் கக் கூடும். நான் அதைப்பற்றி எதுவும் கூறமாட்டேன். அதைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது. ஐயா, நீங்கள் விரும்பினால் முஸ்லீம் தேசியவாதிகளின் கண்ணோட் டத்தை உங்கள் முன்வைக்க நான் தயாராக இருக்கிறேன்; ஆனால் அதற்குமுன்பு உங்களுடைய அனுமதியைக் கோருகிறேன். ஏனெனில் அதற்கு சிறிது கூடுதல் சமய மாகக்கூடும். இத்தகையதொரு கூட்டத்தில் நேரச் சிக்கனம் தான் ஒருவரது பிரதான நோக்கமாக இருக்க வேண்டும்.

தலைவர்: ''சிறுபான்மையினரின் பிரச்சினையைப் பரிசீலிப்பதுதான் இக்கமிட்டியின் நோக்கம்.

*சர் அலி இமாம்:* அக்கண்ணோட்டத்திலிருந்துதான் நான் இந்த விஷயத்தை அணுகுவேன்.

*தலைவர்:* வேறு எந்தவிதமான அதிகாரபூர்வமான குறுக்கீடும் இல்லாதிருக்குமானால், சர் அலி இமாமை பேச நான் அழைக்கலாமா?''

அவரைத்தொடர்ந்து உரையாற்றிய மாட்சிமை பொருந்திய ஆகாகான் கூறியதாவது:

> ''முஸ்லீம் பிரதிநிதிக் குழுவை மகாத்மா காந்தி இன்றிரவு சந்திக்கப்போகிறார் என்று கருதுகிறேன். நமது நண்பருடன் இன்றிரவும் நடப்புமுறையில் உரையாடுவோம் என்று நாங்கள் நம்புகிறோம். எந்த ஒரு உத்தேசப் பேச்சுவார்த்தை சம்பந்தமாகவும் என்னால் இவ்வளவுதான் கூறமுடியும்.''

இக்கூட்டத்தை சற்றே ஒத்திவைப்பது இறுதிப் பலன்களுக்குப் பயனுள்ளதாக இருக்கும் என்று பண்டிட் மதன்மோகன் மாளவியாவும் கூட யோசனை வழங்கினார். இது ஒரு குறும்புத்தனமான நடவடிக்கை என்பதை அறிந்துகொண்ட நான் எழுந்து பின்வருமாறு கூறினேன்:

> ''கூட்டத்தை ஒத்திவைப்பதற்கு முன்னர் நான் ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். உங்களது யோசனைகளைப் பொறுத்தவரை - இந்தப் பேச்சுவார்த்தைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கும் அதேசமயம் இதர சிறுபான்மை வகுப்புகளைச் சேர்ந்த உறுப்பினர்கள் தங்களது வாதங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டும் - தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் சம்மந்தப்பட்ட, கடந்த முறையே சிறுபான்மையினரின் துணைக்கமிட்டியிடம் எங்களுடைய வாதங்களை ஏற்கெனவே முன்வைத்துவிட்டோம் என்பதைக் கூற விரும்புகின்றேன்.
>
> ''வெவ்வேறு சட்டமன்றங்களில் நாங்கள் விரும்பும் பிரதிநிதித்துவத்தின் அளவை விளக்கும் ஒரு சிற்றறிக்

கையை[1] இக்கமிட்டியிடம் முன்வைக்க வேண்டிய ஒரே ஒரு காரியத்தைத்தான் நான் செய்ய வேண்டியுள்ளது. அதைத் தவிர நான் வேறு எதையும் செய்யுமாறு அழைக்கப்படவில்லை என்று கருதுகிறேன்; ஆனால் தொடக்கத்திலேயே எடுத்துரைப்பதற்கு ஆவலாய் இருக்கும் விஷயம் இதுதான். வகுப்புப் பிரச்சினையின் தீர்வுக்காக மேற்கொண்டும் பேச்சுவார்த்தைகள் நடைபெறப் போகின்றன என்ற விஷயத்தை மிக்க மகிழ்ச்சியுடன் நான் செவிமடுத்தேன். ஆனால் எங்களது நிலையைத் தொடக்கத்திலேயே நான் தெளிவுபடுத்திவிட விரும்புகிறேன். இப்பிரச்சினை குறித்து எந்தவிதமான ஐயப்பாடுகளும் விடுபட்டுவிடக்கூடாது என்று நான் விரும்புகிறேன். தீர்வுக்கான பேச்சுவார்த்தைகள் நடத்த கமிட்டியினால் நியமிக்கப்பட்ட முழு உரிமைபெற்ற அரசியல் தூதுவர்கள் அல்ல தாங்கள் என்பதைப் பேச்சுவார்த்தையில் ஈடுபட்டிருப்பவர்கள் புரிந்து கொள்ள வேண்டும்; திரு.காந்தி அல்லது அவர் பேச்சுவார்த்தை நடத்தவிரும்பும் இதர தரப்பினரின் பிரதிநிதித்துவத் தன்மை எதுவாக இருந்தபோதிலும் அவர்கள் எங்களைக் கட்டுப்படுத்தும் நிலையில் நிச்சயமாக இல்லை, நிச்சயம் கிடையாது. இக்கூட்டத்தில் இதை நான் மிகவும் உறுதிபடக் கூறுகிறேன்.''

''நான் கூறவிரும்பும் மற்றுமொருவிஷயம் இதுதான்: பல்வேறு சிறுபான்மையினர் முன்வைத்த கோரிக்கைகள், அவர்கள் கோரிக்கைகளுக்கு ஒத்தவைதானா என்பதைப் பற்றி பரிசீலிக்காமல் முன்வைக்கப்பட்ட கோரிக்கைகளாகும். அதன் விளைவாக ஒரு புறத்தில் ஒரு சிறுபான்மை இனத்திற்கும் மறுபுறத்தில் காங்கிரஸ் அல்லது எந்த ஒரு இதர கட்சிக்கும் இடையில் ஏற்படும் எந்த ஒரு உடன்படிக்கைளும், இதர சிறுபான்மையினர் முன்வைத்த கோரிக்கைளைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளவில்லை என்றால் அது என்னைப் பொறுத்தவரை எந்த விதமான கட்டுப்படுத்தும் சக்தியையும் கொண்டிருக்க முடியாது.

1. இதை நான் வேறொரு அறிக்கையை சமர்ப்பித்ததன் மூலம் செய்தேன். அது பிற்சேர்க்கை II ஆக சேர்க்கப்பட்டுள்ளது.

அதைத் தொடர்ந்து என்ன நடைபெற்றது என்பதைப் பின்வரும் நடவடிக்கைக் குறிப்பின் சுருக்கத்திலிருந்து தெளிவாகும்:

தலைவர்: ''எந்தவிதமான தவறான கருத்துக் களுக்கும் இடம் வேண்டாம். இந்த அமைப்புக்கு முன்னர் தான் இறுதித் தீர்வு ஏற்படவேண்டும், என்னுடைய யோசனை என்னவெனில் இதுவரை ஒருவருக்கொருவர் மோதிவந்த சிறுபான்மையினர் அல்லது வகுப்பினர் இருப்பார்களேயானால் தங்களுடைய பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ள முயலுவதற்காக ஒரு குறுகிய காலத்தை அவர்கள் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதேயாகும். அது ஒரு பொதுவான உடன்பாட்டை நோக்கிய ஒரு மிகமுக்கியமான, அத்தியாவசியமான நடவடிக்கையாக இருக்கும். ஆனால் அந்த உடன்பாடு பொதுவான ஒன்றாகத்தான் இருக்கப்போகிறது.''

''டாக்டர் அம்பேத்கர்: எனது நிலையை நான் நிச்சய மாகத் தெளிவுபடுத்தி விட்டேன்:''

''தலைவர்: டாக்டர் அம்பேத்கரின் நிலை ஐயத்திற் கிடமின்றித் தெளிவுபடுத்தப்பட்டு விட்டது; அவ ருடைய வழக்கமான அற்புதமான பாணியில் அவர் அதைப்பற்றி எந்த ஐயப்பாட்டிற்கும் இடமளிக்காமல் தெளிவுபடுத்தியுள்ளார். அது இந்த அமைப்பு தனது விவா தங்களை மீண்டும் தொடங்கும்போது பரிசீலனைக்கு வரும். ஒரு பொதுவான தீர்வுக்காக நாம் ஒன்று சேர்ந்து ஒத்துழைத்து வருகிறோம் என்பதை நீங்களனைவரும் உணர வேண்டுமென்பதைத்தான் நான் விரும்புகிறேன்; அத்தீர்வு எந்த ஒரு இரு தரப்புகள் அல்லது முத்தரப்பு களுக்கு இடையில் ஏற்படக்கூடியதாக இல்லாமல் ஒரு பொதுவான தீர்வாக இருக்க வேண்டும்.''

''தலைவர்: இப்போதைய நிலை இதுதான். இப் போதைக்கு நாம் ஒத்திவைப்போம், பின்னர் நமது சந்திப்புகளைத் தொடரலாம். உங்களில் இரண்டு அல்லது மூன்று தரப்புகளுக்கிடையில் நடைபெற்று வரக்கூடிய பேச்சுவார்த்தைகள் முடியும்வரை, அந்த நேரத்தை இதர

சிறுபான்மையினரின் கோரிக்கைகளைப் பற்றிய ஓர் அறிக்கையை செவி மடுப்பதற்கு நாம் எடுத்துக் கொள்ள லாம். அது மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். அது நேரத்தை மிச்சப்படுத்தும், அது உதா ரணமாக நமது சீக்கிய நண்பர்களுக்கும் - அவர்கள் தங் களது விடாமுயற்சியின் மூலம் தங்களது கோரிக்கை களை நிறைவேற்றிக் கொள்வார்கள் என்பதை நாமறி வோம் - திரு.காந்திக்கும் அவரது நண்பர்களுக்கும், ஆகா கானுக்கும் அவரது நண்பர்களுக்கும் இடையில் எய்தப் படக்கூடிய எந்தவிதமான இணக்கத்திற்கான சாத்தியக் கூறுகளையும் பாதிக்காது.''

''டாக்டர் அம்பேத்கார்: ஒத்திவைக்கப்படும் காலத் தில் இப்பிரச்சினையை முறையாக அமைதியான விதத் தில் அமர்ந்து விவாதிப்பதற்காக காங்கிரஸ் பிரதிநிதி களுடன் சேர்ந்து பல்வேறு சிறுபான்மை வகுப்புகளைச் சேர்ந்த உறுப்பினர்களடங்கிய ஒரு சிறிய கமிட்டியை உங்களால் நியமிப்பது உங்களுக்கு சாத்தியமாயிராதா என்ற யோசனையைக் கூற விரும்புகின்றேன்.''

தலைவர்: நானே இந்த யோசனையைக் கூறவிருந் தேன். அக்கமிட்டியை நியமிக்குமாறு என்னைக் கேட் காதீர்கள்; நீங்கள் அதைச் செய்யுங்கள். நீங்கள் ஒன்று கூடுவதற்காக உங்களை அழைத்திருக்கிறேன். பூர்வாங்க முறையில் ஒரு கூட்டத்தைக் கூட்டி உங்களால் இந்த விஷயத்தை விவாதிக்க முடியாதா, பின்னர் இக்கூட் டத்தில் நீங்கள் உரையாற்றும்போது மற்றவர்களைப் பற்றி நீங்கள் கூறுவதை ஒரு வகையான அறிவாற்ற லுடன் பேசமுடியாதா? நாம் அந்த மாதிரியாக செய்ய லாமே?''

''டாக்டர் அம்பேத்கர்: உங்கள் விருப்பப்படியே ஆகட்டும்.''

''தலைவர்: அதுவே மிகச் சிறந்ததாக இருக்கும்.''

ஒத்திவைப்பின்போது பேச்சுவார்த்தைகளில் ஈடுபட்

டிருந்த மூன்று தரப்புகளுக்கும் இடையில் எவ்விதத் தீர்வும் காணப்பட்டதாகத் தெரியவில்லை. அதன் விளைவாக, 1931 அக்டோபர் அன்று சிறுபான்மை கமிட்டி மீண்டும் கூடியபோது திரு. காந்தி கூறியதாவது:

''பிரதமர் அவர்களே, நேற்று இரவு மாட்சிமை பொருந்திய ஆகாகானுடனும் இதர முஸ்லீம் நண்பர்களுடனும் கலந்தாலோசித்தபின்னர், நாம் இங்கு எந்தக் காரணத்திற்காக கூடியிருக்கிறோமோ அந்த நோக்கம் சிறந்த முறையில் ஈடேற ஒருவாரகால ஒத்திவைப்பைக் கோருவது என்ற முடிவுக்கு வந்தோம். எனது இதர சகாக்களுடன் கலந்தாலோசிக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லை. நான் கூறும் யோசனையை அவர்கள் அனைவரும் ஒப்புக்கொள்வார்கள் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை.''

இந்த யோசனையை ஆகாகான் வழிமொழிந்தார். இந்த யோசனையை எதிர்ப்பதற்காக நான் எழுந்து நின்றேன். நான் என்ன கூறினேன் என்பது நடவடிக்கைக் குறிப்பின் பின்வரும் சுருக்கத்திலிருந்து தெளிவாகும்:

''டாக்டர் அம்பேத்கர்: இந்தக் கமிட்டி விவாதத்திற்கு எடுத்துக்கொண்டுள்ள பிரச்சினைக்கு ஏதேனும் ஒரு தீர்வை எட்டுவதற்கு எல்லா சாத்தியமான முயற்சிகளையும் செய்யும் நமது செயல்பாட்டில் எந்த ஒரு சிரமத்தையும் உருவாக்க நான் விரும்பவில்லை, மகாத்மா காந்தி யோசனை கூறிய வழியில் ஒரு தீர்வு எட்டப்படுமானால் என்னைப் பொறுத்தவரையில் அந்தப் பிரேரணைக்கு எனது தரப்பில் ஆட்சேபனை எதுவும் இராது.

''ஆனால், தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரைப் பிரதிநிதித்துவப்படுத்தும் நான் எதிர்கொள்ளும் ஒரு சிரமம் இருக்கிறது: கூட்டம் ஒத்திவைக்கப்பட்டிருக்கும் சமயத்தின்போது இப்பிரச்சினையைப் பரிசீலனை செய்வதற்கு திரு.காந்தி நியமிக்குமாறு பிரேரணை செய்யும் கமிட்டி எத்தகையது என்பது எனக்குத் தெரியாது. ஆனால் இக்கமிட்டியில் தாழ்த்தப் பட்ட வர்க்கத்தினரும் இடம் பெற்றிருப்பர் என்று நான் நம்புகிறேன்.

''திரு. காந்தி: நிச்சயமாக.

''டாக்டர் அம்பேத்கர்: நன்றி. ஆனால் இன்றைக்கு நான் இருக்கும் நிலையில் அந்த உத்தேசக் கமிட்டியில் பணியாற்றுவதனால் ஏதேனும் பயன் இருக்குமா என்று எனக்குத் தெரியாது. இக்காரணத்திற்காக, சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டியில் முதல் நாளன்று உரையாற்றிய மகாத்மா காந்தி, முகம்மதியர்களையும் சீக்கியர்களையும் தவிர வேறு எந்த வகுப்பினருக்கும் அரசியல் அங்கீகாரம் வழங்கத் தாம் தயாராக இல்லை என்று இந்தியதேசியக் காங்கிரசின் பிரதிநிதி என்றமுறையில் கூறினார். அவர் ஆங்கிலோ-இந்தியர்களையும் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரையும், இந்திய கிறிஸ்தவர்களையும் அங்கீகரிக்க தயாராக இருக்கவில்லை. ஒரு வாரத்திற்கு முன்னர், மகாத்மா காந்தியை சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்து அவருடன் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் பிரச்சினையை விவாதித்தபோதும், இதர சிறுபான்மையினரின் உறுப்பினர்கள் என்றமுறையில் நாங்கள் நேற்று அவரது அலுவலகத்தில் அவருடன் உரையாட வாய்ப்புக் கிடைத்த போதும், சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டியில் அவர் மேற்கொண்ட அணுகுமுறை உறுதியானது, நன்கு சிந்தித்து மேற்கொள்ளப்பட்ட அணுகுமுறை என்று எங்களிடம் மிக மிகத் தெளிவாகக் கூறினார் என்பதை இக் கமிட்டியில் தெரிவிப்பதன்மூலம் நன்னடத்தை முறைக்கு நான் எந்த பங்கமும் ஏற்படுத்தவில்லை என்று கருதுகிறேன். இந்தியாவின் வருங்கால அரசியல் சட்டத்தில் அரசியல் அங்கீகாரம் பெறுவதற்கு உரிமையுள்ள ஒரு வகுப்பினர் என்றமுறையில் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் அங்கீகரிக்கப்படவிருக்கிறார்கள் என்று ஆரம்பத்திலேயே எனக்குத் தெரியாவிடில், மகாத்மா காந்தி பிரேரணை செய்திருக்கும் கமிட்டியில் நான் பங்கு கொள்வதனால் என்ன பயன்கிடைக்கும் என்பதை நானறியேன். ஆகவே, இந்தியாவின் வருங்கால அரசியல் சட்டத்தில் அங்கீகரிக்கப்படுவதற்குத் தகுதியுள்ளவை என சென்ற ஆண்டு சிறுபான்மையினர் உப கமிட்டி பரிந்துரை செய்த வகுப்பினர் அனைவரும் சேர்க்கப்படுவர் என்ற ஊக்கத்துடன் இக்கமிட்டி தொடங்கும் என்ற உறுதிமொழியை நான் பெறாவிடில், ஒத்திவைப்புக்கான கருத்தை என்னால் முழுமனதுடன் ஆதரிக்க முடியுமா அல்லது நிய

மிக்கப்படவிருக்கும் கமிட்டியுடன் என்னால் முழுமன துடன் ஒத்துழைக்கமுடியுமா என்பது எனக்குத் தெரியாது. இதைத்தான் நான் தெளிவுபடுத்த விரும்புகின்றேன்.''

* * *

''டாக்டர் அம்பேத்கர்: என்னுடைய நிலையை மேலும் தெளிவுபடுத்த விரும்புகிறேன். நான் கூறியது சம்பந்தமாக சில தவறான எண்ணங்கள் ஏற்பட்டிருப்ப தாகத் தெரிகிறது. ஒத்திவைப்பை நான் ஆட்சேபிக்கிறேன் என்பதல்ல அது; இப்பிரச்சினையைப் பரிசீலனை செய் வதற்காக நியமிக்கப்படக்கூடிய எந்த ஒரு கமிட்டியிலும் பணியாற்றுவதை நான் ஆட்சேபிக்கிறேன் என்பதுமல்ல அது. இக்கமிட்டியில் நான் பங்கு பெறுவதற்குமுன்னர், அதில் பங்குபெறும் வாய்ப்பு எனக்கு வழங்கப்படு மானால் நான் தெரிந்துகொள்ள விரும்புவது இதுதான்: இக்கமிட்டி பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ள விருக்கும் விஷயம் என்ன? அது முகம்மதியர்களுக்கு எதிரெதிரான நிலையில் உள்ள இந்துக்களின் பிரச்சினையை மட்டும் பரிசீலிக்கப் போகிறதா? பஞ்சாபில் சீக்கியர்களுக்கு எதி ரெதிரான நிலையில் உள்ள முகம்மதியர்களின் பிரச்சினை யைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப் போகிறதா? அல்லது அது கிறிஸ்தவர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் ஆகியோரின் பிரச்சினை யைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்போகிறதா?''

''இக்கமிட்டி இந்துக்கள் மற்றும் முகம்மதியர் களின் மற்றும் சீக்கியர்களின் பிரச்சினையில் மட்டும் அக்கறை கொள்ளாமல், தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர், ஆங்கிலோ இந்தியர்கள், கிறிஸ்தவர்கள் ஆகியோரின் வாதங்களையும் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளும் பொறுப்பையும் மேற்கொள்ளும் என்பதை நாம் தொடங்கு வதற்கு முன்பே மிகத் தெளிவாகப் புரிந்து கொண்டால் தான் இந்த ஒத்திவைப்புத் தீர்மானத்தை எந்தவித ஆட்சேபனையும் இன்றி அனுமதிக்கும் விருப்பத்தை தெரிவித்தேன். ஆனால், நான் இதைக் கூற விரும்ப வில்லை. நான் இதிலிருந்து ஒதுக்கப்பட்டால், இந்த இடைவேளை இந்து- முஸ்லீம் பிரச்சினையைத் தீர்க் கும் காரணங்களுக்காக பயன்படுத்தப்படப் போகிறது என்றால், இப்பிரச்சினையை சிறுபான்மையினர் கமிட்டி

தன்வசம் எடுத்துக்கொண்டு அதைப் பரிசீலனை செய்ய வேண்டுமேயொழிய, ஒரு சில சிறுபான்மையினர் சம்பந்தப்பட்ட வகுப்புப் பிரச்சினைகளின் தீர்வை எய்து வதற்கான வேறு இதர முறைசாராக் கமிட்டியினால் இப்பிரச்சினை பரிசீலனை செய்ய அனுமதிக்கக் கூடாது என்பதை நான் வற்புறுத்துவேன்.

திரு.காந்தி: ''பிரதமர் அவர்களே, நண்பர்களே, நம் மில் சிலர் நமக்கு நாமே நம்முன் வகுத்துக் கொண் டுள்ள பணியின் வீச்சு சம்பந்தமாக ஒருவிதமான தவறான கருத்து தோன்றியிருப்பது எனக்குத் தெரிகிறது. டாக்டர் அம்பேத்கர், கர்னல் கிட்னீ மற்றும் இதர நண்பர்கள், என்ன நடக்கப் போகிறது என்பதைப் பற்றித் தேவை இல்லாமல் பதட்டமடைந்திருக்கிறார்கள். எந்த ஒரு தனிப் பட்ட நல னுக்கோ அல்லது வர்க்கத்திற்கோ அல்லது இந்தியாவில் உள்ள தனிப்பட்ட நபருக்கோ கூட அரசியல் அந்தஸ்தை மறுப்பதற்கு நான் யார்? ஒரே ஒரு தேச நலனைக் கூடத் தியாகம் செய்யும் குற்றம் புரிவேனாகில், காங்கிரசின் ஒரு பிரதிநிதி என்றமுறையில் காங்கிரஸ் என் மீது வைத்திருக்கும் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்க லாயக்கற்றவனாவேன். இந்த விஷயங்கள் குறித்து எனது சொந்தக் கருத்துக்களை ஐயத்துக்கிடமின்றி நான் தெரியப்படுத்தியிருக்கிறேன். அக்கருத்துக்களில் நான் உறுதியுடன் இருக்கிறேன் என்பதையும் நான் ஒப்புக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு தனிப்பட்ட நலனுக்கும் பாதுகாப்பை உத்தரவாதம் செய்யும் பல வழிகள் உள் ளன. ஒரு திட்டத்தை உருவாக்க முயலுவதற்கு நாம் தான் நமது சிந்தனைகளை ஒருமுகப்படுத்த வேண்டி யிருக்கும். இந்த முறைசாரா மாநாடு அல்லது கூட்டத் தின் உறுப்பினர்கள் மீது எவரும் தமது சொந்தக் கருத்துக் களை வலியுறுத்துவதில் பிடிவாதமாக இருக்க மாட் டார்கள்.

''தமது கருத்துக்களை எடுத்துரைக்க முயலுவது சம் பந்தமாகவும் அல்லது தமது கருத்தை வலியுறுத்தமுயலு வது சம்பந்தமாகவும் எவரும் அச்சம் கொள்ளத் தேவை யில்லை என்பது எனது கருத்தாகும். நம்மில் ஒவ்வொரு வருக்கும் இணையாக எனது கருத்தும் இருக்கும்; அதற்குப்

பெரிய செல்வாக்கு எதுவும் இராது; எவருடைய கருத்துக்கும் எதிராக எனது கருத்தை வலியுறுத்துவதற்கு எனக்கு அதிகாரம் எதுவும்இல்லை. தேசநலன் கருதித் தான் எனது கருத்துக்களை நான் எடுத்துரைக்கிறேன். வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் இக்கருத்துக்களை நான் எடுத்துரைப்பேன். இக்கருத்துக்களை ஏற்பது குறித்தோ அல்லது நிராகரிப்பது குறித்தோ நீங்கள்தான் முடிவெடுக்க வேண்டும். எந்த ஒரு கருத்தையும் நசுக்கும் முயற்சி நடைபெறப் போவதில்லை என்பது குறித்தும் முறைசாராக் கூட்டங்கள் குறித்து நான் கூறியிருந்த கருத்துக்களைப் பற்றியும் நம்மில் ஒவ்வொருவரும் உங்களுடைய கருத்துக்களைத் தயை செய்து தெரிவியுங்கள். மேசைக்கு முன்னால் விறைப்பாக உட்கார்ந்து கொண்டிருப்பதைவிட ஒன்றாக நெருங்கி வருவதற்கு இதுவும் ஒரு வழி என்று நீங்கள் கருதினால் நீங்கள் இந்த ஒத்திவைப்பை நிறைவேற்றமாட்டீர்கள், மாறாக இந்த முறைசாராக் கூட்டங்கள் தொடர்பாக நான் முன்வைத்த பிரேரணைக்கு முழுமனதுடன் ஒத்துழைப்பு வழங்குவீர்கள்.''

* * *

''தலைவர்: அப்படியானால் நான் அவ்வாறே செய்கிறேன். நண்பர்களே, காலம் விரயமாக்கப்படக் கூடாது. இந்த மாநாடுகள் - திரு.காந்தி கூறியதுபோல முறைசாரா மாநாடுகள், ஆனாலும் இவை மிகவும் மதிப்பு வாய்ந்த, பயனுள்ள மாநாடுகள் என்று நம்புகிறேன் - இப்போதைக்கும் நமது அடுத்த சந்திப்பிற்கும் இடையில் இம் மாநாடுகள் நடைபெறும் என்பதைத் தெளிவாகச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நேரத்தை அந்த வழியில் பயன்படுத்துவதற்கு நீங்களனைவரும் உறுதிபூணுவீர்கள் என்று நம்புகிறேன்.''

ஒத்திவைப்புக்குப்பின்னர் நடைபெற்ற முறைசாராக் கூட்டத்தில் என்ன நடந்தது என்பதை விளக்குவது எனக்குத் தேவையற்றது. அது ஒரு குளறுபடியாக இல்லாவிட்டாலும்கூட, முழுமையாக தோல்வி அடைந்தது. அக்கூட்டத்திற்குத் திரு. காந்தி தலைமை வகித்தார். பஞ்சாபில் சீக்கியர்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையிலான சச்சரவு என்ற வகுப்புப் பிரச்சினையின் மிகக் கடினமான

பகுதியுடன் திரு.காந்தி தொடங்கினார். ஒரு நடுவரின் முடிவுக்குக் கட்டுப்படுவதாகத் தரப்புகள் ஒப்புக்கொண்டபோது இப்பிரச்சினை தீர்வை நெருங்கி விட்டதாக ஒருகட்டத்தில் தோன்றியது. அந்த நடுவர் யாராக இருப்பார் என்பது தங்களுக்குத் தெரியாதவரை இந்த விஷயத்தை மேலும் தொடர சீக்கியர்கள் மறுத்துவிட்டனர். நடுவரின் பெயரை வெளியிடுவதற்கு முஸ்லீம்கள் தயாராக இல்லாத காரணத்தினால் இந்த விஷயம் தோல்வியடைந்தது. தீண்டப்படாதவர்கள் போன்ற சிறுபான்மையினரின் பிரச்சினைகளில் திரு.காந்தி அக்கறை கொண்டிருக்கவில்லை. ஆயினும் அவர் தங்களது கோரிக்கைகளைப் பட்டியலிட்டுத் தருமாறு இதர சிறுபான்மையினரின் பிரதிநிதிகளைக் கேட்டுக் கொண்டதன் மூலம் ஒரு நாடகத்தை அரங்கேற்றினார். அவர்களுடைய குறைகளை அவர் செவிமடுத்தார். ஆனால் அவற்றை அவர் கவனத்தில் எடுத்துக்கொள்ளவில்லை. அவற்றைப் பரிசீலனை செய்வதற்காக அவற்றைக் கூட்டத்தின் முன்வைத்தாரா? சீக்கியர்-முஸ்லீம் தீர்வுக்கான வாய்ப்புக்கள் தகர்ந்துப்பட்ட உடனேயே திரு.காந்தி கூட்டத்தைக் கலைத்துவிட்டார். 1931 அக்டோபர் 8 அன்று சிறுபான்மையினர் கமிட்டி கூடியது. திரு.காந்தியை முதலில் உரையாற்றுமாறு பிரதமர் அழைக்க திரு. காந்தி கூறியதாவது:

> ''பிரதமர் அவர்களே, நண்பர்களே, பல்வேறு குழு பிரதிநிதிகளிடையே நடத்திய முறைசாரா உரையாடல்கள் மூலமாக வகுப்புப் பிரச்சினைக்கு ஓர் ஒப்புக்கொள்ளப்படும் தீர்வை எய்துவதில் எனது சார்பில் படுதோல்வியடைந்ததை மிகவும் வருத்தத்துடன், மிக மிகத் தாழ்மையுணர்ச்சியுடன் அறிவித்துக் கொள்கிறேன். மதிப்பிற்குரிய ஒரு வார காலத்தை விரயமாக்கியதற்காக திரு. பிரதமர் அவர்களே, உங்களிடமும் இதர சகாக்களிடமும் மன்னிப்பு கோருகிறேன்.
>
> ''இப்பேச்சுவார்த்தைகளை நடத்தும் பளுவை நான் ஏற்றுக் கொண்டபோது வெற்றிக்கான வாய்ப்பு அதிகம் இருப்பதாக எனக்குத் தெரிந்தது. ஒரு தீர்வை எய்துவதற்குத் தேவையான எந்த முயற்சியையும் விட்டு வைத்ததாக எனக்கு நினைவில்லை என்ற உண்மையை நான் உணர்ந்திடுவதில்தான் எனது ஒரே ஆறுதல் அடங்கியுள்ளது.

''ஆனால் நாம் முற்றிலும் வெட்கித் தலைகுனியும் அளவுக்கு பேச்சுவார்த்தைகள் தோல்வியடைந்து விட்டன என்று கூறினால் அது முழு உண்மையாகாது. தோல்விக்கான காரணங்கள் இந்தியப் பிரதிநிதிகள் குழுவின் இயைபில் உள்ளார்ந்து பொதிந்து இருந்தன. கிட்டத்தட்ட நாம் அனைவரும் நாம் பிரதி நிதித்துவப்படுத்துவதாகக் கருதப் படும் கட்சிகள் அல்லது குழுக்களின் தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதிநிதிகள் அல்ல; அரசின் நியமனத்தின் பேரிலேயே இங்கு நாம் வந்திருக்கிறோம். நாம் அனைவரும் இங்கு வந்திருப்பது ஏற்புடையதோர் தீர்வைக் காணுவதற்கு முற்றிலும் அவசியம் என்றும் கூறுவதற்கில்லை. தவிரவும், சிறுபான்மைக் குழுவைக் கூட்டுவதற்கு இது உகந்த தருணமல்ல என்று கூறுவதற்கும் என்னை அனுமதிப்பீர்கள் என்று நம்புகிறேன். இவ்வகையில் எதார்த்த உணர்வு இல்லாமையால் இங்கு வந்து நாம் என்ன சாதிக்கப் போகிறோம் என்பதை அறியாதவர்களாக, தெரியாதவர்களாக, புரியாதவர்களாக இருக்கிறோம். நாம் விரும்புவதை எந்த அளவுக்குப் பெறப்போகிறோம் என்பதைத் திட்டவட்டமான முறையில் தெரிந்திருந்தால், நாம் என்னப் பெறப்போகிறோம் என்பது வகுப்புச் சிக்கலுக்கு ஓர் உடன்பாடான தீர்வு காணுவதற்கு தற்போதைய பிரதிநிதிக் குழுவிற்குள்ள ஆற்றலைப் பொறுத்துள்ளது என்று நம்மிடம் தெரிவித்திருந்தால், அதனை நிராகரிப்பதற்கு முன்னர் ஐம்பது முறை தயங்கியிருப்போம். அந்நிய ஆதிக்கம் காரணமாக நம்மிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றி, அக்கருத்து வேறுபாடுகள் தீவிரமடையாதிருந்தால் இந்தத் தீர்வு சுயராஜ்ய அரசியல் அமைப்பின் அடித்தளமாக அல்லாவிட்டாலும் அதன் மகுடமாக இருந்திருக்க முடியும். சுதந்திரச் சூரியனது வெதுவெதுப்பில்; கதகதப்பில் வகுப்புப் பூசல்கள் என்னும் பனிக்கட்டி உருகி விடும் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை.

''எனவே, சிறுபான்மைக் குழுக் கூட்டம் மறுதேதி குறிப்பிடப்படாமல் ஒத்திவைக்கப்பட வேண்டும் என்றும், அரசியலமைப்பின் அடிப்படை அம்சங்கள் கூடிய விரைவில் வகுக்கப்பட வேண்டும் என்றும் யோசனை கூறுகிறேன். இதற்கிடையில் வகுப்புப் பிரச்சினைக்கு ஓர் உண்மையான தீர்வைக் காணும் பூர்வாங்க முயற்சி

தொடரும், தொடர வேண்டும்; ஆனால் அந்த முயற்சி அரசியல் அமைப்பை உருவாக்கும் பணிக்கு ஒரு முட்டுக் கட்டையாக இருக்கக் கூடாது. அதன் கட்டமைப்பை உருவாக்கும் பிரதான பணியில் நம் கவனத்தை ஒருமுகப் படுத்த வேண்டும்.

''எனது தோல்வியை ஓர் இணக்கமான தீர்வுகாணும் நம்பிக்கை அனைத்தும் நசித்துவிட்டதாக அர்த்தம் செய்து கொள்ளக் கூடாது என்பதைக் குழுவுக்குச் சுட்டிக்காட்ட வேண்டிய அவசியம் இல்லை. இன்னும் சொல்லப் போனால், எனது தோல்வியை எனது முயற்சி அறவே சிதைந்துவிட்டதாகவும் எடுத்துக் கொள்ளக் கூடாது; அகராதியில் இத்தகைய சொல் ஏதும் இல்லை. எனக்கு நீங்கள் அன்புடன் ஒரு வாரக் கால அவகாசம் அளித்து, அந்தக் காலக்கெடுவுக்குள் விசேட முயற்சி எடுத்துக் கொள்ளும்படித் தெரிவித்தீர்கள்; அத்தகைய முயற்சி தோல்வியடைந்து விட்டது என்பதையே எனது ஒப்புதல் வாக்குமூலம் குறிக்கிறது.

''இந்தத் தோல்வியை வெற்றிக்கு ஒரு படிக்கல்லாகப் பயன்படுத்த நான் உறுதி கொண்டுள்ளேன்; நீங்களும் இவ்வாறே செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள் கிறேன்; ஓர் உடன்பாடு காணுவதற்கான எல்லா முயற்சி களும் தோல்வியடைந்தாலும், வட்டமேசை மாநாடு உருப்படியாக எதையும் சாதிக்காமல் முடிவடைந்தாலும் கூட இது சம்பந்தமாக ஒரு நீதிமன்றக் குழுவை அமைப் பதற்கு உத்தேச அரசியலமைப்புச் சட்டத்தில் ஒரு விதி யைச் சேர்க்கலாம் என்று பரிந்துரைக்கிறேன்; இந்தக் குழு எல்லாக் கோரிக்கைகளையும் ஆழமாகப் பரிசீலித்து, இதுவரை தீர்வுகாணப்படாத எல்லா விஷயங்கள் குறித் தும் ஓர் இறுதி தீர்ப்பை அளிக்கும்.''

இதனைத் தொடர்ந்து ஒரு காரசாரமான விவாதம் நடை பெற்றது. பிரதிநிதிகள் அனைவரும் அரசாங்கத்தால் நியமனம் செய்யப்பட்டவர்கள் என்றும், அவர்கள் மக்களது பிரதிநிதிகள் அல்லவென்றும் திரு. காந்தி கூறிய குற்றச்சாட்டை எல்லோருமே எதிர்த்துப் பேசினர். நான் எழுந்து என் நிலையைத் தெளிவுபடுத்திப் பேசினேன். அப்போது நான் கூறியதாவது:

''திரு. பிரதமர் அவர்களே, பூர்வாங்கக் குழுக் கூட்டம் முடிவடைந்து நேற்றிரவு நாம் கலைந்து சென்றபோது, நம்மிடையே ஓரளவு தோல்வி மனப்பான்மை குடிகொண்டிருந்தது; எனினும் இன்று நாம் இங்கு கூடும்போது, சினத்தைக் கிளறிவிட்டு எரிச்சலூட்டி நிலைமையை மேலும் மோசமாக்கக்கூடிய எத்தகைய சொற்பொழிவையும் நிகழ்த்தக் கூடாது, கருத்தை வெளியிடக்கூடாது என்ற பொதுவான உடன்பாட்டுடன்தான் நாம் நேற்றிரவு கலைந்து சென்றோம். இத்தகைய உடன்பாட்டை திரு. காந்தி மீறியிருக்கிறார் என்பதை காண வருத்தமடைகிறேன். இத்தகைய சூழ்நிலையில் நான் பேச வேண்டியவனாக இருக்கிறேன்; அதற்காக என்னை மன்னிக்க வேண்டும். பூர்வாங்கக் குழுக் கூட்டத்தின் தோல்விகளுக்கான காரணங்களை அவரது கருத்துப்படி விளக்கிக் கூறித் தமது பேச்சை அவர் தொடங்கினார். இப்போது இந்தத் தோல்விக்கான காரணங்கள் குறித்து எனக்குச் சில சொந்தக் கருத்துகள் உண்டு; பூர்வாங்கக் குழு ஓர் உடன்பாடு காண இயலாமல் போனது இந்தக் காரணங்களால்தான் என்று கருதுகிறேன்; எனினும் அந்தக் காரணங்கள் குறித்து இப்போது இங்கு விவாதிக்கப் போவதில்லை. திரு. காந்தியின் பேச்சைக் கேட்ட பிறகு ஒரு விஷயம் என் மனத்தை நோவச்செய்கிறது; சிறுபான்மைக் குழு மறுதேதி குறிப்பிடப்படாமல் ஒத்திவைக்கப்பட வேண்டுமென்ற தமது பிரேரணையை வலியுறுத்துவதுடன் நில்லாமல் திரு. காந்தி இந்த வட்டமேசை மாநாட்டில் அமர்ந்திருக்கும் பல்வேறு சமூகத்தினரின் பிரதிநிதிகளுக்குக் களங்கம் கற்பிக்கும் வகையில் பேசியிருப்பது என் மனத்தைப் பெரிதும் வருத்துகிறது. இங்கு வந்திருக்கும் பிரதிநிதிகள் அரசால் நியமனம் செய்யப்பட்டவர்கள் என்றும், அவர்கள் தத்தமது வகுப்பினரது கருத்துகளைப் பிரதிபலிப்பவர்கள் அல்லவென்றும் அவர் கூறினார். நாம் அரசாங்கத்தால் நியமனம் செய்யப்பட்டவர்கள் என்ற குற்றச்சாட்டை நம்மால் மறுக்க முடியாது. எனினும் என்னைப் பொறுத்தவரையில் ஒன்றைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்; இந்தியாவின் தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பும் வாய்ப்பு அளிக்கப்பட்டிருப்பின் அப்போதும் இந்த மாநாட்டில் நான் இடம் பெற்றிருப்பேன் என்பதில் எனக்குக் கிஞ்சித்தும் ஐய

மில்லை. எனவே, நான் ஒரு நியமன உறுப்பினனாக இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி என் சமூகத்தினரை நான் முழு அளவுக்குப் பிரதிநிதித்துவப்படுத்துகிறேன் என்பதை இங்கு கூறிக்கொள்ள விரும்புகிறேன். இது விஷயத்தில் எவருக்கும் எள்ளளவும் ஐயம் இருக்க வேண்டியதில்லை.

''தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஆதரவாக, காங்கிரஸ் இருந்து வருகிறது என்றும், என்னையோ அல்லது என் சகாக்களையோ விடவும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரை காங்கிரஸ் அதிகம் பிரதிநிதித்துவப்படுத்துகிறது என்றும் மகாத்மா எப்போதுமே உரிமை கொண்டாடி வந்திருக்கிறார். இவ்விதம் உரிமை கொண்டாடுவது சம்பந்தமாக ஒன்றை மட்டும் இங்கு கூறிக்கொள்ள விரும்புகிறேன். பொறுப்பற்றவர்கள் முன்வைக்கும் தவறான உரிமை கொண்டாடல்களில் இதுவும் ஒன்றாகும்; எவர் சம்பந்தமாக இந்த உரிமை கொண்டாடப்படுகிறதோ, அவர்களே இதனை மறுத்துள்ளனர்.

''இதோ சற்றுமுன்னர் வந்த ஒரு தந்தி என்னிடம் இருக்கிறது. நான் என்றும் சென்றிராத ஓர் இடத்திலிருந்து, அதுவும் நான் ஒருபோதும் பார்த்திராத ஒருவரிடமிருந்து இந்தத் தந்தி வந்துள்ளது; அல்மோராவில் குமாவ்னிலிருந்து இந்தத் தந்தி வந்திருக்கிறது; இந்த இடம் ஐக்கிய மாகாணங்களில் இருக்கிறது என்று கருதுகிறேன்; அப்பகுதியைச் சேர்ந்த தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சங்கத்தின் தலைவர் இத்தந்தியைக் கொடுத்திருக்கிறார். அதில் பின்கண்ட தீர்மானம் இடம் பெற்றிருக்கிறது:

''நாட்டிற்குள்ளேயும் வெளியேயும் காங்கிரஸ் நடத்தி வரும் இயக்கத்தின்பால் தனக்கு நம்பிக்கை இல்லை என்று இக்கூட்டம் அறிவிக்கிறது; காங்கிரஸ் ஊழியர்கள் கடைப்பிடித்துவரும் வழிமுறைகளை அது கண்டிக்கிறது''.

தந்தியில் அடங்கியுள்ள விஷயங்களை மேற்கொண்டு வாசிக்க நான் விரும்பவில்லை; ஆனால் ஒன்றை மட்டும் கூற விரும்புகிறேன்; தாழ்த்தப்பட்ட மக்களின்பால் அனுதாபம் கொண்டுள்ளவர்கள் காங்கிரசில் இருக்கலாம்,

ஆனால் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் காங்கிரசில் இல்லை (திரு. காந்தி இவ்விஷயத்தை நன்கு பரிசீலித்துப் பார்த்தாரே யானால் இந்த உண்மையைத் தெரிந்து கொள்வார்.) இந்தக் கருத்தை ஆதாரபூர்வமாக நான் மெய்ப்பித்துக் காட்ட உள்ளேன். ஆனால் இதில் சர்ச்சையில் சிக்கிக் கொள்ள நான் விரும்பவில்லை. ஏனென்றால் இந்தச் சர்ச்சைகள் யாவும் பிரதான பிரேரணைக்கு ஓரளவு அப்பாற்பட்டவை யாகத் தோன்றுகின்றன. இந்தக் குழு முன்தேதிக் குறிப் பிடப்படாமல் ஒத்திவைக்கப்பட வேண்டும் என்பதே திரு. காந்தி முன்மொழிந்த பிரதான பிரேரணையாகும். இந்தப் பிரேரணை சம்பந்தமாக சர். முகமது ஷாபி மேற் கொண்ட நிலையை நான் முற்றிலும் ஆதரிக்கிறேன். ஏனென்றால் இந்தப் பிரேரணையை நான் ஏற்க முடி யாது. இதற்கு இரண்டு மாற்று வழிகள்தான் இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது: ஒன்று, இந்த சிறுபான்மைக் குழு சாத்தியமானால் தொடர்ந்து முயற்சி மேற்கொண்டு இந்தப் பிரச்சினைக்கு ஏதேனும் ஒரு திருப்திகரமான தீர்வு காண முயலவேண்டும்; அல்லது அது சாத்தியமில்லை என்றால் இப்பிரச்சினைக்குத் தீர்வுகாணும் பொறுப்பை பிரிட்டிஷ் அரசாங்கமே ஏற்க வேண்டும். இப்பிரச் சினையை மூன்றாவது தரப்புகளின் மத்தியஸ்துக்கு விடுவதற்கு நாம் ஒப்புக் கொள்ள முடியாது; ஏனென்றால் அவற்றின் பொறுப்பு உணர்வு பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பொறுப்பு உணர்வுபோல் இருக்க முடியாது.

''பிரதமர் அவர்களே, ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். ஆட்சி அதிகாரம் பிரிட்டிஷாரிடருந்து உடனடியாக இந்தியர்களுக்கு மாற்றப்பட வேண்டும் என்பதில் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினர் ஆர்வம் கொண் டிருக்கவில்லை; அதற்காக ஆர்ப்பரிக்கவும் இல்லை; இதன் பொருட்டு அவர்கள் எந்த இயக்கத்தையும் தொடங்க வில்லை. பிரிட்டிஷ் மக்களுக்கு எதிராக அவர்களுக்குச் சில குறிப்பிட்ட மனக்குறைகள் உண்டு; இந்த மனக்குறை களை நாங்கள் தீவிரமாக உணர்கிறோம் என்பதை நான் ஏற்கெனவே போதிய அளவு தெளிவுபடுத்தியிருக்கிறேன் என்று நினைக்கிறேன். எனினும் உண்மையைக் கூறுவ தானால், அரசியல் அதிகாரத்தை மாற்றித்தர வேண்டும் என்று நாங்கள் கூக்குரல் எழுப்பவில்லை. இன்னும் தெளி

வாகக் கூறுவதாயின் அரசியல் அதிகாரம் மாற்றப்பட வேண்டும் என்பதில் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் ஆர்வம் கொண்டிருக்கவில்லை; எனினும் அரசியல் அதிகாரத்தை மாற்றித்தர வேண்டுமென்று கோரிவரும் சக்திகளைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் சமாளிக்க முடியவில்லை என்றால், அப்போது தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தற் போதைய தங்களது நிலையில் அந்தக் கோரிக்கையை எதிர்க்க முடியாது என்பதை அவர்கள் அறிந்திருக்கிறார் கள். அப்போது தங்களிடம் நாங்கள் முன்வைக்கும் கோரிக்கை இதுதான்: நீங்கள் அதிகாரத்தை மாற்றிக் கொடுப்பதாக இருந்தால், சில நிபந்தனைகளுக்கும் விதி முறைகளுக்கும் உட்பட்டே அதனைச் செய்ய வேண்டும்; நீங்கள் மாற்றித்தரும் அதிகாரம் ஒரு சுயநலக் கும்பலின் கைகளில் சிக்கிவிடக்கூடாது; ஒரு சில ஆளும் வர்க்கத் தின் கைகளுக்குக் கிடைத்துவிடக் கூடாது; அல்லது முகமதியர்களானாலும் சரி, இந்துக்களானாலும் சரி ஒரு கோஷ்டியிடம் அதிகாரம் ஒப்படைக்கப்படலாகாது; அதற்கு மாறாக எல்லா சமூகத்தினருமே தத்தமது வீதா சாரத்துக்கு ஏற்ப அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்ள வழி வகை செய்யப்பட வேண்டும். நான் இத்தகைய கருத்தைக் கொண்டிருக்கையில், எனது சமூகத்தின் நிலையும் எனது நிலையும் எத்தகையதாக இருக்கும் என்பதைத் தெரியா திருக்கும்போது, சமஷ்டிக் கூட்டமைப்பின் நடவடிக் கைகளில் நான் எவ்விதம் முக்கிய பங்கு வகிக்க முடியும் என்று எனக்குத் தெரியவில்லை.''

பிரதமர் தமது முடிவுரையில் பின்வருமாறு குறிப் பிட்டார்:

''இப்போது கூட்டத்தை ஒத்திவைப்போம். மீண்டும் உங்கள் அனைவரையும் அழைக்கிறேன். இதற்கிடையே, என் எதிரில் அமர்ந்திருக்கும் சிறுபான்மையினரின் பிரதி நிதிகளும் இந்த விஷயத்தில் தங்களால் ஆன முயற்சியை மேற்கொள்ள வேண்டுமென்று விழைகிறேன்.

''உங்களிடையே ஏதேனும் பொதுவான உடன்பாடுகள் ஏற்படுமானால் அவற்றைச் சுற்றுக்கு விடுங்கள் என்று யோசனை கூறுகிறேன்... எத்தகைய உடன்பாடு ஏற்படு

வதற்கும் பிரிட்டிஷ் அரசாங்கம் குறுக்கே நிற்காது... ஆதலால் சோர்வடைய வைக்கும் கருத்துகளை இதுவரை நாம் கேட்டுக் கொண்டிருந்த நிலையில், ஒரு விஷயத்தை நீங்கள் மனத்திற் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். அதாவது பிரச்சினைக்கு தீர்வுகாணும் முயற்சி தொடர வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் விரும்புகிறது; நீங்கள் அனைவரும் தொடர்ந்து முயற்சி மேற்கொள்ள வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் அவாவுகிறது. உங்களால் ஒரு முடிவுக்கு வர இயலவில்லை என்றால் அப்போது பிரிட்டிஷ் அரசாங்கம் தனக்கு உசிதமெனப் படும் நடவடிக்கையை மேற்கொள்ளும்; ஏனென்றால் இந்திய அரசாங்கத்தை எங்களது சொந்தக் கருத்துக்களுக்கு ஏற்ப செம்மைப்படுத்தக் கூடியவையும், தன்னாட்சி நோக்கி இந்திய அரசாங்கம் மேன்மேலும் பெரிதும் முன்னேறுவதற்கு வழிசெய்யக் கூடியவையுமான மேம் பாடுகளை இந்திய அரசாங்கத்தில் செய்ய நாங்கள் உறுதி பூண்டுள்ளோம். இதைத்தான் நாங்கள் விரும்புகிறோம். எங்கள் பாதையில் குறுக்கிடாதீர்கள் என்று இங்கே வந்தி ருக்கும் பிரதிநிதிகளுக்கு - அனைத்து சமூகங்களையும் பிரதிநிதித்துவப்படுத்தும் பிரதிநிதிகளுக்கு - வேண்டுகோள் விடுக்கிறோம்; ஏனென்றால் இதுதான் இப்போது நடை பெற்று வருகிறது.

## IV

பிரதமர் தெரிவித்த யோசனைக்கு இணங்க, ஒரு தீர்வு காணு வது குறித்துப் பரிசீலிப்பதற்கு சிறுபான்மை சமூகப் பிரதிநிதிகள் கூடி முயற்சி எடுத்து ஒரு தீர்வு கண்டனர்; சிறுபான்மைக் குழுவின் அடுத்த கூட்டம் 1931 நவம்பர் 13 ஆம் தேதி கூடியதற்கு முதல் நாள் மாலை இத்தீர்வை அவர்கள் பிரதமரிடம் சமர்ப்பித்தனர். பிரதமர் தமது துவக்க உரையில் கூறியதாவது:

''எனவே, இந்தக் குழுவின் பணி ஆரம்பம் முதலே மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது. அப்படி யிருந்தும் ஓர் இணக்கமான திட்டத்தை நீங்கள் முன் வைக்கத் தவறியமைக்காக வருந்துகிறேன்.

''எனினும் நேற்று இரவு முகமதியர்கள், தாழ்த்தப்பட்ட வகுப்பினர், இந்தியக் கிறித்தவர்களில் ஒரு பகுதியினர்,

ஆங்கிலோ-இந்தியர்கள், பிரிட்டிஷ் சமூகத்தினர் ஆகியோரின் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு தூதுக் குழுவினர் என்னைச் சந்தித்தனர். இது ஒரு முழுமையான அணி என்று கருதுகிறேன். அவர்கள் காமன்ஸ் சபையிலுள்ள எனது அறையில் என்னை வந்து சந்தித்தனர்; தமக்குள் செய்துகொண்ட ஓர் உடன்பாட்டை என்னிடம் சமர்ப்பித்தனர். பிரிட்டிஷ் இந்தியாவின் மக்கட் தொகையில் சுமார் 46 சத வீதத்தினர் சம்பந்தப்பட்டது இந்த உடன்பாடு என்று அவர்கள் என்னிடம் தெரிவித்தனர்.

''இந்த உடன்பாட்டைப் பரிசீலிக்க எங்களுக்கு நேரமில்லையாதலால் இதனை இக்குழுவின் முக்கிய ஆவணங்களில் ஒன்றாகச் சமர்ப்பிக்கும்படி மேதகு ஆகா கான் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்''.

பிறகு மேதகு ஆகா கான் எழுந்து பின்வருமாறு பேசினார்:

''திரு. பிரதமர் அவர்களே, பொதுவாக வட்டமேசை மாநாடும், குறிப்பாக சிறுபான்மைக் குழுவும் பரிசீலித்து வரும் வகுப்புப் பிரச்சினை சம்பந்தமாக முகமதியர்களும், தாழ்த்தப்பட்ட வகுப்பினரும், ஆங்கிலோ- இந்தியர்களும், ஐரோப்பியர்களும், இந்தியக் கிறித்தவர்களில் ஒரு கணிசமானப் பகுதியினரும் தங்களுக்குள் செய்து கொண்டிருக்கும் ஓர் உடன்பாடு அடங்கிய ஆவணத்தை அவர்கள் சார்பில் இங்கு சமர்ப்பிக்கிறேன். இந்தக் கடினமான, சிக்கலான பிரச்சினையை மிகக் கவனமாகவும், அக்கறையுடனும் பரிசீலித்த பிறகு எய்தப் பெற்றுள்ள இந்த ஒப்பந்தத்தை ஒட்டுமொத்தமாகக் கருத்திற் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். உடன்பாட்டின் அனைத்துப் பகுதிகளும் பரஸ்பரம் ஒன்றுடன் ஒன்று சம்பந்தப்பட்டவையாகும்; எனவே, ஒன்று ஒப்பந்தம் முழுவதையும் ஒட்டுமொத்தமாக ஏற்றுக் கொள்ள வேண்டும் அல்லது அதனை நிராகரிக்க வேண்டும்.''

இந்த ஆவணம் சிறுபான்மையினர் ஒப்பந்தம் என அழைக்கப்படுகிறது.[1] இதனைத் தொடர்ந்து நடைபெற்ற பொது விவாதத்தின்போது

1. அது பின்இணைப்பு 3ல் தரப்பட்டிருக்கிறது.

திரு. காந்தி நிகழ்த்திய சொற்பொழிவு மிகப் பெருமளவில் கவனத்தைக் கவர்ந்தது என்பதில் ஐயமில்லை. திரு. காந்தி மிகுந்த சீற்றம் கொண்டிருந்தார். சிறுபான்மையினர் உடன்பாட்டைத் தயாரிப்பதில் பங்கு கொண்ட அனைவரையும் அவர் வன்மையாகக் கண்டித்தார். அதிலும் குறிப்பாக தீண்டப்படாதவர்கள் ஒரு தனி அரசியல் பிரிவாக உடன்பாட்டில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பது அவரை மிகுந்த சினம் கொள்ளச் செய்தது. இதுகுறித்து திரு. காந்தி பேசியதாவது:

> ''இந்துக்களுக்கும், முகமதியர்களுக்கும், சீக்கியர்களுக்கும் ஏற்புடைய எந்த ஒரு தீர்வையும் காங்கிரஸ் எப்போதுமே ஏற்றுக்கொள்ளும், ஆனால் எந்த ஒரு சமூகத்துக்கும், குறிப்பாக தாழ்த்தப்பட்டோர் எனப்படுவர்களுக்கு தனி வாக்காளர் தொகுதிகள் வழங்கும் ஏற்பாட்டை அது ஏற்காது என்று நான் ஏற்கெனவே கூறியதை மீண்டும் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். ஏனைய சிறுபான்மையினர் முன்வைக்கும் கோரிக்கைகளை என்னால் புரிந்துகொள்ள முடியும்; ஆனால் தீண்டப்படாதவர்கள் சார்பில் முன்வைக்கப்படும் கோரிக்கைகள் 'மிகவும் ஈவு இரக்கமற்றவையாகும்'. இவை தீண்டாமை எனும் கொடுமையை நிரந்தரமாக்குகின்றன. இந்தியாவுக்கு சுதந்திரம் பெறும் பொருட்டுக் கூட தீண்டப்படாதவர்களின் ஜீவாதார உரிமைகளைப் பலி கொடுக்க மாட்டேன்; விற்க மாட்டேன். தீண்டப்படாதோரின் மிகப் பரந்த பகுதியினரை தனிப்பட்ட முறையில் நான் பிரதிநிதித்துவப் படுத்துவதாக உரிமை கொண்டாடுகிறேன். இங்கு நான் காங்கிரஸ் சார்பில் மட்டுமே பேசவில்லை; என் சொந்த சார்பிலும் பேசுகிறேன்; தீண்டப்படாதவர்களிடையே ஒரு பொது வாக்கெடுப்பு நடத்தப்படுமானால் மிக அதிகமான வாக்குகள் பெற்று நான் முன்னணியில் இருப்பேன். தனி வாக்காளர் தொகுதியும், தனி இட ஒதுக்கீடும் வைதிக இந்து தர்மத்துக்கே வெட்கக்கேடான, மானக்கேடான, அவக்கேடான தீண்டாமை என்னும் இக்கோரக் கொடுமையை ஒழித்துக் கட்டுவதற்கு எவ்வகையிலும் உதவிகரமாக இருக்காது என்று நான் இந்தியாவின் மூலை முடுக்கெல்லாம் சென்று தீண்டப்படாதோருக்கு எடுத்துரைப்பேன்; அதற்காக அல்லும் பகலும் உழைப்பேன்.

''தீண்டாமை எனும் இந்த இழுக்கை, அழுக்கை, சாபக்கேட்டை ஒழித்துக் கட்டுவதற்கு உறுதிபூண்டுள்ள ஏராளமான இந்து சீர்திருத்தவாதிகள் இன்று தோன்றி யுள்ளனர் என்பதை இந்தக் குழுவும், முழு உலகமும் அறிந்து கொள்ளட்டும். எங்கள் பதிவேடுகளில், மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் தீண்டப்படாதவர்கள் ஒரு தனி சமூகத்தினராகக் குறிக்கப்படுவதை நாங்கள் விரும்ப வில்லை. சீக்கியர்கள் நிரந்தரமாக ஒரு தனி இனமாக இருக்க முடியும்; முகமதியர்களும், ஐரோப்பியர்களும் அவ்வாறே இருக்க முடியும். தீண்டப்படாதவர்கள் என் றென்றும், எக்காலத்தும் தீண்டப்படாதவர்களாகவே இருக்க முடியுமா? தீண்டாமை நீடிப்பதைக் காட்டி லும் இந்து சமயம் மாண்டு மடிவதைக் கூட நான் வர வேற்பேன். டாக்டர் அம்பேத்கரிடம் நான் மிகுந்த மதிப் பும் மரியாதையும் வைத்திருக்கிறேன்; தீண்டப்படாத வர்கள் உய்வும் உயர்வும் பெறவேண்டும் என்பதில் அவர் கொண்டுள்ள ஆர்வத்தைப் பாராட்டுகிறேன்; இவ் வகையில் அவர் திறமையாகப் பணியாற்றி வருவதைப் போற்றுகிறேன்; எனினும் தீண்டாமையின் கோரப்பிடிப் பில் சிக்குண்டு அவர் எதிர்கொண்ட இன்னல் இடுக்கண் கள், துன்ப துயரங்கள், அவர் அனுபவிக்க நேரிட்ட கசப் பான அனுபவங்கள் இந்தப் பிரச்சினையில் அவரது கண் ணோட்டத்தையே திசைமாற்றி விட்டன என்று பணி வோடு கூறிக்கொள்ள விரும்புகிறேன். இவ்வாறு கூறுவது எனக்கு மனக் கஷ்டமாகத்தான் இருக்கிறது; ஆனால் இதைக் கூறவில்லை என்றால் என்னுடைய ஜீவனோடு ஜீவனாக உள்ள தீண்டப்படாதவர்களுக்குத் துரோகம் இழைத்தவனாவேன். இந்த உலகம் முழுவதையுமே எனக்குத் தருவதாயினும் அவர்களது நலன்களைப் பேரம்பேச மாட்டேன்; அவற்றைப் பணயம் வைக்க மாட்டேன். மிகுந்த பொறுப்பு உணர்வோடுதான் பேசு கிறேன்; இந்தியாவிலுள்ள தீண்டப்படாதவர்கள் அனை வர் சார்பிலும் தாம் பேசுவதாக டாக்டர் அம்பேத்கர் உரிமை கொண்டாடுவது முறையல்ல. இது இந்து சமயத் தில் ஒரு பிளவை உண்டுபண்ணும். அதை நான் விரும்ப வில்லை. தீண்டப்படாதவர்கள் விரும்பினால் இஸ்லாம் சமயத்துக்கோ அல்லது கிறித்தவ சமயத்துக்கோ மதம் மாறலாம். அதனை நான் சகித்துக் கொள்வேன். ஆனால்

கிராமங்களில் இந்து சமயம் இரண்டாகப் பிளவுபட்டிருப்பதை நான் சகித்துக் கொள்ள மாட்டேன். தீண்டப்படாதவர்களின் அரசியல் உரிமைப் பற்றி பேசுபவர்கள் தங்களுடைய இந்தியாவை அறிய மாட்டார்கள், இன்று இந்திய சமுதாயம் எவ்வாறு நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது என்பதை அறிய மாட்டார்கள்; ஆதலால் இதனை எதிர்ப்பதற்கு நான் ஒருவன் மட்டுமே இருக்கிறேன் என்றால், என் உயிரைக் கொடுத்தும் அதனை எதிர்ப்பேன் என்று வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.''

சிறுபான்மைக் குழு கூட்டத்தை மறுதேதி குறிப்பிடாமல் ஒத்திவைப்பதற்கு முன்னர் ஓர் இணக்கமான உடன்பாடு, ஓர் ஒன்றுபட்ட தீர்வு காணுவது சாத்தியமில்லை என்பதைத் தெரிந்து கொண்ட கூட்டத் தலைவர் பிரதிநிதிகளுக்கு ஒரு யோசனை கூறினார். அவர் பின்வருமாறு தெரிவித்தார்:

''வகுப்புப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணுமாறு என்னைக் கேட்டுக் கொள்ளும் ஒரு வேண்டுகோளில் இக்குழுவைச் சேர்ந்த நீங்கள் ஒவ்வொருவரும் கையெழுத்திடுவதற்கும், என் முடிவை ஏற்பதாக உறுதி கூறுவதற்கும் நீங்கள் சம்மதிப்பீர்களா? இது ஒரு நியாயமான கோரிக்கை என்று நம்புகிறேன்... நான் எல்லாப் பிரிவினரையும் அல்லது தனி மனிதர்களையும் மனத்தில் வைத்தே இதைக் கூறுகிறேன். வகுப்புப் பிரச்சினை சம்பந்தமாக தாற்காலிகமாகவாவது ஒரு தீர்வைத் தெரிவிக்கும்படி என்னைக் கேட்டுக்கொள்ளும் ஒரு பிரகடனத்தில் குழு உறுப்பினர்கள் கையெழுத்திட்டு, நாங்கள் இந்தத் தீர்வை ஏற்கிறோம் என்று கூறுவீர்களா? இப்போதே இதைச் செய்ய வேண்டும் என்று நான் கேட்கவில்லை. இந்தப் பிரகடனத்தில் கையெழுத்திட்டு, நான் கூறும் முடிவை ஏற்போம் என்றும், புதிய அரசியலமைப்பை உருவாக்க நடவடிக்கைகள் எடுக்கப்படும் காலத்தில் அந்த முடிவை செயல்படுத்த எங்கள் சக்திக்கு உட்பட்ட அனைத்தையும் செய்வோம் என்றும் நீங்கள் உறுதி அளிப்பீர்களா? இதையே பல பகுதியினரிடம் - குறைந்தபட்சம் தனி நபர்களிடம் - அவ்வப்போது கேட்டு வந்திருக்கிறேன்; ஆனால் என்றும் அந்த உறுதிமொழியை நான் பெற்றதில்லை. இதிலிருந்து நிலைமையை நிச்சயமாகப் புரிந்து கொள்ள

லாம். ஆனால் இதுஒருபுறமிருக்க, தான் அளித்துள்ள வாக்குறுதிகளை நிறைவேற்றுவதையும், ஓர் அரசியலமைப்புச் சட்டத்தைத் தயாரித்தளிப்பதையும் வகுப்பு வேறுபாடுகள் தடுப்பதற்கு அரசாங்கம் இடமளிக்காது என்று இந்தக் கூட்டத்தின் ஆரம்பத்தில் நான் குறிப்பிட்டதை அன்புகூர்ந்து மறந்துவிடாதீர்கள். எனவே, இதைவிட வகுப்பு வேறுபாட்டுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்காதீர்கள்.''

V

வகுப்புப் பிரச்சினைக்குத் தீர்வு காணுவதற்கு சிறு பான்மைக் குழு மேற்கொண்ட முயற்சிகள் இவ்விதம் முடிவடைந்தன. சிறு பான்மைக் குழுவில் நடைபெற்ற விவாதம் தீண்டப்படாதவர்கள் பால் திரு. காந்தி கொண்டுள்ள மனப்போக்கைத் துலாம்பரமாகப் படம்பிடித்துக் காட்டிற்று. திரு. காந்தி தீண்டப்படாதவர்களின் கடைந்தெடுத்த பரமவைரி என்பதை அனைவரும் உணர்ந்து கொண்டனர். தீண்டப்படாதோர் பிரச்சினையில் திரு. காந்தி இதுவரை கடைப்பிடித்து வந்திருக்கும் போக்கைக் கொண்டு பார்க்கும்போது, தீண்டப்படாதோரின் கோரிக்கைகளை எதிர்க்கும் பிரதான நோக்கத்தோடேயே அவர் இந்த வட்டமேசை மாநாட்டுக்கு வந்திருக்கிறார் என்று கூறுவது எவ்வகையிலும் தவறாகாது என்றே சொல்லலாம்.

தீண்டப்படாதோர் விஷயத்தில் திரு. காந்தி கடைப்பிடித்து வரும் போக்கை அவருடைய நண்பர்களாலேயே புரிந்து கொள்ள முடியவில்லை. முஸ்லீம்களுக்கும் சீக்கியர்களுக்கும் அங்கீகாரம் அளிக்கும்போது அதனை தீண்டப்படாதோருக்கு மறுப்பது அவர்களுக்கு மிகவும் வியப்பாகவும் புதிராகவும் இருக்கிறது. இதற்கு விளக்கம் அளிக்க வேண்டும் என்று கேட்கும் போதெல்லாம் அவர்கள் மீது அவர் எரிந்து விழுகிறார்; கோபக் கனலை கக்குகிறார். தீண்டப்படாதோரின் கோரிக்கைகளை எதிர்ப்பதற்கு எத்தகைய தருக்க ரீதியான, முரண்பாடற்ற சமாதானத்தை, நியாயமான காரணத்தை அவரால் அளிக்க முடியவில்லை. தீண்டப்படாதவர்களின் நல்வாழ்வுக்காக, முன்னேற் றத்திற்காக இந்துக்கள் தீவிரமாக பாடுபட்டு வருகிறார்கள், எனவே, அவர்களுக்கு அரசியல் ரீதியான பாதுகாப்புகள் எவையும் அவசியமில்லை என்னும் நிலையை வட்டமேசை மாநாட்டிற்குள் அவர் மேற்கொள்கிறார். ஆனால் மாநாட்டுக்கு வெளி

யேயோ அவர் முற்றிலும் வேறுபட்ட காரணங்களை முன்வைக்கிறார். தமது நிலைக்கு ஆதரவாக திரு. காந்தி கூறியதாவது:

''முஸ்லீம்களும், சீக்கியர்களும் நன்கு ஒன்றுபட்டுள்ளனர். ஆனால் தீண்டப்படாதோர் அப்படியில்லை. அவர்களிடம் அரசியல் உணர்வு மிகமிகக் குறைவாகவே காணப்படுகிறது; அவர்கள் மிகவும் மோசமான முறையில் நடத்தப்படுகின்றனர்; அவர்களைப் பாதுகாக்க நான் விரும்புகிறேன். அவர்களுக்குத் தனி வாக்காளர் தொகுதிகள் ஏற்படுத்தப்படுமானால், வைதீக இந்துக்களின் கொத்தளங்களாக, கோட்டைகளாக அமைந்துள்ள கிராமங்களில் அவர்களது வாழ்க்கை துயர்மிக்கதாக, அவப்பேறானதாக, இரங்கத்தக்கதாகவே இருக்கும். 'தீண்டப்படாதவர்களை' காலம் காலமாக, வழிவழியாகப் புறக்கணித்து வந்தமைக்காக சாதி இந்துக்கள்தான் பிராயச்சித்தம் தேடவேண்டும். தீவிர சமூக சீர்திருத்தத்தின் மூலமும், அவர்களுக்குத் தனி வாக்காளர் தொகுதிகளைக் கோராமல், சேவையின் வாயிலாக 'தீண்டப்படாதவர்களின்' வாழ்க்கையை மேம்படுத்துவதன் மூலமும் இந்தப் பிராயச்சித்தத்தைச் செய்ய முடியும். இவ்வாறில்லாமல் அவர்களுக்குத் தனி வாக்காளர் தொகுதிகளை வழங்குவது 'தீண்டப்படாதவர்களுக்கும்' வைதீக இந்துக்களுக்கும் இடையே பூசலையும், பிணக்கையும், பகைமையையும் தான் அதிகப்படுத்தும். முசல்மான்களுக்கும், சீக்கியர்களுக்கும் விசேடப் பிரதிநிதித்துவம் அளிக்கும் யோசனையை ஒரு தவிர்க்க முடியாத தீமை என்ற முறையிலேயே நான் சகித்துக் கொள்கிறேன் என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். ஆனால் இத்தகைய சலுகையை 'தீண்டப்படாதவர்களுக்கு' வழங்குவது நிச்சயமாக அவர்களுக்குத் தீங்கையே விளைவிக்கும். 'தீண்டப்படாதவர்களுக்கு' தனி வாக்காளர் தொகுதிகள் என்னும் யோசனை அரசிடமிருந்து உதித்த ஒரு புதிய துருப்புச் சீட்டாகும் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. உண்மையில் இப்போது அவர்களுக்குச் செய்ய வேண்டிய ஒரு விஷயம் அவர்களை வாக்காளர்கள் பட்டியலில் இடம்பெறச் செய்து அரசியலமைப்புச் சட்டத்தில் அவர்களுக்கு அடிப்படை உரிமைகளைப் பெற்றுத் தருவதே யாகும். அவர்கள் நியாயமற்ற முறையில் நடத்தப்படு

வார்களேயானால், திட்டமிட்ட முறையில் அவர்களது பிரதிநிதி விலக்கப்படுவாரேயானால் அப்போது விசேட தேர்தல் நீதிமன்றத்துக்குச் செல்ல அவர்களுக்கு உரிமை உண்டு; அந்த நீதிமன்றம் அவர்களுக்கு முழுப் பாதுகாப்பு அளிக்கும். தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்படும் ஒரு வேட்பாளரின் தேர்தலை ரத்து செய்து, நியாயமற்ற முறையில் விலக்கப்பட்டவர்களை முறைப்படி தேர்ந் தெடுப்பதற்கு இந்த விசேட நீதிமன்றங்கள் உரிமை பெற்றிருக்கும்.

''தீண்டப்படாதவர்களுக்கு' தனிவாக்காளர்கள் தொகுதி என்பது அவர்களது அடிமைத்தனத்தை நிரந்தரப்படுத் தவே, சாசுவதமாக்கவே செய்யும். தனி வாக்காளர் தொகுதி களைப் பெறுவதன் மூலம் முசல்மான்கள் ஒருபோதும் முசல்மான்கள் அல்லாதவர்களாகிவிட மாட்டார்கள். அவ்வாறிருக்கும்போது, 'தீண்டப்படாதவர்கள்' என்றென் றும் 'தீண்டப்படாதவர்களாக' இருக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா? உண்மையில், தனி வாக்காளர் தொகுதிகள் என்பவை தீண்டாமை என்னும் கறையை, வடுவை நீட்டித்து நிலைத்திருக்கவே செய்யும். எனவே, தீண்டாமையை வேரோடு வேரடி மண்ணோடு ஒழித்துக் கட்டுவதே இன்றைய தேவை; இதை நீங்கள் செய்து விட்டால், அகம்பாவமிக்க 'மேல்தட்டு' வகுப்பினர் 'கீழ்த் தட்டு' வகுப்பினர் மீது திணித்துள்ள இந்த முறைகேடு, ஒழுக்கக் கேடு அழிக்கப்பட்டுவிடும். இவ்வாறு இந்த அவக்கேட்டை நீங்கள் நிர்மூலமாக்கி விட்ட பிறகு, யாருக்கு தனி வாக்காளர் தொகுதிகளை வழங்குவீர்கள்? ஐரோப்பிய வரலாற்று ஏடுகளைச் சற்றுப் புரட்டிப் பாருங் கள். அங்கு தொழிலாளி வர்க்கங்களுக்கோ அல்லது பெண்களுக்கோ தனி வாக்காளர் தொகுதிகள் அளிக்கப் பட்டிருக்கின்றனவா? வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமையை உத்தரவாதம் செய்துவிடும்போது, அதன் மூலம் 'தீண்டப்படாதவர்களுக்கு' முழுப் பந்தோபஸ்தை, பாதுகாப்பை அளிக்கின்றீர்கள். கடைந்தெடுத்த வைதீகர் கள் கூட வாக்குகளுக்காக அவர்களது தயவை நாட வேண்டியதேற்படும்.

''தீண்டப்படாதவர்களுக்கு' தனி வாக்காளர் தொகுதிகள் அளிக்கப்பட வேண்டுமா என்று அவர்களுடைய பிரதிநிதியான டாக்டர் அம்பேத்கரைக் கேளுங்கள். டாக்டர் அம்பேத்கரிடம் எனக்கு பெருமதிப்பு உண்டு. அவர் கசப்பு உணர்ச்சி கொண்டிருப்பதில் நியாயம் இருக்கிறது. அவர் நமது மண்டைகளை உடைக்கவில்லை என்றால், அது அவரது தன்னடக்கத்தையே காட்டுகிறது. இன்று அவர் சந்தேக உணர்வில் ஆழ்ந்து தோய்ந்து போயிருக்கிறார்; இதனால் எதையுமே ஐயக் கண்கொண்டே நோக்குகிறார். ஒவ்வொரு இந்துவையும், 'தீண்டப்படாதவர்களின்' ஜென்ம பகைவனாகப் பார்க்கிறார்; இது முற்றிலும் இயல்பே. தென் ஆப்பிரிக்காவில் எனது ஆரம்ப நாட்களில், சென்றவிடமெல்லாம் ஐரோப்பியர்கள் வேட்டை நாய்களைப்போல் துரத்திக் கொண்டு வந்து, எனக்கு சொல்லொண்ணா துன்ப துயரங்களை, கொடுமைகளை இழைத்தபோது, இதே உணர்வுதான் எனக்கும் ஏற்பட்டது. எனவே டாக்டர் அம்பேத்கர் தமது சீற்றத்தை, வெறுப்பை வெளியிடுவது முற்றிலும் நியாயமே. ஆனால் அவர் நாடிவிரும்பும் தனி வாக்காளர் தொகுதிகள் அவருக்கு சமூக சீர்திருத்தத்தை வாரி வழங்கிவிடாது. அவர் வேண்டுமானால் உயர் பதவியையும் அந்தஸ்தையும் பெறலாம். இதனால் 'தீண்டப்படாதவர்களுக்கு' எந்த நன்மையும் விளைந்துவிடாது. இத்தனை ஆண்டுகளாக 'தீண்டப்படாதவர்களுடன்' உண்டு, உறங்கி, வாழ்ந்து, அவர்களது எல்லா இன்ப துன்பங்களிலும் பங்கெடுத்துக் கொண்டவன் என்ற முறையில் இதனை என்னால் உரிமையோடு கூறமுடியும்.''

வட்டமேசை மாநாட்டில் பிரசாரம் செய்வதோடு திரு. காந்தி நிற்கவில்லை; தாம் எதிர்பார்த்தபடி தமது பிரசாரம் வெற்றி பெறவில்லை எனக் கண்டதும் அவர் சூழ்ச்சி செய்வதில் இறங்கினார். பிரதமரின் பரிந்துரையின் பேரில் சிறுபான்மையினர் ஓர் உடன்பாட்டிற்கு வர இருக்கின்றனர் என்பதையும், அந்த உடன்பாட்டுக்கு ஏனைய சிறுபான்மையினரின், குறிப்பாக முஸ்லீம்களின் ஆதரவு கிட்டும் என்பதையும் திரு. காந்தி கேள்விப்பட்டபோது பெருமளவுக்கு கலக்கமடைந்தார். தீண்டப்படாதவர்களைத் தனிமைப்படுத்த அவர் ஒரு திட்டம் தீட்டினார். இதன் பொருட்டு, முசல்மான்களைத் தம் பக்கம் ஈர்க்க முற்பட்டார்; ஏற்கெனவே தாம்

ஏற்க மறுத்த முசல்மான்களின் பதினான்கு அம்சக் கோரிக்கை களை இப்போது ஏற்பதற்கு முன்வந்தார். தீண்டப்படாதவர்களுக்கு முசல்மான்கள் ஆதரவு அளிக்கிறார்கள் என்பதைக் கண்டபோது, தீண்டப்படாதவர்களுக்கு அளிக்கும் ஆதரவை திரும்பப் பெற்றுக் கொள்ளும் பட்சத்தில், அவர்களது பதினான்கு அம்சக் கோரிக்கை களைத் தாம் ஏற்கத் தயாராக இருப்பதாக திரு. காந்தி அறிவித்தார். இதன்பேரில் உண்மையில் ஓர் ஒப்பந்தம் கூடத் தயா ரிக்கப்பட்டு விட்டது. அதன் வாசகம் கீழே தரப்பட்டிருக்கிறது:

''காந்தி-முஸ்லீம் நகல் ஒப்பந்தம்''

வட்டமேசை மாநாட்டில் முஸ்லீம் பிரதிநிதிகள்*

தொலைபேசி: விக்டோரியா 2360
தந்தி: ''கோர்ட்லைக்''
இலண்டன்

அரசியார் இல்லம்
57, தூயஜேம்ஸ் வளாகம்,
பக்கிங்காம் வாயில்,
இலண்டன் தெ.மெ.1
அக்டோபர் 6, 1931

பின்கண்ட முன்மொழிவுகள் நேற்று இரவு 10 மணிக்கு திரு. காந்தியாலும் முஸ்லீம் பிரதிநிதிகள் குழுவாலும் விவாதிக்கப் பட்டன. இவற்றைத் தங்கள் உரிமைகளைப் பாதுகாக்கும் நோக்கில் முஸ்லீம் பிரதிநிதிகளின் முன்மொழிவுகள், காங்கிரஸ் கட்சிக் கொள்கைகளின் அடிப்படையில் காந்தியார் எடுத்துரைத்த முன் மொழிவுகள் என இருவகையாய்ப் பிரிக்கலாம். அவை காந்தி யாரின் ஒப்புதல் பெற்று முஸ்லீம் பிரதிநிதிகளின் கருத்தறிதலுக்கு அனுப்பப் பெற்றன. அவ்வரைவு வருமாறு:**

* இந்த ஆவணம் எனது ''பாகிஸ்தான் குறித்த சிந்தனைகள்'' (1939) என்ற நூலின் பிற்சேர்க்கையாக அச்சிடப்பட்டுள்ளது. அப்போதுதான் அது முதன் முறையாக அச்சில் வந்தது. அதன் மெய்ம்மை ஒருபோதும் ஐயறவுக்காளானதில்லை. முஸ்லீம் பிரதிநிதிகளிடமிருந்து இந்துப் பிரதிநிதி ஒருவர் இரகசியமாகப் பெற்ற இவ் ஆவணத் தின் நகல் ஒன்றை அவரிடமிருந்து பெற்றேன்.

** முஸ்லீம் லீக் பிரதிநிதிகள் அலுவலகத் தாளில் இவ் ஆவணம் தட்டச்சு செய்யப் பட்டிருந்ததென்பதை இது காட்டுகிறது.

| முஸ்லீம் முன்மொழிவுகள் | காந்தியார் முன்மொழிவுகள் |
|---|---|
| 1. பஞ்சாபிலும் வங்காளத்திலும் முஸ்லீம்கள் மொத்த மக்கட் தொகையில் 1 சதவீதமே கூடுதலாகப் பெற்று பெரும்பான்மையினராக உள்ளனர். இந்நிலைமையில் அவையில் அவர்களுக்கு 51 சதவிகித இடங்கள் ஒதுக்கப்பட்டு அவற்றிற்கான தேர்தல்கள் கூட்டு வாக்காளர் தொகுதிகள் மூலம் நடைபெற வேண்டுமா என்பதைப் புதிய அரசியலமைப்புத் திட்டம் நடைமுறைக்கு வருவதற்கு முன்னரே முஸ்லீம் வாக்காளரிடையே வாக்கெடுப்புக்கு விடப்பட்டு, வாக்கெடுப்பின் முடிவுகள் அப்படியே ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். | 1. வயது வந்தோர் வாக்குரிமையின் அடிப்படையில்தான் வாக்கெடுப்பு நடைபெற வேண்டும். |
| 2. முஸ்லீம்கள் சிறுபான்மையினராய் வாழும் பிற மாகாணங்களில் தற்போது நிலவி வரும் விகிதங்களிலேயே இட ஒதுக்கீடு தொடர்ந்து அளிக்கப்பட வேண்டும். ஒதுக்கீடு கூட்டுத்தொகுதி முறையிலா, தனித்தொகுதி முறையிலா என்பது புதிய அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ், முஸ்லீம் வாக்காளர்களின் கருத்துக் கணிப்புக்கு விடப்பட்டு அதில் கிடைக்கும் முடிவு ஏற்றுக் கொள்ளப் பட வேண்டும். | 2. சீக்கிய, முஸ்லீம் இனத்தவர் அன்றிப் பிறிதெந்தச் சிறுபான்மையினர்க்கும் தனி ஒதுக்கீடு கூடாது.<br><br>காங்கிரஸ் கட்சியின் கோரிக்கைகளாவன:<br><br>அ) முழுமையான விடுதலை.<br>ஆ) நாட்டுப் பாதுகாப்பின் மீது உடனடியான கட்டுப்பாடு.<br>இ) வெளிநாட்டுறவு மீது முழுக் கட்டுப்பாடு.<br>ஈ) நிதியின் மீது முழுக் கட்டுப்பாடு. |

3. பிரிட்டிஷ் இந்திய மையச் சட்டமன்றத்தின் இரு அவைகளிலும் முஸ்லீம்களுக்கு 26% பிரதிநிதித்துவம் தேவை. இந்தியச் சமஸ்தானங்களின் வாயிலாக மேலும் 7%. ஆக மொத்த உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பங்கு முஸ்லீம்கள் இருக்க வேண்டும்.

4. எஞ்சிய அதிகாரங்கள் அனைத்தும் கூட்டாட்சியமைப்பில் சேரும் மாகாணங்களுக்கே இருக்க வேண்டும்.

5. கீழ்க்கண்ட சிக்கல்கள் குறித்தும் ஒப்பந்தங்கள் செய்து கொள்ளப்படுகின்றன.

i) சிந்து*

ii) வடமேற்கு எல்லைப்புற மாகாணம்**

iii) படைத்துறைப் பணிகள்***

iv) அமைச்சரவை****

v) அடிப்படை உரிமைகளுக்கும், சமய, பண்பாட்டு உரிமைகளுக்கும் பாதுகாப்பு

vi) எந்தவொரு இனத்தையும் பாதிக்கும் சட்டமியற்றலுக்கெதிரான பாதுகாப்பு.

உ) பொதுக் கடன்கள், பிற கடப்பாடுகள் குறித்து கட்டற்ற நடுவர் மன்றத்தின் ஆய்வு.

ஊ) பங்குதாரர் போன்று எத்தரப்பிற்கும் பிரிந்துபோக உரிமை.

---

* சிந்து மாநிலம் தனியாகப் பிரிக்கப்படலைக் குறிக்கிறது

** வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் மாகாண சுயாட்சியும், தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் அரசும்

*** படைத்துறைப் பணிகளில் ஒதுக்கீடு கோரல்

**** அமைச்சரவையில் பங்கு.

முஸ்லீம் பிரதிநிதிகளுடன் காந்தியார் செய்துகொள்ள உடன் பட்ட ஒப்பந்தம் இதுதான். இவ்வொப்பந்தத்தின் வாயிலாக, முஸ்லீம் பிரதிநிதிகள் எழுப்பிய பதினான்கு கோரிக்கைகளுக்கும் இணங்கத் தயாராக இருந்தார். இதற்கு பதிலுதவியாக தனி ஒதுக்கீடு கோட்பாட் டின் பயன் இந்துக்கள், முஸ்லீம்கள், சீக்கியர்கள் ஆகிய மூன்று சமயத்தவருக்கும் தொடருவதை அவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டு மென்று கேட்டார். இப்படியொரு உடன்பாடு செய்துகொள்வதில் என்ன தவறு எனச் சிலர் நினைக்கலாம். இம்மூன்று சமயங்களைச் சேர்ந்த மக்களைத் தவிர வேறெவர்க்கும் தனி ஒதுக்கீடு தர இணங்க மாட்டோம் என்றுதானே காங்கிரஸ் கட்சியும் கூறி வந்துள்ளது என்றும் எண்ணலாம். ஆனால் இக்கண்ணோட்டத்தைப் பற்றி மேலோட்டமாகக் கருதி முடிவு செய்துவிட முடியாது. காந்தியாரின் போக்கு சரியெனக் கருதுவோர் இரு வினாக்களைக் கேட்டுப் பார்க்க வேண்டும். பிற சிறுபான்மையினருக்கும், தீண்டப்படாதவர்களுக்கும் விசேடப் பிரதிநிதித்துவத்தை மறுக்கும் இந்த நகல் ஒப்பந்தத்தில் தீண்டப்படாதவர்கள் குறிப்பிடப் படவில்லை என்பது உண்மையே. ஆனால் சீக்கியர்களைத் தவிர வேறு எந்தச் சிறுபான்மையினரையும் ஆதரிக்கக் கூடாது என்று முசல்மான்கள் நிர்ப்பந்திக்கப்பட்டது எதைக் காட்டுகிறது? அவர்கள் தீண்டப்படாதவர்களை ஆதரிக்கக் கூடாது என்பதைத் தெளிவாகக் காட்டுகிறதல்லவா? எனினும் இந்தச் சூழ்ச்சியில் திரு. காந்தி வெற்றிபெறவில்லை; இது இயல்பே. தங்களுக்குப் பாதுகாப்புகள் வேண்டுமெனக் கோரும் முசல்மான்கள் தீண்டப்படாதவர்கள் இதேபோன்று முன்வைக்கும் கோரிக்கையை எதிர்க்க முடியாதல்லவா? தீண்டப்படாதவர்களை எப்படியும் ஒழித்துக் கட்டியே தீரவேண்டும் என்ற வெறியில், எது சரி, எது தவறு என்பதைச் சீர்தூக்கிப் பார்க்கத் தவறும் அளவுக்கு திரு. காந்தி சென்று விட்டார் என்றே கூறவேண்டும். தாம் சொன்ன சொல்லைக் காப் பாற்ற வேண்டுமென்ற அக்கறை, ஆர்வம் திரு. காந்திக்கு இல்லை. சிறுபான்மைக் குழு கூட்டத்தில் காந்தி என்ன கூறினார்? தங்களுக்குத் தனித் தொகுதிகள் வேண்டும் என்று தீண்டப்படாதவர்கள் முன் வைக்கும் கோரிக்கையை ஏற்க சிறுபான்மைக் குழு இணங்குமானால் அவ்வாறே அது செய்யலாம் என்று அந்தக் குழுக் கூட்டத்தில் பேசும் போது திரு. காந்தி கூறினார். இதன் பொருள் என்ன? பெரும்பான்மை யினரது முடிவுக்கு அவர் கட்டுப்படுவதாகத் தானே இதற்குப் பொருள். ஆனால் தீண்டப்படாதவர்களை ஏனைய சிறுபான்மையினரும் ஆதரிக்க இணங்கி விட்டனர் என்று தெரியவந்தபோது, அவர் முசல் மான்களை அணுகவும், காங்கிரசும், இந்து மகாசபையும், ஏன் சைமன் கமிஷனே கூட நிராகரித்துவிட்ட அவர்களது பதினான்கு அம்சக்

கோரிக்கைகளை ஏற்று அவர்களைத் தீண்டப்படாதவர்களுக்கு எதிராகத் தூண்டிவிடவும் அவர் தயங்கவில்லை. பொதுமக்களின் அபிப்பிராயத்தையும், தார்மீக நெறியையும், பொது ஒழுக்கத்தை யும் காற்றில் பறக்க விடுவதற்குக் கூட அவர் தயாராக இருந்த போதி லும், அவரது குரூர சூழ்ச்சி மண் கவ்வவே செய்தது; ஏனென்றால் இந்தக் கொடிய சதியில் தங்களை இணைத்துக் கொண்டு தங்களுக்கு அவப்பெயரைச் சம்பாதித்துக் கொள்ள அவர்கள் விரும்பவில்லை; எனவே, இந்த யோசனைக்கு இணங்க அவர்கள் மறுத்துவிட்டனர். வட்டமேசை மாநாட்டின் இரண்டாவது கூட்டத்தொடர் கலைக்கப் பட்டபோது, வகுப்புப் பிரச்சினை சம்பந்தமாக மத்தியஸ்தம் செய்து, தமது தீர்ப்பை அளிப்பதற்கு தமக்கு அதிகாரம் தரும் கையெழுத் திட்ட ஒரு வேண்டுகோளைச் சமர்ப்பிக்கும்படி பிரதமர் தெரிவித்த யோசனையை சிறுபான்மைக் குழுவின் பிரதிநிதிகள் ஏற்றுக் கொண் டனர். திரு. காந்தி உட்பட பல பிரதிநிதிகள் அவ்வாறே செய்தனர்.[1] இதற்குப் பிறகு பிரதிநிதிகள் இந்தியாவுக்குத் திரும்புவதையும், பிரதமரின் மத்தியஸ்தத்தை ஒப்புக்கொண்டுவிட்ட நிலையில் அவரது தீர்ப்பை மகிழ்ச்சியோடு ஏற்பதற்கு அதற்காகக் காத்துக் கொண்டிருப்பதையும் தவிர வேறு வழியில்லை.

## VI

மேற்கொண்டு செல்லுவதற்கு முன்னர், பிரதமர் எத்தகைய தீர்ப்பை வழங்கினார் என்பதைக் கூறுவதற்கு முன்னர் வாக்குரிமைக் குழுவின் உறுப்பினர் என்ற முறையில் நான் எதிர்கொண்ட ஒரு விந்தையான நிகழ்ச்சியை இங்கு கூற வேண்டும். வட்டமேசை மாநாட் டின் இரண்டாவது கூட்டத் தொடர் முடிவடைந்த பிறகு, புதிய அரசிய லமைப்பில் எத்தகைய வாக்குரிமை முறையைக் கைக்கொள்ள வேண்டும் என்னும் பிரச்சினையை ஒரு குழு ஆராய்வது உசிதமாக இருக்கும் என்று பிரதமர் கருதினார். இதன்படி, லோதியன் பிரபுவைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவை 1931 டிசம்பரில் அவர் நிய மித்தார். எத்தகைய வாக்குரிமை முறையைக் கடைப்பிடிப்பது என் பதைப் பரிசீலித்து அதனை வகுத்தளிப்பதே அதன் பிரதான பணி யாகும். குழுவின் தலைவருக்கு பிரதமர் எழுதிய நெறி முறைகள் கடிதத்தில் பின்கண்டவாறு குறிப்பிட்டிருந்தார்:

---

1. இத்தகைய வேண்டுகோள் எதையும் நான் முன்வைக்கவில்லை. தீண்டப்படாதவர் களின் கோரிக்கைகள் மிகவும் நியாயமானவை, ஆதலால், மத்தியஸ்தம் ஏதும் தேவையில்லை என்பது என் கருத்து.

> ''பொறுப்பளிக்கப்படும் சட்டமன்றங்கள் பொதுமக்களின் பிரதிநிதித்துவ அமைப்புகளாக இருக்க வேண்டும்; சமுதாயத்தின் எந்த முக்கியமான பகுதியும் தனது தேவைகளையும் கருத்துக்களையும் வெளியிடுவதற்கு எத்தகைய இடர்ப்பாடுகளும் இருக்கக்கூடாது''.

குழு தனது பணியை 1932 ஜனவரி ஆரம்பத்தில் தொடங்கியது. குழு தனது பணியைத் திறம்பட ஆற்றுவதற்கு மாகாண அரசாங்கங்கள் மற்றும் மாகாண வாக்குரிமைக் குழுக்கள் ஆகியவற்றின் உதவியை நாடிப் பெற்றது. வாக்குரிமைப் பிரச்சினையை ஆராயும் பொருட்டு அதிகாரிகள் அல்லாதவர்களைக் கொண்டு ஒவ்வொரு மாகாணத்திலும் பிரத்தியேகமாக அமைக்கப்பட்டவையாகும் இந்தக் குழுக்கள். லோதியன் குழு பல வினாத்தாள்களை வெளியிட்டது. இவற்றுக்கு மாகாண அரசாங்கங்களும், மாகாண வாக்குரிமைக் குழுக்களும், தனி நபர்களும் பதிலளித்தனர். ஒவ்வொரு மாகாண வாக்குரிமைக் குழுவுடன் சேர்ந்து லோதியன் குழு பல சாட்சிகளை விசாரித்தது. மாகாண அரசாங்கங்களும் மாகாண வாக்குரிமைக் குழுக்களும் தமது அறிக்கைகளைத் தனித்தனியே சமர்ப்பித்தன. லோதியன் குழு இந்த அறிக்கைகளைப் பற்றித் தனது சொந்த முடிவுக்கு வருவதற்கு முன்னர், இவற்றைக் குறித்து ஒவ்வொரு மாகாண அரசாங்கத்துடனும் மாகாண வாக்குரிமைக் குழுவுடனும் விவாதித்தது. லோதியன் குழுவிடம் சில பொதுவான பணிகளுடன் ஒரு விசேடப் பணியையும் பிரதமர் ஒப்படைத்திருந்தார். இது தீண்டப்படாதவர்களின் அரசியல் கோரிக்கைகள் சம்பந்தப்பட்டதாகும். குழுவின் தலைவருக்கு பிரதமர் எழுதியிருந்த நெறிமுறைகள் கடிதத்தில் இவ்விசேடப் பணியைப் பற்றிப் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

> ''தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதித்துவத்துக்கு புதிய அரசியலமைப்புச் சட்டத்தில் போதிய வழிவகை ஏற்பாடு செய்யப்பட வேண்டும் என்பதும், நியமனத்தின் மூலம் இத்தகைய பிரதிநிதித்துவத்துக்கு வகை செய்யும் முறை இனியும் உகந்ததல்ல, உசிதமானதல்ல என்பதும் மாநாட்டில் பல்வேறு விஷயங்கள் குறித்து நடைபெற்ற விவாதத்தின்போது தெள்ளத்தெளிவாயிற்று. தனி வாக்காளர் தொகுதி முறையை தாழ்த்தப்பட்ட வகுப்பினர் விஷயத்தில் கடைப்பிடிப்பது குறித்து கருத்து வேறுபாடு

நிலவுவது தங்களுக்குத் தெரியும். எனவே, உங்கள் குழு வின் ஆய்வுகள் இந்தப் பிரச்சினைக்கு ஒரு தீர்வு காணுவ தற்கு உதவும் வகையில் இருக்க வேண்டும்; மேலும் உங்கள் பரிந்துரையின்படியான பொதுவாக்குரிமை விஸ்தரிப்பு மூலம் சாதாரண வாக்காளர் தொகுதிகளில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் வாக்களிக்கும் உரிமையை எந்த அளவுக்குப் பெறுவார்கள் என்பதையும் உங்கள் ஆய்வுகள் சுட்டிக்காட்டுவதாக இருக்க வேண்டும். அதே சமயம் பொதுவாக எல்லா இடங்களிலுமோ அல்லது மக்கட் தொகையில் நன்கு வரையறுக்கப்பட்ட, தனித்த, வேறுபட்ட ஒரு சக்தியாக தாழ்த்தப்பட்ட வகுப்பினர் உள்ள மாகாணங்களிலோ அவர்களுக்குத் தனி வாக் காளர் தொகுதிகள் அமைப்பது என இறுதியாக முடிவு செய்யும் பட்சத்தில், அப்போது வாக்குரிமையை விஸ்த ரிக்கும் பிரச்சினை பற்றி ஆராய்ந்து வரும் உங்கள் குழு தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு தனிப் பிரதிநிதித்துவம் வழங்கும் முறையை வகுப்பதற்கு உதவக் கூடிய தகவல் களைத் தயாரித்தளிக்க வேண்டும்''.

இந்த ஆணைகளைத் தொடர்ந்து, பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள தீண்டப்படாதவர்களின் மக்கட் தொகை என்ன என்பது குறித்து ஒரு முடிவுக்கு வரும் பணி லோதியன் குழுவுக்கு ஏற்பட்டது.

தீண்டப்படாதவர்களின் எண்ணிக்கை என்ன என்ற கேள்விக்கு அளிக்கப்பட்ட விதம் விதமான, வேறுவேறான, முரண்பட்ட பதில் கள் எவரையும் மலைக்க வைக்கவே செய்யும், தடுமாற்றம் கொள் ளவே செய்யும். சில பிரகிருதிகள் லோதியன் குழுவின் முன் சாட் சியம் அளிக்கும்போது, தங்கள் மாகாணத்தில் தீண்டப்படாதவர் களின் எண்ணிக்கை மிக மிகச் சொற்பம் என்று சாதித்தனர். வேறுசில புண்ணியவான்களோ இன்னும் ஒருபடி மேலே சென்று தங்கள் மாகா ணத்தில் தீண்டப்படாதவர்களே இல்லை என்று முழுப் பூசணிக் காயையும் சோற்றில் மறைக்கப் பார்த்தனர்! அதிலும் சில இந்துக்கள் லோதியன் குழுவின் முன் தோன்றி தீண்டப்படாதவர்கள் என்பவர் களே இல்லை என்று பொய்ச் சாட்சியம் அளித்தது மிகவும் அசா தாரணமான காட்சியாக இருந்தது; வேறு சிலர் தீண்டப்படாதவர் களின் எண்ணிக்கையை மிக மிகக் குறைத்துக் கூறினர். மாகாண வாக்குரிமைக் குழுவின் உறுப்பினர்களும் இந்தச் சூழ்ச்சித் திட்டத் திற்கு உடந்தையாக இருந்தனர். அதிலும் லோதியன் குழுவிலுள்ள

சில இந்து உறுப்பினர்கள் இந்த சூதாட்டத்தில் பங்குதாரர்களாக இருந்தது இன்னும் வியப்பிலும் வியப்பானதாகும். தீண்டப்படாத வர்கள் என்பவர்களே இல்லை என்று மறுக்கும் அல்லது அவர் களது எண்ணிக்கையை மிக மிக அற்பமாகக் கணிக்கும் இந்த விப ரீதப் போக்கு சில மாகாணங்களில் பெரிதும் தலைதூக்கியிருந்தது. உண்மையை எந்த அளவுக்கு அடியோடு மூடிமறைக்க இந்துக்கள் தயாராக இருந்தனர் என்பதைப் பின்கண்ட புள்ளிவிவரங்களிலிருந்து தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம் ஐக்கிய மாகாணங்களில் 1931ல் தீண்டப்படாதவர்களின் மொத்த எண்ணிக்கை 1 கோடி 26 லட்சம் என்று குடிமதிப்புப் புள்ளிவிவர ஆணையர் மதிப்பிட்டிருந்தார்; மாகாண அரசாங்கம் இந்த எண்ணிக்கை 68 லட்சம் என்று மதிப் பிட்டிருந்தது; ஆனால் மாகாண வாக்குரிமைக் குழுவோ வெறும் 6 லட்சம்தான் என்று முயலுக்கு மூன்றே கால் என்று ஒரேயடியாக சாதித்தது! வங்காளத்தில் தீண்டப்படாதவர்கள் எண்ணிக்கை 1 கோடி 3 லட்சம் என்று சென்சஸ் கூறிற்று; மாகாண அரசாங்கம் இதனை 1 கோடி 12 லட்சம் என்று நிர்ணயித்தது; ஆனால் மாகாண வாக்குரிமைக் குழுவோ வெறும் 70 ஆயிரம்தான் என்று உடும்புப் பிடியாக சாதித்தது!

வட்டமேசை மாநாடு நடைபெறுவதற்கு முன்னர் தீண்டப் படாதவர்களின் துல்லியமான எண்ணிக்கை குறித்து எந்த இந்துவும் கவலைப்படவில்லை; தீண்டப்படாதவர்களின் மொத்த எண்ணிக்கை சுமார் 7 கோடி முதல் 8 கோடி இருக்கும் என்று சென்சஸ் ஆணையர் வெளியிட்டிருந்த மதிப்பீட்டை அவர்கள் ஏற்றுக் கொண்டிருந் தனர். அப்படியிருக்கும்போது லோதியன் குழு இந்தப் பிரச்சினை யைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டபோது, இந்துக்கள் திடீ ரென்று இந்த மதிப்பீட்டை ஏன் எதிர்க்க வேண்டும்? இதற்கான பதில் மிகத் தெளிவானது. லோதியன் குழு அமைக்கப்படுவதற்கு முன்னர் தீண்டப்படாதவர்களின் எண்ணிக்கை குறித்த விஷயம் அத்தனை முக்கியத்துவமற்றதாக இருந்தது; மதிப்பில்லாததாக இருந்தது. ஆனால் வட்டமேசை மாநாட்டிற்குப் பிறகுதான் அவர்களுக்கு உண்மை தெரியவந்தது; தீண்டப்படாதவர்கள் தங்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் கோருகிறார்கள் என்பதையும், இதுவரை தாங்கள் அனுபவித்து வந்த பங்கிலிருந்துதான் இது தரப்பட வேண்டியிருக்கும் என்பதையும், அவர்கள் கோரும் பங்கின் அளவு தீண்டப் படாதவர் களின் எண்ணிக்கையையே பொறுத்திருக்கும் என்பதையும் அவர்கள் தெரிந்து கொண்டார்கள். இத்தகைய நிலைமையில், தீண்டப்படாத வர்கள் என்பவர்கள் இருக்கிறார்கள் என்பதை ஒப்புக் கொள்வது

தங்களது நலன்களுக்கு ஊறு விளைவிக்கும் என்பதையும் அவர்கள் உணர்ந்து கொண்டார்கள். இச்சூழ்நிலையில், உண்மையையும் தகைமையையும் பண்பையும் பலியிட அவர்கள் சற்றும் தயங்க வில்லை; இந்தியாவில் தீண்டப்படாதவர்கள் என்பவர்கள் யாருமே இல்லை என்ற மிகவும் பாதுகாப்பான வழிமுறையைப் பின்பற்றத் தீர்மானித்தார்கள்; இதன் மூலம் தீண்டப்படாதவர்களது அரசியல் கோரிக்கைகளின் அடித்தளத்தையே தகர்த்துவிடலாம் என்றும், எத் தகைய வாதப் பிரதிவாதத்துக்கும் இடமில்லாமல் செய்துவிடலாம் என்றும் கருதினார்கள். முற்றிலும் சுயநல நோக்கங்களுக்காக தீண்டப் படாதவர்களுக்கு எதிராக இந்துக்கள் எவ்விதம் பச்சையாக, பட்ட வர்த்தனமாக, திட்டமிட்ட முறையில் சதித்திட்டம் தீட்டுகிறார்கள் என்பதையும், நேரடியாக செய்ய முடியாததை மறைமுகமாக செய்ய அவர்கள் எத்தகைய கீழ்த்தரமான செயலில் இறங்குகிறார்கள் என் பதையும் இதிலிருந்து தெள்ளத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

## VII

போகட்டும், இனி விட்ட இடத்திலிருந்து தொடர்கிறேன். வட்டமேசை மாநாட்டில் திரு. காந்தியைக் குறைகூறி விமர்சித்த வர்களே அதிகம் பேர். பக்தர்கள் எவரும் அவருக்கு அங்கு இல்லை. இவ்வாறாக இந்த மாநாடு பற்றிப் பலவிதத்திலும் வெறுப்பும் அதிருப்தியும் அடைந்த திரு. காந்திதான் இந்தியாவுக்குத் திரும்பிய முதல் நபராவார். இந்தியாவுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்த போது, ரோமாபுரியில் ஒரு பத்திரிகை நிருபருக்கு ஒரு பேட்டி அளித் தார். சட்ட மறுப்பு இயக்கத்தை மீண்டும் தொடங்கப் போவதாக அந்தப் பேட்டியில் மிரட்டியிருந்தார். எனவே, இந்திய மண்ணில் காலடி எடுத்து வைத்ததும் அவர் கைது செய்யப்பட்டு, சிறையில் அடைக்கப் பட்டார். சிறையில் அவரது மனம் சுயராஜ்யத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கவில்லை; தீண்டப்படாதவர்களைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தது. தீண்டப்படாதவர்களுக்கு தனிப் பிரதிநிதித்துவ உரிமை அளிக்கப்படுமாயின் 'என் உயிரைக் கொடுத்தேனும் அதனை எதிர்ப்பேன்' என்று அச்சுறுத்தியிருந்த போதி லும், வட்டமேசை மாநாட்டில் தீண்டப் படாதவர்கள் சார்பில் முன் வைக்கப்பட்ட கோரிக்கைகளை பிரதமர் மத்தியஸ்தர் என்ற முறையில் எங்கே ஏற்றுக் கொண்டு விடுவாரோ என்று திரு. காந்தி அஞ்சினார். ஆகவே, பிரதமர் எந்த முடிவையும் அறிவிப்பதற்கு முன்னர், அப்போது இந்தியா மந்திரியாக இருந்த சர் சாமுவேல் ஹோருக்கு 1932 மார்ச் 11 ஆம் தேதி சிறையிலிருந்தபடியே ஒரு

கடிதம் எழுதினார். தீண்டப்படாதவர்களின் கோரிக்கையை தாம் வன்மையாக எதிர்ப்பதாக அதில் குறிப்பிட்டிருந்தார். அந்தக் கடிதத்தின் வாசகம் வருமாறு:

''அன்புள்ள சர். சாமுவல் அவர்களுக்கு,

''இரண்டாவது வட்டமேசை மாநாட்டில் சிறுபான்மையினரின் கோரிக்கை முன்வைக்கப்பட்டபோது நான் நிகழ்த்திய உரையின் இறுதியில், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித்தொகுதி உரிமை அளிக்கப்படுமானால் என் உயிரைக் கொடுத்தேனும் அதனை எதிர்ப்பேன் என்று நான் கூறியது உங்களுக்கு நினைவிருக்கலாம். இது மிகவும் பரபரப்பான சூழ்நிலையில் ஏதோ உணர்ச்சிவசப்பட்டுக் கூறியதல்ல. மாறாக, இது ஆழ்ந்த அர்த்தபாவமிக்க கூற்றாகும், கருத்தாகும். இந்தியாவுக்குத் திரும்பியதும் இந்தக் கருத்தை அனுசரித்து, அடியொட்டி, தனித்தொகுதி யோசனைக்கு, அதிலும் குறிப்பாக தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித்தொகுதி உரிமை அளிக்கும் திட்டத்திற்கு எதிராக பொதுமக்களின் கருத்தைத் திரட்ட வேண்டும் என்று எண்ணியிருந்தேன். ஆனால் நான் இந்திய மண்ணில் அடியெடுத்து வைத்ததும் சிறை வைக்கப்பட்டதால் இந்த எண்ணம் நிறைவேறவில்லை.

''நான் சிறையில் படிப்பதற்கு அனுமதிக்கப்பட்டிருக்கும் பத்திரிகைகளில் வெளிவந்திருக்கும் செய்திகளிலிருந்து மன்னர் பிரான் அரசாங்கம் எந்தக் கணத்திலும் தனது முடிவை அறிவிக்கலாம் என்பதைத் தெரிந்து கொண்டேன். தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித் தொகுதிகளைத் தோற்றுவிப்பது இந்த முடிவின் நோக்கம் என்றால், எனது சூளுரையைச் செயல்படுத்துவதற்குத் தேவையான நடவடிக்கைகளை உடனடியாக எடுக்க வேண்டும் என்றுதான் முதலில் நினைத்தேன். ஆனால் பிரிட்டிஷ் அரசுக்கு இதுபற்றி முன்கூட்டியே தெரிவிக்காமல் நடவடிக்கை எடுப்பது நியாயமல்ல, உசிதமல்ல என்று கருதுகிறேன். என் கருத்துக்கு நான் அளிக்கும் முக்கியத்துவத்தை அவர்கள் அளிக்க மாட்டார்கள் என்பது இயல்பே.''

''தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு தனித் தொகுதிகள் உருவாக்கப்படுவதற்கு நான் காட்டிவந்த கடுமையான எதிர்ப்பையும், தெரிவித்து வந்த எல்லா ஆட்சேபங்களையும் இங்கு மீண்டும் உறுதிப்படுத்த வேண்டிய அவசியமில்லை. என்னை அவர்களில் ஒருவனாக நான் கருதுகிறேன். அவர்கள் விஷயம் மற்றவர்களின் விஷயத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது. சட்டமன்றங்களில் அவர்கள் பிரதிநிதித்துவம் பெறுவதை நான் எதிர்க்கவில்லை. மாறாக, பிறர் விஷயத்தில் தேர்தல் விதிகள் கடுமையாக இருந்தாலும், கல்வித்தகுதி, சொத்துரிமை முதலிய எந்தப் பாகுபாடுமின்றி, இவர்களில் வயதுவந்த ஆண், பெண் அனைவரும் வாக்காளர்களாகப் பதிவுசெய்து கொள்ளப்படுவதை நான் உறுதியாக ஆதரிக்கிறேன், அவாவுகிறேன். ஆனால் எந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தாலும், முற்றிலும் அரசியல் நோக்கிலிருந்து பார்த்தாலும் தனித் தொகுதி முறை அவர்களுக்கும், இந்து சமயத்திற்கும் தீங்கு விளைவிக்கக் கூடியது, கேடு பயப்பது என்று கருதுகிறேன். தனித் தொகுதிகளினால் அவர்களுக்கு ஏற்படக்கூடிய இன்னல் இடுக்கண்களை, துன்ப துயரங்களைப் புரிந்து கொள்வதற்கு, மதிப்பிடுவதற்கு சாதி இந்துக்கள் எனப்படுவோரிடையே அவர்கள் எவ்வாறு பரவியிருக்கிறார்கள், எவ்விதம் அவர்களைச் சார்ந்திருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். இது இப்படியென்றால் இந்து சமயத்தைப் பொறுத்த வரையில் தனித் தொகுதி முறை அதனை உடைத்துத் தகர்த்துக் கூறு போட்டுவிடும்.

''எனக்கு இந்த வகுப்பாரின் பிரச்சினை பிரதானமாக தார்மிக சார்புடையது, சமயத் தொடர்புடையது. இதன் அரசியல் முக்கியத்துவம் முக்கியமானதே என்றாலும் தார்மிக, சமயப் பிரச்சினையுடன் ஒப்பிடும் போது அந்த முக்கியத்துவம் ஒடுங்கி, சுருங்கி குன்றி விடுகிறது.

''இந்த விஷயத்தில் என் உணர்வுகளை நீங்கள் மதிப்பிட வேண்டும்; சிறு வயது முதலே இந்த வகுப்பாரின் நலனில் நான் எவ்வாறு ஆழ்ந்த அக்கறை காட்டி வந்திருக்கிறேன், எனக்குள்ள அனைத்தையும் எவ்விதம் பணயம் வைத்து வந்துள்ளேன் என்பதை நீங்கள் மனத்தில் கொள்ள வேண்டும். எவ்வகையிலும் என்னைப் பெருமைப்படுத்திக்

கொள்ள இதைச் சொல்லவில்லை. திட்டமிட்டு நூற்றாண்டுகள் காலமாகத் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு இழைக்கப்பட்டு வந்த கொடுமைகளுக்கு, இழிவுகளுக்கு, அவமதிப்புகளுக்கு இந்துக்கள் என்னதான் பிராயச்சித்தம் செய்தாலும், கழுவாய் தேடினாலும் அதனை ஈடுகட்ட முடியாது என்பதை உணர்கிறேன்.

''ஆனால் இம்மக்கள் கசக்கிப் பிழியப்பட்டு, அடக்கப்பட்டு, ஒடுக்கப்பட்டு, அல்லல்பட்டு ஆற்றாது விடும் கண்ணீருக்குத் தனித் தொகுதிமுறை ஒரு பரிகாரமாகவோ, நோய் தீர்க்கும் மருந்தாகவோ இருக்க முடியாது என்பதை அறிவேன். எனவே, தாழ்த்தப்பட்ட இனத்தாருக்குத் தனித் தொகுதிகள் அமைப்பதென அரசு முடிவு செய்யும் பட்சத்தில் அதனை எதிர்த்து நான் சாகும்வரை உண்ணாவிரதம் இருப்பேன் என்பதை மன்னர் பிரான் அரசாங்கத்துக்குப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

''நான் சிறைக் கைதியாக இருக்கும்போது இத்தகைய ஒரு நடவடிக்கையை மேற்கொள்வது மன்னர் பிரான் அரசாங்கத்துக்குப் பெரும் சங்கடத்தை ஏற்படுத்தும் என்பதை வேதனையோடு உணர்கிறேன்; அது மட்டுமல்ல, மிக மோசமானவை என்று இல்லாவிட்டாலும், பெரிதும் உணர்ச்சிவயப்பட்டவை என்று அநேகரால் கருதப்படக் கூடிய முறைகளை என் போன்ற நிலையில் உள்ளவன் இவ்வாறு அரசியல் துறையில் அறிமுகம் செய்வது முற்றிலும் நேர்மையற்ற செயல் என்று பலர் எண்ணக்கூடும் என்பதையும் நான் மனத்துயரோடு அறிந்தே இருக்கிறேன். இத்தகைய குற்றச்சாட்டுகளுக்கு நான் அளிக்கக் கூடிய பதிலெல்லாம், எனது நிலைக்கு ஆதரவாக நான் கூற விரும்புவதெல்லாம் இதுதான்: என்னைப் பொறுத்தவரையில் உத்தேசிக்கப்பட்டுள்ள நடவடிக்கை, ஒரு முறைமை அல்ல, மாறாக அது என்னுள் ஒரு பகுதியாகும், உயிருக்கு உயிராகும், மூச்சில் மூச்சாகும். மனச்சான்றின் அறைகூவலை, கட்டளையை என்னால் புறக்கணிக்க முடியாது, உதறித்தள்ள முடியாது; நேர்மையானவன் என்று நான் பெற்றுள்ள புகழுக்குப் பங்கம் ஏற்படுவதாக இருந்தாலும் மனச்சான்றை என்னால் அலட்சியம் செய்ய இயலாது. இப்போதுள்ள நிலைமையில்,

*நான் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டாலும், உண்ணாவிரதம் இருக்கும் என் கடமையின் முக்கியத் துவத்தை அது எவ்வகையிலும் குறைத்துவிடாது; உண்ணா விரதத்தைத் தவிர்க்கக் கூடியதாக ஆக்கிவிடாது. எனினும் எனது இந்த அச்சங்கள் எல்லாம் முற்றிலும் ஆதாரமற் றவை என்றும், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு தனித் தொகுதிகளை உருவாக்கும் உத்தேசம் ஏதும் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு இல்லை என்றும் நம்பவே விரும்பு கிறேன்.''*

*இந்தியா மந்திரி பின்கண்ட பதிலை திரு. காந்திக்கு அனுப்பினார்:*

*இந்தியா அலுவலகம், ஒயிட்ஹால்*
*ஏப்ரல் 13, 1932*

*அன்புள்ள திரு. காந்தி அவர்களுக்கு,*

*''மார்ச் 11 ஆம் தேதியிட்ட உங்களின் கடிதத்துக்குப் பதி லளிக்கும் வகையில் இதனை எழுதுகிறேன். தாழ்த்தப் பட்ட வகுப்பினருக்குத் தனித்தொகுதிகள் ஏற்படுத்தும் பிரச்சினையில் உங்கள் உணர்வுகளை நான் முற்றிலு மாகப் புரிந்துகொண்டேன். எந்த ஒரு விஷயமாயினும் முற்றிலும் அதன் தகுதிகளின் அடிப்படையில் மட்டுமே எத்தகைய முடிவும் மேற்கொள்ள நாங்கள் உத்தேசித் திருக்கிறோம் என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்பு கிறேன். லோதியன் பிரபுவின் தலைமையில் அமைக்கப் பட்டிருக்கும் குழு இன்னமும் தனது சுற்றுப்பயணத்தைப் பூர்த்தி செய்யவில்லை என்பது உங்களுக்குத் தெரியும். அது எடுக்கும் முடிவுகள் எங்களிடம் வந்து சேருவதற்கு மேலும் சில வாரங்கள் ஆகும். குழுவின் அறிக்கை எங்க ளுக்கு வந்து சேர்ந்ததும் அதன் பரிந்துரைகளை நாங்கள் மிகக் கவனமாகப் பரிசீலிப்போம்; குழு தெரிவிக்கும் கருத்துகளையும், அத்தோடு நீங்களும் உங்களைப் போன் றோரும் ஆழமாகவும் மனத்திற் பதியும்படியாகவும் கூறியிருக்கும் அபிப்பிராயங்களையும் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல் எந்த முடிவையும் எடுக்க மாட்டோம். நீங்கள் எங்கள் நிலையில் இருந்தால் நாங்கள் எடுக்க*

நினைக்கும் அதே நடவடிக்கையைத்தான் நீங்களும் எடுப்பீர்கள் என்பதில் எனக்கு எத்தகைய ஐயப்பாடும் இல்லை. குழுவின் அறிக்கை வரட்டும். அதனை நீங்கள் கருத்தூன்றி, ஆழமாக, முற்றிலுமாகப் பரிசீலனை செய் யுங்கள். இது சம்பந்தமாக நீங்கள் ஓர் இறுதி முடிவுக்கு வருவதற்கு முன்னர், இந்த சர்ச்சைக்குரிய பிரச்சினை குறித்து இரு தரப்புகளும் தெரிவித்திருக்கும் கருத்துக் களை நீங்கள் கணக்கிலெடுத்துக் கொள்வது அவசியம். இதற்கு மேல் நான் எதுவும் சொல்லுவதற்கில்லை. மேலும் அதிகமாக கூற வேண்டுமென்று நீங்கள் எதிர்பார்ப்பீர்கள் என்று நானும் நினைக்கவில்லை.''

திரு. காந்தி இந்த எச்சரிக்கையை விடுத்த பிறகு விஷ யத்தைச் சற்று ஆறப்போட்டார்; சாகும்வரை உண்ணா விரதம் இருக்கப் போவதாக மீண்டும் தாம் அச்சுறுத்தி இருப்பது பிரிட்டிஷ் அரசாங்கத்தை நிலைகுலையச் செய்துவிடும் என்றும், தீண்டாதார்களுக்குத் தனிப்பிரதி நிதித்துவம் அளிக்க வேண்டும் என்ற கோரிக்கையை அவர்கள் ஏற்றுக்கொள்ளாதபடி தடுத்து விடும் என்றும் அவர் எண்ணினார். ஆனால் அவர் நினைத்தபடி எதுவும் நடைபெறவில்லை. அதற்கு மாறாக, 1932 ஆகஸ்டு 17 ஆம் தேதி வகுப்புத் தீர்ப்பின் விவரங்கள் அறிவிக்கப் பட்டன. அந்தத் தீர்ப்பில் தீண்டப்படாதவர்கள் சம்பந்தப் பட்ட பகுதி கீழே தரப்படுகிறது:

## மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசாங்கம் வழங்கிய வகுப்புத் தீர்ப்பு 1932

வட்டமேசை மாநாட்டின் இரண்டாவது கூட்டத் தொடரின் இறுதியில் மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசின் சார்பில் கடந்த டிசம்பர் முதல் தேதியன்று பிரதமர் அறிக்கை ஒன்றை வெளியிட்டார். அந்த அறிக்கை உட னடியாக நாடாளு மன்றத்தின் இரு அவைகளிலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. வகுப்புப் பிரச்சினைகள் குறித்து அனைத்துக் கட்சிகளுக்கும் ஏற்புடையதான ஓர் உடன் பாட்டைக் காண மாநாடு தவறிவிட்டது; இதன் காரண மாக இந்தியாவின் அரசியல் சட்ட முன்னேற்றம் எவ்வகை

யிலும் தடைபடக்கூடாது என்பதிலும் பிரச்சினையை நுணுகி ஆராய்ந்து, ஓர் இடைக்காலத் திட்டத்தை வகுத்து, இத்தடையை அகற்ற வேண்டும் என்பதிலும் மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசாங்கம் உறுதி கொண்டுள்ளது. இவ்வாறு அறிக்கையில் தெளிவுபடுத்தப்பட்டிருந்தது.

2. இந்தியாவின் பல்வேறு சமூகத்தினர் இப்பிரச்சினையில் ஓர் உடன்பாட்டுக்கு வர தொடர்ந்து தவறி வருவதால், ஒரு புதிய அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கும் திட்டங்களின் முன்னேற்றம் பெரிதும் தடைபடுகிறது என்று தெரிவிக்கப்பட்டதைத் தொடர்ந்து, மிகவும் சிக்கலான, கடினமான, பெரும் சர்ச்சைக்குரிய இப்பிரச்சினையைத் தாங்கள் மீண்டும் மிகக் கவனமாகப் பரிசீலித்து ஆராய்ந்து வருவதாக கடந்த மார்ச் 13 ஆம் தேதி அன்று மன்னர் பிரான் அரசாங்கம் அறிவித்தது. புதிய அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ் சிறுபான்மையினரின் நிலை சம்பந்தப்பட்ட பிரச்சினைகளில் குறைந்தபட்சம் சில அம்சங்களைப் பற்றியாவது ஒரு முடிவுக்கு வரவில்லை என்றால் அரசியலமைப்புச் சட்டத்தை வகுக்கும் பணியில் மேற்கொண்டு முன்னேற முடியாது என்பதை அரசாங்கம் இப்போது நன்கு உணர்ந்துள்ளது.

3. இதன்படி, கீழே தெரிவிக்கப்பட்டிருக்கும் திட்டத்தைச் செயல்படுத்துவதற்கான வழிவகை ஏற்பாடுகளை இந்திய அரசியலமைப்புச் சட்டம் சம்பந்தமாக விரைவில் நாடாளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்படவிருக்கும் பிரேரணைகளில் சேர்ப்பது என மன்னர் பிரான் அரசாங்கம் முடிவு செய்துள்ளது. அரசியலமைப்புச் சட்டம் வகுக்கப்படும் காலத்தில் சிறுபான்மையினருக்கு மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த இதர ஏராளமான பிரச்சினைகள் குறித்து முடிவெடுக்க வேண்டிய அவசியம் ஏற்படும் என்பதை அரசு உணரத் தவறவில்லை என்பதனையே இத்திட்டத்தை வரையறைக்குட்படுத்தும் முடிவு குறிக்கிறது. மேலும், பிரதிநிதித்துவத்தின் வழிமுறை, விகிதாசாரங்கள் போன்றவற்றை அறிவித்துவிட்டால், இன்னமும் பரிசீலிக்கப்படாத இதர வகுப்புப் பிரச்சினைகளுக்குச் சம்பந்தப்பட்ட சமூகத்தினரே ஒரு சமரச முடிவு காண்பது சாத்தியமாகும் என்ற நம்பிக்கையின் அடிப்படையிலேயே இம்முடிவு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

4. மன்னர்பிரான் அரசு பின்கண்டவற்றை மிகவும் தெளிவுபடுத்த விரும்புகிறது: தான் எடுத்த முடிவைத் திருத்தும் நோக்கத்தோடு மேற்கொள்ளப்படும் எந்தப் பேச்சுவார்த்தைகளிலும் அது தானாகவே முன்வந்து கலந்து கொள்ளாது; சம்பந்தப்பட்ட அனைத்துத் தரப்பினரின் ஆதரவைப் பெறாமல் இந்த முடிவை மாற்றுவதற்கு வைக்கப்படும் எந்த கோரிக்கையையும் அது பரிசீலிக்காது. ஆனால் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படும் ஓர் உடன்பாட்டை அது மகிழ்ச்சியோடு வரவேற்கும்; இத்தகைய முயற்சிக்கு அது எவ்வகையிலும் தனது கதவுகளை மூடாது; எனவே, ஒரு புதிய இந்திய அரசாங்க மசோதா சட்டமாக்கப்படுவதற்கு முன்னர், கவர்னர்களது ஆளுகையின் கீழ் உள்ள ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மாகாணங்கள் குறித்தோ, அல்லது பிரிட்டிஷ் இந்தியா முழுவதும் குறித்தோ, நடைமுறை சாத்தியமான ஒரு மாற்றுத் திட்டத்தை சம்பந்தப்பட்ட சமூகத்தினர் ஏற்றுக் கொண்டுள்ளனர் என்று மன்னர் பிரான் அரசு மன நிறைவு அடையும் பட்சத்தில், தற்போது அறிவிக்கப் பட்டிருக்கும் திட்டத்திற்குப் பதிலாக இந்த மாற்றுத் திட்டத்தை ஏற்கும்படி நாடாளுமன்றத்திற்குப் பரிந்துரை செய்ய அது தயாராக உள்ளது.

5 ★ ★ ★ ★ ★
6 ★ ★ ★ ★ ★
7 ★ ★ ★ ★ ★
8 ★ ★ ★ ★ ★

9. வாக்களிக்கத் தகுதிபெற்ற ''தாழ்த்தப்பட்ட வகுப்பினர்'' ஒரு பொதுத் தொகுதியில் வாக்களிப்பர். இந்த வகுப்பினர் இந்த முறையால் மட்டும் சட்டமன்றத்தில் பிரதிநிதித்துவம் பெறுவது சாத்தியமில்லை என்பதால், அட்டவணையில் காட்டியுள்ளபடி அநேகத் தனி இடங்கள் அவர்களுக்கு ஒதுக்கப்படும். தேர்தல் விதிமுறைப்படி 'தாழ்த்தப்பட்ட வகுப்பினர்' மட்டுமே வாக்களிக்கும் தனித் தொகுதிகளில் நடைபெறும் தேர்தல்கள் மூலம் இந்த இடங்கள் நிரப்பப்படும். மேலே குறிப்பிட்டுள்ளவாறு, இத்தகைய ஒரு தனித் தொகுதியில் வாக்களிக்கும்

ஒருவர் பொதுத் தொகுதியில் வாக்களிக்கவும் உரிமை பெற்றிருக்கிறார். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மிகப்பெரும் எண்ணிக்கையில் இருக்கும் குறிப்பிட்ட பகுதிகளில் இத் தொகுதிகள் அமைக்கப்படும்; ஆனால் சென்னையைத் தவிர அவை மாகாணம் முழுமையும் உள்ளடக்கியவை யாக இருக்க மாட்டா.

வங்காளத்தைப் பொறுத்தவரையில் சில பொதுத் தொகுதிகளில் பெரும்பான்மையான வாக்காளர்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்களாக இருக்கக் கூடும் எனத் தோன்றுகிறது. எனவே, மேற்கொண்டு ஆராய்ந்து முடிவு செய்யும்வரை அந்த மாகாணத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கான தனித் தொகுதிகளி லிருந்து எத்தனை பேர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்பது இன்னும் நிர்ணயிக்கப்படவில்லை. வங்காள சட்டமன்றத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் 10க்கும் குறையாமல் இடங்கள் பெறவேண்டும் என்று உத்தேசிக் கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு மாகாணத்திலும் தாழ்த்தப்பட்ட வகுப் பினருக்கான தனித்தொகுதிகளில் வாக்களிக்க உரிமை பெற்றவர்கள் யார் என்பது இன்னமும் திட்டவட்டமாக, இறுதியாக முடிவு செய்யப்படவில்லை. வாக்குரிமைக் குழு அறிக்கையில் பரிந்துரைக்கப்பட்டுள்ள பொதுக் கோட்பாடுகளின் அடிப்படையில் இது பொதுவாகத் தீர் மானிக்கப்படும். ஆனால் வட இந்தியாவில் சில மாகா ணங்களில் தீண்டாமை குறித்த பொதுவிதியைப் பயன் படுத்துவது அங்குள்ள விசேட நிலைமைகளுக்கு பொருந் தாத வகையில் சில சந்தர்ப்பங்களில் பொருள் கொள் வதில் போய் முடியக்கூடும்; எனவே இத்தகைய மாகா ணத்தில் இது விஷயத்தில் மாற்றம் காண்பது அவசிய மாக இருக்கக்கூடும்.

தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கான இந்தத் தனித் தொகுதிகள் குறிப்பிட்ட காலத்திற்கும் அதிகமாகத் தேவைப்படும் என்று மன்னர் பிரான் அரசு கருதவில்லை. 6 ஆவது பத்தியில் குறிப்பிடப்பட்டிருக்கும் தேர்தல்

திருத்தப் பொது அதிகாரங்களின்படி இந்தத் தொகுதிகள் ஏற்கெனவே ஒழிக்கப்படாத பட்சத்தில், இவற்றை 20 ஆண்டுகளுக்குப் பிறகு முடிவுக்குக் கொண்டு வருவதற்கு அரசியல் அமைப்புச் சட்டத்தில் வகை செய்ய அரசு உத்தேசித்துள்ளது.

## VIII

தமது பயமுறுத்தல், பூச்சாண்டி எத்தகைய பலனையும் அளிக்க வில்லை என்பதை திரு. காந்தி கண்டார். மத்தியஸ்தம் செய்து ஒரு தீர்ப்பைத் தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்ளும் வேண்டுகோளில் தாமும் கையெழுத்திட்டிருப்பதைப் பற்றி திரு. காந்தி கவலைப் படவில்லை. இவ்வேண்டுகோளில் கையொப்பமிட்டவர்களில் ஒருவர் என்ற முறையில் இத்தீர்ப்பை தாம் ஏற்றுக்கொள்ள கடமைப் பட்டிருப்பதை அவர் மறந்து விட்டார். பிரதமரது தீர்ப்பைச் சீர் குலைப்பதில் இறங்கினார். வகுப்புத் தீர்ப்பின் ஷரத்துக்களை மாற்றச் செய்வதற்கு முதலில் முயன்றார். இதன்படி பிரதமருக்குப் பின்கண்ட கடிதத்தை எழுதினார்:

எரவாடா மத்திய சிறைச்சாலை,
ஆகஸ்டு 18, 1932

அன்புள்ள நண்பர் அவர்களுக்கு,

''தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கும் பிரச்சினை சம்பந்தமாக மார்ச் 11 ஆம் தேதி சர் சாமுவல் ஹோருக்கு நான் எழுதிய கடிதத்தை உங்களிடமும் அமைச்சரவையிடமும் அவர் காண்பித்திருப்பார் என்பதில் ஐயமில்லை. அந்தக் கடிதத்தை இக்கடிதத்தின் ஒரு பகுதியாகப் பாவித்து, அதனுடன் சேர்த்து இதனைப் படிக்குமாறு வேண்டுகிறேன்.

''சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பது சம்பந்த மான பிரிட்டிஷ் முடிவைப் படித்தேன். சர் சாமுவல் ஹோருக்கு நான் எழுதிய கடிதத்தின் பிரகாரமும், வட்டமேசை மாநாட்டின் சிறு பான்மையினர் குழுவின் கூட்டம் செயிண்ட் ஜேம்ஸ் மாளிகையில் 1931 நவம்பர் 13 ஆம் தேதி நடை பெற்றபோது, நான் திட்டவட்ட மாக அறிவித்தபடியும் என் உயிரைப் பணயம் வைத்து உங்கள் முடிவை எதிர்க்க வேண்டியவனாக இருக்கிறேன். இதைச் செய் வதற்கு எனக்குள்ள ஒரே வழி சாகும்வரை உண்ணாவிரதம் இருப்பதே

ஆகும். உப்பு கலந்த அல்லது உப்பு இல்லாத தண்ணீரையும் சோடாவையும் தவிர உண்ணாவிரதத்தின் போது வேறு எந்த ஆகாரத்தையும் உட்கொள்ள மாட்டேன். இதற்கு மத்தியில் பிரிட்டிஷ் அரசாங்கம் தானே முன்வந்தோ அல்லது பொதுமக்கள் கருத்தின் நிர்ப்பந்தத்தாலோ தனது முடிவை மாற்றிக் கொள்ளுமானால், தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்குத் தனித் தொகுதிகளை ஒதுக்கும் தனது திட்டத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளுமானால் என் உண்ணாவிரதத்தை நிறுத்திவிடுவேன். வழக்கமான தேர்தல் விதிகளின்படி அமைந்த பொதுத் தொகுதியிலிருந்து - அது எவ்வளவு விரிந்து பரந்ததாயினும் - தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுவதையே நான் விரும்புகிறேன்.

''அரசின் முடிவு மேலே தெரிவித்தபடி மாற்றப்படவில்லையாயின் எனது உண்ணாவிரதம் அடுத்த செப்டம்பர் 20 ஆம் தேதி நண்பகலிலிருந்து தொடங்கும்.

''உங்களுக்குப் போதிய முன்னறிவிப்பு தரவேண்டும் என்ற எண்ணத்தில் இந்தக் கடிதத்தின் வாசகத்தை உங்களுக்குத் தந்தி மூலம் தெரிவிக்கும்படி இங்குள்ள அதிகாரிகளைக் கேட்டுக் கொண்டிருக் கிறேன். எத்தகைய மிகத் தாமதமான மார்க்கத்திலும் கூட இந்தக் கடிதம் உங்களுக்கு உரிய சமயத்தில் கிடைக்க வேண்டும் என்பதற்காக நிறைய அவகாசம் தந்திருக்கிறேன்.

''இந்தக் கடிதமும் நான் ஏற்கெனவே குறிப்பிட்ட சர். சாமுவல் ஹோருக்கு எழுதப்பட்ட என் கடிதமும் கூடிய விரைவில் பிரசுரிக்கப் பட வேண்டும் என்றும் வேண்டிக் கொள்கிறேன். என்னைப் பொறுத்த வரையில், சிறை விதிகளை இம்மியும் பிசகாதபடி, மிகக் கண்டிப்பாகக் கடைப்பிடித்திருக்கிறேன். என் விருப்பத்தையோ அல்லது இவ்விரு கடிதங்களின் உள்ளடக்கத்தையோ என்னுடைய தோழர்களான சர்தார் வல்லபாய் பட்டேலையும் திரு. மகாதேவ தேசாயையும் தவிர வேறு எவருக்கும் தெரிவிக்கவில்லை. எனினும் என் கடிதங்கள் குறித்துப் பொது மக்களின் அபிப்பிராயத்தை அறிய விரும்புகிறேன். எனவே அவற்றை விரைவில் பிரசுரிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

''நான் மேற்கொண்டுள்ள முடிவுக்காக வருந்துகிறேன். சமய ஈடுபாடுள்ளவன் என்ற முறையில், மனச்சான்றினை மீறாப் பண்புடையவன் என்ற வகையில், இதைத் தவிர எனக்கு வேறு எந்த மார்க்கமும்

இல்லை. சர் சாமுவல் ஹோருக்கு நான் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தபடி, சங்கடமான நிலையிலிருந்து தப்பித்துக் கொள்ளும் பொருட்டு மன்னர் பிரான் அரசாங்கம் என்னை விடுதலை செய்ய முடிவு செய்தால் கூட என் உண்ணாவிரதம் நிற்காது; தொடர்ந்து நடைபெறும். ஏனென்றால் வேறு எந்த வழிகளிலும் உங்கள் முடிவை எதிர்த்து நிற்க முடியும் என்ற நம்பிக்கை எனக்கில்லை; கௌரவமான முறையில் தவிர வேறு எந்த வழிகளிலும் என் விடுதலைக்குத் திட்டமிடவும் நான் விரும்பவில்லை.

''ஒருக்கால் எனது கருத்து ஏறுமாறானதாக இருக்கலாம்; தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித்தொகுதிகள் ஏற்படுத்துவது அவர்களுக்கும் இந்து சமயத்திற்கும் தீங்கானது என்ற என் கணிப்பு முற்றிலும் தவறானதாகவும் இருக்கலாம். இது உண்மையானால் என் வாழ்க்கைத் தத்துவத்தின் இதர அம்சங்களிலும் நான் தவறு இழைத்தவன் ஆகிறேன்; இச்சூழ் நிலையில் உண்ணாவிரதத்தில் எனக்கு நேரிடக்கூடிய மரணம் என் தவறுக்கெல்லாம் ஒரு பிராயச்சித்தமாக இருக்கும்; மேலும், என்னுடைய விவேகத்தில், அறிவு நுட்பத்தில் எண்ணற்ற ஆடவரும் பெண்டிரும் வேறுபாடின்றி குழந்தைகள்போல் வைத்திருக்கும் அசைக்க முடியாத நம்பிக்கையின், பாசத்தின், அன்பின் சுமையை இறக்கி விட்டதாகவும் இருக்கும். ஆனால், அதேசமயம் எனது நிர்ணயிப்புச் சரியாக இருக்கும் பட்சத்தில் - இதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை - நான் மேற்கொள்ள உத்தேசித்திருக்கும் நடவடிக்கை நிச்சயம் வெற்றி பெறவே செய்யும்; வாழ்க்கைத் தத்துவத்தை நிறைவேற்ற கால் நூற்றாண்டுக்கும் மேலாக அயராது, சோராது நான் மேற்கொண்டு வந்துள்ள முயற்சி இதற்கு உறுதுணை புரியும்.

என்றும்,
உங்கள் நம்பிக்கைக்குரிய நண்பன்,
எம்.கே. காந்தி.

இக்கடிதத்திற்குப் பிரதமர் பின்வருமாறு பதில் எழுதினார்:

10, டவுனிங் தெரு,
செப்டம்பர் 8, 1932

''அன்புள்ள திரு. காந்தி அவர்களுக்கு,

''உங்கள் கடிதம் கண்டு மிகுந்த வியப்பும் வருத்தமும் அடைந்தேன். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சம்பந்தமாக மன்னர் பிரான் அரசாங்கம் எடுத்துள்ள முடிவு உண்மையில் எதைக் குறிக்கின்றது என்பதைப் புரிந்து கொள்ளாமல் இக்கடிதத்தை நீங்கள் எழுதியிருப்பதாகவே கருதுகிறேன். தாழ்த்தப்பட்ட வகுப்பினரை இந்து சமூகத்திலிருந்து நிரந்தரமாகப் பிரித்து வைப்பதை, தனிமைப்படுத்தி வைப்பதை நீங்கள் சற்றும் விட்டுக் கொடுக்காமல் உறுதியாக எதிர்த்து வந்திருக்கிறீர்கள் என்பதை நாங்கள் எப்போதுமே புரிந்து வந்திருக்கிறோம். வட்ட மேசை மாநாட்டின் சிறுபான்மையினர் குழுவில் உங்கள் நிலையை மிகத் தெளிவாக எடுத்துரைத்திருக்கிறீர்கள்; மார்ச் 11 ஆம் தேதி சர் சாமுவல் ஹோருக்கு எழுதிய கடிதத்தில் இதனைத் திரும்பவும் வலியுறுத்தியிருக்கிறீர்கள். இந்து சமூகத்தில் மிகப் பெரும் பகுதியினர் உங்கள் கருத்தை ஆதரிக்கின்றனர் என்பதையும் நாங்கள் அறிவோம். எனவே தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதித்துவப் பிரச்சினையைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டபோது, இவற்றையும் மிகக் கவனமாகக் கருத்தில் கொண்டோம்.

''தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் அமைப்புகளிலிருந்து எங்களுக்கு எண்ணற்ற முறையீடுகள் வந்தன; அவர்கள் எத்தகைய கொடிய சமூக ஏற்றத்தாழ்வுகளுக்கு உள்ளாகி வேதனையும் வாதனையும் பட்டு வருகிறார்கள் என்பது பொதுவாக அனைவரும் அறிந்த உண்மை; இதனை நீங்களும் மிகப்பல சந்தர்ப்பங்களில் ஒப்புக் கொண்டிருக்கிறீர்கள். இவற்றை எல்லாம் கருத்தில் கொண்டு, சட்ட மன்றங்களில் நியாயமான சத விகிதத்தில் பிரதிநிதித்துவம் பெறுவதற்குத் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குள்ள உரிமைகளைப் பாதுகாப்பது எங்கள் கடமை என உணர்ந்தோம். அதேசமயம் தாழ்த்தப்பட்ட சமூகத்தினை இந்து சமுதாயத்திலிருந்து பிரிக்கக்கூடிய எதையும் செய்து விடக்கூடாது என்பதிலும் மிகவும் கவனமாக இருந்தோம். சட்ட மன்றங்களில் இவர்கள் பிரதிநிதித்துவம் பெறுவதை எதிர்க்கவில்லை என்று நீங்களே உங்கள் மார்ச் 11 ஆம் தேதி கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறீர்கள்.

''அரசாங்கத் திட்டத்தின்படி தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இந்து சமூகத்தின் ஒரு பிரிக்க முடியாத பகுதியினராகத் தொடர்ந்து நீடித்து வருவர்; இந்து வாக்காளர்களுடன் சேர்ந்து சரிசமத்துவ அடிப்படையில் வாக்களிப்பர்; ஆனால் அடுத்த முதல் இருபது ஆண்டுக் காலத்தில் அவர்கள் வாக்காளர்கள் ரீதியில் இந்து சமூகத்தின் ஒரு பகுதியினராகத் தொடர்ந்து நீடித்தவாறே சில குறிப்பிட்ட

எண்ணிக்கை உள்ள தனித் தொகுதிகளைப் பெறுவர்; இத்தொகுதி கள் அவர்களது உரிமைகளையும் நலன்களையும் பாதுகாக்கக் கூடிய சாதனங்களாக அமைந்திருக்கும்; தற்போதைய நிலைமை யில் இத்தகைய தனித் தொகுதிகளை உருவாக்குவது அவசியம் என்று நாங்கள் திடமாக நம்புகிறோம்.

''இந்தத் தனித்தொகுதிகள் உருவாக்கப்பட்டுள்ள பகுதி களில் தாழ்த்தப்பட்ட வகுப்பு உறுப்பினர்கள் பொது இந்துத் தொகுதி களில் தங்களுக்கு இருக்கும் வாக்குரிமையை இழந்துவிட மாட்டார் கள்; அதற்குப் பதில் இந்து சமூகத்தில் அவர்கள் அங்கம் வகிப்பது பாதிக்கப்படாமல் இருக்கும் பொருட்டு அவர்களுக்கு இரண்டு வாக்குகள் அளிக்கப்படும்.

''தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தனித்தொகுதி அமைத்து, எல்லாத் தாழ்த்தப்பட்ட இன வாக்குகளையும் பொதுத் தொகுதி களில் அல்லது இந்து தொகுதிகளில் சேர்க்கலாம் என்றும், இவ்வாறு செய்தால் உயர்ஜாதி வேட்பாளர்கள் தாழ்த்தப்பட்டோர் வாக்கு களையும் நாடிப்பெற வேண்டிவரும் என்றும், இதன்மூலம் இந்து சமுதாயத்தின் ஒற்றுமையைப் பாதுகாக்க முடியும் என்றும் நீங்கள் தெரிவிக்கும் கருத்து எங்களுக்கு ஏற்புடையதல்ல.

மாகாணங்களில் தேர்தல்கள் நடைபெற்று அவற்றின் மூலம் சட்டமன்றங்களில் பெரும்பான்மை இடங்களைக் கைப்பற்று வோர்க்கு அதிகாரம் மாறி பொறுப்பாட்சி மலரும்; அப்போது தாழ்த்தப்பட்ட மக்களின் நிலை என்ன? சாதி இந்துக்களால் பல நூற்றாண்டுக் காலமாக குரூரமாகக் கொடுமைப்படுத்தப்பட்டு வந்த வர்கள், இழிவுபடுத்தப்பட்டு வந்தவர்கள், அலட்சியப்படுத்தப் பட்டு வந்தவர்கள் என்று சர் சாமுவல் ஹோருக்கு எழுதிய உங்கள் கடிதத்தில் நீங்களே தாழ்த்தப்பட்ட வகுப்பினரைப் பற்றிக் குறிப் பிட்டிருக்கிறீர்கள். பொறுப்பாட்சியின் போது ஒன்பது மாகாணங் களில் ஏழு மாகாணங்களில் இப்போதைய தாழ்த்தப்பட்ட மக்கள் குறிப்பிட்ட எண்ணிக்கையிலான பிரதிநிதிகளை அவர்கள் தாங்களே தேர்ந்தெடுத்து சட்டமன்றங்களுக்கு அனுப்புவது அவசியம் என்று நாங்கள் உணர்ந்தோம். அப்போதுதான் அவர்கள் தங்கள் மனக் குறைகளையும் லட்சியங்களையும் எடுத்துரைக்க முடியும், அவற்றை ஆதரித்துக் குரல் எழுப்ப முடியும், சட்டமன்றத்திற்கு வெளியே தங்களுக்கு எதிராக முடிவுகள் எடுப்பதைத் தடுக்க முடியும், தங்களது நிலையை அரசின் கவனத்துக்குக் கொண்டு வரமுடியும் - சுருக்கமாகக்

கூறினால் தாழ்த்தப்பட்ட மக்களுக்காக தாழ்த்தப்பட்ட மக்களே பேசும்படியான நிலையில் அவர்களை வைக்கமுடியும் என்று கருதினோம். நியாய உணர்வு படைத்த எவருமே இதனை ஏற்றுக் கொள்வார்கள் என்பதில் ஐயமில்லை. சில குறிப்பிட்ட இடங்களை ஒதுக்கி அவற்றுக்கு விசேடப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் முறை இன்றைய நிலைமைகளில் எந்த வாக்குரிமைத் திட்டத்தின் அடிப்படையிலும் காரியசாத்தியமானதென்று நாங்கள் கருதவில்லை; இவ்வாறு தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்கள் தாழ்த்தப்பட்ட மக்களை உண்மையிலேயே பிரதிநிதித்துவப்படுத்துவார்கள் என்றோ, அவர்களுக்குப் பொறுப்புக் கூறக் கடமைப்பட்டிருப்பார்கள் என்றோ நாங்கள் நினைக்கவில்லை; ஏனென்றால், பெரும்பாலான சந்தர்ப்பங்களில் இத்தகைய உறுப்பினர்கள் பெரும்பான்மையினரான மேல்சாதி இந்துக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாகவே இருப்பார்கள்.

''எங்கள் திட்டத்தின்படி தாழ்த்தப்பட்ட மக்கள் பொது இந்துத் தொகுதியில் தங்களுக்குள்ள வழக்கமான தேர்தல் உரிமைகளைப் பெறுவதோடு, ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள தனித் தொகுதிகள் அவர்களுக்கு ஒதுக்கப்படுவதன் காரணமாக ஆரம்ப காலத்தில் விசேட அனுகூலம் பெறுகிறார்கள். தனி வகுப்புவாத வாக்காளர்கள் மூலம் தேர்ந்தெடுக்கப்படும் முஸ்லீம்கள் போன்ற சிறுபான்மையினர் விஷயத்தில் கைக்கொள்ளப்படும் பிரதிநிதித்துவ முறையிலிருந்து இது கருத்தளவிலும் செயலளவிலும் முற்றிலும் மாறுபட்டதாகும். உதாரணமாக ஒரு முஸ்லீம் பொதுத்தொகுதியில் வேட்பாளராக போட்டியிட முடியாது; வாக்களிக்கவும் முடியாது. ஆனால், அதே சமயம் தேர்தல் விதிகளின்படி தகுதி வாய்ந்த தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஓர் உறுப்பினர் பொதுத் தொகுதியில் வாக்களிக்கவும் வேட்பாளராக நிற்கவும் முடியும்.

''முஸ்லீம்களுக்கு ஒதுக்கப்படும் பிரதேசவாரியான இடங்களின் எண்ணிக்கை மேற்கொண்டு அவர்கள் பிரதேச அளவில் இடங்களைப் பெறுவதை சாத்தியமற்றதாக்கும் முறையில் அமைக்கப்பட்டுள்ளது; ஏனென்றால் பெரும்பாலான மாகாணங்களில் தங்களது மக்கட்தொகை விகிதாசாரத்துக்கும் அதிகமாகவே அவர்கள் இடங்களைப் பெற்றிருக்கிறார்கள்; ஆனால் தாழ்த்தப்பட்ட இன மக்களின் விஷயம் அப்படியல்ல; அவர்களுக்கான தனித்தொகுதிகளிலிருந்து நிரப்பப்படும் விசேட இடங்களின் எண்ணிக்கை எவ்வாறு நிர்ணயிக்கப்படுகிறது? தாழ்த்தப்பட்ட இனத்தோர் அனைவருக்கும் முழுப்

பிரதிநிதித் துவம் அளிக்கும் வகையிலும் அவர்களது மக்கட் தொகை விகிதாசாரத்துக்கு ஏற்ப அவர்களுக்கு இடங்களை ஒதுக்கும் அடிப் படையிலும் இந்த எண்ணிக்கை நிர்ணயிக்கப்படவில்லை. அப்படி யானால் வேறு எப்படி நிர்ணயிக்கப்படுகிறது? முற்றிலும் தாழ்த்தப் பட்ட மக்களாலேயே தேர்ந்தெடுக்கப்பட்டு, அவர்களுக்காக வாதாடக் கூடிய, குரல் கொடுக்கக்கூடிய, அவர்களது எண்ணங்களை, ஆர்வ விருப்பங்களைப் பிரதிபலிக்கக் கூடிய, குறைந்தபட்ச எண்ணிக்கை யுள்ள அவர்களது பிரதிநிதிகளைச் சட்டமன்றத்தில் இடம்பெறச் செய்ய வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடனேயே இந்த எண்ணிக்கை நிர்ணயிக்கப்படுகிறது. எல்லா இடங்களிலும் தாழ்த்தப்பட்ட வகுப் பினருக்கான தனி இடங்கள் அவர்களது மக்கட் தொகை சதவிகிதத் திற்கு மிகவும் குறைவாகவே உள்ளன.

''சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கும் அதிதீவிர முடிவை நீங்கள் மேற்கொண்டிருக்கிறீர்கள். அது எதற்காக? தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இந்துக்களுடன் இணைந்து கூட்டுத் தொகுதிகளைப் பெறவேண்டும் என்பதற்காகவா? அப்படி இருக்க முடியாது. ஏனென் றால் அதற்கு ஏற்கெனவே வழி செய்யப்பட்டிருக்கிறது. அல்லது இந்துக்களின் ஒற்றுமையை நிலைநாட்டுவதற்காகவா? அப்படியும் கூறமுடியாது. ஏனென் றால் அதற்கும் வகை செய்யப்பட்டிருக்கிறது. பின்னர் நீங்கள் உண்ணாவிரதம் இருக்கப்போவதன் நோக்கம்தான் யாது? இன்று அவர்கள் சொல்லவொண்ணாத கொடுமைக்கு உள் ளாக்கப்பட்டிருக்கின்றனர்; எத்தனை எத்தனையோ வழிகளில் பயங் கரமாக இழிவுபடுத்தப்பட்டு வருகின்றனர். இத்தகைய மக்கள், தங்கள் எதிர்காலத்தைப் பெருமளவுக்கு நிர்ணயிக்கக்கூடிய, தங்கள் கதிப் போக்கின் மீது மிகுந்த செல்வாக்குச் செலுத்தக்கூடிய, தங்களது குரலை எதிரொலிக்கக்கூடிய குறிப்பிட்ட எண்ணிக்கை உள்ள தங்கள் பிரதிநிதிகளைத் தாங்களே தங்கள் விருப்பப்படி தேர்ந்தெடுத்து அனுப்புவதைத் தடுக்கும் ஒரே நோக்கத்துடனேயே நீங்கள் உண்ணா விரதத்தை மேற்கொள்ளத் தீர்மானித்திருக்கிறீர்கள். இவ்வாறுதான் உங்கள்போக்கை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது.

''எல்லாவற்றையும் கவனமாக ஆராய்ந்து நாங்கள் மிக நியாய மான இந்த யோசனைகளை முன்வைத்திருக்கும் பகைப் புலனில், நீங்கள் எடுத்துள்ள முடிவுக்கு என்ன காரணம் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை; உண்மை நிலையை நீங்கள் தவ றாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள் என்றே நினைக்கிறேன்.

•

''சிறுபான்மையினர் பிரச்சினையில் இந்தியர்கள் தங்களுக் குள்ளேயே ஓர் உடன்பாடு காணத் தவறிய பிறகு, அவர்களது வேண்டுகோளின் பேரில் அரசாங்கம் தனது சொந்த விருப்பத்துக்கு மாறாகவே இப்பிரச்சினை குறித்து ஒரு முடிவு எடுக்கும் பொறுப்பை ஏற்றது. இப்போது அத்தகைய முடிவை அது அறிவித்துள்ளது. ஏற் கெனவே திட்டவட்டமாக, தெளிவாக அது அறிவித்த நிபந்தனை களின் பேரில் அல்லாமல், இந்த முடிவை அரசு எவ்வகையிலும் மாற்றும் என்று எதிர்பார்க்க முடியாது. எனவே, அரசின் முடிவு நீடிக்கும், அதில் எந்த மாற்றமும் இருக்காது என்பதைத் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும், பல்வேறு சமுதாயத்தினரின் பலதரப்பட்ட முரண்பாடான கோரிக்கைகளையும் அவற்றின் தகுதி களையும் உள்ளார்ந்த முறையில் சீர்தூக்கிப் பார்த்தே அரசு இந்த ஏற்பாடுகளை வகுத்துத் தந்திருக்கிறது; இவற்றிற்குப் பதிலாக வேறு தேர்தல் ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமானால் சம்பந்தப் பட்ட தரப்பினர் அனைவரின் உடன்பாட்டுடனேயே அதைச் செய்ய முடியும் என்பதையும் கூறிக்கொள்கிறேன்.

''மார்ச் 11 ஆம் தேதி சர் சாமுவல் ஹோருக்கு நீங்கள் எழுதிய கடிதம் உட்பட இந்தக் கடிதப் போக்குவரத்து முழுவதையும் பிரசு ரிக்க வேண்டும் என்று கேட்டிருக்கிறீர்கள். உபவாசம் மேற்கொள்ளு வதற்கு நீங்கள் எடுத்த முடிவுக்கான காரணத்தைப் பொதுமக்களுக் குத் தாங்கள் விளக்கிக்கூறும் வாய்ப்பினைத் தற்சயம் தாங்கள் சிறை யில் இருக்கும் காரணத்தால் மறுப்பது நியாயமற்றது என்று எனக்குத் தோன்றுகிறது; எனவே மறுபரிசீலனை செய்து இந்த வேண்டு கோளை தாங்கள் மீண்டும் முன்வைத்தால் அதனை தடையின்றி ஏற்பேன். எனினும், அரசு இந்த முடிவை எடுத்ததற்கான உண்மை யான விவரங்களையும் சந்தர்ப்பங்களையும் ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்குமாறும், நீங்கள் உத்தேசித்துள்ள நடவடிக்கையை மேற் கொள்வது உண்மையிலேயே நியாயமானதுதானா என்பதை உங்களை நீங்களே கேட்டுக்கொள்ளுமாறும் மீண்டும் வலியுறுத்து கிறேன்.

தங்களது உள்ளார்ந்த,
ஜே. ராம்ஸே மக்டொனால்டு

பிரதமர் இறங்கி வர மாட்டார் என்பதைக் கண்ணுற்று திரு. காந்தி தாம் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்க முடிவு செய்திருப் பதைப் பின்கண்ட கடிதத்தின் மூலம் உறுதிப்படுத்தினார்:

எரவாடா மத்திய சிறைச்சாலை,
செப்டம்பர் 9, 1932

அன்பார்ந்த நண்பர் அவர்களுக்கு,

தாங்கள் மனம் விட்டு எழுதிய முழுக் கடிதத்தையும் தந்தி வாயிலாக இன்று கிடைக்கப்பெற்றேன். இதற்காக என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால் எனது உத்தேச நடவடிக்கைக்கு நான் ஒருபோதும் நினைத்துப் பார்க்க முடியாத வியாக்கியானத்தைத் தாங்கள் தந்திருப்பதற்கு வருந்துகிறேன். நான் எந்த சமூகத்தினருக்கு ஆதரவாக பேசுகிறேனோ, அந்த சமூகத்தினர் நலன்களைப் பலி யிடுவதற்கே சாகும்வரை உண்ணாவிரதம் இருக்க நான் விரும்பு வதாக என்மீது குற்றம் சாட்டியிருக்கிறீர்கள். இதுகுறித்து நான் எத் தகைய எதிர்வாதமும் செய்யப்போவதில்லை, நான் மேற்கொள்ள விருக்கும் தீவிர நடவடிக்கையே இத்தகைய சுயநலமிக்க வியாக்கி யானத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கும் என்று நம்புகிறேன். என்னைப் பொறுத்தவரையில் இது முற்றிலும் சமயச் சார்புடைய பிரச்சினை என்பதை மீண்டும் வலியுறுத்துகிறேன். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இரண்டு வாக்குகள் பெறுவதற்கு உரிமை பெறுவார்கள் என்று கூறி யிருக்கிறீர்கள். ஆனால் இந்த உரிமை அவர்களையோ, பிளவுபடுவ திலிருந்து இந்து சமுதாயத்தையோ காப்பாற்றப் போவதில்லை. தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித்தொகுதிகளை உருவாக் கும் ஏற்பாட்டில் இந்து தர்மத்தைத் திட்டமிட்டு அழிப்பதற்கு விஷம் வைக்கப்பட்டிருப்பதைக் காண்கிறேன். இந்த ஏற்பாட்டால் மக்களுக்கு எத்தகைய நன்மையும் கிட்டாது. நீங்கள் தாழ்த்தப்பட்ட வர்கள்பால் என்னதான் பரிவிரக்கம் கொண்டவராக இருந்தாலும், சம்பந்தப்பட்ட தரப்பினருக்கு ஜீவாதாரமான, சமய முக்கியத் துவம் வாய்ந்த இத்தகைய ஒரு விஷயத்தில் சரியான முடிவெடுக்க முடியாது.

''தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு அளவுக்கு அதிகமாகப் பிரதி நிதித்துவம் கொடுப்பதைக் கூட நான் எதிர்க்கவில்லை. இந்துக்களாக நீடிப்பதற்கு அவர்கள் விரும்பும்வரை, ஒரு வரம்புக்குட்பட்ட அளவில் கூட சட்டரீதியாக இந்துமத அரவணைப்பிலிருந்து அவர்கள் பிரிக்கப்

படுவதைத்தான் எதிர்க்கிறேன். உங்கள் முடிவு மாறாது என்றால், அந்த அடிப்படையில் அரசியலமைப்புச் சட்டம் உருவாக்கப்படு கிறது என்றால் அதன் பொருள் என்ன? வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் அடக்கப்பட்டு ஒடுக்கப்பட்டுத் தாழ்ந்து கிடக்கும், வீழ்ந்து கிடக்கும் தங்கள் சகோதரர்களைக் கைதூக்கி விடுவதற்கு, அவர்கள் உய்வும் உயர்வும் பெறுவதற்கு இந்து சமூக சீர்திருத்தச் செம்மல்கள் தங்களைத் தன்னலமற்று அர்ப்பணித்துக் கொண்டு எத்தனை எத்தனையோ அரும்பெரும் பணியாற்றி இருக்கிறார்கள். அந்த மகான்களின் இத்தகைய சீரிய சேவையின், அற்புதப் பணி யின் வளர்ச்சியை, முன்னேற்றத்தை உங்களது இந்த நடவடிக்கையின் மூலம் தடுத்து நிறுத்துகிறீர்கள் என்பதை நீங்கள் உணர்கிறீர்களா?

''எனவே, உங்களுக்குத் தெரிவிக்கப்பட்ட முடிவைச் செயல் படுத்தும் நிர்ப்பந்தத்துக்கு உள்ளாகியுள்ளேன்; இதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை.

''உங்கள் கடிதம் வேறொரு தப்பபிப்பிராயத்தையும் தோற்று விக்கக் கூடும் என்று கருதுவதால், அதையும் இங்குத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். தாழ்த்தப்பட்ட மக்களின் பிரச்சினையை உங்களது முடிவின் இதர பகுதிகளிலிருந்து பிரித்து அதற்கு நான் தனி முக்கியத் துவம் அளித்திருப்பதைக் கொண்டு உங்கள் முடிவின் இதர அம்சங் களை நான் ஏற்றுக்கொண்டு விட்டதாக எவ்வகையிலும் பொருள் கொள்ளலாகாது. உங்கள் தீர்ப்பின் இதர பல பகுதிகளும் கடும் ஆட் சேபத்துக்குரியவை என்பதே என் கருத்து. தாழ்த்தப்பட்ட வகுப் பினரின் பிரச்சினையில் என் மனச்சான்றின் தூண்டுதலின் பேரில் உயிர்த் தியாகம் செய்ய எடுத்துள்ள முடிவைப் போன்று இவற்றின் விஷயத்திலும் அத்தகைய முடிவை மேற்கொள்ள வேண்டிய அவ சியம் இல்லை என்றே கருதுகிறேன்.

உங்கள் நம்பிக்கைக்குரிய நண்பன்,
எம்.கே. காந்தி.''

ஆகவே, தீண்டாதோருக்குத் தனித்தொகுதிகள் ஒதுக்கப்படு வதை ஆட்சேபித்துத் திட்டமிட்டபடி திரு. காந்தி தமது ''சாகும்வரை உண்ணாவிரதத்தை'' 1932 செப்டம்பர் 20 ஆம் நாளன்று தொடங்கினார். ''காவியப் புகழ் பெற்ற உண்ணா நோன்பு'' எனும் கண்ணையும்

கருத்தையும் கவரும் தலைப்பு கொண்ட ஒரு தொகுதியில் திரு. பியாரிலால் இந்த உண்ணா விரதத்தை வருணித்திருக்கிறார். வெறியும் உணர்ச்சிக் கொந்தளிப்பும் மிகுந்த இந்த நாட்களில் இந்தியாவில் என்ன நடைபெற்றது என்பதை இந்த நூலிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இங்கு இதுகுறித்து நான் மேற்கொண்டு ஏதும் கூறத் தேவையில்லை. திரு. காந்தி சாகும்வரை உண்ணாவிரதத்தை மேற்கொண்டாலும், அவர் இறக்க விரும்பவில்லை என்பதை மட்டும் இங்கு கூறினால் போதும், உயிரோடிருக்கவே அவர் பெரிதும் விரும்பினார்.

எனவே இந்த உண்ணாவிரதம் ஒரு பிரச்சினையைத் தோற்றுவித்தது; திரு. காந்தியின் உயிரை எப்படிக் காப்பாற்றுவது என்பதே அந்தப் பிரச்சினை. அவரது உயிரைக் காப்பாற்றுவதற்கு ஒரே வழி அவரது மனச்சான்றுக்கு ஊறுவிளைவிக்காத வகையில் வகுப்புத் தீர்ப்பை மாற்றுவதுதான். இந்தச் சந்தர்ப்பத்தில் பிரதமர் ஒரு விஷயத்தை மிகவும் தெளிவுப்படுத்தினார்; அதாவது பிரிட்டிஷ் அமைச்சரவை தானாகவே முன்வந்து இந்தத் தீர்ப்பை திரும்பப் பெறவோ, மாற்றவோ செய்யாது; ஆனால் இதற்குப் பதிலாக சாதி இந்துக்களும் தாழ்த்தப்பட்டோர்களும் இசைந்து, இணங்கி முன்வைக்கும் திட்டத்தை அது தட்டாது ஏற்கும் என்று அறிவித்தார். வட்ட மேசை மாநாட்டில், தாழ்த்தப்பட்டோரின் பிரதிநிதியாக நான் பங்கேற்றதால் எனது ஆதரவை பெறாத எந்த மாற்றுத் திட்டத்தையும் தாழ்த்தப்பட்ட மக்கள் ஏற்கமாட்டார்கள் என்பது தெள்ளத் தெளிவாயிற்று. அச்சமயம் இந்தியாவின் தாழ்த்தப்பட்ட மக்களது பிரதிநிதி என்ற எனது தகுதி குறித்து எத்தகைய ஐயப்பாடும் எழுப்பப்படாததோடு, இது எதார்த்த உண்மை என்பதும் ஒப்புக்கொள்ளப்பட்டது. எனவே, இயல்பாகவே இந்திய மக்கள் அனைவரின் பார்வையும் என்மீதே பதிந்திருந்தது. திரு. காந்தியே கூறியது போல் அவரது உயிர் என் கையில்தான் இருந்தது.

இத்தகைய மிகவும் தர்மசங்கடமான நிலைக்கு, இரு தலைக் கொள்ளி எறும்பு போன்ற நிலைக்கு என்னைப் போன்று வேறு எவருமே ஆளாகியிருக்க மாட்டார்கள் என்று கூறினால், அது மிகையல்ல. அது பெரிதும் திகைப்பூட்டும், திணறவைக்கும், குழப்பமூட்டும் நிலைமை. என் முன்னால் இரண்டு வெவ்வேறான பணிகள், கடமை சார்ந்த பிரச்சினைகள் இருந்தன. மனிதத் தன்மையுடன், மனிதப் பண்புடன் மரணத்திலிருந்து காந்தியைக் காப்பாற்றும் கடமை ஒருபுறம், பிரதமர் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வழங்க

முன்வந்துள்ள அரசியல் உரிமைகளை அவர்களுக்குக் காப்பாற்றித் தரும் கடமை மற்றொருபுறம். இந்நிலைமையில் மனித நேயத்தின், மனிதா பிமானத்தின் கட்டளையை, அறைகூவலை ஏற்க முன்வந்தேன். திரு. காந்தி மனநிறைவை அடையும் வகையில் வகுப்புத் தீர்ப்பு மாற்றப்படுவதற்கு இணங்கினேன். இவ்வாறு உருவான உடன்பாடே புனா ஒப்பந்தம் எனப்படுவது.

## புனா ஒப்பந்தம்

இந்தப் புனா ஒப்பந்தத்தின் வாசகம், விதிமுறைகள் வருமாறு:

1. பொதுத் தொகுதியிலிருந்து தாழ்த்தப்பட்ட மக்களுக்கு குறிப்பிட்ட எண்ணிக்கையில் இடங்கள் ஒதுக்கப்படும். இந்த இடங்கள் மாகாண சட்டமன்றங்களில் பின்வருமாறு அமைந்திருக்கும்:

சென்னை 30, சிந்துவுடன் கூடிய பம்பாய் 15, பஞ்சாப் 8, பீகாரும் ஒரிசாவும் 18, மத்திய மாகாணங்கள் 20, அசாம் 7, வங்காளம் 30, ஐக்கிய மாகாணங்கள் 20, மொத்தம் 148.[1]

பிரதமரின் முடிவில் அறிவிக்கப்பட்ட மாகாண சட்டமன்றங்களின் மூலம் மொத்த பலத்தின் அடிப்படையில் அமைந்ததே இந்த எண்ணிக்கை.

2. இந்த இடங்களுக்கான தேர்தல் கூட்டு வாக்காளர் தொகுதிகள் மூலம் நடைபெறும். இதில் பின்கண்ட நடைமுறை பின்பற்றப்படும். ஒரு தொகுதியின் பொதுவாக்காளர் பட்டியலில் பதிவு செய்துகொண்ட தாழ்த்தப்பட்ட இன உறுப்பினர்கள் அனைவரும் ஒரு வாக்காளர் குழுமமாக அமைவார்கள். இவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு வாக்கு இருக்கும்; இத்தகைய தனித்தொகுதி ஒவ்வொன்றுக்கும் நான்கு பேர் அடங்கிய ஒரு பட்டியலை இந்த வாக்காளர்கள் வாக்களித்துத் தேர்ந்தெடுப்பார்கள்; இவ்வாறு நடைபெறும் பூர்வாங்கத் தேர்தலில் மிக அதிக வாக்குகள் பெற்ற நான்குபேர் பொதுவாக்காளர் பட்டியலைக் கொண்டு நடைபெறும் தேர்தலில் வேட்பாளர்களாக நிற்பார்கள்.

1. பீகாருக்கும் ஒரிசாவுக்குமான இடங்களை முறைப்படுத்தி இந்த 148 இடங்கள் 152 இடங்களாகப் பிறகு உயர்த்தப்பட்டன.

3. மத்திய சட்டமன்றத்துக்குத் தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதிலும் மேலே 2ஆவது விதியில் கூறப்பட்டிருக்கும் அதே நடைமுறையே பின்பற்றப்படும்; கூட்டு வாக்காளர் கோட்பாடும் பூர்வாங்கத் தேர்தல் முறையும் கடைப் பிடிக்கப்படும்.

4. மத்திய சட்டமன்றத்தில் பிரிட்டிஷ் இந்தியாவுக்காக ஒதுக்கப்பட்ட பொதுத் தொகுதிகளில் 18 சதவீத இடங்கள் மேற் கண்ட சட்டமன்றத்தில் தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதிகளுக் காக ஒதுக்கப் படும்.

5. இதுவரை கூறப்பட்டு வந்துள்ளபடி, மத்திய, மாகாண சட்டமன்றங்களுக்கான தேர்தல்களில் நிற்கும் தாழ்த்தப்பட்ட இன மக்களின் வேட்பாளர் பட்டியலை முடிவு செய்யும் பூர்வாங்க தேர்தல் முறையை கீழே உள்ள 6 ஆவது விதியின் பிரகாரம் பரஸ்பர உடன்பாட்டின் பேரில் எப்போது வேண்டுமானாலும் ரத்து செய்ய லாம்; அவ்வாறு செய்யாத பட்சத்தில் இந்தத் தேர்தல் முறை பத்து ஆண்டு களுக்குப் பிறகு முடிவுக்கு வரும்.

6. விதி 1 மற்றும் விதி 4ல் கண்டுள்ளபடி மாகாண சட்ட மன்றங்களிலும் மத்திய சட்டமன்றத்திலும் தாழ்த்தப்பட்ட மக்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கும் முறையானது இந்த ஒப்பந்தத்தில் சம்பந் தப்பட்ட சமூகங்களுக்கிடையே பரஸ்பர உடன்பாட்டின் மூலம் தீர்மானிக்கப்படும் வரை தொடர்ந்து நீடிக்கும்.

7. மத்திய, மாகாண சட்டமன்றங்களுக்கான தேர்தல்களில் தாழ்த்தப்பட்ட இன மக்கள் வாக்களிப்பதற்கான தகுதி லோதியன் குழுவின் அறிக்கையில் சுட்டிக்காட்டியபடி அமையும்.

8. ஒருவர் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவராக இருக்கும் காரணத்துக்காக எந்த ஊராட்சித் தேர்தல்களிலும் வாக்களிக்கவோ, வேட்பாளராகப் போட்டியிடவோ அல்லது எந்த அரசு உத்தியோகங் களிலும் நியமிக்கப்படவோ எத்தகைய தடையும் இருக்காது.

அரசு உத்தியோகங்களில் நியமனம் செய்யப்படுவதற்குத் தேவையான கல்வித் தகுதிகள் இருக்குமானால் இத்தகைய நிய மனங்களில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு நியாயமான பிரதிநிதித்துவம் பெற்றுத் தருவதற்கு எல்லா முயற்சிகளும் மேற்கொள்ளப்படும்.

9. ஒவ்வொரு மாகாணத்திலும் தாழ்த்தப்பட்ட இனத்தவர்களுக்குக் கல்வி வசதிகள் செய்து தரக் கல்வி மானியத்திலிருந்து கணிசமான தொகை ஒதுக்கப்படும்.

இந்த ஒப்பந்தத்தின் விதிகளை, திரு. காந்தி ஏற்றுக் கொண்டார். அரசும் இதனை இந்திய அரசாங்கச் சட்டத்தில் இணைத்து தனது ஒப்புதலை அளித்தது.

புனா ஒப்பந்தம் பலதரப்பட்ட பிரதிபலிப்புகளை உண்டு பண்ணிற்று. தீண்டப்படாதவர்கள் வருத்தமும் சோர்வும் அடைந்தனர். இதற்கு நியாயமான காரணங்கள் உண்டு. எனினும் இதனை ஏற்றுக் கொள்ளாதவர்களும் இருந்தனர். பிரதமர் தமது வகுப்புத் தீர்ப்பில் அளித்ததைவிட புனா ஒப்பந்தம் தீண்டப்படாதவர்களுக்கு அதிகமான இடங்களை வழங்கியுள்ளது என்று அவர்கள் சுட்டிக் காட்டினர். வகுப்புத் தீர்ப்பு தீண்டப்படாத மக்களுக்கு 78 இடங்களை மட்டுமே வழங்கியிருக்கும்போது, புனா ஒப்பந்தம் அவர்களுக்கு 148 இடங்களை அளித்திருக்கிறது என்பது உண்மையே. ஆனால் இதை வைத்து வகுப்புத் தீர்ப்பு வழங்கியதைக் காட்டிலும் புனா ஒப்பந்தம் அவர்களுக்கு அதிகமாக வழங்கியுள்ளது என்ற முடிவுக்கு வருவது வகுப்புத் தீர்ப்பு உண்மையில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு என்ன அளித்துள்ளது என்பதை உதாசீனம் செய்வதாகவே இருக்கும்.

வகுப்புத் தீர்ப்பு தாழ்த்தப்பட்ட இனத்தவருக்கு இரண்டு அனுகூலங்களைக் கிடைக்கச் செய்துள்ளது; (i) தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அது சில குறிப்பிட்ட இடங்களை ஒதுக்குகிறது; இவற்றிற்கு தனி வாக்காளர் பட்டியல் மூலமே தேர்தல் நடைபெறும்; தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்கள் இந்த இடங்களை நிரப்ப முடியும். (ii) தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இரண்டு வாக்குச் சீட்டுகள் அளிக்கப் படுகின்றன; அவற்றில் ஒன்றை தனித் தொகுதியிலும் மற்றொன்றைப் பொதுத் தொகுதியிலும் அவர்கள் பயன்படுத்தலாம்.

ஆனால் புனா ஒப்பந்தம் தாழ்த்தப்பட்ட மக்களுக்கான இடங்களின் எண்ணிக்கையை அதிகரித்த அதேசமயம் இரட்டை வாக்குரிமையைப் பறித்துவிட்டது. இடங்கள் அதிகரிப்பு இரட்டை வாக்குரிமை இழப்பை ஒருபோதும் ஈடுசெய்ய முடியாது. வகுப்புத் தீர்ப்பு வழங்கிய இரண்டாவது வாக்கு விலைமதிப்பற்ற தனிச் சலுகையாகும். ஓர் அரசியல் ஆயுதம் என்ற முறையில் அதன் மதிப்பு கணக்

கிடற்கரியது. ஒவ்வொரு தொகுதியிலும் தாழ்த்தப்பட்ட இனத்தவரின் வாக்குரிமை பலம் பத்துக்கு ஒன்றாக இருக்கிறது. சாதி இந்து வேட்பாளர்களது தேர்தலில் பயன்படுத்தக்கூடிய இந்த வாக்குரிமைப் பலத்தைக் கொண்டு பொதுத் தேர்தலின் போக்கை ஆட்டிப்படைக்கக் கூடியவர்களாக அல்லாவிட்டாலும் அதனை நிர்ணயிக்கக்கூடிய நிலையிலாவது இருப்பார்கள். ஒரு சாதி இந்து வேட்பாளர் தாழ்த்தப்பட்ட மக்களது வாக்குகளைச் சார்ந்திருக்கும்படிச் செய்யப்பட்டால் அந்த வேட்பாளர் தனது தொகுதியில் தாழ்த்தப்பட்ட இனத்தோரை உதாசீனம் செய்யவோ அல்லது அவர்களது நலன்களுக்கு எதிராக செயல்படவோ துணிய மாட்டார். ஆனால் இன்று அவர்களது நிலை என்ன? வகுப்புத் தீர்ப்பு வழங்கியதைவிட அவர்களுக்கு ஒரு சில இடங்கள் அதிகமாகக் கிடைத்துள்ளன. ஆனால் அதேசமயம் ஏனைய உறுப்பினர்கள் தாழ்த்தப்பட்ட உறுப்பினர்களிடம் பகை உணர்வோடு நடந்து கொள்ளாவிட்டாலும் நிச்சயம் அலட்சிய உணர்வோடு நடந்து கொள்வார்கள். இரட்டை வாக்குரிமையுடன் கூடிய வகுப்புத் தீர்ப்பு நீடித்திருக்குமானால் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு ஒரு சில இடங்கள் குறைவாகக் கிடைப்பினும் இதர உறுப்பினர்கள் தாழ்த்தப்பட்ட மக்களுக்கான பிரதிநிதிகள் போலவே நடந்து கொள்வார்கள். எனவே, தாழ்த்தப்பட்ட இனத்தோருக்கான இடங்கள் அதிகரிப்பு உண்மையில் அதிகரிப்பே ஆகாது; தனி வாக்காளர் தொகுதி, இரட்டை வாக்குரிமை ஆகியவற்றின் இழப்பு இதனை ஒருபோதும் ஈடுசெய்ய முடியாது. இந்துக்கள் புனா ஒப்பந்தத்தைத் தலைமீது தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடவில்லை; ஏனென்றால் அதை அவர்கள் விரும்பவில்லை. எனினும், திரு. காந்தியின் உயிரை எப்படியும் காப்பாற்ற வேண்டும் என்ற உணர்வு, ஆதங்கம் அவர்களிடம் மேலோங்கி இருந்தது. ஆதலால் ஒப்பந்தத்தின் ஷரத்துகள் அவர்களுக்கு திட்டவட்டமாக, நிச்சயமாகப் பிடிக்கவில்லை என்றாலும் அந்த ஒப்பந்தத்தை நிராகரிக்கும் துணிச்சல் அவர்களுக்கு இல்லை. இவ்வாறு, இந்துக்களால் வெறுக்கப்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்கள் விரும்பாத புனா ஒப்பந்தத்தை இரு தரப்பினரும் அங்கீகரித்தனர்; இதன்பேரில் அது இந்திய அரசாங்கச் சட்டத்தில் இடம் பெற்றது.

## IX

புனா ஒப்பந்தம் கையெழுத்தானதைத் தொடர்ந்து ஹேம்மாண்ட் குழு நியமிக்கப்பட்டது; தொகுதிகளின் எல்லைகளை வரையறுப்பதும், ஒவ்வொரு தொகுதிக்கும் எத்தனை இடங்கள் என்பதை

நிர்ணயிப்பதும், புதிய அரசியலமைப்புச் சட்டத்தின்படி அமைக்கப் படும் சட்டமன்றங்களுக்கான தேர்தல்களில் எத்தகைய வாக்களிப்பு முறையைக் கடைப்பிடிப்பது என்பதைத் தீர்மானிப்பதும் இக் குழுவின் பணியாகும்.

ஹேம்மண்ட் குழு தனது பணிகளை ஆற்றும்போது புனா ஒப்பந்தத்தின் ஷரத்துக்களையும், தீண்டப்படாதவர்களின் தேவை களை நிறைவேற்றும் பொருட்டு ஒப்புக்கொள்ளப்பட்ட விசேட தேர்தல் ஏற்பாட்டையும் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டி யிருந்தது. புனா ஒப்பந்தம் அவசர அவசரமாக செய்து கொள்ளப் பட்டதால் துரதிர்ஷ்டவசமாக பல விஷயங்கள் சரிநுட்பமாக, துல் லியமாக, திட்டவட்டமாகத் தீர்மானிக்கப்படாமல் விடப்பட்டு விட்டன. இவ்வாறு சரிவர வரையறுக்கப்படாமல் விடப்பட்ட வற்றில் பின்வரும் இரண்டு விஷயங்களை மிக முக்கியமானவை யாகக் குறிப்பிட வேண்டும். (1) பூர்வாங்கத் தேர்தலில் 'நான்கு பேர்' தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட் டிருக்கிறது; அப்படியானால் அதிகப்பட்சம் நான்கு பேர் தேர்ந் தெடுக்கப்பட வேண்டுமா, அல்லது குறைந்தபட்சம் நான்கு பேர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமா? (2) இறுதி வாக்கெடுப்பில் எத் தகைய வாக்குரிமை முறையைக் கைக்கொள்ள வேண்டும்? ஒப்பந் தத்தில் காணப்படும் 'நான்கு பேர்' என்பது குறைந்தபட்சம் நான்கு பேர் போட்டியிட வேண்டும் என்பதையே குறிக்கிறது எனச் சாதி இந்துக் கள் சார்பில் வாதிடப்பட்டது. அவ்வாறு நான்கு பேர் போட்டியிட முன்வராவிட்டால் பூர்வாங்கத் தேர்தல் இருக்காது; இதனால் தனி இடத்துக்குத் தேர்தல் நடை பெறாமல் அந்த இடம் காலியாகவே இருக்கும்; தாழ்த்தப்பட்ட மக்கள் பிரதிநிதித்துவம் பெறாமல் போக வேண்டியதுதான் என்றும் சாதி இந்துக்கள் குதர்க்கவாதம் செய்தனர். தகராறுக்குரிய பிரச்சினையில் என் கருத்தைத் தெரிவிக்கும்படிக் கேட்கப்பட்டேன். நான்கு என்பது அதிகப்பட்சம் நான்கு பேர் என் பதையே குறிக்கும் என்று கூறினேன். புனா ஒப்பந்தத்தில் காணப்படும் நான்கு என்பதற்கு "நான்கு பேருக்கு அதிகப்படாமல்" என்று பொருள் கொள்ள வேண்டுமேயன்றி, 'நான்கு பேருக்குக் குறையாமல்' என்று பொருள் கொள்ளக்கூடாது என்றும் தெரிவித்தேன். வாக்களிப்புப் பிரச்சினையைப் பொறுத்தவரை கட்டாய பகிர்ந்தளிப்பு வாக் களிப்பு முறையே மிகவும் உகந்த முறை என்று இந்துக்கள் வாதிட் டனர். ஆனால் குவிப்பு முறை வாக்களிப்பே தேர்தலில் வாக்களிப் பதற்கு மிகச் சிறந்த, உசிதமான முறை என்று நான் வலியுறுத்திக்

கூறினேன். ஹேரம்மண்ட் குழு நான் முன்வைத்த கருத்துகளை ஏற்றுக் கொண்டு இந்துக்கள் தெரிவித்த கருத்துகளை நிராகரித்தது; இது தீண்டப்படாதவர்களின் அதிர்ஷ்டம் என்றே கூறவேண்டும். இந்துக் கள் ஏன் இவ்விதம் விதண்டாவாதம் செய்தார்கள் என்பதைத் தெரிந்து கொள்வது சுவையாக இருக்கும். ஹேரம்மண்ட் குழுவின் முன் சாதி இந்துக்கள் ஏன் இத்தகைய கருத்துகளை முன்வைத்தார்கள் என் பதைச் சற்றுச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அவர்கள் மேற்கொண்ட இந்த நிலைக்கு ஏதேனும் குறிப்பிட்ட நோக்கம் இருக்கிறதா? ஒரு பூர்வாங்கத் தேர்தல் செல்லுபடியாகக் கூடியதாக இருக்க வேண்டு மானால், அந்தத் தேர்தலுக்கான பட்டியலில் குறைந்த பட்சம் நான்கு பேர் இடம் பெற வேண்டும்; அதற்குக் குறைவாகக் கூடாது என்று இந்துக்கள் ஏன் வலியுறுத்தினார்கள் என்றால், அப்போதுதான் தங்க ளுடன் பெரிதும் ஒத்துப்போகிற, இணங்கிப் போகிற, தங்களது கைக் கருவியாக இருக்கக்கூடிய தாழ்த்தப்பட்ட பிரதிநிதி ஒருவரை இறுதி வாக்கெடுப்பில் தேர்ந்தெடுக்கப்படச் செய்ய முடியும் என அவர் கள் கருதியதேயாகும் என்று எனக்குத் தோன்றுகிறது. இத்தகைய ஒரு தாழ்த்தப்பட்ட இன வேட்பாளர் இறுதித் தேர்தலில் தேர்ந் தெடுக்கப்பட வேண்டுமானால் பூர்வாங்கத் தேர்தல் பட்டியலில் அவர் முதல் இடம் பெறவேண்டும், பட்டியல் பெரிதாக இருந்தால் தான் அவர் அதில் இடம்பெற முடியும். முற்றிலும் தாழ்த்தப்பட்ட வாக்காளர்களைக் கொண்ட தனி வாக்காளர்களைக் கொண்டே இந்தப் பூர்வாங்கப் பட்டியலுக்கான தேர்தல் நடைபெறுவதால், பட்டியலில் ஒரே ஒரு வேட்பாளர் மட்டுமே இருந்தால் அவர் தாழ்த் தப்பட்ட மக்களின் மிகவும் உருக்கு உறுதிபடைத்த பிரதிநிதியாக, மலைகுலைந்தாலும் நிலை குலையாதவராக, எதற்கும் விட்டுக் கொடுக்காதவராக இருப்பார்; இந்துக்களின் கண்ணோட்டத்தில் இப்படிப்பட்டவர் மிகவும் மோசமானவர் ஆவார். பட்டியலில் இரண்டு பேர் இருந்தால் இரண்டாவது நபர் முதல் நபரை விட உறுதி குறைந்தவராக இருப்பார்; எனவே இப்படிப்பட்டவர் இந்துக்களின் பார்வையில் நல்லவராகக் கருதப்படுவார். பட்டிய லில் மூன்று பேர் இருந்தால், மூன்றாவது நபர் இரண்டாவது நபரை விடப் பற்றுறுதி குன்றியவராக இருப்பார்; அதனால் இந்துக்களின் நோக்கில் அவர் மேம்பட்டவராக எண்ணப்படுவார்; ஆக, நான்கு பேர் கொண்ட பட்டியல் இருப்பது இந்துக்களிடம் மிகவும் இணக்க மான, பெரிதும் விட்டுக் கொடுக்கக் கூடிய போக்கினைக் கடைப் பிடிக்கக் கூடிய தாழ்த்தப்பட்டோர் பிரதிநிதியை பட்டியலில் இடம்

பெறச் செய்யும் மிகச் சிறந்த வாய்ப்பை இந்துக்களுக்கு வழங்கு கிறது. எனவேதான் பட்டியல் குறைந்தபட்சம் நான்கு பேரைக் கொண்டதாக இருக்க வேண்டும் என்று ஹேம்மண்ட் குழுவிடம் அவர்கள் உடும்புப் பிடிவாதமாக வலியுறுத்தினர்.

இதேபோல், கட்டாயப் பகிர்ந்தளிப்பு வாக்களிக்கும் முறையை இந்துக்கள் வலியுறுத்துவதன் நோக்கம் தாழ்த்தப் பட்டோருக்காக ஒதுக்கப்பட்ட இடங்களை இந்துக்கள் கைப்பற்றிக் கொள்வதே ஆகும். மொத்தம் எத்தனை இடங்கள் இருக்கின்றனவோ அத்தனை வாக்குகள் குவிப்பு முறை வாக்களிப்பு ஏற்பாட்டில் வாக்காளருக்கு இருக்கும்; அந்த வாக்குகள் அனைத்தையும் அவர் ஒரே வேட்பாள ருக்கு அளிக்கலாம் அல்லது தம் விருப்பம்போல் இரண்டு அல்லது மூன்று வேட்பாளர்களுக்குப் பகிர்ந்தளிக்கலாம். பகிர்ந்தளிப்பு வாக்களிக்கும் முறையிலும் எத்தனை இடங்கள் உள்ளனவோ அத்தனை வாக்குகள் வாக்காளருக்கு இருக்கும்; ஆனால் அவர் யாரே னும் ஒரு வேட்பாளருக்கு ஒரு வாக்கை மட்டுமே அளிக்க முடியும். இந்த இரண்டு முறைகளும் வேறுபட்டவையாகத் தோன்றினாலும் நடைமுறையில் வேறுபாடு ஏதும் இல்லை. ஏனென்றால் குவிப்பு முறை வாக்களிப்பில் கூட ஒரு வேட்பாளர் தனது வாக்குகளைப் பகிர்ந்தளிப்பது தடை செய்யப்படவில்லை. அவர் ஒரு வேட்பாள ருக்கு ஒரு வாக்கு வீதம் அளிக்கலாம். ஆனால் இந்துக்கள் தங்களுக்குக் கிட்டக்கூடிய வாய்ப்பை நழுவவிட விரும்பவில்லை. கூட்டு வாக் காளர் தொகுதியில் தாழ்த்தப்பட்டோருக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் தனி இடத்துக்குத் தங்கள் சார்பில் நிறுத்தப்பட்டுள்ள தாழ்த்தப்பட்ட வேட்பாளருக்கு ஆதரவாக தங்களது உபரி வாக்குகளைக் கொண்டு போய் குவிப்பது அவர்களது பிரதான நோக்கம். தாழ்த்தப்பட்ட மக்களின் வாக்குகளையும் விஞ்சி சென்று, அவர்கள் தங்களுடைய பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்காதபடி தடுப்பதே அவர்களது குறிக் கோள். சாதி இந்து வாக்காளர்களின் உபரி வாக்குகள் சாதி இந்து வேட்பாளரிடமிருந்து தாழ்த்தப்பட்ட வேட்பாளருக்குத் திசை மாற்றப்பட்டாலொழிய இவ்வாறு செய்வது சாத்தியமில்லை. குவிப்பு முறை வாக்களிப்பு ஏற்பாட்டில் விடவும் பங்களிப்பு முறை வாக் களிப்பு ஏற்பாட்டில் இந்த உபரி வாக்குகளை திசை மாற்றுவதற்கு அதிக வாய்ப்பு உண்டு. முதலில் குறிப்பிட்ட வாக்களிப்பு முறையில் சாதி இந்து வேட்பாளர் சாதி இந்து வேட்பாளருக்கு ஒரு வாக்கை மட்டும் தான் அளிக்க முடியும். சாதி இந்து வேட்பாளருக்குப்

பயன்படுத்தப்படாத மற்ற வாக்கை பொதுவாக தாழ்த்தப்பட்ட வேட்பாளருக்கு மட்டுமே பயன்படுத்த முடியும். பகிர்ந்தளிப்பு முறையில் தாழ்த்தப்பட்டோருக்கு ஒதுக்கப்பட்ட இடத்திற்கான தேர்தலில் வாக்குகளைக் கொண்டுபோய் குவிப்பதற்கு அதிக வாய்ப்பிருக்கிறது. இதனால்தான் குவிப்பு முறையை விடவும் இந்த முறையை இந்துக்கள் விரும்பினர். எனினும் அவர்களது கண்ணோட்டத்தில் பகிர்ந்தளிப்பு முறைகூட குறைபாடுகளற்றதல்ல. பகிர்ந்தளிப்பு முறையின்படி ஒரு வாக்காளர் தனது அனைத்து வாக்குகளையும் பயன்படுத்த வேண்டுமென்ற கட்டாயம் ஏதுமில்லை. அவர் ஒரு வாக்கை சாதி இந்து வேட்பாளருக்கு அளித்துவிட்டு மற்ற வாக்குகளைப் பயன்படுத்தாதிருக்கலாம். இவ்வாறு நிகழுமானால் தங்களது தாழ்த்தப்பட்ட இனப் பிரதிநிதியை வெற்றிபெறச் செய்யும் அவர்களது நோக்கம் தோல்வியடையும். எனவே, தாங்கள் வைத்த குறி தவறாதிருக்க அவர்கள் விரும்பினர்; பகிர்ந்தளிப்பு வாக்களிப்பு முறை கட்டாயமாக்கப்பட வேண்டும் என்று அவர்கள் வலியுறுத்தினர்; அப்போதுதான் ஓர் இந்து வேட்பாளர் அவர் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இந்துக்களால் நியமிக்கப்பட்ட தாழ்த்தப்பட்ட இன வேட்பாளருக்கு வாக்களிப்பதைத் தவிர அவருக்கு வேறு வழியில்லாது போகும்; இதனால் இந்துக்களால் நியமிக்கப்பட்ட தாழ்த்தப்பட்ட இன வேட்பாளர் சர்வ நிச்சயமாக வெற்றி பெற முடியும்.

இவற்றை எல்லாம் கொண்டு பார்க்கும்போது, புனா ஒப்பந்தம் என்பது தீண்டப்படாதவர்களுக்குக் கொடுக்கப்பட்ட முதல் அடி என்பதும், இந்த ஒப்பந்தத்தை விரும்பாத இந்துக்கள் அவர்களுக்கு மேலும் பல அடிகளைத் தருவதில் முனைந்து ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதும் தெள்ளத் தெளிவாகும். ஹேம்மண்ட் குழுவின் முன்னர் சாதி இந்துக்கள் எழுப்பிய இரண்டு ஆட்சேபங்களும் எதைக் காட்டுகின்றன? இவை இந்துக்கள் தீட்டிய மிக ஆழமான சதியின் ஒரு பகுதியே என்பதைக் காட்டுகின்றன. புனா ஒப்பந்தத்தை நிராகரிக்க முடியாததால், அந்த ஒப்பந்தம் தீண்டப்படாதவர்களுக்கு எத்தகைய நன்மையும் செய்துவிடாதபடிப் பார்த்துக் கொள்வதே இந்த சதியின் நோக்க மாகும். தீண்டப்படாதவர்களின் அரசியல் உரிமைகள் விஷயத்தில் காங்கிரஸ் நடந்து கொண்ட விபரீதமான, ஆபத்தான போக்கின் கதை இத்துடன் முடிந்துவிடவில்லை. இக்கதையின் பின் பகுதி முன் பகுதியை விடவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

# X

ஆகவே, அந்தக் கதையைத் தொடர்வோம். இதன் அடுத்த பகுதி 1935 ஆம் வருட இந்திய அரசாங்க சட்டத்தின்படி மாகாண சட்டமன்றங்களுக்கு நடைபெற்ற தேர்தல் சம்பந்தப் பட்டது. இதுதான் காங்கிரஸ் சந்திக்கும் முதல் தேர்தலாகும். இந்தத் தேர்தலில்தான், தீண்டப்படாதோர் தங்கள் சொந்தப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை முதல் தடவையாகப் பெற்றனர். புனா ஒப்பந்தம் கையெழுத்தான சமயத்தில் திவான் பகதூர் எம்.சி. ராஜா போன்ற சில தாழ்த்தப்பட்ட இனத் தலைவர்கள் காங்கிரசை ஆதரித்து நின்றனர். தீண்டப் படாதவர்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்களுக்கு நடைபெறும் தேர்தல்களில் காங்கிரஸ் தகாத நிலையில் தலையிட்டுக் குட்டையை குழப்பாது என்றே இவர்கள் நம்பினர். ஆனால் இந்த நம்பிக்கை தகர்ந்து தரைமட்டமாயிற்று. தாழ்த்தப்பட் டோருக்கு ஒதுக்கப்பட்ட இடங்களுக்கான தேர்தலில் இரண்டு காரணங்களுக்காக காங்கிரஸ் மிகுந்த ஆர்வம் காட்டியது. முதலாவதாக, ஆட்சி அமைப்பதற்கு அவசியமான பெரும் பான்மையை எப்படியும் பெற்றே தீருவது என்று அது உறுதி பூண்டிருந்தது. இரண்டாவதாக, காங்கிரஸ்தான் தீண்டப் படாதவர்களின் உண்மையான பிரதிநிதி, அவர்கள் காங்கிரசிடம் தான் முழு நம்பிக்கை வைத்துள்ளனர் என்ற திரு. காந்தியின் கூற்றை அது மெய்ப்பிக்க வேண்டியதாக இருந்தது. எனவே, தாழ்த்தப் பட்ட இனப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்கான தேர்தலில் எத்தகைய பழிபாவத்துக்கும் அஞ்சாமல், மிகத் துணிச்சலோடு, மிக வலிமையோடு பங்கு கொள்ள காங்கிரஸ் எவ்விதத்திலும் தயங்க வில்லை; காங்கிரஸ் வேலைத் திட்டத்தை ஏற்க சம்மதிக்கும் தீண்டப் படாத இன வேட்பாளர்களை தாழ்த்தப்பட்ட இன மக்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ள இடங்களுக்கு காங்கிரஸ் சார்பில் நிறுத்த அது தீர்மானித்தது. காங்கிரசின் பண பலம் இதற்கு மிகவும் அனுசரணை யாக இருந்தது.

1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி தீண்டப் படாதவர்களுக்கு மொத்தம் 151 இடங்கள் ஒதுக்கப்பட்டன.[1] காங் கிரஸ் சார்பில் போட்டியிட்ட தாழ்த்தப்பட்ட இன வேட்பாளர்களில் எத்தனை பேர் வெற்றி பெற்றனர் என்பதைப் பின்வரும் அட்ட வணையிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

---

1. இது முதலில் 148 இடங்களாக இருந்தது. பீகாருக்கும் ஒரிசாவுக்குமான இட ஒதுக்கீட்டில் சில மாற்றங்கள் செய்ய வேண்டியிருந்ததால் இந்த எண்ணிக்கை பின்னர் 151 ஆக உயர்த் தப்பட்டது.

அட்டவணை 5

| மாகாணங்கள் | தாழ்த்தப்பட்ட இனத்தவருக்கு ஒதுக்கப்பட்ட மொத்த இடங்கள் | காங்கிரஸ் கைப்பற்றிய மொத்த இடங்கள் |
|---|---|---|
| ஐக்கிய மாகாணங்கள்... | 20 | 16 |
| சென்னை ... ... ... ... | 30 | 26 |
| வங்காளம் ... ... ... | 30 | 6 |
| மத்திய மாகாணங்கள்... | 20 | 7 |
| பம்பாய் ... ... ... ... | 15 | 4 |
| பீகார் ... ... ... ... ... | 15 | 11 |
| பஞ்சாப் ... ... ... ... | 8 | இல்லை |
| அசாம் ... ... ... ... | 7 | 4 |
| ஒரிசா ... ... ... ... ... | 6 | 4 |
| மொத்தம் | 151 | 78 |

தீண்டப்படாதவர்களுக்காக ஒதுக்கப்பட்ட இடங்களில் சுமார் ஐம்பத்தொரு சதவிகித இடங்களைத்தான் காங்கிரஸ் கைப்பற்றி யிருக்கிறது என்பதையே இந்த அட்டவணை காட்டுகிறது.

காங்கிரஸ் 78 இடங்களைக் கைப்பற்றிய போதிலும் உண்மை யில் 73 இடங்களைத்தான் தீண்டப்படாதவர்களின் மெய்யான, சுதந் திரமான பிரதிநிதிகள் நிரப்பினர் என்றே கூறவேண்டும். பிரதமரின் வகுப்புத் தீர்ப்பின் கீழ்விட புனா ஒப்பந்தத்தின் கீழ்தான் தீண்டப் படாதவர்கள் மிக மோசமான நிலைமையில் இருந்தனர். உண்மை யான பிரதிநிதித்துவம் என்ற பொருளில் எடுத்துக்கொண்டால் பிரதமர் அளித்ததை விட குறைவாகவே தீண்டப்படாதவர்கள் பெற்ற னர் என்று கூற வேண்டும். ஆனால் அதேசமயம் புனா ஒப்பந்தத்தில் காங்கிரஸ் மிகுந்த ஆதாயம் அடைந்தது. புனா ஒப்பந்தப்படி காங் கிரஸ் தாழ்த்தப்பட்டவர்களுக்கு 151 இடங்களை வழங்கினாலும் அவற்றில் 78 இடங்களைக் கைப்பற்றி தனது அரசியல் பேரத்தில் நல்ல ஆதாயத்தைப் பெற்றது.

1937 ஆம் ஆண்டுத் தேர்தலில் தீண்டப்படாத மக்களுக்கு காங்கிரஸ் இழைத்த தீமைகள் இவ்வளவுதான் என்று நினைத்து விடா தீர்கள். தீண்டப்படாதவர்களுக்கு காங்கிரஸ் தந்த மற்றொரு பலத்த அடியையும் இங்கு குறிப்பிட வேண்டும். நிர் வாகத்தில் அவர்களுக்கு எத்தகைய பங்கும் அளிக்காததுதான் அந்தக் கடுமையான அடி யாகும்; அவர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமையிலும் கொடுமை யாகும்.

சட்டமன்றங்களில் பிரதிநிதித்துவம் பெறும் உரிமை தீண்டப் படாதவர்களுக்கு இருக்க வேண்டும் என்பது மட்டுமன்றி, அமைச் சரவையில் இடம் பெறும் உரிமையும் அவர்களுக்கு இருக்க வேண் டும் என்று வட்டமேசை மாநாட்டில் நான் ஆரம்பம் முதலே வலி யுறுத்தி வந்திருக்கிறேன். தீண்டப்படாதவர்கள் தீய, கொடிய சட் டங்களால் சொல்லொண்ணா அவதிப்படுவது மட்டுமல்ல, தீண்டப் படாதவர்களுக்கு எதிராக காலம் காலமாக கடைபிடிக்கப்பட்டு வரும் பகைமை உணர்வுகள், தீங்குகள், கேடுகள் இந்துக்களின் ஆதிக்கத் திலுள்ள நிர்வாகத்தில் புகுத்தப்பட்டு அதன் காரணமாக தாழ்த்தப் பட்ட மக்கள் அனுபவித்துவரும் துன்ப துயரங்கள், இன்னல் இடுக் கண்கள் அளப்பரியவையாகும். இந்துக்களின் கையில் அதிகாரம் ஏகபோகமாகக் குவிந்திருக்கும் வரையில் தீண்டப்படாதவர்கள் காவல் துறையினரிடமிருந்து பாதுகாப்பையோ, நீதித் துறையின ரிடமிருந்து நீதியையோ, நிர்வாகத் துறையிடமிருந்து சட்டத்தின் அனுகூலத்தையோ ஒருபோதும் எதிர்பார்க்க முடியாது. தீண்டப் படாத இனத்தைச் சேர்ந்த உறுப்பினர்கள் உயர் நிர்வாகத்தில் இடம்பெறச் செய்வதுதான் பொது ஊதியத் துறையை தீங்கு குறைந்த தாகவும், தீண்டப்படாதவர்களின் தேவைகள் விஷயத்தில் பொறுப்பு மிக்கதாகவும் ஆக்குவதற்கான ஒரே வழியாகும்; ஒரே நம்பிக்கை யாகும். இந்தக் காரணங்களுக்காகத்தான், சட்டமன்றத்தில் பிரதி நிதித்துவம் பெறுவதற்கு தீண்டப்படாதவர்களுக்குள்ள உரிமையை வட்டமேசை மாநாட்டில் எவ்வாறு வலியுறுத்தினேனோ அமைச் சரவையில் இடம் பெறுவதற்கு அவர்களுக்குள்ள உரிமையை அழுத்தம் திருத்தமாக ஆணித்தரமாக வலியுறுத்தினேன். வட்ட மேசை மாநாடு இந்தக் கோரிக்கையின் நியாயத்தை, நேர்மைத் தகைமையை ஏற்றுக்கொண்டு, அதனை நடைமுறையில் செயல் படுத்துவதற்கான வழிமுறைகளைப் பரிசீலித்தது. இந்தக் கோரிக் கையைச் செயல்படுத்துவதற்கு இரண்டு வழிகள் இருந்தன. அமைச் சரவையில் தாழ்த்தப்பட்ட இன மக்களது பிரதிநிதிகளைச் சேர்ப் பதைக் கட்டாயமாக்கவும், அதனைத் தட்டிக் கழிக்கவோ, அதிலிருந்து

தப்பவோ முடியாதபடி செய்யவும் இந்திய அரசாங்கச் சட்டத்திலேயே ஒரு விதியை சேர்ப்பது முதல் வழியாகும். இவ்வாறு சட்ட ரீதியாக வலியுறுத்தாமல் பிரிட்டிஷ் அரசியல் சட்டத்தில் இருப்பது போன்று இதனை ஓர் எழுதாச் சட்டமாக அல்லது மரபு முறையாக விட்டுவிடுவது இரண்டாவது வழியாகும். உங்கள் சொந்த நாட்டினரிடமே இவ்வாறு அவநம்பிக்கையை வெளியிட வேண்டாம் என்று சில இந்தியப் பிரமுகர்களின் விருப்புக்கு இணங்க நானும் ஏனைய சிறுபான்மையினரின் பிரதிநிதிகளும் முதல் வழியை வற்புறுத்தவில்லை; ஆனால் அதேசமயம் இரண்டாவது வழி சட்ட வலிமையற்றதாக இருக்கும் காரணத்தால் அதனை ஏற்க நாங்கள் தயாராக இல்லை. இந்நிலையில் ஒரு நடுவாந்தர வழி ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆளுநர்களுக்குப் பிறப்பிக்கப்படும் செயல்முறைக் கட்டளைகளில் ஒரு புதிய விதியைச் சேர்ப்பது என்று முடிவாயிற்று. இதன்படி, அமைச்சரவை அமைக்கும் போது, அதில் சிறுபான்மையினரது பிரதிநிதிகள் இடம் பெறும்படியாகப் பார்த்துக் கொள்வது ஆளுநர்களின் கடப்பாடாக, கடமைப் பொறுப்பாக ஆக்கப்பட்டது. அந்த விதி பின்வருமாறு கூறுகிறது:

''நமது ஆளுநர் தமது அமைச்சரவைக்கு நியமனங்கள் செய்யும்போது பின்கண்டவாறு நடந்து கொள்ள வேண்டும்: சட்டமன்றத்தில் ஒரு ஸ்திரமான பெரும்பான்மையைப் பெற்றிருப்பவர் என்று தாம் கருதுபவருடன் கலந்தாலோசித்து சட்டமன்றத்தின் நம்பிக்கையைக் கூட்டாகப் பெற்றிருப்பவர்களை (கூடிய மட்டும் முக்கியமான சிறுபான்மை சமூகங்களைச் சேர்ந்தவர்கள் உட்பட) அமைச்சர்களாக நியமிக்க வேண்டும். இவ்வாறு செய்யும்போது, தமது அமைச்சர்களிடையே கூட்டுப் பொறுப்புணர்வை வளர்க்க வேண்டிய அவசியத்தை இடையறாது அவர் தமது மனத்தில் கொள்ள வேண்டும்.''

இந்த ஏற்பாட்டுக்கு என்ன நேர்ந்தது, அதன் கதி என்னவாயிற்று என்பது ஒரு சுவையான கதையாகும். 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தை பல்வேறு காரணங்களுக்காக தான் ஏற்கவில்லை என்று காங்கிரஸ் அறிவித்தது. அந்தக் காரணங்களை எல்லாம் இங்கு விவரித்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை என்று கருதுகிறேன். இந்த அறிவிப்புக்குப் பின்னால் எத்தகைய வாய்மையும் நேர்மையும் இல்லை என்பதை அனைவரும்

அறிவர்; ஏன், பல காங்கிரஸ்காரர்கள் கூட அறிவர். காங்கிரஸ் ஒரு தீவிரமான புரட்சிகர அமைப்பு, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை வேரோடு வேரடி மண்ணோடு ஆழக் குழிதோண்டிப் புதைக்கவே அது நெடு கிலும் அயராது சோராது, சலியாது சளைக்காது பாடுபட்டு வந்திருக் கிறது என்ற எண்ணத்தைத் தோற்றுவித்து, மக்கள் கண்ணோட் டத்தில் அதன் செல்வாக்கை உயர்த்துவதைத் தவிர அதற்கு வேறு குறிக்கோள் ஏதுமில்லை. உண்மையில் இது ஒரு நடைமுறைத் தந்திரமே அன்றி வேறல்ல. தமது கடமைப் பொறுப்புகள் சம்பந் தப்பட்ட விஷயங்களில் அவசியம் நேரிடும்போது தலையிடுவதற்கு அரசியலமைப்புச் சட்டத்தின்படி ஆளுநர்களுக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களை தனது கையில் எடுத்துக்கொள்ள காங்கிரஸ் விரும் பிற்று. அரசியலமைப்புச் சட்டத்தை நிராகரிக்கும் இந்த அறிவிப்பை வெளியிடுவது பற்றி காங்கிரஸ் சிறிதும் கவலைப்படவில்லை; ஏனென்றால் புதிய சட்டமன்ற ஏற்பாட்டைச் செயல்படுத்தக்கூடிய ஒரே அமைப்பு தான்தான் என்றும், எனவே பிரிட்டிஷ் அரசாங்கம் தன்னுடன் ஓர் உடன் பாட்டிற்கு வருவதற்கு நிர்ப்பந்திக்கப்படும் என்றும் காங்கிரஸ் எண்ணிற்று. ஆனால் பிரிட்டிஷ் அரசாங்கம் காங்கிரசைப் புறக்கணிக்கப் போவதாக அச்சுறுத்திற்று. அரசிய லமைப்புச்சட்டத்திலுள்ள மாகாணம் சம்பந்தப்பட்ட பிரிவின் தொடக்க விழா 1937 ஏப்ரல் 1 ஆம் நாளன்று நடைபெறும் என்று தேதி நிர்ண யித்ததோடு நில்லாமல், காங்கிரஸ்காரர்கள் அல்லாதவர்களைக் கொண்ட ஓர் இடைக்கால அமைச்சரவையை அமைக்கும் அள வுக்கும் அது சென்றது. அதிகாரப் பசி கொண்ட, நப்பாசை கொண்ட காங்கிரஸ்காரர்கள், சுத்த சுயம்பிரகாச சுயநல வாதிகளான அந்த அரசியல்வாதிகள் கூட்டத்தினர் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் இந்த நடவடிக்கை கண்டு மிகவும் அதிர்ந்து போயினர்; தங்களது உழைப் பின் பலன், சுகபோகம் எங்கே தங்களுக்குக் கிட்டாது போய்விடுமோ, கைக்குக் கிடைத்தது வாய்க்கு எட்டாது போய்விடுமோ என்று மிகுந்த கலவர மடைந்தனர். இதன்பேரில் மாட்சிமை தங்கிய மன்னர் பிரான் அரசாங்கத்துக்கும் காங்கிரஸ் தலைமைக்கும் இடையே பேச்சு வார்த்தைகள் தொடங்கின. அரசியலமைப்புச் சட்டத்தில் இடம் பெற்றுள்ள விசேடப் பொறுப்பு சம்பந்தப்பட்ட விதிகள் தங்களுக்கு அளிக்கும் அதிகாரங்களைப் பயன்படுத்தி மாகாணங்களின் அன்றாட நிர்வாகத்தில் தலையிடுவதில்லை என்று பிரிட்டிஷ் அரசாங்கம் வாக்குறுதி அளிக்க வேண்டும் என்று காங்கிரஸ் தலைமை கோரிற்று. அவ்வாறு வாக்குறுதி அளித்தால் பெரும்பான்மையினரின் நல்லெண் ணத்தோடு புதிய அரசியலமைப்புச் சட்டம் செயல்படுவதை தான் வரவேற்பதாகவும், இது விஷயத்தில் தான் மிகுந்த ஆர்வம் கொண்

டிருப்பதாகவும் அது தெரிவித்தது. இதில் விந்தை என்னவென்றால் காங்கிரஸ் ஒரு விபரீதமான போக்கையும் இச்சந்தர்ப்பத்தில் கடைப் பிடித்தது. அதாவது மாகாண அமைச்சரவைகளில் சிறுபான்மை யினரின் பிரதிநிதிகள் இடம்பெறும்படியாகப் பார்த்துக் கொள்வ தற்கு செயல்துறைக் கட்டளைகளின்படி ஆளுநர்களுக்கு வழங்கப் பட்டுள்ள அதிகாரங்களை அவர்கள் பயன்படுத்தக்கூடாது என்ற நிபந்தனையையும் பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து தான் கோரிய வாக்குறுதியில் காங்கிரஸ் சேர்த்துக் கொண்டது. பின்னர் என்ன? ஆளுநர்கள் காங்கிரசுடன் முற்றிலும் இணங்கிப் போயினர்; தங்கள் அதிகாரத்தை காங்கிரசுக்குத் தாரை வார்த்துக் கொடுத்தனர்; அது மட்டுமல்ல, அரசியலமைப்புச் சட்டத்தின் இந்த முக்கியமான பகுதியைச் சிதைத்துச் சீர்குலைக்கவும் காங்கிரசை அனுமதித்தனர். காங்கிரசின் தான்தோன்றித்தனமான, தறிகெட்ட, நெறியற்ற இந்தப் போக்கின் விபரீத விளைவாய் அமைச்சரவையில் பிரதிநிதித்துவம் பெறுவதற்குத் தங்களுக்குள்ள உரிமையை தாழ்த்தப்பட்ட இனத் தவர்களும் ஏனைய சிறுபான்மையினரும் இழந்தனர்.

அமைச்சரவையில் இடம் பெறுவதற்கு தாழ்த்தப்பட்ட இன மக்களுக்குள்ள உரிமையை காங்கிரஸ் பறித்ததானது வன்ம உணர் வோடு, மனக்காழ்ப்போடு முன்கூட்டியே திட்டமிட்டு மேற் கொள்ளப்பட்ட சதியாகவே தோன்றுகிறது. தனது அமைச்சரவை களில் சிறுபான்மையினரது பிரதிநிதிகளைச் சேர்க்காததற்கு காங் கிரஸ் தெரிவித்த காரணங்களில் ஒன்று மிகவும் விந்தையானதாகும். கூட்டுப் பொறுப்பு ஏற்க வேண்டுமானால் ஓர் அமைச்சரவை ஒரு கட்சி சார்புடைய அமைச்சரவையாக இருக்க வேண்டும், எனினும் அதேசமயம் சிறுபான்மையினத்தவர்களது பிரதிநிதிகளை தனது அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ள காங்கிரஸ் முற்றிலும் தயாராக இருக்கிறது, ஆனால் இதற்கு ஒரு நிபந்தனை உண்டு, அதாவது அந்தச் சிறுபான்மையினரின் பிரதிநிதிகள் காங்கிரசில் இணைந்து அதன் பிரதிக்ஞையில் கையொப்பமிட வேண்டும் என்று காங்கிரஸ் தலைமை வாதித்தது. இத்தகைய வாதம் இதர சிறுபான்மையினர் விஷயத்தில் எப்படிப்பட்ட மதிப்புடையதாக இருந்தாலும் தீண்டப் படாதவர்கள் விஷயத்தில் அது முற்றிலும் பொருந்தாது. அமைச் சரவையில் தாழ்த்தப்பட்ட இனப் பிரதிநிதிகளை சேர்க்காதிருக்கும் தனது போக்கை நியாயப்படுத்த இரண்டு காரணங்களுக்காக காங் கிரஸ் இதனைப் பயன் படுத்த முடியாது. முதலாவதாக, தாழ்த்தப் பட்ட இன மக்களுக்கு அமைச்சரவையில் பிரதிநிதித்துவம் அளிக்க புனா ஒப்பந்தப்படி காங்கிரஸ் கட்டுப்பட்டுள்ளது. இரண்டாவதாக,

காங்கிரஸ் கட்சியின் உறுப்பினர்களல்லாத தீண்டப்படாத இனத்தவர் எவரும் சட்டமன்றங்களில் இல்லை என்று காங்கிரஸ் கூற முடியாது. மாறாக, காங்கிரஸ் கட்சி சார்பில் நின்று வெற்றிபெற்ற, காங்கிரஸ் கொள்கையை ஏற்றுக்கொண்ட தாழ்த்தப்பட்ட உறுப்பினர்கள் 78 பேர் வரை சட்டமன்றங்களில் இருக்கின்றனர். அவ்வாறிருக்கும்போது அவர்களை அமைச்சரவையில் காங்கிரஸ் ஏன் சேர்த்துக் கொள்ளவில்லை? அமைச்சரவையில் இடம்பெறுவதற்குத் தீண்டப்படாதவர்களுக்குள்ள உரிமையை ஏற்காதிருப்பது காங்கிரஸ் கொள்கையின் ஒரு பகுதியாகும் என்பதும், இந்தக் கொள்கை திரு. காந்தியின் ஆதரவைப் பெற்ற கொள்கை என்பதும்தான் இதற்குரிய ஒரே பதிலாகும். இந்தக் கூற்றின் உண்மையைப் பற்றி எவருக்கேனும் ஐயம் இருப்பின் பின்கண்ட நிகழ்ச்சியை அவர்களது கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

முதலாவதாக இங்கு நான் குறிப்பிடும் நிகழ்ச்சி காங்கிரசிலிருந்து டாக்டர் காரே நீக்கப்பட்டது சம்பந்தப்பட்டதாகும். மத்திய மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரி சபை பதவியில் இருந்தது. டாக்டர் காரே அதன் பிரதமராக இருந்தார். அவரது அமைச்சரவை உறுப்பினர்களிடையே உள் தகராறுகள் எழுந்தன. தொல்லை தருபவர்களை நீக்குவதற்கு அவர் விரும்பினார். இதன் பொருட்டு முற்றிலும் நியாயமான, வழக்கமான வழிமுறையைக் கையாண்டார்; ஒரு புதிய அமைச்சரவையை அமைக்கும் நோக்கத்தோடு தனது ராஜினாமாவையும் ஏனைய அமைச்சர்களின் ராஜினாமாவையும் ஆளுநரிடம் சமர்ப்பித்தார். ராஜினாமா ஏற்றுக்கொள்ளப்பட்டது. பின்னர் அரசியல் சட்ட நடைமுறை விதிகளுக்கு முற்றிலும் இணங்க ஆளுநர் டாக்டர் காரேவைத் திரும்பவும் அழைத்து மற்றொரு அமைச்சரவையை அமைக்கும்படிக் கேட்டுக் கொண்டார். டாக்டர் காரேயும் இந்த அழைப்பை ஏற்றுக்கொண்டு புதிய அமைச்சரவையை அமைத்தார்; முன்பு தொல்லை கொடுத்து வந்தவர்களுக்கு அமைச்சரவையில் மீண்டும் இடம் கொடுக்காமல் புதியவர்கள் சிலரை நியமித்தார். டாக்டர் காரேயின் புதிய அமைச்சரவை முந்திய அமைச்சரவையிலிருந்து ஒரு முக்கியமான விஷயத்தில் மாறுபட்டிருந்தது; அதாவது திரு. அக்னிபோஜ் என்ற தீண்டப்படாதவரை அமைச்சரவையில் புதிதாக சேர்த்துக் கொண்டார். இத்தனைக்கும் டாக்டர் காரே அமைச்சராக நியமித்தவர் மத்திய மாகாணங்களின் சட்டமன்றத்திலுள்ள தாழ்த்தப்பட்ட இன உறுப்பினர்; பட்டதாரி; காங்கிரஸ்காரர்; தீவிர கட்சிக்காரர்; அமைச்சராவதற்கு எல்லா விதத்திலும் தகுதியானவர். இந்நிலைமையில் 1938 ஜூலை 26 ஆம் தேதி காங்கிரஸ் நிர்வாகக் குழு

வார்தாவில் கூடிற்று; பழைய அமைச்சரவையிலிருந்த தனது சகாக்களின் ராஜினாமாவைச் சமர்ப்பித்ததன் மூலம் டாக்டர் காரே ஒரு பெரும் குற்றம் இழைத்துவிட்டார் என்று அது அவரைக் கண்டித்தது; அது மட்டுமன்றி, ஒரு புதிய அமைச்சரவையை அமைத்ததன் மூலம் கட்சிக் கட்டுப்பாட்டை அவர் மீறி விட்டார் என்றும் அவர் மீது குற்றம் சுமத்திற்று. புதிய அமைச்சரவையை அமைத்ததன் மூலம் கட்சிக் கட்டுப்பாடு மீறப்பட்டுவிட்டதாகக் கூறப்படும் இந்தக் குற்றச்சாட்டின் பின்னணியைப் பற்றி விவரிக்கும்போது, தாழ்த்தப்பட்ட இனத்தவர் ஒருவரை அமைச் சரவையில் சேர்த்துக் கொண்டதே திரு. காந்தியின் கருத்துப்படி கட்டுப்பாட்டை மீறிய செயலாகும் என்று டாக்டர் காரே பகிரங்கமாகவே கூறினார். தீண்டப்படாதவர்களிடையே இத்தகைய ஆர்வ விருப்பங்களையும் அபிலாஷைகளையும் கிளர்த்தி விடுவது தவறென்றும், இத்தகைய மோசமான தவறைச் செய்தமைக்காக உங்களை நான் ஒருபோதும் மன்னிக்க முடியாது என்றும் திரு. காந்தியே தம்மிடம் கூறியதாகவும் டாக்டர் காரே தெரிவித்தார். டாக்டர் காரே இதனை பல மேடைகளில் பகிரங்கமாகவே, பட்டவர்த்தனமாகவே கூறினார். திரு. காந்தி ஒருபோதும் இதனை மறுத்துரைத்ததில்லை.

இது ஒருபுறமிருக்க, இது விஷயத்தில் இதைவிடவும் நேரடியான சான்று உள்ளது. 1942ல் தீண்டப்படாதவர்களின் மாநாடு ஒன்று நடைபெற்றது. தீண்டப்படாதவர்களின் அரசியல் கோரிக்கைகளை விவரித்து அந்த மாநாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த தாழ்த்தப்பட்ட இனத்தவர் ஒருவர் அந்த மாநாட்டில் பங்கு கொண்டார். மாநாட்டில் முன் வைக்கப்பட்ட இந்தக் கோரிக்கைகள் குறித்து திரு. காந்தி என்ன கருதுகிறார் என்பதை அறியும் பொருட்டு அவர் திரு. காந்தியிடம் சென்றார்; பின்வரும் ஐந்து கேள்விகளை அவர்முன் வைத்தார்:

> "1. எதிர்காலத்தில் வகுக்கப்படவிருக்கும் அரசியலமைப்புச் சட்டத்தில் ஹரிஜன்களின் நிலைமை எவ்வாறு இருக்கும்?
>
> 2. பஞ்சாயத்து போர்டிலிருந்து தொடங்கி சட்டமேலவை வரை மக்கட் தொகை அடிப்படையில் ஹரிஜனங்களுக்கு ஐந்து இடங்கள் ஒதுக்குவதற்கு இணங்கும்படி அரசாங்கத்துக்கும் காங்கிரசுக்கும் பரிந்துரைப்பீர்களா?

3. மாகாண சட்டமன்றங்களில் உள்ள பெரும்பாலான தாழ்த்தப்பட்ட இன உறுப்பினர்களின் நம்பிக்கையைப் பெற்ற தாழ்த்தப்பட்ட இன சட்டமன்ற உறுப்பினர்களிலிருந்து அமைச்சர்களை நியமிக்கும்படி காங்கிரசுக்கும் சட்டமன்றங்களிலுள்ள பல்வேறு பெரும்பான்மைக் கட்சிகளின் தலைவர்களுக்கும் நீங்கள் ஆலோசனை கூறுவீர்களா?

4. ஹரிஜனங்களின் பின்தங்கிய நிலையைக் கருத்திற்கொண்டு அவர்கள் பஞ்சாயத்து போர்டு தலைவர்களாகவும் நகரசபை தலைவர்களாகவும் வருவதை சாத்தியமாக்குவதற்கு இந்த அமைப்புகளிலுள்ள நிர்வாகப் பதவிகளை சுழல் முறையில் வகிப்பதற்கு சட்டத்தில் வகை செய்யும்படி அரசாங்கத்துக்கு நீங்கள் பரிந்துரைப்பீர்களா?

5. மாவட்ட காங்கிரஸ் குழு முதல் காங்கிரஸ் நிர்வாகக் குழுவரை ஹரிஜனங்களுக்கு சில குறிப்பிட்ட இடங்களை நீங்கள் ஏன் ஒதுக்கக்கூடாது?

1942 ஆகஸ்டு 2 ஆம் தேதியிட்ட ஹரிஜன் இதழில் இக் கேள்விகளுக்கு திரு. காந்தி பதிலளித்தார். அதில் திரு. காந்தி கூறியிருந்தது இதுதான்:

"1. தீண்டாமையை எவ்வகையிலும், எந்த வடிவத்திலும் கடைப்பிடிப்பதை குற்றமாக்கும் ஒரு ஷரத்து நான் விரும்பும் அரசியலமைப்புச் சட்டத்தில் இடம் பெற்றிருக்கும். 'தீண்டப்படாதவர்கள்' எனப்படுபவர்களுக்கு தேர்தல் நடைபெறும் சம்பந்தப்பட்ட பிரதேசத்திலுள்ள அவர்களது மக்கட் தொகையின் அடிப்படையில் எல்லாத் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைப்புகளிலும் அவர்களுக்கு இட ஒதுக்கீடு செய்யப்படும்.

"2. முந்தைய எனது பதிலிலேயே இந்தக் கேள்விக்கான பதிலும் அடங்கியுள்ளது.

"3. இவ்வாறு நான் ஆலோசனை கூற இயலாது. சமுதாயத்தின் புறக்கணிக்கப்பட்ட இனங்களைப் பாதுகாக்கும் பணியை அவர்களுக்கும் நாட்டுக்கும் ஊறு விளைவிக்கும் அளவுக்குச் செயல்படுத்த முற்படலாகாது. ஓர் அமைச்சர் என்பவர் அனைவரது நம்பிக்கையையும் பெற்ற தலைசிறந்த நபராக இருக்க வேண்டும். ஒருவர் ஓர் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைப்பில் இடம் பெற்று

விட்ட பிறகு உயர் நிலைகளை அடைய வேண்டுமானால் அவர் தமது உள்ளார்ந்த தகுதிகளையே, திறமையையே, செல்வாக்கையே சார்ந்திருக்க வேண்டும்.

"4. முதலாவதாக, இப்போதைய சட்டத்தில் நான் ஆர்வமோ, அக்கறையோ கொண்டிருக்கவில்லை. அது கிட்டத் தட்ட மடிந்துபோன மாதிரிதான். எனினும் நான் ஏற்கெனவே கூறிய காரணங்களின் அடிப்படையில் உங்கள் யோசனையை எதிர்க்கிறேன்.

"5. முன்னர் கூறிய காரணங்களால் இதை எதிர்க் கிறேன். ஆயினும் காங்கிரஸ் உறுப்பினர் பட்டியலில் காணப்படும் ஹரிஜன உறுப்பினர்களின் எண்ணிக்கைக்கு ஏற்ற விகிதாசாரத்தில் அரிஜன உறுப்பினர்கள் தேர்ந் தெடுக்கப்பட வேண்டும் என்று பெரிய காங்கிரஸ் அமைப்பு களுக்கு வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்."

காங்கிரசில் நான்கு அணா உறுப்பினர்களாகச் சேரு வதில் ஆர்வம் காட்டாத ஹரிஜனங்கள் தேர்ந்தெடுக்கப் பட்ட அமைப்புகளில் தங்கள் பெயர்கள் இடம் பெறும் என்று எதிர்பார்க்க முடியாது. காங்கிரஸ் ஊழியர்கள் ஹரி ஜனங்களை அணுகி அவர்களை காங்கிரசில் சேரும்படி வலியுறுத்த வேண்டும்.

அமைச்சரவையில் இடம்பெறுவதற்கு தீண்டப்படாதவர் களுக்குள்ள உரிமையை கொள்கை அளவில் அங்கீகரிக்காதிருக்க காங்கிரசும் காந்தியும் உறுதிபூண்டுள்ளனர் என்பது குறித்து இதற்கு மேல் என்ன ஐயம் இருக்க முடியும்? தகுதிகள் பிரச்சினையைப் பொறுத்தவரையில் இந்த அளவுகோலை திரு. காந்தி எல்லாச் சிறு பான்மையோர் விஷயத்திலும் பயன்படுத்தியிருந்தால் அதில் ஓரளவு அர்த்தம் உண்டு. முஸ்லீம் கோரிக்கை விஷயத்தில் இதேபோன்று கூற திரு. காந்திக்கு துணிச்சல் உண்டா? தீண்டப்படாதவர்கள் விஷ யத்தில் மட்டும் அமைச்சரவையின் கதவுகளை இழுத்து மூடுவது என்ன நியாயம்? திறமையற்ற, தகுதியற்ற ஒரு தீண்டப்படாதவர் அமைச்சராக்கப்பட வேண்டும் என்று யாரும் கோரவில்லை. தாழ்த்தப்பட்ட இன மக்களுக்கு எதிராக திரு. காந்தியின் உள்ளத்தில் தீவிர வெறுப்பு உணர்வு ஆழப் புதைந்து போயிருக்கிறது என் பதையே இது உறுதிப்படுத்துகிறது.

புனா ஒப்பந்தத்தைப் பயனற்றதாக்க, செல்லுபடியற்றதாக்க, செல்லாக்காசானதாக்க காங்கிரஸ் தொடர்ந்து மேற்கொண்டு வந்துள்ள பல நடவடிக்கைகளில் இங்கு குறிப்பிட வேண்டியவை மேலும் இரண்டு இருக்கின்றன. இவற்றில் முதல் நடவடிக்கை தேர்தலுக்கு வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பதில் காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு கடைப்பிடித்து வந்த கொள்கை சம்பந்தப் பட்ட தாகும். இது மிக முக்கியமான பிரச்சினையாகும். இவ்வளவு முக்கியமான பிரச்சினை போதுமான அளவு ஆழமாக, நுணுக்க மாக ஆராயப்படாதது துரதிர்ஷ்டவசமானதே ஆகும். இந்தப் பிரச் சினையை நான் உரிய முறையில் ஆராய்ந்திருக்கிறேன். என் ஆய்வின் முடிவுகளை தக்க ஆதாரங்களுடன் ஒரு தனி ஆய்வுக் கட்டுரையாக வெளியிட எண்ணியிருக்கிறேன். இப்போதைக்கு நான் செய்யக்கூடிய தெல்லாம் தேர்தலுக்கு வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பதில் இந்தப் போர்டுகள் கடைப்பிடித்து வந்துள்ள பொதுக் கோட்பாடுகளை எடுத்துக் கூறுவதுதான். சாதி இதில் மிக முக்கிய பங்கு வகித்தது. ஒரு தொகுதியில் போட்டியிட இரண்டு பேர் முன்வந்தால் அவர்களில் மிகவும் தகுதியானவரைத் தேர்ந்தெடுப்பது அவசியம் என்று காங் கிரஸ் உணரவில்லை. மாறாக, ஒரு குறிப்பிட்ட தொகுதியில் எந்த சாதி வாக்காளர்கள் மிக அதிக எண்ணிக்கையில் இருக்கிறார்களோ அந்தச் சாதியைச் சேர்ந்தவரையே அது வேட்பாளராகத் தேர்ந் தெடுத்தது. பண பலமும் இதில் முக்கிய பங்கு வகித்தது. ஏழையான அதேசமயம் மிகவும் தகுதிவாய்ந்த வேட்பாளரைவிட மிகவும் செல்வந்தரான வேட்பாளருக்கே அது முன்னுரிமை தந்தது. இவை எல்லாம் சற்றும் நியாயமற்ற போக்குகளாகும். ஆனால் எப்படி யேனும் வெற்றிபெறக்கூடிய வேட்பாளரைத் தேர்ந்தெடுப்பதே காங்கிரசின் ஒரே நோக்கமாதலால் இது புரிந்து கொள்ளக் கூடியதே. இது ஒருபுறமிருக்க, காங்கிரஸ் கடைப்பிடித்த வேறு சில கோட்பாடு களும் அது ஓர் ஆழமான சதித்திட்டம் தீட்டி யிருந்ததை அப்பட்டமாக அம்பலப்படுத்தின. வெவ்வேறு வகைப்பட்ட வேட்பாளர்களுக்கு வெவ்வேறு விதமான தகுதிகள் நிர்ணயிக்கப்பட்டன. பிராமணர்கள் மற்றும் அவர்களைஒத்த உயர்சாதி இந்து வேட்பாளர்களில் மிக உயர்ந்த தகுதி படைத்தவர்களே பொறுக்கியெடுக்கப்பட்டனர். ஆனால் அதே சமயம் பிராமணர்கள் அல்லாதவர்கள் விஷயத்தில் உயர் தகுதி படைத்தவர்களை விடக் குறைந்த தகுதிபடைத்த வர்களே முன்னுரிமை பெற்றனர். இதேபோன்று தாழ்த்தப்பட்ட இனத்தவர்கள் விஷயத்திலும் தகுதி படைத்தவர்கள் ஒதுக்கப்பட்டு தகுதியே இல்லாதவர்களோ அல்லது மிகக் குறைந்த தகுதி பெற்ற வர்களோதான் தெரிவு செய்யப்பட்டனர். இவ்வாறு எல்லோர்

விஷயத்திலுமே நடைபெற்றதாக இங்கு நான் கூறவரவில்லை. ஆனால் காங்கிரஸ் கடைப்பிடித்த இத்தகைய விபரீதப் போக்கின் பொது விளைவு என்னவென்றால், பிராமண வகுப்பையும் அவர் களைப் போன்ற இதர வகுப்புகளையும் சேர்ந்த வேட்பாளர்கள் மிக அதிகம் கல்வி கற்றவர்களாகவும், பிராமணரல்லாத வேட்பாளர்கள் சுமாரான கல்வி கற்றவர்களாகவும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த வேட்பாளர்கள் ஏதோ ஓரளவு எழுதப் படிக்கத் தெரிந்தவர் களும் இருந்தனர். இத்தகைய தேர்வு முறை மிகவும் புதிராக இருக் கிறது. இதற்குப் பின்னால் ஒரு மாபெரும் சதித்திட்டம், சூழ்ச்சி வலை இருப்பதாகத் தோன்றுகிறது. இந்தத் தேர்வு முறையைக் கவன மாக ஆராயும் எவரும் ஒரு விஷயத்தைத் தெள்ளத் தெளிவாகத் தெரிந்து கொள்வார்கள்: அதாவது பிராமணர்களையும் அவர்களைப் போன்றவர்களையுமே பிரதானமாக அமைச்சரவையில் அங்கம் வகிக்கச் செய்வதும், கல்வியறிவில் கீழ்நிலையிலுள்ள பிராமண ரல்லாதோர் மற்றும் தீண்டப்படாதோர் போன்ற பணிவிணக்கமுள்ள வர்களின் ஆதரவை அவர்களுக்குக் கிடைக்கச் செய்வதுமே இந்தத் தேர்வு முறையின் உள்நோக்கம்; இந்தத் தேர்வுமுறை காரணமாக பிராமணரல்லாதோரும் தாழ்த்தப்பட்ட இனத்தவரும் அமைச்சரவை இடங்களுக்குப் போட்டியிடுவது குறித்துக் கனவுகாண முடியாது; சட்டமன்றங்களுக்குத் தாங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டதையே ஒரு வரப்பிரசாதமாக, சுவர்க்கபோகமாக நினைத்து அவர்கள் திருப்தி யடைவதைத் தவிர வேறு வழியில்லை. அமைச்சராவதற்கு விழை யும் ஒரு தீண்டப்படாதவர் அதற்குத் தகுதியுடையவராக இருக்க வேண்டும் என்று திரு. காந்தி கூறியபோது இந்த அம்சத்தைக் காணத் தவறிவிட்டார் என்றே சொல்ல வேண்டும். இல்லையென்றால், தாழ்த்தப்பட்ட இனக் காங்கிரஸ்காரர்களிடையே அமைச்சராவ தற்குத் தகுதியுடையவர்கள் எவரும் இல்லை என்றால், தீண்டத் தகாதவர்களிடமிருந்து நன்கு தகுதிபெற்ற வேட்பாளர்களை காங் கிரஸ் பார்லிமெண்டரி போர்டு தேர்வு செய்யத் தவறிவிட்டதே இதற்குக்காரணம் என்பதை திரு. காந்தி தெரிந்து கொண்டிருப்பார்.

இப்போதைய தேர்தல் முறை தொடருமானால், நன்கு கல்வி கற்ற இந்தியர்கள் அமைச்சர்களாவதற்கு முதல் படியாக சட்டமன்ற உறுப்பினர்கள் ஆவதை எப்போதும் காங்கிரசால் தடுக்க முடியும். இது மிகவும் வருந்தத்தக்க ஒரு நிலையாகும். இந்த அவல நிலையை சீர்செய்ய ஏதேனும் சில நடவடிக்கைகளை மேற்கொள்வது அவ சியம். இது ஒருபுறமிருக்க, வேட் பாளர்களைத் தெரிவு செய்வதற்கு காங்கிரஸ் மேற்கொண்ட முறை தீண்டப்படாதவர்களுக்கு ஒரு பலத்த

அடியாக அமைந்தது எனலாம்; தீண்டப்படாதவர்களில் தகுதி வாய்ந் தவர்கள் இல்லை என்று நொண்டிச் சாக்குக் கூறி அவர்கள் நிர்வாக அதிகாரத்தைப் பெற முடியாமல் அது செய்தது; இத்தனைக்கும் தகுதி வாய்ந்த தீண்டப்படாதவர்கள் ஏராளமானோர் இருந்தபோதிலும் வேண்டுமென்றே, திட்டமிட்டு, வஞ்சகமாக, ஒளிவு மறைவாக தகுதியற்றவர்களைத் தெரிவு செய்ததே இதே காங்கிரஸ்தான். குதிரை குப்புறத் தள்ளியது மட்டுமன்றி குழியை வேறு பறித்த கதையாகத் தான் இருக்கிறது!

காங்கிரஸ் இழைத்த இரண்டாவது குற்றச்செயல், பழிச் செயல் தீண்டப்படாத இனத்தைச் சேர்ந்த காங்கிரஸ்காரர்களை மிகக் கடுமையான, கொடுமையான கட்சிக் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்தி யதேயாகும். அவர்கள் காங்கிரஸ் கட்சியின் நிர்வாகக் குழுவினது முழுக் கட்டுப்பாட்டின்கீழ் இருந்தனர். நிர்வாகக் குழு விரும்பாத எந்தக் கேள்வியையும் அவர்கள் கேட்க முடியாது. அது அனுமதிக் காத எந்தத் தீர்மானத்தையும் அவர்கள் முன்மொழிய முடியாது. அது ஆட்சேபிக்கும் எந்த ஒரு மசோதாவையும் அவர்கள் சட்ட மன்றத்தில் கொண்டுவர முடியாது. அவர்கள் தாங்கள் விரும்பியபடி வாக்களிக்க முடியாது; தங்கள் மனத்துக்குப்பட்டதை, நியாயமென உணர்ந்ததை அவர்கள் சட்டமன்றத்தில் பேசமுடியாது. வாய் பேச முடியாத ஆடுமாடுகள் போலவே அவர்கள் இருந்தனர்; ஆரறிவற்ற கால்நடைகளைப் போலவே அவர்கள் காட்சியளித்தனர். தீண்டப் படாதவர்களுக்குச் சட்டமன்றத்தில் பிரதிநிதித்துவம் கிடைக்கச் செய்ததன் நோக்கங்களில் ஒன்று அங்கு அவர்கள் தங்களது மனக் குறைகளை வாய்விட்டு சொல்லுவதற்கும், தங்களுக்கு இழைக்கப் பட்ட கொடுமைகளுக்கு, அநீதிகளுக்கு, அநியாயங்களுக்கு தீர்வு காணுவதற்கும் பரிகாரம் தேடுவதற்கும் வகை செய்வதே ஆகும். ஆனால் காங்கிரசோ இது நடைபெறாதபடி தடுப்பதில் வெற்றி பெற்றுவிட்டது.

இந்த நீண்ட நெடிய துயரமிக்க சோகக் கதையின் முடி வுக்கு இனி வருவோம்; காங்கிரஸ் புனா ஒப்பந்தத்தின் சாரத்தை உறிஞ்சிவிட்டுச் சக்கையை தீண்டப்படாதவர்களின் முகத்தில் எறிந்து விட்டது என்றே கூறவேண்டும்.



இயல் 4

# ஓர் இழிவான சரணாகதி

## காங்கிரஸ் மானக்கேடான முறையில் பின்வாங்குகிறது

புனா ஒப்பந்தம் 1932 செப்டம்பர் 24 ஆம் தேதியன்று கையெழுத்திடப்பட்டது. இந்த ஒப்பந்தத்திற்கு தங்கள் ஆதரவைத் தெரிவிக்கும் பொருட்டு அதே ஆண்டு செப்டம்பர் 25ல் பம்பாயில் ஒரு பொதுக்கூட்டத்தை இந்துக்கள் ஏற்பாடு செய்தனர். அந்தக் கூட்டத்தில் பின்கண்ட தீர்மானம் ஏற்கப்பட்டது:

''1932 செப்டம்பர் 24 ஆம் தேதி சாதி இந்துத் தலைவர்களுக்கும் தாழ்த்தப்பட்ட இனத்தவரின் தலைவர்களுக்கும் இடையே செய்துகொள்ளப்பட்ட புனா ஒப்பந்தத்தை இந்த மாநாடு ஊர்ஜிதம் செய்கிறது; இந்து சமூகத்திற்குள் தனிவாக்காளர் தொகுதிகளை அமைக்கும் தனது முடிவை பிரிட்டிஷ் அரசாங்கம் திரும்பப் பெற்றுக்கொண்டு, இந்த ஒப்பந்தத்தை முழுமையாக ஆதரிக்கும் என்று நம்புகிறது. மகாத்மா காந்தி எடுத்துக்கொண்ட சபதத்தை நிறைவேற்றும் வகையில் இனியும் காலம் தாழ்த்தாமல் அவரது உண்ணாவிரதத்தை முடிவுக்குக் கொண்டு வருவதற்கு உடனடியாக நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்படி அரசாங்கத்தை இம்மாநாடு வலியுறுத்துகிறது. புனா ஒப்பந்தத்தின் மற்றும் இத்தீர்மானத்தின் முக்கிய அம்சங் களைப் புரிந்துகொள்ளும்படியும், அவற்றை நிறைவேற்ற மெய்யார்வத்துடனும், மிகுந்த அக்கறையுடனும் முயற்சி மேற்கொள்ளும்படியும் சம்பந்தப்பட்ட சமூகங்களுக்கு இம்மாநாடு வேண்டுகோள் விடுக்கிறது.

''இனிமேல் பிறப்பு காரணமாக இந்துக்களிடையே எவரும் தீண்டத்தகாதவராகக் கருதப்படக் கூடாது என்றும், இதுவரை

அவ்வாறு கருதப்பட்டவர்களுக்குப் பொதுக்கிணறுகள், பொதுப் பள்ளிக் கூடங்கள், பொதுசாலைகள், மற்றும் இதர எல்லா பொது நிறுவனங் களையும் பயன்படுத்திக் கொள்வதற்கு இந்துக்களுக் குள்ள அதே உரிமை அளிக்கப்பட வேண்டும் என்றும் இம்மாநாடு தீர்மானிக்கிறது. இந்த உரிமை முதல் வாய்ப்பிலேயே சட்டரீதியாக அங்கீகரிக்கப்பட வேண்டும், சுயராஜ்ய நாடாளுமன்றம் அமைக்கப் படுவதற்கு முன்னர் இத்தகைய அங்கீகாரம் கிடைக்கப் பெறவில்லை என்றால், அந்த நாடாளுமன்றம் நிறுவப்பட்ட உடனேயே அதன் முதல் நடவடிக்கையில் ஒன்றாக இது இருக்க வேண்டும்.

''ஆலயப்பிரவேசம் சம்பந்தமாக உள்ள தடை உட்பட தீண்டத்தகாதவர்கள் எனப்படுவோர் மீது மரபுவழி ஆசாரங்களும் பழக்க வழக்கங்களும் இப்போது திணித்துள்ள சகலவிதமான சமூகத் தடைகளையும் சட்டரீதியான முறையிலும் அமைதியான வழிகளிலும் வெகுவிரைவிலேயே அகற்றுவதற்கு உறுதியாகப் பாடுபடுவது எல்லா இந்துத் தலைவர்களது கடமையாகும் என்பதும் ஒப்புக்கொள்ளப்படுகிறது.''

இந்தத் தீர்மானத்தைத் தொடர்ந்து கோவில்களைத் தீண்டப் படாதவர்களுக்குத் திறந்துவிடுவதில் இந்துக்கள் மிகுந்த ஆர்வம் காட்டினர்; இதற்காக தீவிர நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டனர். எந்தெந்தக் கோவில்கள், கிணறுகள், பள்ளிக் கூடங்கள் தீண்டப் படாதவர்களுக்குத் திறந்து விடப்பட்டன என்ற நீண்ட பட்டியல் திரு. காந்தி நடத்தி வந்த ஹரிஜன் என்ற வார இதழில் வெளிவராத வாரமே இல்லை எனலாம்; இந்தத் தகவல் யாவும் பத்திரிகையின் முதல் பக்கத்தில் ''வாரத்திற்கு வாரம்'' என்ற விசேடப் பகுதியில் வெளியிடப்பட்டு வந்தன. ஹரிஜன் பத்திரிகையின் இரண்டு இதழ்களில் வெளியான 'வாரத்திற்கு வாரம்' என்ற பகுதிகளை இங்கு மாதிரி எடுத்துக்காட்டுகளாக தந்திருக்கிறேன்.

## 1933 ஆம் வருட பிப்ரவரி 18 ஆம் தேதிய 'ஹரிஜன்' வாரத்திற்கு வாரம்

(1933 பிப்ரவரி 7 ஆம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில்)

### கோவில்கள் திறந்துவிடப் பட்டன

வட கல்கத்தாவில் ஒன்றரை லட்சம் ரூபாய் செலவில் அண்மையில் கட்டப்பட்ட ஒரு கோவில் திறந்து விடப்பட்டது.

சென்னை கஞ்சம் மாவட்டத் தைச் சேர்ந்த பாபுழர் என்னும் கிராமத்தில் ஒரு கோவில் திறந்து விடப்பட்டது.

பஞ்சாப் ஜலந்தரில் நௌரானி யாவிலுள்ள தாகூர்துவார் கோவில் திறந்துவிடப்பட்டது.

### திறந்துவிடப்பட்ட கிணறுகள்

ஒரிசா கட்டாக் மாவட்டம் ஜெய்ப்பூரி நகரில் குரியாபூரி லுள்ள ஒரு நகரசபைக் கிணறு.

ஐக்கிய மாகாணங்கள் ஆக்ரா வில் வாசிர்புரத்திலும் நிகிகாலி யிலும் இரண்டு கிணறுகள்.

திருச்சிராப்பள்ளியில் (சென்னை) ஹரிஜனங்களும் இந்துக்களும் பொதுவாகப் பயன்படுத்திக் கொள்வதற்கு மூன்று கிணறு களைத் தோண்டுவதற்கான செலவை ஒரு வைதிக பிராமணர் ஏற்றுக் கொண்டார்.

### தொடங்கப்பட்ட பள்ளிக் கூடங்கள்

ஐக்கிய மாகாணங்கள் மீரத் மாவட்டத்தைச் சேர்ந்த பச்ரோ தாவில் ஓர் இலவசப் பள்ளிக் கூடம்.

ராஜபுதனத்தைச் சேர்ந்த மெதா மாவட்டத்தில் ஒரு பள்ளிக் கூடம்.

ராஜபுதனம் ஜெய்ப்பூர் சமஸ் தானத்தைச் சேர்ந்த பதேபூர், செமுன், அபய்பூர் ஆகிய இடங் களில் மூன்று பள்ளிக்கூடங்கள்.

ஐக்கிய மாகாணங்கள் பருகா பாத் மாவட்டத்தைச் சேர்ந்த பதேகாரில் ஒரு பள்ளிக்கூடம்.

ஐக்கிய மாகாணங்கள் முத்ரா வில் மூன்று இரவுநேரப் பள்ளிக் கூடங்கள்.

ஐக்கிய மாகாணங்களைச் சேர்ந்த கோரக்பூர் நகரில் மூன்று இரவுநேரப் பள்ளிக்கூடங்கள்.

ஐக்கிய மாகாணங்கள் கோரக் பூர் மாவட்டத்தைச் சேர்ந்த ஹதா தெஷிலில் ஓர் இரவு நேரப் பள்ளிக்கூடம்.

சகோனியாவில் ஓர் இரவு நேரப் பள்ளிக்கூடம்.

இந்திய சமஸ்தானங்கள்:

1. ஹரிஜனங்களுக்கு செய்து தரப்பட வேண்டிய வசதிகள் குறித்து (கத்தியவார்) பலிதானா சமஸ்தானத்தின் சட்டமன்றத்தில் மூன்று தீர்மானங்கள் மிகப் பெரிய பெரும்பான்மையுடன் நிறைவேற்றப்பட்டன.

2. சந்தூர் சமஸ்தானத்தில் உள்ள ஹரிஜனங்களின் நிலைமையை மேம்படுத்தும் குறிக்கோளுடன் ஒன்றுபட்ட நடவடிக்கைகள் எடுப்பதற்கு அந்த சமஸ்தானத்தின் அரசாங்கம் நிரந்தரக் குழு ஒன்றை நியமித்துள்ளது.

பொது

1. கோரக்பூர் மாவட்டத்தைச் சேர்ந்த கஷியாவுக்கு அருகிலுள்ள பல்வேறு கிராமங்களில் வசிக்கும் ஹரிஜனங்கள் ஊழ்த்த இறைச்சி உண்ணுவதைக் கைவிட்டு விட்டனர்.

2. முஸாபர்பூரில் (பீகார்) ஹரிஜன சேவா சங்கத்தின் சார்பில் ஸ்ரீ சதுர்பூஜனாதிஜி ஆலயத்தில் 'வசந்த பஞ்சமி' விழாவின் போது 'வசந்தோத்சவம்' கொண்டாடப்பட்டது; இதில் எல்லா அகில இந்தியத் தீண்டாமை எதிர்ப்புக் கழகத்தின் தலைவரும், இந்திய தாழ்த்தப்பட்ட மக்களது மேம்பாட்டுக்கான கழகத்தின் நிறுவன அறக்காப்பாளருமான ஸ்ரீமான் வி.ஆர். சிண்டே (புனா) சட்டமன்ற உறுப்பினர்களுக்கு ஒரு பகிரங்கக் கடிதம் எழுதியிருந்தார்; தீண்டாமைக் குறித்த ஸ்ரீமான் ரங்க அய்யரின் இரண்டு மசோதாக்களையும் ஆதரிக்கும்படி அக்கடிதத்தில் அவர் பெரிதும் வலியுறுத்தி இருந்தார்.

பம்பாய் தைக்கல்வாடி 'ஜி' வட்டத்தில் அண்மையில் திடீரென ஒரு தீ விபத்து ஏற்பட்டு 48 மகர்கள் குடும்பங்களுக்குச் சொந்தமான குடிசைகளுக்கும் உடைமைகளுக்கும் பெருத்த சேதத்தை உண்டு பண்ணிற்று. பம்பாய் மாகாண தீண்டப்படாதோர் சேவா சங்க நிர்வாகக் குழுவின் தலைவர் இந்தக் குடும்பங்களுக்கு நிவாரணமளிப்பதற்காக ரூ. 500 வழங்க ஒப்புதல் அளித்தார். இது சம்பந்தப்பட்ட நிவாரணப் பணியை சங்கத்தின் 'ஜி' வட்டக் குழு மேற்கொண்டது. மொத்தம் 163 பேர்களடங்கிய இந்த 48 குடும்பங்களுக்கு உடனடி உதவியாக ரூ. 402.8 விநியோகிக்கப்பட்டது.

கிணறுகள், குளங்கள், தர்மசாலைகள் முதலியவற்றை

சாதி இந்துக்களும் கலந்து கொண்டனர்.

ஏ.வி. தாக்கர்,
பொதுச்செயலாளர்.

எல்லோரும் சாதி வேறுபாடின்றிப் பயன்படுத்திக் கொள்வதற்கு ஒப்புக்கொண்டாலன்றி இவற்றிற்கு அரசாங்க நிலங்களை ஒதுக்கித் தரும்படி ஸ்தாபன அமைப்புகளிலிருந்து வரும் வேண்டுகோள்களை ஏற்கக் கூடாது என்று பம்பாய் அரசாங்கம் ஆணை பிறப்பித்துள்ளது.

## 1933 ஜுலை 15 ஆம் தேதிய 'ஹரிஜன்' வாரத்திற்கு வாரம்

கல்வி வசதிகள்

வட ஆற்காடு மாவட்டத்தில் ஹரிஜனங்களுக்காக மூன்று வாசகசாலைகள் எஸ்.யு.எஸ் ஸால் திறக்கப்பட்டுள்ளன.

மதுரை மாவட்டத்தில் எஸ்.யு. எஸ். ஊழியர்கள் ஹரிஜனக் குழந்தைகளை விரகனூர் தாலுகா போர்டு பள்ளியில் சேர்க்கச் செய்துள்ளனர்.

மதுரை எஸ்.யு.எஸ். நிறுவியுள்ள மேலச்சேரி பள்ளியின் குழந்தைகளுக்கு பனியன்கள், துவாலை, கரும்பலகைகள் முதலியவை இலவசமாக விநியோகிக்கப்பட்டன.

டில்லி ராம்ஜாஸ் கல்லூரியைச் சேர்ந்த இரண்டு ஹரிஜன மாணவர்களுக்கு இலவச உபகாரச் சம்பளங்களையும், மாணவர் விடுதியில் இலவசமாகத் தங்கும் வசதியையும் மற்றொரு ஹரிஜன மாணவருக்கு இலவச உபகாரச் சம்பளத்தையும் கல்லூரி முதல்வர் தாடனி அனுமதித்துள்ளார்.

லாகூர் ஹரிஜன சேவா சங்கத்தின் சார்பில் மோட்சி வாயிலுக்கு வெளியே உள்ள அரிஜன குடியிருப்புகளில் வயது வந்த அரிஜனங்களுக்காக ஓர் இரவுப் பள்ளி தொடங்கப்பட்டுள்ளது. இதன் திறப்பு விழாவை திருமதி பிரிஜ்லால் நேரு நடத்தி வைத்தார்.

பிராமண கோடூரில் (குண்டூர்) ஹரிஜன மாணவர்களுக்காக மற்றொரு மாணவர் தங்கும் விடுதியைத் தொடங்குவது என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது.

காகினாடாவில் படிக்கும் ஹரிஜன மாணவிகளுக்காக ஒரு

தங்கும் விடுதியைத் தொடங்க கிழக்கு கோதாவரி மாவட்ட ஹரிஜன சேவா சங்கம் முடிவு செய்திருக்கிறது. 15 மாணவிகளுடன் தொடங்கவிருக்கும் இந்த விடுதிக்கு ரூ. 630ம், 20 மூட்டை அரிசியும், ஓர் ஆண்டுக்குத் தேவையான எரிபொருளும் ஏற்கெனவே நன்கொடையாகக் கிடைத்திருக்கின்றன.

உரகொண்டாவில் ஒரு ஹரிஜன மாணவர் விடுதியைத் தொடங்குவது என்று அனந்தப்பூர் மாவட்ட ஹரிஜன சேவா சங்கம் தீர்மானித்துள்ளது. சில உணவுப் பொருள்களும் பணமும் ஏற்கெனவே சேகரிக்கப்பட்டு விட்டன. 20 மாணவர்களுடன் விடுதியைத் தொடங்குவது என்று உத்தேசிக்கப்பட்டுள்ளது.

குண்டூர் மாவட்ட ஹரிஜன சேவா சங்கத்தின் அயராத சளையாத முயற்சியின் காரணமாக பல கிராமங்களிலும் நகரங்களிலும் சவர்ண பள்ளிக் கூடங்களில் ஹரிஜன சிறுவர்கள் அனுமதிக்கப் பட்டுள்ளனர்.

### கிணறுகள்

கோயமுத்தூர் மாவட்டத்தில் மிகவும் மோசமான நிலையிலிருந்த மூன்று கிணறுகள் தூறுவாரி சுத்தம் செய்யப்பட்டு உபயோகத்துக்குக் கொண்டு வரப்பட்டன.

எஸ்.யு.எஸ். தேர்ந்தெடுக்கும் சேரிகளில் நான்கு கிணறுகள் தோண்டுவதற்கு ஏற்பாடு செய்வதாக தென்னாற்காடு ஜில்லா போர்டு தலைவர் வாக்குறுதி அளித்துள்ளார்.

ஆந்திர தேசத்தில் 31.5.33ஆம் தேதியுடன் முடிவடைந்த இரு வார காலத்தில் மொத்தம் 125க்குக் குறையாத கிணறுகள் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டன; 5 புதிய கிணறுகள் வெட்டப்பட்டன.

### பொது

தோம்கள் வசிக்கும் ஹோக் மார்க்கெட்டுக்கு (கல்கத்தா) அருகிலுள்ள ஒரு பஸ்டியில் அவர்களுக்கு உணவுப் பொருள்களைக் குறைந்த விலையில் வழங்குவதற்காக ஒரு கடை திறக்கப்பட்டுள்ளது.

பீபி பாகன் பஸ்டியில் (கல்கத்தா) ஒரு ஹரிஜனக் குடும்பத்தின் கடன்களைத் தீர்ப்பதற்காக வங்காள எஸ்.யு.எஸ். ரூ. 60 வழங்கிற்று.

அமிர்த சமாஜம் (கல்கத்தா) சில ஹரிஜனங்களுக்கு பல்வேறு சேவைகளைச் செய்துள்ளது.

போல்பூரைச் சேர்ந்த (பிர்பூம்) 450 ஹரிஜனங்கள் குடிப்பழக்கத்தை விட்டுவிட்டனர்; 1,275 முச்சிகள் மாட்டிறைச்சி உண்பதில்லை என்று உறுதிபூண்டுள்ளனர்.

இந்த மாதத்தில் பங்குரா, மூர்ஷிதாபாத், 24 பர்க்கானா ஆகிய இடங்களில் எஸ்.யு.எஸ்.ஸின் மூன்று புதிய மாவட்டக் கேந்திரங்கள் திறக்கப்பட்டன.

சேரிகளில் சென்று சேவை செய்வதற்காக திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், திருநெல்வேலி, வட ஆற்காடு, மதுரை ஆகிய மாவட்டங்களில் காந்தி ஹரிஜன சேவைத் தொண்டர்படை அமைக்கப்பட்டுள்ளது.

கோயமுத்தூரிலிருந்து 12 மைல் தொலைவிலுள்ள ஆலந்தூரல் என்னும் கிராமத்தில் தீ விபத்து ஏற்பட்டதைத் தொடர்ந்து அக்கிராமத்திற்கு நிவாரணம் அளிக்கும் வகையில் ரூ. 25 பெறுமானமுள்ள தானியமும், ரூ. 100 பெறுமானமுள்ள ஜவுளியும், ரூ. 5 பெறுமானமுள்ள எண்ணெயும் வழங்கப்பட்டன.

சிதம்பரத்தில் ஒரு ஹரிஜன இளைஞர் கழகம் அமைக்கப்பட்டுள்ளது.

அடக்க விலையில் ஹரிஜனங்களுக்கு உணவுப் பொருள்களை வழங்குவதற்காக தெனாலியில் ஒரு கடை திறக்கப்பட்டுள்ளது; அவர்களின் உபயோகத்துக்கு அது பயன்படுத்தப்படுகிறது.

வலான்னா பாளத்தில் அண்மையில் ஏற்பட்ட ஒரு தீ விபத்தால் இடிந்து நாசமான ஹரிஜனங்களின் வீடுகளை மீண்டும் கட்டுவதற்காக ரூ. 110 செலவிடப்பட்டது.

எல்ல மஞ்சிலியில் (விசாகை) ஒரு தீ விபத்தில் வீடுகளை இழந்த ஹரிஜனங்களுக்கு நிவாரணம் அளிக்கும் வகையில் ரூ. 100 வழங்கப்பட்டது. ஹரிஜனங்களுக்கு ஒரு நல்ல இடத்தில் வீடுகளைக் கட்டித் தருவதில் உள்ளூர் ஹரிஜன சேவா சங்கம் தீவிர முயற்சியில் ஈடுபட்டுள்ளது. இதன் பொருட்டு ரொக்கமாகவும், கட்டிடப் பொருள்களாகவும் நன்கொடை வசூலிக்கப்பட்டு வருகிறது.

கொல்ல பாலத்தில் ஒரு சவர்ண கனவான் ஒரு ஹரிஜனனை தமது வேலைக்காரனாக அமர்த்திக் கொண்டிருக்கிறார்.

கோவில்களின் சொந்தக்காரர்கள் அல்லது தர்மகர்த்தாக்கள் தமது கோவில்களை தீண்டப்படாதவர்களுக்குத் திறந்துவிட முன்வராதபோது இந்துக்கள் அவர்களுக்கு எதிராக ஒரு சத்தியாக் கிரகப் போராட்டத்தைத் தொடங்கினர். குருவாயூர் ஆலயத்தை தீண்டப்படாதவர்களுக்குத் திறந்து விட வேண்டும் என்று திரு. கேளப்பன் தொடங்கிய சத்தியாக்கிரகம் இத்தகைய கிளர்ச்சியின் ஒரு பகுதியாகும். இந்தக் கிளர்ச்சியை எதிர்த்து நிற்பதற்குத் துணிச்சல் கொண்ட கோவில்களின் தர்மகர்த்தாக்களை நிர்ப்பந்திப்பதற்கு பல இந்து சட்டமன்ற உறுப்பினர்கள் முன்வந்தனர்; தீண்டப்படாத வர்களுக்கு கோவில்கள் திறந்துவிடப்படுவதை பெரும்பாலான இந்து பக்தர்கள் ஆதரிக்கிறார்கள் என்பது ஒரு பொதுஜன வாக்கெடுப் பில் தெரியவந்தால், தர்மகர்த்தாக்கள் அவ்வாறே ஆலயங்களை தீண்டப்படாதவர்களுக்கு திறந்துவிட வேண்டும் என்று கோரும் மசோதாக்களை பலர் போட்டி போட்டுக் கொண்டு தாக்கல் செய்தனர். இத்தகைய மசோதாக்கள் ஏராளமாக குவிந்தன. இதில் தங்கள் மசோதா முதலிடம் பெற வேண்டும் என்று சட்டமன்ற உறுப்பினர்களிடையே கடும் போட்டி நிலவியது. சென்னை மேலவை உறுப்பினர் டாக்டர் சுப்பராயன் ஆலயப் பிரவேச மசோதா ஒன்றை கொண்டுவந்தார். மத்திய சட்டமன்றத்தில் நான்கு மசோதாக்கள் தாக்கல் செய்யப்பட்டன. ஒன்று திரு. சி.எஸ். ரங்க அய்யருடையது, மற்றொன்று திரு. ஹரபிலாஸ் சாரதாவினுடையது, மூன்றாவது திரு. லால்சந்த் நவால்ராய் சமர்ப்பித்தது, நான்காவது திரு. எம். ஆர். ஜெயகர் முன் மொழிந்தது.

இந்தக் கிளர்ச்சியில் திரு. காந்தியும் சேர்ந்து கொண்டார். தீண்டப்படாதவர்களை இந்து ஆலயங்களுக்குள் அனுமதிப்பதை 1932 ஆம் ஆண்டுக்கு முன்னர் அவர் எதிர்த்து வந்தார். அப்போது திரு. காந்தி பின்வருமாறு கூறினார்:

> ''தற்போதுள்ள எல்லாக் கோவில்களிலும் அந்த்ய ஜாக்கள் (தீண்டப்படாதோர்) பிரவேசிப்பதற்கு உரிமை வழங்குவது எவ்வாறு சாத்தியம்? சாதி மற்றும் ஆசிரம விதிமுறைகள் இந்து சமயத்தில் பிரதான இடம் பெற்றி ருக்கும் வரை ஒவ்வொரு இந்துவும் ஒவ்வொரு கோவி லுக்குள்ளும் நுழையலாம் என்று கூறுவது இன்றைக்கு சாத்தியமல்ல''.

எனவே, ஆலயப் பிரவேச இயக்கத்தில் அவர் சேர்ந்தது பெரிதும் வியப்புக்குரிய விஷயம் என்பதில் அணுவளவும் ஐய மில்லை. திரு. காந்தி ஏன் இப்படி குட்டிக்கரணம் அடித்தார் என் பதைப் புரிந்துகொள்வது கடினமாக இருக்கிறது. இது இந்து ஆல யங்களில் தீண்டப்படாதவர்கள் பிரவேசிப்பதை தாம் எதிர்த்தது தவறு என்பதை உண்மையிலேயே உணர்ந்ததால் ஏற்பட்ட மெய் யான, நேர்மையான மனமாற்றமா? புனா ஒப்பந்தத்தால் இந்துக் களுக்கும் தீண்டப்படாதோருக்கும் இடையே அரசியல் ரீதியாக ஏற்பட்டுள்ள பிளவு ஆலயப் பிரவேசம் போன்ற நடவடிக்கைகளால் சீர்செய்யப்பட்டு அவர்களை மீண்டும் ஒன்றுபடுத்த வேண்டும்; இல்லையேல் இந்தப் பிளவு அவர்களிடையே கலாசார, சமயத் தொடர்புகள், பிணைப்புகள் முற்றிலும் அறுந்து போவதற்கே அது இட்டுச் செல்லும் என்ற உணர்வால் ஏற்பட்ட மனமாற்றமா இது? அல்லது தீண்டப்படாதோரை இந்துக்களிடமிருந்து பிரிக்கும் தடை மதிலைத் தகர்ப்பதன் மூலம் அரசியல் உரிமைகளுக்கான தீண்டப் படாதவர்களின் கோரிக்கையின் அடிப்படையை, அடித்தளத்தை அழித்தொழிப்பதே ஆலயப் பிரவேச இயக்கத்தில் அவர் சேர்ந்ததன் நோக்கமா? அல்லது இந்த இயக்கத்தில் சேருவதால் தமது பேரும் புகழும், சீர்த்தியும் கீர்த்தியும் வானளாவ ஓங்கும் என்ற எண்ணத் தில் வழக்கமாகச் செய்வது போல் இந்த இயக்கத்தில் விரைந்தோடிப் போய்ச் சேர்ந்தாரா? இரண்டாவது அல்லது மூன்றாவது விளக்கமே உண்மைக்கு மிகவும் நெருங்கியதாக இருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது.

## II

இந்த ஆலயப் பிரவேச இயக்கம் குறித்து தீண்டப்படாதோர் எத்தகைய மனோபாவம் கொண்டிருந்தனர்? ஆலயப் பிரவேச இயக்கத்துக்கு என் ஆதரவைத் தரும்படி திரு. காந்தி என்னிடம் கேட்டுக்கொண்டார். அத்தகைய ஆதரவை அளிக்க நான் மறுத்து விட்டேன். இதுகுறித்து பத்திரிகைகளில் ஓர் அறிக்கை வெளியிட் டேன். இந்தப் பிரச்சினையில் நான் இத்தகையப் போக்கைக் கடைப் பிடிப்பதற்கான காரணங்களை வாசகர்கள் புரிந்துகொள்ள இந்த அறிக்கை உதவும் என்ற வகையில் அதனை முற்றிலுமாக இங்கு தருவது உசிதமாக இருக்கும் என்றும் கருதினேன். இதோ அந்த அறிக்கை!

## ஆலயப் பிரவேச மசோதா பற்றிய அறிக்கை
## பிப்ரவரி 14, 1933

ஆலயப் பிரவேசப் பிரச்சினை சம்பந்தமான சர்ச்சை முக்கியமாக தற்போது சனாதனிகளுக்கும் மகாத்மா காந்திக்கும் இடையே நடைபெற்று வந்த போதிலும், இதில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஒரு முக்கியமான பங்காற்ற வேண்டியிருக்கிறது என்பதில் ஐயமில்லை; பிரச்சினைக்கு இறுதி முடிவு எடுக்கும்போது, அவர்கள் மேற்கொள்ளும் நிலை துலாக்கோலின் முள்ளை இந்தப் பக்கமோ அல்லது அந்தப் பக்கமோ சாய்ப்பதாக இருக்கலாம். ஆதலால் அவர்களது கண்ணோட்டத்தை திட்டவட்டமாக, தெள்ளத்தெளிவாக ஐயத்துக்கிடமின்றி வரையறுத்துக் கூறுவது அவசியமாகிறது.

திரு. ரங்க அய்யரின் ஆலயப் பிரவேச மசோதாவுக்கு இப்போதைய அதன் அதன் வடிவத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஆதரவு அளிப்பது சாத்தியமில்லை, ஒரு குறிப்பிட்ட கோவில் எந்த நகராட்சி, அல்லது பேரூராட்சி எல்லைக்குட்பட்டிருக்கிறதோ அவற்றின் வாக்காளர்களிடையே கருத்துக் கணிப்பு வாக்கெடுப்பு நடத்தித், தாழ்த்தப்பட்ட மக்களைக் கோவிலுக்குள் அனுமதிக்கலாம் என்று பெரும்பாலோர் தீர்ப்பளித்தால் கோவிலின் தர்மகர்த்தாக்கள் அல்லது நிர்வாகி அந்த முடிவை செயல்படுத்த வேண்டும். இதுவே திரு. ரங்க அய்யரது ஆலயப் பிரவேச மசோதாவின் சாராம்சம். இதில் கூறப்பட்டுள்ள கோட்பாடு வழக்கமான சாராம்சம், இதில் கூறப்பட்டுள்ள கோட்பாடு வழக்கமான பெரும்பான்மை முடிவு குறித்த கோட்பாடேயாகும்; ஆகவே, இந்த மசோதா புரட்சிகரமானதோ, தீவிரமானதோ அல்ல; சனாதனிகன் புத்திசாலிகளாக இருந்தால் எந்த முணுமுணுப்பும் இன்றி இதைத் தாராளமாக ஏற்றுக் கொண்டிருக்கலாம்.

ஆனால் இந்தக் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்த ஒரு மசோதாவை தாழ்த்தப்பட்ட இனத்தவர்கள் ஏற்க முடியாது; இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒரு காரணம் தாழ்த்தப்பட்ட மக்கள் ஆலயப் பிரவேசம் செய்யும் நாளை இந்த மசோதா வெகு அருகில் கொண்டுவந்துவிட முடியாது. தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தர்மகர்த்தாவோ, நிர்வாகியோ ஆலயத்தைத் திறந்துவிடும்போது அதற்கு எதிராகத் தடை உத்தரவு வாங்குவதற்கு இந்த மசோதாவின் படி சிறுபான்மையினருக்கு உரிமை இல்லை என்பது உண்மையே. ஆனால் இந்த ஷரத்து பற்றி மனநிறைவு அடைந்து, மசோதாவைத் தயாரித்தவரைப் பாராட்டுவதற்கு முன்னர் முதலாவதாக, வாக்

கெடுப்பில் ஆலயப் பிரவேசத்திற்கு ஆதரவாக பெரும்பாலோர் வாக்களிப்பார்களா என்பதை நிச்சயித்துக் கொள்ள வேண்டும். எத் தகைய போலி நம்பிக்கையும் இல்லாத எவரும் ஆலயப் பிரவேச மசோதாவுக்குப் பெரும்பான்மை வாக்குகள் கிடைப்பது அரிது என்பதை ஒப்புக்கொள்ளவே செய்வர். மசோதாவைத் தயாரித்த வரே சங்கராச்சாரியாருடன் நடத்திய கடிதப் போக்குவரத்தில் இந்த உண்மையை ஒப்புக்கொண்டுள்ளார். மசோதா நிறைவேறிய பிறகு பெரும்பான்மையினர் வேறுவிதமாக நடந்துகொள்ளப் போகிறீர் களா? அத்தகைய நம்பிக்கை ஏதும் எனக்கு இல்லை. குருவாயூர் கோவில் சம்பந்தமாக நடத்தப்பட்ட வாக்கெடுப்பின் முடிவுகளை நான் ஒன்றும் மறந்துவிடவில்லை. ஒரு பொதுமக்கள் வாக்கெடுப் புக்கு வழக்கமாக அளிக்கப்படும் மதிப்பைவிட இந்த வாக்கெடுப் புடன் ஏதோ மகாத்மா காந்தியின் வாழ்க்கையே சம்பந்தப்பட் டிருப்பதுபோல் இதற்கு அளவுக்கு மீறி மதிப்பளித்து அதனை ஏற்க நான் தயாராக இல்லை. இத்தகைய எந்த மதிப்பீடுகளிலும் மகாத்மா காந்தியின் வாழ்க்கையைக் கழித்துவிட வேண்டும். இரண்டாவ தாக, கோவில்களில் கடைப்பிடிக்கப்படும் தீண்டாமையை ஒரு தீய வழக்கமாக இந்த மசோதா கருதவில்லை. மாறாக, இதனை ஒரு வெறும் சமூகத் தீமையாக, அதிலும் மற்ற எத்தனையோ வகையான சமூகத் தீமையைப் போல் அவ்வளவு மோசமில்லாத தீமையாகவே இதனை அது கருதுகிறது. தீண்டாமையைச் சட்டவிரோதமானதாக அது அறிவிக்க வில்லை. 'பெரும்பான்மையோர் முடிவு செய்தால் மட்டுமே' என்னும் நிபந்தனை விதிக்கப்படுவதால் மசோதாவின் ஜீவனே பறிக்கப்பட்டு விடுகிறது; அதன் கட்டுப்படுத்தும் ஆற்றல் சிதைக்கப்படுகிறது. பிறருக்குத் தீங்கிழைத்தல், ஒழுக்கக்கேடாக நடந்து கொள்ளுதல் போன்ற கெட்டப் பழக்கங்களுக்குப் பெரும் பான்மையினர் அடிமையாகிவிடுவதால் அல்லது பெரும்பான்மை யினர் அவற்றைக் கைக்கொள்வதால் அந்தத் தீய பழக்கங்கள் சகிக்கக் கூடியவையாகிவிட முடியாது. தீண்டாமை என்பது நெறியற்ற தீயப் பழக்கம் என்றால், அப்போது என்ன செய்யவேண்டும்? தீண்டாமை பெரும்பான்மை இனத்தினருக்கு ஏற்புடையதாக இருந்தாலும் அதனை எத்தகைய தயக்க மயக்கமுமின்றி அழித்தொழிப்பதுதானே முறை, நியாயம் என்று தாழ்த்தப்பட்ட வகுப்பினர் வாதிடுகின்றனர். இவ்வாறுதான் நீதிமன்றங்கள் நடந்துகொள்கின்றன; ஏதேனும் பழக்க வழக்கங்கள் நெறிகெட்டவையாக, பொதுமக்களின் கொள்கைக்கு முரணானவையாக இருக்குமாயின் அவற்றைக் கண்டிக்கின்றன; தண்டிக்கின்றன. இதைத்தான் இந்த மசோதா செய்யத் தவறிவிட்டது. குடிப்பழக்கம் எப்படி ஒரு தீமையாகக் கருதப்படுகிறதோ, அதே போன்றுதான் இம்மசோதாவின் கர்த்தா தீண்டாமையையும் கருது

கிறார்; இதற்குமேல் தீண்டாமையின் பால் அவர் ஆழ்ந்த கவனம் எதுவும் செலுத்தவில்லை. அது மட்டுமல்ல, அவர் இரண்டு தீமை களையும் ஏறத்தாழ சமமாகப் பாவிப்பதோடு, குடிப்பழக்கத்தை ஒழிப்பதற்கு ஸ்தல மக்களின் விருப்பத்தை அனுசரித்து நடவடிக்கை எடுக்க வேண்டும் என்ற குடிப்பழக்க எதிர்ப்பு இயக்கத்தினர் கூறும் வழிமுறையையும் அவர் ஏற்றுக்கொண்டுள்ளார். குடிப்பழக்கத்தை விட தீண்டாமை அப்படி ஒன்றும் மோசமானதல்ல என்று தாழ்த்தப் பட்ட மக்களின் நண்பர் எனத் தம்மைக் கூறிக் கொள்ளும் திரு. ரங்க அய்யர் கருதுவது விசித்தரமாக இருக்கிறது. தீண்டாமை ஒழிக்கப் படவில்லை என்றால் தாம் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கப் போவதாக சில மாதங்களுக்கு முன்னர் மகாத்மா காந்தி அறிவித்ததை திரு. ரங்க அய்யர் மறந்திருக்க மாட்டார்; அப்படி மறந்திருக்க வில்லை என்றால் இந்த சாபத்தீட்டைப் பற்றி, சாபக்கேட்டைப் பற்றி மிக ஆழமாக சிந்தித்திருப்பார்; அந்தக் கோரக் கொடுமையை அடியோடு, ஆணிவேர் சல்லிவேரோடு வெட்டியெறிவதற்கு வகை செய்யும் மிக உறுதியான திட்டத்தை முன் வைத்திருப்பார். பல னளிக்கும் விஷயத்தில் பல குறைபாடுகளைக் கொண்டதாயினும் தீண்டாமை ஒரு கொடிய தீமை என்பதைக் குறைந்தபட்சம் கொள்கை அளவிலாவது மசோதா ஏற்றிருக்க வேண்டும் என்பது தாழ்த்தப்பட்ட மக்களின் எதிர்பார்ப்பு, கருத்து. தீண்டாமை ஒரு சாபக்கேடு என்று நெடுகிலும் வலியுறுத்திவரும் மகாத்மா காந்திக்கு இந்த மசோதா எவ்விதம் மனநிறைவு அளிக்கிறது என்பதை என்னால் உண்மையிலேயே புரிந்துகொள்ள முடியவில்லை; இது எப்படியிருப்பினும் இம்மசோதா தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை என்பதைத் திட்டவட்டமாக அறுதியிட்டு உறுதியாகக் கூறமுடியும். இந்த மசோதா நல்லதா கெட்டதா, போது மானதா இல்லையா என்பது இரண்டாந்தரப் பிரச்சினை. இங்கு பிரதானமான பிரச்சினை தாழ்த்தப்பட்ட இனத்தினர் ஆலயப் பிரவேசத்தை விரும்புகிறார்களா, விரும்பவில்லையா என்பதே ஆகும். இந்தப் பிரதான பிரச்சினையைத் தாழ்த்தப்பட்ட மக்கள் இரண்டு கண்ணோட்டங்களிலிருந்து பார்க்கிறார்கள். ஒன்று பொரு ளாதாரக் கண்ணோட்டம். இந்தக் கண்ணோட்டத்தின் அடிப் படையில் சிந்திக்கத் தொடங்கும் அவர்கள் தங்களது மேம்பாட் டிற்கான நிச்சயமான மார்க்கம் உயர்கல்வி, அதிக வேலை வாய்ப்பு, சிறந்த வாழ்க்கைத் தொழில் ஆகிய இவற்றில்தான் அடங்கி யிருக்கிறது என்று கருதுகிறார்கள். சமூக வாழ்க்கைப் படிகளில் அவர்கள் தகுந்த, உகந்த இடத்தைப் பெற்றுவிட்டால், மதிப்புமிக்க வர்களாகி விடுவார்கள்; மதிப்புடையராகிவிடும்போது சனாதனியர் அவர்கள்பால் கொள்ளும் சமய மனநிலைச்சார்பு நிச்சயமாக மாற்ற

மடையும்; இவ்வாறு நிகழாதுபோயினும் அதனால் அவர்களது பொருளாதார நலன்களுக்கு எத்தகைய தீங்கும் நேரிடாது. இந்த அடிப்படையில் சிந்திக்கும் தாழ்த்தப்பட்ட மக்கள் ஆலயப் பிரவேசம் போன்ற ஒன்றுக்கும் உதவாத விஷயத்தில் தங்கள் சக்தியை வீண் விரயம் செய்ய விரும்பவில்லை என்று கூறுகிறார்கள். ஆலயப் பிரவேசத்திற்காகப் போராடுவதில் அவர்கள் அக்கறை காட்டாததற்கு மற்றொரு காரணமும் இருக்கிறது. அதுதான் சுயமரியாதை. இந்தியாவில் ஐரோப்பியர்கள் நடத்திவரும் பொழுதுபோக்குக் கூடங்களிலும் ஆரோக்கிய நிலையங்களிலும் சில காலத்திற்கு முன்னர் வரை ஓர் அறிவிப்புப் பலகைக் காணப்படும்; 'நாய்களும் இந்தியர்களும் அனுமதிக்கப்பட மாட்டார்கள்' என்று அதில் எழுதப்பட்டிருக்கும். இந்து கோவில்களிலும் இதேபோன்ற அறிவிப்புப் பலகைகள் இன்று காணப்படுகின்றன. ஒரே வித்தியாசம் இந்துக் கோவில்களின் பலகைகளில் காணப்படும் வாசகம் சற்று மாறுபட்டது. அது கூறுவதாவது: ''நாய்கள் உட்பட எல்லா விலங்குகளுடன் அனைத்து இந்துக்களும் அனுமதிக்கப்படுவார்கள், தாழ்த்தப்பட்ட மக்கள் மட்டும் அனுமதிக்கப்பட மாட்டார்கள்.'' இவை இரண்டிலும் நிலைமை ஒன்றுதான். ஆனால் ஒரு விஷயம்: இந்தியர்களுக்கு அனுமதியில்லை என்று ஐரோப்பியர்கள் அகம்பாவத்தோடு ஒதுக்கியுள்ள இடங்களில் தங்களை அனுமதிக்க வேண்டும் என்று இந்துக்கள் மன்றாடிக் கேட்டுக் கொண்டதில்லை. அப்படியிருக்கும் போது இந்துக்கள் அகந்தையோடு, திமிரோடு ஒதுக்கி யிருக்கும் இடங்களில் தங்களை அனுமதிக்க வேண்டும் என்று தாழ்த்தப்பட்ட மக்கள் ஏன் இறைஞ்சிக் கேட்க வேண்டும்? தாழ்த்தப்பட்ட இனத்தவர்கள் ஆலயப் பிரவேசத்தைப் பற்றிக் கவலைப்படாமல் தங்களது பொருளாதார சுபிட்ச நலனில் அக்கறை காட்டுவதற்கு, கண்ணும் கருத்துமாக இருப்பதற்கு இதுவே காரணம். அவர்கள் இந்துக்களிடம் பின்வருமாறு கூறவும் தயாராக இருக்கிறார்கள்: ''உங்கள் கோவில்களைத் திறப்பதோ திறக்காமலிருப்பதோ உங்கள் இஷ்டம்; அது நீங்களே தீர்மானித்துக்கொள்ள வேண்டிய விஷயம்; அதற்காக நாங்கள் கிளர்ச்சி எதுவும் செய்யப் போவதில்லை. மனித ஆளுமையின் புனிதத்தை, தூய்மையை மதிக்காதிருப்பது சரியல்ல, முறையல்ல என்று நீங்கள் கருதினால் உங்கள் கோவில்களைத் திறந்து விட்டுப் பண்பாளர்களாக, பொறுப்புணர்ச்சி மிக்கவர்களாக, பெருந்தன்மையுடையோராக நடந்து கொள்ளுங்கள். அப்படியில்லை நாங்கள் பண்பாளர்களாக இருப்பதைவிட இந்துக்களாகத்தான் இருப்போம் என்றால் கதவுகளை அடைத்துவிட்டு எக்கேடாவது கெட்டுப்போங்கள். ஏனென்றால் கோவில்களுக்கு வரவேண்டும் என்று நாங்கள் ஒன்றும் துடித்துக் கொண்டிருக்கவில்லை.''

''சாதி இந்துக்களின் ஆதரவைத் தாழ்த்தப்பட்ட மக்கள் மிகவும் ஆவலோடு எதிர்ப்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று பண்டித மதன் மோகன் மாளவியா போன்றோர் கொண்டிருக்கும் தவறான எண்ணத்தைப் போக்கும் பொருட்டே எங்கள் வாதத்தை மேற்கண்ட வடிவில் தருவது அவசியமாயிற்று. அடுத்து, இரண்டாவது கண்ணோட்டம் ஆன்மீகம் சம்மந்தப்பட்டது. சமயநோக்கு கொண்டவர்கள் என்ற முறையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஆலயப் பிரவேசத்தை விரும்புகிறார்களா? அல்லது விரும்பவில்லையா? இது தான் கேள்வி. ஆன்மீகக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, பொருளாதயக் கண்ணோட்டம் மட்டுமே மேலோங்கி அவர்கள் ஆலயப் பிரவேச விஷயத்தில் அவ்வளவாக அக்கறை இல்லாமல் அலட்சியமாக இருக்கிறார்கள் என்று சொல்ல முடியாது. ஆனால் இதில் அவர்களது இறுதி முடிவு பின்கண்ட கேள்விகளுக்கு மகாத்மா காந்தியும் இந்துக்களும் அளிக்கும் பதிலையே பொறுத்திருக்கிறது:

இந்த ஆலயப் பிரவேச நடவடிக்கைக்குப் பின்னாலுள்ள தூண்டுதல் என்ன? ஆலயப் பிரவேசம் என்பது இந்துக்களின் அரவணைப்பில் தாழ்த்தப்பட்ட மக்களது சமூக அந்தஸ்து மேம்பாட்டின் இறுதிக் குறிக்கோளாக இருக்கப்போகிறதா? அல்லது இது இத்திசை வழியில் மேற்கொள்ளப்படும் முதல் நடவடிக்கையா? இது முதல் நடவடிக்கையாக இருக்குமாயின் இறுதி குறிக்கோள் யாது? ஆலயப் பிரவேசம்தான் இறுதிக் குறிக்கோள் என்றால் தாழ்த்தப்பட்ட இனத்தோர் அதனை ஒருபோதும் ஆதரிக்கமாட்டார்கள். அதனை அவர்கள் நிராகரிப்பார்கள்; அதுமட்டுமல்ல, இந்து சமுதாயத்தால் நிராகரிக்கப்பட்டவர்கள் என்று தங்களைக் கருதிக் கொள்வார்கள்; தங்கள் எதிர்காலத்தை வேறு எங்கேனும் நிர்ணயித்துக் கொள்ள உரிமை பெற்றிருப்பார்கள். அதேசமயம் ஆலயப் பிரவேசம் என்பது தாழ்த்தப்பட்ட மக்களது முன்னேற்றம் என்னும் திசை வழியில் எடுத்துக் கொள்ளப்படும் முதல் நடவடிக்கைதான் என்றால் அதை வரவேற்பார்கள். அப்போது இது இந்திய அரசியலில் தற்போது நடைபெற்றுவரும் நிகழ்ச்சிப் போக்கினை ஒத்ததாக இருக்கும்; இந்தியாவுக்குக் குடியேற்ற நாட்டு அந்தஸ்து வேண்டும் என்று இந்தியர்கள் கோருகிறார்கள். இந்தக் கோரிக்கையை பிரிட்டிஷார் கொள்கை அளவில் ஏற்றுக்கொண்டு இப்போது சில சீர்திருத்தங்களை வழங்க முன்வந்தால் பல இந்தியர்கள் அதை ஏற்றுக் கொள்வார்கள். ஏன்? ஏனென்றால் குறிக்கோள் நிர்ணயிக்கப்பட்டுவிட்ட பிறகு அக்குறிக்கோளை ஒரே பாய்ச்சலில் அடையாமல் படிப்படியாக அடைவதில் தவறேதும் இல்லை. ஆனால் குடியேற்ற நாட்டு

அந்தஸ்து குறிக்கோளை ஏற்றுக் கொண்டிருக்கவில்லை என்றால் நிலைமை என்னவாகியிருக்கும்? ஓரளவிலான சீர்திருத்தங்களை ஏற்றுக்கொள்ள இப்போது தயாராக இருப்பவர்களே அப்போது அவற்றை ஏற்றுக்கொண்டிருக்க மாட்டார்கள். இதே போன்று இந்து அரவணைப்பின் கீழ் தாழ்த்தப்பட்ட மக்களின் சமூக நிலைமையை மேம்படுத்துவதற்கு எத்தகைய குறிக்கோளை வகுத்திருக்கிறார்கள் என்பதை மகாத்மா காந்தியும் ஏனைய சீர்திருத்தவாதிகளும் அறிவித்தால் ஆலயப் பிரவேச விஷயத்தில் தங்கள் நிலையை நிர்ணயித்துக் கொள்வது தாழ்த்தப்பட்ட மக்களுக்கு எளிதாக இருக்கும். அதேசமயம், சம்பந்தப்பட்ட அனைவரும் தங்கள் குறிக்கோளை திட்டவட்டமாக, தெளிவாக அறிவிப்பது அவசியம். தங்களுக்குச் சமத்துவ அந் தஸ்தை வழங்கக்கூடிய ஒரு சமயத்தையே தாழ்த்தப்பட்ட மக்கள் விரும்புகின்றனர். தப்பெண்ணத்தைத் தவிர்க்கும் பொருட்டு இந்த விஷயத்தை மேலும் விளக்கும் வகையில், சமயச் சார்பற்ற காரணங்களினால் விளையக்கூடிய சமூகத் தீமைகளையும் சமய சித்தாந்தங்களின் அடிப்படையில் எழக் கூடிய சமூகத் தீமைகளையும் இங்கு வேறுபடுத்திக்காட்ட விரும்புகிறேன். எத்தகைய சமூகத் தீமைகளாயினும் அவற்றை ஒரு நாகரிக சமுதாயத்தில் எவ்வகையிலும் நியாயப்படுத்த முடியாது. அதிலும் இன்று நிலவும் எந்தச் சமூகத் தீமைகளையும் சமய அடிப்படையில் நியாயப்படுத்த முயல்வது மிக மிக இழிவானது, அறவே வெறுக்கத்தக்கது, முற்றிலும் அருவருக்கத் தக்கது. தங்களுக்கு இழைக்கப்படும் கோரக் கொடுமைகளை, அவலங்களை, அக்கிரமங்களைத் தாழ்த்தப்பட்டோர் வீழ்த்த முடியாதிருக்கலாம். ஆனால் இந்தக் கொடுமைகள் தொடர்வதற்கு ஆதரவளிக்கும் ஒரு மதத்தைப் பொறுத்துக் கொள்வதில்லை, சகித்துக் கொள்வதில்லை என அவர்கள் திட உறுதி பூண்டுள்ளனர். இந்து மதம் அவர்களது மதமாக இருக்க வேண்டும். எல்லோரையும் கோவிலுக்குள் அனுமதிப்பதற்கு வகை செய்யும் ஒரு ஷரத்தை இந்து சட்டத்தொகுப்பில் சேர்த்து விடுவதால் மட்டும் இந்து மதம் சமத்துவ சமூக அந்தஸ்தை வழங்கும் மதமாகி விடாது. தற்போது அரசியலில் சர்வசாதாரணமாகப் பயன்படுத்தப்படும் பதங்களைப் பிரயோகித்துக் கூறுவதனால் அது செய்யக்கூடியது எல்லாம் தாழ்த்தப்பட்ட மக்களை அந்நியர்களாக அல்லாமல் இந்நாட்டவராக அங்கீகரிப்பதே ஆகும். ஆனால் உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற பாகுபாடின்றி சுதந்திரமும் சமத்துவமுமிக்க ஒரு நிலையை அவர்கள் அடைந்துவிடுவார்கள் என்று இதற்குப் பொருள் அல்ல; ஏனென்றால் இந்து சமயம் சமத்துவ சமூக அந்தஸ்து கோட்பாட்டை ஏற்கவில்லை; அதற்குமாறாக, மக்களை பிராமணர்கள், சத்திரி

யர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் என வகைப்படுத்தி ஏற்றத் தாழ்வை ஊட்டி வளர்க்கிறது; இவை தற்போது ஒன்றுக்கொன்று பகைமை ஏறுபடியிலும், அவமதிப்பு இறங்கு படியிலும் நிற்கின்றன. இந்து சமயம் சமூக சமத்துவமுள்ள சமயமாக இருக்க வேண்டு மென்றால், ஆலயப்பிரவேசத்திற்கு வழிவகுக்கும் ஒரு திருத்தத்தை அதன் சட்டத்தொகுப்பில் இடம்பெறச் செய்வது மட்டும் போதாது. இப்போது செய்ய வேண்டியதெல்லாம் சதுர்வருண சித்தாந்தத்தை இந்து சமயத்திலிருந்து அகற்றி அதனைத் தூய்மைப்படுத்துவதே ஆகும்; ஏனென்றால் இந்த சதுர்வருண சம்பிரதாயம்தான் சகலவித மான ஏற்றத் தாழ்வுகளுக்கும் ஆணிவேர்; சாதி அமைப்பின் தோற்று வாய்; இவையெல்லாம் ஏற்றத்தாழ்வின் வெவ்வேறு வடிவங் களாகும். இதைச் செய்யவில்லை என்றால் தாழ்த்தப்பட்ட இனத் தினர் ஆலயப் பிரவேசத்தை நிராகரிப்பார்கள்; இந்து தர்மத்தையும் புறக்கணிப்பார்கள். சதுர்வருண சித்தாந்தமும் சாதிமுறையும் தாழ்த் தப்பட்ட மக்களின் சுயமரியாதைக்கு ஒவ்வாதவை முரண்பாடானவை. இந்த சித்தாந்தம் இந்து சமயத்தின் அச்சாணியாக, ஆதார அடிப்படை யாக நீடிக்கும்வரை தாழ்த்தப்பட்ட இனத்தினர் தொடர்ந்து தாழ்ந்த வர்களாகவே, கீழானவர்களாகவே கருதப்பட்டு வருவார்கள். தாங்கள் இந்துக்கள் என்று தாழ்த்தப்பட்ட மக்கள் கூறுவது தங்களது தாழ்ந்த அந்தஸ்தை, நிலையை தங்கள் வாயாலேயே ஒப்புக்கொள்வதாகும். சதுர்வருண, சாதிக்கோட்பாடு கைவிடப்பட வேண்டும்; சாஸ்திரங் களிலிருந்து அது அகற்றப்பட வேண் டும்; அப்போதுதான் தாழ்த்தப் பட்ட இனத்தோர் தங்களை இந்துக்கள் என்று கூறிக்கொள்ள முடியும். மகாத்மாவும் இந்து சீர்திருத்தவாதிகளும் இதனைத் தங்கள் குறிக்கோளாக ஏற்றுக் கொள்வார்களா? இதன் பொருட்டுத் துணிந்து போராட அவர்கள் முன்வருவார்களா? மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டு இதனை நான் கூறியிருப்பதால், இவ்விஷயத்தில் அவர் களது கருத்துக்களை ஆவலோடு எதிர்பார்க்கிறேன். ஆனால் மகாத்மா காந்தியும் இந்துக்களும் இதற்குத் தயாரூக இருந்தாலும் சரி, இல்லா விட்டாலும் சரி, இதற்குக் குறைந்த எதுவும் தாழ்த்தப்பட்ட மக்களைத் திருப்திப்படுத்தாது, அவர்களை ஆலயப் பிரவேசத்தை ஏற்கும்படி செய்யாது என்பதை உறுதியாக, முடிவாகத் தெரிவித்துக் கொள் கிறேன். ஆலயப் பிரவேசத்தை ஏற்றுக்கொண்டு அத்துடன் திருப்தி யடைவது என்பது தீமையுடன் சமரசம் செய்துகொள்வதையும், மனித ஆளுமையின் புனிதத்தைப் பலிகொடுப்பதையுமே குறிக்கும்.

நான் எடுத்துள்ள இந்த நிலைக்கு எதிராக மகாத்மா காந்தி யும் இந்து சீர்திருத்தவாதிகளும் ஒரு வாதத்தை முன் வைக்கலாம்:

அதாவது ''ஆலயப் பிரவேசத்தை தாழ்த்தப்பட்ட மக்கள் இப்போது ஏற்றுக் கொள்வது சதுர்வருண, சாதிமுறையை ஒழித்துக்கட்டு வதற்காக இனிமேல் அவர்கள் கிளர்ச்சி செய்வதை எவ்வகையிலும் தடுக்காது'' என்று அவர்கள் கூறக்கூடும். இதுதான் அவர்களது குறிக்கோள் என்றால் இப்பிரச்சினைக்கு முடிவான தீர்வு காணும், எதிர்கால வளர்ச்சிக்குப் பாதை திறந்துவிடும் நோக்கத்தோடு இந்தக் கட்டத்திலேயே இந்த வாதத்தை எதிர்கொள்ள விரும்புகிறேன். இப்போது ஆலயப் பிரவேசத்தை ஏற்றுக்கொள்வதால் சதுர்வருண, சாதிமுறையை ஒழித்துக்கட்டப் போராடுவதற்கு எனக்குள்ள உரிமையை நான் இழக்கமாட்டேன் என்பது உண்மையே. ஆனால் இந்தப் பிரச்சினை வரும்போது மகாத்மா காந்தி எந்தப் பக்கம் இருப் பார் என்பதுதான் இங்கு கேள்வி. என்னுடைய எதிராளிகளின் முகாமில் இருப்பாரானால் இப்போது அவருடைய முகாமில் நான் இருக்க முடியாது என்பதை நான் அவருக்குக் கூறியாக வேண்டும். என்னுடைய முகாமில் இருப்பாரானால் இப்போதே அதில் அவர் இருக்க வேண்டும்.

பி.ஆர். அம்பேத்கர்

வட்டமேசை மாநாட்டில் என்னுடன் சேர்ந்து தாழ்த் தப்பட்டோரை பிரதிநிதித்துவப்படுத்திய திவான் பகதூர் ஆர். சீனிவாசனும் ஆலயப் பிரவேச இயக்கத்தை ஆதரிக்க வில்லை. அவர் ஓர் அறிக்கையில் கூறியதாவது:

''தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஒருவர் சாதி இந்துக்களின் கோவில்களில் பிரவேசிப்பதற்கு அனுமதிக் கப்படும்போது, அவர் நால்வகை வருணங்களில் ஏதே னும் ஒன்றைச் சேர்ந்தவராகக் கருதப்பட மாட்டார்; அதற்கு மாறாக அவர் ஐந்தாவது வருணத்தைச் சேர்ந்தவராக அல்லது கடைசி வருணத்தைச் சேர்ந்தவராக, இன்னும் சொல்லப் போனால் தாழ்வினும் தாழ்வான சாதியைச் சேர்ந்தவராக நடத்தப்படுவார்; இது தீண்டப்படாதோர் என அழைக்கப்படும் கொடுமையிலும் மிகக் கொடிய இழுக்காகும். அதேசமயம் அவர் எத்தனை எத்தனையோ விதச் சாதிக்கட்டுப்பாடுகளுக்கும் அவமதிப்புகளுக்கும் ஆளாக்கப்படுவார். அதுமட்டுமல்ல, இவ்வாறு சாதி இந்துக்களின் கோவில்களுக்குள் பிரவேசிப்பவரைத் தாழ்த்தப்பட்ட இன மக்களும் வெறுத்தொதுக்குவார்கள்; கோடானுகோடியான தாழ்த்தப்பட்ட மக்கள் தங்களுக் குள் வேண்டுமானால் பல பிரிவுகளாக பிரிந்திருப்பார்

களே அன்றிச் சாதிக் கட்டுப்பாடுகளுக்கு ஒருபோதும் உடன்படமாட்டார்கள்.

ஆலயப் பிரவேசத்தைச் சட்டத்தின் மூலம் நிர்ப்பந்திக்க முடியாது. கிராம இந்துக்கள் பகிரங்கமாக அல்லது மறை முகமாக சட்டத்தை மீறுவார்கள். கிராமத்தின் தாழ்த்தப், பட்டவனுக்கு இது 'சர்க்கரை' என்று எழுதி சுவைத்துப் பார்க்கும்படி அவன் கையில் கொடுக்கப்படும் ஒரு துண்டு காகிதமே தவிர வேறல்ல.

நாட்டில் குழப்பத்தையும் கொந்தளிப்பையும் தவிர்ப் பதற்காக இந்த உண்மைகள் எல்லாம் பொதுமக்களின் முன் உரிய சமயத்தில் வைக்கப்பட்டுள்ளன.''

எனது அறிக்கையில் திரு. காந்தியின் முன் வைத்த ஒரு கேள்விக்கு அவர் நேரடியாகவே பதில் அளித்தார். தாம் தீண் டாமையை எதிர்த்தாலும் சாதியை எதிர்க்கவில்லை என்று அவர் கூறினார். அதனை ஆதரிக்கவே செய்கிறேன், எனவே தீண்டாமையை ஒழிப்பதற்கும் அதிகமாக எனது சமூக சீர்திருத்தத்தை முன்கொண்டு செல்ல மாட்டேன் என்றும் திட்ட வட்டமாகக் கூறினார். எனது நிலையை நிர்ணயிப்பதற்கு இது போதுமானதாக இருந்தது. இதில் மேற்கொண்டு பங்கேற்பதில்லை என்று தீர்மானித்தேன்.

தீண்டப்படாதோர் சமூகத்தின் முக்கிய பிரமுகர் காலஞ் சென்ற திவான் பகதூர் ராஜா தீண்டப்படாதோர் விஷயத்தில் அவர் மிகவும் வருந்தத்தக்க பங்காற்றினார் என்பதை இங்கு கூறாமல் இருக்க முடி யாது. திவான் பகதூர் 1927 ஆம் ஆண்டு முதல் மத்திய சட்டமன்றத் தில் ஒரு நியமன உறுப்பினராக இருந்து வந்தார். சட்டமன்றத்திற்கு உள்ளேயோ வெளியேயோ அவருக்கு காங்கிரசுடன் எந்த ஒட்டும் உறவும் இல்லை. தற்செயலாகவோ, தவறுதலாகவோ காங்கிரஸ் பக்கம் சாய்ந்த தில்லை. உண்மையில் அவர் காங்கிரசிடம் வெறும் குறைகாணுபவராக மட்டுமன்றி, அதன் கடுமையான பகைவராக வும் இருந்தார். அவர் அரசாங்கத்தின் தீவிர ஆதரவாளராக, அதன் தூண்களில் ஒருவராக இருந்து வந்தார்; அரசாங்கத்தை ஆதரிப்பதற்கு, அதனைத் தாங்கிப் பிடித்து நிற்பதற்கு அவர் என்றுமே தயங்கிய தில்லை. தீண்டப்படாதோருக்கு தனித் தொகுதிகள் ஒதுக்க வேண்டும்

என்ற கோரிக்கையை உறுதியாக ஆதரித்து நின்றார். ஆனால் காங்கிரசோ அக்கோரிக்கையைக் கடுமையாக எதிர்த்தது. 1932 ஆம் வருட நெருக்கடியின்போது திவான் பகதூர் திடீரென்று அரசாங்கத்தைக் கைகழுவிவிட்டு காங்கிரசின் பக்கம் சேர்ந்து கொண்டார். கூட்டுத் தொகுதி முறையையும் ஆலயப் பிரவேசத்தையும் ஆதரித்து காங்கிரஸ் நடத்திய இயக்கத்தின் ஈட்டிமுனையானார். பொதுவாழ்க்கையில் ஒருவர் இத்தகைய திடீர் மாற்றத்தை மேற்கொள்ளும் போக்கை காண்பது அரிது. இதில் மிகவும் மோசமான, அருவருக்கத்தக்க விஷயம் என்னவென்றால் இந்தப் போக்குக்குப் பின்னால் கடைந்தெடுத்த சுயநலம் பதுங்கியிருந்தது என்பதே ஆகும். வட்டமேசை மாநாட்டுக்குத் தீண்டப்படாதோரின் பிரதிநிதியாக அரசாங்கம் அவரை நியமிக்காமல் திவான் பகதூர் ஆர். சீனிவாசனை நியமித்ததானது அவரை பெரிதும் விரக்தியும் ஏமாற்றமும் சீற்றமும் கொள்ளச் செய்தது. இந்திய அரசாங்கம் அவரை நியமிக்காததற்குப் போதிய காரணங்கள் இருந்தன. சைமன் கமிஷன் உறுப்பினர்களையோ, மத்திய சட்டமன்றக் குழு உறுப்பினர்களையோ வட்டமேசை மாநாட்டுக்கு அனுப்புவதில்லை என்று தீர்மானிக்கப்பட்டது. திவான் பகதூர் ராஜா மத்திய சட்டமன்றக் குழு உறுப்பினர். எனவே அவர் நியமிக்கப்படவில்லை. இது நியாயமான விளக்கமாகும். ஆனால் திவான் பகதூர் ராஜாவின் தற்பெருமை உணர்வு இந்த நியாயத்தைக் காண மறுத்தது. எனினும் விரைவிலேயே அவருக்கு உண்மை புலப்பட்டது. சென்னையில் காங்கிரஸ் அமைச்சரவை அமைக்கப்பட்ட போது அவரது எதிராளி அமைச்சராக்கப்பட்டார்; காங்கிரசுக்கு எவ்வளவோ சேவை செய்திருந்த போதிலும் இவர் கைவிடப்பட்டார். அவர் ஆதரித்த புனா ஒப்பந்தம் மிதித்துத் துவைக்கப்பட்டது. இதனை எல்லாம் கண்டபோது தாம் செய்தது மிகப் பெரிய தவறு என்ற கசப்பான உண்மையை அவர் நிதர்சனமாகக் கண்டார்! எனினும், நெருக்கடி மிகுந்த 1932 ஆம் ஆண்டில் திவான் பகதூர் ராஜா காங்கிரசுக்கு தனது முழு ஆதரவை அளித்தார் என்ற எதார்த்தத்தை மறந்துவிட முடியாது. காங்கிரஸ் கூட்டத்தோடு சேர்ந்து ஓடியதோடு நில்லாமல், தீண்டாமைக்கு எதிராக சட்டம் இயற்றும் போட்டியில் தான் பின்தங்கிவிடாதபடி மிகக் கவனமாகப் பார்த்துக் கொண்டார். இது சம்பந்தமாக அவரும் இரண்டு மசோதாக்களை முன்மொழிந்தார். அவற்றில் ஒன்று தீண்டாமை ஒழிப்பு மசோதா; மற்றொன்று குற்ற நடைமுறை திருத்த மசோதா.

## III

திரு. காந்தி தமது இயக்கத்துக்கு எத்தகைய எதிர்ப்பு வந்த போதிலும், அது வைதிக இந்துக்களிடமிருந்து வந்தாலும் சரி, தீண்டப்படாதவர்களிடமிருந்து வந்தாலும் சரி அதுகுறித்துக் கவலைப் படவில்லை. அவர் தமது முயற்சியில் வெறி பிடித்தவர்போல், பித்துப் பிடித்தவர்போல் செயல்படலானார். ஆனால் அவரது இந்த இயக்கத்துக்கு முடிவில் என்ன கதி நேர்ந்தது என்ற கேள்வியைக் கேட்பது சுவையானதாக இருக்கும். ஆனால் இந்த நூலின் குறுகிய வட்டத்திற்குள் இந்த விசாரணையை விவரிப்பதோ, இயக்கம் வெற்றியடைந்து விட்டதாக உரிமை கொண்டாடி அதற்கு ஆதர வாக முன்வைக்கப்படும் எல்லா சான்றுகளையும் இங்கு தருவதோ சாத்தியமில்லை.

சுருக்கமாகக் கூறினால், கோவில்களையும் கிணறுகளையும் தீண்டப்படாதோருக்குத் திறந்துவிடுவது போன்ற நடவடிக்கைகள் மூலம் தீண்டாமையை ஒழித்துக்கட்டும் திசை வழியில் சிறிதுகாலம் மேற்கொள்ளப்பட்ட ஆரம்ப சூரத்தனத்திற்குப் பிறகு, திடீரெனப் பொங்கி வழிந்த வேகத்திற்குப் பிறகு இந்துக்களின் மனம் பழைய குருடி கதவைத் திறடி என்ற கதையில் பழைய நிலைக்கே திரும் பிற்று. ஹரிஜன் இதழில் ''வாரத்திற்கு வாரம்'' என்ற பகுதியில் வெளி வந்த செய்திகள் கழுதை தேய்ந்து கட்டெறும்பு ஆனதை போல் படிப்படியாகக் குறைந்து இறுதியில், அடியோடு மறைந்து விட்டன. என்னைப் பொறுத்தவரையில் இந்துக்களின் மனம் இவ்வளவு விரை வில் மரத்துப்போனது பற்றி, முடமாகப் போனது பற்றி நான் வியப் படையவில்லை. ஏனென்றால் ஹரிஜன் பத்திரிகையில் வெளிவரும் ''வாரத்திற்கு வாரம்'' என்னும் பகுதி வெளி உலகை நம்ப வைப்பது போல் இந்துக்களின் மார்பகத்தில் மனித நேயம், மனிதாபிமானம், மனிதப் பண்பு என்னும் பால் இந்த அளவுக்குச் சுரக்கும் என்று நான் ஒருபோதும் நம்பியதில்லை. உண்மையில் ''வாரத்திற்கு வாரம்'' பகுதியில் வெளியாகும் செய்திகளில் பெரும்பகுதி சுத்த பித்தலாட்ட மானதாகும்; போலியானதாகும். தீண்டாமையை எதிர்த்துப் போராட இந்துக்கள் உறுதிபூண்டுள்ளனர் என்று உலகை ஏமாற்றுவதற்கு காங்கிரஸ்காரர்கள் கட்டவிழ்த்துவிட்டப் பொய்ப்பிரசாரமே தவிர இது வேறல்ல. அப்படியே உண்மையில் ஒரு சில கோவில்கள் தீண்டப்படாதவர்களுக்குத் திறந்துவிடப்பட்டிருந்தாலும், அவ்வாறு

திறந்து விடப்பட்டதாக அறிவிக்கப்பட்டுள்ள கோவில்களில் பெரும் பாலானவை சிதைந்து சீர்குலைந்து பாழடைந்து போனவை; நாய் களையும் குரங்குகளையும் தவிர வேறு எவரும் அவற்றைப் பயன் படுத்துவதில்லை. இந்த காங்கிரஸ் இயக்கத்தால் விளைந்த தீய விளைவுகளில் ஒன்றை இங்கு குறிப்பிடுவது அவசியம்; அரசியல் விழிப்பு கொண்ட இந்துக்களை, அது ஒரு பொய்யர் பட்டாளமாக்கி விட்டது; காங்கிரசுக்கு உதவுமானால் எந்தப் பச்சைப் பொய்யையும் கூற இந்தத் 'திருக்கூட்டம்' தயங்காது. இந்த ஆலயப் பிரவேச இயக் கத்தில் இந்துக்கள் ஆடிய நாடகம் இவ்வாறு பரிதாபகரமாக முடிந்தது; அவர்கள் தரித்த வேடம் களைந்தது. குருவாயூர் ஆலய சத்தியாக் கிரகத்திற்கும், தீண்டப்படாதவர்களின் ஆலயப் பிரவேசம் சம்பந்த மான மசோதாக்களுக்கும் இதே பரிதாபமான கதிதான் நேர்ந்தது. இவையாவும் திரு. காந்தியும் காங்கிரஸ்காரர்களும் கடைப்பிடித்த வழிமுறைகள். ஆதலால் அவற்றைச் சற்று விவரமாக இங்கு கூறி னால் தீண்டப்படாதோர் விஷயத்தில் திரு. காந்தியும் காங்கிரசும் கொண்டுள்ள உண்மையான மனோபாவத்தை, அவர்களது நோக்கை, போக்கை அது வெட்ட வெளிச்சமாக்கும்.

## IV

குருவாயூர் ஆலய சத்தியாக்கிரகத்துடன் தொடங்குவோம். மலபாரில் பொன்னானி தாலுகாவில் குருவாயூர் என்னுமிடத்தில் கிருஷ்ணர் கோவில் ஒன்று இருக்கிறது. கள்ளிக் கோட்டை ஜமோரின் தான் இந்தக் கோவிலின் தர்மகர்த்தா. மலபாரில் தீண்டப்படா தோரின் நலனுக்காகப் பாடுபட்டுவரும் திரு. கேளப்பன் என்ற ஓர் இந்து கோவிலுக்குள் தீண்டப்படாதோரை அனுமதிக்க வேண்டும் என்பதற்காக ஓர் கிளர்ச்சியைத் தொடங்கினார். ஆனால் கோவிலின் தர்மகர்த்தாவான கள்ளிக்கோட்டை ஜமோரின் தீண்டப்படாதோ ருக்கு கோவிலைத் திறந்துவிட மறுத்துவிட்டார்; தமது நடவடிக் கைக்கு ஆதரவாக இந்து சமய அறக்கொடை சட்டத்தின் 40 ஆவது பிரிவை மேற்கோள் காட்டினார்; எந்தத் தர்மகர்த்தாவும் தம்மிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள கோவில்களின் பழக்க வழக்கங்களுக்கும் மரபுகளுக்கும் விரோதமாக எந்த நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளக் கூடாது என்று அந்தப் பிரிவு கூறுகிறது. 1932 செப்டம்பர் 20 ஆம் தேதி திரு. கேளப்பன் உண்ணாவிரதம் மேற்கொண்டார்; தீண்டப்படா தோர் சம்பந்தமாக ஜமோரின் தமது கருத்துகளை மாற்றிக் கொள்ளும்

வரை கோவிலின் முன்னர் சுட்டெரிக்கும் வெயிலில் படுத்து உண்ணா விரதம் இருந்தார். இந்தத் தொல்லையிலிருந்தும் இக்கட்டிலிருந்தும் விடுபடும் பொருட்டு ஜமோரின் காந்தியை அணுகினார்; உண்ணா விரதத்தைத் தற்காலிகமாக நிறுத்திவைக்கும்படி திரு. கேளப் பனை வலியுறுத்துமாறு அவர் திரு. காந்தியைக் கேட்டுக் கொண் டார். பத்து தினங்கள் உண்ணாவிரதம் இருந்தபிறகு திரு. காந்தி யின் வேண்டுகோளின் பேரில் திரு. கேளப்பன் 1932 அக்டோபர் 1 ஆம் தேதி மூன்று மாதங்களுக்கு உண்ணாவிரதத்தை ஒத்திவைத்தார். ஆனால் இதன் பிறகு ஜமோரின் எதுவும் செய்ய வில்லை. இதன் பேரில் திரு. காந்தி அவருக்கு தந்தி ஒன்றை அனுப்பினார்; இந்த விஷயத்தில் விரைந்து செயல்படும்படியும் சட்ட மற்றும் இதர இக்கட்டுகளை வெற்றிகரமாகச் சமாளிக்கும்படியும் அதில் அறி வுரை கூறியிருந்தார். மேலும், தமது ஆலோசனையின் பேரிலேயே திரு. கேளப்பன் தமது உண்ணா விரதத்தை நிறுத்தி வைத்ததால், தீண்டப்படாதோர் கோவிலுக்குள் பிரவேசிப்பதற்கு ஏற்பாடு செய் வது தமது கடமையாகிவிட்டது என்றும், அவசியமானால் இதன் பொருட்டு திரு. கேளப்பனுடன் சேர்ந்து உண்ணாவிரதம் இருக்க வேண்டிய அளவுக்குச் செல்ல வேண்டியிருக்கும் என்றும் ஜமோ ரினிடம் திரு. காந்தி கூறினார். 1932 நவம்பர் 5 ஆம் தேதி திரு. காந்தி பின்கண்ட அறிக்கையைப் பத்திரிகைகளுக்குத் தந்தார்:

> ''கேரளத்தில் குருவாயூரில் கோவிலை தீண்டப்படா தோருக்குத் திறந்துவிடுவது சம்பந்தமாக மற்றொரு உண்ணாவிரதம் மேற்கொள்ள வேண்டிய சாத்தியக்கூறு இருக்கிறது. திரு. கேளப்பனின் உண்ணாவிரதம் கிட்டத் தட்ட அவரை சாவின் விளிம்புக்குக் கொண்டுவந்து விட்டது. இந்நிலைமையில் நான் அவசரமாகக் கேட்டுக் கொண்டதற்கு இணங்கவே அவர் தமது உண்ணாவிர தத்தை மூன்றுமாதக் காலத்துக்குத் தள்ளிவைத்தார். எனவே, தீண்டப்படுவோரைப் போன்றே தீண்டப்படாத வர்களுக்கும் 1933 ஜனவரி 1 ஆம் தேதியன்றோ அல்லது அதற்கு முன்னரோ குருவாயூர் கோவில் திறந்துவிடப்பட வேண்டும். இல்லையென்றால், அவசியமானால் திரு. கேளப்பன் மீண்டும் உண்ணாவிரதத்தைத் தொடங்கும் போது, அவருடன் சேர்ந்து நானும் உண்ணாவிரதம் இருக்க வேண்டியிருக்கும்.''

ஜமோரின் இதற்கு இணங்க மறுத்து, பின்கண்ட எதிர் அறிக்கையைப் பத்திரிகைகளில் வெளியிட்டார்:

> ''கோவில்களை அவர்ணர்களுக்குத் திறந்து விடுமாறு கேட்டுக்கொண்டு வெளியிடப்படும் பல்வேறு வேண்டுகோள்கள் இதில் உள்ள சிரமங்களைப் போதிய அளவுக்கு கவனத்தில் எடுத்துக் கொள்ளாமல் வெளியிடப்படுபவையாகும். இத்தகைய சூழ்நிலைமையில், ஆலயப் பிரவேச இயக்கத்தின் ஆதரவாளர்கள் விரும்புவதுபோன்று குருவாயூர் கோவிலை அவர்ணர்களுக்குத் திறந்துவிடுவது என் அதிகாரத்தில் இருப்பதுபோல் நினைப்பது எவ்வகையிலும் நியாயமற்றதாகும்.''

இத்தகைய சந்தர்ப்பச் சூழ்நிலைமைகளில் திரு. காந்தி உண்ணாவிரதம் மேற்கொள்வது தவிர்க்க முடியாததாகவும் அவசியமானதாகவும் ஆகிவிட்டது. ஆனால் திரு. காந்தி தாம் கூறியதைப் போல் உண்ணாவிரதத்தை மேற்கொள்ளவில்லை. மாறாக, அவர் தமது நிலையை மாற்றிக் கொண்டார்; கோவில் அமைந்துள்ள பொன்னானி வட்டத்தில் ஒரு பொதுமக்கள் வாக்கெடுப்பு நடத்தலாம் என்றும், தீண்டப்படாதவர்களுக்குக் கோவில்களைத் திறந்து விடுவதை பெரும்பாலோர் எதிர்க்கின்றனர் என்பது அந்த வாக்கெடுப்பு மூலம் தெரியவந்தால், தாம் உண்ணாவிரதம் இருக்கும் முடிவைக் கைவிடுவதாகவும் அவர் கூறினார். அவ்வாறே ஒரு பொதுமக்கள் வாக்கெடுப்பு நடைபெற்றது. ஆனால் வழக்கமாக கோவிலுக்குச் சென்று வருபவர்கள் மத்தியில் மட்டுமே இந்த வாக்கெடுப்பு நடைபெற்றது. கோவிலுக்குள் செல்ல தகுதியற்றவர்களும், பொதுவாக கோவிலுக்குச் செல்லாதவர்களும் வாக்காளர் பட்டியலில் இடம் பெறவில்லை. வாக்களிக்கத் தகுதி பெற்றவர்களில் 73 சதவீதத்தினர் வாக்களித்ததாகக் கூறப்பட்டது. வாக்கெடுப்பின் முடிவு பின்வருமாறு அமைந்திருந்தது: ஆலயப் பிரவேசத்துக்கு ஆதரவாக 56 சதவீதத்தினர் வாக்களித்தனர்; 9 சதவீதத்தினர் எதிராக வாக்களித்தனர்; 8 சதவீதத்தினர் நடுநிலைமை வகித்தனர்; 27 சதவீதத்தினர் வாக்கெடுப்பில் கலந்து கொள்ளவில்லை.

இந்த வாக்கெடுப்பில் தெரியவந்த முடிவின்படி உண்ணாவிரதத்தை மேற்கொள்ள திரு. காந்தி கடமைப்பட்டிருந்தார். ஆனால் அவர் அவ்வாறு செய்யவில்லை. மாறாக, 1932 டிசம்பர் 29 ஆம் தேதி

திரு. காந்தி பத்திரிகைகளில் ஓர் அறிக்கை வெளியிட்டார். அந்த அறிக்கையின் இறுதியில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

> "ஆலயப் பிரவேசம் சம்பந்தமாக சென்னை மேலவையில் டாக்டர் சுப்பராயனின் மனுவை அனுமதிப்பது குறித்த வைசிராயின் முடிவு ஜனவரி 15 ஆம் தேதிக்கு முன்னர் வெளியிடப்படுவது சாத்தியமில்லையாதலால், புத்தாண்டின் இரண்டாம் நாளன்று தொடங்க உத்தேசித்திருந்த உண்ணாவிரதம் மறுதேதி குறிப்பிடப்படாமல் ஒத்திவைக்கப்படுகிறது; இன்னும் தெளிவாகக் கூறுவதானால் வைசிராயின் முடிவு வெளியிடப்படும் வரை உண்ணாவிரதம் ஒத்திவைக்கப்படுகிறது. இந்த ஒத்திவைப்பை திரு. கேளப்பனும் ஏற்றுக்கொண்டிருக்கிறார்."

திரு. காந்தி குறிப்பிடும் வைசிராயின் அறிவிப்பு என்பது சட்டமன்றத்தில் ஆலயப் பிரவேச மசோதாக்கள் கொண்டு வருவதற்கு வைசிராயின் அனுமதி வழங்கப்படுவதை அல்லது மறுக்கப்படுவதைக் குறிக்கிறது. இந்த அனுமதி இறுதியில் வைசிராயால் அளிக்கப்பட்டது. எனினும் திரு. காந்தி உண்ணா விரதத்தை மேற்கொள்ளவில்லை. அவர் உண்ணாவிரதத்தை மேற்கொள்ளாதது மட்டுமல்ல, அது அத்தனை முக்கியத்துவம் வாய்ந்தது அல்ல என்ற ரீதியில் அதனை அடியோடு மறந்தும் விட்டார். அப்போது முதல் குருவாயூர் ஆலயப் பிரவேச சத்தியாக்கிரகம் பற்றி எந்தத் தகவலும் இல்லை. இன்றுவரை கூட அதன் கதவுகள் தீண்டப்படாதோருக்கு மூடியே கிடக்கின்றன.

## V

குருவாயூர் கதை இவ்வாறு முடிவடைந்தது. இனி அடுத்து ஆலயப் பிரவேச மசோதாக்கள் விஷயத்துக்கு வருவோம். மத்திய சட்டமன்றத்தில் இது சம்பந்தப்பட்ட பல மசோதாக்களில் திரு. ரங்க அய்யர் பெயரில் இருந்த மசோதா பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப் பட்டது. ஏனைய மசோதாக்கள் அனைத்தும் கைவிடப்பட்டன. ஆனால் திரு. ரங்க அய்யரின் மசோதா கொண்டுவரப்படும்போதே, பிறக்கும் போதே பெரும் புயலைக் கிளப்பிவிட்டது. இந்திய அரசாங்கத்தின் அன்றைய சட்டத்தின்படி, சமயத்தையோ அல்லது சமயப் பழக்க வழக்கங்களையோ, மரபுகளையோ பாதிக்கும் எந்த மசோதாக்களையும் கவர்னர்-ஜெனரலின் முன்அனுமதியின்றிச் சட்டமன்றத்தில்

கொண்டுவர முடியாது. இதன் பிரகாரம் இந்த மசோதா கவர்னர்-ஜெனரலின் அனுமதிக்காக அனுப்பப்பட்டபோது, அது மீண்டும் ஒரு குழப்பத்தை, குமுறலைக் கிளர்த்திவிட்டது; கவர்னர்-ஜெனரல் இந்த மசோதாவை நிராகரிக்கப் போகிறார் என்ற செய்திகள் பரப்பப்பட்டன. இந்த செய்திகளைக் கேள்விப்பட்டு திரு. காந்தி பெருமளவுக்குக் கிளர்ச்சி அடைந்தார். 1933 ஜனவரி மாதம் 21 ஆம் தேதி பத்திரிகைகளில் அவர் ஓர் அறிக்கை வெளியிட்டார். அதில் திரு. காந்தி குறிப்பிட்டிருந்ததாவது:

> "இந்தச் செய்திகள் வைசிராயின் முடிவு பற்றிய முன் கணிப்பாக இருந்து உண்மையாக இருக்குமாயின் அவை துயரமளிக்கக் கூடியவை என்று மட்டுமே இங்கு என்னால் கூறமுடியும்... ஆலயப் பிரவேச நடவடிக்கைகளுக்குப் பின்னால் எத்தகைய அரசியல் நோக்கமும் இல்லை என்று திட்டவட்டமாக வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். ஐயத்துக்கிடமான, ஒரு பழக்கவழக்கத்துக்கு நீதிமன்றத் தீர்ப்புகள் சட்ட வலுகொடுக்க வேண்டிய அவசியம் இல்லாதபோது, அதற்குச் சட்டம் இயற்ற வேண்டிய தேவை இல்லை. மத விவகாரங்களில் அரசு தலையிடுவதை சகித்துக் கொள்ள இயலாத கேடு பயக்கும் செயல் என்று நானும் கருதுகிறேன். ஆனால் இங்கு சட்டரீதியான தடையை அகற்றும் பொருட்டு சட்டம் இயற்றுவது அவசியமாகிறது; இத்தகைய சட்டம் மக்களின் விருப்பத்தை அடிப்படையாகக் கொண்டிருக்குமாதலால் மாறுபட்ட கருத்துகளைக் கொண்ட தரப்புகளுக்கிடையே முரண்பாடு எழும் பிரச்சினைக்கு இடமிருக்காது என்றே நம்புகிறேன்."

அரசாங்கத்தின் முடிவு 1933 ஜனவரி 23 ஆம் தேதி அறிவிக்கப்பட்டது. சென்னை மேலவையில் டாக்டர் சுப்பராயன் ஆலயப் பிரவேச மசோதா கொண்டு வருவதற்கு அனுமதியளிக்க வெல்லிங்டன் பிரபு மறுத்துவிட்டார். ஆனால் மத்திய சட்டமன்றக் கீழவையில் திரு. ரங்க அய்யரின் தீண்டாமை ஒழிப்பு மசோதாவை தாக்கல் செய்ய அவர் அனுமதித்தார். இது விஷயத்தில் தாங்கள் எத்தகைய போக்கைக் கடைப்பிடிப்பது என்பது குறித்துத் தீர்மானிப்பதற்கு முன்னர் இந்துக்களின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்வது அவ்சியம் என்று தாங்கள் கருதுவதாக அரசாங்கம் வலியுறுத்திக் கூறிற்று. இத்தகைய ஒரு நடவடிக்கையைப் பரிசீலனைக்கு எடுத்துக்

கொள்வதற்கு முன்னர், சம்பந்தப்பட்ட பிரேரணைகள் அவற்றின் எல்லா அம்சங்களிலும் முழு அளவுக்கு நுணுக்கமாக ஆய்வு செய்யப் படுவதும், அவற்றால் பாதிக்கப்படக் கூடியவர்களின் கருத்துகளைக் கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டியதும் இன்றியமையாதது என்று இந்திய அரசாங்கமும் கவர்னர்-ஜெனரலும் தெளிவுபடுத்த விரும்புகின்றனர் என அந்த அறிவிப்பு மேலும் கூறிற்று. மக்களின் கருத்தை அறியும் பொருட்டு மசோதாவை மிகப் பரந்த முறையில் சுற்றுக்கு விட்டால்தான் இந்த நோக்கம் நிறைவேற முடியும். ஆலயப் பிரவேசம் சம்பந்தப்பட்ட மசோ தாக்களை மத்திய சட்டமன்றத்தில் கொண்டு வருவதற்கு அனுமதிப்பதானது அவற்றில் அடங்கியுள்ள கோட்பாடுகளை ஏற்கும்படியோ அல்லது ஆதரிக்கும்படியோ அர சாங்கத்தை எவ்வகையிலும் கட்டுப்படுத்தாது என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும். மறுநாள், திரு. காந்தி ஓர் அறிக்கை வெளி யிட்டார். அதில் அவர் குறிப்பிட்டதாவது:

> ''இதில் ஆண்டவனின் திருக்கரம் எந்த அளவுக்கு படிந் துள்ளது என்பதைக் கண்டுபிடிக்க நான் முயல வேண்டும். இதனை நான் துருவித் துருவி ஆராய வேண்டும் என அவர் விரும்புகிறார். அகில இந்திய மசோதாவுக்கு அனுமதி அளிக்கப்பட்டிருப்பதை உள்நோக்கம் ஏதுமின்றி இந்து சமயத்துக்கும் சீர்திருத்தவாதிக்கும் விடுக்கப்பட்டுள்ள ஓர் அறைகூவலாக எடுத்துக்கொள்ள வேண்டும். சீர்திருத்த வாதி தான் மேற்கொண்ட நிலையில் பற்றுறுதியுடைய வராக, அதிலிருந்து பிறழாதவராக இருக்கும் பட்சத்தில் இந்து சமயம் தன்னைத் தானே பாதுகாத்துக் கொள்ளும். இந்திய அரசாங்கத்தின் இந்த முடிவை நல்லதிர்ஷ்டம் என்றே கருத வேண்டும். இது பிரச்சினையைத் தெளி வாக்குகிறது. இந்தியாவில் தற்போது நடைபெற்று வரும் அறப்போராட்டத்தின் மகத்தான முக்கியத்துவத்தை இந்தி யாவும் உலகமும் புரிந்து கொள்ள இது துணை புரிகிறது. சனாதனிகள் எத்தகைய முடிவு எடுத்தாலும் ஆலயப் பிரவேச இயக்கம் தற்போது தென் கோடியிலுள்ள குருவா யூரிலிருந்து வடக்கே ஹரித்துவார் வரை விரிந்து பரந்து வியாபித்து வருகிறது; எனது உண்ணாவிரதம் மேலும் ஒத்திவைக்கப்பட்டிருந்தாலும் தற்போது அது குருவா யூருடன் நில்லாமல், பொதுவாக எல்லாக் கோவில்களுட னும் சம்பந்தப்பட்டதாக இருக்கும்.''

இந்த மசோதா தனது சட்டமன்றப் பிரவேசத்தை எத்தகைய எக்காள முழக்கத்துடன் தொடங்கிற்று என்பதை அனைவரும் அறிவர். 1933 மார்ச் 24 ஆம் தேதி திரு. ரங்க அய்யர் விதிமுறைப்படி சட்டமன்றத்தில் மசோதாவைத் தாக்கல் செய்தார். இது திரு. காந்திக்கு சாதகமான மசோதா ஆதலால் சட்டமன்ற காங்கிரஸ் உறுப்பினர்கள் அதற்கு ஆதரவளிக்கத் தயாராக இருந்தனர். மசோதா எத்தகைய தங்கு தடையுமின்றி சட்டமாவதை உறுதிசெய்யும் பொருட்டு காங்கிரசல்லாத உறுப்பினர்களின் ஆதரவைத் திரட்டும் பணியை திரு. ராஜகோபாலாச்சாரியரிடமும், திரு. ஜி.டி. பிர்லாவிடமும் திரு. காந்தி ஒப்படைத்திருந்தார். ஆதரவைத் திரட்டும் பணியில் அவர்கள் தம்மை விடத் திறமை வாய்ந்தவர்கள் என்று கூறினார். மசோதாவை முன்மொழியும் தீர்மானத்தை கொல்லங்கோடு ராஜாவும் திரு. தம்பானும் எதிர்த்தனர்; இந்த மசோதா சட்டமன்றத்தின் அதிகார வரம்புக்கு அப்பாற்பட்டது என்று அவர்கள் ஆட்சேபம் எழுப்பினர். இந்த ஆட்சேபம் அவைத் தலைவரால் நிராகரிக்கப்பட்டது. இதன் பேரில் மசோதா தாக்கல் செய்யப்படுவதற்கு அவை அனுமதியளித்தது. அடுத்த படியாக, ஜுலை 30 ஆம்தேதி வாக்கில் பொதுமக்களின் கருத்தை அறிவதற்காக மசோதா வைச் சுற்றுக்கு விட வேண்டும் என்று கோரும் ஒரு தீர்மானத்தை திரு. ரங்க அய்யர் கொண்டு வந்தார். மசோதாவைச் சுற்றுக்கு விடக் கோரும் இந்தத் தீர்மானத்தை ராஜா பகதூர் கிருஷ்ணமாச்சாரி எதிர்த்தார்; உத்தேச சட்டத்தை அவர் மிக வன்மையாகக் கண்டித்தார். பின்னர் மசோதாவை சுற்றுக்குவிடும் தேதியை ஜுலை 31 என்று இருப்பதற்குப் பதிலாக டிசம்பர் 31 ஆக மாற்ற வேண்டும் என்று அவர் கோரினார். மசோதாவை சுற்றுக்கு விடக் கோரும் தீர்மானத்தை திரு. குஞ்சால் எதிர்த்தார்; மசோதாவுக்கு ஆதரவு தர வேண்டாம் என்று அவையைக் கேட்டுக் கொண்டார். ஏற்கெனவே மாலை 5 மணியாகி விட்டதாலும், அந்தக் கூட்டத் தொடரில் அரசு சார்பற்ற அலுவல்களுக்கு அதுவே கடைசி நாள் என்பதாலும் அன்றைய தினம் சபை நடவடிக்கைகளை மேலும் நீடிப்பது சம்பந்தமாக உறுப்பினர்களின் கருத்தை அறிய அவைத் தலைவர் விரும்பினார். இதற்கு அவையிலுள்ள பெரும்பாலோரின் ஆதரவு கிட்டாததால் தலைவர் அவையை ஒத்திவைத்தார். இதனால் மசோதாவும் சட்டமன்றத்தின் இலையுதிர் காலக் கூட்டத்தொடருக்கு ஒத்திவைக்கப்பட்டது.

மத்திய சட்டமன்றத்தின் இலையுதிர் காலக் கூட்டத் தொடர் ஆரம்பமாகி நடைபெற்று வந்தபோது மசோதா மீதான விவாதம் 1933 ஆகஸ்டு 24 ஆம் தேதி மீண்டும் தொடங்கிற்று. மசோதாவை

சுற்றுக்குவிடக் கோரும் தீர்மானத்துக்குத் தாங்கள் அளிக்கும் ஆதரவை அதன் ஷரத்துகளைத் தாங்கள் ஆதரிப்பதாக எடுத்துக் கொள்ளக் கூடாது என்று அரசாங்கத்தின் சார்பில் சர். ஹார்ரி ஹெய்க் விளக்கம் அளித்தார். அரசாங்கம் தாழ்த்தப் பட்ட வகுப்பினர்களின்பால் ஆதர வும் பரிவும் கொண்டிருந்தது என்பதிலும், அவர்களது சமூக, பொரு ளாதார மேம்பாட்டிற்கும் முன்னேற்றத்திற்கும் தங்களால் முடிந் ததைச் செய்ய ஆவல் கொண்டிருந்தது என்பதிலும் ஐயமில்லை. இது சம்பந்தமாக கடந்த ஜனவரி மாதம் வெளியிடப்பட்ட அறிக்கையை அவர் மேற்கோள் காட்டிப் பேசினார்; அரசாங்கத்தின் கருத்து அதில் முழு அளவுக்கு விவரிக்கப்பட்டிருந்தது. மசோதாவை ஜுன் இறுதிக்குள்ளாகச் சுற்றுக்கு விடுவது மக்களின் கருத்தைப் பரந்த அள வில் அறிய உதவும் என்று அவர் கருத்துத் தெரிவித்தார். கோவிலுக்கு வழக்கமாகச் செல்லும் இந்துக்களைப் பொறுத்தவரையில், அவர் களுக்கிடையே மசோதாவைச் சுற்றுக்கு விடுவதற்கு ஒரு வரையறை நிர்ணயிப்பது சரியல்ல, ஏனென்றால் எதார்த்த கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, உத்தேசிக்கப்பட்டிருப்பது போன்று அவர்கள் மீது எத்தகைய கட்டுப்பாடும் விதிப்பது காரிய சாத்தியமல்ல என்று சர் ஹார்ரி ஹெய்க் குறிப்பிட்டார். இந்த விஷயத்தை இந்துக் களில் அனைத்துத் தரப்பினருமே முழு அளவுக்கு விவாதிக்க வேண் டும் என்று அரசாங்கம் விரும்புகிறது. எனவே, திரு. சர்மா கொண்டு வந்துள்ள திருத்தத்தை ஆதரிக்க அரசாங்கம் தயாராக இருக்கிறது என்றும் அவர் கூறினார். இதன்பேரில், மசோ தாவை 1934 ஜுன் இறுதிக்குள் சுற்றுக்கு விட வேண்டும் என்ற திரு. சர்மாவின் திருத் தத்தை அவை ஏற்றுக்கொண்டது. இதன்படி கருத்துகள் சேகரிக்கப் பட்டன. அவை அனைத்தும் சேர்ந்து 'புல்ஸ்கேப்' அளவில் ஆயி ரத்துக்கும் அதிகமான பக்கங்கள் கொண்ட ஒரு பெரிய தொகுதியாகி விட்டது. மசோதா அடுத்த கட்டத்திற்குத் தயாராக இருந்தது; அதா வது ஒரு பொறுக்குக் கமிட்டியை அமைக்கும் நடவடிக்கை மேற் கொள்ளும் கட்டத்தை அடைந்தது. இதற்கான தீர்மானத்தைக் கொண்டு வருவதற்கான முன் அறிவிப்பையும் கூட திரு. ரங்க அய்யர் தந்துவிட்டார். இச்சமயம் ஓர் எதிர்பாராத சம்பவம் நடைபெற்றது. சட்டமன்றத்தைக் கலைத்துவிட்டுப் புதிதாகத் தேர்தல் நடத்த இந்திய அரசாங்கம் முடிவு செய்தது. இந்த அறிவிப்பு திரு. ரங்க அய்யரின் மசோதா சம்பந்தமாக மத்திய சட்டமன்ற காங்கிரஸ் உறுப்பினர்கள் இதுவரை கடைப்பிடித்து வந்த போக்கில் ஒரு திடீர் மாற்றத்தை ஏற்படுத்தி விட்டது. அவர்கள் அனைவரும் ஒன்றுபோல் மசோதா வுக்கு எதிராகக் குரல் எழுப்பினர்; மசோதாவை மேற்கொண்டு ஆதரிக்கவும் மறுத்துவிட்டனர். வாக்காளர்களிடம் அவர்களுக்கிருந்த

அச்சமும் திகிலும் கிலியுமே இதற்குக் காரணம். திரு. ரங்க அய்யரின் நிலைமை மிகவும் பரிதாபகரமாக இருந்தது. கடைசியில் விஷத்தைக் கக்கி விட்டார்கள் என்று தமது நிலையை மிகக் கசப்பான மொழி யில் அவர் வெளியிட்டார். அவர் தமது நிலைமையை மிகத் தத் ரூபமாக எடுத்துரைத்தார் என்றே கூற வேண்டும். எனவே, அவரது உரையிலிருந்து ஒரு பகுதியை இங்கு வெளியிடுவதற்கு நான் எத் தகைய தயக்கமோ, மயக்கமோ கொள்ள வேண்டியதில்லை; எவ ருக்கும் விளக்கம் அளிக்க வேண்டியதில்லை. திரு. ரங்க அய்யர் தமது தீர்மானத்தை முன்மொழிந்து கூறியதாவது:

''ஐயா, தாழ்த்தப்பட்ட இனத்தவர் என்று அறியப் படுகிற மக்களுக்கு ஏற்பட்டுள்ள இடர்ப்பாடுகளை, தடங்கல்களை, இடையூறுகளை அகற்றும் பொருட்டு ஆலயப் பிரவேச மசோதா எனப்படும் மசோதாவை முன் மொழிவதற்கு இப்போது முன்வந்திருக்கிறேன். ஐயா, பின்கண்ட தீர்மானத்தை பிரரேபிக்கிறேன்:

''இந்து கோவில்களில் பிரவேசிப்பது சம்பந்தமாக தாழ்த்தப்பட்ட இனத்தவர் எனப்படுவோருக்குள்ள தடை களை அகற்றக் கோரும் இந்த மசோதா மாண்புமிகு சர். நிர்பேந்திர சர்க்கார், மாண்புமிகு சர். ஹென்றி கிரேய்க், பாய் பரமானந்த், ராவ் பகதூர் எம்.சி. ராஜா, திரு. டி.என். ராமகிருஷ்ண ரெட்டி, ராவ் பகதூர் பி.எல். பட்டீல் மற்றும் இம்மசோதாவைக் கொண்டு வருபவர் ஆகியோரடங்கிய பொறுக்குக் கமிட்டியின் பரிசீலனைக்கு முன்வைக்கப் பட வேண்டுமென்று முன்மொழிகிறேன்.

''கமிட்டியினர் இருவாரத்திற்குள் அறிக்கை சமர்ப் பிக்க வேண்டும்' என்ற வாசகத்தை உங்களது அனுமதி யோடு நீக்கி, தீர்மானத்தின் எஞ்சிய பகுதி பின்வருமாறு இருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்:

'கமிட்டியின் கூட்டம் கூட்டப்படுவதற்கு ஐந்து உறுப்பினர்கள் பிரசன்னமாகி இருப்பது அவசியம்.'

''ஐயா, இந்தத் தீர்மானத்துக்கு நான் முன்னறிவிப்பு தந்தபோது, இன்னும் இரு வாரத்தில் நாம் பதவியில் இருக்க மாட்டோம் என்று நினைக்கவில்லை. ஆதலால்

இந்தத் தீர்மானத்திற்குள்ள குறுகிய காலவரம்பை நான் உணர்கிறேன்; இத்தீர்மானத்தைப் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்புவதற்குக் கூட அவகாசம் இருக்காது என்பதையும் அறிவேன். எனினும், இந்த விஷயம் குறித்து நமது கருத்துக்களை வெளியிட இது வாய்ப்பளிக்கிறது என்று கருதுகிறேன்.

''திரு. முதலியார் உரையாற்றியபோது நான் குறுக்கிட்டமைக்காக திரு. சத்தியமூர்த்தியிடம் மன்னிப்பு கேட்க நான் கடமைப்பட்டுள்ளேன் என்பதை ஏற்கெனவே தெரிவித்திருக்கிறேன். திரு. முதலியார் மிக வேகமாக உரையாற்றிக் கொண்டிருந்தமையால், என் நிலையை முழுவதுமாக விளக்கிக் கூற இயலாது போயிற்று. அவ்வாறு நான் செய்திருந்தால், அது அவருக்குப் பாதகமானதாக இருந்திருக்கும். ஆலயப் பிரவேச மசோதாவை எக்காலத்திலும் ஆதரித்திராத திரு. சத்தியமூர்த்தி காங்கிரஸ் அதனைக் கைகழுவும்படிச் செய்வதில் வெற்றியடைந்திருக்கிறார் என்றே கூற வேண்டும். சென்னை ஹிந்து பத்திரிகையில் ஆகஸ்டு 16 ஆம் தேதியிட்டு திரு. சி. ராஜகோபாலாச்சாரி தமது கைப்பட எழுதி வெளியிட்ட அறிக்கையை இங்கு உங்களுக்கு வாசித்துக் காட்ட விரும்புகிறேன். ஹிந்து மிகவும் பொறுப்பான செய்தி ஏடு என்பது உங்கள் அனைவருக்கும் தெரியும். அவர் அளித்த பேட்டி தந்தி மூலம் அளித்ததன்று; மாறாக அவர் கைப்படவே எழுதித் தந்த அறிக்கையாகும். எனவே திரு. ராஜகோபாலாச்சாரியரின் இந்த அறிக்கையைத் துல்லியமானதாக எடுத்துக்கொள்ளலாம் என்று கருதுகிறேன். தீண்டப்படாதோரின் நலன்களைக் காட்டிக் கொடுத்தமைக்காக பொதுமக்களிடம் திரு. ராஜகோபாலாச்சாரியர் மன்னிப்பு கேட்டு வருகிறார். மகாத்மா காந்தியின் பிரதான தளபதி என்ற முறையில் அவரது நம்பிக்கைத் துரோகத்தை இங்கு பதிவு செய்வது அவசியம். அவர் கூறுகிறார்:

''சமய வினைமுறைகளில் எத்தகைய சட்டரீதியான தலையீட்டையும் காங்கிரஸ் ஆதரிக்காது என்று காங்கிரஸ் வேட்பாளர்கள் உறுதிமொழி அளிப்பார்களா என்று சில சனாதனிகள் கேட்கிறார்கள். பல்வேறு விஷ

யங்கள் குறித்து அவற்றில் சம்பந்தப்பட்டவர்கள் இதே போன்று கேள்விகள் கேட்கக் கூடும். காங்கிரஸ் வேட்பாளர்களிடம் மட்டுமே இத்தகைய கேள்விகளைக் கேட்பதும், மற்ற கட்சிகளைச் சேர்ந்த வேட்பாளர்களிடமும் சுயேட்சை வேட்பாளர்களிடமும் இதேபோன்று விளக்கம் கோராததும் காங்கிரசுக்கு அளிக்கப்படும் மிகப் பெரிய பாராட்டு என்றே கூறவேண்டும்.''

''இவ்வாறு கூறுகிறார் ஸ்ரீமான் ராஜகோபாலாச்சாரியார். அவர் குறிப்பிட்ட பாராட்டைப் பின்தொடர்ந்து செல்லுங்கால், அவர் தெரிவித்த மக்கள் விரும்பாத ஒரு நடவடிக்கைக்கு எதிராகப் பொதுஜன அபிப்பிராயத்தைக் கிளர்த்தி விடாமல், இதோ ஒரு மாபெரும் காங்கிரஸ் தலைவர் தமது மருமகன் தேவதாஸ் காந்தியுடன் என் வீட்டின் முன் தர்ணா செய்தார்; அவருடைய மருமகனோ டில்லியில் என்னை அடிக்கடிச் சந்தித்து 'இந்த சட்ட நடவடிக்கைக்கு நாங்கள் கூட்டு ஆதரவை தருகிறோம்' என்று கூறினார் - ஷேக்ஸ்பியரின் மொழியில் கூறுவதானால் 'நண்டுபோல்' பின்வாங்கும் ஒரு மனிதரை இதோ பார்க்கிறோம். ஒரு பரந்த துறையின் பல்வேறு பிரச்சினைகளில் அரசியல் கட்சிகள் வேறுபட்ட கொள்கைகளைக் கொண்டுள்ளன என்று தென்புலத்தைச் சேர்ந்த இந்த சூட்சுமமான, நுட்பமான மூளையிலிருந்து விளக்கம் வருகிறது:

'எனினும் எந்த ஒரு சமயத்திலும் இவை அனைத்துமே தேர்தல் பிரச்சினைகள் ஆக்கப்படுவதில்லை'.

''ஐயா, இந்த காங்கிரஸ் தலைவர் தாமே உசுப்பி விட்ட பொதுஜன அபிப்பிராயத்தை எதிர்கொள்ள அஞ்சுகிறார்.

''ஐயா, காங்கிரஸ்காரர்கள் என்ன அடிமைகளா, தொழும்பர்களா?

'வீழ்ந்துபட்டவர்களுக்காக, நலிந்தவர்களுக்காக பேச அஞ்சுபவர்கள் அடிமைகளே'.

''மில்டன் கூறியதுபோல், 'சொன்னதை மாற்றிச் சொல்லுபவர்கள் பொய்யர்கள் அல்ல, சுத்தக் கோழைகள்...''

''பொதுத் தேர்தலுக்கு முன்னர் திரு. ராஜகோபாலாச்சாரியர் ஒவ்வொரு மேடையிலும் பின்கண்டவாறு கூறியதை இப்போது மறுத்துக் கூறுகிறார்:

''திட்டமிட்டு நன்கு வரையறுக்கப்பட்ட கொள்கையுடன் காங்கிரஸ் வேட்பாளர்கள் இந்தத் தேர்தலில் வாக்காளர்களிடம் செல்லுகின்றனர்''.

''வேறுவிதமாகச் சொன்னால், தாங்களே வழிதவறி இட்டுச் சென்ற வெகுஜனங்களின் தப்பெண்ணங்களுக்குத் துதிபாடி துணைபோகும் நோக்கத்தோடு அவர்கள் வாக்காளர்களிடம் செல்லுகின்றனர்; இதனால் தங்களைத் தாங்களே புதைசேற்றில் அமிழ்த்திக் கொள்கின்றனர். இந்நிலைமையில் வில்லிங்டன் பிரபுதான் அவர்களுடைய உதவிக்கு வந்தார்; இந்த சட்டமன்றத்தைக் கலைத்து, அவர்களுக்குக் கைகொடுத்து புதைசேற்றிலிருந்து அவர்களைக் கரையேற்றினார்; அரசியலமைப்பை அனுசரித்துப் போகும் வைசிராய் என்ற முறையில் அரசியலமைப்புக் கோட்பாடு என்னும் புகலிடத்தில் தஞ்சம் புகுந்துகொள்ளும் வாய்ப்பினை அவர்களுக்கு வழங்கினார். எனவே, அவர்கள் தங்களது பற்றுக்கோள்களிலிருந்து, பிரகடனப்படுத்தப்பட்ட கோட்பாடுகளிலிருந்து பின்வாங்கி, எவ்வளவு முடியுமோ, அவ்வளவு அதிக எண்ணிக்கையில் சட்டமன்றத்திற்குத் திரும்பி வருவதற்கு எல்லாவிதமான சூழ்ச்சிகளையும் செய்துவருகின்றனர். அவர்கள் ஆலயப் பிரவேச மசோதாவையோ, தீண்டாமை ஒழிப்பையோ பின்பற்றிச் சென்றிருப்பார்களேயானால் அவர்கள் ஏராளமான வாக்குகளை இழந்திருப்பார்கள்; ஏனென்றால் பொதுமக்கள் ஆதரவைப் பெறாத பிரச்சினை இது. நான் கூறியதை அச்சமயம் மகாத்மா காந்தி பகிரங்கமாக மறுதலித்தாலும் நான் கூறியதிலிருந்து பின்வாங்காமல் அதையேதான் கூறினேன்; பாலக்காட்டில் என் சகோதரர் இல்லத்தில் சங்கராச்சாரியார் தங்கியிருந்த போதும் அதையேதான் கூறினேன். மசோதாவை

எதிர்ப்பதற்கு ஒரு தூதுக்குழுவினருடன் என் சகோதரர் வைசிராயிடம் வந்தார். ''மலபாரில் சீர்திருத்தவாதிகள் பெரும்பான்மையினராக இல்லை என்பது எனக்குத் தெரியும்'' என்று அப்போது கூறினேன். சீர்திருத்தவாதிகள் எங்குமே பெரும்பான்மையினராக இல்லை; எனினும் பெரும்பான்மையினரை அறிவுறுத்தித் தங்கள் வழிக்கு ஈர்க்க முடியும் என்று சீர்திருத்தவாதிகள் நம்புகின்றனர். மலபாரில் கோவில்களுக்குச் செல்லும் மக்களில் பெரும் பாலோர் கோவில்களுக்குள் தீண்டப்படாதோரை அனு மதிப்பார்கள் என்று நான் நம்பவில்லை. எனினும் அவர் களை எதிர்த்துப் போராட நான் தயாராக இருந்தேன்; அவர் களுடன் வாதாடி, அவர்களை என் வழிக்குத் திருப்பி, தீண்டப்படாதோரின் நலன்களில் அவர்களை அக்கறைக் கொள்ளும்படிச் செய்வதற்குப் பெருமுயற்சி எடுத்துக் கொள்வதென முடிவு செய்தேன்; ஏனென்றால் தீண்டப் படாதோர் என் சமூகத்தின் ஒரு பிரிக்க முடியாத அங்கம், உயிருள் உயிர், ஜீவனுள் ஜீவன் என்று திடமாக நம்பு கிறேன். ஐயா, என் சமூகத்தில் மூன்றிலொரு பகுதியினர் ஒதுக்கப்பட்டிருந்தால், விலக்கப்பட்டிருந்தால் அந்த சமூகம் நீடித்திருப்பதற்கு, உயிரோடிருப்பதற்கு அருகதை யற்றது என்று எப்போதுமே நான் உணர்ந்து வந்திருக் கிறேன்; இப்போதும் அவ்வாறே உணர்கிறேன். வேத காலத் தில் தீண்டாமை இருந்ததில்லை; அப்படிப்பட்ட கடந்த காலத்தின் மீது இந்த சமுதாயத்தினது மகத்தான எதிர் காலத்தை நிர்மாணிக்கும் நோக்கத்தோடு, இந்த இந்து சமுதாயத்தை ஒன்றுபடுத்தும், ஒற்றுமைப்படுத்தும் நோக் கத்தோடு தீண்டப்படாதோரின் நலனுக்காகப் போராட முன்வந்திருக்கிறேன். ஆனால் நேற்றுவரை தீண்டாமை ஒழிப்புப் பற்றி வானளாவ, வாய்கிழியப் பேசிவந்த காங் கிரஸ்காரர்கள் இப்போது இந்தப் போராட்டத்தில் ஏன் இருக்கவில்லை என்பதற்கு ஏதோ நொண்டிச் சமாதானங் கள் கூறிவருவதைப் பார்க்கிறேன். ராஜா பகதூர் கிருஷ்ண மார்ச்சாரியார், கொல்லங்கோடு ராஜா சாகேப் அல்லது சர் சத்திய சரண் முகர்ஜி போன்ற நாட்டின் பல்வேறு சனாதனக் குழுக்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவோர் விரும்பியதைப் போன்றே ஆலயப் பிரவேச மசோதாவின் சவப்பெட்டியில் திரு. ராஜகோபாலாச்சாரியார் கடைசி ஆணியை அறைந்துவிட்டார்.

''ஐயா, ஆங்கிலேய-வெறுப்பு, பிரிட்டிஷ்-எதிர்ப்பு போன்ற பிரச்சினைகளில் அன்றி 'வேறு எந்தப் பிரச்சினையின் அடிப்படையிலும்' அதாவது ஆலயப் பிரவேசப் பிரச்சினையில் சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுவரக் கூடாது என்று தாங்கள் கேட்டுக் கொண்டிருப்பதாக திரு. ராஜகோபாலாச்சாரியார் கூறுகிறார். இவ்வாறு அவர் கூறுவதற்குக் காரணம் உண்டு: பொதுமக்களின் உணர்வைக் கிளர்த்தி விட்டு காங்கிரஸ் காரர்கள் அதனைத் தங்கள் சுயநலத்திற்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கின்றனர்; அகிம்சையின் பெயரால், ஏன் இன்னும் சொல்லப்போனால் மதத்தின் பெயரால் கூடிய மட்டும் மிகுந்த வெறுப்புணர்வைக் கிளர்த்தி விட்டுள்ளனர்; ஏனென்றால் அகிம்சை என்பதற்கு சில சமயங்களில் மத சாயம் பூசப்படுகிறது; நாட்டில் இத்தகைய அவநம்பிக்கை உணர்வைத் தோற்றுவித்து வளர்த்து விட்ட நிலைமையில், பெரிய, தெளிவான, உயர்ந்த பிரச்சினையின் அடிப்படையில் அதாவது தீண்டாமை ஒழிப்புப் பிரச்சினையின் அடிப்படையில் தேர்தல் களத்தில் இறங்கினால் அத்தகைய சூழ்நிலைமை தங்களுக்கு உதவிகரமாக இருக்காது எனக் கண்டு அவர்கள் திசை திரும்பிச் செல்லுகின்றனர்; தங்கள் பிரகடனம் செய்த கொள்கைகளையே குழிதோண்டிப் புதைத்துவிட்டுப் பின்னோக்கி ஓடுகின்றனர்:

'நேர்மையின் பக்கம் இருவர் அல்லது மூவருடன் இருப்பதற்குத் துணிச்சல் இல்லாதவர்கள் கோழைகள்.''

''அடுத்து, காந்திஜியின் பிரதான தளபதியான அவர் மேலும் பின்வருமாறு கூறுகிறார்:

''தேர்தல்களில் வெற்றி பெற்றால் வேறு எந்தப் பிரச்சினைகளிலும் வாக்காளர்களின் உரிமைக் கட்டளை கிட்டும் என்று நாங்கள் நம்பவில்லை''.

''அதாவது வேறுவிதமாகச் சொன்னால் ஆலயப் பிரவேச மசோதாவுக்கு ஆதரவாக அவர்கள் வாக்காளர்களின் உரிமைக் கட்டளையைப் பெறவில்லை என்று இதற்குப் பொருளாகும். மிகவும் கூக்குரலிட்டுக் கொண்டு

எங்கள் இல்லங்களுக்கு ஓடோடிவந்து, எங்கள் ஆதரவை மன்றாடிக் கேட்டவர் இந்த மனிதர்; ஆலயப் பிரவேச மசோதாவைக் கைவிட்டு விடாதீர்கள், அதற்காக தொடர்ந்து முயற்சி எடுத்துக் கொள்ளுங்கள் என்று எங்களிடம் இறைஞ்சிக் கேட்டுக்கொண்டவர்கள் இவரும் ஏனைய காங்கிரஸ் 'லட்சியப் பிச்சைக்காரர்களும்'. அப்படிப்பட்டவர்கள் இன்று என்ன செய்கிறார்கள்? தீண்டப்படாதோரின் நலன்களுக்கு இரண்டகம் செய்வதோடு அவர்கள் நிற்கவில்லை; மகாத்மாவின் கோட்பாடுகளுக்கே வஞ்சகம் செய்கின்றனர். இத்தனைக்கும் தீண்டப் படாதோரின் நலனுக்காக, மேம்பாட்டுக்காக உண்ணா விரதம் மேற்கொண்டு, வகுப்புத் தீர்ப்பு சம்பந்தமாக அவர்களுக்கு மேலும் சலுகைகள் பெற்றுத் தந்தவர் மகாத்மா. எனவே, தீண்டாமைப் பிரச்சினையில் இதற்கு நேரடிச் சம்பந்தம் உண்டு என்பதையும், இப்பிரச்சினைக்கு தீர்வு காணும் பொருட்டு மகாத்மா, தலைசிறந்த மகாத்மா நாடு முழுவதும் பிரயாணம் செய்ய விரும்பினார் என்பதையும் நாம் அறிவோம். ஆனால் அப்படியிருக்கும்போது இன்று என்ன நடைபெறுகிறது? சட்டமன்றங்களைப் பகிஷ்கரிப்பதாக ஆடம்பர ஆர்ப்பாட்டமாக ஆர்ப்பரித்துவிட்டு, பிறகு பதவி வேட்கை காரணமாக அதே சட்டமன்றங்களில் பிரவேசிக்க நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு அலைந்ததன் மூலம் முதலில் அவரைக் காட்டிக் கொடுத்த காங்கிரஸ் இப்போது அவருடைய சம்பந்தியான ராஜகோபாலாச்சாரியாரின் உதவியோடு மேலும் அவருக்குத் துரோகம் செய்துள்ளது; மக்களின் உரிமைக் கட்டளை இல்லாமல், தீண்டாமை ஒழிப்புப் பிரச்சினையிலும் ஆலயப் பிரவேச மசோதா விஷயத்திலும் மேற்கொண்டு நடவடிக்கை எடுத்துக்கொள்ளப் போவதில்லை என்று அது அறிவித்துள்ளது!

''ஐயா, ராஜா பகதூர் கிருஷ்ணமாச்சாரியாருக்கும் ஸ்ரீமான் ராஜகோபாலாச்சாரியாருக்கும் இடையே என்ன வேறுபாடு இருக்கிறது என்று கேட்கிறேன். 'மக்களின் ஆணையைப் பெற்று, பிறகு வந்து சட்டம் இயற்றுங்கள்' என்று ராஜா பகதூர் கிருஷ்ணமாச்சாரியார் எப்போதுமே கூறிவந்திருக்கிறார். ஐயா, அவர் ஒரு கோழையல்ல; ஒரு மாபெரும் சனாதனி, தம்மை குறைகூறுபவர்களைத் தீரத்

துடன் எதிர்த்து நிற்க அவர் தயாராக இருக்கிறார். ஆனால் இவர்களோ சனாதன தர்மம் நிலைபேறுடைய, சாசுவத மான மெய்ம்மை என்பதை மறந்து, அதனை நாடெங் கும், மூலை முடுக்கெங்கும் இழித்துப் பழித்து வருகின் றனர். சனாதனிகள் இந்தப் போக்கை ஏற்கமாட்டார் கள்; ஏனென்றால் சனாதன தர்மம் நித்தியமான உண்மை, அந்த உண்மைக்கு வாய்மையற்றவர்கள்தான் பச்சைத் துரோகம் செய்வார்கள்! நமது தேசிய லட்சியத்தை எய்துவதற்கு வகை செய்திருக்கக் கூடிய எத்தனையோ லட்சியங்களைக் காற்றில் பறக்க விட்டுவிட்டு, தங்கள் மானத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக தீண்டப்படாத வர்களின் பிரச்சினையை அரைமனத்தோடு எடுத்துக் கொண்டுள்ள மாபெரும் காங்கிரஸ் தலைவர்கள் - இதில் மகாத்மா காந்தி மட்டும் விதிவிலக்கு - வரவிருக்கும் தேர்தல்களில் காங்கிரசின் பிரதம ஒருங்கிணைப்பாள ரான ராஜகோபாலாச்சாரியாரின் மூலம் பின்வருமாறு கூறச் செய்துள்ளனர்:

'இதனை அதிகாரப்பூர்வமான காங்கிரஸ் மசோதா வாக ஆக்குவதற்கு முன்னர் இந்த விஷயத்தை அனைத் துக் காங்கிரஸ்காரர்களும் உரிய முறையில் அலசி ஆராய்ந்து முடிவுக்கு வரக் கடமைப்பட்டுள்ளனர்'.

''தீண்டப்படாதோருக்கு இழைக்கப்பட்டிருக்கும் இந்தத் துரோகத்தை மனத்திற் கொண்டு அரசியலமைப்பு ஆதரவாளர்கள் அனைவரும், அவர்கள் இந்துக்களாயினும் முஸ்லீம்களாயினும் ஒன்றுபடுவார்கள் என்று நம்பு கிறேன். வகுப்புப் பிரச்சினைகளில் பின்னால் கருத்து வேறுபாடு கொள்ள அவர்கள் இணங்கக் கூடும், ஆனால் அவர்கள் இப்போது ஒன்றுபட்டு காங்கிரசுக்கு எதிராக ஒரு மாபெரும் போராட்டத்தை நடத்துவார்கள்; வேஷதாரி களின் இந்த அமைப்பை மண்டியிடச் செய்வார்கள். ஐயா, தீண்டப்படாதவர்களுக்கு, தாழ்த்தப்பட்ட மக்க ளுக்குக் கொடிய துரோகம் இழைக்கப்பட்டு விட்டதாகக் கருதுகிறேன்; மகாத்மா காந்தி இந்த இயக்கத்தைத் தொடங்குவதற்கு முன்னால், அல்லது திரு. இராஜகோபா லாச்சாரியார் டில்லியில் வீடு வீடாக ஏறியிறங்குவதற்கு

முன்னால் இந்த இயக்கத்தில் நான் நம்பிக்கையும் பற்று தலும் கொண்டிருக்கா விட்டால் நான் இந்த மசோதாவை முன்மொழிவதற்கு இங்கு வந்திருக்க மாட்டேன்.''

## VI

புகழின் உச்சாணிக் கொம்பிலிருந்து ஒரு பெரும் வீழ்ச்சியை, சறுக்கலை இங்கு காணுகிறோம்! எத்தகைய இழிவினும் இழிவான அவமானகரமான பின்னடைவு! திரு. காந்தி இதனை எவ்வாறு எடுத்துக்கொண்டார்? 1932 நவம்பர் 4 ஆம் தேதி வெளியிட்ட ஓர் அறிக்கையில் திரு. காந்தி கூறியதாவது:

''கிராமங்களிலுள்ள தீண்டப்படாதவர்கள் தங்களைப் பிணைத்திருக்கும் தளைகள், சங்கிலிகள் உடைத்து நொறுக்கப்பட்டு விட்டன, ஏனைய கிராம மக்களுக்குத் தாங்கள் எவ்வகையிலும் தாழ்ந்தவர்கள் அல்ல, பிற கிராமவாசிகள் வழிபடும் அதே தெய்வத்தையே தாங்களும் வழிபடுகிறோம், சக கிராமவாசிகளுக்கு இருக்கும் அதே உரிமைகளையும் சலுகை களையும் தாங்களும் பெற உரிமை படைத்தவர்கள் என்பதை உணரும்படிச் செய்ய வேண்டும்.

''ஒப்பந்தத்தின் இந்த ஜீவாதாரமான ஷரத்துகள் சாதி இந்துக்களால் செயல்படுத்தப்படவில்லை என்றால் நான் ஆண்டவனையும் மனிதனையும் எதிர்கொள்வதற்கு எப்படி உயிரோடிருக்க முடியும்? ஒப்பந்தத்தின் ஷரத்துக்களை சாதி இந்துக்கள் உரிய முறையில் நடைமுறைப்படுத்துவார்கள் என்பதற்கு என்னை நீங்கள் பிணையாகக் கருதலாம் என்று டாக்டர் அம்பேத்கர், ராவ் பகதூர் எம். சி. ராஜா மற்றும் ஒடுக்கப்பட்ட இனத்தவரைச் சேர்ந்த ஏனைய நண்பர்களிடம் கூறியிருக்கிறேன். ஒருக்கால் உண்ணாவிரதம் நடைபெறுமானால், சீர்திருத்தத்தை எதிர்ப்போரை நிர்ப்பந்தப்படுத்துவதாக அது இருக்காது, மாறாக என்னுடைய தோழர்களை அல்லது தீண்டாமையை ஒழிப்பதற்குக் கங்கணம் கட்டிக் கொண்டிருப்

போரை செயல்படும்படித் தூண்டுவதை நோக்கமாக அது கொண்டிருக்கும். அவர்கள் தங்கள் வாக்குறுதிகளை மீறி னாலோ, அவற்றைச் செயல்படுத்தும் எண்ணம் அவர் களுக்கு இல்லை என்றாலோ அல்லது அவர்களது இந்து மதப் பற்று வெறும் ஏமாற்று வித்தை என்றாலோ நான் உயிரோடிருப்பதில் அர்த்தமில்லை.''

இதனைத் திரும்பத் திரும்பக் கூறுவதில் அவர் என்றும் சளைத் ததில்லை. இந்துக் கோவில்களிலிருந்து தீண்டப்படாதவர்களை விலக்கிவைப்பதை தமது ஆன்மாவின் வேதனை என்று அவர் வரு ணித்தார். அவ்வாறாயின் இது சம்பந்தமாக அவர் என்ன செய்தார்? ஹரிஜன ஆலயப் பிரவேசத் திட்டம் நிறைவேறவில்லை என்றால் வாழ்க்கையில் எனக்கு எந்தப் பிடிப்பும் இல்லை என்று கூறிய அவர் ராஜகோபாலாச்சாரியர் அந்தத் திட்டத்துக்கு இரண்டகம் செய்த போது அதனைக் கண்டித்தாரா? தேர்தலில் வெற்றி பெறுவதற்காக காங்கிரஸ் செய்த இந்தத் துரோகத்தை திரு. காந்தி கண்டிப்பார் என்றுதான் பலரும் எதிர்பார்த்தனர்; இது முற்றிலும் இயல்பு. ஆனால் உண்மையில் இதற்கு நேர்மாறாகத்தான் நடைபெற்றது. திரு. ராஜ கோபாலாச்சாரியரைக் கண்டிப்பதற்குப் பதிலாக, அவரது சீற்றம் திரு. ரங்க அய்யர் மீது பாய்ந்தது. அவர் செய்த குற்றம்தான் என்ன? மசோதாவுக்கு அளித்து வந்த ஆதரவை திடீரென்று திரும்பப் பெற்றுக் கொண்டதற்காக காங்கிரஸ் கட்சியை வன்மையாகக் கண்டித்ததே அவர் செய்த குற்றம்! இது சம்பந்தமாக 1931 ஆகஸ்டு 31 ஆம் தேதிய ஹரிஜன் இதழில் திரு. காந்தி எழுதியதாவது:

''ஆலயப் பிரவேச மசோதாவின் பிதாமகர் கையில் அது பட்டுள்ள சீரழிவை விட அந்தக் கேடு பயக்கும் மசோதாவை ஆழக் குழிதோண்டிப் புதைப்பதே சிலாக் கியம். அது சீர்திருத்தவாதிகளால், அவர்கள் சார்பில் தயா ரிக்கப்பட்ட மசோதா அல்ல. உண்மையில், இம் மசோதா வின் கர்த்தா சீர்திருத்தவாதிகளுடன் கலந்து பேசி, அவர் களது ஆலோசனையுடன் இதனைத் தயாரித்திருக்க வேண்டும். எனக்குத் தெரிந்தவரை அவர் காங்கிரஸ்காரர் கள் மீது இவ்வளவு வக்கிரமாக அனலும் கனலும் கக்கு வதற்கு எத்தகைய முகாந்தரமுமே இல்லை. இன்னும் சொல்லப்போனால் 1932 செப்டம்பர் 25 ஆம் தேதி பண்டித மாளவியாஜி தலைமையில் பம்பாயில் நடைபெற்ற இந்துக்களின் பிரதிநிதிகளின் கூட்டத்தில் ஏற்கப்பட்ட

> பிரகடனத்தில் மதம் சம்பந்தப்பட்ட இத்தகைய ஒரு நடவடிக்கை மேற்கொள்வது அவசியம் என்று வலியுறுத்தப்பட்டது. ஹரிஜன் இதழில் ஒவ்வொரு வாரமும் இந்தப் பிரகடனம் பிரசுரிக்கப்பட்டு வருவதை இப்பிரச்சினையில் ஆர்வமும் அக்கறையும் உள்ளவர்கள் படிக்கலாம். எனவே, ஒவ்வொரு இந்துவும், அவன் சாதி இந்துவாக இருந்தாலும் சரி, ஹரிஜனாக இருந்தாலும் சரி இப்படிப்பட்டதொரு நடவடிக்கையில் ஆர்வம் கொண்டிருக்கிறார்கள் என்பது தெளிவு. இது இதர இந்துக்களை விட காங்கிரஸ் அதிகம் அக்கறை காட்டும் நடவடிக்கை அல்ல. ஆகவே, காங்கிரசின் பெயரை விவாதத்தில் இழுத்திருப்பது துரதிர்ஷ்டவசமானது, உணர்ச்சிவசப்படாமல் அமைதியான முறையில் மசோதா ஆராயப்பட வேண்டும்.''

ஆலயப் பிரவேசப் பிரச்சினையை ஒரு விந்தையான, விபரீதமான அரசியல் செப்படிவித்தை என்றே கூறவேண்டும்! திரு. காந்தி ஆரம்பத்தில் ஆலயப் பிரவேசத்திற்கு எதிராக இருக்கிறார். தீண்டப்படாதவர்கள் அரசியல் கோரிக்கைகளை முன் வைக்க ஆரம்பித்ததும், அவர் தமது நிலையைத் திடீரென மாற்றிக் கொண்டு ஆலயப் பிரவேசத்தின் தீவிர ஆதரவாளராக மாறுகிறார். பிறகு, இதே நிலையை இறுதிவரை மேற்கொண்டால் தேர்தலில் காங்கிரசைத் தோற்கடிப்போம் என்று இந்துக்கள் அச்சுறுத்தியதும் காந்தி மீண்டும் ஒரு புதிய அவதாரம் எடுக்கிறார். அரசியல் அதிகாரத்தை காங்கிரசின் கைகளில் தக்க வைத்துக் கொள்ளும் பொருட்டு ஆலயப் பிரவேசத் திட்டத்தைக் கைகழுவி விடுகிறார். இது வாய்மையா, நேர்மையா? இது மெய்ம்மையில் கொண்டுள்ள பற்றுறுதியைக் காட்டுகிறதா? திரு. காந்தி அடிக்கடி குறிப்பிடும் 'ஆன்மாவின் சோதனை' என்பது வெறும் ஆடம்பர ஆர்ப்பாட்ட சொற்சிலம்பம் தானா?



## இயல் 5

# அரசியல் அருளிரக்கம்

# தீண்டப்படாதவர்களைக் கருணையால் கொல்ல காங்கிரஸ் திட்டம்

1932 செப்டம்பர் 30 ஆம் தேதி பம்பாய் இந்துக்களின் கூட்டம் ஒன்று கவாஸ்ஜி ஜெஹாங்கீர் மண்டபத்தில் பண்டித மாளவியா தலைமையில் நடைபெற்றது; கூட்டத்தில் ஏராளமானோர் கலந்து கொண்டனர். பல்வேறு மாகாணக் கேந்திரங்களில் கிளைகளுடன் கூடிய ஓர் அகில இந்திய தீண்டாமை எதிர்ப்புக் கழகத்தை அமைப்பதே இக்கூட்டத்தின் நோக்கம். கழகத்தின் தலைமை நிலையம் டில்லியில் இருக்கும். திரு. ஜி.டி. பிர்லா தலைவராகவும், திரு. அமிர்தலால் வி. தாக்கர் பொதுச் செயலாளராகவும் இருப்பார்கள். அகில இந்திய தீண்டாமை எதிர்ப்புக் கழகம் திரு. காந்தியின் மூளையிலிருந்து உதித்த திட்டம். புனா ஒப்பந்தத்தின் நேரடி விளைவாக அவரது ஊக்குவிப்பிலிருந்து இது பிறந்தது. இது எப்படி இருந்தாலும் அது பிறந்தது முதலே அதனைத் தனது குழந்தையாக வரித்துக் கொண்டார். திரு. காந்தி செய்த முதல் காரியம் அதன் பெயரை மாற்றியதாகும். 1932 டிசம்பர் 9 ஆம் தேதி பத்திரிகைகளுக்கு விடுத்த ஓர் அறிக்கையில் இந்த அமைப்பு இனிமேல் தீண்டப்படாதோருக்கான சேவைக் கழகம் என அழைக்கப்படும் என மக்களுக்கு அறிவித்தார். ஆனால் இந்தப் பெயரும் திரு. காந்திக்கு ஏற்புடையதாக, சிறந்ததாகத் தோன்றவில்லை. வேறொரு பெயரை அவர் தேடிவந்தார். முதலாக, அதற்கு ஒரு புதிய பெயரை சூட்டத் தீர்மானித்தார். ஹரிஜன சேவா சங்கம் என அதனை அழைத்தார். தீண்டப்படாதோருக்கு சேவை செய்வதில் ஈடுபட்டிருப்போரின் கழகம் என்று இதற்குப் பொருளாகும். தீண்டப்படாதவர்களை ஹரிஜன் என்று வழக்கமாக திரு. காந்தி அழைப்பதால், இது இயல்பேயாகும். ஆனால் இந்தப் பெயர் மாற்றம் சைவர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் இடையே ஒரு சர்ச்சையைக் கிளர்த்தி விட்டது. ஹரி என்பது விஷ்ணுவின் நூறு

பெயர்களில் ஒன்று. அதேபோல் ஹரன் என்பது சிவனின் நூறு பெயர்களில் ஒன்று. ஹரிஜன் என்ற பெயரைத் தேர்ந்தெடுப்பதில் குறுகிய மனப்பான்மையுடன் பாரபட்சத்தோடு திரு. காந்தி நடந்து கொண்டுவிட்டார் என்று அவர் மீது குற்றம் சாட்டப்பட்டது. தீண்டப் படாதவர்கள் ஹரஜனங்கள் என்று அழைக்கப்பட வேண்டுமென்று சைவர்கள் வாதிட்டனர். திரு. காந்தி இதில் விட்டுக் கொடுக்க வில்லை; இந்தப் புதிய அமைப்பு தோன்றியதன் முதல் பலனாக தீண்டப் படாதவர்கள் ஒரு புதிய பெயரைப் பெற்றனர்.

1932 நவம்பர் 3 ஆம் தேதி திரு. பிர்லாவும் திரு. தாக்கரும் இந்த அமைப்பின் வேலைத் திட்டத்தையும் அந்த வேலைத் திட்டத்தை செயல்படுத்துவதற்கான ஏற்பாடுகள் குறித்தும் ஓர் அறிக்கையை வெளியிட்டனர்.

வேலைத்திட்டம் குறித்து அந்த அறிக்கையில் குறிப்பிடப் பட்டிருப்பதாவது:

> ''சனாதனிகளில் நியாய உணர்வு படைத்தவர்கள் சம பந்தி போஜனங்களையும் கலப்புத் திருமணங்களையும் எதிர்க்கும் அளவுக்கு தீண்டாமை அகற்றப்படுவதை எதிர்க்க வில்லை என்று கழகம் கருதுகிறது. குறியிலக்கு எல்லைக்கு அப்பாற் சென்று சீர்திருத்தங்களை மேற்கொள்வது கழகத் தின் நோக்கம் இல்லையென்பதால் இங்கு ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்தி விடுவது விரும்பத்தக்கதாக இருக்கும். அதா வது தீண்டாமையின் ஒவ்வொரு எச்சமிச்சத்தையும் அகற்று வதற்கு இணங்குவிப்பு முறையைக் கைக்கொண்டு சாதி இந்துக்களிடையே கழகம் பாடுபடும்; அதிலும் முக்கியமாக தாழ்த்தப்பட்ட இன மக்களை கல்வி, பொருளாதார, சமூக ரீதியில் கைதூக்கி விடுவது போன்ற ஆக்கபூர்வமான நோக் கமே அதன் பணியின் பிரதான திசைவழியாக இருக்கும்; தீண்டாமையை ஒழித்துக் கட்டுவதற்கு இதுவே பெரும் பங்குப்பணி ஆற்ற முடியும். இத்தகைய பணி ஆற்றப்படும் போது மிகவும் தீவிரமான சனாதனிகூட அதன்பால் பரிவும் ஒத்துணர்வும் காட்டாமல் இருக்க முடியாது. இப்படிப்பட்ட பணிகளை மேற்கொள்வதற்காகத்தான் பிரதானமாக கழகம் அமைக்கப்பட்டது. சாதி முறையை ஒழித்துக்கட்டுதல், சம பந்தி விருந்து போன்ற சமூக சீர்திருத்தங்கள் கழகத்தின் செயற்பாட்டு எல்லைக்கு அப்பாற்பட்டவை.''

இந்த வேலைத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்கு வசதியாக ஒவ்வொரு மாகாணத்தையும் பல யூனிட்டுகளாகப் பிரிப்பது என்றும், ஒவ்வொரு யூனிட்டையும் ஊதியம் பெறும் ஊழியர்கள் பொறுப்பில் விடுவது என்றும் தீர்மானிக்கப்பட்டது. ஒரு யூனிட் என்பது ஒரு மாவட்டத்தின் எல்லைக்குட்பட்டதாகவும் இருக்கலாம், இல்லாத தாகவும் இருக்கலாம். இரண்டு மாவட்டங்களை அல்லது மாகா ணங்களை இணைத்தும் அது உருவாக்கப்படலாம்.

ஓர் வருடத்திற்கான ஒரு பொதுவான வரவு செலவுத் திட்டப் பட்டியலையும் அந்த அறிக்கை வகுத்தளித்தது. அது பின்கண்ட முறையில் அமைந்திருந்தது:

''செலவினத்தில் மூன்றில் இரண்டு பங்குக் குறையாமல் ஆக்க நலப் பணிக்கும், எஞ்சிய மூன்றிலொரு பங்கு ஊழியர்களுக்கும் அவர்களது படிகளுக்கும் ஒதுக்கப்பட வேண்டும். ஊதியம் பெறும் இரண்டு ஊழியர்கள் குறைந்தபட்ச பணியாளர் குழாமாகக் கருதப்பட வேண்டும்; அவர்கள் மாதம் 15 முதல் 29 நாட்கள் கிராமங்களில் சென்று பணியாற்ற வேண்டும்.

| | |
|---|---|
| அலைந்து திரிந்து பணியாற்றும் இரண்டு ஊழியர்களுக்குப் பராமரிப்புப் படிகள் | ... 30 + 20 = 50 x 12 = 600 |
| இரண்டு ஊழியர்களுக்குப் பயணச் செலவுகள் | ... 2 x 10 x 12 = 240 |
| ஊழியர்கள் சம்பந்தமான சில்லறைச் செலவுகள் | ... 2 + 10 x 12 = 240 |
| பள்ளிக்கூடப் புத்தகங்கள், உபகாரச்சம்பளங்கள், பரிசுகள், கிணறுகள் பராமரிப்பு, ஹரிஜனப் பஞ்சாயத்துகள் அமைப்பு | 2,000 |
| மொத்தம் | 3,080 |

## நாடு முழுவதற்குமான வரவு-செலவுத் திட்டம்

இந்தியா முழுவதற்கும் செலவிடப்படக்கூடிய குறைந்தபட்ச மொத்த தொகையை தோராயமாக இங்கு தந்துள்ளோம். பணியின் பிரம்மாண்ட தன்மையைக் கருத்திற்கொண்டு பார்க்கும்போது இந்த

வரவு-செலவுத் திட்டம் மிதமானதேயாகும்; தேவையான நிதியைத் திரட்டுவது பொதுமக்களுக்கு எவ்வகையிலும் கடினமாக இருக்காது. இந்த நிதிக்கு அளிக்கப்படும் ஒவ்வொரு பைசாவும் மதிப்பு வாய்ந்த பங்களிப்பாக இருக்கும்; எனவே இந்த சீரிய லட்சியத்திற்குத் தங்களால் இயன்ற நன்கொடை வழங்குமாறு பொதுமக்களைக் கேட்டுக் கொள்கிறோம். ஒவ்வொரு மாகாணத்திற்கும் எத்தனை யூனிட்டுகள் இருக்க வேண்டும் என்பது ஒரு தற்காலிக யோசனையே ஆகும். இது விஷயத்தில் இறுதி முடிவு மாகாணக் குழுமங்கள்தான் எடுக்க வேண்டும்.

''பல்வேறு மாகாணங்களிலும் குறைந்தபட்சம் கீழ்க்கண்ட எண்ணிக்கையுள்ள யூனிட்டுகள் தேவைப்படும் என்று கணக்கிடப் பட்டுள்ளது; ஒவ்வொரு மாகாணத்தின் மாவட்டங்களின் எண்ணிக்கையும் யூனிட்டுகளின் எண்ணிக்கையும் கீழே தரப்பட்டுள்ளன:

| மாகாணத்தின் பெயர் | மாவட்டங் களின் எண் ணிக்கை | யூனிட்டு களின் எண் ணிக்கை |
|---|---|---|
| அசாம் … … … | 11 | 6 |
| ஆந்திரா … … … | - | 6 |
| வங்காளம் … … … | 26 | 15 |
| கல்கத்தா நகரம் … … … | 1 | 3 |
| பீகார் … … … | 16 | 16 |
| பம்பாய், பம்பாய் நகரம், நகர்ப்புற மாவட்டம் … … … | 1 | 3 |
| மகாராஷ்டிரம் … … … | 10 | 8 |
| குஜராத், பரோடா, கத்தியவார், கட்ச் மற்றும் இதர சமஸ்தானங்கள் 5 மற்றும் சமஸ்தானங்கள் 10, மத்திய மாகாணங்கள், பேரார் (மராத்தி) … … … | 9 | 7 |
| மத்திய இந்திய சமஸ்தானங்கள்… … | 11 | 8 |
| டில்லி மாகாணம் … … … | 1 | 2 |
| காஷ்மீர் … … … | 1 | 1 |
| மலபார், கொச்சி, திருவாங்கூர் … … | 4 | 10 |
| மைசூர், பம்பாயையும் சென்னையையும் சேர்ந்த கர்நாடக மாவட்டங்கள்… … | 8 | 10 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நிஜாமின் ராஜ்யம் | ... | ... | ... | 14 | 10 |
| ஒரிசா நிலப்பிரபுத்வ சமஸ்தானங்கள் 5 + 26 சமஸ்தானங்கள் | ... | ... | ... | | 8 |
| பஞ்சாப், வ.மே.எ.மாகாணம் மற்றும் பஞ்சாப் சமஸ்தானங்கள் 32 + 7 | | | | 39 | 10 |
| ராஜபுதன சமஸ்தானங்கள், ஆஜ்மீர்-மேர்வார் சமஸ்தானம் ... | | ... | 18 | | |
| பிர் மாவட்டம் | ... | ... | 1 | 19 | 9 |
| சிந்து | ... | ... | ... | 8 | 5 |
| தமிழ்நாடு | ... | ... | ... | 13 | 8 |
| ஐக்கிய மாகாணங்கள் | ... | ... | ... | 48 | 24 |
| | | மொத்தம் | | | 184 |

184 யூனிட்டுகளுக்கு மொத்தம் செலவு 3,000X 184 — 5,52,000

**மத்திய மற்றும் மாகாண அலுவலகங்கள்**

| | | | |
|---|---|---|---|
| மத்திய அலுவலகம், | 1000X 12 | = | 12,000 |
| மாகாண அலுவலகங்கள், | 4000X 12 | = | 48,000 |
| | மொத்தம் | | 60,000 |
| | ஒட்டுமொத்தம் | | 6,12,000 |
| | அல்லது உத்தேசமாக | | 6,00,000 |

மத்திய நிதியிலிருந்தும் அதேபோன்று மாகாணங்களிலும் மாவட்டங்களிலும் திரட்டப்படும் நிதிகளிலிருந்தும் இந்தத் தொகை பெறப்பட வேண்டும்.

தீண்டாமையை ஒழித்துக்கட்டுவதற்காகவும், ஹரிஜனங்களின் மேம்பாட்டிற்காகவும் ஆறு லட்சம் ரூபாய் திரட்டி நாடு முழுவதும் செலவிட உத்தேசிக்கப்பட்டுள்ளது என்பதை இதிலிருந்து தெரிந்துகொள்ளலாம். இந்தத் திட்டம் அதிலும் குறிப்பாக தீண்டப்படாதோரின் மேம்பாட்டுப் பணி பயனுறுதியுடையதாக இருக்க வேண்டுமானால், குறைந்தபட்சம் ஐந்தாண்டுக் காலத்துக்கு அது நீடிக்க வேண்டும். சமஸ்தானங்கள் உட்பட

22 மாகாணங்களுக்கு இத்திட்டம் வியாபிக்கப்பட்டிருப்பதை யும், 4 கோடி ஹரிஜனங்கள் இந்த நாட்டில் வாழ்கின்றனர் என்பதையும் கணக்கிலெடுத்துக் கொண்டு பார்க்கும்போது இது மிகச் சிறிய வரவு-செலவுத் திட்டமேயாகும்.''

ஹரிஜன சேவா சங்கத்தின் பணிக்கு வேண்டிய நிதியைத் திரட்டும் பொருட்டு திரு. காந்தி ஓர் அகில இந்திய சுற்றுப் பய ணத்தை மேற்கொண்டார்; அது 1933 நவம்பர் 7ல் தொடங்கி 1934 ஜுலை 29ல் முடிவடைந்தது. மொத்தம் 8 லட்சம் ரூபாய் வசூ லாயிற்று.[1] இந்தச் சுற்றுப்பயணத்தின் நோக்கம் தீண்டப்படாதோரின் நலனின்பால் இந்துக்களிடையே வளர்ச்சி ஆர்வத்தைக் கிளர்த்தி விடுவதும் அத்துடன் நிதி வசூலிப்பதுமாதலால் திரு. காந்தி தமது சுற்றுப்பயணத்தின் பெரும்பகுதியைக் கால்நடையாகவே மேற் கொண்டார். இந்தப் பயணத்துடனும் திரு. காந்தியின் நண்பர்கள் அளிக்கும் வருடாந்திர நன்கொடையுடனும் சங்கம் தனது பணியைத் தொடங்கிற்று.

ஹரிஜன சேவா சங்கம் 1932 செப்டம்பர் முதல் செயல் பட்டு வருகிறது. தீண்டப்படாதோரின் பரிதாபகரமான அவலை நிலை கண்டு திரு. காந்தியின் ஆன்மா அடைந்த வேதனைக்கும், அவர் களது மேம்பாட்டில் அவர் கொண்டுள்ள ஆர்வத்துக்கும் அக்கறைக் கும் இந்த சங்கம் மேன்மைமிக்க, மதிப்புவாய்ந்த சான்றாகக் கருதப் படுகிறது. சங்கத்தின் பொதுச் செயலாளர் பல அமெரிக்கர்களை டில்லியிலுள்ள சங்க இல்லத்தில் அன்போடு வரவேற்றிருக்கிறார்; அவர்களை இல்லம் முழுவதிலும் அழைத்துச் சென்று, தீண்டப் படாதோரின் நலனுக்காக, நல்வாழ்வுக்காக திரு. காந்தி எத்தகைய ஈடு இணையற்ற சமூக சேவை புரிந்திருக்கிறார் என்பதைக் காட்டி யிருக்கிறார். மிதித்துத் துவைக்கப்பட்ட, அடக்கி ஒடுக்கப்பட்ட மக்க ளுக்கு புரியப்பட்டிருக்கும் எத்தகைய ஆக்கநலப் பணியையும் எல் லோரும் வரவேற்கத்தான் வேண்டும்; இதல் எள்ளளவும் ஐய மில்லை. ஆனால் இதுபற்றி ஒருபோதும் எத்தகைய விமர்சனமுமே செய்யக்கூடாது என்று இதற்குப் பொருள் அல்ல. இது எவ்விதத் திலும் ஏற்கத்தக்கதல்ல. சங்கம் தொடக்கக் காலத்தில் எத்தகைய பணிகளைச் செய்து வந்திருக்கிறது என்பதை ஆராய்வது முற்றிலும் நியாயமானதே. சங்கத்தின் ஆண்டு அறிக்கைகளைப் படிப்போர் சங் கத்தின் பணி ஓரளவு நன்கு வரையறுக்கப்பட்ட வழிகளில் அமைந் திருப்பதைக் காண்பார்கள்.

1. ஹரிஜன், ஆகஸ்டு 3, 1934.

கல்வித்துறையில் இளங்கலை, தொழில்நுட்பம், தொழில் பயிற்சி முதலான வகுப்புகளுக்கு உபகாரச் சம்பளங்கள் ஏற்படுத்தித் தாழ்த்தப்பட்ட மக்களிடையே உயர் கல்வியை ஊக்குவிக்க சங்கம் முயற்சி எடுத்துள்ளது. உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்கும் உப காரச் சம்பளங்கள் அளிக்கிறது. கல்லூரிகளிலும், உயர்நிலைப் பள்ளி களிலும் பயிலும் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த மாணவர்களுக்கு சங்கம் மாணவர் இல்லங்களையும் அமைத்துத் தந்திருக்கிறது. மேலும், சுற்றுப்புறங்களில் பொதுப்பள்ளிக்கூடங்கள் இல்லாத இடங் களிலும் தீண்டாதோர் குழந்தைகளுக்கு இடம் அளிக்க மறுக்கும் பொதுப் பள்ளிக்கூடங்கள் இருக்கும் இடங்களிலும் தாழ்த்தப்பட்ட இனக் குழந்தைகளுக்குத் தனியாகத் தொடக்கக் கல்விப் பள்ளிக் கூடங்களை அது அமைத்துத் தந்திருக்கிறது. சங்கத்தின் கல்வித் துறை நடவடிக்கைகளில் இது மிக முக்கியமான பகுதியாகும்.

அடுத்ததாகச் சங்கத்தின் ஆக்கநல நடவடிக்கைகளைக் குறிப் பிட வேண்டும். தாழ்த்தப்பட்ட இனத்தவருக்கு வழங்கப்படும் மருத் துவ உதவி இந்தப் பிரிவில் வருகிறது. சங்கத்தைச் சேர்ந்த தீவிர ஊழி யர்களால் இப்பணி மேற்கொள்ளப்படுகிறது; அவர்கள் ஹரிஜனக் குடியிருப்புகளுக்குச் சென்று தாழ்த்தப்பட்டோரிடையே உள்ள நோயாளிகளுக்கும் உடல் நலிவுற்றோருக்கும் மருத்துவ உதவி அளிக் கின்றனர். தீண்டாதோர்களுக்கென சில மருந்தகங்களையும் சங்கம் நடத்துகிறது. இது சங்கத்தின் ஒரு சிறு நடவடிக்கையே ஆகும்.

சங்கத்தின் ஆக்கநல நடவடிக்கைகளில் மிகவும் முக்கிய மானது தண்ணீர் சப்ளை சம்பந்தப்பட்டது எனலாம். (1) தாழ்த்தப் பட்டோர் பயன்படுத்திக் கொள்வதற்காக புதிய கிணறுகளை அகழ் வதன் மூலமும் அல்லது குழாய்க்கிணறுகளை அமைப்பதன் மூல மும் (2) பழைய கிணறுகளைத் தூர்வாரி பழுதுபார்ப்பதன் மூலமும் (3) தீண்டாதோருக்கான கிணறுகளை வெட்டச் செய்வது அல்லது பழுதுபார்க்கச் செய்வதன் மூலமும் சங்கம் இப்பணியைச் செய் கிறது.

சங்கம் மேற்கொண்டுள்ள மூன்றாவது நடவடிக்கை பொரு ளாதாரம் சம்பந்தப்பட்டது. சங்கம் தொழில்பயிற்சிக் கூடங்களை நடத்துவதாகத் தெரிகிறது. இங்கு பயிற்சி பெற்ற அநேக கைவினை ஞர்கள் சொந்தமாகத் தொழில் நடத்திவருவதாகக் கூறப்படுகிறது. எனினும் தீண்டாதோர்களிடையே வெற்றிகரமாக கூட்டுறவுச்

சங்கங்களை அமைத்து அவற்றைக் கண்காணித்து வருவதில் சங்கம் கணிசமான பணி ஆற்றியுள்ளது என்று அறிக்கைகள் கூறுகின்றன.

## II

சங்கத்தின் பல்வேறு நடவடிக்கைகளை மேலே சுருக்கமாக விவரித்தோம். இந்த விவரங்களிலிருந்து தீண்டப்படாதோரின் நல னுக்காக, நல்வாழ்வுக்காக சங்கம் ஏராளமான பணம் செலவழித்து வந்திருக்க வேண்டும் என்றே எண்ணத் தோன்றும். ஆனால் உண்மை நிலவரம் என்ன? தீண்டப்படாதவர்களை மேம்படுத்தும் பணிக் காக பொதுவாக சங்கம் செலவிடக்கூடும் என எதிர்பார்க்கப்பட்ட தொகையே ஆண்டொன்றுக்கு ரூபாய் 6 லட்சம்தான். ஆனால் சங்கம் உண்மையில் எவ்வளவு செலவழித்து வருகிறது. 1941 மே மாதம் சங்கச் செயலாளர் சமர்ப்பித்த தமது அறிக்கையில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:[1]

> ''கடந்த 8 ஆண்டுகளில் சங்கத்தின் பல்வேறு கிளை களும் மத்திய அலுவலகமும் ஹரிஜனப் பணிக்காக முறையே 24,25,700 ரூபாயும், 3,41,667 ரூபாயும் செலவிட்டுள்ளன. பிரச்சினையின் தேவைகளையும் பரிமாணங்களையும் கருத் திற் கொண்டால் இது மிக அற்பத் தொகையேயாகும்.''

இந்த அடிப்படையில் சங்கத்தின் செலவினம் வருடம் ரூபாய் 3,45,888ஐ எட்டுகிறது; சங்கம் திரட்ட முடியும் என்று நம்பிக்கை கொண்ட தொகையில் இது 50 சதவிகிதமேயாகும். சங்கத்தின் ஆதர வாளர்கள் பூதக் கண்ணாடி வைத்துப் படம் பிடித்துக் காட்டுவது போல் அது அத்தனை பெரிதல்ல என்பது இதிலிருந்து தெரியவரும். சங்கம் மிகவும் மோசமான முறையிலேயே, இழுபறியான நிலை யிலேயே இயங்கி வருகிறது. 5 கோடி மக்கட் தொகை கொண்ட தீண்டப் படாதவர்களுக்கு வருடம் ரூ. 3 லட்சம் கொண்ட வரவு-செலவுத் திட்டம் என்பது தீண்டப்படாதோர் பெருமகிழ்ச்சி கொண்டு ஆர வாரிக்கக்கூடிய விஷயம் ஒன்றுமல்ல. பல்வேறு மாகாணங்களிலும் காங்கிரஸ் அரசாங்கங்கள் பதவியிலிருந்தபோது பெருந்தொகைகளை மான்யமாக அளித்திருக்கவில்லை என்றால் சங்கம் இந்த அளவுக்குக் கூடப் படாடோபம் காட்டிக் கொண்டிருந்திருக்க முடியாது.

---

1. அறிக்கை, பக்கம். 56

சங்கத்தின் மோசமான நிதிநிலைமைக்கு அதனைக் குறைகூற முடியாது. குற்றம் இந்துக்கள் மீதுதான் உள்ளது. தீண்டப்படாதோரின் மேம்பாட்டில் இந்துக்கள் எந்த அளவுக்கு அக்கறையின்றி இருக்கின்றனர் என்பதை சங்கத்தின் மோசமான நிலையிலிருந்து, தேக்க நிலையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். அரசியல் பணிகளுக்காக அவர்கள் 1 கோடி ரூபாய் வாரி வழங்கியுள்ளனர்; இதுதான் திலகர் சுயராஜ்ய நிதியாகப் பெயர் பெற்றுள்ளது. இதுமட்டுமன்று, பொது ஆக்க நலப் பணிக்கென அண்மையில் அவர்கள் 1 கோடி 15 லட்சம் ரூபாய் அள்ளித் தந்துள்ளனர்; இது கஸ்தூரிபாய் நினைவு நிதியாக உருவெடுத்துள்ளது. இவற்றுடன் ஒப்பிடும்போது ஹரிஜன சேவா சங்கத்துக்கு இந்துக்கள் அளித்துள்ள நிதி மிகமிக சொற்பமேயாகும்.

ஆக்கநலப் பணிகளின் தன்மை விஷயத்தில் சங்கத்துடன் ஒருவர் கருத்து வேறுபாடு கொள்ளலாம். சங்கம் செய்துவரும் பணியின் பெரும்பகுதி எந்த ஒரு நாகரிக அரசாங்கமும் பொது வருமானத்திலிருந்து செய்யக் கடமைப்பட்டுள்ள பணியேயாகும். இங்கு இயல்பாகவே ஒரு கேள்வி எழுகிறது: இந்தப் பணியைச் செய்யும்படியும், பல்வேறு திட்டங்களுக்கு ஒதுக்கப்பட்டு அந்தத் திட்டங்கள் நிறைவேற்றப்படாத நிதியை இதுபோன்ற அவசரமாக செய்ய வேண்டிய .பணிகளுக்குச் செலவிடும்படியும் அரசாங்கத்தை சங்கம் ஏன் கேட்கக் கூடாது?

இவ்வாறு செய்வதால் சங்கத்தின்மீது தீண்டப்படாதவர்கள் எவ்விதத்திலும் பகைமை கொள்ள மாட்டார்கள். எனினும் இத்தகைய பகைமை வேறு வகையில் இருந்து வரவே செய்கிறது என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். இதற்கான சந்தர்ப்ப சூழ்நிலைமைகளையும் காரணங்களையும் விளக்கி இந்தியன் சோஷியல் ரிபார்மர் பத்திரிகையின் 1944 அக்டோபர் 11 ஆம் தேதி இதழில் ஒருவர் எழுதியுள்ளார்.[1] அவர் கூறுவதாவது:

> ''ஹரிஜனங்களின் தூதுக்குழு ஒன்று சேவாகிராமத்தில் காந்திஜியைச் சந்தித்தது; 'ஷெட்யூல்டு வகுப்பினர்' எனும்

---

1. இது சம்பந்தமான அவரது கருத்து 1944 செப்டம்பர் 26 ஆம் தேதி பத்திரிகைகளில் வெளியிடப்பட்டது. தீண்டப்படாதோர் சிலர் திரு. காந்தியைச் சந்தித்து ஹரிஜன சேவா சங்கத்தின் நிர்வாகக் குழுவில் தீண்டப்படாதோரின் பிரதிநிதிகளையும் நியமிக்கும்படி அவரை வலியுறுத்தினர். திரு. காந்தி இவ்வாறு செய்ய மறுத்துவிட்டார். இதை எழுதியவர் திரு. கே. நடராஜன்தான் என்று நம்பப்படுகிறது.

தலைப்பின் கீழ் வரும் சாதியினரைச் சேர்ந்த உறுப்பினர்களுக்கும் ஹரிஜன சேவா சங்கத்தின் நிர்வாக அமைப்பில் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும் என்று தூதுக் குழுவினர் அப்போது அவரை வேண்டிக் கொண்டனர். சங்கம் ஹரிஜனங்களுக்கு உதவுவதற்கு அமைக்கப்பட்ட ஓர் அமைப்பேயன்றி அது ஒரு ஹரிஜன அமைப்பல்ல, எனவே அவர்களது வேண்டுகோளை ஏற்பதற்கில்லை என்று காந்திஜி பதில் அளித்ததாகக் கூறப்படுகிறது. ஹரிஜனங்களுக்கு இட ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்ற கோரிக்கையை வட்டமேசை மாநாட்டில் காந்திஜி எதிர்த்தார்; அவர்கள் இந்துக்கள், எனவே இந்துப் பொது அமைப்பிலிருந்து அவர்களைத் தனிமைப்படுத்தக் கூடாது என்று இதற்கு அவர் காரணம் கூறினார். பின்னர் எரவாடா ஒப்பந்தத்தில், குறிப்பாக இந்துக்களின் பங்கிலிருந்து ஹரிஜனங்களுக்கு இடங்கள் ஒதுக்க அவர் ஒப்புக்கொண்டார். இந்தக் கோரிக்கையை ஒப்புக்கொள்ளும் நகல் திட்டம் பம்பாயில் பண்டித மதன் மோகன் மாளவியா தலைமை வகித்த பொதுக்கூட்டத்தின் ஒப்புதலுக்கு வந்தபோது, கூட்டத்திலிருந்த ஒருவர் எழுந்து பின்கண்டவாறு கூறினார்: தீண்டாமை என்னும் இழுக்கை, அழுக்கை இந்து சமுதாயத்திலிருந்து துடைத்தெறிவதற்கு (பண்டிட்ஜி யோசனை கூறியது போல்) பெரும் நிதி திரட்ட வேண்டிய அவசியமில்லை. அதற்குப் பதில் இங்கு வந்திருக்கும் ஒவ்வொருவரும் ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி (கூட்டத்திற்கு ஏராளமான பெண்கள் வந்திருந்தனர்) இதர இந்துக்களை வரவேற்பது போன்று ஹரிஜனங்களையும் தங்கள் இல்லங்களில் வரவேற்க இங்கு வந்துள்ள ஒவ்வொருவரும் உறுதிபூண்டால் இந்தப் பிரச்சினைக்கு உடனடியாக முற்றுப்புள்ளி வைத்துவிட முடியும். இச்சமயம் கூட்டத்திற்கு வந்திருந்த பம்பாயைச் சேர்ந்த ஒரு தொழிலதிபர் எழுந்து அந்த நபரைப் பார்த்து பின்வருமாறு அமைதியாகக் கூறினார்: 'நீங்கள் எதார்த்த உண்மையைச் சொன்னீர்கள். ஆனால் இவர்களில் எவரும் இதைப் பின்பற்றத் தயாராக இல்லை.' அவர் கூறியதிலிருந்து இதுதான் ஹரிஜன சேவா சங்கத்தின் அடிப்படையான பலவீனம் என்பது எனக்குப் புரிந்தது. இதன் விளைவு என்ன? ஹரிஜன சேவா சங்கத்திலிருந்து அனுகூலம் பெறும் கிட்டத்தட்ட ஒவ்வொருவரும் டாக்டர் அம்பேத்கரை தீவிரமாகப் பின்பற்றுபவர்களாக இருக்கின்றனர்; அவரைப் போலவே சாதி இந்துக்களிடம்

மிகுந்த வெறுப்பும் பகைமையும் கொண்டுள்ளனர். இதற்கு எத்தனையோ உதாரணங்களை என்னால் தரமுடியும். ஆனால் அவ்வாறு செய்வது நிலைமையை மேலும் மோசமாக்கவே செய்யும். எல்லா முக்கிய ஸ்தல ஸ்தாபன, மத்திய அமைப்புகளிலும் ஹரிஜன ஆண்களுக்கும் பெண்களுக்கும் இந்துக்களுடன் சேர்ந்து இடமளித்து, கொள்கையை உருவாக்குவதில் அவர்களுக்குப் பங்களிப்பதன் மூலம் இந்த வெறுப்பை, பகைமையைத் தவிர்க்கலாம். இவ்வாறு ஹரிஜனங்களுடன் ஒன்று கலந்து செயல்படாமல் அவர்களுக்கு சேவை செய்வது என்ற கருத்தே சமூக சீர்திருத்த உணர்வுக்கு முற்றிலும் முரணானது. ஹரிஜனங்களின் மேம்பாட்டுக்கான ஆரம்பக்கால இயக்கங்களில் பங்கெடுத்துக் கொண்டவன் நான். என் பணியின்போது நான் சந்தித்த எவர்களிடமும் இத்தகைய பகைமை உணர்வு கிளர்த்தி விடப்பட்டிருப்பதைக் காணவில்லை. இதற்குக் காரணம் இந்த இயக்கத்தைக் கட்டி உருவாக்கியவர்கள் - தாழ்த்தப்பட்டோரின் நல்வாழ்வுக் கழகம் பிரதானமாக மனத்திற் கொண்டே இதனைக் கூறுகிறேன் - தாழ்த்தப்பட்டோர்களின்பாலுள்ள தங்கள் நோக்கில் எத்தகைய பாரபட்சத்தையும் கைக்கொள்வதில்லை என்று சமய உணர்வோடும், சமூக உணர்வோடும் உறுதிபூண்டவர்கள். தாழ்த்தப்பட்ட இன மக்களின் பிரதிநிதிகளை ஹரிஜன சேவா சங்கத்தில் சேர்க்க இயலாது என்று காந்திஜி கூறியது முற்றிலும் தவறு என்றே கருதுகிறேன். சங்கம் நிறுவப்பட்டபோது டாக்டர் அம்பேத்கர் அதில் ஓர் உறுப்பினராக இருந்ததை என் நண்பர் ஒருவர் இந்தச் சந்தர்ப்பத்தில் எனக்கு நினைவுப்படுத்துகிறார்.''

சாதி இந்துக்களுக்கும் தீண்டப்படாதோருக்கும் இடையே பகைமை நிலவுவதற்கான காரணங்களை விளக்கவும், சங்கத்தின் உண்மையான சொரூபத்தைத் தோலுரித்துக் காட்டவும் எனக்கு வாய்ப்பு அளிப்பதாலேயே இதனை இங்கு மேற்கோள் காட்டினேன்.

## III

சங்கத்தின் நிர்வாகத்தில் தீண்டப்படாதோருக்கும் பங்களிக்க வேண்டும் என்று இந்தியன் சோஷியல் ரிபார்மர் பத்திரிகையில் எழுதியவர் வேண்டுகோள் விடுத்திருக்கிறார். சங்கத்தின் மத்திய நிர்வாகக் குழுமத்தில் தீண்டப்படாதவர்கள் ஒருபோதும் இடம்

பெற்றிருக்கவில்லை என்றே இந்த அறிக்கையைப் படிப்பவர்கள் எண்ணக்கூடும். ஆனால் இதுதவறு. ஆனால் உண்மை என்னவென்றால், சங்கம் ஆரம்பிக்கப்பட்டபோது, தீண்டப்படாதோரின் பிரபல தலைவர்கள் கணிசமான எண்ணிக்கையில் மத்தியக் குழுமத்தில் இடம் பெற்றிருக்கவே செய்தனர். 1932 ஆம் ஆண்டு நவம்பர் 3 ஆம் தேதி திரு. பிர்லாவும் திரு. தாக்கரும் வெளியிட்ட ஓர் அறிக்கையில் மத்தியக் குழுமத்தில் இடம் பெற்றிருப்பவர்களின் பெயர்களை வெளியிட்டிருந்தனர். அவர்கள் வருமாறு:

> "திரு. ஜி.டி. பிர்லா, டில்லி மற்றும் கல்கத்தா; சர் புருஷோத்தம்தாஸ் தாகூர்தாஸ், பம்பாய்; சர் லல்லுபாய் சாமல்தாஸ், பம்பாய்; டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், பம்பாய்; சேட் அம்பாலால் சாராபாய், ஆமதாபாத், டாக்டர் பி.சி. ராய், கல்கத்தா, லாலா ஸ்ரீராம், டில்லி; ராவ் பகதூர் எம்.சி. ராஜா, சென்னை; டாக்டர் டி.எஸ்.எஸ். ராஜன், திருச்சிராப்பள்ளி; ராவ் பகதூர் சீனிவாசன், சென்னை; திரு. ஏ.வி. தாக்கர், பொதுச்செயலாளர், டில்லி."

மொத்தமுள்ள 8 உறுப்பினர்களில் 3 பேர் தீண்டப்படாதோர் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பது மேலே உள்ள பட்டியலில் இருந்து தெரியவரும். குழுமத்திலிருந்து நான் விலகிய பிறகு மற்ற இருவர் அதாவது ராவ் பகதூர் எம்.சி. ராஜாவும், ராவ் பகதூர் சீனிவாசனும் கூட விலகிவிட்டனர். சங்கத்திலிருந்து இவர்கள் தங்களைத் துண்டித்துக் கொண்டதற்கு காரணம் என்னவென்று எனக்குத் தெரியவில்லை. சங்கத்துடன் எனக்கிருந்த பிணைப்பை அறுத்துக் கொண்டதற்கான காரணங்களை நான் எடுத்துரைப்பது சரியானதும் முறையானது மாகும். புனா ஒப்பந்தத்திற்குப் பிறகு மறப்போம், மன்னிப்போம் என்ற ரீதியிலேயே செயல்பட்டு வந்தேன். திரு. காந்தியின் பல நண்பர்கள் என்னைக் கேட்டுக் கொண்டதற்கு இணங்க அவருடைய நேர்மையை ஏற்றுக்கொண்டேன். அந்த உணர்வோடுதான் சங்கத்தின் மத்தியக் குழுமத்தில் இடம்பெற ஒப்புக் கொண்டேன்; அது மட்டுமல்ல, சங்கத்தின் நடவடிக்கையில் எனக்குரிய பங்கை ஆற்றவும் ஆர்வத்தோடு இருந்தேன். உண்மையைக் கூறுவதானால், சங்கத்தின் வேலைத் திட்டம் எத்தகையதாக இருக்க வேண்டும் என்பது குறித்து திரு. காந்தியுடன் விவாதிக்கவும் விரும்பினேன். அவ்வாறு செய்வதற்கு முன்னர் மூன்றாவது வட்டமேசை மாநாட்டில் கலந்து கொள்ள நான் லண்டனுக்கு அழைக்கப்பட்டேன். இந்நிலைமையில்,

சங்கத்தின் வேலைத் திட்டம் பற்றிய எனது கருத்துகளை பொதுச் செயலாளர் திரு. ஏ.வி. தாக்கருக்குக் கடிதம் மூலம் தெரிவிப்பதே உகந்ததும் சிறந்ததும் ஆகும் என்று கருதினேன். அதன்படி கப்பலில் இருந்தவாறு பின்கண்ட கடிதத்தை அவருக்கு எழுதினேன்:

எம்/என் ''விக்டோரியா'',
போர்ட் சைய்த்,
நவம்பர் 4, 1932.

அன்புள்ள திரு. தாக்கர் அவர்களுக்கு,

லண்டனுக்குப் புறப்படுவதற்கு முன்னர் தாங்கள் கொடுத்த தந்தி கிடைக்கப் பெற்றேன். ராவ் பகதூர் சீனிவாசனை மத்தியக் குழுமத்திலும், திரு. டி.வி. நாயக்கை பம்பாய் மாகாணக் குழுமத் திலும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று நான் தெரிவித்த யோசனை ஏற்றுக்கொள்ளப்பட்டு விட்டதாக தந்தியில் தெரிவித்திருந்தீர்கள். இந்தப் பிரச்சினை சுமுகமாகத் தீர்க்கப்பட்டு விட்டது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். இனி தீண்டாமை எதிர்ப்புக் கழகத்தின்[1] வேலைத் திட்டத்தை நாம் அனைவரும் ஒருங்கிணைந்து வகுக்க முடியும் என்று நம்புகிறேன். கழகம் தனது வேலைத் திட்டத்தை வகுப்பதில் எத்தகைய கோட்பாடுகளை மேற்கொள்ள வேண்டும் என்பது குறித்து மத்தியக் குழுமத்தின் உறுப்பினர்களுடன் விவா திக்கும் வாய்ப்பு கிட்டினால் நலமாக இருக்கும் என்று விரும்பி னேன். ஆனால் துரதிர்ஷ்டவசமாக மிகக் குறுகிய கால முன்னறிவிப் பில் லண்டனுக்குப் புறப்பட வேண்டியிருப்பதால் அந்த வாய்ப்பைத் தவறவிட வேண்டியவனாக இருக்கிறேன். எனினும், குழுமத்தின் பரிசீலனைக்கு முன்வைப்பதற்காக என் கருத்துகளை இந்தக் கடிதத் தின் மூலம் தங்களுக்கு எழுதியுள்ளேன்; இப்போதைய நிலைமை யில் இதுவே சிறந்த வழியாகத் தோன்றுகிறது.

தாழ்த்தப்பட்ட வகுப்பினரை மேம்படுத்தும் பணியை, கைதூக்கி விடும் பணியை அணுகுவதற்கு இரண்டு வேறுபட்ட வழிகள் இருக்கின்றன என்பது என் கருத்து. ஒருவர் தாழ்த்தப்பட்ட

1. இந்தக் கழகம் பின்னால் 'ஹரிஜன சேவா சங்கம்' எனப் பெயர் சூட்டப்பட்டது.

இனத்தைச் சேர்ந்தவராக இருக்கிறார் என்றால் அவரது சொந்த நடத்தையே இதற்குக் காரணம்; அவர் வறுமையிலும் வெறுமையிலும் வாடுகிறார் என்றால் அவர் தீயொழுக்கமுடையவராகவும் பாவாத்மாக இருப்பதுவுமே இதற்குக் காரணம். இது ஓர் எண்ணப்போக்கு, அணுகுமுறை, ஊகம். இந்த ஊகத்தின் அடிப்படையில் செயல்படும் சமூக ஊழியர்கள் ஒரு குறிப்பிட்ட வேலைத் திட்டத்தின் மூலம் இத்தகையோரிடம் ஒழுக்கத்தை, சிறந்த பண்பை ஊட்டி வளர்ப்பதில் தங்களது முயற்சிகளையும் வள ஆதாரங்களையும் ஒருமுகப்படுத்துகின்றனர்; அவர்கள் வகுத்தளிக்கும் திட்டத்தில் குடிப்பழக்கத்தை ஒழித்துக்கட்டுதல், உடற்பயிற்சி, கூட்டுறவு, நூலகங்கள், பள்ளிக்கூடங்கள் முதலியவை அடங்கும்; தனிநபரை ஒழுக்க சீலர்களாக உருவாக்க இது உதவும் என்பது அவர்களது கணிப்பு. எனது அபிப்பிராயத்தில், இந்தப் பிரச்சினையை அணுகுவதற்கு வேறொரு மார்க்கமும் இருக்கிறது. ஒரு தனி நபருடைய கதிப்போக்கு அவருடைய சுற்றுச் சூழலுடன், அவர் வாழும் சந்தர்ப்ப சூழ்நிலை களுடன் பிரிக்க முடியாதபடிப் பின்னிப் பிணைந்துள்ளது, அவர் இல்லாமையிலும் கல்லாமையிலும், கொடிதினும் கொடிதான இடும்பையிலும் ஆழ்ந்து, அமிழ்ந்து உழல்கிறார் என்றால் அதற்கு அவருடைய சுற்றுச்சூழல் உகந்ததாக, இசைந்ததாக, நல்லிணக்க முடையதாக இல்லாததே அதற்குக் காரணம் என்பது என் சித்தாந்தம்.

மேற்கூறிய இரண்டு கருத்துக்களில் இரண்டாவதாகத் தெரிவிக்கப்பட்ட கருத்து மிகச் சரியானது என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. முதலில் தெரிவிக்கப்பட்ட கருத்துப்படி இங்கொருவரும் அங்கொருவருமாக ஒரு சில தனிநபர்களை வேண்டுமானால் அவர்கள் சார்ந்துள்ள இனத்தவரின் தரத்துக்கு மேலே உயர்த்தலாம், ஆனால் அந்த இனம் முழுவதையுமே உயர்த்த முடியாது. எனது அபிப்பிராயத்தில் தீண்டாமை ஒழிப்புக்கழகம் தோற்றுவிக்கப்பட்டதன் நோக்கம் அங்குமிங்குமாக ஒரு சில தனிநபர்களுக்கோ அல்லது தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த குறிப்பிட்ட இளைஞர்களுக்கோ உதவுவதற்காக அல்ல, அதற்கு மாறாக, அந்த இனம் முழுவதையும் உயர்மட்டத்திற்கு உயர்த்துவதே அதன் லட்சியம். எனவே, தனிநபர் நல்லொழுக்கத்தை, நற்பண்பை ஊட்டிவளர்க்கும் ஒரு திட்டத்தில் கழகம் தனது சக்தியைச் சிதறடிப்பதை நான் விரும்ப

வில்லை. தாழ்த்தப்பட்ட இனத்தவரின் சமூக சூழ்நிலையில் மாற்றத்தை ஏற்படுத்தக்கூடிய ஒரு திட்டத்தில் குழுமம் தனது சக்தி முழுவதையும் ஈடுபடுத்த வேண்டும் என்று விரும்புகிறேன். பொதுப்படையான முறையில் என் கருத்துக்களைக் கூறிவிட்ட பிறகு, கழகம் மேற்கொள்ள வேண்டிய பணிகுறித்து சில உருப்படியான யோசனைகளை இப்போது முன்வைக்க விழைகிறேன்.

## 1. சிவில் உரிமைகளுக்கான இயக்கம்

கிராமக் கிணறுகளில் தண்ணீர் எடுத்தல், கிராமப் பள்ளிக்கூடங்களில் தங்கள் குழந்தைகளைச் சேர்த்தல், கிராமச் சாவடியில் பிரவேசித்தல், பொதுஜனப் போக்குவரத்து வசதிகளைப் பயன்படுத்துதல் போன்ற பல்வேறு சிவில் உரிமைகளை தாழ்த்தப்பட்ட இன மக்களுக்குப் பெற்றுத்தரக் கழகம் முதல் காரியமாக அகில இந்தியாவிலும் ஓர் இயக்கத்தை மேற்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்.

கிராம அளவில் இத்தகைய ஒரு திட்டத்தை நிறைவேற்றினால் இந்து சமுதாயத்தில் தேவையான சமூகப் புரட்சியை அது தோற்றுவிக்கும்; இத்தகைய சமூகப்புரட்சி ஏற்படவில்லையேல் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சமத்துவ சமூக அந்தஸ்தைப் பெறுவது ஒருபோதும் சாத்தியமாகாது. சிவில் உரிமைகளுக்கான இந்த இயக்கம் நடத்தப்படும்போது எத்தகைய இன்னல் இடுக்கண்களை, சோதனைகளை வேதனைகளை எதிர்நோக்க வேண்டியிருக்கும் என்பதை குழுமம் அறிந்திருக்க வேண்டும். இங்கு அனுபவ ரீதியாக என்னால் பேச முடியும். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கழகமும், சமூக சமத்துவக் கழகமும் பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த கொலாபா, நாசிக் மாவட்டங்களில் இத்தகைய திட்டத்தைச் செயல்படுத்த முற்பட்டபோது என்ன நடந்தது என்பதை அந்த அமைப்புகளின் தலைவனாகிய நான் அறிவேன்.

முதலாவதாக, தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் சாதி இந்துக்களுக்கும் இடையே சண்டைகள் மூளும்; மண்டைகள் உடையும்; இரத்த ஆறு பெருக்கெடுத்தோடும்; பரஸ்பரம் கிரிமினல் வழக்குகள் தொடரப்படும். இந்தப் போராட்டத்தில் தாழ்த்தப்பட்ட இனத்

தவர்கள் கடுமையாகப் பாதிக்கப்படுவார்கள். இந்த இரு மாவட்டங்களிலும் நடைபெற்ற சமூகப் போராட்ட வரலாறு இதை நிரூபிக்கிறது; நியாயம் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பக்கம் இருந்த போதிலும், போலீசும் மாஜிஸ்ட்ரேட்டும் எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் அவர்களது உதவிக்கு வந்ததில்லை. இரண்டாவதாக, தாழ்த்தப்பட்ட மக்கள் தங்களுக்கு இணையான அந்தஸ்தைப் பெற முயல்கிறார்கள் என்பதைக் காணும் மறுகணமே கிராமங்கள் ஊர்க் கட்டுப்பாட்டையும், பகிஷ்காரத்தையும் பிரகடனம் செய்யும்.

சிவில் உரிமைகளுக்கான இந்தப் போராட்டம் வெற்றி பெற வேண்டுமாயின் கழகம் எதிர்ப்பட வேண்டியிருக்கும் எத்தனை எத்தனையோ இக்கட்டுகளில் இடர்களில் இரண்டை மட்டுமே இங்கு கூறினேன். தங்களது உரிமைகளுக்காகப் போராடுவதற்குத் தாழ்த்தப்பட்ட வகுப்பினரைத் தூண்டி ஊக்குவிக்கக்கூடிய, அவர்களுக்கு ஆக்கமும் வலிவும் அளிக்கக்கூடிய, இப்போராட்டத்தினின்று எழும் சட்டப்பிரச்சினைக்கு வெற்றிகரமாகத் தீர்வு காணுவதற்கு உதவக்கூடிய சக்தி வாய்ந்த ஒரு தொண்டர் படையை கிராமப்புறங்களில் கழகம் உருவாக்கி வளர்த்து வலுப்படுத்துவது அவசியம். இந்தப் போராட்டத் திட்டம் சமூகக் கொந்தளிப்புகளையும் குழப்பங்களையும் வன்முறைக் கலவரங்களையும் கொண்டதாக இருக்கும் என்பதில் ஐயமில்லை, இதனைத் தவிர்க்க முடியும் என்று நான் கருதவில்லை. குறைந்த முயற்சியுள்ள மற்றொரு வழி ஒன்றிருப்பதையும் நான் அறிவேன். ஆனால் தீண்டாமையை வேரோடு அடிசாய்ப்பதற்கு அது உதவாது.

சாதி இந்துக்கள் பெரும்பாலோரிடம் பகுத்தறிவாதக் கருத்துக்கள் சந்தடியின்றி சிறிது சிறிதாக ஊடுருவதற்கு வழிசெய்வதன் மூலம் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு விமோசனம் ஏதும் கிட்டிவிடாது. ஏனென்றால் முதலாவதாக, எல்லா மனித ஜீவன்களையும் போலவே சாதி இந்துவும் தாழ்த்தப்பட்ட இனத்தவரிடம் தீண்டாமையைக் கடைப்பிடிப்பதில் தனது மரபுவழிவந்த பழக்கத்தையே பின்பற்றுகிறான். யாரோ தீண்டாமையை எதிர்த்து உபதேசம் செய்கிறார் என்பதற்காக சாதாரணமாக மக்கள் தமது இரத்தத்தில் ஊறிப்போன தமது வழக்கமான போக்கை விட்டுவிட மாட்டார்கள்.

தனது வழிகளை மாற்றிக்கொள்ள வேண்டும் என்று சாதி இந்துவை நினைக்கும்படி செய்தால்தான், உணரும்படி நிர்ப்பந் தித்தால்தான் தாழ்த்தப்பட்ட இன மக்களுக்கு விடுதலை கிட்டும்; விமோசனம் கைகூடும். இதற்கு என்ன செய்ய வேண்டும்? தொன்று தொட்டு அவன் கைக்கொண்டு வரும் நீதிநெறியற்ற போக்குக்கு எதிராக, வாழையடி வாழையாக அவன் பின்பற்றிவரும் நயப்பண் பற்ற நடத்தைக்கு எதிராக நேரடி நடவடிக்கை எடுப்பதன் மூலம் ஒரு நெருக்கடியைத் தோற்றுவிக்க வேண்டும். இந்த நெருக்கடி அவனைச் சிந்திக்க வைக்கும். எப்போது அவன் சிந்திக்க ஆரம்பிக்கிறானோ அப்போது அவன் தன்னை மாற்றிக் கொள்ள தயாராக இருப்பான்.

பகுத்தறிவுவாதக் கருத்தக்களை ஓசையின்றி, ஆடம்பர ஆர்ப் பாட்டமின்றி சாதி இந்துக்களிடம் ஊடுருவச் செய்வது போன்ற இதர வழிகளிலுள்ள பெருங்குறைபாடு என்னவென்றால், அவை 'நிர்ப்பந்தப்படுத்துவதோ' அல்லது நெருக்கடியைத் தோற்றுவிப் பதோ இல்லை என்பதுதான். மஹத்தில் சௌதார் குளம், நாசிக்கில் காலாராம் கோவில், மலபாரில் குருவாயூர் கோவில் ஆகியவை சம்பந்தமாக எடுத்துக்கொள்ளப்பட்ட நேரடி நடவடிக்கைகள் சீர்திருத்தவாதிகள் லட்சக்கணக்கான நாள் உபதேசம் செய்தும் ஒருபோதும் செய்ய முடியாதவற்றை ஒரு சில நாள்களிலேயே சாதித்துள்ளன. எனவே, தாழ்த்தப்பட்ட மக்களின் சிவில் உரிமை களைப் பெற்றுத் தருவதற்கு இந்த நேரடி நடவடிக்கை இயக்கத்தை தீண்டாமை எதிர்ப்புக் கழகம் மேற்கொள்ள வேண்டும் என்று நான் பெரிதும் வலியுறுத்துகிறேன். இந்த இயக்கம் எதிர்ப்படக் கூடிய சிரமங்களை நான் அறிவேன்; இந்த இயக்கம் வெற்றிபெற வேண்டுமானால் சட்டம் ஒழுங்குக்குப் பொறுப்பாக உள்ள சக்தி கள் நம் பக்கம் இருக்க வேண்டும் என்று எனது கடந்தகால அனுபவம் பறைசாற்றுகிறது. இதனால்தான் இந்த இயக்கத்தின் வீச்சிலிருந்து கோவில்களை விலக்கி விட்டு, சிவில் உரிமை களை மட்டுமே இங்கு எடுத்துக் கொண்டிருக்கிறேன். இந்த உரிமைகளைப் பாதுகாப்பதற்கு அரசாங்கம் கடமைப்பட்டுள்ளது என்று கருதுகிறேன்.

## 2. சமத்துவ வாய்ப்புரிமை

தீண்டாமை எதிர்ப்புக் கழகம் செய்ய வேண்டும் என்று நான் விரும்பும் இரண்டாவது பணி தாழ்த்தப்பட்ட மக்களுக்குச் சமத்துவ வாய்ப்புரிமையைப் பெற்றுத்தர அது பாடுபட வேண்டும் என்பதாகும். தாழ்த்தப்பட்ட இனத்தவர்களின் ஏழ்மைக்கும் துன்ப துயரங்களுக் கும் சமத்துவ வாய்ப்பின்மையே பெரும்பாலும் காரணம்; அதே சமயம் சமத்துவ வாய்ப்பு இல்லாததற்கு தீண்டாமையே காரணம். காய்கறிகள், பால், வெண்ணெய் போன்றவற்றை விற்பனை செய்வது போன்றவை சாதாரணமாக எல்லோரும் செய்யக்கூடிய ஜீவனோ பாயத் தொழில்களாகும். ஆனால் தாழ்த்தப்பட்டவர்கள் இந்தத் தொழில்களைக் கிராமங்களிலும் இன்னும் சொல்லப்போனால் நகரங்களிலும் கூட செய்ய முடியாது என்பதை நீங்கள் அறிவீர்கள். ஒரு சாதி இந்து இப்பொருள்களை இந்து அல்லாதவனிடமிருந்து வாங்குவான்; ஆனால் தாழ்த்தப்பட்டவரிடமிருந்து வாங்க மாட் டான். வேலை வாய்ப்புத் துறையில் அவனது நிலைமை இன்னும் மிகவும் மோசம். அரசாங்க இலாக்காக்களில் கயமைத்தனமான முறை யில் பாரபட்சம் காட்டப்படுகிறது. காவலர் அல்லது தகவலாளர் வேலைகூடத் தரப்படுவதில்லை.

அமெரிக்காவில் நீக்ரோவைப் போன்று இந்தியாவில் தாழ்த் தப்பட்ட இனத்தவன் சுபிட்ச காலத்தில் கடைசியில் வேலைக்கமர்த் தப்படுகிறான்; அல்லற் காலத்திலோ முதலில் வேலைநீக்கம் செய்யப் படுகிறான். அப்படியே ஒருக்கால் அவனுக்கு வேலை கிடைத்தால் கூட அவனது வருங்கால வாய்ப்பு வசதிகள் என்ன? பம்பாயிலும் ஆமதாபாத்திலுமுள்ள பஞ்சாலைகளில் மிகக் குறைந்த ஊதியம் தரப்படும் பிரிவுகளில்தான் அவனுக்கு வேலைத்தரப்படுகின்றது. அங்கு அவன் மாதம் 25 ரூபாய்தான் ஊதியம் பெறுகிறான். அதிக ஊதியம் கிடைக்கக்கூடிய நெசவுப் பிரிவு போன்ற பிரிவுகளின் கதவு கள் அவனுக்கு நிரந்தரமாக மூடப்பட்டுள்ளன. ஆலையிலுள்ள எந்த ஒரு பிரிவின் தலைவர் பதவியும் சாதி இந்துவுக்கே ஒதுக்கப்பட் டுள்ளது; தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த தொழிலாளியோ அவன் எவ்வளவு நீண்டகாலம் சேவை செய்திருந்தாலும், மிகுந்த அனுபவம் கொண்டவனாக இருந்தாலும், சிறந்த திறமை வாய்ந்தவனாக இருந் தாலும் சாதி இந்துக்கு ஓர் அடிமைபோல்தான் அவனுக்குக் கீழ் பணி யாற்ற வேண்டும். நூல் சுற்றும் அல்லது முறுக்கேற்றும் பிரிவு களைச் சேர்ந்த தாழ்த்தப்பட்ட இன மக்கள் நூற்றுக்கணக்கானோர் என்னிடம் வந்து ஒரு புகாரை தெரிவித்தனர்; அதாவது மேஸ்திரிகள்,

மூலப்பொருள்களை எல்லாப் பெண்களுக்கும் சமத்துவமான முறையில் அல்லது நியாயமான விகிதாசார முறையில் விநியோகிப்பதற்குப் பதிலாக எல்லாவற்றையும் சாதி இந்துப் பெண்களுக்கே கொடுத்துவிட்டுத் தங்களைக் கண்டு கொள்வதே இல்லை என்று குற்றம் சாட்டினர். சமத்துவ வாய்ப்புரிமை பெறுவதில் முக்கியமாக இந்துக்களிடம் தீண்டப்படாதோர் எத்தகைய அவதிக்கு உள்ளாகின்றனர் என்பதற்கு ஒரு சில உதாரணங்களையே இங்கு தந்துள்ளேன்.

தீண்டாமை எதிர்ப்புக் கழகம் இந்தப் பிரச்சினையை எடுத்துக் கொள்வது உகந்ததும் உசிதமானதும் என்று கருதுகிறேன்; இதற்கு எதிராகப் பொதுமக்கள் கருத்தைத் திரட்டுவதும், இத்தகைய பாரபட்சப் போக்குகளைக் கடைப்பிடிப்போர் மீது தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்குக் குழுக்களை அமைப்பதும் அவசியம் என்றும் எண்ணுகிறேன். பஞ்சாலைகளில் நெசவுப் பிரிவுகளைத் தாழ்த்தப்பட்ட இன மக்களுக்குத் திறந்துவிடும் பிரச்சினைக்கு கழகம் தீர்வு காண வேண்டும் என்று முக்கியமாக விரும்புகிறேன். தாழ்த்தப்பட்ட இன மக்கள் பெருமளவில் வேலைவாய்ப்புகள் பெற இது துணை புரியும். இந்துக்கள் நிர்வகிக்கும் தனியார் நிறுவனங்களிலும், கம்பெனிகளிலும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஆதரவளித்து, அவர்களது தகுதிகளுக்கு ஏற்ப அலுவலகங்களில் பல்வேறு தரங்களில் வேலைக் கமர்த்திக் கொள்ள வேண்டும்.

### 3. சமூகக் கூட்டுறவு

இறுதியாக, சாதி இந்துக்கள் தாழ்த்தப்பட்ட மக்கள்பால் காட்டும் அருவருப்பை அகற்றிடக் கழகம் தீவிர முயற்சி மேற்கொள்ள வேண்டும் என்று வலியுறுத்துகிறேன்; ஏனென்றால் இவ்விரு பிரிவினரும் முற்றிலும் வேறுபட்ட, மாறுபட்ட, தனித்தனி அமைவுகளாக இவ்வளவு தூரம் பிரிந்து நிற்பதற்கு, விலகி இருப்பதற்கு இதுவே காரணம். இவ்விரு பகுதியினரிடையேயும் நெருங்கிய தொடர்பை வளர்ப்பதுதான் இக்குறிக்கோளை எய்துவதற்கு சிறந்த மார்க்கம் என்பது என் கருத்து. தொடர்ந்த நீடித்த பங்கெடுப்புதான் ஒருவர் மற்றொருவருடன் தொடர்பு கொள்ள முற்படும்போது ஏற்படும் இந்த அந்நிய உணர்வை வெற்றி கொள்ளத் துணைபுரியும். தாழ்த்தப்பட்ட இனத்தவரை விருந்தாளிகளாக அல்லது பணியாளர்களாக சாதி இந்துக்களின் இல்லங்களில் அனுமதிப்பதைப்போல் இக்காரியத்தை மிகவும் பயனுள்ள முறையில் செய்யக் கூடியது வேறு எதுவும் இல்லை என்பது என் அபிப்பிராயம்.

இவ்விதம் உருவாக்கப்படும் உயிர்த் துடிப்பு மிக்க தொடர்பு பொதுவான, தோழமை நிறைந்த வாழ்வைப் பழக்கப்படுத்தும்; நாம் அனைவரும் எதற்காக அயராது பாடுபட்டு வருகிறோமோ அந்த ஒற்றுமை ஏற்பட இது வழிவகுக்கும். ஆனால் வளைந்து கொடுக்கும் பாங்குடைய அநேக சாதி இந்துக்கள் இதற்குத் தயாராக இல்லாதது எனக்கு வருத்தத்தையும் வேதனையையும் அளிக்கின்றது.

''இந்திய நாட்டையும் உலகையும் குலுக்கிய மகாத்மாவின் பத்து நாள் உண்ணாவிரதத்தின்போது ஒரு வினோதமான வேலை நிறுத்தம் நடைபெற்றது. வில்லே பார்லியிலும் மஹத்திலும் தங்கள் எசமானர்கள் தீண்டாமை விதிகளைக் காற்றில் பறக்க விட்டுவிட்டு தீண்டாதோருடன் கூடிக் குலாவுகிறார்கள் என்று குற்றஞ்சாட்டி அவர்களுடைய சாதி இந்து வேலைக்காரர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர். இந்த நிலைமையில் இந்தப் பிரமுகர்கள் தங்களது பணியாட்களுக்குப் பதில் தாழ்த்தப்பட்ட இனத்தவரை அவர்களது இடங்களில் வேலைக்கமர்த்தி வேலை நிறுத்தத்துக்கு முற்றுப்புள்ளி வைப்பார்கள், அவர்களுக்கு நல்ல பாடம் கற்பிப்பார்கள் என்றே நான் எதிர்பார்த்தேன். ஆனால் இவ்வாறு செய்வதற்குப் பதிலாக அவர்கள் சனாதன சக்திகளிடம் சரணடைந்து, அவர்களது கரங்களை வலுப்படுத்தினர். தாழ்த்தப்பட்ட இனத்தவர்களின் இத்தகைய சந்தர்ப்பவாத நண்பர்கள் எந்த அளவுக்கு உதவியாக இருப்பார்கள் என்பதை நான் அறியேன்.

நாம் கஷ்ட காலத்தில் அவதிப்படும்போது, சிரம தசையில் உழலும்போது நம்மிடம் ஏராளமானோர் அனுதாபம் காட்டலாம். ஆனால் அந்த அனுதாபத்தை அவர்கள் உதட்டளவில் நிறுத்திக் கொண்டு, வேறு எதுவும் செய்யவில்லை என்றால் அந்த அனுதாபத்துக்கு அர்த்தமே இல்லை, அதுகுறித்து நாம் ஆறுதல் அடைவதற்கு எதுவும் இல்லை. இதைத்தான் தீண்டாமை எதிர்ப்புக் கழகத்துக்கும் சொல்ல விரும்புகிறேன். அமெரிக்காவில் நீக்ரோக்களின் விடுதலைக்காக வடபகுதி வெள்ளையர்கள் தங்களது உற்றார் உறவினர்களான தென்பகுதி வெள்ளையர்களையே எதிர்த்துப் போராடினார்கள். இவ்வாறே, தாழ்த்தப்பட்ட இன மக்களின் அனுதாபிகள் எனத் தங்களைக் கூறிக்கொள்ளும் சாதி இந்துக்களும் நீக்ரோக்களுக்காகப் போராடிய அமெரிக்க வடபகுதி வெள்ளையர்களைப் போல், தாழ்த்தப்பட்ட மக்களின் நலனுக்காக தங்களுடைய சொந்த உற்றார் உறவினர்களையும் எதிர்த்து நேரடியாகக் களத்தில் இறங்கிப் போராடச் சித்தமாக இருக்க வேண்டும்; அதற்கு அவர்கள் தயாராக

இருக்கிறார்கள் என்பது நிரூபிக்கப்படும் வரை அவர்களது நேர்மை குறித்துத் தாழ்த்தப்பட்ட மக்கள் மனநிறைவு அடைய மாட்டார்கள். இது ஒருபுறமிருக்க, நான் ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல் தீண்டப்படுபவர்களுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் இடையே தொடர்பையும் சமூக உறவையும் உருவாக்கி வளர்த்துக் கொள்ள வேண்டிய அவசியத்தை இந்துக்களின் மனத்தில் ஆழமாகப் பதியச் செய்வதற்கு கழகம் நடவடிக்கை எடுத்துக் கொள்வது மிக முக்கியம் என்றும் கருதுகிறேன்.

## 4. உருவாக்கப்பட வேண்டிய அமைப்பு

தீண்டாமை எதிர்ப்புக் கழகம் தனது திட்டத்தைச் செயல்படுத்துவதற்கு மிகப்பெரிய ஊழியர் படை ஒன்றை உருவாக்கிக் கொள்ள வேண்டியிருக்கும். சமூக ஊழியர்கள் நியமனம் என்பது ஒரு சின்ன விஷயமாகக் கருதப்படக்கூடும். என்னைப் பொறுத்தவரையில், இப்பணியில் ஈடுபடுத்துவதற்கு ஒரு சரியான அமைப்பினைத் தெரிந்தெடுப்பதற்கு மிகுந்த முக்கியத்துவம் அளிக்கிறேன். பணம் தருவதாக இருந்தால் எந்த ஒரு குறிப்பிட்ட பணியையும் செய்வதற்கு எப்போதும் ஆட்கள் கிடைப்பார்கள். ஆனால் கழகத்தின் லட்சியம் நிறைவேறுவதற்கு இந்தக் கூலிப்படையினர் பயன்பட மாட்டார்கள். இது எனது உறுதியான கருத்து. அன்பு காட்டுபவர்களே சேவை செய்ய முடியும் என்பது டால்ஸ்டாயின் அருள் வாக்கு. தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த ஊழியர்கள் இத்தகைய சோதனையில் தேறக் கூடியவர்கள் என்பது என் அபிப்பிராயம். எனவே, யாரைத் தேர்ந்தெடுப்பது, யாரைத் தேர்ந்தெடுக்கக் கூடாது என்பதைத் தீர்மானிக்கும் போது கழகம் இந்த அம்சத்தைக் கருத்திற்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். சமூக சேவையைக் கடைசிப் புகலிடமாகக் கொள்ளாத தாழ்த்தப்பட்டோரிடையே சில கடைந்தெடுத்த கயவர்கள் இருக்கிறார்கள் என்று இங்கு நான் சொல்ல வரவில்லை. ஆனால் பொதுவாகக் கூறுமிடத்துத் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த ஊழியர் தமது பணியை அன்பின் உழைப்பாகக் கருதுவார் என்பதை நிச்சயமாக நம்பலாம்; இத்தகைய நேரிய மனோபாவம் கழகத்தின் வெற்றிக்கு இன்றியமையாதது.

இரண்டாவதாக, இனம் அல்லது நோக்கம் போன்ற கட்டுப்பாடுகள் ஏதுமின்றி ஏதேனும் ஒருவகையான சமூக சேவையில் ஏற்கனவே ஈடுபட்டுள்ள சில அமைப்புகள் இருக்கின்றன; இத்தகைய அமைப்புகள் குறிப்பிட்ட உதவித் தொகையைப் பெற்றுக் கொண்டு

தீண்டாமை எதிர்ப்புக் கழகத்தின் பணியையும் தனது பணிகளுடன் சேர்த்துச் செய்ய முன்வரக் கூடும். இத்தகைய 'தவணைமுறை' சேவையானது விரும்பும் பலனைத் தராது என்பதில் எனக்கு எத் தகைய ஐயப்பாடும் இல்லை. ஒரு குறிப்பிட்ட பணியில் மட்டும் முழுக் கவனத்தையும் செலுத்தக்கூடிய அமைப்புதான் நமக்குத் தேவை. தாம் மேற்கொண்ட லட்சியத்தில் முழு ஆர்வ ஈடுபாடு கொள்ளும் பொருட்டு தம்மைக் ஒரே நோக்குடையவையாக ஆக்கிக் கொள்ளும் அமைப்புகளும் நிறுவனங்களும் தான் நமக்கு வேண்டும். இவ்வகையில் யாருக்கேனும் பணி ஒதுக்கப்பட வேண்டியிருப்பின் தாழ்த்தப்பட்ட இன மக்களின் சேவைக்குத் தம்மை முழுக்க முழுக்க அர்ப்பணித்துக் கொள்ள முன்வருபவர்களுக்கே அப்பணி ஒதுக்கப் பட வேண்டும்.

இக்கடிதத்தை முடிக்கும் முன் ஒன்றை இங்குக் குறிப்பிட விரும்புகிறேன். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை ஒன்றாக இணைத்துப் பிணைக்கக்கூடியது அன்பே தவிர சட்டமல்ல என்று பால்போர்தான் கூறினார் என்று நினைக்கிறேன். இந்தக் கருத்து இந்து சமுதாயத் துக்கு அப்படியே அட்சரம் பிசகாது பொருந்தும் என்று கருது கிறேன்.

சாதி இந்துக்களையும் தாழ்த்தப்பட்ட மக்களையும் சட்டத் தால் பிணைக்க முடியாது; அதிலும் குறிப்பாக தனி வாக்காளர் தொகுதிகளுக்குப் பதிலாக கூட்டு வாக்காளர் தொகுதிகளை உரு வாக்க வகை செய்யும் எந்தத் தேர்தல் சட்டத்தாலும் அவர்களை ஒன்றுபடுத்த முடியாது, பின்னிப் பிணைக்க முடியாது. அவர்களைப் பிணைக்கக்கூடிய சக்தி ஒன்றே ஒன்றுக்குத்தான் உண்டு. அதுதான் அன்பு.

எனது அபிப்பிராயத்தில் குடும்ப எல்லைகளுக்கு அப்பால் நியாயத்தால், நீதியால் மட்டுமே அன்பின் கதவுகளைத் திறந்து விடமுடியும்; ஆகையால் சாதி இந்துக்கள் தாழ்த்தப்பட்ட மக்கள் பால் நியாயப் போக்கோடு, நேர்மை உணர்வோடு நடந்துகொள் ளும்படிப் பார்த்துக் கொள்வதும், தவறினால் அவ்வாறு நடந்து கொள்ளுமாறு அவர்களை நிர்ப்பந்திப்பதும் தீண்டாமை எதிர்ப்புக் கழகத்தின் அசைக்க, மறுக்க முடியாத கடமையாக இருத்தல் வேண்டும்.

உங்கள் உண்மையுள்ள,
பி.ஆர். அம்பேத்கர்.

குறிப்பு:

பொதுமக்கள் என் கருத்துகளைத் தெரிந்து கொள்வதற்காகவும் அவற்றை அவர்கள் பரிசீலிப்பதற்காகவும் இந்தக் கடிதத்தைப் பத்திரிகைகளில் வெளியிடுகிறேன்.

பெறுநர்
ஏ.வி. தாக்கர் அவர்கள்,
பொதுச் செயலாளர்,
அகில-இந்தியத் தீண்டாமை எதிர்ப்புக் கழகம்,
பிர்லா மாளிகை,
புதுடில்லி.

## IV

என் யோசனைகளின்பால் எத்தகைய கவனமும் செலுத்தப் படாதது எனக்கு வியப்பாக இருக்கிறது. இன்னும் சொல்லப் போனால், இக்கடிதம் கிடைக்கப்பெற்றதாகக் கூட தகவல் இல்லை! எனவே, இதற்கு மேலும் சங்கத்தில் அங்கம் வகிப்பதில் பயனில்லை என்று அதிலிருந்து துண்டித்துக் கொண்டு விட்டேன். நான் இல்லாத போது சங்கத்தின் நோக்கங்களும் குறிக்கோள்களும் அடியோடு மாறிவிட்டதைக் கண்டேன். 1932 செப்டம்பர் 30 ஆம் தேதி பம்பாய் கவாஸ்ஜி ஜிஹாங்கீர் மண்டபத்தில் நடைபெற்ற கூட்டத்தில் சங்கத்தின் நோக்கங்கள் பின்வருமாறு இருக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது:

> ''தீண்டாமையை எதிர்த்துப் பிரசாரம் செய்வதிலும், எல்லாப் பொதுக் கிணறுகளையும், தர்ம சத்திரங்களையும், சாலைகளையும், பள்ளிக்கூடங்களையும், சுடுகாடுகளையும், இடுகாடுகளையும், சகல பொதுக் கோவில்களையும் தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் திறந்து விடுவதற்கு கூடிய விரைவில் நடவடிக்கை எடுப்பதிலும் எத்தகைய நிர்ப்பந்தத்தையோ, வன்முறையையோ பயன்படுத்தக்கூடாது; இந்தக் குறிக்கோளை அடைவதற்கு அமைதி வழியில் இணங்க வைக்கும் முறையையே கைக்கொள்ள வேண்டும்.''

ஆனால் சங்கம் ஆரம்பிக்கப்பட்ட இரண்டு மாதங்களுக்குப் பிறகு நவம்பர் 3 ஆம் தேதி திரு. ஜி.டி. பிர்லாவும், திரு. ஏ.வி. தாக்கரும் வெளியிட்ட ஓர் அறிக்கையில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தனர்:

> ''சனாதனிகளில் நியாய உணர்வு படைத்தவர்கள் சம பந்தி போஜனங்களையும் கலப்புத் திருமணங்களையும் எதிர்க்கும் அளவுக்கு தீண்டாமை அகற்றப்படுவதை எதிர்க்க வில்லை என்று கழகம் கருதுகிறது. குறியிலக்கு எல்லைக்கு அப்பாற் சென்று சீர்திருத்தங்களை மேற்கொள்வது கழகத் தின் நோக்கம் இல்லையென்பதால் இங்கு ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்தி விடுவது விரும்பத்தக்கதாக இருக்கும். அதா வது, தீண்டாமையின் ஒவ்வொரு எச்சமிச்சத்தையும் அகற்று வதற்கு இணக்குவிப்பு முறையைக் கைக்கொண்டு சாதி இந்துக்களிடையே கழகம் பாடுபடும்; அதிலும் முக்கியமாக தாழ்த்தப்பட்ட இன மக்களை கல்வி, பொருளாதார, சமூக ரீதியில் கைதூக்கிவிடுவது போன்ற ஆக்கப்பூர்வமான நோக் கமே அதன் பணியின் பிரதான திசைவழியாக இருக்கும்; தீண்டாமையை ஒழித்துக் கட்டுவதற்கு இதுவே பெரும் பங்குப்பணி ஆற்ற முடியும். இத்தகைய பணி ஆற்றப்படும் போது மிகவும் தீவிரமான சனாதனிகூட அதன்பால் பரிவும் ஒத்துணர்வும் காட்டாமல் இருக்க முடியாது. இப்படிப்பட்ட பணிகளை மேற்கொள்வதற்காகத்தான் பிரதானமாக கழகம் அமைக்கப்பட்டது. சாதிமுறையை ஒழித்துக்கட்டுதல், சம பந்தி விருந்து போன்ற சமூக சீர்திருத்தங்கள் கழகத்தின் செயற் பாட்டு எல்லைக்கு அப்பாற்பட்டவை.''

இங்கு ஆரம்பக் குறிக்கோள்களிலிருந்து ஸ்தாபனம் முற்றி லும் விலகிச் சென்றிருப்பதைக் காண்கிறோம். தீண்டாமை ஒழிப்பு என்பது வேலைத்திட்டத்தில் ஏதோ பெயரளவுக்குத்தான் இடம் பெற் றிருந்தது. நிர்மாணப் பணி ஸ்தாபனத்தின் பிரதானப் பகுதியாயிற்று. ஸ்தாபனத்தின் குறிக்கோள்களிலும் நோக்கங்களிலும் இந்த மாற்றம் ஏற்படுத்தப்பட்டது ஏன் என்ற கேள்வி இங்கு எழுகிறது. இது முற்றி லும் உசிதமான கேள்வியாகும். திரு. காந்திக்குத் தெரியாமலோ அல்லது அவரது அனுமதியின்றியோ ஸ்தாபனத்தின் குறிக்கோள் களிலும் நோக்கங்களிலும் மாற்றத்தைக் கொண்டுவந்திருக்க முடி யாது. ஆரம்பகால வேலைத்திட்டம் திரு. காந்திக்கு மிகவும் இக் கட்டானதாக, தொல்லைக் கொடுக்கக் கூடியதாக இருந்தது என்பதே இதற்கு ஒரே காரணமாக இருக்க முடியும் என்பதை எவரும் எளிதில் காணலாம். தீண்டாமை ஒழிப்பு என்பது மிகவும் கவர்ச்சியான கோஷ மாக இருக்கலாம்; மேடைப் பேச்சுக்குப் பெரிதும் ஏற்றதாக இருக்க லாம். ஆனால் ஒரு வேலைத் திட்டம் என்ற முறையில் அது இந்துக்

களிடையே திரு. காந்தியின் செல்வாக்கை வெகுவாக குறைக்கவே செய்யும். இவ்விதம் தமது செல்வாக்கை இழக்க அவர் தயாராக இல்லை. அதனால் அவர் நிர்மாணத் திட்டத்தையே பெரிதும் விரும்பினார். இதில் எல்லா அனுகூலங்களும் உண்டு; பிரதிகூலங் கள் எதுவுமில்லை. இந்துக்கள் இதுகுறித்துக் கவலைப்படவில்லை. இந்துக்களின் வெறுப்புக்கு, சினத்துக்கு, எரிச்சலுக்கு ஆளாகாமல் திரு. காந்தி இதனைப் பின்பற்ற முடியும். நிர்மாணப் பணி வேலைத் திட்டத்தில் இத்தகைய பாதகமான அம்சம் ஏதும் இல்லை. அதற்கு மாறாக அதனைப் பரிந்துரைப்பதில் மிகுந்த அனுகூலம் இருக்கிறது. சுதந்திரமான முறையில் தீண்டப்படாதவர்கள் கட்டி வளர்த்துள்ள இயக்கத்தை அழித்தொழிக்கும் சாத்தியக்கூறை அது பெற்றுள்ளது; புனா ஒப்பந்தத்தை ஏற்க இணங்கியதன் காரணமாக தீண்டப்படாத வர்களின் கோரிக்கைகளுக்கு விட்டுக் கொடுக்க 1932ல் திரு. காந்தி நிர்ப்பந்திக்கப்பட்டார். இந்நிலைமையில் நிர்மாணப் பணியின் அருமை பெருமைகளைக் கூறி திரு. காந்தி எவ்வளவோ நாடகமாடி னார்; ஆசை வார்த்தைகளைக் காட்டினார்; காங்கிரஸ்காரர்களும் முழு ஈடுபாட்டுடன் இதையேதான் விரும்பினர். இது தீண்டப்படாத வர்களை காங்கிரஸ்காரர்களாக அதுவும் மிகவும் நயமான முறை யில் மாற்றமுடியும். நிர்மாணப் பணி வேலைத்திட்டம் கருணை யால் தீண்டப்படாதவர்களைக் கொல்லக் கூடிய ஒரு திட்டமாக மாறக்கூடிய சாத்தியக் கூறு இருந்தது; அபாயம் இருந்தது. உண்மை யில் இவ்வாறுதான் நடைபெறவும் செய்தது. இந்துக்களையும் காங்கிரஸ்காரர்களையும் எதிர்க்கக்கூடிய எந்த ஓர் இயக்கத்தையும் தீண்டப்படாதவர்கள் மேற்கொள்வதைச் சகித்துக் கொள்ள ஹரிஜன சேவா சங்கம் தயாராக இல்லை; அத்தகைய ஓர் இயக்கத்தை ஒழித்துக் கட்ட, வேரோடு வேரடி மண்ணோடு ஆழக் குழிதோண்டிப் புதைக்க அது முனைந்து ஈடுபட்டிருந்தது. சங்கத்தின் குறிக்கோள்களிலும் நோக்கங்களிலும் செய்யப்பட்டுள்ள மாற்றத்தின் விளைவுகள் இவ் வாறுதான் இருக்கும் என்பதை முன்னுணர்ந்து நான் சங்கத்திலிருந்து வெளியேறினேன். தீண்டப்படாதோரின் முதல் கோஷ்டியினர் சங்கத் திலிருந்து வெளியேறிய பிறகு அவர்களிடத்தில் இதர தீண்டப்படா தோர்களை நியமிக்க திரு. காந்தி எந்த முயற்சியும் எடுத்துக் கொள்ள வில்லை. அதற்குமாறாக, சங்கத்தின் நிர்வாகம் முற்றிலும் காங் கிரஸ் இந்துக்களின் கைகளுக்கு மாறுவதற்கு தங்குதடையின்றி அனு மதிக்கப்பட்டது. உண்மையில், சங்கத்தின் நிர்வாகத்திலிருந்தும் அதனை வழிநடத்திச் செல்லும் பொறுப்பிலிருந்தும் தீண்டப்படாத வர்களை அகற்றுவதே இப்போது சங்கத்தின் தலையாய கொள்கை

யாயிற்று. தீண்டப்படாதோரின் தூதுக்குழு ஒன்று திரு. காந்தியைச் சந்தித்து நிர்வாகக் குழுவில் தீண்டப்படாதவர்களையும் நியமிக்கும் படி விடுத்த வேண்டுகோளை அவர் அப்பட்டமாக நிராகரித்ததி லிருந்து இதனைத் தெள்ளத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.[1] இவ்வாறு தம்மை சந்திக்க வரும் தூதுக்குழுவினருக்கு ஆறுதலளிப் பதற்கு திரு. காந்தி ஒரு புதிய சித்தாந்தத்தைக் கண்டுபிடித்திருக் கிறார். அவர் கூறுகிறார்: ''தாழ்த்தப்பட்டோருக்கான நல்வாழ்வுப் பணி என்பது தீண்டாமை பாபத்திற்கு இந்துக்கள் செய்ய வேண்டிய பிராயச்சித்தமாகும். மேலும் சங்கத்திற்கு வசூலிக்கப்பட்ட பணமும் இந்துக்கள் தந்ததேயாகும். இந்த இரண்டு கண்ணோட்டங்களி லிருந்தும் பார்க்கும்போது இந்துக்கள் மட்டுமே சங்கத்தை நிர்வகிக்க வேண்டும் என்பது தெளிவு. தார்மிக ரீதியிலும் சரி, உரிமை அடிப் படையிலும் சரி சங்க நிர்வாகக் குழுவில் தீண்டப்படாதோர் இடம் கோரமுடியாது.'' திரு. காந்தி இந்த சித்தாந்தத்தின் மூலம் தீண்டப் படாதோரை எந்த அளவுக்குப் புண்படுத்தி விட்டார், அவமதித்து விட்டார் என்பதை உணரவில்லை. பணம் இந்துக்களிடமிருந்து வசூலிக்கப்பட்டதாகும், ஆதலால் அது எவ்வாறு செலவிடப்பட வேண்டும் என்று கூறுவதற்கு தீண்டப்படாதவர்களுக்கு எந்த உரிமை யும் இல்லை என்பது திரு. காந்தியின் கருத்தானால் சுயமரியாதை யுள்ள தீண்டப்படாத எவரும் அவருக்கு எவ்வகையிலும் தொல்லைக் கொடுக்க மாட்டார்கள். அப்படியே இத்தகைய தயவுக்காக அவரை நாடி தேடிச் சென்றிருப்பவர்கள் அதிர்ஷ்டவசமாக வேறு யாருமல்ல; அரசியலை தங்கள் பிழைப்புக்கு ஆதாரமாகக் கொண்டுள்ள வேலை யில்லாத வெறும் வீணர்களே, சோம்பேறிகளேயாவர். இது எப்படி யிருப்பினும், திரு. காந்தி கூறுவது சங்கத்தின் வேலைத்திட்டத்தில் செய்யப்பட்டுள்ள மாற்றத்துக்கு அளிக்கப்படும் ஒரு நொண்டிச் சமாதானமே தவிர வேறல்ல என்பதை அவர் உணரவேண்டும். சங்கத்தின் ஆரம்பக்காலக் கண்ணோட்டத்தில் செய்யப்பட்டிருக்கும் இந்த மாற்றத்துக்கு உண்மையான காரணம் என்ன என்பதை அவர் விளக்க வில்லை. இங்கு ஒரு கேள்வி கேட்பது பொருத்தமானதாகும்: சங்கத் தின் நிர்வாகக் குழுவில் தீண்டப்படாதவர்கள் இடம் பெற்றிருக்க வேண்டும் என்பதில் திரு. காந்தி ஏன் ஒருசமயம் ஆர்வமாக இருந்தார்,

1. தீண்டப்படாதோரின் தூதுக்குழு திரு. காந்தியைச் சந்தித்தது இது முதல்முறையல்ல. இதற்கு முன்னர் வேறு பல தூதுக்குழுக்களும் அவரைச் சந்தித்துள்ளன. இப்போது கிட்டிய அதே பலன்தான் அப்போதும் கிட்டியது.

ஏன் இப்போது அவர்களை விலக்கி வைப்பதில் மிகவும் பிடிவாதமாக இருக்கிறார்?

## V

ஹரிஜன சேவா சங்கம் போலவே தீண்டப்படாதோருக்கு சேவை செய்யும் பணியில் ஈடுபட்டிருக்கும் தாழ்த்தப்பட்டோர் நல்வாழ்வுக் கழகத்திடம் தீண்டப்படாதோர் எத்தகைய பகைமை உணர்வையும் காட்டவில்லை என்று இந்தியன் சோஷியல் ரிபார்மரில் கடிதம் எழுதியவர் குறிப்பிட்டிருப்பது சரியானதே. கழகத்தின் பணியை மேம்படுத்தும் திசைவழியில் இந்துக்கள், தீண்டப்படாதோர் ஆகிய இரு சாராருமே மிகுந்த நல்லிணக்கத்தோடு செயல்பட்டனர் என்பதில் ஐயமில்லை. ஆனால் தாழ்த்தப்பட்டோர் நல்வாழ்வுக் கழகம் தனது நிர்வாகக் குழுவில் சில குறிப்பிட்ட எண்ணிக்கையில் தீண்டப்படாதோரை எப்போதும் இடம்பெறச் செய்து வந்ததே இதற்குக் காரணம் என்று அவர் கூறியிருப்பது சரியல்ல. ஏனென்றால் தாழ்த்தப்பட்டோர் நல்வாழ்வுக் கழகத்துக்கும் தீண்டப்படாதோருக்கும் இடையே ஏன் பகைமை உணர்வு ஒருபோதும் இருந்ததில்லை என்பதற்கான காரணமும் தீண்டப்படாதோருக்கும் சங்கத்துக்கும் இடையே ஏன் அத்தகைய பகைமை உணர்வு இருந்தது என்பதற்கான காரணமும் முற்றிலும் வேறுபட்டது. தாழ்த்தப்பட்டோர் நல்வாழ்வுக் கழகத்தின் பணிக்குப் பின்னால் அரசியல் நோக்கம் ஏதும் இல்லாதிருந்ததும், ஆனால் சங்கத்துக்கு அத்தகைய நோக்கம் இருந்தது என்பதுமே அந்த வேறுபாடாகும்.

சங்கம் அரசியலிலிருந்து அறவே விலகி நிற்க வேண்டும் என்பதே ஆரம்பத்தில் நோக்கமாக இருந்தது என்பது உண்மையே. 1932 நவம்பர் 3 ஆம் தேதி வெளியிடப்பட்ட அறிக்கையில் பின்வருமாறு கூறப்பட்டிருந்தது:

> "சங்கம் கட்சி சார்பற்ற முறையில் பணியாற்றக் கூடியதாக இருக்க வேண்டும். எவ்வகையான அரசியல் அல்லது சமயப் பிரசாரத்துடனும் அதனை சம்பந்தப்படுத்துவதில்லை என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. எனவே, மாகாண நிர்வாகக் குழுத் தலைவர்களும் மத்திய நிர்வாகக் குழுத் தலைவர்களும் தங்களுடைய முழுநேர ஊழியர்களைத் தேர்ந்தெடுப்பதில் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். இந்தக் குறிக்கோளை மனத்திற் கொண்டு சங்கத்தின் எல்லா முழு

நேர ஊழியர்களும் அரசியலிலோ அல்லது எத்தகைய வகுப்புவாத அல்லது சமயப் பிரசாரத்திலோ ஈடுபடாமல் இருப்பது அவசியம்.''

ஆனால் இந்த அறிவிப்பு மதிக்கப்பட்டதை விட மீறப்பட்டதே மிக அதிகம். தீண்டப்படாதோரை காங்கிரஸ் அரவணைப்பில் கொண்டு வருவதற்கும், காங்கிரஸ் அரசியலை அவர்கள் ஏற்கச் செய்வதற்கும், குறிப்பாக அவர்களுக்கு செய்யப்படும் சேவை, அது எவ்வளவு அற்பமானதாக இருந்தாலும், காங்கிரசின்பால் அவர்கள் நன்றி உணர்வு கொள்ளச் செய்யும் சூழ்நிலையில் காங்கிரஸ் சித்தாந்தங்களை அவர்கள் மனத்திற் பதியவைப்பதற்கும் ஹரிஜன சேவா சங்கத்தை நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற ஆசையை, சபலத்தைத் தவிர்ப்பது சாத்தியமில்லாதிருக்கலாம். ஹரிஜன சேவா சங்கம் தீண்டப்படாதோருக்கு ஒரு சேவா நிலையமாக இருப்பதோடு அதனை ஓர் அரசியல் பட்டறையாக்கியது அவசியமாக இருக்கலாம். தீண்டப்படாதோரை அவர்களது வாழ்க்கைப் போராட்டத்திற்குத் தயாரிப்பதும், அவர்கள் தங்களுக்கு விருப்பமான அரசியல் பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள அனுமதிப்பதும் தூய, பரிசுத்தமான, பரந்தமனப்பான்மை கொண்ட அறச் செயல் என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்துக்கள் எவ்வளவு காலம் இந்த அறச்சிந்தனையைக் கொண்டிருப்பார்கள்? இது நீண்டகாலம் நீடிக்காது. தீண்டப்படாதோரை தாங்கள் நடத்தும் முறை பாபகரமானது என்ற உணர்வு இந்துக்களிடம் இல்லாதபோது, இதற்காக அவர்கள் கழிவிரக்கம் கொள்ளாதபோது, கழுவாய் தேட முற்படாதபோது சங்கத்திற்கு ஆதாரசுருதியாக உள்ள அருளிரக்க உணர்வு தேயவே செய்யும், வற்றவே செய்யும்; இந்த ஈகை உணர்வு வற்றவில்லை என்று காண்பிப்பதற்கு சங்கம் நல்விளைவுகளைக் காட்டியாக வேண்டும்; தீண்டப்படாதவர்கள் சுதந்திரமானவர்களல்ல, சமய மற்றும் அரசியல் விஷயத்தில் அவர்கள் இந்துக்களை எதிர்ப்பவர்களல்ல என்பதை இந்துக்களுக்கு மெய்ப்பித்தாக வேண்டும். எனது இந்த ஆய்வு அத்தனை மிகத் துல்லியமானதாக இல்லாதிருக்கலாம். எனினும் ஹரிஜன சேவா சங்கம் ஓர் அரசியல் அமைப்பு என்பதையும் தீண்டப்படாதோர்களைக் காங்கிரசின் பிடிக்குள் கொண்டு வருவதே அதன் முழுமுதல் குறிக்கோள் என்பதையும் மறுக்க முடியாது.

இது சம்பந்தமாக சில முக்கியமான உதாரணங்களை மட்டும் இங்கு தருகிறேன்.

ஹரிஜன சேவா சங்கம் தனது ஊழியர் மாநாடுகளை அவ்வப்போது நடத்துகிறது. ''பல்வேறு மொழிவாரி மாகாணங்களில் நடைபெற்றுள்ள பணியின் முன்னேற்றத்தைப் பரிசீலிப்பதற்கும், இது சம்பந்தமான கருத்துகளையும் அனுபவங்களையும் பரிமாறிக் கொள்வதற்கும்'' இந்த மாநாடுகள் நடத்தப்படுவதாக வெளிஉலகத்துக்கு கூறப்பட்டு வந்தது. ஆனால் இது சீரணிக்க, ஏற்கத்தக்க உண்மையல்ல என்று எல்லோருக்கும் தெரியும். உதாரணமாக 1939 ஜூன் முதல் வாரத்தில் புனாவில் நடைபெற்ற மாநாட்டை எடுத்துக் கொள்வோம். இந்த மாநாட்டில் என்ன தீர்மானம் நிறைவேற்றப் பட இருந்தது தெரியுமா? புனா ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் வாக்களிப்பு முறையை மாற்ற வேண்டும் என்றும், குவிப்பு வாக்களிப்பு முறைக்குப் பதிலாக பகிர்ந்தளிப்பு வாக்களிப்பு முறையைக் கொண்டுவர வேண்டும் என்றும் அரசாங்கத்தைக் கோரும் ஒரு தீர்மானத்தை இம்மாநாட்டில் நிறைவேற்றத் திட்டமிடப்பட்டிருந்தது. புனா ஒப்பந்த சரணாகதிக்குப் பிறகு, பகிர்ந்தளிப்பு வாக்களிப்பு முறையை ஏற்க வேண்டுமென்று காங்கிரஸ் எவ்வாறு வலியுறுத்தி வந்தது என்பதனையும், குவிப்பு வாக்களிப்பு முறை தீண்டப் படாதோருக்கு அபாயகரமானது, அது புனா ஒப்பந்தத்தை செல்லாக்காசாக்கி விடும் என்றெல்லாம் காங்கிரஸ் எவ்விதம் ஓயாது ஒழியாது பிரசாரம் செய்து வந்துள்ளது என்பதையும் நான் ஏற்கெனவே சுட்டிக்காட்டியிருக்கிறேன். ஆனால் இந்த முயற்சியில் காங்கிரஸ் படுதோல்வியைத் தான் தழுவியது. காங்கிரஸ் செய்யத் தவறியதை சங்கம் செய்ய முனைந்து ஈடுபட்டது; பகிர்ந்தளிப்பு வாக்களிப்பு முறையை தீண்டப்படாதவர்கள் கடுமையாக, வன்மையாக எதிர்க்கிறார்கள் என்பதை நன்கு தெரிந்திருந்தும் அந்த வாக்களிப்பு முறைக்கு 'வக்காலத்து' வாங்குவதில் தீவிரம் காட்டிற்று. அதற்கு ஆதரவாக தீர்மானம் நிறைவேற்றவும் திட்டமிட்டது. ஒரு கட்சி சார்பற்ற அமைப்பு நிறைவேற்ற எண்ணும் தீர்மானத்தின் லட்சணத்தைப் பாருங்கள்! மூக்கமுட்டக் குடிக்கும் ஒரு 'மிடா' குடிகாரன் தான் மதுவை கண்ணால் கூடப் பார்த்ததில்லை என்று கதைத்து மற்றவர்களை நம்பவைக்க முயன்ற கதையாகத்தான் இது இருக்கிறது. தீண்டப்படாதவர்கள் இதை எதிர்த்துப் பெரும் ஆர்ப்பாட்டம் நடத்தியதால் சங்கம் இத்தகைய தீர்மானத்தை நிறைவேற்றாதபடி தடுக்கப்பட்டது.

பம்பாயில் வசிக்கும் சில தீண்டப்படாத சமூகத்தினர் காங்கிரஸ்-எதிர்ப்புப் போக்கைக் கடைப்பிடித்து வந்ததன் காரணமாக, ஹரிஜன சேவா சங்கத்தின் பம்பாய்க் கிளை அவர்கள் விஷயத்தில்

பழிவாங்கும் கொள்கையை மேற்கொண்டது. இந்தச் சமூகங்களைச் சேர்ந்த மாணவர்களுக்கு உபகாரச் சம்பளங்களும் ஏனைய கல்வி உதவிகளும் மறுக்கப்பட்டன. தீண்டப்படாதவர்களது அரசியல் இயக்கத்தின் ஈட்டிமுனையாக விளங்கும் மகர் சமூகம் நீண்ட நெடுங் காலமாக காங்கிரசை எதிர்த்துப் போராடி வந்துள்ளது; இதன் காரணமாக அந்த சமூகம் பல வழிகளிலும் பழிவாங்கப்பட்டு வந்தது; அந்த சமூகத்தைச் சேர்ந்த ஒரு மாணவன் தனது சமூகத்தின் காங்கிரஸ் எதிர்ப்பு உணர்வுகளைத் தான் ஆதரிக்கவில்லை என்று மெய்ப் பித்தாலொழிய அவன் விஷயத்தில் பல்வேறு வகைகளிலும் பாரபட்சம் காட்டப்பட்டு வந்தது.

கடைசியாக இது சம்பந்தமாக நான் குறிப்பிட விரும்பும் நிகழ்ச்சி ஹரிஜன சேவா சங்கத்தின் பொதுச் செயலாளரான திரு. ஏ.வி. தாக்கர் சம்பந்தப்பட்டதாகும். திரு. தாக்கர் பம்பாய் அரசாங்கத்தின் பிற்பட்ட வகுப்பினர் குழுமத்திலும் உறுப்பினர். இக்குழுமம் 1929ல் அமைக்கப்பட்டது. அது அவ்வப்போது கூடி தீண்டப்படாதவர்கள் மற்றும் ஏனைய பிற்பட்ட வகுப்பினர் சம்பந்தப்பட்ட விஷயங்களில் ஆலோசனை கூறிவந்தது.

குழுமத்தின் கூட்டம் ஒன்றில் திரு. தாக்கர் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார்; தீண்டப்படாத மாணவர்களுக்கு அரசாங்கம் வழங்கும் உபகாரச் சம்பளங்கள் மகர் சமூகத்தைச் சேர்ந்த மாணவர்களுக்கு அளிக்கப்படக் கூடாது என்று தமது தீர்மானத்தில் பரிந்துரைத்தார்; மகர் சமூகம் கல்வித்துறையில் வெகுதூரம் முன்னேறி விட்டது என்றும், அப்படியிருக்கும்போது அவர்களுக்கு உபகாரச் சம்பளங்கள் வழங்குவது ஏனைய தீண்டப்படாத சமூகத்தினருக்கும், பிற்பட்ட சமூகத்தினருக்கும் சேர வேண்டிய பங்கை அபகரிக்கும் கொடிய செயலாகும் என்றும் அவர் குதர்க்கவாதம் பேசினார். இந்தத் தீர்மானத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கும் கருத்துகள் உண்மையானவைதானா எனக் கண்டறிய விசாரணைக்கு அனுப்பப்பட்டது. இதன்படி நடைபெற்ற விசாரணையில் தீர்மானத்தில் கூறப்பட்டிருக்கும் விவரங்கள் தவறானவை என்பதும், மகர்கள் முன்னேறிய சமூகத்தினர் அல்ல என்பதும், உண்மையில் இதர தீண்டப்படாத சமூகங்களுடன் ஒப்பிடும்போது அவர்கள் கல்வித்துறையில் மிகவும் பின்தங்கியிருக்கின்றனர் என்பதும் துலாம்பரமாகத் தெரியவந்தது. காங்கிரஸ் எதிர்ப்பு அரசியல் போக்குடைய மகர்களைத் தண்டிப்பதற்கு ஹரிஜன சேவா சங்கத்தின் பொதுச் செயலாளரே மேற்கொண்ட

ஓர் அரசியல் சூழ்ச்சிதான் இந்தத் தீர்மானம் என்பது வெட்ட வெளிச்சமாயிற்று.

இவை எல்லாம் எதைக் காட்டுகின்றன? ஹரிஜன சேவா சங்கம் என்பது பெயரளவில்தான் ஓர் அறச்சிந்தனை அமைப்பே தவிர, மற்றபடி தீண்டப்படாதவர்களை இந்துக்களுக்கும் காங்கிரசுக்கும் பாதசேவை செய்பவர்களாக ஆக்குவதும், இந்துக்களது சமூக, சமய, பொருளாதார, அரசியல் ஆதிக்கத்திலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ளும் நோக்கத்தோடு அவர்கள் தொடங்கும் எந்த இயக்கத்தையும் முளையிலேயே கிள்ளியெறிவதும்தான் சங்கத்தின் உண்மையான குறிக்கோளாகும் என்பதையும் இது காட்டவில்லையா? எனவே, ஹரிஜன சேவா சங்கத்தை கருணையின் மூலம் தங்களைக் கொல்லும் மிகுந்த அருவருப்பு கொண்ட ஓர் இழிவான அமைப்பாக தீண்டப்படாதோர் கருதுவதில் என்ன வியப்பு இருக்க முடியும்?



## இயல் 6

# ஒரு தவறான கூற்று

## I

காங்கிரஸ்தான் இந்திய மக்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் இந்தியாவின் ஒரே அரசியல் நிறுவனம் என்று அது வலியுறுத்தி வருகிறது; மண்ணுக்கும் விண்ணுக்கும் எட்ட உரிமை கொண்டாடி வருகிறது. அதுமட்டுமல்ல, முசல்மான்களையும் கூட தான் பிரதிநிதித்துவப்படுத்துவதாக ஒரு சமயம் அது உரிமை கொண்டாடி வந்தது. இப்போது அது இவ்வாறு உரிமை கொண்டாடுவதில்லை; எப்படியிருந்தாலும் உரத்து முழக்கமிடுவதில்லை; அல்லது விடாப்பிடியாக இதை வலியுறுத்துவதில்லை. ஆனால் தீண்டப்படாதவர்களைப் பொறுத்தவரையில் தான்தான் அவர்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதாக காங்கிரஸ் மிகவும் அழுத்தம் திருத்தமாக முயலுக்கு மூன்றே கால் என்று சாதித்து வருகிறது. ஆனால் காங்கிரஸ் அல்லாத அரசியல் கட்சிகள் எப்போதுமே இதனை மறுத்து வந்துள்ளன. தீண்டப்படாதவர்களும் காங்கிரஸ் தங்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதாக உரிமை கொண்டாடி வருவதை மறுதலிப்பதற்கு என்றுமே தயங்கியதில்லை.

இந்தக் கடுமையான போட்டியில் விளம்பரத்திலும் பிரசாரத்திலும் தனக்குள்ள அபரிமிதமான வாய்ப்பு வளங்களைக் கொண்டு தீண்டப்படாதவர்களையும் இதர காங்கிரஸ் அல்லாத கட்சிகளையும் காங்கிரஸ் பின்னடையச் செய்திருக்கிறது. இதன் விளைவு என்ன? இந்திய விவகாரங்களில் அக்கறை கொண்ட பெரும்பாலான அயல் நாட்டினர் இந்தப் பிரசார மாயைக்கு இரையாகி இருக்கின்றனர்; காங்கிரசின் கூற்றை உண்மையென நம்பவும் தொடங்கியுள்ளனர். பிரசாரம் ஒன்றையே உலகம் சார்ந்திருக்க வேண்டிய சூழ்நிலைமை நிலவும் வரை அயல்நாட்டவரை காங்கிரஸ் வெகு எளிதாக ஏமாற்றி விட முடிந்தது. எல்லோரையும் தான்தான் பிரதிநிதித்துவப்படுத்துவதாக காங்கிரஸ் உரிமை கொண்டாடி வருவதை மறுக்கும் ஏனையோருக்கு எத்தகைய பக்கபலமும் இல்லாதிருந்தது. நிலைமையைச் சமாளிக்க அவர்களுக்கு எந்த வாய்ப்பு வசதியும் இல்லை. ஆயினும் 1937ல் மாகாண சட்டமன்றங்களுக்கு நடைபெற்ற தேர்தல்களுக்குப் பிறகு நிலைமை மாற்றமடைந்திருக்கிறது. பிரசார பலம் கொண்ட பொதுவான அறிக்கைகளைச் சார்ந்திருப்பதற்குப் பதிலாக இப்போது தேர்தலில் ஒவ்வொரு கட்சியினரும், ஒவ்வொரு சமூகத்தினரும் பெற்ற

இடங்களையும் வாக்குகளையும் கொண்டு இப்பிரச்சினையில் திட்ட வட்டமாக முடிவுக்கு வரமுடியும்; வெறும் பிரசாரத்தை விட மிகவும் திட்டவட்டமாகவும் துல்லியமாகவும் நிலைமையை மதிப்பிடுவதற்கு இது மிகச்சிறந்த வழியாகும்.

தேர்தல் முடிவுகள் எதைக் காட்டுகின்றன? காங்கிரஸ் கைப்பற்றிய மொத்த இடங்கள் எத்தனை? காங்கிரஸ் பெற்ற மொத்த வாக்குகள் எவ்வளவு?

முதலாவதாக, காங்கிரஸ் கைப்பற்றிய இடங்களின் எண்ணிக்கையை உறுதிப்படுத்திக் கொள்வோம். தேர்தல்கள் நடைபெற்று முடிந்ததும், காங்கிரஸ் சார்பில் மாகாண சட்டமன்றங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அடங்கிய ஒரு விசேட மாநாட்டை காங்கிரஸ் கூட்டிற்று. 1937 மார்ச் 19, 20 தேதிகளில் இந்த மாநாடு புதுடில்லியில் நடைபெற்றது. இது தொடர்பாக காங்கிரஸ் ஒரு தகவல் பிரசுரத்தை வெளியிட்டது. சட்டமன்றத் தேர்தல்களில் வெற்றிபெற்ற காங்கிரஸ் உறுப்பினர்களின் பெயர்கள் அதில் வெளியிடப்பட்டிருந்தன. அந்தத் தகவல்கள் துல்லியமாக இருக்கக்கூடும் என்ற கருத்தில் ஒவ்வொரு மாகாண சட்டமன்றத்திலும் காங்கிரசின் பலம் பின்வருமாறு அமைந்திருந்தது:

அட்டவணை - 6

மாகாண சட்டமன்றங்களில் காங்கிரசின் பலம்

| மாகாணம் | சட்டமன்றத்தின் மொத்த இடங்கள் | சட்டமன்றத்தில் காங்கிரசின் பலம் |
|---|---|---|
| அசாம் ... ... | 108 | 35 |
| வங்காளம் ... ... | 250 | 60 |
| பீகார் ... ... | 152 | 95 |
| பம்பாய் ... ... | 175 | 85 |
| மத்திய மாகாணம் மற்றும் பேரார் ... ... | 112 | 70 |
| சென்னை ... ... | 215 | 159 |
| ஒரிசா ... ... | 60 | 36 |
| பஞ்சாப் ... ... | 175 | 18 |
| சிந்து ... ... | 60 | 8 |
| ஐக்கிய மாகாணங்கள் ... | 228 | 134 |
| வ.மே.எ.மா. ... ... | 50 | 19 |
| மொத்தம் ... ... | 1585 | 719 |

அட்டவணை - 7

மாகாண மேலவைகளில் காங்கிரஸ் பலம்

| மாகாணம் | மொத்த மேலவை இடங்கள் | மேலவையில் காங்கிரசின் பலம் |
|---|---|---|
| அசாம் ... ... | 18 | இல்லை |
| வங்காளம் ... ... | 57 | 10 |
| பீகார் ... ... | 26 | 8 |
| பம்பாய் ... ... | 26 | 14 |
| சென்னை ... ... | 46 | 26 |
| மொத்தம் | 173 | 58 |

இரண்டு அவைகளையும் எடுத்துக்கொண்டால் மொத்த இடங்கள் 1,758ல் காங்கிரஸ் 777 இடங்கள் பெற்றிருப்பதை இந்த அட்டவணைகள் காட்டுகின்றன. காங்கிரஸ் பெரும்பான்மை கட்சி அல்ல என்பது இதிலிருந்து தெளிவாகிறது. மொத்த இடங்களில் பாதியைக்கூட அது பெறவில்லை.

இடங்களின் எண்ணிக்கையைப் பொறுத்தவரையில் காங்கிரசின் நிலைமை இதுதான். வாக்காளர் பலத்தைப் பொறுத்தவரையில் காங்கிரசின் நிலைமை என்ன? வாக்காளர் எண்ணிக்கையில் கூட காங்கிரஸ் சிறுபான்மையாகவே இருப்பதைப் பின்வரும் அட்டவணையிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

அட்டவணை 8

## தேர்தலில் காங்கிரசும் காங்கிரஸ் அல்லாத கட்சிகளும் பெற்ற வாக்குகளின் விவரம்

| மாகாணம் | | மொத்த வாக்குகள் | காங்கிரஸ் பெற்ற வாக்குகள் | காங்கிரஸ் அல்லாத கட்சிகளுக்குக் கிடைத்த வாக்குகள் |
|---|---|---|---|---|
| சென்னை | கீழவை | 4,327,734 | 2,658,966 | 1,668,768 |
| | மேலவை | 33,511 | 16,907 | 16,604 |
| பம்பாய் | கீழவை | 3,408,308 | 1,568,093 | 1,840,215 |
| | மேலவை | 23,730 | 9,420 | 14,310 |
| வங்காளம் | கீழவை | 3,475,730 | 1,055,900 | 2,419,830 |
| | மேலவை | 5,593 | 1,489 | 4,104 |
| உ.பி. | கீழவை | 3,362,736 | 1,899,325 | 1,463,411 |
| | மேலவை | 9,795 | 1,580 | 8,215 |
| பீகார் | கீழவை | 1,477,668 | 992,642 | 1,529,669 |
| | மேலவை | 4,318 | 96 | 4,222 |
| பஞ்சாப் | கீழவை | 1,710,934 | 181,265 | 1,529,669 |
| ம.மா. | கீழவை | 1,317,461 | 678,265 | 639,196 |
| அசாம் | கீழவை | 522,332 | 129,218 | 393,114 |
| | மேலவை | 2,623 | இல்லை | 2,623 |
| வ.மே.எ.மா. | கீழவை | 179,529 | 43,845 | 135,684 |
| ஒரிசா | கீழவை | 304,749 | 198,680 | 106,069 |
| சிந்து | கீழவை | 333,589 | 18,944 | 314,645 |
| மொத்தம் | | 20,500,340 | 9,454,635 | 11,04,705 |

இந்தப் புள்ளிவிவரங்களைத் தெரிந்துகொள்வது மட்டும் போதாது. இதர சந்தர்ப்ப சூழ்நிலைமைகளையும் கருத்தில் கொண்டு அவற்றைப் படிக்க வேண்டும். இத்தகைய முதலாவது சந்தர்ப்ப சூழ்நிலை வாக்குரிமையின் அளவாகும். மற்றொன்று தேர்தலில் இரு கட்சிகளின் ஒப்பீட்டு நிலைமையாகும். இந்த இரண்டு அம்சங் களையும் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல் தேர்தல் முடிவுகளின் முக்கியத்துவம் முழுவதையும் புரிந்துகொள்வது சாத்தியமல்ல. வாக்குரிமையைப் பொறுத்தவரையில் மிக அதிகம்; ஆனால் மொத்த மக்கட் தொகையுடன் ஒப்பிடும்போது வாக்காளர் தொகுதி உண்மையில் மிகவும் குறைவு. எவ்வாறு மக்கட் தொகையில் ஒரு சிறு பகுதி வாக்காளர் தொகுதியாக அமைந்திருக்கிறது என்பதை கீழ்க்கண்ட அட்டவணையில் தரப்பட்டுள்ள புள்ளி விவரங்களி லிருந்து தெரிந்து கொள்ளலாம்.

அட்டவணை - 9

| மாகாணம் | மக்கட் தொகை (1931) | வாக்காளர்கள் |
|---|---|---|
| சென்னை | 47,193,602 | 6,145,450 |
| பம்பாயும் சிந்தும் | 26,398,997 | 3,249,500 |
| வங்காளம் | 51,087,338 | 6,695,483 |
| உ.பி. | 49,614,833 | 5,335,309 |
| பஞ்சாப் | 24,018,639 | 2,686,094 |
| பீகாரும் ஒரிசாவும் | 42,329,583 | 2,932,454 |
| ம.மா. | 17,990,937 | 1,741,364 |
| அசாம் | 9,247,857 | 815,341 |
| வ.மே.எ.மா. | 4,684,364 | 246,609 |
| மொத்தம் | 272,566,150 | 29,847,604 |

மொத்த மக்கட்தொகையில் சுமார் 10 சதவீதத்தினர் மட்டுமே வாக்களிக்கும் உரிமை பெற்றுள்ளனர். வாக்களிக்கும் தகுதி மிக உயர்வாக நிர்ணயிக்கப்பட்டதால் மத்தியதர மற்றும் அறிவுத்துறை வர்க்கத்தினரே வாக்காளர் பட்டியலில் மிகப் பெரும் இடத்தைப் பெற்றுள்ளனர்; இந்த இரு வர்க்கத்தினருமே தீவிர காங்கிரஸ் ஆதரவாளர்கள் ஆவர். காங்கிரஸ் கட்சியின் மற்றும் காங்கிரஸ் அல்லாத கட்சிகளின் ஒப்பீட்டு நிலைமையைப் பரிசீலிக்கும்போது பின்கண்ட விசேட அம்சங்களைக் கருத்திற் கொள்வது அவசியம். காங்கிரசிடம் தேர்தல் களத்திற்கான பணவசதி, ஸ்தாபன அமைப்பு போன்ற எல்லாப் போர்த்தளவாடங்களும் குவிந்திருந்தன. காங்கிரஸ் அல்லாத வேட்பாளர்களுக்கோ பணபலமும் ஸ்தாபன பலமும் இல்லை. காங்கிரஸ் வேட்பாளர்கள் பொதுமக்களின் செல்லப்பிள்ளைகளாக இருந்தனர். அவர்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பரம வைரிகளாகவும், நாட்டின் விடுதலைக்காகவும் சுதந்திரத்திற்காகவும் போராடுபவர்களாகவும் இருந்தனர். சிறைவாழ்க்கை காங்கிரஸ் வேட்பாளர்களுக்கு தியாகிகள் என்னும் ஒளிவட்டத்தை அளித்தது. சிறைக்குச் செல்லாத எவரும் காங்கிரஸ் வேட்பாளராகத் தேர்ந்தெடுக்கப்படக் கூடாது என்ற பொது விதி கடைப்பிடிக்கப்பட்டது. காங்கிரஸ் அல்லாத வேட்பாளர்கள் பிரிட்டிஷாரின் கைப்பாவைகளாக, நாட்டுக்காக சேவையோ, தியாகமோ செய்யாதவர்களாக, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஏஜெண்டுகளாக, கூலிக்கு மாரடிப்பவர்களாக, துண்டு துணுக்குகளுக்காக நாட்டின் நலன்களைப் பேரம்பேசி விற்பவர்களாக காங்கிரஸ்காரர்களால், பத்திரிகைகளால் படம்பிடித்துக் காட்டப்பட்டனர்; இந்தியாவில் காங்கிரஸ் பத்திரிகைகள் தவிர வேறு பத்திரிகைகள் எவையும் இல்லை என்பதை ஏற்கெனவே கூறியிருக்கிறேன். காங்கிரஸ் வேட்பாளர்களுக்குச் சாதகமாகவும், காங்கிரசல்லாத வேட்பாளர்களுக்குப் பாதகமாகவும் இருந்த மற்றொரு அம்சத்தையும் இங்கு குறிப்பிட வேண்டும். 1920 ஆம் வருட மாண்டேகு- செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களை காங்கிரஸ் பகிஷ்கரித்து விட்டது; எனவே, நாட்டின் நிர்வாகம் சம்பந்தப்பட்ட சீர்கேடுகளுக்கும் குறைபாடுகளுக்கும் காங்கிரஸ் வேட்பாளர்கள் பதிலளிக்க வேண்டியிருக்கவில்லை. காங்கிரஸல்லாத வேட்பாளர்களின் நிலைமை அப்படியல்ல; இந்தச் சீர்திருத்தங்களைச் செயல்படுத்தி, நிர்வாகப் பொறுப்புகளைத் துணிச்சலோடு ஏற்றுக்கொண்டோரின் மத்தியிலிருந்து வந்தவர்கள் இவர்கள். எனவே, அவர்களது ஆட்சியின்போது நேரிட்ட பல தவறுகளுக்கும், குற்றம் குறைகளுக்கும், பெரும் பிழைகளுக்கும் காங்கிரசல்லாத வேட்பாளர்கள் பதிலளிக்க வேண்டியிருந்தது. அதுமட்டுமல்ல, காங்கிரசல்லாத கட்சிகள் தாம் வகித்த பதவிகளைத்

துஷ்பிரயோகம் செய்து அவற்றை மாசுபடுத்திவிட்டன என்று குற்றம் சாட்டப்பட்டது; இந்தப் பழி அக்கட்சிகளைச் சேர்ந்த வேட்பாளர்கள் மீதும் விழுந்தது. ஆனால் அதேசமயம் காங்கிரஸ் வேட்பாளர்களோ இந்த அழுக்குகளையும் இழுக்குகளையும் துடைத்தெறியப் போகும் தேவதூதர்களாக சித்தரிக்கப்பட்டு, தலைமீது தூக்கிவைத்துக் கொண்டாடப்பட்டனர். இத்தகைய சூழ்நிலைமையில், தராசு காங்கிரஸ் பக்கம் எவ்வாறு சாய்ந்திருந்தது, பகடைக் காய்கள் அவர்களுக்கு எவ்வாறு சாதகமாக இருந்தன என்பதைக் கண்டவர்கள் தேர்தலில் காங்கிரசின் நிலை பரிதாபகரமாக இருந்ததைக் கண்டு வியப்படையாமல் இருக்க முடியாது. அபரிமிதமான வாய்ப்பு வளங்களையும், பெரும் செல்வாக்கையும், பொதுமக்களின் ஆதரவையும் அனுதாபத்தையும் பெற்றிருந்த காங்கிரஸ் நியாயமாக மிக அமோகமாக வெற்றி பெற்றிருக்க வேண்டும். ஆனால் மொத்த இடங்களிலும் சரி, வாக்குகளிலும் சரி காங்கிரசால் ஐம்பது சதவீதத்தைக் கூடப் பெற முடியாமற் போனது பரிதாபகரமானதாகும்.

எல்லா வர்க்கங்களையும் சமூகங்களையும் பிரதிநிதித்துவப் படுத்துவதாக காங்கிரஸ் கொண்டாடும் உரிமை உண்மையில் ஆதார அடிப்படையில்லாத வெற்றுக் கோஷம்தான் என்பதில் இதற்கு மேலும் ஐயம் ஏதும் இருக்க முடியுமா?

## II

தீண்டப்படாதவர்களை தான் பிரதிநிதித்துவப்படுத்துவதாக காங்கிரஸ் உரிமை கொண்டாடுவதைப் பற்றி இனி பார்ப்போம். 1937ல் நடைபெற்ற தேர்தல் முடிவுகளை அடிப்படையாக வைத்து இந்த உரிமை கொண்டாடலைப் பற்றி இப்போது நாம் முடிவு செய்ய முடியும். தீண்டப்படாதவர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்கு வகுக்கப்பட்ட தேர்தல் திட்டம் குறித்து நன்கு அறியாதவர்கள் காங்கிரசுக்கும் தீண்டப்படாதோருக்கும் இடையே நடைபெற்ற தேர்தல் போட்டிகளின் முடிவுகளைச் சரியாகப் புரிந்துகொள்வது சாத்தியமில்லை என்று அஞ்சுகிறேன். எனவே, குறிப்பாக அயல்நாட்டினருக்காக இந்தியாவின் தேர்தல் முறையை முதலில் விளக்கிக் கூறுவது அவசியம் என்று கருதுகிறேன். தேர்தல் முறையில் அடங்கியுள்ள பின்வரும் நான்கு அம்சங்களை இங்கு முக்கியமாகக் குறிப்பிட வேண்டும்: (1) வாக்காளர் தொகுதிகள், (2) வாக்களிக்கும் உரிமை, (3) தேர்தலில் வேட்பாளராக நிற்கும் உரிமை, (4) யார் வெற்றி பெற்ற வேட்பாளர் என்பதை நிர்ணயிக்கும் விதிமுறைகள்.

1. 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி அங்கீ கரிக்கப்பட்ட இரண்டு விதமான வாக்காளர் தொகுதிகள் உள்ளன.

(1) பிரதேச ரீதியல்லாதவை

(2) பிரதேச ரீதியானவை

2. பிரதேச ரீதியல்லாத வாக்காளர் தொகுதிகள் என்பவை நிலப் பிரபுக்கள், வர்த்தக சபைகள், தொழிற்சங்கங்கள் போன்ற விசேட நலன்களுக்கு பிரதிநிதித்துவம் அளிக்கும் நோக்கம் கொண்டவை.

3. பிரதேச ரீதியான வாக்காளர் தொகுதிகள் மூன்று வகைப்படும்:

(i) தனியான பிரதேச ரீதியான வாக்காளர் தொகுதிகள்; இவை தனி வாக்காளர் தொகுதிகள் எனச் சுருக்கமாக அழைக்கப் படுகின்றன.

(ii) பொது பிரதேச ரீதியான வாக்காளர் தொகுதிகள்

(iii) தனி இடங்கள் ஒதுக்கப்பட்ட கூட்டு பிரதேச ரீதியான வாக்காளர் தொகுதிகள்; இவை பொதுவாக கூட்டுத் தொகுதிகள் என அழைக்கப்படுகின்றன.

4. தனி வாக்காளர் தொகுதிகள் என்பவை வகுப்புவாரித் தொகுதி களாகும். இவை முஸ்லீம்கள், இந்தியக் கிறித்தவர்கள், ஐரோப்பியர் கள், ஆங்கிலோ-இந்தியர்கள் போன்ற குறிப்பிட்ட வகுப்பினர் களுக்கு பிரதிநிதித்துவம் அளிப்பதற்காக உருவாக்கப்பட்டவை. ஒரு குறிப்பிட்ட பிரதேசத்திலுள்ள இந்த வகுப்புகள் ஒவ்வொன்றையும் சேர்ந்த வாக்காளர்கள் மற்றவர்களிடமிருந்து பிரிக்கப்பட்டு தனி வாக்காளர் தொகுதிகளாக அமைக்கப்படுகின்றனர். இவர்கள் முற்றி லும் தங்கள் சொந்த வாக்குகளைக் கொண்டு தங்கள் சமூகத்தைச் சேர்ந்த ஒரு வாக்காளரைத் தங்கள் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கின் றனர். தனி வாக்காளர் தொகுதியின் ஒரு முக்கியமான அம்சம் என்ன வென்றால், தனி வாக்காளர் பட்டியல் மூலம் நடைபெறும் தேர்தலில் ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சேர்ந்த வாக்காளர்களே வாக்களிக்க முடியும்; அவ்வாறே அவர்கள் தான் தேர்தலில் போட்டியிடவும் முடியும். அது ஒரு முஸ்லீம் தொகுதியாக இருந்தால் வாக்காளரும் சரி, வேட்பாளரும் சரி முசல்மானாகவே இருக்க வேண்டும்; அது ஒரு கிறித்தவத் தொகுதியாக இருந்தால் வாக்காளரும் வேட்பாளரும்

கிறித்தவராகவே இருக்க வேண்டும், இத்யாதி. ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சேர்ந்த வாக்காளர்கள் அளித்த பெரும்பான்மையான வாக்குகளைக் கொண்டு தேர்தல் முடிவு தீர்மானிக்கப்படுகிறது.

5. ஒரு பொதுத் தொகுதி என்பது தனித் தொகுதி முறைக்கு வெளியே உள்ள ஒரு பிரதேசத்தில் வசிக்கும் எல்லா சமூகங்களையும் சேர்ந்த வாக்காளர்களையும் கொண்ட ஒரு தொகுதியாகும். இதில் எந்த ஒரு சமூகமோ, சமயமோ எத்தகைய முக்கியத்துவமும் பெறாததால் இது பொதுத் தொகுதி எனப்படுகிறது. முஸ்லீம்கள், இந்தியக் கிறித்தவர்கள், ஐரோப்பியர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் தவிர்த்த ஏனைய வாக்காளர்கள் அடங்கிய தொகுதி என இதனைக் கூறலாம். ஒரு பொதுத் தொகுதியில்:

(i) தனித்தொகுதியைச் சேர்ந்த ஒரு வாக்காளருக்கு வாக்களிக்கவோ அல்லது தேர்தலில் நிற்கவோ உரிமை இல்லை.

(ii) இதன் வாக்காளர் பட்டியலில் இடம் பெற்றுள்ள ஒவ்வொரு வாக்காளரும் சாதி, மத, வகுப்புப் பாகுபாடின்றி வாக்களிக்கவும், தேர்தலில் நிற்கவும் உரிமை பெற்றிருக்கிறார்.

(iii) வாக்களிக்கப்பட்ட வாக்குகளில் சாதாரண பெரும்பான்மையைக் கொண்டு தேர்தல் முடிவு தீர்மானிக்கப்படுகிறது.

6. கூட்டுத்தொகுதி என்பது தனித்தொகுதியும் பொதுத் தொகுதியும் இணைந்த ஒரு கலப்புத் தொகுதியாகும். தனித் தொகுதியுடனும் பொதுத் தொகுதியுடன் இது சில பொது அம்சங்களைக் கொண்டுள்ளது. ஆனால் அதேசமயம் இதர பல அம்சங்களில் அது வேறுபடுகிறது. இதில் உடன்பாடான அம்சங்களும் வேறுபட்ட அம்சங்களும் கீழே தரப்படுகின்றன:

**(i) தனித் தொகுதியுடன் கூட்டுத் தொகுதியின் ஒப்பீடு**

*(1)* ஒரு குறிப்பிட்ட சமூகத்திற்கு ஓர் இடத்தை ஒதுக்க வேண்டும் என்ற நோக்கம் கொண்டிருக்கும் வகையில் கூட்டுத்தொகுதியும் தனித்தொகுதியும் ஒத்த இயல்பை கொண்டிருக்கின்றன.

*(2)* கூட்டுத் தொகுதி தனித்தொகுதியிலிருந்து பின்கண்ட இரண்டு அம்சங்களில் வேறுபடுகிறது :

(அ) தனித்தொகுதியில் வாக்களிக்கும் உரிமை அந்த இடம் எந்த சமூகத்திற்கு ஒதுக்கப்பட்டிருக்கிறதோ அந்த சமூகத்தைச் சேர்ந்த வாக்காளர்களுக்கு மட்டுமே உண்டு. ஆனால் கூட்டுத்தொகுதியில், அதன் இடம் ஒரு குறிப்பிட்ட சமூகத்துக்கு ஒதுக்கப்பட்டிருந்தாலும், வேறுவிதமாகச் சொன்னால் தேர்தலில் போட்டியிடும் உரிமை குறிப்பிட்ட சமூகத்தைச் சேர்ந்த உறுப்பினருக்கு மட்டுமே உண்டு என்ற போதிலும் அந்த இடத்திற்காக நடைபெறும் தேர்தலில் பொதுத் தொகுதியைப்போல் ஏனைய சமூகத்தினரும் வாக்களிக்க உரிமை பெற்றிருக்கின்றனர்.

(ஆ) இவ்விரண்டு சந்தர்ப்பங்களிலும் பெரும்பான்மை வாக்குகளின் அடிப்படையில் தேர்தல் முடிவு அறிவிக்கப் படுகிறது. ஆனால் தனித்தொகுதி விஷயத்தில் வேட்பாளர் எந்த சமூகத்தைச் சேர்ந்தவரோ அந்த சமூகத்தைச் சேர்ந்த பெரும்பான்மையான வாக்காளர்களின் வாக்குகளைப் பெற்றிருக்க வேண்டும். ஆனால் அதேசமயம் கூட்டுத் தொகுதியில் பெரும்பான்மை என்பது வேட்பாளர் சார்ந்துள்ள வாக்காளர்களின் பெரும்பான்மையாக இருக்க வேண்டும் என்பதில்லை.

**(ii)** பொதுத் தொகுதியுடன் கூட்டுத் தொகுதியின் ஒப்பீடு

(1) கூட்டுத்தொகுதி ஒரு விஷயத்தில் பொதுத் தொகுதியை ஒத்ததாக இருக்கிறது: அதாவது இவ்விரண்டிலுமே ஒரு வாக்காளர் பொதுத் தொகுதியில் போட்டியிடும் எந்த ஒரு வேட்பாளருக்கும் வாக்களிக்க உரிமை பெற்றிருக்கிறார்.

(2) ஒரு கூட்டுத் தொகுதி ஒரு தனித்தொகுதியிலிருந்து இரண்டு அம்சங்களில் வேறுபடுகிறது:

(அ) ஒரு பொதுத் தொகுதி ஒரே ஒரு உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும் தொகுதியாக இருக்கலாம். ஆனால் கூட்டுத் தொகுதி பொதுத் தொகுதிக்கு ஒருவரும் தனித்தொகுதிக்கு ஒருவருமாக குறைந்தபட்சம் இரு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் தொகுதியாக இருக்க வேண்டும்.

(ஆ) பொதுத் தொகுதியில் எந்த ஒரு சமூகத்துக்கும் இட ஒதுக்கீடு செய்யப்படுவதில்லை. ஆனால் கூட்டுத் தொகுதியில் குறைந்தபட்சம் ஓரிடமாவது ஒதுக்கீடு செய்யப்பட வேண்டும்.

7. கூட்டுத் தொகுதியின் விசேட அம்சங்கள்

ஒரு கூட்டுத்தொகுதி என்பது இடஒதுக்கீடு செய்யப்பட்ட ஒரு பொதுத் தொகுதியாக பின்கண்ட அம்சங்களுடன் அமைந்திருக்கும்:

(1) பொதுத் தொகுதி என்பது ஒரே உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும் தொகுதியாகக் கூட இருக்கலாம். ஆனால் கூட்டுத் தொகுதி ஒன்றுக்கு மேற்பட்ட உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் தொகுதியாக இருப்பது அவசியம்.

(2) பொதுத்தொகுதியில் தேர்தல் மூலம் நிரப்பப் பட வேண்டிய இடம் அல்லது இடங்கள் எல்லோருக்குமே பொதுவானவை; தனித்தொகுதிக்கென நிர்ணயிக்கப்பட்ட வர்களைத் தவிர எல்லா சமூகங்களைச் சேர்ந்தவர்களும் போட்டியிட உரிமை பெற்றிருக்கிறார்கள்; வாக்காளர் அல் லது வேட்பாளரின் இனத்தைக் கணக்கிலெடுத்துக் கொள் ளாமல் வேட்பாளர்கள் பெற்ற பெரும்பான்மை வாக்கு களின் அடிப்படையில் தேர்தல் முடிவு தீர்மானிக்கப்படு கிறது. ஆனால் கூட்டுத் தொகுதியில் ஏதேனும் ஒரு குறிப் பிட்ட சமூகத்துக்கு குறைந்தபட்சம் ஓர் இடம் ஒதுக்கீடு செய்யப்படுகிறது: அதாவது இத்தகைய ஒதுக்கீடு செய்யப் பட்ட இடத்துக்காகப் போட்டியிடும் உரிமை அந்த சமூகத் தைச் சேர்ந்த உறுப்பினர்களுக்கு மட்டுமே உண்டு.

(3) ஒரு கூட்டுத் தொகுதியில் போட்டியிடும் உரிமை வரையறைக்குட்படுத்தப்பட்டிருந்தாலும் வாக்களிக்கும் உரிமை எவ்வகையிலும் கட்டுப்படுத்தப்பட்டிருக்கவில்லை; பொதுத் தொகுதிப் பட்டியலிலுள்ள எல்லா வாக்காளர் களுமே வாக்களிக்கலாம்; இன்னும் சொல்லப்போனால், எந்த சமூகத்திற்காக இட ஒதுக்கீடு செய்யப்பட்டிருக்கிறதோ அந்த சமூகத்தைச் சேராத ஏனைய சமூகத்தினரும்கூட ஒதுக் கப்பட்ட இடத்திற்கான வேட்பாளர் தேர்தலில் வாக்களிக்க உரிமை பெற்றிருக்கிறார்கள்.

(4) ஒதுக்கப்பட்ட இடத்திற்கான தேர்தல் முடிவை அறிவிப்பதில், வெற்றிபெறும் வேட்பாளர் அந்தச் சமூகத்தின் வாக்காளர்களில் குறிப்பிட்ட அளவு வாக்குகளைப் பெற்றாக வேண்டும் என்ற அவசியம் ஏதுமில்லை. எந்த சமூகத்திற்காக இட ஒதுக்கீடு செய்யப்பட்டிருக்கிறதோ அந்த சமூகத்தைச் சேர்ந்த வேட்பாளர் ஒருவராகவோ அல்லது ஒன்றுக்கு மேற் பட்டவர்களாகவோ இருந்தால் இவர்களில் மிக அதிகமான வாக்குகள் பெற்றவர் தேர்ந்தெடுக்கப்பட்டவராக அறி விக்கப்பட வேண்டும்; பொது சமூகத்தைச் சேர்ந்த வேறொரு வேட்பாளர் இவரைவிட அதிக வாக்குகள் பெற்றிருந்தாலும் அது இவரது தேர்தல் வெற்றியை எவ்விதத்திலும் பாதிக்காது.

இத்தகைய தேர்தல் முறைதான் இந்தியாவில் நிலவி வரு கிறது. இதில் தீண்டப்படாதவர்களுக்குப் பொருந்தக்கூடிய தேர்தல் முறைமேலே 7ஆவது இனத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் இட ஒதுக் கீட்டுடன் கூடிய கூட்டுத் தொகுதி முறையேயாகும். தீண்டப்படாத வர்களுக்கான இட ஒதுக்கீடு கோட்பாடு எவ்வாறு செயல்படுத்தப் படுகிறது என்றால் தேவையான எண்ணிக்கையில் பொதுத் தொகுதி களைப் பொறுக்கியெடுத்து அவை பன்மை உறுப்பினர் தொகுதி களாக மாற்றப்படுகின்றன; பின்னர் இத்தகைய ஒவ்வொரு தொகுதி யிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக ஒன்று அல்லது இரண்டு இடங்கள் ஒதுக்கீடு செய்யப்படுகின்றன. வெவ்வேறு மாகாணங் களிலும் வெவ்வேறு எண்ணிக்கையில் இத்தகைய கூட்டுத் தொகுதி கள் இருக்கின்றன. மாகாண சட்டமன்றத்தில் தாழ்த்தப்பட்ட வகுப் பினருக்கு ஒதுக்கப்படும் இடங்களின் எண்ணிக்கையைக் கொண்டும், ஒவ்வொரு கூட்டுத் தொகுதியிலும் அவர்களுக்கு ஒதுக்கப்படும் இடங் களின் எண்ணிக்கையைக் கொண்டும் இந்த இடங்களின் எண் ணிக்கை நிர்ணயிக்கப்படுகிறது. இந்தத் திட்டத்தின் சில அம்சங்கள் நம் கவனத்திற்குரியவையாகும்; ஏனென்றால் தேர்தல் முடிவு களின் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது அவை மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவை.

கூட்டுத்தொகுதி என்பது ஒரு பொதுத்தொகுதியாகும். ஆனால் இதைவைத்து பொது வாக்காளர்கள் அடங்கிய ஒரு தொகுதி என இதனை எண்ணிவிடக் கூடாது. ஏற்கெனவே நாம் சுட்டிக்காட்டியது போல், முஸ்லீம்கள், இந்தியக் கிறித்தவர்கள், ஆங்கிலோ-இந்தியர் கள், ஐரோப்பியர்கள் போன்றோர்க்கு தனித்தொகுதிகள் அளிக்கப் பட்டுள்ளன; இதன் காரணமாக முஸ்லீம், இந்தியக் கிறித்தவ,

ஆங்கிலோ-இந்திய ஐரோப்பிய வாக்காளர்கள் கூட்டுத் தொகுதி யிலிருந்து விலக்கப்பட்டுள்ளனர். இதன் விளைவாக, கூட்டுத் தொகுதி என்பது தாழ்த்தப்பட்ட வகுப்பினர், இந்துக்கள், பார்சிகள், யூதர்கள் இனங்களைச் சேர்ந்த வாக்காளர்கள் மட்டுமே அடங்கிய தொகுதி என்றாகிறது. பார்சிகளும், யூதர்களும் பம்பாயைத் தவிர வேறு இடங் களில் மிகமிகக் குறைந்த எண்ணிக்கையிலேயே இருப்பதால் கூட்டுத் தொகுதி என்பது உண்மையில் இந்துக்களையும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரையும் மட்டுமே கொண்டதாக இருக்கிறது.

தீண்டப்படாதவர்களுக்கு இட ஒதுக்கீடு செய்வதற்கு தேர்ந் தெடுக்கப்படும் பொதுத் தொகுதி இரட்டை உறுப்பினர் தொகுதியை விடப் பெரியதாக இருந்தாலும், ஒரு பொதுத் தொகுதியில் தீண்டப் படாதவர்களுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களை ஒதுக்கீடு செய்ய லாம் என்றாலும், பொதுவாக எல்லா மாகாணங்களிலும் இந்துக் களுக்கு ஓர் இடமும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு இன்னொரு இடமுமாக மொத்தம் இரண்டு இடங்களைக் கொண்ட இரட்டை உறுப்பினர் பொதுத் தொகுதியைத் தேர்ந்தெடுப்பதே வழக்கமாக இருந்து வருகிறது. வங்காளத்தில் மட்டும் தாழ்த்தப்பட்ட வகுப்பின ருக்கு இரண்டு இடங்களை ஒதுக்கும் மூன்று தொகுதிகள் இருக் கின்றன. கூட்டுத் தொகுதி இவ்வாறு ஓர் இணைப்புத் தொகுதியாக விளங்கிவருகிறது. இந்தக் கூட்டுத்தொகுதியின் இரண்டு அம்சங் களை இங்கு குறிப்பிடுவது அவசியம்: (1) ஒரு கூட்டுத் தொகுதியில் இந்து வாக்காளர்கள் மிக மிகப் பெரும்பான்மையினராக இல்லா விட்டாலும் ஏறத்தாழ எப்போதும் பெரும்பான்மையினராக இருந்து வருகின்றனர். அதேசமயம் தாழ்த்தப்பட்ட இன வாக்காளர்கள் மிக மிக சிறுபான்மையினராக இல்லாவிட்டாலும் ஏறத்தாழ எப்போதும் சிறுபான்மையினராகவே இருந்து வருகின்றனர். (2) தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கு ஒதுக்கப்பட்ட இடத்திற்கு நடைபெறும் தேர்த லில் போட்டியிடும் ஒரு தாழ்த்தப்பட்ட வகுப்பு வேட்பாளருக்கு ஓர் இந்து வாக்காளர் வாக்களிக்க முடியும்; அதேபோன்று, இந்துக் களுக்கான இடத்துக்காக நடைபெறும் தேர்தலில் போட்டியிடும் ஓர் இந்து வேட்பாளருக்கு தாழ்த்தப்பட்ட வகுப்பு வாக்காளர் வாக்களிக்க முடியும்.

இந்தத் தேர்தல் முறையிலுள்ள சாத்தியக் கூறுகள் என்ன? தங்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ள இடத்திற்கு தங்களது நம்பிக்கை யைப் பெற்ற தாழ்த்தப்பட்ட வகுப்பு வேட்பாளரை தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தேர்ந்தெடுப்பது சாத்தியமா அல்லது தங்களது கையாளும்

தாழ்த்தப்பட்ட வகுப்பினரது நம்பிக்கையைப் பெறாதவருமான ஒரு தாழ்த்தப்பட்ட வகுப்பு வேட்பாளரை இந்துக்கள் தேர்ந்தெடுப்பது சாத்தியமா? இந்த சாத்தியக்கூறு பின்வரும் இரண்டு அம்சங்களால் தீர்மானிக்கப்படும்: (1) இந்துக்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்களின் எண்ணிக்கை, (2) இந்துக்களிடையே நிலவும் அரசியல் நிறுவனங் களின் தன்மை. இந்துக்களுக்கு ஓர் இடம் மட்டும் ஒதுக்கப்பட்டு, அவர்கள் ஸ்தாபன ரீதியில் நன்கு அணிதிரண்டவர்களாக இருந் தால் தங்கள் இடத்துக்கான போட்டியைத் தடுக்க முடியும்; அது மட்டுமல்ல, அவர்கள் தங்கள் வாக்குகளை சிதறடிக்காமல் இருக் கும் பட்சத்தில், இந்துக்கள் நிறுத்தும் தாழ்த்தப்பட்ட வகுப்பு வேட் பாளர் வெற்றி பெறுவது திண்ணம். இதற்குக் காரணம் உண்டு: இந்துக்களின் வாக்கு பலம் மிக அதிகமானதால், தாங்கள் தேர்ந் தெடுக்கப்படுவதற்குத் தேவையான வாக்குகள் போக ஏராளமான வாக்குகள் உபரியாக இருக்கும்; தாழ்த்தப்பட்ட இனத்திலிருந்து தாங்கள் தெரிந்தெடுத்த வேட்பாளருக்கு இந்த உபரி வாக்குகளை அளித்து தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு ஒதுக்கப்பட்ட இடத்திலிருந்து அவர் வெற்றிபெற உதவ முடியும். இந்த விஷயத்தில் ஒரு அம்சம் இந்துக்களுக்குப் பெரிதும் சாதகமாக இருக்கிறது: அதாவது ஒரு கூட்டுத்தொகுதியில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு ஒதுக்கப்பட்ட இடத்தில் வெற்றி பெறுவதற்கு தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த வாக்காளர்கள் பெரும்பான்மையினராக இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை என்பதே அந்த அம்சம்.

கூட்டுத்தொகுதி முறையில் காணப்படும் இந்தப் பலவீனங் களை 1937ல் நடைபெற்ற தேர்தல்களில் காங்கிரஸ் எவ்வாறு தனது சுயநலத்திற்காகப் பயன்படுத்திக் கொண்டது என்பதை பின்னால் விளக்குகிறேன். இப்போதைக்கு, தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கும் பொருட்டு வகுக்கப்பட்ட தேர்தல் திட் டத்தையும், அதன் சில அம்சங்கள் எவ்விதம் குறைபாடுடையவை யாக இருக்கின்றன என்பதையும் உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

## III

இப்போது தேர்தல் முடிவுகள் பற்றி ஆராய ஆரம்பிப்போம். இவ்வாறு செய்வதற்கு முன்னர் ஒரு கேள்வியை கேட்பது இங்கு உசிதமாக இருக்கும்: தீண்டப்படாதவர்களை காங்கிரஸ் பிரதிநிதித் துவப்படுத்துகிறது என்ற உண்மையை 1937 ஆம் வருடத் தேர்தல்

காட்டுகிறது என்று காங்கிரஸ்காரர்கள் கூறிவருவதன் பொருள் என்ன? இதற்கு விளக்கம் பெறுவது அவசியம்; ஏனென்றால் இதனை இரண்டு வகையில் அர்த்தம் செய்து கொள்ள முடியும். தீண்டப் படாதோருக்காக ஒதுக்கப்பட்ட இடங்களுக்கான தேர்தலில் காங் கிரஸ் சார்பில் நிறுத்தப்பட்ட தீண்டப்படாத வேட்பாளர்கள் காங் கிரஸ் சார்பில் நிறுத்தப்படாத தீண்டப்படாத இன வேட்பாளர் களை எதிர்த்து வெற்றி பெற்றிருக்கின்றனர் என்று இதற்குப் பொருள் கொள்ள முடியும். இன்னொருபுறம், இதர தீண்டப்படாத இன வேட்பாளர்களை விடவும் காங்கிரஸ் சார்பில் நிறுத்தப்படாத தீண்டப்படாத இன வேட்பாளர்களை எதிர்த்து வெற்றி பெற்றி ருக்கின்றனர் என்று இதற்குப் பொருள் கொள்ள முடியும். இன்னொரு புறம், இதர தீண்டப்படாத இன வேட்பாளர்களை விடவும் காங் கிரஸ் சார்பில் போட்டியிட்ட தீண்டப்படாத இன வேட்பாளர்கள் அதிக வாக்குகளைப் பெற்றிருக்கின்றனர் என்றும் இதற்குப் பொருள் கொள்ள முடியும். இவ்விரு கண்ணோட்டங்களிலிருந்துமே இனி தேர்தல் முடிவுகளைப் பரிசீலிப்போம்.

வெற்றிபெற்ற இடங்களைப் பொறுத்தவரையில் தேர்தல் முடிவுகளை ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளோம். அந்தப் புள்ளி விவ ரங்களை மீண்டும் இங்கு தர வேண்டியதில்லை என்று கருதுகிறோம். மொத்த இடங்கள் 151ல் காங்கிரஸ் 78 இடங்களில் வெற்றி பெற்றுள் ளது. காங்கிரசுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் இடையே நடை பெற்ற போட்டியின் இந்த முடிவை தீண்டப்படாதவர்களை காங் கிரஸ் பிரதிநிதித்துவப்படுத்துகிறது என்ற அதன் வாதத்துக்கு வலு வான சான்றாகக் கொள்ள முடியாது. ஏனென்றால் காங்கிரஸ் 78 இடங்களைப் பெற்றிருக்கிறது என்றால், தீண்டப்படாதோர் 73 இடங்களைப் பெற்றுள்ளனர். இதனை நூலிழை வித்தியாசமுள்ள மிகக் கடுமையான போட்டி என்றே கூறவேண்டும்.

அடுத்து, காங்கிரஸ் சார்பில் நிறுத்தப்பட்ட தீண்டப்படாத இன வேட்பாளர்கள் பெற்ற வாக்குகளின் அடிப்படையில், தீண்டப் படாத மக்களை காங்கிரஸ்தான் பிரதிநிதித்துவப்படுத்துகிறது என்ற அதன் மற்றொரு வாதத்தை எடுத்துக் கொள்வோம். 1937 ஆம் வருடத் தேர்தலில் தீண்டப்படாத இன வாக்காளர்கள் அளித்த மொத்த வாக்கு கள் 15,86,456.

இந்த வாக்குகள் எவ்வாறு பகிர்ந்தளிக்கப்பட்டன என்பதை யும், காங்கிரஸ் சார்பில் போட்டியிட்ட தீண்டப்படாத இன வேட் பாளர்களுக்கு எத்தனை வாக்குகள் கிடைத்தன என்பதையும், அதே

சமயம் காங்கிரசல்லாத தீண்டப்படாத இன வாக்காளர்கள் எத்தனை வாக்குகள் பெற்றனர் என்பதையும் பின்கண்ட அட்டவணையிலிருந்து தெரிந்துகொள்ளலாம்:

அட்டவணை 10

தீண்டப்படாதவர்கள் அளித்த வாக்குகள்

| | தீண்டப்படாதவர்கள் அளித்த வாக்குகள் | | |
|---|---|---|---|
| | காங்கிரசுக்கு ஆதரவாக | காங்கிரசுக்கு எதிராக | தேர்தலில் தீண்டப்படாதோர் அளித்த மொத்த வாக்குகள் |
| ஐக்கிய மாகாணங்கள் | 52,609 | 79,571 | 132,180 |
| சென்னை | 126,152 | 195,464 | 321,616 |
| வங்காளம் | 59,646 | 624,797 | 684,443 |
| மத்திய மாகாணங்கள் | 19,507 | 115,354 | 134,861 |
| பம்பாய் | 12,971 | 158,076 | 171,047 |
| பீகார் | 8,654 | 22,187 | 30,841 |
| பஞ்சாப் | இல்லை | 69,126 | 69,126 |
| அசாம் | 5,320 | 22,437 | 27,757 |
| ஒரிசா | 5,878 | 8,707 | 14,585 |
| மொத்தம் | 290,737 | 1,295,719 | 1,586,456 |

ஒரு கட்சி கைப்பற்றும் இடங்களின் எண்ணிக்கை அக்கட்சிக்கு ஆதரவாக அளிக்கப்பட்ட வாக்குகளுக்கு இசைந்த விகிதாசாரத்தில் எப்போதும் இருப்பதில்லை என்பதும், பல சந்தர்ப்பங்களில் ஒரு கட்சி சிறுபான்மையான வாக்குகளில் பெரும்பாலான இடங்களைக் கைப்பற்றிவிடுகிறது என்பதும் அனைவரும் நன்கு அறிந்ததே. அதிலும் குறிப்பாக இந்தியாவில் போன்று ஒற்றை உறுப்பினர் தொகுதி முறை நிலவும்போது இது உண்மை என நிரூபிக்கப்பட்டுள்ளது. ஒரு கட்சியின் உண்மையான பலம் அக்கட்சி பெறும் வாக்குகளின் எண்ணிக்கையைக் கொண்டே மதிப்பிடப்படுகிறது. இந்த உரை

கல்லைப் பயன்படுத்திப் பார்க்கும்போது, மொத்த வாக்குகள் 15,86,456ல் 2,90,737 வாக்குகள் அதாவது பதினெட்டு சதவீத வாக்குகள் மட்டுமே காங்கிரசுக்குக் கிடைத்துள்ளன; அதேசமயம் எண்பத்து இரண்டு சதவீத வாக்குகள் காங்கிரசுக்கு எதிராகப் போடப்பட்டுள்ளன என்பது தெரியவரும். தீண்டப்படாதோரை தான் பிரதிநிதித்துவப்படுத்து வதாக காங்கிரஸ் முன்வைத்துவரும் வாதத்தை செல்லாக்காசாக்கு வதற்கு இதைவிட வேறு என்ன திட்டவட்டமான, தீர்மானமான சான்று வேண்டும்? வாக்கு பலத்தை ஓர் அளவுகோலாக ஏற்பதற்கு காங் கிரஸ்காரர்கள் மறுக்கக்கூடும். தீண்டப்படாதவர்களை காங்கிரஸ் பிரதிநிதித்துவப்படுத்துகிறது என்பதற்கு தாங்கள் கைப்பற்றிய இடங் களை ஆதாரமாகக் கொண்டு காங்கிரஸ்காரர்கள் தொடர்ந்து வாதாடக்கூடும். 151 இடங்களில் 78 இடங்கள் பெறுவதையோ அல்லது அதிக இடங்கள் ஐந்து பெற்றிருப்பதை வெளியே பெரிதும் சிலாகித்துப் பேசக்கூடிய ஒரு வெற்றியாக நல்லறிவு படைத்த எந்த மனிதனும் கருதமாட்டான். இன்னும் சொல்லப்போனால், வெற்றி பெற்ற இடங்களின் அடிப்படையில் கூட தான் தாழ்த்தப்பட்ட மக்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதாக உரிமை கொண்டாடுவது வீண்வெட்டி வேலையாகும். ஏனென்றால் தேர்தல் முடிவுகளை நுணுகி ஆராய்ந்து பார்த்தால், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக ஒதுக்கப்பட்ட இடங்களில் காங்கிரஸ் பெரும்பான்மையான இடங் களைப் பெறுவதற்குப் பதிலாக சிறுபான்மையான எண்ணிக்கை யுள்ள இடங்களையே கைப்பற்றியிருப்பதைக் காணலாம்.

காங்கிரஸ் கொண்டாடும் உரிமை நியாயமானது, போலி யானதல்ல என்பது உண்மையானால் காங்கிரஸ் வெற்றி பெற்ற 78 இடங்களில் பின்கண்டவற்றைக் கழித்துவிட வேண்டும்.

(1) இந்துக்களின் உதவியுடன் காங்கிரஸ் வெற்றிபெற்ற இடங்கள் தீண்டப்படாதவர்களின் வாக்குகளைக் கொண்டு தீர்மானிக்கப்படுவதற்கு விடப்பட்டிருந்தால் அவற்றை காங்கிரஸ் இழந்திருக்கும். எனவே இந்த இடங்களை மொத்த எண்ணிக்கையிலிருந்து கழித்துவிட வேண்டும்.

(2) பரிபூரண பெரும்பான்மை வாக்குகளால் அல்லாமல், காங்கிரஸ் கட்சி சார்பில் நிறுத்தப்பட்ட தீண்டப்படாத இன வேட்பாளரை எதிர்த்து ஏராளமான காங்கிரஸ் அல்லாத தீண்டப்படாத இன வேட்பாளர்கள் போட்டியிட்டதால் தீண்டப்படாதோரின் வாக்குகள் பிளவுபட்டதன் காரணமாக

காங்கிரஸ் கைப்பற்றிய இடங்களையும் மொத்த இடங்களி லிருந்து கழித்து விட வேண்டும்.

(3) தீண்டப்படாதவர்கள் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங் களுக்கான தேர்தலில் பொதுத்தொகுதி இடங்களுக்கு அல்லது ஒதுக்கீடு செய்யப்படாத இடங்களுக்கு நடைபெற்ற தேர்த லில் தங்கள் வாக்குகளைப் பயன்படுத்தாமல் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்களுக்கான தேர்தலில் பயன்படுத்தியிருந் தால் அவர்கள் வெற்றி பெற்றிருக்கக் கூடிய இடங்களை யும் மொத்த இடங்களிலிருந்து கழித்துவிட வேண்டும்.

இந்தக் கழித்தல்கள் செய்யப்படுவதை நியாய உணர்வு படைத்த ஒருவர் எவ்வாறு ஆட்சேபிக்க முடியும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. தீண்டப்படாதவர்கள் அல்லாத மற்றவர்களின் வாக்குகள் காரணமாக பெரும்பான்மை பெற்ற ஒரு வேட்பாளர் தன்னை தீண்டப்படாதவர்களின் பிரதிநிதி என்று கூறிக் கொள்ள உரிமை இல்லை; அதேபோல் அவர் தீண்டப்படாதோர் இனத்தைச் சேர்ந்தவர் என்ற காரணத்தாலும், காங்கிரஸ் சார்பில் தேர்தலில் போட்டியிட்டதன் காரணமாகவும் அவர் மூலம் தான் தீண்டப்படாதோரை பிரதிநிதித்துவப்படுத்துவதாக காங்கிரஸ் உரிமை கொண்டாட முடியாது. தனது எதிராளிகள் முகாமில் பிளவு ஏற்பட் டதன் காரணமாக பெரும்பான்மை பெற்ற தீண்டப்படாத இனத்தைச் சேர்ந்த ஒரு வேட்பாளரை, இந்தப் பிளவு ஏற்பட்டிருக்கவில்லை என்றால் தேர்தலில் தோல்வியைத் தழுவியிருக்கக் கூடிய ஒரு வேட்பாளரை தீண்டப்படாத மக்களின் உண்மையான பிரதிநிதி யாக ஏற்றுக் கொள்ள முடியாது; அவர் தீண்டப்படாத இனத்தைச் சேர்ந்தவர் என்பதற்காகவும் காங்கிரஸ் சார்பில் போட்டியிட்டார் என்பதற்காகவும் காங்கிரசும்தான் தீண்டப்படாதோரைப் பிரதிநிதித் துவப்படுத்துவதாக உரிமை கொண்டாட முடியாது. தீண்டப்படா தோருக்கு ஒதுக்கப்பட்ட இடத்துக்குப் போட்டியிடும் ஒரு வேட்பாளர் பெரும்பாலான வாக்காளர்கள் தங்கள் பங்கை ஆற்றாத ஒரு தேர் தலில் வெற்றி பெற்றால் அந்த இடம் தீண்டப்படாதோருக்காக ஒதுக்கப்பட்ட இடம் என்பதற்காக வாக்காளர்களின் பிரதிநிதியாக அவர் இருக்க முடியாது. இத்தகைய தீண்டப்படாத இன வேட் பாளர்களால் கைப்பற்றப்பட்ட தீண்டப்படாத இனத்திற்கான இடங் களையும் காங்கிரஸ் வெற்றி பெற்ற மொத்த இடங்களிலிருந்து கழித்துவிட வேண்டும். முற்றிலும் தீண்டப்படாத இன வாக்காளர்களின் உதவியால் வெற்றிபெற்ற தீண்டப்படாத இனத்திற்கான இடங்களை

மட்டுமே காங்கிரஸ் வென்றதாக உரிமை கொண்டாட முடியும். தாழ்த்தப்பட்ட இனத்தினருக்கான இடங்களின் விநியோகத்தையும் காங்கிரஸ் வெற்றி பெற்ற இடங்களையும், அதன் வெற்றிக்கான சந்தர்ப்ப சூழ்நிலையையும் பின்கண்ட அட்டவணையிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

*அட்டவணை 11*

## காங்கிரஸ் வெற்றி பெற்றதற்கான சூழ்நிலைமைகள்

| | காங்கிரஸ் வெற்றி பெற்ற இடங்கள் | | | | |
|---|---|---|---|---|---|
| | இந்து வாக்குகளின் ஆதரவுடன் | இந்து வாக்குகளின் ஆதரவின்றி | தாழ்த்தப்பட்ட வாக்குகள் பிளவுபட்டதன் காரணமாக | தாழ்த்தப்பட்ட இன மக்கள் அக்கறை காட்டாததன் காரணமாக | மொத்தம் |
| | (1) | (2) | (3) | (4) | (5) |
| ஐக்கிய மாகாணங்கள் ... | 3 | 6 | 3 | 4 | 16 |
| சென்னை ... | 5 | 15 | 4 | 2 | 26 |
| வங்காளம் ... | - | 4 | - | 2 | 6 |
| மத்திய மாகாணங்கள் ... | 1 | 5 | - | 1 | 7 |
| பம்பாய் ... | 1 | 1 | 1 | 1 | 4 |
| பீகார் ... | 1 | 3 | - | 7 | 11 |
| பஞ்சாப் ... | - | - | - | - | - |
| அசாம் ... | 1 | 2 | - | 1 | 4 |
| ஒரிசா ... | 1 | 2 | - | 1 | 4 |
| மொத்தம் ... | 13 | 38 | 8 | 19 | 78 |

இவைதாம் தேர்தல் முடிவுகளின் ஆய்வு வெளிப்படுத்தும் உண்மைகளாகும். இவை சர்ச்சைக்கிடமற்றவை, ஏற்றுக்கொள்ளப் பட வேண்டியவை. காங்கிரஸ் பெற்றுள்ள வாக்குகளைக கொண்டு பார்க்கும்போது, காங்கிரஸ் தீண்டப்படாதோரைப் பிரதிநிதித்துவப் படுத்தவில்லை என்பதும், தீண்டப்படாதவர்கள் காங்கிரசை நிரா கரித்து விட்டார்கள் என்பதும் தெரியவரும். வெற்றி பெற்ற இடங் களைக் கொண்டு பார்க்கும்போது மொத்த 151 இடங்களில் காங் கிரஸ் 38 இடங்களைத்தான் கைப்பற்றியுள்ளது. மேலும், 73 இடங் களில் வெற்றி பெற அது தவறிவிட்டது என்பதையும், இந்துக்களது வாக்குகளைக் கொண்டு 13 இடங்களில் அது வெற்றி பெற்றிருக் கிறது என்பதையும், காங்கிரஸ் சார்பில் நிறுத்தப்பட்ட தீண்டப்படாத இன வேட்பாளரை எதிர்த்து ஏராளமான தீண்டப்படாத இன வேட் பாளர்கள் போட்டியிட்டதால் வாக்குகள் சிதறி 8 இடங்களை அது கைப்பற்றி இருக்கிறது என்பதையும், இதுவன்றி, தங்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ள இடங்களுக்கான தேர்தலில் தீண்டப்படாதோர் போதிய அக்கறை காட்டாது மதிகேடாக நடந்து கொண்டதால் 19 இடங்களில் அது வெற்றி பெற்றிருக்கிறது என்பதையும் மேலே உள்ள அட்டவணையிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

அடுத்து, பின்வரும் அட்டவணை எங்கு இத்தகைய விப ரீதங்கள் நடைபெற்றுள்ளன என்பதைக் குறிப்பிட்டுக் காட்டுகிறது. அவை மூன்று தலைப்புகளில் வகை பிரிக்கப்பட்டு, மாகாணவாரி யாகக் காட்டப்பட்டுள்ளன; பின்னிணைப்பில் காட்டியுள்ளபடி அவற்றின் தொடரெண்களால் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

அட்டவணை - 12 *

# தாழ்த்தப்பட்ட இன மக்களின் தொகுதிகள்

| மாகாணம் | இந்து வாக்குகளின் ஆதரவுடன் காங்கிரஸ் வெற்றி பெற்ற தொகுதிகளின் தொடரெண்கள் | தாழ்த்தப்பட்ட இன மக்களின் வாக்குகள் பிளவுண்டதால் காங்கிரஸ் வெற்றி பெற்ற தொகுதிகளின் தொடரெண்கள் | தாழ்த்தப்பட்ட இன மக்கள் தேர்தலில் அக்கறை காட்டாததால் காங்கிரஸ் வெற்றி பெற்ற தொகுதிகளின் தொடரெண்கள் |
|---|---|---|---|
| ஐக்கிய மாகாணங்கள் | 1,3, & 4 | 8, 9 & 10 | 11, 13, 14 & 18 |
| சென்னை | 1, 22, 23, 24 & 25 | 8, 12, 15 & 17 | 4 & 21 |
| வங்காளம் | இல்லை | இல்லை | 6 & 7 |
| மத்திய மாகாணங்கள் | 6 | இல்லை | 15 |
| பம்பாய் | 1 | 14 | 3 |
| பீகார் | 11 | இல்லை | 2, 6, 7, 8, 9, 10 &13 |
| பஞ்சாப் | இல்லை | இல்லை | இல்லை |
| அசாம் | 1 | இல்லை | 4 |
| ஒரிசா | 6 | இல்லை | 2 |

★ விவரங்களுக்கு பின் இணைப்பு IIஐ பார்க்க.

தீண்டப்படாதவர்களை காங்கிரஸ் பிரதிநிதித்துவப்படுத்துவதாக அது உரிமை கொண்டாடி வருவது ஆதிமுதல் அந்தம் வரை தவறு என்பது இவ்வாறு நிரூபணமாகியுள்ளது. தேர்தல் முடிவுகள் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது இது இட்டுக் கட்டப்பட்ட வெறும் புனைந்துரையே தவிர வேறல்ல என்பது முற்றிலும் வெட்ட வெளிச்சமாகியுள்ளது.

தேர்தல் முடிவுகள் வேறுசில சுவையான தகவல்களையும் தந்துள்ளன. பின்கண்ட இரு அட்டவணைகளில் அவை தொகுத்துத் தரப்பட்டிருக்கின்றன:

அட்டவணை 13

**தாழ்த்தப்பட்ட இன மக்களின் இடங்களுக்கான தேர்தல்**

| மாகாணங்கள் | | போட்டி நடைபெற்ற இடங்கள் | போட்டியிடப் படாத இடங்கள் | மொத்தம் |
|---|---|---|---|---|
| ஐக்கிய மாகாணங்கள் | ... | 15 | 5 | 20 |
| சென்னை | ... | 26 | 4 | 30 |
| வங்காளம் | ... | 28 | 2 | 30 |
| மத்திய மாகாணங்கள் | ... | 19 | 1 | 20 |
| பம்பாய் | ... | 14 | 1 | 15 |
| பீகார் | ... | 6 | 9 | 15 |
| பஞ்சாப் | ... | 6 | 2 | 8 |
| அசாம் | ... | 6 | 1 | 7 |
| ஒரிசா | ... | 4 | 2 | 6 |
| மொத்தம் | ... | 124 | 27 | 151 |

அட்டவணை 14

காங்கிரஸ் வெற்றி பெற்ற தாழ்த்தப்பட்டோருக்கான இடங்கள்

| மாகாணங்கள் | போட்டி போட்டு பெற்ற இடங்கள் | போட்டியின்றிப் பெற்ற இடங்கள் | மொத்தம் |
|---|---|---|---|
| ஐக்கிய மாகாணங்கள் ... | 14 | 2 | 16 |
| சென்னை ... | 24 | 2 | 26 |
| வங்காளம் ... | 6 | இல்லை | 6 |
| மத்திய மாகாணங்கள் ... | 6 | 1 | 7 |
| பம்பாய் ... | 3 | 1 | 4 |
| பீகார் ... | 4 | 7 | 11 |
| பஞ்சாப் ... | இல்லை | இல்லை | இல்லை |
| அசாம் ... | 3 | 1 | 4 |
| ஒரிசா ... | 4 | இல்லை | 4 |
| மொத்தம் ... | 64 | 14 | 78 |

தீண்டப்படாதோர் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்களுக்கான தேர்தலில் எத்தகைய மிகுந்த ஆர்வமும் அக்கறையும் காட்டியிருக்கிறார்கள் என்பதை அட்டவணை 13 காட்டுகிறது. மொத்த இடங்கள் 151ல் 121 இடங்களில் போட்டி போடப்பட்டிருக்கிறது. தீண்டப்படாதவர்களுக்கு அரசியல் கல்வியும் இல்லை, அரசியல் போதகரும் இல்லை, எனவே, அவர்களுக்கு அரசியல் உரிமைகள் வழங்குவது வீண்தான் என்று வழக்கமாகக் கூறப்படும் குற்றச்சாட்டை இது பொய்யாக்குகிறது. தீண்டப்படாதவர்கள் காங்கிரசை தங்கள் உற்ற நண்பனாகவும் உண்மையான தோழனாகவும் கருதுவதற்குப் பதிலாக அதனை தங்கள் வைரியாக காண்பதை அட்டவணை 14 புலப்படுத்துகிறது. தீண்டப்படாதோருக்காக ஒதுக்கப்பட்ட இடங்களுக்கான தேர்தலில் காங்கிரஸ் போட்டியின்றி வெற்றி பெற அவர்கள் அனுமதிப்பது மிக மிக அரிது. தீண்டப்படாதவர்களுக்கு ஒதுக்கப்பட்ட இடத்துக்கு நடைபெறும் தேர்தலில் காங்கிரஸ் ஒரு தீண்டப்படாத இன வேட்பாளரை காங்கிரஸ் சார்பில் நிறுத்திய பெரும்பாலான சந்தர்ப்பங்களில் தீண்டப்படாதவர்கள் அந்த இடத்தை எதிர்ப்பின்றி காங்கிரசுக்கு தாரை வார்த்ததில்லை; அதற்குப் பதில் தங்கள் சொந்த வேட்பாளரை காங்கிரசல்லாதோர் சார்பில் நிறுத்தி, கடுமையாக போட்டியிட்டே வந்திருக்கின்றனர். தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கான இடங்களுக்கு காங்கிரஸ் சார்பில் 78 இடங்களுக்கு வேட்பாளர்கள் நிறுத்தப்பட்டபோது 64 இடங்களில் கடும் போட்டி நிலவிற்று.

## அட்டவணை 15

| மாகாணம் | | ஒவ்வொரு 100 பொது இந்து வாக்காளர்களுக்கு தாழ்த்தப்பட்ட இன வாக்காளர்களின் வீதாசாரத்திற்கு ஏற்ப வகை பிரிக்கப்பட்ட தொகுதிகளின் எண்ணிக்கை | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | பத்தும் அதற்குக் கீழேயும் | 11 -15 | 16-20 | 21-25 | 26-30 | 31-35 | 36-40 | 41-45 | 45-50 | 50க்கு மேல் | மொத்தம் |
| ஐக்கிய மாகாணங்கள் | இல்லை | 7 | 3 | 6 | 2 | 1 | இல்லை | 1 | இல்லை | இல்லை | 20 |
| சென்னை | இல்லை | 5 | 6 | 10 | 3 | 3 | 1 | 1 | 1 | இல்லை | 30 |
| வங்காளம் | இல்லை | இல்லை | இல்லை | 3 | 13 | 1 | 3 | இல்லை | 14 | 25* | |
| மத்திய மாகாணங்கள் | 5 | 5 | 1 | 2 | இல்லை | 1 | 1 | 1 | 1 | 3 | 20 |
| பீகார் | 4 | 5 | 2 | 2 | 2 | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | 15 |
| பஞ்சாப் | 1 | 1 | இல்லை | 1 | 2 | இல்லை | இல்லை | 1 | இல்லை | 2 | 8 |
| ஒரிசா | 2 | இல்லை | இல்லை | 2 | இல்லை | 2 | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | 6 |
| அசாம் | 3 | 1 | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | 1 | இல்லை | 2 | 7 |
| பம்பாய் | 5 | 3 | 6 | 1 | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | இல்லை | 15 |
| மொத்தம் | 20 | 27 | 18 | 27 | 11 | 9 | 3 | 8 | 2 | 21 | 146 |

★ தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஒதுக்கப்பட்ட ஐந்து தொகுதிகள் இரண்டு இடங்களைப் பெற்றிருப்பதால் வாக்காளத் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்கள் மொத்தம் 30 ஆகிறது.

# IV

தேர்தல் களத்தில் தீண்டப்படாதோர்களுக்கு எதிராக காங்கிரஸ் வெற்றி பெற்றுவிட்டது என்பதை 1937 ஆம் வருடத் தேர்தல் நிரூபிக்கவில்லை என்று கூறுகிறது. மெய்ம்மை நிலையைக் குறைத்தியம்புவதாகும் என்று சொல்லப்படுகிறது. உண்மையில் தீண்டப்படாதவர்கள் காங்கிரஸ் மீது வெற்றிவாகை சூடியுள்ளனர் என்றே கூறவேண்டும். இதனைப் பலர் ஏற்றுக்கொள்ளாதிருக்கலாம்; அவ்வாறு ஏற்றுக்கொள்ள இயலாமலோ அல்லது விருப்பமில்லாமலோ இருக்கலாம்; காங்கிரசுடன் நடைபெற்ற போட்டியில் தீண்டப்படாதவர்கள் எத்தகைய கொடிய துன்ப துயரங்களை, இன்னல் இடுக்கண்களை, இடர்ப்பாடுகளை முட்டுப்பாடுகளை சந்திக்க நேர்ந்தது என்பதை அவர்கள் அறியாததே இதற்குக் காரணம். இந்த இக்கட்டுகள் உண்மையிலேயே ஏராளமானவை, மிகப் பெரியவை, இவற்றை எல்லாம் இங்கு விவரிப்பது உசிதமானதாக, உகந்ததாக இருக்கும். அப்போதுதான் காங்கிரசுக்கும் தங்களுக்கும் ஒட்டும் உறவும் இல்லை என்பதையும், காங்கிரஸ் தங்களைப் பிரதிநிதித்துவப்படுத்தவில்லை என்பதையும் மெய்ப்பிப்பதற்கு தீண்டப்படாதவர்கள் எத்துணை விடா உறுதியுடனும் நெஞ்சுரத்துடனும் போராடினார்கள் என்பதை மக்கள் தெரிந்து கொள்ள முடியும்.

இந்தத் துன்பங்களை இரண்டு தலைப்புகளில் வகைப் பிரிக்கலாம்: (1) ஸ்தாபனம் சம்பந்தப்பட்டவை, (2) தேர்தல்கள் சம்பந்தப்பட்டவை.

முதல் தலைப்பின்கீழ் இரண்டு அம்சங்களை விசேடமாகக் குறிப்பிட வேண்டும்:

முதல் அம்சம் வாய்ப்பு வளங்களில் காங்கிரசுக்கும் தீண்டப்படாதோருக்கும் இடையே உள்ள மலைக்கும் மடுவுக்குமான வேறுபாடாகும். காங்கிரஸ் மிகவும் செல்வ வளம் படைத்த அரசியல் கட்சி என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. 1937 ஆம் வருடத் தேர்தலில் காங்கிரஸ் எவ்வளவு பணத்தை தண்ணீர் பட்ட பாடாக வாரி இறைத்தது என்பதை இதுவரை கணக்கிட முடியவில்லை. இது சம்பந்தமாக ஒரு விசாரணை நடத்தினால், விளம்பரம் செய்வதற்காகவும், போக்குவரத்துக்காகவும், காங்கிரஸ் சார்பில் போட்டியிடும் வேட்பாளர்களுக்கு ஆதரவு திரட்டுவதற்காகவும் செலவிடப்பட்ட பணம் சொல்லி மாளாது என்பது தெரியவரும். காங்கிரஸ்

சார்பில் போட்டியிட்ட தீண்டப்படாத இன வேட்பாளர்களுக்கும் இத்தனை வசதிகளையும் காங்கிரஸ் செய்து கொடுத்தது. அதேசமயம் காங்கிரசை எதிர்த்துப் போட்டியிட்ட தீண்டப்படாத இன வேட் பாளர்களுக்கோ இந்த வாய்ப்பு வசதிகளில் பத்து லட்சத்தில் ஒரு பங்குகூட இல்லை எனலாம். இவர்களில் சிலர் ஜாமீன் தொகை கட்டுவதற்குக் கூடக் கடன் வாங்க வேண்டியிருந்தது. விளம்பரம், பிரசாரம், போக்குவரத்து, வாக்கு சேகரிப்பு முதலிய எந்த உதவியும் இன்றி அவர்கள் தேர்தல்களில் போட்டியிட்டனர்.

இரண்டாவது அம்சம் காங்கிரசுக்கு வலுமிக்க கட்சி எந்திரம் இருந்ததும், தீண்டப்படாதவர்களுக்கு அத்தகைய கட்சி எந்திரம் இல்லாதிருந்ததுமாகும். கட்சி எந்திரம்தான் காங்கிரசின் உண்மை யான பலம் என்பதை அனைவரும் அறிவர். இத்தகைய ஒரு கட்சி எந்திரத்தை உருவாக்கித் தந்த பெருமை திரு. காந்தியைத்தான் சேரும். இந்த எந்திரம் கடந்த 20 ஆண்டுகளாகவே இருந்து வருகிறது; காங்கிரஸ் தன்னிடமுள்ள அபரிமிதமான வாய்ப்பு வளங்களைக் கொண்டு நன்கு எண்ணெயிட்டு, அந்த எந்திரத்தை அணுவளவும் குறைபாடற்றதாகப் பராமரித்து வருகிறது; ஒரு பொத்தானை அழுத் தினால் போதும். அது அசுரத்தனமாக செயல்பட ஆரம்பித்துவிடும். அது மிகப் பிரம்மாண்டமான எந்திரம்; நாட்டிலுள்ள ஒவ்வொரு நகரத்திலும் கிராமத்திலும் அது படர்ந்து பரவி வியாபித்திருக்கிறது. இந்த எந்திரத்தை இயக்குவதற்கான காங்கிரஸ் ஆட்கள் இல்லாத பகுதியே இல்லை என்று கூறலாம். காங்கிரஸ் சார்பில் போட்டி யிட்ட வேட்பாளர்களின் தேர்தல் பணி முழுவதையும் காங்கிரசின் இந்தக் கட்சி எந்திரம்தான் செய்தது. ஆனால் காங்கிரசை எதிர்த்துப் போட்டியிட்ட தீண்டப்படாதோருக்கு உதவ இத்தகைய கட்சி எந்திரம் ஏதுமில்லை. தனிப்பிரதிநிதித்துவ முறை 1909 ஆம் ஆண்டில் தான் முதல் தடவையாக இந்திய அரசியலில் புகுத்தப்பட்டது. எனி னும் இதன் அனுகூலம் அப்போது ஒரே ஒரு சமூகத்துக்கு மட்டும் தான் அதாவது முஸ்லீம்களுக்கு மட்டுமே கிடைத்தது; அவர்கள்தான் இதில் பயனடைந்தனர். 1920ல் அரசியலமைப்புச் சட்டம் திருத்தப் பட்டது. இவ்விதம் திருத்தியமைக்கப்பட்ட அரசியல் அமைப்புச் சட்டத்தில் இந்த சலுகை பிராமணரல்லாதோருக்கு விஸ்தரிக்கப் பட்டது. தீண்டப்படாதவர்கள் மீண்டும் கைகழுவப்பட்டனர். பல்வேறு மாகாண சட்டமன்றங்களில் நியமனத்தின் மூலம் ஒன்று அல்லது இரண்டு இடங்கள் அளித்து அவர்கள் சமாதானப்படுத்தப்பட்டனர். 1935 ஆம் ஆண்டில்தான் முதல்முறையாக வாக்குரிமையையும், தேர்தல் மூலம் சட்டமன்றத்தில் இடம்பெறும் உரிமையையும்

அவர்கள் பெற்றனர். வாக்குரிமை இல்லாததாலும், தேர்தல் களத்தில் அவர்கள் இறங்க வேண்டிய சந்தர்ப்ப சூழ்நிலை இல்லாததாலும் இதுவரை அவர்கள் தங்களுக்கென ஒரு கட்சி எந்திரத்தைக் கட்டி உருவாக்கிக் கொள்ளாமல் இருந்துவிட்டனர். 1937ல் தேர்தல்களில் குதிக்கும்படி திடீரென அவர்கள் அழைக்கப்பட்டபோது, தங்களை ஸ்தாபன ரீதியாக ஒன்று திரட்டிக் கொள்ளவும், ஒரு கட்சி எந்திரத்தை உருவாக்கிக் கொள்ளவும் அவர்களுக்குப் போதிய அவகாசம் இல்லாமல் போய்விட்டது. இதனால் காங்கிரசுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் இடையே நடைபெற்ற போராட்டம் நவீன ஆயுத வசதிகளுடன் கூடிய ராணுவத்துக்கும் நிராயுதபாணிகளான ஒரு கூட்டத்துக்கும் இடையே நடைபெற்ற போராட்டமாகத்தான் இருந்தது.

இதேபோல் தீண்டப்படாதவர்கள் எதிர்கொள்ள நேர்ந்த தேர்தல் இடர்ப்பாடுகளும் ஏராளம். தீண்டப்படாதவர்களுக்காக இடஒதுக்கீடு செய்யப்பட்டுள்ள பொதுத் தொகுதிகளில் இந்துக்களின் வாக்காளர் பலத்துக்கும் தீண்டப்படாதோர் இனத்தைச் சேர்ந்தவர்களது வாக்காளர் பலத்துக்கும் இடையே மிகப்பெரும் வேறுபாடு நிலவுகிறது; இது தேர்தல் விஷயத்தில் முதல் இடர்ப்பாடாகும். 15 ஆவது அட்டவணை இரு தரப்பினரது பரஸ்பர வாக்காளர் பலத்தைக் காட்டுகிறது.

பொதுத் தொகுதிகளில் தாழ்த்தப்பட்ட இன வாக்காளர்களை விட இந்து வாக்காளர்கள் எவ்விதம் மிக அபரிமிதமாக இருக்கிறார்கள் என்பதை இந்த அட்டவணையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். எண்ணிக்கையில் இந்துக்கள் எத்தகைய விகிதாசாரத்தில் தாழ்த்தப்பட்டவர்களை விஞ்சியிருக்கிறார்கள் என்பதை இங்கு விசேடமாகக் கவனத்திற்கொள்வது அவசியம். இந்த அட்டவணையைப் பார்த்தால், இந்து வாக்காளர்களின் எண்ணிக்கையோடு ஒப்பிடும் போது தாழ்த்தப்பட்ட இன வாக்காளர் எண்ணிக்கை 20 தொகுதிகளில் 100க்கு 10 என்ற விகிதத்திலும், 27 தொகுதிகளில் 100க்கு 11 முதல் 15 என்ற விகிதத்திலும், 18 தொகுதிகளில் 100க்கு 15 முதல் 20 என்ற விகிதத்திலும், 27 தொகுதிகளில் 100க்கு 21 முதல் 25 என்ற விகிதத்திலும் 11 தொகுதிகளில் 100க்கு 20 முதல் 30 என்ற விகிதத்திலும் இருப்பதைக் காணலாம். இந்து வாக்காளர்களின் பெரும்பான்மை எவ்வளவு அதிகமாக இருக்கிறது என்பதையும், இந்த அதிமிகையான பெரும்பான்மை பலத்தைக் கொண்டு இந்துக்கள் தாழ்த்தப்பட்ட வாக்காளர்கள் மீது எவ்விதம் சவாரி செய்ய முடியும் என்பதையும் இந்த அட்டவணை காட்டுகிறது. மேலும், தாழ்த்தப்பட்ட

இனத்தோருக்கான ஒவ்வொரு தொகுதியும் கூட்டு வாக்காளர் தொகுதி என்பதையும், இத்தொகுதியில் இருதரப்பு வாக்காளர் களுமே அதாவது தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த வாக்காளர் களும் இந்து வாக்காளர்களும் தாழ்த்தப்பட்ட இனத்தோருக்கான இடத்துக்கு வாக்களிக்க முடியும் என்பதையும், இதன் மூலம் அந்த இடத்தைக் கைப்பற்ற தீவிர முயற்சி நடைபெறும் என்பதையும் இங்கு நினைவில் கொள்ள வேண்டும். இருதரப்பினரது வாக்காளர் பலத்தில் நிலவும் தாரதம்மியம் தேர்தல் களத்தில் மிகுந்த முக்கியத் துவம் பெறுவது முற்றிலும் இயல்பே. இத்தகைய இணைந்த தொகுதி யில் நடைபெறும் தேர்தலில் வெற்றி பெறுவது போட்டியிடும் தரப்புகளின் வாக்காளர் பலத்தைப் பெரிதும் பொறுத்துள்ளது.

தீண்டப்படாதவர்களுக்கு இட ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ள பொதுத் தொகுதிகளுக்கு நிர்ணயிக்கப்படும் இடங்களின் எண் ணிக்கையிலிருந்து இரண்டாவது சிக்கல் எழுகிறது. இது சம்பந்த மாக பல்வேறு மாகாணங்களில் கைக்கொள்ளப்படும் முறையை பின்கண்ட பட்டியல் காட்டுகிறது.

அட்டவணை 16

தீண்டப்படாதவர்களுக்கு இடங்கள் ஒதுக்கப்பட்ட பொதுத்தொகுதிகளின் வகைப்பிரிவு

| மாகாணம் | தீண்டப்படாத வர்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்கள் | இரு இடங்கள் கொண்ட தொகுதிகள் | மூன்று இடங்கள் கொண்ட தொகுதிகள் | ஒரு இடம் கொண்ட தொகுதிகள் |
|---|---|---|---|---|
| சென்னை | 30 | 30 | இல்லை | இல்லை |
| பம்பாய் | 15 | இல்லை | 6 | 9 |
| வங்காளம் | 30 | 20 | 5 | இல்லை |
| ஐ. மாகாணங்கள் | 20 | 20 | இல்லை | இல்லை |
| பஞ்சாப் | 8 | 8 | இல்லை | இல்லை |
| பீகார் | 15 | 15 | இல்லை | இல்லை |
| ம. மாகாணங்கள் | 20 | 20 | இல்லை | இல்லை |
| அசாம் | 7 | 6 | 1 | இல்லை |
| ஒரிசா | 6 | 6 | இல்லை | இல்லை |
| மொத்தம் | 151 | 125 | 12 | 9 |

தீண்டப்படாதவர்களுக்கு இட ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ள மொத்தமுள்ள 151 தொகுதிகளில் 130 தொகுதிகள் இரட்டை உறுப் பினர் தொகுதிகளாக இருப்பதை இந்த அட்டவணை காட்டுகிறது; இத்தகைய தொகுதிகளில் ஓர் இடம் தாழ்த்தப்பட்ட வகுப்பின ருக்கு ஒதுக்கப்பட்டுள்ளது; மற்ற இடம் பொது இடமாக அறிவிக்கப் பட்டுள்ளது. இந்த இரட்டை உறுப்பினர் தொகுதி முறையில் தாழ்த் தப்பட்ட இன மக்களுக்கு ஒரு பெரிய அபாயம் பதுங்கியிருப்பதை பலர் அறியாதிருக்கக் கூடும். பொதுத் தொகுதியில் இந்துக்களதும் தாழ்த்தப்பட்ட இன மக்களதும் பரஸ்பர வாக்கு பலத்தைப் பரிசீ லித்துப் பார்த்தால் இந்த அபாயம் எவ்வளவு உண்மையானது என்பது தெரியவரும். இதுபற்றி ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறோம். இங்கு மற்றொரு விஷயத்தையும் கவனத்திற் கொள்ள வேண்டும்: அதாவது ஒரு தொகுதி பன்மை உறுப்பினர் தொகுதியாக - மூன்று அல்லது நான்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டிய தொகுதி யாக - இருந்தால் அப்போது இந்துக்களின் அபரிமிதமான வாக்கு பலம் இந்துக்கள் ஒரே ஒரு வேட்பாளரை மட்டும் தேர்ந்தெடுக்கும் இரட்டை உறுப்பினர் தொகுதியில் இருப்பது போன்று அத்தனை அபாயகரமானதாக இருக்காது. பன்மை உறுப்பினர் தொகுதியில் அதிக வேட்பாளரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய சூழ்நிலையில், பொது இடத்துக்கு நிறுத்தப்பட்டுள்ள தங்களது வேட்பாளர்களை வெற்றிபெறச் செய்வதில் இந்துக்கள் மும்முரமாக ஈடுபடும்போது, அவர்களது வாக்குகள் சிதறுகின்றன; இதனால் அவர்களிடம் உபரி வாக்குகள் இருப்பதில்லை; இதன் காரணமாக இத்தகைய தொகுதி யில் அவர்களது மிகையான வாக்குபலம் தாழ்த்தப்பட்ட வகுப்பின ருக்கு அபாயமாக இருக்காது. ஆனால், அவர்கள் வெற்றிபெற வேண் டியது ஒரே ஓர் இடமாக மட்டும் இருக்கும்போது, அவர்கள் வாக்கு கள் சிதறும் வாய்ப்பு மிக மிகக் குறைவு. அதிலும் காங்கிரஸ் போன்ற ஸ்தாபன ரீதியாக நன்கு ஒருங்கமைக்கப்பட்ட கட்சி அமைப்பு முறை யில் இவ்விதம் சிதறும் வாக்குகள் பூஜ்யம் என்றே சொல்ல வேண்டும். இவ்வாறு உபரியாக மிஞ்சும் வாக்குகளை தங்களது கைப்பொம்மையாக இருப்பதற்கு மறுத்து சுயேட்சையாகப் போட்டி யிடும் தாழ்த்தப்பட்ட இன வேட்பாளரை எதிர்த்து தங்கள் சார்பில் போட்டியிடும் தாழ்த்தப்பட்ட இன வேட்பாளருக்கு இந்துக்கள் வாக் களித்து அவரை ஆதரிக்க முடியும். இந்துக்கள் தங்களது உபரி வாக்கு களைக் கொண்டு எத்தகைய விபரீதத்தை, பயங்கர சேதத்தை உண்டு பண்ண முடியும் என்பதை தேர்தல் முடிவுகள் துலாம்பரமாகக் காட்டு கின்றன.

பொதுத் தொகுதிகளில் கைக்கொள்ளப்படும் வாக்களிப்பு முறையையும், இத்தொகுதிகளில் நிர்ணயிக்கப்படும் இடங்களின் எண்ணிக்கையையும், வாக்கு பலத்தைப் பகிர்ந்தளிக்கும் நடைமுறையையும் கருத்திற்கொண்டு பார்க்கும்போது தீண்டப்படாதவர்களை ஏமாற்றுவதற்கு இதைவிட தந்திரமான, குயுக்தியான, வஞ்சகமான தேர்தல் முறை வேறு ஏதும் இருக்க முடியுமா என்பது சந்தேகமே. தாழ்த்தப்பட்ட இனத்தவர் மீது திணிக்கப்பட்டுள்ள இந்தக் கூட்டுத் தொகுதி முறையானது 1832 ஆம் வருட சீர்திருத்த சட்டம் இயற்றப்படுவதற்கு முன்னர் நடைமுறையிலிருந்த ராட்டன் பரோ முறை போன்றது. இந்த ராட்டன்பரோ முறையின்படி தேர்ந்தெடுக்கப்பட்ட வேட்பாளர் உண்மையில் பரோவின் தலைவரால் நியமிக்கப்பட்டவரே ஆவார். இதேபோன்றுதான் கூட்டுத்தொகுதித் தேர்தல் முறையின்படி சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படும் தாழ்த்தப்பட்ட இன வேட்பாளர் உண்மையில் இந்துக்களால் நியமிக்கப்படுபவர் என்றே கூறவேண்டும். கூட்டுத் தொகுதித் தேர்தல் முறையின்பால் திரு. காந்தி மிகுந்த ஈடுபாடு கொண்டதற்கு இதுவே காரணம்.

முஸ்லீம் லீக் நாளுக்கு நாள் வளர்ந்து வலுப்பெற்று வருவது பற்றி நிறைய பேசப்படுவதைக் கேட்கிறோம். ஆனால் தனி வாக்காளர் தொகுதித் தேர்தல் முறையின் காரணமாக முஸ்லீம் லீக் எவ்வாறு பாதுகாக்கப்படுகிறது என்பதை வெகுசிலரே அறிவர். காங்கிரஸ் அபாயத்திலிருந்தும் சூழ்ச்சியிலிருந்தும் அவர்கள் விடுபட்டுப் பாதுகாப்பாக இருக்கின்றனர். தீண்டப்படாதவர்கள் அத்தகைய நிலையில் இல்லை. காங்கிரசின் பணபலம், காங்கிரசின் வாக்குகள் பலம், காங்கிரஸ் பிரசார பலம் என்னும் வன் சூறாவளியால் அவர்கள் முழு அளவுக்குப் பாதிக்கப்படுகின்றனர். போதிய வாய்ப்பு வளங்கள் இல்லாத போதிலும், ஒரு வலுமிக்க கட்சி எந்திரம் இல்லாத போதிலும், தேர்தல் முறைகள் அவர்களுக்குப் பல வகைகளிலும் இடையூறாக இருந்தபோதிலும் இந்த இக்கட்டுகளை எல்லாம் அவர்கள் சமாளித்ததானது காங்கிரஸ் மீது அவர்கள் பெற்ற வெற்றியையும், தங்களது சுயேச்சையை, சுதந்திரத்தைப் பாதுகாப்பதில் அவர்கள் கொண்டுள்ள ஆர்வத்தையும் தெள்ளெனப் புலப்படுத்துகிறது.

## இயல் 7

# ஒரு பொய்யான குற்றச்சாட்டு

## தீண்டப்படாதவர்கள் பிரிட்டிஷாரின் கைக்கூலிகளா?

நான் ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல், காங்கிரசானது திரு. காந்தியின் பராமரிப்பில், கவனிப்பில் வந்தபிறகு முழு அளவுக்கு மாற்றமடைந்தது. இந்த மாற்றங்களில் ஒன்று மிகவும் குறிப்பிடத் தக்கதாகும்; ஏனென்றால் இந்த மாற்றம்தான் காங்கிரசுக்கு இவ்வளவு புகழை ஈட்டித் தந்தது; இதன் காரணமாக அது மக்களின் ஆதரவைப் பெற முடிந்தது. சரி, அந்த மாற்றம்தான் என்ன? திரு. காந்தியின் காலத்துக்கு முன்னர் இந்தியாவின் பல்வேறு இடங்களில் ஆண்டு தோறும் கூடுவதையும், சில தீர்மானங்களை அதிலும் ஏற்கெனவே நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களையே மீண்டும் நிறைவேற்று வதையும், இந்தியாவில் பிரிட்டிஷ் நிர்வாகத்தில் காணப்படும் குறைகளில் சிலவற்றைச் சுட்டிக்காட்டுவதையும் தவிர காங்கிரஸ் உருப்படியாக வேறு எதுவும் செய்யவில்லை. 1919ல் காங்கிரசின் லகானை திரு. காந்தி தன் கையில் எடுத்துக் கொண்ட பிறகு, அது செயல்படும் கட்சியாக மாறிற்று; அல்லது காங்கிரஸ்காரர்கள் வரு ணிக்க விரும்புவதுபோல் காங்கிரசானது தான் நிறைவேற்றும் தீர்மானங்களைச் செயல்படுத்த சில உறுதிப்பாடு நடவடிக்கைகளை மேற்கொண்டது - இதற்கு முன்னர் இதுகுறித்து காங்கிரஸ் சிந்தித்துப் பார்த்ததே இல்லை. இவ்வாறு காங்கிரஸ் தனது பாசறையிலிருந்து எடுத்து அவ்வப்போது பிரயோகித்த படைக்கலங்களில் (1) ஒத் துழையாமை; (2) பகிஷ்காரம்; (3) சட்ட மறுப்பு; (4) உண்ணாவிரதம் ஆகியவையும் அடங்கும்; அரசாங்க பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், நீதிமன்றங்கள் முதலியவற்றை அங்கீகரிக்க மறுப்பதன் மூலமும், அதேபோன்று அரசாங்க சேவையைப் பயன்படுத்திக் கொள்ள மறுப்பதன் மூலமும் அரசை பயனற்றதாக்கிச் செயலிழக்கச் செய்வதே ஒத்துழையாமை இயக்கத்தின் நோக்கமாகும். பகிஷ்காரம் என்பது காங்கிரசின் ஆணைகளைப் பின்பற்றி நடப்பதற்குத் தயாராக இல் லாத தனிநபர்களுக்கு எதிராக நிர்ப்பந்தம் கொண்டுவரும் குறிக் கோளைக் கொண்ட ஓர் ஆயுதம். இதற்கு இரண்டு விளிம்புகள்

உண்டு: ஒன்று சமூக விளிம்பு, மற்றொன்று, பொருளாதார விளிம்பு. சமூக விளிம்பு எல்லா சமூக உறவுகளையும் துண்டித்து விடுகிறது; நாவிதர்கள், சலவையாளர்கள், கசாப்புக்கடைக்காரர்கள், பலசரக்குக் கடைக்காரர்கள், வணிகர்கள் முதலியோரின் சேவைகள் கிட்டாத படிச் செய்துவிடுகிறது; இன்னும் சுருக்கமாகச் சொன்னால் குற்ற வாளியின் வாழ்க்கையையே எல்லா வகைகளிலும் முடமாக்கி நாசமாக்கி விடுகிறது. பண்டங்களை வாங்குவது, விற்பது போன்ற சகலவிதமான வணிகத் தொடர்புகளையும் பொருளாதார விளிம்பு துண்டித்து விடுகிறது. அந்நியப் பொருள்களை விற்பனை செய்யும் பெருவணிகர்களே அதன் குறியிலக்கு. சட்ட மறுப்பு என்பது பிரிட் டிஷ் அரசாங்கத்தை நேரடியாகவே தாக்கும் நோக்கம் கொண்டது. கைதாவது, சிறைக்கூடங்களை நிரப்புவது, இதன்மூலம் அரசாங் கத்துக்குக் கெட்ட பெயரை உண்டுபண்ணுவது என்னும் நோக்கத் தோடு திட்டமிட்டே சட்டம் மீறப்படுகிறது. வெகுஜன சட்ட மறுப்பாகவோ அல்லது தனிநபர் சட்ட மறுப்பாகவோ இது கைக்கொள்ளப்படுகிறது. பரந்த அளவில் உண்ணாவிரதம் இருக் கும் நடவடிக்கையில் காங்கிரசார் ஈடுபடுவதில்லை. தனிநபர் அளவி லேயே உண்ணாவிரதம் மேற்கொள்ளப்படுகிறது. மேலும் சாகும் வரை உண்ணாவிரதத்தையும் பரந்த அளவில் காங்கிரசார் கைக்கொள் வதில்லை. ஒரு குறிப்பிட்ட காலம் வரைதான் உண்ணாவிரதம் இருக்கப்படுகிறது. இந்த ஆயுதம் குறிப்பாக திரு. காந்தி தனக்காக வரித்துக் கொண்டுள்ள ஆயுதமாகும். அவரும் கூட ஒரு குறிப்பிட்ட காலக்கெடுவை நிர்ணயித்துக் கொண்டுதான் உண்ணாவிரதம் இருக் கிறார். இவைதான் இந்தியாவின் விடுதலைக் கோரிக்கைக்கு ஆதர வாக நிர்ப்பந்தங்கள் தருவதற்கு காங்கிரஸ் தனது உலைக்களத் தில் உருவாக்கி வைத்திருக்கும் நான்கு ஆயுதங்களாகும்.

இந்த ஆயுதங்களை உருவாக்கிய பிறகு அவற்றைப் பயன் படுத்துவதில் காங்கிரஸ் முனைந்து ஈடுபட்டது. 1920க்கும் 1942க்கும் இடையே காங்கிரஸ்காரர்கள் இந்த ஆயுதங்களை ஏதேனும் ஒரு வகையில் பயன்படுத்துவதை நாடு கண்டது. இதில் காது செவிடு படும்படி அவர்கள் எழுப்பிய கூச்சலும் குழப்பமும் பேரொலியும் மக்களை ஈர்த்தன. இந்த நடவடிக்கைகள் யாவும் ''சுதந்திரப் போராட் டம்'' என ஆடம்பர ஆர்ப்பாட்டமாக வருணிக்கப்பட்டன. இத்தகைய நிர்ப்பந்தங்கள் என்ன பலனை விளைவித்தன என்பது தீவிர ஆராய்ச் சிக்குரிய விஷயமாகும். ஆனால் இத்தகைய ஆராய்ச்சிக்கு இது இட மல்ல. ஒன்றை மட்டும் இங்கு கூறமுடியும்; அதாவது பழைய

காங்கிரஸ் இதைவிட மோசமாக எதையும் செய்திருக்க முடியாது. நிர்ப்பந்தங்களைப் பயன்படுத்தியதை உண்மையிலேயே ஒரு சோக நிகழ்ச்சி என்றுதான் கூறவேண்டும். சுயராஜ்யம் என்பது ஒருபுற மிருக்கட்டும், ஆனால் அதன்பொருட்டு துடுக்குத்தனமாக, முன் யோசனையின்றி நிர்ப்பந்த முறைகளைப் பயன்படுத்தியதன் விளைவாய் நாட்டுப் பிரிவினை உறுதியானதாயும், நிச்சயமான தாயும், எதார்த்தபூர்வமானதாயும் ஆயிற்று. நிர்ப்பந்த முறைகளைப் பயன்படுத்தியதன் விளைவாக ஏற்பட்ட பலன்கள் முழுவதையும் இங்கு விவாதிப்பது என்பது சாத்தியமல்ல; எனினும் இந்த ''சுதந்திரப் போராட்டம்'' பெரும்பாலும் இந்துக்களாலேயே நடத்தப்பட்டது என்பதை இங்கு குறிப்பிட்டாக வேண்டும். ஒரே ஒரு சந்தர்ப்பத்தில் தான் முசல்மான்கள் அதில் பங்கெடுத்துக் கொண்டனர்; சிறிது காலமே நடைபெற்ற கிலாபத் இயக்கத்தின்போதுதான் இது நிகழ்ந் தது. விரைவிலேயே அவர்கள் இந்தப் போராட்டத்திலிருந்து விலகிக் கொண்டு விட்டனர். இதர சமூகங்கள், குறிப்பாக தீண்டப்படாதோர் சமூகம் ஒருபோதும் அதில் பங்கெடுத்துக் கொள்ளவில்லை. சொந்த ஆதாயத்துக்காக அங்கு ஒருவரும் இங்கு ஒருவருமாக ஒரு சிலர் வேண்டுமானால் அதில் பங்கெடுத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் தீண்டப்படாதவர்கள் ஒரு சமூகம் என்ற முறையில் அதிலிருந்து விலகியே நின்றனர். 1942 ஆகஸ்டில் காங்கிரஸ் நிறைவேற்றிய 'வெள்ளையனே வெளியேறு' தீர்மானத்தைத் தொடர்ந்து கடைசி யாக நடைபெற்ற சுதந்திரப் போராட்டத்தில் இதனை குறிப்பாகக் காணலாம்.

இந்த ''சுதந்திரப் போராட்டத்தில்'' மக்களில் ஐம்பது சத வீதத்தினருக்கும் அதிகமானோர் எவ்விதம் காங்கிரசுடன் ஒத்துழை யாது இருக்கிறார்கள் என்பது குறிப்பாக இந்தியாவுக்கு வரும் ஓர் அயல்நாட்டவர் கண்கூடாகக் காணும் காட்சியாகும். இந்த விந்தை யான நிலைகண்டு அவர் பெரிதும் வியப்பதிர்ச்சி கொள்வது முற்றி லும் இயல்பே. இந்த 'சுதந்திரப் போராட்ட'த்தில் முஸ்லீம்கள், கிறித்தவர்கள், தீண்டப்படாதோர் போன்றோர் ஏன் பங்கு கொள்ள வில்லை என்று அவர் கேட்டுவிட்டு, பதிலுக்காக காங்கிரஸ்காரர் களின் முகத்தைப் பார்க்கிறார். காங்கிரஸ்காரர்கள் இதற்குத் தயா ராக வழக்கமான பதிலை வைத்திருக்கிறார்கள். தீண்டப்படாதவர் கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கைக்கூலிகள், அதனால்தான் அவர்கள் ''சுதந்திரப் போராட்ட''த்தில் பங்கெடுப்பதில்லை என்று இதற்கு சமாதானம் கூறுகிறார்கள். இந்தக் குற்றச்சாட்டு யுத்தத்தின் போது பல அயல்நாட்டினரின் வாயிலிருந்து வந்ததை அப்போது

நாம் கேட்க முடிந்தது. இதில் மிகவும் வேதனையூட்டும் விந்தை என்ன வென்றால், விபரீதம் என்னவென்றால், இந்த அயல்நாட்டவர்களில் பலர் இந்தக் குற்றச்சாட்டு உண்மையாக இருக்கக்கூடும் என்று ஏற்றுக் கொண்ட கசப்பான அனுபவமே ஆகும். அயல்நாட்டினர் இவ்வாறு சுலபமாக மனமாற்றமடைந்ததற்கு இந்த வாதம் மிகவும் எளிமையானதாகவும், நம்பத்தகுந்ததாகவும் இருந்தது காரணமாக இருக்கக் கூடும். இது இரண்டு காரியங்களைச் செய்கிறது. முதலாவதாக ஒரு விந்தையான நிகழ்வுப் போக்குக்கு காங்கிரஸ் சமாதானம் கூறுவதை இது சாத்தியமாக்குகிறது. இரண்டாவதாக இந்தக் குற்றச்சாட்டை நம்பத்தகுந்ததாக்கும் சந்தர்ப்ப சூழ்நிலைகளை அது வளர்க்கிறது.

மிகவும் செல்வாக்கு வாய்ந்த அயல்நாட்டினரே கூட இந்த அபத்தக் குற்றச்சாட்டில் நம்பிக்கை கொண்டிருக்கவில்லை என்றால், இந்த விஷமப் பிரசாரத்தை யாரும் பெரிதாக எடுத்துக்கொண்டிருக்க மாட்டார்கள். ''சுதந்திரப் போராட்டம்'' எனக் கூறப்படுவதில் தீண்டப்படாதவர்கள் பங்கெடுத்துக் கொள்ளாததற்கு காங்கிரஸ் தெரிவித்துள்ள காரணம் சுத்த அபத்தமானதாகும். ஓர் ஏமாற்றுக்காரன்தான் இப்படிப்பட்ட காரணத்தைக் கூறமுடியும்; ஒரு முட்டாள்தான் இந்தக் காரணத்தை ஏற்றுக்கொண்டு அதில் திருப்தியடைய முடியும். ஆனால் தற்போது இந்தியாவில் நடைபெற்றுவரும் சில நிகழ்ச்சிகளைப் பார்க்கும்போது, இந்தியாவின் பிரச்சினைகள் குறித்து அயல்நாட்டினர் என்ன நினைக்கிறார்கள் என்பது மிகுந்த முக்கியத்துவத்தைப் பெறுகிறது. ஆதலால் உண்மை நிலைமையை எடுத்துக்கூறி, தீண்டப்படாதவர்களைப் பற்றி அயல்நாட்டவரின் மனத்தில் வேர்கொண்டுள்ள தப்பெண்ணங்களைக் களைவது அவசியமாகிறது; இது தீண்டப்படாதவர்களுக்கு எதிராக கட்டிவிடப்பட்டுள்ள தவறான குற்றச்சாட்டு என்பதையும், அவர்கள் ''சுதந்திரப் போராட்ட'த்தில் பங்கு கொள்ளாததற்கு அவர்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் எடுபிடியாக இருப்பது காரணமல்ல, மாறாக இந்தியா சுதந்திரம் பெறுவது இந்துக்களின் ஆதிக்கத்தை நிலைநாட்டும், அது அவர்களுக்கு சுபிட்ச வாழ்வும், விடுதலையும், ஒளிமயமான எதிர்காலமும் என்றென்றும் கிட்டாதபடிச் செய்து, அவர்களை வெறும் விறகு வெட்டிகளாகவும் தண்ணீர் சுமப்பவர்களாகவும் ஆக்கிவிடும் என்ற பயமே தீண்டப்படாதவர்கள் ''சுதந்திரப் போராட்ட''த்தில் பங்கு கொள்ளாதிருக்கக் காரணம் என்பதையும் விளக்கிக் கூறுவது இன்றியமையாததாகிறது.

''சுதந்திரத்திற்கான போராட்ட''த்தில் காங்கிரசுடன் சேரு வதற்கு தீண்டப்படாதவர்கள் மறுத்துவிட்டனர் என்ற உண்மையே அவர்கள் காங்கிரசுடன் ஒத்துழைக்காததற்கான காரணம் காங்கிரசார் கூறுவதுபோல் சிறுபிள்ளைத்தனமானது அல்ல என்பதற்கு ஒரு திட்டவட்டமான சான்றாக அமைந்துள்ளது. அப்படியானால் இதற்கு வேறு ஏதேனும் உண்மையான, அடிப்படையான காரணம் இருக்க வேண்டும். அந்தக் காரணம் என்ன? காங்கிரசுடன் ஒத்துப்போகாததற் கான காரணத்தை தீண்டப்படாதவர்கள் மிகப்பல சந்தர்ப்பங்களில் பட்டவர்த்தனமாகவே, பகிரங்கமாகவே கூறியுள்ளனர். நாங்கள் இந்து ராஜ்யத்தில் இருக்க விரும்பவில்லை; இந்து ராஜ்யத்தில் ஆளும் வர்க்கங்களாக பிராமணர்களும் பனியாக்களுமே இருப்பார்கள்; கீழ்த்தட்டு இந்துக்கள் அவர்களுடைய காவல்துறை ஆட்களாக இருப் பார்கள்; இவர்கள் யாவரும் பரம்பரை பரம்பரையாக, வழிவழியாக தீண்டப்படாதோரின் பகைவர்களாக இருந்து வருபவர்கள் - இவ்வாறு தீண்டப்படாதோர் கூறுகின்றனர். இந்த மொழிநடை நயநாகரிகப் பாங்கற்றதாக, உணர்ச்சிகளைப் புண்படுத்துவதாக, வெறுப்பூட்டு வதாக இருக்கிறது என்று கூறப்படுகிறது. அவ்வாறே இருக்கலாம். ஆனால் இத்தகைய கொள்கைக் குரல்கள் அவற்றின் தொனியில் புண்படுத்தக்கூடியதாக இருப்பதை வைத்துக் கொண்டு அவை பொரு ளற்றதாக இருப்பதாகவோ, அவை சுட்டிக்காட்டும் கண்ணோட் டமும், அவை தம்முள் கொண்டுள்ள லட்சியங்களும் வலிமை யற்றவையாக இருப்பதாகவோ அல்லது அவை மெய்யான, மதிக்கத் தக்க அரசியல் தத்துவார்த்த உடை அணிவதற்குத் தகுதியற்றவை என்றோ கருதிவிடலாகாது.

அரசியல் விஞ்ஞானம் என்னும் கண் கொண்டு பார்த்தால் இந்தக் கொள்கைக் குரல்கள் எதைக் குறிக்கின்றன? பிரிட்டிஷ் ஏகாதி பத்தியத்திலிருந்து விடுதலை பெறுவதை, சுதந்திரம் அடைவதை தீண்டப்படாதோர் எதிர்க்கவில்லை என்பதை அவை அர்த்தப்படுத்து கின்றன. ஆனால் அதேசமயம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திடமிருந்து விடுதலையடைவதோடு திருப்தியடைய அவர்கள் மறுக்கிறார்கள். சுதந்திர இந்தியா மட்டும் போதாது என்று அவர்கள் வலியுறுத்து கின்றனர். சுதந்திர இந்தியா ஜனநாயகத்தைப் பாதுகாப்பதாக இருக்க வேண்டும். இந்தியாவில் தனித்தன்மை வாய்ந்த சமூக அமைப்பு இருந்து வருவதன் காரணமாக இந்து சமூகப் பெரும்பான்மையினரை எதிர்கொள்ள வேண்டிய சிறுபான்மை சமூகங்கள் இந்த நாட்டில் இருந்து வருகின்றன, இந்து சமூகப் பெரும்பான்மையினரின் நச்சுப் பல்லைப் பிடுங்குவதற்கு அரசியலமைப்புச் சட்டத்தில் வழிவகை

செய்யப்பட்டாலொழிய இந்தியாவில் ஜனநாயகம் பாதுகாக்கப் பட மாட்டாது. ஆதலால் இந்தியாவில் நிலவுகின்ற இந்த விசேட நிலைமைகளைக் கணக்கிலெடுக்கக் கூடியதும், தீண்டப்படாதவர் களை அடக்குவதற்கும் ஒடுக்குவதற்கும் இந்திய சமுதாயத்தைச் சேர்ந்த இந்து பெரும்பான்மையினர் அரசியல் அதிகாரத்தைப் பெறு வதைத் தடுக்கக் கூடிய சில பாதுகாப்புகளைப் பெற்றிருக்கக் கூடி யதும், தாங்கள் ஒடுக்கப்படுவதையும் சுரண்டப்படுவதையும் எதிர்த்து வகுப்புவாத பெரும்பான்மையினருடன் நடைபெறும் போராட்டத் தில் குறைந்தபட்சம் தங்கள் சொந்தக் காலில் நிற்பதற்கு வகை செய்யக் கூடிய குறைந்தபட்சம் ஓரளவு அரசியல் அதிகாரத்தை தீண்டப் படாதவர்களுக்கு வழங்கக் கூடியதுமான ஓர் அரசியலமைப்புச் சட்டம் வகுத்தளிக்கப்பட வேண்டும் என்று தீண்டப்படாதவர்கள் வலியுறுத்துகின்றனர். சுருக்கமாகக் கூறினால், இந்து வகுப்புவாதப் பெரும்பான்மையினரின் கொடுங்கோன்மை உருவாவதைத் தடுக்கக் கூடிய சில பாதுகாப்புகள் அரசியலமைப்புச் சட்டத்திலேயே இடம் பெற வேண்டுமென்று தீண்டப்படாதோர் விரும்புகின்றனர்.

ஆனால் அதேசமயம் காங்கிரஸ் என்ன கருதுகிறது? பிரிட் டிஷ் ஏகாதிபத்தியத்திலிருந்து இந்தியா சுதந்திரம் பெறுவதே எல் லாமும் என்று அது கருதுகிறது. சுதந்திர இந்தியாவில் இந்திய மக்க ளின் நல்வாழ்வுக்கு இதற்கும் அதிகமாக எதுவும் தேவையில்லை என்று அது நினைக்கிறது. சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்பைப் பொறுத்தவரையில் அதனை ஒரு பிரச்சினையாகவே காங்கிரஸ் எடுத்துக் கொள்ளவில்லை. சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்பு எப்படி இருக்கும் என்று கேட்டால் சுதந்திர இந்தியா ஒரு ஜனநாயக நாடாக இருக்கும் என்று காங்கிரசிடமிருந்து பதில் வருகிறது. அது எத் தகைய ஜனநாயகமாக இருக்கும்? வயதுவந்தோர் வாக்குரிமை அடிப் படையில் அமைந்ததாக அது இருக்கும் என்று காங்கிரஸ் பதிலளிக் கிறது. வயது வந்தோர் வாக்குரிமையைத் தவிர, இந்து வகுப்புவாத பெரும்பான்மையினரின் கொடுங்கோன்மையைத் தடுப்பதற்கு வேறு ஏதேனும் பாதுகாப்புகள் இருக்குமா? இதற்குக் காங்கிரசின் பதில் திட்டவட்டமான முறையில் எதிர்மறையானதாகவே அமைந்துள் ளது. இத்தகைய பாதுகாப்புகளை நீங்கள் ஏன் எதிர்க்கிறீர்கள்? இவ் வாறு கேட்டால் அது தேசத்தைத் துண்டாடுவதில்தான் முடியும் என்று காங்கிரஸ் கூறுகிறது. தனது மதிகேட்டை, அறிவு மழுக்கத்தை மூடிமறைப்பதற்கே காங்கிரஸ் இத்தகைய கவர்ச்சிகரமான வாதத்தை முன்வைக்கிறது. இந்தக் கூர்மதியான வாதத்தின் பிதாமகர் திரு. காந்தியைத் தவிர வேறுயாருமல்ல! இத்தகைய பாதுகாப்புகள் அரசிய

லமைப்புச் சட்டத்தில் வழங்கப்பட்டால் அதனால் பாதிக்கப்படக் கூடிய உயர்சாதி இந்துக்கள், இதற்காக அவருக்குப் பெரிதும் நன்றி கடன்பட்டிருக்கிறார்கள்.

ஆனால் தீண்டப்படாதவர்கள் இந்த சிறுபிள்ளைத்தனமான குதர்க்கவாதத்தை ஏற்க மறுக்கிறார்கள். இந்திய சமூக வாழ்க்கையை வகுப்புகளின் அடிப்படையில்தான் எண்ணிப் பார்க்க வேண்டும். இதைத் தவிர வேறு வழியில்லை. வகுப்புகள் என்பவை இந்திய சமூக வாழ்க்கையில் ஆழமாக நிலைபெற்றுவிட்ட அம்சங்கள்; வகுப்புகளிடையேயான உறவுகளில் வகுப்புவாத உணர்வும் வகுப்பு வாத முற்சார்புகளும் ஆதிக்கம் செலுத்துவதில்லை என்ற கூற்றை ஒப்புக்கொள்வது தவறாகும். இந்த வகுப்புவாதப் பெரும்பான்மை யினரின் சமூக மனப்போக்கை ஒரு வரட்டுத்தனமான சித்தாந்தம் ஆட்கொண்டிருக்கிறது. அது என்ன? பல்வேறு வகுப்புகளுக்கிடையே யான பரஸ்பர உறவுக்கு வெறும் ஏற்றத்தாழ்வை மட்டுமன்றி படி நிலை ஏற்றத்தாழ்வை இந்த சித்தாந்தம் ஆதார அடித்தளமாகக் கொண்டிருக்கிறது. இந்தப் படிநிலை ஏற்றத்தாழ்வு சித்தாந்தம் சுதந் திரத்திற்கும் சகோதரத்துவத்திற்கும் முற்றிலும் தீங்கு விளைவிக்கக் கூடியதாகும். இந்தப் படிநிலை ஏற்றத்தாழ்வு மறைந்துவிடுமென்றோ அல்லது இந்துக்கள் அதனை ஒழித்துக்கட்டி விடுவார்கள் என்றோ எதிர்பார்க்க முடியாது. இது சாத்தியமல்ல. இந்தப் படிநிலை ஏற்றத் தாழ்வு தற்செயலானதோ, இடைநிகழ்வோ அல்ல. அது இந்துக்களின் ஒரு சமயக் கோட்பாடு. அது இந்து சமயத்தின் அதிகாரப்பூர்வமான சித்தாந்தம். அது புனிதமானது; எந்த இந்துவும் அதனை ஒழித்துக் கட்டுவது பற்றி நினைக்க முடியாது. ஆதலால் படிநிலை ஏற்றத் தாழ்வை தனது சமயக்கோட்பாடாகக் கொண்ட இந்து வகுப்புவாதப் பெரும்பான்மை என்பது ஒரு தாற்காலிகமான கட்டமல்ல. அது ஒரு நிரந்தரமான உண்மை; என்றென்றைக்கும் அபாயகரமானது. இந்தியா வுக்கு ஓர் அரசியலமைப்புச் சட்டத்தை வகுக்கும்போது ஒரு நிலை யான வகுப்புவாதப் பெரும்பான்மை இருந்து வருவதை உதாசீனம் செய்துவிட முடியாது; அதனை அரசியல் ஜனநாயகத்துடன் இணக்கு விப்பதற்குப் பாதுகாப்புகளை உருவாக்கும் பிரச்சினையை எதிர்ப்பட வேண்டியிருக்கும். இதுதான் தீண்டப்படாதோர் முன்வைக்கும் வாதம்.

தீண்டப்படாதோர் கோரிவரும் அரசியல் சட்டப் பாதுகாப்பு கள் அண்மையில் அகில இந்திய ஷெட்யூல் வகுப்பினர் சம்மேள னத்தின் செயற்குழு நிறைவேற்றிய தீர்மானங்களில் விவரிக்கப்பட்

டுள்ளன. இந்தத் தீர்மானங்கள் பின்னிணைப்பு XIல் பிரசுரிக்கப் பட்டிருக்கின்றன. எனினும் வாத நோக்கங்களுக்காக இவற்றில் மூன்றை மட்டும் இங்கு எடுத்துக் கொண்டுள்ளேன். (i) சட்டமன்றத்தில் உத்தரவாதமான குறைந்தபட்ச பிரதிநிதித்துவம்; (ii) நிர்வாக சபையில் உத்தரவாதமான குறைந்தபட்ச பிரதிநிதித்துவம்; (iii) பொதுப்பணித் துறைகளில் உத்தரவாதமான குறைந்தபட்ச பிரதிநிதித்துவம். இந்தக் கோரிக்கைகளை அப்பட்டமான வகுப்புவாதம் என்று காங்கிரஸ் எள்ளி நகையாடியுள்ளது; அதுமட்டுமல்ல, தீண்டப்படாதோரை வேலைக்காக ஆளாய்ப் பறப்பவர்கள் என்றும் படம்பிடித்துக் காட்டி யிருக்கிறது. இந்த உத்தரவாதங்களை உயர் தேசியத்தின்பால் காங் கிரஸ் எதிர்க்கிறது; தன்னை அந்த தேசியத்தின் காவல் தெய்வமாக கருதிக்கொண்டு தனக்குத் தானே அட்சதை போட்டுக்கொள்கிறது. பாதுகாப்புகளுக்கு எதிராக காங்கிரஸ் முன்வைக்கும் வாதத்தின் அபத் தத்தை புரிந்துகொள்வது அயல்நாட்டவருக்கு சிரமமாக இருக்கக் கூடும். ஆனால் இந்தப் பாதுகாப்புகள் ஏன் கோரப்படுகின்றன என் பதை அயல்நாட்டினர் தெரிந்து கொண்டால் இவற்றை வகுப்புவாத மாக சித்தரிக்க காங்கிரஸ் செய்யும் முயற்சி எவ்வளவு கடைந் தெடுத்த முட்டாள்தனம் என்பதைப் புரிந்து கொள்வார்கள்.

தீண்டப்படாதவர்கள் இந்த உத்தரவாதங்களைக் கோரும் நோக்கம் சட்டமன்றங்களையும், அமைச்சரவையையும், நிர்வாகத் தையும் தீண்டப்படாதார்களைக் கொண்டு நிரப்ப வேண்டும் என்ப தல்ல. இந்த உத்தரவாதங்கள் இந்து வகுப்புவாதப் பெரும்பான்மை யினரின் கொடிய நெருக்குதலால் தீண்டப்படாதவர்கள் அதல பாதாளத்துக்குத் தள்ளப்பட்டு விடாதபடி தடுக்கும் வலுவான அடித் தளங்கள் எனலாம். இந்த இந்து வகுப்புவாதப் பெரும்பான்மை யினரை ஒரு வரம்புக்குள், கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பதே இந்த உத்தரவாதங்களின் நோக்கம். இத்தகைய உத்தரவாதங்கள் தீண்டப்படாதவர்களுக்கு அளிக்கப்படவில்லை என்றால் அதன் விளைவு மிகவும் பயங்கரமானதாக இருக்கும். இந்து பெரும்பான்மை யினர் சட்டமன்றத்தையும், அமைச்சரவையையும், நிர்வாகத்தை யும் கைப்பற்றிக் கொள்வதுடன் நிற்க மாட்டார்கள்; சட்டமன்றமும் அமைச்சரவையும், நிர்வாகமும் இந்து பெரும்பான்மையினரின் ஆதிக்கத்தின்கீழ் வந்துவிடும்; அப்போது இந்த சக்திவாய்ந்த அர சாங்க சாதனங்கள் சிறுபான்மையினரைப் பாதுகாப்பதற்குப் பதிலாக இந்துப் பெரும்பான்மையினரின் கைக்கருவிகளாக மாறி, அதன் ஆணை களை நிறைவேற்றுபவைகளாக ஆகிவிடும்.

மேலே தரப்பட்டுள்ள விளக்கங்களின் அடிப்படையில் பார்க்கும்போது, காங்கிரசுக்கும் தீண்டப்படாதோருக்கும் இடையிலுள்ள பிரச்சினைகளை சராசரி அறிவுத்திறம் படைத்த வெளிநபர் ஒருவர் புரிந்துகொள்வதில் எத்தகைய சிரமமும் இருக்க முடியாது என்பது தெள்ளத்தெளிவு. முதலாவதாக, வகுப்புவாதப் பெரும் பான்மை நிலவுவது அரசியல் ஜனநாயகத்துக்கு மிகவும் ஆபத்தானது என்பதை காங்கிரஸ் ஏற்க மறுக்கிறது; தீண்டப்படாதவர்களோ இந்த அபாயத்தைத் தடுத்து நிறுத்துவதற்கு அரசியலமைப்பில் சில ஆக்க பூர்வமான விதிமுறைகள் இருக்க வேண்டும் என்று வலியுறுத்துகின்றனர். இதுதான் இந்த இரு தரப்புகளுக்குமிடையே உள்ள பிரச்சினை என்பதை அந்த வெளிநபர் புரிந்துகொள்ள வேண்டும். வேறுவிதமாகச் சொன்னால் இந்தியாவை ஜனநாயகத்துக்குப் பந்தோபஸ்து மிக்கதாக ஆக்க வேண்டும் என்பதில் தீண்டப்படாதவர்கள் மிகுந்த ஆர்வம் காட்டுகின்றனர். ஆனால் காங்கிரசாரோ ஜனநாயகத்தை எதிர்க்காவிட்டாலும், அந்த ஜனநாயகத்தை உண்மையானதாக்கு வதற்கான நிலைமைகள் தோற்றுவிக்கப்படுவதை நிச்சயமாக அவர்கள் எதிர்க்கின்றனர்.

இரண்டாவதாக, அரசியல் சட்டத்தில் பாதுகாப்புகள் இருக்க வேண்டும் என்ற தீண்டப்படாதவர்களின் இந்தக் கோரிக்கை புதுமையான கோரிக்கை ஒன்றுமல்ல என்பதையும் அயல்நாட்டவர் தெரிந்து கொள்ள வேண்டும். இந்தப் பாதுகாப்புகள் என்பவை சில குறிப்பிட்ட கட்டுப்பாடுகள், வரையறைகள் என்பவற்றின் மறுபெயரே என்பதையும், அரசியல் ஜனநாயகம் சீர்குலைக்கப்படுவதிலிருந்து அதனைப் பாதுகாப்பதற்கு இத்தகைய கட்டுப்பாடுகளையும் வரையறைகளையும் தன்னுள் கொண்டிராத எந்த அரசியலமைப்புமே இல்லை என்பதையும் அவர் மனத்தில் கொள்ள வேண்டும். மேலும் அமெரிக்காவின் அரசியலமைப்புச் சட்டத்தில் இப்படிப்பட்ட கட்டுப்பாடுகளும் வரையறைகளும் நிறைய இருக்கின்றன என்பதையும், அடிப்படை உரிமைகள், அதிகாரப் பிரிவினை சம்பந்தப்பட்ட விதிமுறைகளில் அவை இடம்பெற்றிருக்கின்றன என்பதையும் அவர் கவனத்தில் கொள்ள வேண்டும். இவ்வாறு செய்தால், தீண்டப்படாதவர்கள் கோரும் பாதுகாப்புகள் ஏனைய நாடுகளில் உள்ளவற்றிலிருந்து சற்று மாறுபட்ட வடிவத்தில் இருப்பதைக் கண்டு அவர் எவ்விதத்திலும் குழப்பமடைய மாட்டார். ஏனென்றால், அரசியல் ஜனநாயகத்துக்கு அபாயத்தைத் தோற்றுவிக்கக்கூடிய சக்திகளின் இயல்பைப் பொறுத்து பாதுகாப்புகளின் இயல்பும் மாறும்; இந்தியாவில் இந்த சக்திகள் வேறுபட்ட இயல்பைக் கொண்டிருப்பதால்,

பாதுகாப்புகளும் வேறுபட்ட வடிவத்தை எய்துவது அவசிய மாகிறது.

மூன்றாவதாக, இந்தியாவில் யாரேனும் வகுப்புவாத வெறி கொண்டிருக்கிறார்கள் என்றால் அது காங்கிரசை தவிர தீண்டப் படாதவர்கள் அல்ல என்பதையும், அரசியல் சட்டரீதியான உத்தர வாதங்கள் வேண்டும் என்ற கோரிக்கையை எதிர்ப்பதற்கு காங்கிரஸ் எத்தகைய தத்துவார்த்த ஆதாரங்களை முன்வைத்தபோதிலும் அர சியல் களத்தை இந்துக்களுக்கு ஒரு சுதந்திரமான மேய்ச்சல் நிலமாக ஆக்குவதே அதன் உண்மையான நோக்கம் என்பதையும் புரிந்து கொள்வதில் அயல்நாட்டவருக்கு எந்தச் சிரமமும் இருக்காது. காங் கிரஸ் இவ்விதம் பகிரங்கமாகக் கூறாவிட்டாலும் காங்கிரஸ் வகுப்பு வாதக் கண்ணோட்டத்துடன் நடந்து கொள்வது முற்றிலும் இயல்பே என்பதை அவர் காணமுடியும். ஏனென்றால் இந்து பெரும்பான்மை காங்கிரசின் முதுகெலும்பாகும். இது இந்துக்களால் இந்துக்களின் ஆதரவைக் கொண்டு அமைந்துள்ளது. இந்தப் பெரும்பான்மைதான் காங்கிரசின் பரிவாரமாகும்; எனவே, தனது பரிவாரத்தின் உரிமை களைப் பாதுகாக்க அது கடமைப்பட்டுள்ளது. அயல்நாட்டவர் இதனை உணர்ந்திருந்தால், தேசியத்தின் நலனுக்காகவே இந்தக் கோரிக்கையை தான் எதிர்ப்பதாக காங்கிரஸ் முன்வைக்கும் வாதங் களைக் கண்டு ஏமாறமாட்டார். மாறாக, அப்பட்டமான வகுப்பு வாதம் தறிகெட்டுத் தாண்டவமாடுவதற்குப் பச்சை விளக்குக் காட்டு வதற்கே தேசியத்தைப் பயன்படுத்தி உலகை காங்கிரஸ் ஏமாற்று கிறது என்பதை அவர் புரிந்துகொள்வார்.

கடைசியாக, காங்கிரசின் பிரதிநிதித்துவ இயைபு இந்திய அரசியலில் ஏன் இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த ஒரு பிரச்சினை யாகி உள்ளது என்பதையும் அயல்நாட்டவர் தெரிந்து கொள்வார். சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்பு இப்படித்தான் இருக்க வேண் டும் என்று கூறும் உரிமை தனக்கு மட்டும்தான் உண்டு என்று காங் கிரஸ் தன்முனைப்போடு, அகம்பாவத்தோடு, ஆணவத்தோடு கொக் கரித்திருக்கவில்லை என்றால் காங்கிரசின் பிரதிநிதித்துவத் தன்மை பற்றி எவரும் கவலைப்பட்டிருக்க மாட்டார்கள், அது யாரைப் பிரதி நிதித்துவப்படுத்துகிறது, யாரைப் பிரதிநிதித்துவப்படுத்தவில்லை என்பது குறித்தும் அக்கறை எடுத்துக் கொண்டிருக்க மாட்டார்கள் என்பதையும் அயல்நாட்டவர் உணர்ந்து கொள்வார். ஆனால் காங் கிரசோ நாட்டின் சார்பில் பேசுவதற்கு தனக்கு மட்டுமே உரிமை உண்டு என்று கூறிவருவதுதான் ஒரு முக்கியமான பிரச்சினையாக உருவாகி

இருக்கிறது; இந்நிலைமையில் இதனை ஏற்காதவர்களுக்கு இந்த உரிமை கொண்டாடலை எதிர்ப்பதைத் தவிர வேறு வழியில்லை.

## II

இவ்வாறெல்லாம் இருந்தும் அயல்நாட்டவர்கள் பின்வருமாறு கேட்கிறார்கள்: ''சுதந்திரத்திற்கான போராட்டத்தில்' காங்கிரசுடன் இணைந்து ஏன் செயல்படக் கூடாது?; இவ்வாறு காங்கிரசுடன் இணைந்து செயலாற்றுவதற்கு அரசியல் சட்ட பாதுகாப்புகள் சம்பந்தமாக உடன்பாடு ஏற்படுவதை ஏன் நிபந்தனையாக முன்வைக்க வேண்டும்? என்னவிருந்தாலும் சுதந்திரம் பெற்ற பிறகுதானே பாதுகாப்புகள் கிட்டமுடியும்?'' இது சம்பந்தமாக முன்னர் நாம் முன்வைத்த விவாதத்தைக் கூர்ந்து கவனித்த ஓர் அயல்நாட்டவர் இந்த 'சுதந்திரப் போராட்ட'த்தில் காங்கிரசுடன் ஒத்துழைப்பதை அத்தனை பாதுகாப்பானதாக தீண்டப்படாதவர்கள் ஏன் கருதவில்லை என்பதை நிச்சயம் புரிந்துகொண்டிருப்பார் என்பதில் ஐயமில்லை. ஆனால் இதனைப் புரிந்து கொள்ளாதவர்கள் சிலர் இருக்கக்கூடும்; 'சுதந்திரப் போராட்டத்தில்' தீண்டப்படாதோர் காங்கிரசுடன் கலந்து கொள்ளாததற்கான காரணங்கள் என்ன என்பதை அறிந்துகொள்ளவும் அவர்கள் விரும்பக் கூடும். இதற்கு அவர்கள் தவறான காரணங்களை ஊகிப்பதற்கு அனுமதிப்பதைவிட சரியான காரணங்களை அவர்கள் தெரிந்துகொள்ள உதவுவது உகந்ததாக இருக்கும். இவற்றில் மிக முக்கியமான காரணங்களை மட்டும் இங்கு தருகிறோம்.

முதல் காரணம் பகுத்தறிவின்பாற்பட்டது. தீண்டப்படாதவர்கள் பின்வருமாறு கேட்கின்றனர்: ''முன்கூட்டியே ஓர் உடன்பாடு காணலாம் எனக் காங்கிரசிடம் கோருவதில் என்ன தவறு இருக்கிறது? காங்கிரஸ் முன்கூட்டியே ஓர் உத்தரவாதத்தை அளிப்பதில் அதற்கு என்ன நஷ்டம் இருக்கிறது?'' பாதுகாப்புகள் சம்பந்தப்பட்ட இந்தக் கோரிக்கைக்கு காங்கிரஸ் முன்கூட்டியே இணங்கினால் அதில் இரண்டு பலன்கள் உண்டு என்று அவர்கள் வாதிக்கின்றனர். முதலாவதாக, இந்துப் பெரும்பான்மை ஆட்சியில் தங்கள் கதி என்னவாகுமோ என்று பெரிதும் அஞ்சித் தவிக்கும் தீண்டப்படாதோருக்கு இத்தகைய உத்தரவாதம் மிகுந்த ஆறுதலையும் நம்பிக்கையையும் அளிக்கும். இரண்டாவதாக, காங்கிரசுடன் ஒத்துழைப்பதற்கு இந்த உத்தரவாதம் தீண்டப்படாதவர்களுக்கு பெரும் தூண்டுகோலாக இருக்கும். சொல்லப்போனால், தீண்டப்படாதோர் ஏன் ஒத்துழையாமைப்

போக்கைக் கடைப்பிடிக்கின்றனர்? ஏனென்றால் இந்த சுதந்திரம் அடையப் பெற்றால் இந்துப் பெரும்பான்மையினர் தங்களை மீண்டும் அடிமைப்படுத்துவதற்கு வழிவகுக்கும் என்று அவர்கள் அஞ்சுகின்றனர். ஒரு சிறு விலைகொடுப்பதன் மூலம் அதாவது முன்கூட்டியே ஓர் உடன்பாடு காணுவதன் மூலம் ஏன் இந்த அச்சத்தை அகற்றக்கூடாது?

இரண்டாவது காரணம் அனுபவத்தின்பாற்பட்டது. ''சுதந்திரத் திற்கான போராட்டம்'' முடிவடைந்ததும் வலுமிக்க சக்திகள் வலு வில்லாத சக்திகளுக்குப் பாதுகாப்பளிக்க பெருந்தன்மையுடன் முன் வந்ததாக உலக அனுபவம் காட்டவில்லை என்று தீண்டப்படாதவர் கள் கூறுகின்றனர்.

இத்தகைய வஞ்சனைக்கு எத்தனையோ உதாரணங்களைக் கூறமுடியும். அமெரிக்காவில் உள்நாட்டுப் போருக்குப் பிறகு நீக்ரோக் களுக்கு இழைக்கப்பட்ட பச்சை துரோகத்தை இவ்வகையில் முக்கிய மாகக் குறிப்பிடலாம். உள்நாட்டுப் போரில் நீக்ரோக்கள் ஆற்றிய பங்கு குறித்து ஹெர்பர்ட் அப்தேகர் பின்வருமாறு கூறுகிறார்:[1]

> ''நீக்ரோக்களை அடிமைப்படுத்தியிருந்த அரசுகளைச் சேர்ந்த 1,25,000 நீக்ரோக்கள் அமெரிக்க உள்நாட்டுப் போரில் கூட்டிணைப்பை ஆதரித்த வட அரசுகளின் படை யில் சேவை செய்தனர். அவர்கள் வடக்கைச் சேர்ந்த 80 ஆயிரம் பேர்களுடன் சேர்ந்து நானூற்று ஐம்பது சண்டை களில் நேர் நிகரற்ற நெஞ்சுரத்துடன், தீரத்துடன், வீரத்துடன் போரிட்டனர். உள்நாட்டுப் போரில் விலகிப்போன பதி னோரு நாடுகளது கூட்டமைப்பு சிதைந்து சீர்குலைந்து போவதிலும், அடிமைத்தனத்தை ஒழிப்பதிலும் இது முக்கியப் பங்காற்றிற்று.
>
> ''நீக்ரோ என்பவன் அப்படியே ஒரு மனிதப்பிறவியாக இருந்தாலும் இயல்பாகவே, மாற்றமுடியாத வகையில் கீழானவன், ஓர் அடிமையாக இருப்பதற்கு மட்டுமே தகுதி யானவன் என்னும் இழிவான, கயமைத்தனமான சித்தாந் தத்தின்மீது கட்டி உருவாக்கப்பட்ட ஒரு நாட்டினுள் இதோ

---

1. உள்நாட்டுப் போரில் நீக்ரோ, பக்கங்கள் 35-40.

2 லட்சம் ஆயுதந்தாங்கிய நீக்ரோ வீரர்கள் போராடி வருவதைப் பார்க்கிறோம்.

★ ★ ★

அவமானகரமான பாரபட்ச நிலைமைகளுக்கும் மிகவும் பிரதிகூலமான சூழ்நிலைகளுக்கும் இடையேயும் குடியரசின் நீக்ரோ படைவீரர்கள் தங்கள் நாட்டிற்காகப் போராடினர். வெள்ளைப் படைவீரர்கள் மாதம் பதின்மூன்று டாலர் பெற்று வந்தனர். நீக்ரோக்களோ 1864 ஜூலை 14 ஆம் தேதி வரை மாதம் ஏழு டாலர் வீதமே பெற்றுவந்தனர்; பின்னர் பின்தேதியிட்டு 1864 ஜனவரி 1 முதல் இந்த ஊதியம் சமப்படுத்தப்பட்டது. வெள்ளையர்கள் படையில் சேர்ந்தபோது அவர்களுக்கு ஏராளமாக ஊக்க ஊதியம் அளிக்கப்பட்டது; நீக்ரோக்களுக்கு (1864 ஜூன் 15 வரை) அத்தகைய சலுகை எதுவும் தரப்படவில்லை; நீக்ரோக்களுக்கு 'கமிஷன்' பெற்ற அதிகாரிகளாக பதவி உயர்வு பெறும் வாய்ப்பு ஏதும் இல்லை... அடிமைகளாக இருந்து படைவீரர்களான நீக்ரோக்கள் போரில் கைது செய்யப்பட்டதால் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்நாட்டுப் போரில் விலகிப்போன பதினொரு நாடுகளின் கூட்டிணைவு அவர்களுக்கு போர்க்கைதிகள் அந்தஸ்தை அளிக்க மறுத்தது (1864 அக்டோபர் வரை இந்த நிலை நீடித்தது). மாறாக அவர்கள் கொல்லப்பட்டனர், திரும்பவும் அடிமைகளாக்கப்பட்டனர் அல்லது கட்டாய உழைப்பு முகாமில் அடைக்கப்பட்டனர்.

★★★

இதோ இதுவரை அடக்கப்பட்டு, ஒடுக்கப்பட்டு வந்த ஆயிரக்கணக்கான ஆயுதந்தாங்கிய நீக்ரோ படைவீரர்கள் மூலைமுடுக்கெல்லாம் தெரிந்த தங்கள் சொந்த நாட்டுக்கு அனுப்பப்பட்டனர்; புதிதாகப் பெற்ற தங்கள் சுதந்திரத்தைப் பாதுகாக்கவும், தங்கள் வீரத்தை தீரத்தை நிரூபித்துக் காட்டவும், தங்களுடைய சொந்த பெற்றோர்களை, பிள்ளைகளை, மனைவிமார்களை அடிமைத்தனத்திலிருந்து மீட்கவும் தங்கள் சொந்த நாட்டுக்கு அனுப்பப்பட்டனர்... குடியரசைப் பாதுகாப்பதற்காக முப்பத்தோராயிரம் நீக்ரோக்கள்

போர்முனையில் தங்கள் இன்னுயிரை ஈந்தனர் என்பதை இப்போதும் நினைவிற் கொள்ள வேண்டும்.

உள்நாட்டுப்போர் முடிவுக்கு வந்ததும் நீக்ரோக்களுக்கு என்ன நேர்ந்தது? வெற்றி பெற்ற எக்களிப்பில், உணர்ச்சியின் திடீர் எழுச்சியில் குடியரசுவாதிகள் முதலில் என்ன செய்தார்கள்? அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் பாதுகாப்பதற்காக போர் புரிந்த அவர்கள், வெற்றிபெறும் பொருட்டு நீக்ரோக்களின் உதவியைப் பெற்ற அவர்கள் அரசியலமைப்புச் சட்டத்துக்கு பதின்மூன்றாவது திருத்தத்தைக் கொண்டு வந்தனர். இதன்படி சட்டத்தின் பார்வையில் அவர்களது அடிமைத்தனம் ஒழித்துக்கட்டப்பட்டது. ஆனால் வாக்காளர்கள் என்ற முறையிலோ, அதிகாரிகள் என்ற முறையிலோ அரசாங்கத்தில் பங்கு பெற நீக்ரோக்கள் எத்தகைய உரிமையையும் பெற்றார்களா? நீக்ரோக்கள் அரசியல் ரீதியில் வெள்ளையர்களுக்கு சமமாக நடத்தப்பட வேண்டும் என்பதை தெற்கத்திய நாடுகளை அங்கீகரிக்கும்படிச் செய்வதற்கு குடியரசுவாதிகள் சில நடவடிக்கைகளை மேற்கொண்டனர். இது பதினான்காவது திருத்தத்தின் மூலம் செய்யப்பட்டது. நீக்ரோக்கள் உட்பட ஐக்கிய அமெரிக்க நாடுகளில் பிறந்த அனைவருக்கும் இந்தத் திருத்தம் குடியுரிமை வழங்கிற்று; ஐக்கிய அமெரிக்க நாடுகளைச் சேர்ந்த எந்த ஒரு குடிமகனது உரிமைகளையும் பாதிக்கும், பறிக்கும் எத்தகைய சட்டத்தையும் தடைசெய்தது. மேலும் வாக்குரிமை பெறுவதிலிருந்து விலக்கப்படும் பிரஜைகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப எந்த ஒரு நாட்டின் காங்கிரசிலும் பிரதிநிதிகளின் எண்ணிக்கையைக் குறைப்பதற்கும் இது வகை செய்தது. இந்த பதினான்காவது சட்டத்திருத்தத்தை மதிக்கும் உத்தேசம் ஏதும் தெற்கத்திய நாடுகளுக்கு இல்லை. டென்னசியைத் தவிர இதர நாடுகள் அனைத்தும் இந்தச் சட்டத் திருத்தத்தை நிராகரித்தன; முற்றிலும் வெள்ளையர்களைக் கொண்ட அரசாங்கங்களை அமைத்தன. குடியரசுவாதிகள் புனருத்தாரணச் சட்டம் (கலகம் செய்யும் நாடுகளில் ஆற்றல் மிக்க அரசாங்கங்களை அமைக்க வகை செய்யும் மசோதா) எனப்படும் ஒரு சட்டத்தை இயற்ற 1867 மார்ச் 2 முதல் முயற்சி மேற்கொண்டனர். கூட்டரசில் இன்னமும் சேராத நாடுகளில் வெள்ளையர்கள் அமைத்துள்ள அரசாங்கங்களைப் புறக்கணித்துவிட்டு, அங்கு சட்டப்பூர்வமான அரசாங்கங்களை உருவாக்குவதும், அவற்றை கூட்டரசில் மீண்டும் இணைப்பதற்கான சூழ்நிலைமைகளை நிர்ணயிப்பதும் இந்த சட்டத்தின் நோக்கமாகும். டென்னசி தவிர பிரிந்து சென்ற எல்லாத் தெற்கு நாடுகளும் இந்தச் சட்டத்தின்படி ஐந்து ராணுவ மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு மாவட்டமும்

கூட்டரசுப் படையைச் சேர்ந்த ஒரு பிரிகேடியர்-ஜெனரலின் பொறுப்பில் விடப்பட்டன. (1) இந்த நாடுகள் ஒவ்வொன்றும் ஒரு புதிய அரசியல் சட்டத்தை வகுத்துக் கொள்ள வேண்டும்; (2) பதினான்காவது சட்டத்திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்; (3) இந்த நாடுகள் உரிய முறையில் கூட்டரசில் சேரவேண்டும். அதுவரையிலும் இந்த நாடுகள் ராணுவக் கட்டுப்பாட்டின் கீழ் இருந்துவரும். குடியரசுவாதிகள் பதினைந்தாவது சட்டத்திருத்தம் எனப்படும் ஒரு திருத்தத்தையும் கொண்டு வந்தனர். ஒரு பிரஜைக்குள்ள வாக்களிக்கும் உரிமையை வருணம், இனம், நிறம், முந்தைய அடிமை நிலை போன்ற எத்தகைய காரணங்களாலும் மறுக்கவோ, குறைக்கவோ கூடாது என்று இந்தத் திருத்தம் கூறுகிறது; இதுவும் அரசியல் சட்டத்தின் ஒரு பகுதியாக ஏற்றுக்கொள்ளப்பட்டு கூட்டரசைச் சேர்ந்த எல்லா நாடுகளையும் கட்டுப்படுத்துவதாக இருந்தது.

ஆனால் நீக்ரோக்களை சமத்துவப் பிரஜைகளாக ஏற்கும் உத்தேசம் தென்பகுதியைச் சேர்ந்த வெள்ளையர்களுக்கு இல்லை. நீக்ரோக்களின் குடியுரிமைகளைப் பறிக்கும் பணி மும்முரமாக நடைபெற்று வந்தது. தென்புலத்து அரசாங்கங்களாலும் தெற்கு நாடுகளைச் சேர்ந்த வெள்ளையர்களாலும் இந்தப் பணி ஒரு புனிதமான கடமையாகக் கருதப்பட்டு மேற்கொள்ளப்பட்டு வந்தது. பதினைந்தாவது சட்டத் திருத்தத்தைத் தவிர்ப்பதற்கு தெற்கு நாடுகள் தமது முழு சூழ்ச்சித் திறத்தையும் பயன்படுத்தி, இனம், நிறம் ஆகிய காரணங்களால் அல்லாது வேறு போலியான, மோசடியான காரணங்களின் அடிப்படையில் நீக்ரோக்களுக்கு வாக்குரிமையை மறுப்பதில் முனைந்து ஈடுபட்டன. இவற்றில் பெரும்பாலான நாடுகள் இந்தக் கெடுமதியோடு பாட்டனார் விதி[1] என்பதைப் பயன்படுத்திக் கொண்டன; இந்த விதி நீக்ரோக்களுக்கு வாக்குரிமை கிடைக்காதபடிச் செய்தது; அதேசமயம் வெள்ளையர்களுக்கு அந்த உரிமையை முழு அளவுக்கு உறுதிசெய்தது. இன்னொருபுறம் இந்த சீர்குலைவுப் பணியை கூ கிளக்ஸ் கிளான் என்னும் அமைப்பு செய்து வந்தது. இந்தக் கிளான் டென்னசி இளைஞர்களால் ஆரம்பத்தில் ஒரு பொழுதுபோக்கு மன்றமாகவே ஆரம்பிக்கப்பட்டது. பின்னர் அது நீக்ரோக்களை ஒடுக்குவதற்கும், அவர்கள் தங்கள் அரசியல் உரிமைகளைப் பயன்படுத்தாதபடி தடுப்பதற்குமான ஓர் அமைப்பாக

1. பாட்டனார் விதி என்று அழைக்கப்படுவதற்குக் காரணம் ஒருவருடைய பாட்டனார் முன்னர் வாக்களிக்கும் உரிமை பெற்றிருந்தால் அவரது வாக்களிக்கும் உரிமை கட்டுப்படுத்தப்பட்டதே இதற்குக் காரணம்.

மாற்றப்பட்டது. அது நீக்ரோக்களுக்கு எதிராக அடிக்கடியும், தெற்கே உள்ள நீக்ரோக்களிடம் அனுதாபம் காட்டும் வெள்ளையர்களுக்கு எதிராக சில சமயங்களிலும் கொடுமையான அட்டூழியங்களைக் கட்டவிழ்த்துவிட்டது. இந்த அடாவடிக் கும்பலைச் சேர்ந்தவர்கள் யார் என்பதைக் கண்டுபிடிக்கவே முடியவில்லை. தென்பகுதியைச் சேர்ந்த வெள்ளையர் கூட்டம் முழுவதுமே இந்த ரவுடிக் கும்பலை ஆதரித்து நின்றதையே இது காட்டுகிறது. இந்தக் கும்பல் கூட்டரசின் துருப்புகளை எதிர்த்து நிற்கத் துணியவில்லை. எனினும் கசையடி கொடுத்தல், படுகொலைகள் புரிதல், வீடுகளைத் தீயிட்டுப் பொசுக்கு தல் போன்ற இவர்களது குரூர நடவடிக்கைகளை அமெரிக்க காங் கிரஸ் இயற்றிய சட்டங்களால் கட்டுப்படுத்த முடியவில்லை; இது சில மாவட்டங்களுக்கு அவப்பேரைச் சம்பாதித்துக் கொடுத்தது.

தென் நாடுகளின், தெற்கே வாழ்ந்த வெள்ளையர்களின் நோக் கங்களை ஐக்கிய அமெரிக்க நாடுகளின் உச்ச நீதிமன்றத் தீர்ப்பு கள் முட்டுக் கொடுத்து ஆதரித்தன. பதினைந்தாவது சட்டத்திருத்தம் அமலில் இருந்தபோதிலும் நீக்ரோக்களுக்கு வாக்குரிமை அளிப் பதை மறுக்கும் சட்டங்கள் செல்லுபடியாகத் தக்கவையே என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. இன அல்லது நிற அடிப்படையில் வாக்குரிமை மறுக்கப்படவில்லை என்று இதற்கு சமாதானம் கூறப் பட்டது. மேலும் நீக்ரோக்கள் தங்கள் வாக்குரிமையைப் பயன் படுத்துவதை கூ கிளக்ஸ் கிளானின் நடவடிக்கைகள் தடுக்கின்றன என்றால் அதற்குப் பரிகாரமே இல்லை; ஏனெனன்றால் தேர்தல் உரிமைகளில் தனிப்பட்ட அமெரிக்க நாடுகள் தலையிடுவதை பதி னைந்தாவது சட்ட திருத்தம் தடுத்ததே தவிர தனிப்பட்ட அமைப்பு கள் தலையிடுவதை அது தடுக்கவில்லை என்றும் உச்சநீதிமன்றம் வாதம் செய்தது.

இந்நிலைமையில் குடியரசுவாதிகள் என்ன செய்தார்கள்? நீக்ரோக்களுக்கு முழுநிறைவான, மிகவும் பயனுறுதியுள்ள உத்தர வாதங்கள் அளிப்பதற்கு அரசியலமைப்புச் சட்டத்தைத் திருத்து வதற்குப் பதிலாக அவர்கள் தென்னாடுகளை அங்கீகரிக்கவும் கூட் டரசில் அவற்றை இணைத்துக் கொள்ளவும், கலகக்காரர்களுக்குப் பொது மன்னிப்பு வழங்கவும், அங்கு நிறுத்தி வைக்கப்பட்டிருந்த துருப்புகளைத் திரும்பப் பெறவும் இணங்கினார்கள்; இதன் விளை வாய் நீக்ரோக்கள் அவர்களுடைய எசமானர்களின் ஈவு இரக்கமற்ற கொடுமைக்கு மேலும் ஆளாயினர்; குரங்கு கை பூமாலை ஆயினர். இதுகுறித்து திரு. அப்தேகர் கூறுவதாவது:

> ''ஆனால் தெற்கே ஜனநாயகத்துக்காகவும், நாட்டுக்காகவும், சிவில் உரிமைகளுக்காகவும் நிகரற்ற வீரதீரத்தோடு போராடிய நீக்ரோ மக்களும் அவர்களுடைய நண்பர்களும் தோற்கடிக்கப்பட்டனர்; வடபகுதியைச் சேர்ந்த தொழில் துறை மற்றும் நிதித்துறை பூர்ஷுவாக்கள் இழைத்த வெட்கக்கேடான துரோகமே இதற்குப் பிரதான காரணம். 1877ல் இவர்கள் தெற்கைச் சேர்ந்த பிற்போக்கான பண்ணையார்களுடன் சமரசம் செய்து கொண்டனர். குடியரசுக் கட்சிக்குள் இருந்த பிற்போக்குப் பிரிவினருடன் கூட்டுச் சேர்ந்து வட பகுதியைச் சேர்ந்த பெரிய பூர்ஷுவாக்கள் புரட்சியைக் காட்டிக் கொடுத்துவிட்டனர், விற்றுவிட்டனர்; இதன் மூலம் தெற்கே அடிமைகளின் எசமானர்களாக இருந்த சுயநலக் கும்பல் தன் இஷ்டம்போல் கொட்டமடிக்க விட்டுவிட்டனர்; அவர்கள் தங்கள் சொந்த அரசை அமைத்துக்கொள்ள உதவினர். இருதரப்பினரும் தங்களுக்குள் இரகசியமாக செய்து கொண்ட இந்த உடன்பாடு நீக்ரோக்களின் தலையில் பேரிடியாக விழுந்தது; அவர்களது வாக்குரிமை பறிக்கப்பட்டது; அவர்கள் மிகவும் கேவலமான குற்றேவலர்களாக ஆக்கப்பட்டனர்; சட்டமுறையின்றித் தான்தோன்றித்தனமாகத் தூக்கிலிடப்பட்டனர்; தங்கள் சிவில் சுதந்திரங்களையும் கல்வி வாய்ப்புகளையும் இழந்தனர்.''

இந்த நயவஞ்சகத் துரோகக் கதை இத்துடன் முடியவில்லை. குடியரசுவாதிகள் தெற்கில் ஜனநாயகவாதிகளை எதிர்த்து நிற்க வேண்டியவர்களாக உள்ள நிலைமையில், மீளா நரகத்திலிருந்து நீக்ரோக்களைக் கைகொடுத்துத் தூக்கிவிட்டால் இந்தப் போட்டியில் அவர்களது கைஓங்கும். ஏனென்றால் வடக்கில் போன்றே தெற்கிலும் வெள்ளையர்கள் குடியரசுவாதிகள் என்றும் ஜனநாயகவாதிகள் என்றும் பிளவுபட்டுள்ளனர், ஆனால் அதேசமயம் நீக்ரோ வாக்காளர்கள் கணிசமான எண்ணிக்கையில் இல்லாத எந்த ஒரு நாடும் தெற்கில் இல்லை. அப்படியிருக்கும்போது நீக்ரோக்களை ஆதரித்து நிற்பது குடியரசுவாதிகளுக்கு மிகுந்த பலத்தை அளிக்கும். எனினும் குடியரசுவாதிகள் இதனைச் செய்யத் தயாராக இல்லை. அதற்குப் பதிலாக நீக்ரோக்களின் வாக்குகளை நாடுவதில்லை என்று குடியரசுவாதிகள் ஜனநாயகவாதிகளுடன் ஓர் உடன்பாடு செய்து கொண்டு விட்டதாக தோன்றுகிறது. உண்மையில் தெற்கே ஜனநாயகக் கட்சி இல்லை என்றே கூறவேண்டும். இவ்வாறு அக்கட்சி

அங்கு இல்லாமல் போனதற்கு நீக்ரோக்கள் பக்கம் நிற்பதற்கு அது அஞ்சியதே காரணம்.

அமெரிக்காவில் நீக்ரோக்களுக்கு ஏற்பட்ட இந்த அவல நிலையை, உள்ளம் உருக்கும் நிலையை, கண்கலங்க வைக்கும் நிலையை தீண்டப்படாதவர்கள் மறந்துவிட முடியாது. அமெரிக்காவில் நீக்ரோக்களுக்கு செய்யப்பட்ட துரோகம் இங்கும் நிகழ்ந்துவிடாதபடி தடுப்பதற்கே ''சுதந்திரப் போராட்டம்'' சம்பந்தமாக அவர்கள் இத்தகையதோர் போக்கை மேற்கொள்ள நேர்ந்தது. இதில் என்ன தவறு இருக்கிறது? பாதுகாப்பு விஷயத்தில் மட்டுமீறிய தன்னம்பிக்கை வைத்து அழிந்துபோவதைவிட பயங்கொள்ளிகள் என்ற குற்றச்சாட்டுக்கு ஆளாவது எவ்வளவோ மேல் என்று புர்க்கின் அறிவுரையைப் பின்பற்றுவதைத் தவிர அவர்கள் வேறு என்ன செய்கிறார்கள்?

முதலில் ''சுதந்திரப் போராட்டம்'', பின்னர்தான் அரசியல் சட்ட பாதுகாப்புகள் குறித்த உடன்பாடு என்று காங்கிரஸ் முன்வைக்கும் மூன்றாவது வாதமும் நியாயமற்றது, நேர்மையற்றது, பொருளற்றது. சுதந்திரம் பெறுவதற்கு இந்தியாவுக்குள்ள உரிமை சம்பந்தமாக பிரிட்டிஷ் அரசாங்கம் தெளிவுபடுத்தவிட்ட நிலைமையில், காங்கிரஸ் பெரிதும் விரும்பும் இந்தப் போராட்டம் அவசியமற்றது, குதிரைக்கு முன்னால் வண்டியைப் பூட்டுவது போன்றது என்று தீண்டப்படாதவர்கள் உணர்கின்றனர். இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கை விஷயத்தில் பிரிட்டிஷாரின் போக்கு 1857 கலகத்துக்குப் பிறகு முற்றிலுமாக மாற்றமடைந்துள்ளது. இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கைக்கு அறவே எதிரான கண்ணோட்டத்தை பிரிட்டிஷ் அரசாங்கம் கொண்டிருந்த காலம் ஒன்றிருந்தது. இந்தக் கருத்தை லாரன்சே பகிரங்கமாக வெளியிட்டார். கல்கத்தாவில் உள்ள அவரது சிலையில் பின்கண்ட வாசகம் பொறிக்கப்பட்டிருப்பதை இன்றும் காணலாம்: ''பிரிட்டிஷார் வாளின் வலிமை கொண்டு இந்தியாவை வென்றார்கள், அதே வாளின் வலிமையால் அதனைப் பாதுகாப்பார்கள்.'' இந்தப் போக்கு மாண்டு மடிந்து குழிதோண்டிப் புதைக்கப்பட்டு விட்டது; ஒவ்வொரு ஆங்கிலேயரும் இன்று இதற்காக வெட்கித் தலைகுனிகின்றனர். இந்தக் கட்டத்துக்குப் பின்னர் மற்றொரு கட்டம் தொடர்ந்தது. இந்தியர்களுக்கு நாடாளுமன்ற அமைப்புகளில் அனுபவம் இல்லை என்று கூறி இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கையை பிரிட்டிஷ் அரசாங்கம் எதிர்த்தது. அந்த அனுபவத்தை இந்தியர்களுக்கு வழங்கும் பணி ரிப்பன் பிரபு ஆட்சிக் காலத்தில்

தொடங்கிற்று. இதனைத் தொடர்ந்து இந்தியர்களுக்கு அரசியல் பயிற்சி அளிக்க முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டது; முதலில் ஸ்தல ஸ்தாபனத் துறையிலும் பின்னர் மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத் தங்களின் கீழ் மாகாண அரசாங்கத் துறையிலும் பயிற்சி அளிக்க ஏற் பாடு செய்யப்பட்டது. இப்போது மூன்றாவது கட்டத்தை அல்லது இன்றைய கட்டத்தை அடைந்துள்ளோம். வாளின் துணை கொண்டு இந்தியாவை எங்கள் ஆதிக்கத்தில் வைத்திருப்போம் என்று கூறிய தற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் குற்றமுணர்ந்து இப்போது வெட்கித் தலைகுனிகிறது. நாடாளுமன்ற அமைப்புகளைச் செயல்படுத்து வதற்கு இந்தியர்களுக்குத் தகுதியில்லை என்றெல்லாம் இப்போது அது கூறுவதில்லை. இந்தியர்கள் விரும்பினால் விடுதலையை பெறுவதற்கு, சுதந்திரம் பெறுவதற்கு இந்தியாவுக்குள்ள உரிமையை பிரிட்டிஷ் அரசாங்கம் அங்கீகரிக்கிறது. இந்தியர்கள் தங்களது சொந்த அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கிக் கொள்வதற்கு அவர் களுக்குள்ள உரிமையையும் பிரிட்டிஷ் அரசாங்கம் ஏற்கிறது. பிரிட் டிஷ் அரசாங்கம் கொண்டுள்ள இந்தப் புதிய கண்ணோட்டத்துக்கு கிரிப்ஸ் திட்டத்தைவிட வேறு சான்று என்ன வேண்டியிருக்கிறது. இந்தியா சுதந்திரமடைவதற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு முக்கிய நிபந்தனை விதித்தது; அதாவது நாட்டின் தேசிய வாழ்க்கையில் இடம்பெற்றுள்ள எல்லா முக்கிய சக்திகளின் உடன்பாட்டுடன் கூடிய ஓர் அரசியலமைப்புச் சட்டத்தை இந்தியர்கள் உருவாக்க வேண் டும் என்று அது நிபந்தனை விதித்தது. இத்தகைய கட்டத்தைத்தான் இன்று நாம் அடைந்துள்ளோம். எனவே, இந்தியர்களிடையே உடன் பாடு காண முயல்வதற்குப் பதிலாக ''சுதந்திரப் போராட்டம்'' பற்றியே காங்கிரஸ் ஏன் திரும்பத் திரும்பக் கிளிபிள்ளை போல் பேசிக்கொண்டிருக்கிறது; இப்போராட்டத்தில் கலந்து கொள்ளாத தற்காக தீண்டப்படாதவர்களை ஏன் அவதூறு செய்து வருகிறது, பழிகூறி வருகிறது என்பதை தீண்டப்படாதவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை.

## III

பிரிட்டிஷ் அரசாங்கம் தெரிவித்த யோசனையை காங்கிரஸ் ஏன் எதிர்க்கிறது? இந்த எதிர்ப்புக்கு அது இரண்டு முகாந்திரங்களைக் கூறுகிறது? பிரிட்டிஷ் அரசாங்கம் முன்வைத்திருக்கும் நிபந்தனை இந்தியாவின் விடுதலை விஷயத்தில் தீண்டப்படாதோருக்கு ரத்து அதிகாரத்தை வழங்கியுள்ளது என்று காங்கிரஸ் கூறுகிறது. இது முற்றிலும் மதிகெட்ட வாதமாகும்; இவ்வாறு கூறுவதற்கு இரண்டு

காரணங்கள் உண்டு. முதலாவதாக, இந்தியாவிலுள்ள தீண்டப் படாதவர்கள் காரிய சாத்தியமற்ற கோரிக்கைகளை என்றுமே முன் வைத்ததில்லை. நேர்மையற்ற, நியாயத்திற்கு ஒவ்வாத கோரிக்கை களையும் அவர்கள் முன்வைத்ததில்லை. ரெட்மண்டிடம் கார்சன் கூறியதுபோல், ''உங்கள் பாதுகாப்புகளைக் குப்பைக் கூடையில் கொண்டுபோய் போடுங்கள், அவை யாருக்கு வேண்டும்? உங்கள் ஆட்சியில் இருக்க நாங்கள் விரும்பவில்லை'' என்றும் அவர்கள் சொல்லவில்லை. மாறாக, இந்துப் பெரும்பான்மையினரின் போக்கு சமுதாய நலனுக்கு உகந்ததாக இராதபோதிலும், ஜனநாயகப் பண் பற்றதாக இருந்தபோதிலும், அரசியலமைப்புச் சட்டம் தீண்டப் படாதவர்களுக்குப் போதுமான பாதுகாப்புகளை அளித்தால் இந்துக் களின் ஆட்சிக்கு உட்பட்டிருக்க அவர்கள் முற்றிலும் சித்தமாகவே இருக்கிறார்கள். தீண்டப்படாதவர்கள் காரிய சாத்தியமற்ற கோரிக்கை களை எல்லாம் எழுப்பி இந்தியாவின் சுதந்திரத்துக்கு முட்டுக்கட்டை போடுவார்கள் என்று கூறுவது கடைந்தெடுத்த அவதூறாகும், புரளி யாகும்; இதற்கு கடுகளவு ஆதாரம் கூட இல்லை. சரி, இந்தப் பயத் துக்கு ஆதாரம் இருக்கிறது என்று ஒரு வாதத்துக்காகவே வைத்துக் கொள்வோம். அப்போதும்கூட காங்கிரசுக்கு ஒரு பரிகாரம் இல் லாமல் போகவில்லை. இந்துக்களும் தீண்டப்படாதவர்களும் ஓர் உடன்பாட்டுக்கு வர இயலவில்லை என்றால், இந்தப் பிரச்சினையை, தகராறை சர்வதேச மத்தியஸ்த குழுமத்தின் தீர்ப்புக்கு விடுவோம் என்று கூறுவதற்கு காங்கிரசுக்கு உரிமை உண்டு. காங்கிரஸ் இத் தகைய நிலையை மேற்கொண்டால் பிரிட்டிஷ் அரசாங்கமோ அல்லது தீண்டப்படாதாரோ இதனை சிறிதும் ஆட்சேபிக்க மாட் டார்கள் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. ஆனால் காங் கிரஸ் உண்மையில் என்ன செய்கிறது? அனைவரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய ஓர் அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்குவதற்கு நேர்மை யான, நியாயமான, உண்மையான முயற்சி மேற்கொள்வதற்குப் பதிலாக சுதந்திரம் பெறுவதற்கான தனது இயக்கத்தைத் தொடர்ந்து நடத்தி வருகிறது; இந்த இயக்கத்தை அவ்வப்போது நிறுத்தி வைக்க வும் அதிலிருந்து ஓரளவு பின்னடையவும் செய்கிறது. தீண்டப்படாத வர்கள் கோரும் பாதுகாப்புகளை அளிக்க சம்மதிப்பதற்குப் பதிலாக, அதிகாரத்தை மாற்றித் தரும்படி பிரிட்டிஷ் அரசாங்கத்தை நிர்ப்பந் திக்க காங்கிரஸ் விரும்புகிறது; திரு. காந்தியின் வாசகத்தில் கூறுவ தானால் ''சாவிகளை காங்கிரசிடம் ஒப்படைக்கும்படி''க் கேட் கிறது; அதேசமயம் தீண்டப்படாதவர்கள் கோருவதுபோல் அவர் களுக்குப் பாதுகாப்புகள் அளிக்க அது தயாராக இல்லை. இந்த முடிவுக்குத்தான் தீண்டப்படாதவர்கள் வரவேண்டியிருக்கிறது.

சுருக்கமாகக் கூறினால் இந்துக்கள் வரையறையற்ற முழுச் சுதந்திரம் பெற்றிருக்கக் கூடிய ஒரு சுதந்திர இந்தியாவை, அதேபோது தீண்டப் படாதோரை இந்துக்கள் தங்கள் இஷ்டம் போல் ஆட்டிப்படைக்கக் கூடிய, அவர்களை விலங்கினும் கொடிதாக நடத்தக்கூடிய ஒரு சுதந் திர இந்தியாவையே காங்கிரஸ் விரும்புகிறது. எனவே ''சுதந்திரப் போராட்டம்'' என்னும் ஆடம்பர ஆர்ப்பாட்டமான பெயரில் அழைக்கப்படும் நேர்மையற்ற, வஞ்சகமான ஒரு போராட்டத்தில் பங்கெடுத்துக் கொள்ள தீண்டப்படாதவர்கள் மறுப்பதில் வியப் பேதும் இல்லை.

தீண்டப்படாதோருடன் ஓர் உடன்பாடு காணும் பிரச் சினையை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளாததற்கு மற்றொரு விந்தையான வாதத்தையும் காங்கிரஸ் முன்வைக்கிறது; அதாவது பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் நேர்மையில்லை என்றும், ஓர் அரசிய லமைப்புச் சட்டத்தை வகுத்துக் கொள்வது குறித்து இந்தியர்கள் ஓர் உடன்பாட்டுக்கு வந்தாலும் அதிகாரத்தை மாற்றித்தரப் போவ தில்லை என்றும் அது அறிவித்திருக்கும் நிலைமையில், அதனிட மிருந்து அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு இந்தியர்கள் பிரிட்டிஷா ருடன் போராடுவதைத் தவிர வேறுவழியில்லை என்றும் காங் கிரஸ் வாதிக்கிறது. பிரிட்டிஷாரின் நோக்கங்கள் குறித்து இந்தியர் கள் முற்றிலும் அவநம்பிக்கை கொள்வதற்கு நியாயமான காரணம் ஏதும் இருப்பதாகத் தங்களுக்குத் தெரியவில்லை என்று தீண்டப் படாதோர் இதற்குப் பதலளிக்கின்றனர். எது எப்படியிருந்தாலும், இந்தியர்களின் அபிலாஷைகளை, ஆர்வ விருப்பங்களை நிறை வேற்றும் திசைவழியில் பிரிட்டிஷ் அரசாங்கம் முன்னேறிதான் வரு கிறது. வேண்டுமானால் இந்த முன்னேற்றம் மெதுவாக இருக்கலாம். அற்ப விஷயங்களோடு இந்தியர்கள் திருப்திப்பட்டுக் கொள்வதே இதற்குக் காரணம். பிரிட்டிஷார் இந்தியாவைக் கைப்பற்றியதி லிருந்து 1886 வரை, தங்களை யார் ஆள்கிறார்கள், எப்படி ஆள் கிறார்கள் என்பது பற்றி இந்தியர்கள் துளியும் கவலைப்படவில்லை. இவற்றைப் பற்றியெல்லாம் எவ்விதத்திலும் தங்களை அலட்டிக் கொள்ளாமலேயே வாழ்வதற்கு அவர்கள் தெரிந்துகொண்டிருந் தனர். 1886ல் காங்கிரஸ் தோன்றிற்று; பிறகுதான் இந்தியர்கள் முதல் தடவையாக இந்திய அரசாங்கம் குறித்து அக்கறை காட்ட ஆரம் பித்தனர். எனினும் 1910 ஆம் ஆண்டு வரையிலும் கூட, அரசாங்கம் சிறந்த முறையில் செயல்பட வேண்டும் என்பதற்காக கிளர்ச்சி செய்வதோடு நின்று கொண்டனர். சுயாட்சி வேண்டுமென்று 1910ல் தான் காங்கிரஸ் முதன்முறையாக கோரிக்கை முன்வைத்தது. 1919ல்

மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் வரவிருந்தபோது இந்தியர்கள் தங்களது சுயாட்சிக் கோரிக்கையை திட்டவட்டமாக வரையறுத்துக் கூறும் வாய்ப்பினைப் பெற்றனர். பத்தொன்பதன் குறிப்புகள் எனும் ஆவணம் 1917ல் இந்தியர்களின் ஆர்வ விருப்பங்களைப் புலப்படுத்தின. இதுபற்றி நன்கு அறிந்தவர்களுக்கு மாகாணங்களில் இரட்டை ஆட்சி ஏற்பட்டால் போதும் என்று அப்போது அரசியலில் தீவிரவாதிகளாக இருந்த இந்தியர்களே கருதினர் என்பது நினைவிருக்கும். சர். தின்சா வாட்சா, திரு. சமரத்[1] போன்ற சிலரால் இதுவே ஒரு பெரும் பாய்ச்சலாக எண்ணப்பட்டது. 1930ல் காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானம் சுதந்திரத்தை வலியுறுத்திய போதிலும் திரு. காந்தி வட்டமேசை மாநாட்டில் மாகாண சுயாட்சியுடன் திருப்தியடைந்தார்.[2] பிரிட்டிஷ் அரசாங்கமோ அதைவிட அதிகமாக வழங்கியது. எனினும் 1939க்குப் பிறகு தேக்கநிலை ஏற்பட்டது என்றால் தங்கள் நாட்டுக்கு எத்தகைய அரசியலமைப்பு தேவை என்பது குறித்து இந்தியர்களிடையே உடன்பாடு ஏற்படாததே அதற்குக் காரணம்.

தேவதைக் கதைகளில் வருவது போன்று புதையல் மீது பாம்பு உட்கார்ந்து கொண்டு எவரையும் அருகில் நெருங்கவிடாதபடி செய்தது மாதரி இந்திய சுதந்திரத்திற்குப் பிரிட்டிஷார் முட்டுக்கட்டை போட்டு வந்த காலம் மலையேறி விட்டது என்று தீண்டப்படாதவர்கள் கருதுகின்றனர். இந்தியாவின் சுதந்திரம் 'ரிசீவரிடம்' இருக்கும் உடைமையைப் போல் இருக்கிறது. வழக்கிலிருக்கும் உடைமையைச் செயலாட்சி புரிய நீதிமன்றத்தால் நியமிக்கப்படும் உடைமை காப்பாளரே 'ரிசீவர்' என்பவர். பிரிட்டிஷ் அரசாங்கம் இத்தகைய காப்பாளர் பொறுப்பை ஏற்றுள்ளது. அரசியலமைப்புச் சட்டம் சம்பந்தமான தகராறு தீர்ந்து உடன்பாடு ஏற்பட்டதும் உடைமையை

---

1. அரசியல் சீர்திருத்தங்கள் பற்றி தம்முடன் விவாதிப்பதற்கு அவர்கள் வந்தபோது பின்கண்டபடி கூறியதாக திரு. மாண்டேகு தம் இந்திய நாட்குறிப்பில் கூறியிருக்கிறார்: ''தீர்மானங்கள் நிறைவேற்றுவதற்கும், அரசாங்கத்திடம் செல்வாக்கு செலுத்துவதற்கும் எங்களுக்கு அதிகாரம் தாருங்கள்; நியாய உணர்வோடு அதனை நாங்கள் பயன்படுத்திக் கொள்வோம், ஆனால் பொறுப்பாட்சிக்கு நாங்கள் தகுதியானவர்கள் அல்ல''. - பக்கம் 147.

2. வட்டமேசை மாநாட்டில் நடைபெற்ற இந்த நிகழ்ச்சி வெளியே சொல்லப்படவில்லை. ஆனால் மாகாண சுயாட்சியை ஏற்றுக்கொள்ள திரு. காந்தி எவ்வாறு இணக்குவிக்கப்பட்டார் என்பதை மாநாட்டிற்கு வந்திருந்த அனைவருமே அறிவர். 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தில் மத்தியில் பொறுப்பாட்சி ஏற்படுத்துவது சம்பந்தமான சில அம்சங்கள் அடங்கியிருக்கின்றன என்றால் அந்தப் பெருமை வட்டமேசை மாநாட்டில் பங்குகொண்ட காங்கிரசல்லாத பிரதிநிதிகளையே சேரும்.

சட்டரீதியான உரிமையாளர்களிடம் அதாவது இந்தியர்களிடம் ஒப்படைக்க அது கடமைப்பட்டிருக்கிறது. இவ்வாறிருக்கும் போது இதை ஏன் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது என்று தீண்டப்படாதோர் கேட்கின்றனர். அவர்கள் மேலும் பின்வருமாறு வினவுகின்றனர்: நாட்டிலுள்ள முக்கியமான சக்திகளிடையே ஓர் உடன்பாடு காணும் நேரான, நேர்மையான போக்கைக் கடைப்பிடித்து, பின்னர் நமது உடைமையை நம்மிடம் ஒப்படைக்கும்படி கூட்டாக ஏன் கேட்கக்கூடாது? இந்தப் பாதையைப் பின்பற்ற காங்கிரஸ் விரும்பவில்லை. ''சுதந்திரப் போராட்டம்'' எனும் காங்கிரசின் கோஷம் உண்மையில் ஒரு வெறும் நடைமுறைத் தந்திரம்தான் என்றும் சுதந்திரம் வழங்குவதற்கு ஒரு முன்நிபந்தனையாக பிரிட்டிஷ் அரசாங்கம் கூறி வருவதும், தீண்டப்படாதோர் கோரிவருவதுமான அனைவரும் ஏற்கக்கூடிய ஓர் அரசியலமைப்பை உருவாக்கும் அவசியத்தைத் தவிர்ப்பதே இதன் நோக்கம் என்றும் தீண்டப்படாதோர் கூறுகின்றனர்.

பிரிட்டிஷ் அரசாங்கம் வெளியிடும் பிரகடனங்களை எல்லாம் அப்படியே நூற்றுக்கு நூறு உண்மை என ஏற்றுக்கொள்வதாக தீண்டப்படாதோர் கூறவில்லை; இந்தியர்கள் ஓர் ஒன்றுபட்ட முடிவுக்கு வந்தால் 'அது தட்டுங்கள் திறக்கப்படும், கேளுங்கள் கொடுக்கப்படும்' என்பதாக இருக்கும் என்றும் அவர்கள் கூறவில்லை. பிரிட்டிஷார் தாங்கள் பிரகடனம் செய்தபடி நடந்துகொள்ளத் தவறக்கூடும் என்பதை அவர்கள் ஒப்புக்கொள்கின்றனர். ஏற்புடையதோர் அரசியலமைப்புச் சட்டம் வகுக்கப்பட்டாலும் பிரிட்டிஷார் தங்கள் வாக்குறுதிகளைக் காற்றில் பறக்கவிடவும் கூடும், இதனால் சுதந்திரத்திற்காகப் போராட வேண்டிய அவசியமும் ஏற்படலாம் என்பதையும் தீண்டப்படாதோர் ஏற்றுக்கொள்கின்றனர். இத்தகைய சாத்தியக் கூறுகள் எல்லாம் இருப்பதை அவர்கள் புறக்கணித்துவிடவுமில்லை. ஆனால் அவர்கள் கூறுவதெல்லாம் இந்தியர்கள் பிரிட்டிஷாரை சோதனை செய்து பார்க்கவில்லை என்பதுதான். எல்லோருக்கும் ஏற்புடையதான ஓர் அரசியல் அமைப்புச் சட்டத்தை வகுக்காமல் அவர்களைச் சோதனை செய்து பார்க்க முடியாது. காங்கிரஸ் இந்தப் பாதையைப் பின்பற்றாதவரை அவர்களுடனான நடவடிக்கைகளில் இன்னும் சொல்லப்போனால் நாடு சம்பந்தப்பட்டவரை கூட அது நேர்மையைக் கடைப்பிடிக்கவில்லை என்றே தீண்டப்படாதவர்கள் கருதுவார்கள். இவற்றை எல்லாம் வைத்துப் பார்க்கும் போது, காங்கிரசின் ''சுதந்திரப் போராட்டத்தில்'' பங்குகொள்ள தீண்டப்படாதவர்கள் மறுத்து வருவதற்குப் போதிய காரணமில்லை என்று யார் கூற முடியும்?

இயல் 8

# உண்மையான பிரச்சினை தீண்டப்படாதோர் ஓர் தனி இனம் இல்லையா?

## 1

காங்கிரசுக்கும் தீண்டப்படாதோருக்கும் இடையேயான சர்ச்சையில் பொதிந்துள்ள அடிப்படைப் பிரச்சினை என்ன? நான் புரிந்து கொண்டவரை, தீண்டப்படாதோர் இந்தியாவின் தேசிய வாழ்க்கையில் ஒரு தனி சக்தியினரா, இனத்தினரா இல்லையா என்பதுதான் இதிலுள்ள பிரச்சினை என்று கருதுகிறேன்.

இதுதான் இந்த சர்ச்சையில் உள்ள உண்மையான பிரச்சினை. இந்தச் சர்ச்சையில்தான் காங்கிரசும் தீண்டப்படாதவர்களும் வேறுபட்ட நிலைகளை, போக்குகளை மேற்கொண்டுள்ளனர். இந்தக் கேள்விக்கு தீண்டப்படாதோர் அளிக்கும் பதில் 'ஆம்' என்பதுதான். தாங்கள் இந்துக்களிடமிருந்து தனியானவர்கள், வேறுபட்டவர்கள் என்று அவர்கள் வாதிடுகின்றனர். ஆனால் காங்கிரசோ 'இல்லை' என்று மறுதலிக்கிறது; தீண்டப்படாதவர்கள் இந்து சமுதாயத்தின் ஒரு பிரிக்க முடியாத பகுதியினர் என்று அது சாதிக்கிறது. இதுதான் இந்தப் பிரச்சினையில் இருதரப்பினரது மனப்பான்மை. இதில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நிலை என்ன? இந்தியாவின் வைசிராய் மற்றும் கவர்னர் ஜெனரல் என்ற முறையில் லின்லித்கோ பிரபு இதில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நிலையை தாம் வெளியிட்ட ஓர் அறிக்கையில்[1] மிகத் தெள்ளத் தெளிவாக வெளிப்படுத்தியுள்ளார்; தீண்டப்படாதவர்கள் இந்தியாவின் தேசிய வாழ்வில் ஒரு தனித்த இனத்தினர்தான் என்று அந்த அறிக்கையில் அவர் திட்டவட்டமாக உறுதிப்படுத்தி

1. பின் இணைப்பு VIல், குறிப்புகள் 9 மற்றும் 12 பார்க்க.

யுள்ளார். அரசியல் சட்டப் பாதுகாப்புகள் பிரச்சினையை ஓர் அடிப் படை பிரச்சினையாகக் கருதும் பலர் அவர்கள் அடிப்படையானது என்று எதைக் கருதுகிறார்களோ அதிலிருந்து மாறுபட்ட அடிப்படை யானதொரு பிரச்சினையாக நான் கருதுவதைக் கண்டு வியப் படையக் கூடும். ஆனால் உண்மையைக் கூறுவதானால் இதில் வேறுபாடு ஏதும் இல்லை. ஒருவர் எதை உடனடியானதாகக் கருது கின்றனர், எதை முடிவானதாகக் கருதுகின்றனர் என்பதைப் பொறுத் துத்தான் இது அமைந்துள்ளது. அரசியல் சட்டப் பாதுகாப்புகள் பிரச்சினையை மற்றவர்கள் இறுதியானதாகப் பார்க்கின்றனர். நானோ உடனடிப் பிரச்சினையாகப் பார்க்கிறேன். நேரியல் வாத முறையில் ஒரு முற்கோளிலிருந்து எப்படி முடிவு தோன்றுகிறதோ அது போன்றதுதான் இது. இந்த வேறுபாட்டை நான் ஏன் வற்புறுத்து கிறேன் என்பதை இங்கு கூறியாக வேண்டும். இந்திய அரசியலமைப் பின் பரிணாம வளர்ச்சி ஒரு வகையான நேரியல் வாதத்தைத் தோற்று வித்திருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. இந்த நேரியல் வாதத் தில் பிரதான முற்கோள் இந்தியாவின் தேசிய வாழ்க்கையில் தனி யானதென, வேறுபட்டதென நிர்ணயிக்கக்கூடிய ஒரு சக்தி, இனம் இருக்குமாயின் அரசியல் சட்டரீதியான பாதுகாப்புகள் பெற அது உரிமை பெற்றுள்ளது என்பதேயாகும். அரசியல் சட்டப் பாதுகாப்புகள் கோரும் ஓர் இனத்தினர் மற்றவர்களிடமிருந்து தாங்கள் வேறுபட்ட வர்கள், தனித்தவர்கள் என்பதை மெய்ப்பிக்க வேண்டும். அவ்வாறு தாங்கள் தனியானவர்கள், வேறுபட்டவர்கள் என்பதை அவர்கள் நிரூபித்தால், அரசியல் சட்டப் பாதுகாப்புகள் பெறுவதற்கு அவர் களுக்குள்ள உரிமை அனுமதிக்கத்தக்கதே.

இவ்வாறுதான் முஸ்லீம்கள், இந்தியக் கிறித்தவர்கள், ஆங் கிலோ-இந்தியர்கள், ஐரோப்பியர்கள், சீக்கியர்கள் ஆகியோர் அர சியல் சட்டப் பாதுகாப்புகள் பெற வகை செய்யப்பட்டது. இந்தியா வின் அரசியலமைப்பு கோட்பாடுகளின் அடிப்படையில் உருவாக்கப் படவில்லை என்பது உண்மையே. கோட்பாடுகளின் அடிப்படை யிலன்றி அவசரத் தேவைகளுக்கு, நெருக்கடி நிலைமைகளுக்கு தற்காலிகத் தீர்வுகாணும் அடிப்படையிலேயே அது தற்செயலாக உருவானது என்றே கூறவேண்டும். ஆயினும் நான் குறிப்பிட்டது ஒரு கோட்பாடல்லாவிட்டாலும், ஓர் அமைதியான முற்கோள்; அது எல்லா வகையிலும் செயல்பட்டு வருவதாகவே தோன்றுகிறது. ஒரு பிரிவினர் அரசியல் சட்டப் பாதுகாப்புகள் பெறுவதற்கான உரிமை காரண காரிய தொடர்புள்ளதாக எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. அடிப்படையான நிபந்தனை பூர்த்தி செய்யப்படும்போது, அதாவது

அவர்கள் இந்திய தேசிய வாழ்க்கையில் ஒரு தனித்த, வேறுபட்ட இனத்தினராக அமைந்திருக்கின்றனர் என்பது நிலைநாட்டப்படும் போது அரசியல் சட்டப் பாதுகாப்புகள் பெறுவதற்கு அவர்களுக் குள்ள உரிமை தானாகக் கிட்டுவதே நியாயம், முறை. இந்தப் பிரச் சினையைக் கையாளும்போது, நேரியல்வாதத்தில் கையாள்வது போல் இதையும் கையாள வேண்டும். நேரியல் வாதத்தில் முடிவும் சரி, முற்கோளும் சரி அடிப்படையானவை; எனவே முற்கோளைப் பரிசீலிப்பதைத் தவிர்த்துவிட்டு முடிவை மட்டும் ஆராய்வது போது மானதாகாது. இந்தக் கோணத்திலிருந்து பிரச்சினையை நோக்கும் போது, அரசியல் சட்டப் பாதுகாப்புகளைப் பற்றி மட்டும் விவா தித்து விட்டு தீண்டப்படாதவர்கள் சம்பந்தப்பட்ட இதர விஷயங் களைப் புறக்கணிக்கக் கூடாது என்று கருதுகிறேன். முற்கோள், முடிவு அல்லது அரசியல் சட்டப் பாதுகாப்புகள் உருவாவதாகத் தோன்றும் ஆய்வுப் பொருள் ஆகியவற்றை இயல்பான முறையில் அல்லாவிட் டாலும் முந்துரிமை அடிப்படையில் பரிசீலிக்க நான் கடமைப் பட்டுள்ளேன் என்பதை உணர்கிறேன்.

இவ்வாறு, உடனடியானதற்கு வேறுபட்டதான முடிவை தனி யாக ஆராய்வதற்கு நான் தீர்மானித்திருப்பது முற்றிலும் நியாயமே என்பதை எவரும் காணமுடியும். இதனைத் தனியாகவும், கணிசமான அளவிலும் ஆராய்வது அவசியம் எனத் தோன்றுகிறது. ஏனென்றால் இதனை அடிப்படையான பிரச்சினை என்று காங்கிரஸ் முற்றிலும் உணர்ந்துள்ளது; தீண்டப்படாதவர்களை ஒரு தனி இனம் என்று அங்கீகரித்துவிட்டால், அரசியல் சட்டப் பாதுகாப்புகள் பெறும் தங்கள் கோரிக்கையில் அவர்கள் வெற்றி பெறுவதைத் தடுக்க முடி யாது என்பதையும் அது அறிந்துள்ளது. இந்த முற்கோளை எதிர்க்க காங்கிரஸ் முன்வந்திருக்கிறது என்றால், இது முதல் அகழி என்றும், அதனைப் பாதுகாக்கத் தவறிவிட்டால் தன்னால் நிலைமையைச் சமாளிக்க முடியாது என்பதையும் அது அறிந்திருப்பதே இதற்குக் காரணம்.

## II

சர்ச்சைக்கு இடமற்றதை சர்ச்சைக்குள்ளாக்க காங்கிரஸ் முன் வந்திருப்பது அதாவது தீண்டப்படாதவர்கள் இந்துக்களிடமிருந்து வேறுபட்டவர்கள் என்பதை எதிர்க்க அது முன்வந்திருப்பது இந்தியா விலுள்ள நிலைமைகளை நன்கு அறிந்தவர்களை பெரிதும் வியப்பிற் குள்ளாக்காமல் இருக்க முடியாது. ஆனால் காங்கிரஸ் இதனை எதிர்க்க

தீர்மானித்துவிட்ட நிலைமையில் இந்தப் பிரச்சினையை என்னால் முடிந்தளவு ஆழமாக விளக்க வேண்டியவனாக இருக்கிறேன்.

தாங்கள் இந்துக்களிடமிருந்து வேறுபட்டவர்கள் என்பதற்கு ஆதரவாக தீண்டப்படாதோர் கூறும் காரணங்களைப் புரிந்து கொள்வது கடினமல்ல. இதற்கு நீண்ட, விரிவான விளக்கம் தரவேண்டிய அவசியமே இல்லை. ஓர் எளிதான கேள்வியை வைத்து அவர்களது வாதத்தை முழு அளவுக்கு நிலைநாட்டலாம். அந்தக் கேள்வி இதுதான்: எந்த அர்த்தத்தில் அவர்கள் இந்துக்கள்? முதலாவதாக, 'இந்து' என்னும் சொல் பல்வேறு பொருள்களில் பயன்படுத்தப் படுகிறது; எனவே இந்தக் கேள்விக்கு முறையாகப் பதிலளிப்பதற்கு முன்னர் இந்த சொல் எந்த அர்த்தத்தில் பயன்படுத்தப்படுகிறது என்பதைத் தெரிந்துகொள்வது அவசியம். பிரதேச அடிப்படையில் அது பயன்படுத்தப்படுகிறது. இதன்படி இந்துஸ்தானில் வாழும் ஒவ்வொருவரும் இந்து எனப்படுகிறார். இந்தப் பொருளில் பார்க்கும் போது தீண்டப்படாதவர்களை இந்துக்கள் எனக் கூறலாம் என்பதில் ஐயமில்லை. ஆனால், இதே அளவுகோல் முஸ்லீம்கள், கிறித்தவர்கள், சீக்கியர்கள், யூதர்கள், பார்சிகள் போன்றோருக்கும் பொருந்தும். இரண்டாவதாக 'இந்து' என்னும் சொல் சமய அர்த்தத்திலும் பயன்படுத்தப்படுகிறது. இது சம்பந்தமாக எத்தகைய முடிவுக்கும் வருவதற்கு முன்னர் இந்து சமயத்தின் மீறமுடியாத, வறட்டுத்தனமான சித்தாந்தங்களை இந்து சமயத்தின் வழிபாடு மரபுகளிலிருந்தும், வினைமுறைகளிலிருந்தும் தனியே பிரித்துப் பார்ப்பது அவசியம். மத அர்த்தத்தில் தீண்டப்படாதவர்கள் இந்துக்களா என்பது அவர்கள் தங்களுக்கு அடிப்படையானவையாக எதைத் தேர்ந்தெடுக்கிறார்கள், சித்தாந்தங்களையா அல்லது வழிபாட்டு மரபுகளையா என்பதைப் பொறுத்துள்ளது. இந்து சமயத்தின் அடிப்படைகள் சாதி, தீண்டாமை சித்தாந்தங்கள்தான் என்றால் அப்போது ஒவ்வொரு தீண்டப்படாதவரும் இந்து சமயத்தையும், தான் ஓர் இந்து என்பதையும் திட்டவட்டமாக, தீர்மானமாக மறுதலிக்கவே செய்வார். இதற்கு மாறாக, இங்கு கடைப்பிடிக்கப்படும் அடிப்படை என்பது ராமன், கிருஷ்ணன், விஷ்ணு, சிவன் மற்றும் இந்து சமயத்தால் அங்கீகரிக்கப்பட்ட ஏனைய தெய்வங்களை வழிபடும் மரபைக் குறிக்கிறது என்றால் அப்போது தீண்டப்படாதவர்களை இந்துக்கள் என்று உரிமை கொண்டாடக் கூடும். காங்கிரஸ் வழக்கம்போல் தீண்டப்படாதவர்களிடமிருந்து ஒரு கைக்கூலிப் படையை உருவாக்கி, தீண்டப்படாதவர்கள் இந்துக்கள்தான், இந்துக்களாகவே அவர்கள் மாண்டுமடிவார்கள் என்று அவ்வப்போது ஆரவாரக் கூச்சல் போடச் செய்துள்ளது. ஆனால் இந்து

சமயம் என்பது சாதியிலும், தீண்டாமையிலும் நம்பிக்கை வைப் பதையே குறிக்கிறது என்னும் நிலைமையில் தங்களை இந்துக்கள் என்று பலர் அறியப் பிரகடனம் செய்யும்படி கேட்கப்பட்டால் இந்த ஐந்தாம்படையினரே கூட தங்களை இந்துக்களாகக் கூறிக்கொள்ள ஒப்பமாட்டார்கள்.

மற்றொரு விஷயத்தையும் இங்கு வலியுறுத்திக் கூற வேண் டும். மேலே செய்யப்பட்ட ஆய்வின்படி, இந்து என்னும் சொல் சமய அர்த்தத்தில், அதுவும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட வழிபாட்டு முறையைப் பின்பற்றுபவர் என்னும் ஒரு வரையறைக்குட்பட்ட அர்த்தத்தில் பயன்படுத்தப்படுமானால் தீண்டப்படாதவரை ஓர் இந்து என்று கூற வாய்ப்பு உண்டு. ஆனால் இங்கேயும் கூட இந்துவும் தீண்டப் படாதவரும் ஒரு பொதுவான சமயத்தைச் சேர்ந்தவர்கள் என்ற முடி வுக்கு வருவதற்கு எதிராக எச்சரிக்கை செய்வது அவசியமாகிறது. இவ்விரு தரப்பினரும் அங்கீகரிக்கப்பட்ட வழிபாட்டு முறைகளைப் பின்பற்றுபவர்கள் என்பதை வைத்துக்கூட அவர்கள் ஒரு பொது வான சமயத்தைக் கொண்டிருக்கின்றனர் என்று கூறிவிட முடியாது. வேண்டுமானால் இவர்கள் ஒத்த சமயத்தைக் கொண்டிருப்பவர்கள் என்று கூறலாம்; இதுதான் துல்லியமான, சரியான விளக்கமாக இருக்க முடியும். ஒரு பொதுசமயம் என்பது பொதுப் பங்கெடுப்பாளர் வட் டத்தைக் குறிக்கிறது. அப்படிப் பார்க்கும்போது, வழிபாட்டு மரபு களையும், வினைமுறைகளையும் கடைப்பிடிப்பதில் இத்தகைய பொதுப் பங்கெடுப்பாளர் வட்டம் என்று ஏதும் இல்லை. இந்துக் களும் தீண்டப்படாதவர்களும் தமது வழிபாட்டு மரபுகளைத் தனித் தனியாகக் கடைப்பிடிக்கின்றனர்; அவர்களுடைய வழிபாட்டு மரபு கள் ஒத்தவையாக இருந்தாலும் அவர்கள் இரண்டு அந்நியர்களைப் போல் தனித்தனியாகவே இருந்து வருகின்றனர். எனவே, இவ் விரண்டு அர்த்தங்களில் எது ஒன்றும் 'இந்து' என்னும் சொல் அர சியல் பிரச்சினையை நிர்ணயிப்பதில் உதவிகரமாக இருக்க முடியாது என்பது தெள்ளத் தெளிவு; இது ஒன்றுதான் இந்த விவாதத்தை நியாயப் படுத்த முடியும்.

எனவே, இந்து சமுதாயத்தின் ஓர் உறுப்பினர் என்பதைக் குறிக்கும் சமூக அர்த்தம்தான் இங்கு பயன்படுத்தப்படக்கூடிய ஒரே அடிப்படையாக இருக்க முடியும். இவ்வகையில் ஒரு தீண்டப்படாத வரை இந்து சமுதாயத்தின் ஒரு பகுதியாக, அங்கமாக கருத முடி யுமா? அவர்களை இந்துக்களின் ஏனைய பகுதியினருடன் இணைக் கும் மனிதாபிமான பிணைப்பு ஏதேனும் இருக்கிறதா? அத்தகைய

பிணைப்பு ஏதும் இல்லை. மண உறவு இல்லை. சமபந்தி போஜனம் இல்லை. இணைந்து சேர்ந்து பழகுவது இருக்கட்டும், தொடும் உரிமை கூட இல்லை. இதற்கு மாறாக, தொட்டாலே ஓர் இந்துவை தீட்டு பிடித்துக் கொள்ளும். தீண்டப்படாதவர்கள் ஒரு தனி இனத் தினர் என்பதை இந்து பாரம்பரியம் முழுவதுமே நெடுகிலும் அங்கீகரித்து வந்துள்ளது; இது மறுக்க முடியாத உண்மை என்பதை யும் வலியுறுத்தி வந்துள்ளது. இந்துக்களையும் தீண்டப்படாதவர் களையும் பிரித்துக் காட்டுவதற்கு இந்துக்கள் காலம் காலமாக, வழி வழியாகப் பயன்படுத்தி வந்துள்ள பதப்பிரயோகம் தீண்டப்படாத வர்களின் வாதத்துக்கு வலுவூட்டும் சான்றாக அமைந்துள்ளதைக் காணலாம். இந்தப் பாரம்பரியமான பதப்பிரயோகப்படி, இந்துக் கள் சவர்ணர்கள் என்றும், தீண்டப்படாதவர்கள் அவர்ணர்கள் என்றும் குறிப்பிடப்பட்டு வந்திருக்கின்றனர். இந்துக்களை சதுர் வருணிகர்கள் என்றும், தீண்டப்படாதவர்களைப் பஞ்சமர்கள் என்றும் அது கூறுகிறது. இவர்களிடையேயான பிரிவினை இவ்வளவு மிகப் பிரதானமாக இருந்திருக்கவில்லை என்றால், இத்தகைய ஒரு பதப்பிரயோகம் உருவாகி இருக்க முடியாது. இந்தப் பிரிவினை யைக் கடைப்பிடிப்பது மிகவும் அவசியமாக இருந்ததால்தான் இத் தகைய பதப்பிரயோகங்களைக் கண்டுபிடிக்க வேண்டியதேற்பட்டது என்பது வெள்ளிடை மலை.

எனவே, தீண்டப்படாதவர்கள் இந்துக்கள் என்றும், ஆதலால் முஸ்லீம்களும் அவர்களைப் போன்றவர்களும் அனுபவிக்கும் அதே அரசியல் உரிமைகளை தீண்டப்படாதவர்கள் கோர முடியாது என் றும் காங்கிரஸ் முன்வைக்கும் வாதத்தில் எத்தகைய சத்தும் சாரமும், ஆதாரமும் அடிப்படையும் இல்லை என்பது தெள்ளத் தெளிவு. தீண்டப்படாதவர்கள் இந்துக்கள் அல்ல என்பதை நிரூபிப்பதற்கு பாரம்பரிய பழக்கவழக்கங்களை அடிப்படையாகக் கொண்ட வாதம் சிறந்ததாகவும், செல்லத்தக்கதாகவும் இருக்கக்கூடும் என்றாலும் சிலருக்கு இந்த வாதம் பலவீனமானதாகத் தோன்றக்கூடும். காங்கிரஸ் வாதத்தை நேரடியாகச் சந்திக்காமல் களத்தைவிட்டுச் செல்லுவதற்கு நான் விரும்பவில்லை. இதன் பொருட்டு, மத வழியில் தீண்டப் படாதவர்கள் இந்துக்களே என்பதை ஒப்புக்கொள்ளத் தயாராக இருக் கிறேன். ஆனால் இங்கு எழும் கேள்வி என்னவென்றால் அவர்கள் இந்துக்களாகவே இருக்கட்டும், அதனால் என்ன? இந்தியாவின் தேசிய வாழ்வில் அவர்கள் ஒரு தனி இனத்தினராக ஏற்கப்படுவதற்கு இது குறுக்கே நிற்க முடியுமா? சமயம் என்ற குறுகிய அர்த்தத்தில் அவர்கள் இந்துக்கள் என்று அழைக்கப்படுவது மட்டுமே அவர்கள் இந்து

சமுதாயத்தின் ஒரு பிரிக்க முடியாத பகுதியினர் என்ற வாதத்துக்கு எவ்விதம் ஆதார அடிப்படையாக இருக்க முடியும் என்பதைப் புரிந்துகொள்வது சிரமமாக இருக்கிறது.

சமய வழியில் தீண்டப்படாதவர்கள் இந்துக்களே என்பதை ஒரு விவாதத்திற்காக ஏற்றுக்கொள்வோம். ஆனால் ஏனைய இந்துக் களைப் போன்றே தீண்டப்படாதவர்களும் அதே தெய்வங்களை யும், தேவதைகளையும் வழிபடுகிறார்கள்; அதே யாத்திரைத் தலங் களுக்குச் செல்கிறார்கள், அதே தெய்வீக அருள் நிகழ்வு நம்பிக்கை கள் கொண்டிருக்கிறார்கள், அதே கற்களையும், மரங்களையும், மலைகளையும் மற்ற இந்துக்களைப் போலவே புனிதமானவை யாகக் கருதுகிறார்கள் என்றெல்லாம் ஏற்கெனவே கூறினேனே அதற் கும் மேலாக இந்த வாதம் எதை அர்த்தப்படுத்துகிறது? தீண்டப் படாதவர்களும் இந்துக்களும் ஒரே சமூகத்தின் பின்னிப்பிணைந்த பகுதியினர் என்ற முடிவுக்கு வருவதற்கு இதுமட்டுமே போதுமா? சரி, இதுதான் காங்கிரஸ் வாதத்திற்கு அடிப்படையாக உள்ள தருக்க நியாயம் என்றால், பெல்ஜியர்கள், டச்சுக்காரர்கள், நார்வேஜி யர்கள், சுவீடிஷ்காரர்கள், ஜெர்மானியர்கள், பிரெஞ்சுக்காரர்கள், இத்தாலியர்கள், ஸ்லாவ்கள் போன்றோரின் விஷயம் என்ன? இவர் கள் எல்லோரும் கிறித்தவர்களில்லையா? ஒரே தேவனை வழி படுபவர்கள் இல்லையா? அவர்கள் அனைவரும் ஏசுவை தங்களது ரட்சகராக ஏற்றுக்கொள்ளவில்லையா? அவர்கள் ஒரே சமய நம்பிக் கைகளைக் கொண்டிருக்கவில்லையா? எண்ணத்திலும், சிந்தனை யிலும், வழிபாட்டிலும், நம்பிக்கைகளிலும் அவர்களிடையே பரி பூரண ஒற்றுமை நிலவுவது கண்கூடு. எனினும், பிரெஞ்சுக்காரர் களும், ஜெர்மானியர்களும், இத்தாலியர்களும், ஏனையோரும் ஒரே சமூகத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல என்பதை யார் மறுக்க முடியும்? அடுத்தப்படியாக, அமெரிக்காவில் உள்ள வெள்ளையர்கள், நீக்ரோக் கள் விஷயத்தை எடுத்துக் கொள்வோம். அவர்களும் ஒரு பொதுவான மதத்தை பின்பற்றுபவர்களாவர். இரு இனத்தவர்களும் கிறித்தவர் கள். இதன் காரணமாக அவர்கள் ஒரே சமூகத்தைச் சேர்ந்தவர்கள் என்று எவரேனும் கூறமுடியுமா? மூன்றாவதாக இந்தியக் கிறித் தவர்கள், ஐரோப்பியர்கள், ஆங்கிலோ-இந்தியர்களை எடுத்துக் கொள்வோம். அவர்கள் ஒரே மதத்தில் பற்றுறுதி கொண்டு அதனைப் பின்பற்றி வருகிறார்கள். எனினும் அவர்கள் ஒரே கிறித்தவ சமூ கத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல என்பது ஏற்றுக்கொள்ளப்படுகிறது. அடுத்து சீக்கியர்களை எடுத்துக் கொள்வோம். அவர்களில் சீக்கியர் கள், மஜ்பி சீக்கியர்கள், ராம்தாசிய சீக்கியர்கள் எனப் பலப் பிரிவினர்

இருக்கிறார்கள். அனைவரும் சீக்கிய மதத்தைப் பின்பற்றுபவர்களே. எனினும் அவர்கள் ஒரே சமூகத்தைச் சேர்ந்தவர்களல்ல என்று ஒப்புக்கொள்ளப்படுகிறது. இந்த உதாரணங்களின் பின்புலத்தில் பார்க்கும்போது, காங்கிரஸ் வாதம் முற்றிலும் குறைபாடுகளுடையது என்பது தெளிவு.

அரசியல் சட்டப் பாதுகாப்புகள் வழங்குவதா, இல்லையா என்பதைத் தீர்மானிப்பதற்கான அடிப்படை அம்சம் மக்கட்தொகையில் ஒரு சமூகக் குழுவினர் ஒன்றுபட்டிருக்கின்றனரா அல்லது பிரிந்திருக்கின்றனரா என்பதேயாகும் என்பதை உணர்ந்து கொள்ளத் தவறியது காங்கிரஸ் வாதத்திலுள்ள முதல் குறைபாடாகும். மதம் என்பது ஐக்கியமா, பிளவா என்பதை முடிவு செய்யக்கூடிய ஒரு சூழ்நிலை மட்டுமே ஆகும். முசல்மான்களும் இந்தியக் கிறித்தவர்களும் தனி அரசியல் அங்கீகாரத்தைப் பெற்றிருப்பதற்கு அவர்கள் முசல்மான்களாகவோ அல்லது கிறித்தவர்களாகவோ இருப்பது காரணமல்ல, மாறாக அவர்கள் அடிப்படையிலேயே இந்துக்களிடமிருந்து வேறுபட்ட இனத்தினராக இருப்பதே காரணம். இந்த உண்மையை காங்கிரஸ் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை.

பொது மதம் இருந்தால் சமூகக் கூட்டிணைப்பை மெய்யெனக் கொள்ள வேண்டும் என்று நிரூபிக்க முயல்வதில் காங்கிரஸ் வாதத்தின் இரண்டாவது குறைபாடு அடங்கியுள்ளது. இத்தகைய தருக்க நியாயத்தின் அடிப்படையில் வெற்றி பெற்றுவிட முடியும் என்று காங்கிரஸ் நம்புகிறது. துரதிர்ஷ்டவசமாக காங்கிரஸ் இவ்வாறு வெற்றிபெறுவது சாத்தியமல்ல. ஏனென்றால் உண்மை நிலவரங்கள் இத்தகைய முடிவான அனுமானத்திற்கு வருவதற்கு எதிராக இருக்கின்றன. பொதுவான மதம் இருந்தால் சமூக இணைப்பு ஏற்பட்டுவிடும் என்ற வாதம் சரியானதல்ல. ஏனென்றால், ஐரோப்பாவில் இத்தாலியர்கள், பிரெஞ்சுக்காரர்கள், ஜெர்மானியர்கள், ஸ்லாவ்கள், அமெரிக்காவில் நீக்ரோக்கள், வெள்ளையர்கள், இந்தியாவில் இந்தியக் கிறித்தவர்கள், ஐரோப்பியர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் ஆகியோர் ஒரே மதத்தைப் பின்பற்றுபவர்களாக இருப்பினும் அவர்கள் ஒரே சமூகமாக அமைந்திருக்கவில்லை என்பதைப் பார்க்கிறோம். இதிலுள்ள மிகவும் பரிதாபகரமான விஷயம் என்னவென்றால் மதம் ஓர் ஒன்றுபடுத்தும் அம்சம் என்ற தனது வாதத்தில் முற்றிலுமாக மயங்கிப்போய் சில முக்கிய உண்மைகளை காங்கிரஸ் உணரத் தவறிவிட்டதேயாகும்; இவை இரண்டுக்கும் இடையே ஒத்துப்போகும் இயல்பு இல்லை என்பதையும், சில சந்தர்ப்பங்களில்

மதங்கள் தனித்தனியாக இருந்தாலும் பிளவு ஏற்படவில்லை என்பதையும், வேறு சில சந்தர்ப்பங்களில் ஒரு பொதுவான மதம் இருந்தாலும் பிளவு ஏற்பட்டிருப்பதையும், இவை எல்லாவற்றையும் விட மோசம் மதமே ஒரு விதிமுறையாக ஆக்குவதால் பிளவு நிலவுவதையும் காங்கிரஸ் புரிந்துகொள்ளத் தவறிவிட்டது.

காங்கிரஸ் வாதத்திற்கு சமாதி கட்டுவதற்கு மேலே குறிப்பிட்ட சந்தர்ப்பங்கள் ஒவ்வொன்றுக்கும் ஓர் உதாரணம் கூறுவது பொருத்தமாக இருக்கும். முதலாவது சந்தர்ப்பத்தை எடுத்துக் கொண்டால் அதற்கு மிகச்சிறந்த, எளிதினும் எளிதான உதாரணமாக சீக்கியர்களையும் இந்துக்களையும் குறிப்பிடலாம். அவர்கள் சமய அளவில் வேறுபட்டவர்களாக இருக்கின்றனர். ஆனால் சமூக ரீதியில் அவர்கள் பிரிந்திருக்கவில்லை. அவர்கள் ஒன்றாக உணவு உண்கின்றனர்; ஒருவருக்கொருவர் திருமணம் செய்து கொள்கின்றனர்; ஒன்றாக வாழ்கின்றனர். ஓர் இந்து குடும்பத்தில் ஒரு மகன் சீக்கியனாக இருப்பான்; இன்னொரு மகன் இந்துவாக இருப்பான். சமய வேறுபாடு சமூக உறவைத் துண்டிப்பதில்லை. இரண்டாவது சந்தர்ப்பத்தைப் பொறுத்தவரையில், ஐரோப்பாவில் இத்தாலியர்களையும், பிரெஞ்சுக்காரர்களையும், ஜெர்மானியர்களையும், அமெரிக்காவில் வெள்ளையர்களையும் நீக்ரோக்களையும் சிறந்த உதாரணங்களாகக் கூறலாம். மதம் ஓர் ஒன்றிணைக்கும் சக்தியாக இருக்கும் இடத்தில்தான் இவ்வாறு நிகழ்கிறது; ஆனால் வருண இன உணர்வு போன்ற பிளவு உண்டுபண்ணும் சக்திகளைத் தாக்குப் பிடித்து நிற்கும் அளவுக்கு மதம் வலுமிக்கதாக இருப்பதில்லை. மதமே பிளவை உண்டுபண்ணும் மூன்றாவது சந்தர்ப்பத்திற்கு இந்துக்களையும் இந்து சமயத்தையும் மிகப் பொருத்தமான இன்னும் சொல்லப்போனால் ஒரே உதாரணங்களாகக் குறிப்பிடலாம். இந்து சமயம் ஒற்றுமைக்குப் பதிலாக பிரிவினையை போதிக்கிறது என்பது அனைவரும் நன்கு அறிந்த விஷயம். ஓர் இந்து என்றால் கூடியுறவாடாதவன், எல்லாவற்றிலும் தனித்து நிற்பவன் என்றே பொருள். இந்து சமயம் சாதி அமைப்பையும் தீண்டாமையையும் தாங்கிப் பிடித்து நிற்கிறது என்று பொதுவாகப் பயன்படுத்தப்படும் வாசகம் அநேகமாக அதன் இயல்பை மூடிமறைக்கிறது என்றே சொல்லவேண்டும். இந்து சமயத்தின் உண்மையான இயல்பு பிளவுபடுத்துவதே ஆகும். இதில் எத்தகைய ஐயத்துக்கும் இடமில்லை. ஏனென்றால் சாதி அமைப்பும், தீண்டாமையும் எதைக் குறிக்கின்றன? பிளவையும் பிரிவினையையுமே குறிக்கின்றன என்பது தெளிவு. சாதி என்பது பிரிவினைக்கு மற்றொரு பெயர்; தீண்டாமை என்பது ஒரு சமூகத்தை இன்னொரு

சமூகத்திலிருந்து பிரிக்கும் மிக அதீத பிரிவினை வடிவத்தைக் குறிக்கிறது. சாதியமைப்பும், தீண்டாமையும் மரணத்திற்குப் பின்னர் ஆத்மாவின் நிலை சம்பந்தப்பட்ட இதர சித்தாந்தங்களுடன் ஒப்பிடும் போது கேடுவிளைவிக்காத சித்தாந்தங்கள் அல்ல என்பதும் ஐயத்துக்கப்பாற்பட்டதேயாகும். இவை ஒவ்வொரு இந்துவும் இந்த உலகில் தனது வாழ்நாட் காலத்தில் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க முறைகளாக நிர்ணயிக்கப்பட்டுள்ளன. சாதி அமைப்பும் தீண்டாமையும் வெறும் சித்தாந்தங்களாக மட்டுமன்றி, இந்து மதம் விதித்துள்ள மிக முக்கியமான சமய வினைமுறைகளில் ஒரு பகுதியாகவும் அமைந்துள்ளன. சாதி அமைப்பு மற்றும் தீண்டாமைச் சித்தாந்தங்களில் ஓர் இந்து நம்பிக்கை வைப்பது மட்டும் போதாது. அவன் தனது அன்றாட வாழ்க்கையில் சாதியையும் தீண்டாமையையும் கடைப்பிடித்தொழுகவும் வேண்டும்.

இந்து சமயம் தனது தீண்டாமை சித்தாந்தத்தின் மூலம் இந்துக்களும் தீண்டாதவர்களுக்கும் இடையே கொண்டு வந்துள்ள பிளவு, பிரிவினை காலனி நாடுகள் சம்பந்தமாக போர்த்துக்கீசியர்களுக்கும் அவர்களுடைய எதிராளிகளுக்கும் இடையே ஏற்பட்ட சச்சரவில் ஒரு சமயம் போப்பாண்டவர் கோடிட்டது போன்ற வெறும் கற்பனையான ஒரு பிரிவினைக் கோடல்ல; அது கண்ணுக்குத் தெரியக் கூடிய அல்லது தெரியாமலும் இருக்கக்கூடிய அகலமில்லாத நீளம் மட்டுமே கொண்ட வண்ணக்கோடு அல்ல; அது தனித்தன்மை கொண்ட ஆனால் வேறுபாடு காட்டாத வழிமரபுக் கோடல்ல. மாறாக இந்தக் கோட்டுக்கு ஆழமுமுண்டு, அகலமுமுண்டு. உண்மையில் இந்துக்களும் தீண்டப்படாதவர்களும் குத்துமுள் கம்பிகளால் ஆன ஒரு வேலியால் பிரிக்கப்பட்டுள்ளனர். சுருக்கமாகக் கூறுவதானால் இதனைத் தொற்றுநோய்த் தடுப்பு வேலி என்றே கூறவேண்டும். தீண்டப்படாதவர்கள் இதனைக் கடந்து செல்ல ஒருபோதும் அனுமதிக்கப்பட்டதில்லை, என்றேனும் அனுமதிக்கப்படுவார்கள் என்ற நம்பிக்கையும் இல்லை.

பொதுப்படையாகக் கூறுவதானால், இந்து சமயமும் சமூகக் கூட்டிணைப்பும் பரஸ்பரம் ஒன்றுக்கொன்று ஒவ்வாதவை, முரண்பாடானவை. ஆனால் இந்து சமயம் தனது இயல்பு காரணமாக, சமூகப் பிரிவினையில் நம்பிக்கை வைத்திருக்கிறது; இது சமூக ஒற்றுமையின்மையின் மறுபெயராகும்; எனவே இது சமூகப் பிரிவினையையும் தோற்றுவிக்கிறது. இந்துக்கள் ஒன்றுபட்டு இருக்க விரும்பினால் அவர்கள் இந்து சமயத்தைத் துறக்க வேண்டும். இந்து சம

யத்தைக் கைவிடாமல் அவர்களால் ஒற்றுமையாக இருக்க முடியாது. இந்து சமயம் இந்துக்களின் ஒற்றுமைக்கு மிகப் பெரிய தடையர ணாக இருந்து வருகிறது. அனைத்துச் சமூக ஒற்றுமைக்கும் அடிப் படையான ஒன்றுபட்டிருக்க வேண்டும் என்ற அந்த ஆசையை, ஆர்வத்தை இந்து சமயத்தால் தோற்றுவிக்க முடியாது. அதற்கு மாறாக பிரிய வேண்டுமென்ற விருப்பத்தைத்தான் இந்து சமயம் தோற்று விக்கிறது.

தான் முன்வைக்கும் வாதம் தனக்கு எதிராகவே திரும்புகிறது என்பதை காங்கிரஸ் உணர்ந்ததாகத் தெரியவில்லை. ஆனால் தீண்டப்படாதவர்கள் முன்வைக்கும் வாதம் அப்படிப்பட்டதல்ல; அது மறுக்க முடியாத, அசைக்க முடியாத ஆணித்தரமான வாதம். தீண்டப்படாதவர்கள் இந்துக்களே என்ற வரட்டுத்தனமான வாதத் திலிருந்து ஏதேனும் முடிவுக்கு வர முடியுமானால் அந்த முடிவு பின் கண்டவாறுதான் இருக்கும்: தீண்டப்படாதவர்கள் இந்துக்கள்தான் என்று சாதிக்கும் இதே இந்து சமயம்தான் தீண்டப்படாதவர்களை இந்துக்களில் ஒரு பிரிக்க முடியாத பகுதியினராக ஏற்றுக்கொள்ளக் கூடாது, மாறாக அவர்களை இந்துக்களிடமிருந்து பிரித்து ஒரு தனித்த பகுதியினராகவே நடத்திவர வேண்டும் என்று கொள்கை அளவிலும் சரி, நடைமுறையிலும் சரி எப்போதுமே வலியுறுத்தி வந்திருக்கிறது.

எனவே, தீண்டப்படாதவர்கள் தாங்கள் ஒரு தனிப் பிரிவினர் என்று கூறினால் அரசியல் அனுகூலங்களைப் பெறுவதற்காக அவர் கள் ஒரு புதிய கோட்பாட்டை கண்டுபிடித்திருக்கின்றனர் என்று அவர்கள்மீது யாரும் குற்றம் சுமத்த முடியாது. அவர்கள் அப்பட்ட மான யதார்த்தத்தையும், அந்த எதார்த்தம் எவ்வாறு இந்து சமயத் தின் மரபுரிமையாக வந்தது என்பதையும் சுட்டிக்காட்டியிருக்கிறார் களே தவிர வேறல்ல. தீண்டப்படாதவர்களை ஒரு தனி இனத்தின ராக அங்கீகரிக்க மறுப்பதற்கு இந்து சமயத்தை ஒரு வாத ஆதாரமாக காங்கிரஸ் பயன்படுத்திக் கொள்ள முடியாது; அது நேர்மையான செயலாகவும் இருக்க முடியாது; அவ்வாறு அது பயன்படுத்திக் கொள்ளுமானால், சுயநல நோக்கங்களால் தூண்டப்பட்டே அவ்வாறு செய்ய முடியும். தீண்டப்படாதவர்களை இந்தியாவின் தேசிய வாழ் வில் ஒரு தனித்த, வேறுபட்ட இனத்தினராக ஏற்றுக்கொள்வது நிர் வாக சபையிலும், சட்டமன்றங்களிலும், அரசுப் பணித்துறைகளிலும் உள்ள இடங்களை தீண்டப்படாதவர்களும் இந்துக்களும் தங்களுக் குள் பங்கிட்டுக் கொள்வதில் போய் முடியும் என்பதையும், இதன்

மூலம் இந்துக்களுக்கான பங்கு குறையும் என்பதையும் காங்கிரஸ் அறியும். இதுவரை தீண்டப்படாதவர்களுக்கு உரிய இடங்களையும் இந்துக்களே அபகரித்துக் கொள்வது வழக்கமாக இருந்து வந்திருக்கிறது, அப்படியிருக்கும்போது அந்த இடங்களை இப்போது இந்துக்கள் இழப்பதை காங்கிரஸ் விரும்பவில்லை. இந்தியாவின் தேசிய வாழ்வில் தீண்டப்படாதவர்களை ஒரு தனி இனமாக அங்கீகரிக்க காங்கிரஸ் மறுப்பதற்கு இதுவே உண்மையான காரணம்.

தேசிய வாழ்வில் தீண்டப்படாதவர்களை ஒரு தனித்த, வேறுபட்ட இனமாக அரசியல் ரீதியில் அங்கீகரிக்கக் கூடாது, அவ்வாறு செய்தால் இந்துக்களுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் இடையேயான பிளவை அது நிரந்தரமாக்கிவிடும் என்பது காங்கிரஸ் முன்வைக்கும் இரண்டாவது வாதம்.

இது எவ்வகையிலும் பரிசீலனைக்குத் தகுதியற்ற உப்பு சப்பில்லாத வாதம். காங்கிரஸ் முன்வைத்துள்ள வாதங்களிலேயே இது மிகவும் பலவீனமானது; இதைவிட உருப்படியான வாதங்கள் எதையும் வைக்க காங்கிரசுக்குத் திராணியில்லை என்பதையே இது காட்டுகிறது, சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும். தவிரவும், அதன் முந்தைய வாதத்துக்கே முரண்பாடானதாக இருக்கும் இந்த வாதம் முற்றிலும் தவறான கருத்திலிருந்து தோன்றியதாகும்.

இந்துக்களுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் இடையே உண்மையிலேயே பிளவு இருக்குமானால், தீண்டப்படாதவர்களுக்கு எதிராக இந்துக்கள் பாரபட்சப் போக்கைக் கடைப்பிடிக்கக்கூடிய அபாயம் இருக்குமானால், அப்போது தீண்டப்படாதவர்கள் அரசியல் அங்கீகாரம் பெறுவதும், இந்துக்களின் கொடுங்கோன்மையிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள அவர்களுக்கு அரசியல் பாதுகாப்புகள் வழங்குவதும் இன்றியமையாததாகிறது. இதை விடுத்து, உங்களுக்கு ஒளிமயமான எதிர்காலம் காத்திருக்கிறது எனும் வாதத்தை இப்போதைய கொடுங்கோன்மையிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்கான வழி துறைகளைத் தீண்டப்படாதவர்கள் பெறாதபடி தடுப்பதற்குப் பயன்படுத்திக் கொள்ள முடியாது.

இரண்டாவதாக, இந்துக்களையும் தீண்டப்படாதவர்களையும் சமூக ரீதியில் ஒன்றிணைப்பதில் உண்மையிலேயே ஆர்வம் கொண்டவர்களும், இத்தகைய கூட்டிணைப்பை உருவாக்குவதற்கான

வழிதுறைகளைக் காணுவதில் செயலூக்கத்துடன், தீவிரமாக ஈடுபட்டிருப்பவர்களும்தான் இந்த வாதத்தைப் பயன்படுத்த முடியும். தீண்டப்படாதவர்களின் பிரச்சினை சமூக இயல்பும், அரசியல் இயல்பும் கொண்டது என்று காங்கிரஸ்காரர்கள் அடிக்கடி பேசி வருவதைக் கேட்கிறோம். ஆனால் இங்கு ஒரு கேள்வி எழுகிறது: இது ஒரு சமூகப் பிரச்சினை என்று காங்கிரஸ்காரர்கள் நெஞ்சறிந்து, வாய்மையோடும் நேர்மையோடும் கூறுகிறார்களா? அல்லது தீண்டப்படாதவர்களுடன் அரசியல் அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்வதால் ஏற்படக் கூடிய விளைவுகளைத் தவிர்க்கும் நோக்கத்தோடு இதனை ஒரு சாக்குப்போக்காகக் கூறுகிறார்களா? இது ஒரு சமூகப் பிரச்சினை என்று உண்மையிலேயே அவர்கள் மனமார்ந்து கருதுகிறார்கள் என்றால் இந்த விஷயத்தில் அவர்கள் நேர்மையோடு, வாய்மையோடு நடந்துகொள்கிறார்கள் என்பதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது? என்ன சான்று இருக்கிறது? காங்கிரஸ்காரர்கள் இந்துக்களிடையே ஏதேனும் சமூக சீர்திருத்த இயக்கத்தைத் தொடங்கி நடத்தி வருகிறார்களா? சமபந்தி போஜனங்களையும் கலப்புத் திருமணங்களையும் ஆதரித்து அவர்கள் என்ன அறப்போர் நடத்தினார்கள்? சமூக சீர்திருத்தத் துறையில் காங்கிரஸ் புரிந்துள்ள சாதனைதான் என்ன?

## III

தீண்டப்படாதவர்கள் தங்கள் பிரச்சினை குறித்து என்ன கருத்து கொண்டிருந்தார்கள் என்பதை இங்கு கூறுவது உசிதமாக இருக்கும். பிரிட்டிஷார் வரும்வரை தீண்டப்படாதவர்கள் தாங்கள் தீண்டப்படாதவர்களாக இருப்பதிலேயே திருப்தியடைந்திருந்தார்கள். இப்படித்தான் இருக்க வேண்டும் என்பது எங்கள் தலையெழுத்து; இந்து தெய்வம் இவ்வாறு முன்விதித்தமைத்து, அதை இந்து அரசு அமல்படுத்தி வந்தது. ஆதலால் இதிலிருந்து தப்ப எங்களுக்கு வேறு வழியில்லை. இந்த ரீதியில்தான் இந்த மக்களின் கண்ணோட்டம் நீண்ட நெடுங்காலமாக இருந்து வந்தது. இதன்பின்னர் அதிர்ஷ்டவசமாகவோ அல்லது துரதிர்ஷ்டவசமாகவோ கிழக்கிந்திய கம்பெனிக்கு இந்தியாவிலிருந்த தங்கள் போர்ப்படைகளுக்குப் படை வீரர்கள் தேவைப்பட்டனர். அப்போது அவர்களுக்கு தீண்டப்படாதவர்களைத் தவிர வேறு யாரும் கிடைக்கவில்லை. கிழக்கிந்தியக் கம்பெனியின் ராணுவம் குறைந்தபட்சம் அதன் வரலாற்றின் ஆரம்ப கட்டத்தில் தீண்டப்படாதவர்களைக் கொண்டதாகவே இருந்தது. தீண்டப்படாதவர்கள் இப்போது போருக்குத் தகுதியற்றவர்களது

வகுப்பினர் பட்டியலில் சேர்க்கப்பட்டு, அதனால் படைகளில் சேர்க்கப்படாமல் இருந்து வருகின்றனர். ஆனால் அப்போது இப்படி இல்லை. தீண்டப்படாதோர்களைக் கொண்ட போர்ப்படையின் துணைகொண்டுதான் பிரிட்டிஷார் இந்தியாவை வென்று கைப்பற்றினர். கிழக்கு இந்தியக் கம்பெனியின் சைனியத்தில் இந்தியப் படைவீரர்களும் அவர்களுடைய குழந்தைகளும் ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி கட்டாயம் கல்வி கற்றாக வேண்டும் என்ற ஒரு விதிமுறை இருந்து வந்தது. ராணுவத்தில் சேருவதற்கு தீண்டப்படாதவர்கள் அனுமதிக்கப்பட்டிருந்தபோதுதான் அவர்களுக்கு கல்வி கற்கும் வசதி அளிக்கப்பட்டது; இது அவர்கள் இதற்கு முன்னர் ஒருபோதும் பெற்றிராத ஓர் அனுகூலமாகும். இது அவர்களுக்கு ஒரு புதிய பார்வையையும் மதிப்பையும் அளித்தது. தாங்கள் கீழானவர்களாக நடத்தப்படுவது தங்களது தவிர்க்க முடியாத விதி அல்ல என்பதையும், சூழ்ச்சிமிக்க புரோகிதரின் நயவஞ்சக செயல்களால் தங்கள் ஆளுமை மீது திணிக்கப்பட்ட ஒரு கறை, வடு என்பதையும் அவர்கள் உணர ஆரம்பித்தனர். இதுகுறித்து இதன் முன்னர் என்றும் இல்லாத விதத்தில் அவர்கள் வெட்கி தலைகுனிந்தனர்; இந்த இழுக்கை, அழுக்கை ஒழித்துக்கட்டியே தீருவது என்று உறுதிபூண்டனர். அவர்களும் ஆரம்பத்தில் தங்கள் பிரச்சினை சமூக ரீதியானது என்றே எண்ணினர்; அப்பிரச்சினைக்குத் தீர்வுகாண சமூக வழிகளில் போராடி வந்தனர். இது முற்றிலும் இயல்பே. ஏனென்றால் இந்துக்களுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் இடையே சமபந்தி போஜனங்களும், கலப்புத் திருமணங்களும் தடைசெய்யப்பட்டிருப்பதை தங்களது கீழான நிலையின் வெளிப்புறச் சின்னங்களாக அவர்கள் பார்த்தனர். எனவே, தங்கள் மீது பூசப்பட்டுள்ள கறையை அகற்றுவதற்கு சமத்துவ அடிப்படையில் இந்துக்களுடன் சமூக உறவை வளர்த்துக் கொள்வது அவசியம் என்றும், சமபந்தி போஜனங்களையும் கலப்புத் திருமணங்களையும் தடுக்கும் விதிகளை இதன் மூலம் ரத்து செய்ய முடியும் என்றும் அவர்கள் முடிவுக்கு வந்தனர். வேறுவிதமாகச் சொன்னால், தீண்டப்படாதவர்கள் தங்களது கீழ்ப்பட்ட, இழிந்த நிலையை தெரிந்து கொண்ட பிறகு, அதிலிருந்து விடுபடுவதற்கு, விமோசனம் அடைவதற்கு மேற்கொண்ட முதல் செயல் திட்டம் சாதி முறையை ஒழிக்கும்படி வலியுறுத்தி, இந்து சமயத்தின் அரவணைப்பின் கீழ் உள்ள எல்லோரிடையேயும் சமூக சமத்துவத்தை நிலைநாட்டுவதேயாகும்.

இதில், இந்துக்களில் ஒரு பகுதியினர் தங்களுடைய நண்பர்களாக இருப்பதை தீண்டப்படாதவர்கள் கண்டனர். தங்களுடைய

சமூக அமைப்பு மிகவும் குறைபாடுடையதாக இருக்கிறது என்பதையும், பல சமூகத் தீமைகளுக்கு, கேடுகளுக்கு, கொடுமைகளுக்கு இதுவே உறைவிடம், பிறப்பிடம் என்பதையும் பிரிட்டிஷாருடன் ஏற்பட்ட தொடர்பால் தீண்டப்படாதவர்களைப் போலவே இவர்களும் உணர்ந்து கொண்டனர். அவர்களும் ஒரு சமூக சீர்திருத்த இயக்கத்தைத் தொடங்க விரும்பினர். வங்காளத்தில் ராஜா ராம் மோகன் ராயுடன் இந்த இயக்கம் தொடங்கி அங்கிருந்து அகில இந்தியாவிலும் படர்ந்து பரவிற்று; இறுதியில் இந்திய சமூக சீர்திருத்த மாநாடு என்னும் அமைப்பை நிறுவுவதில் முடிந்தது; அரசியல் சீர்திருத்தத்திற்கு முன்னர் சமூக சீர்திருத்தம் என்னும் குறிக்கோளை இந்த அமைப்பு முன்வைத்தது. தீண்டப்படாதவர்கள் இந்த சமூக சீர்திருத்த மாநாட்டைப் பின்பற்றினர்; அதன் பின்னால் ஒரே மனிதனாக அணிவகுத்து நின்றனர்; அந்த அமைப்புக்குத் தங்கள் முழு ஆதரவையும் அளித்தனர். நாளடைவில் இந்த அமைப்பு மாண்டு மடிந்து, குழிதோண்டிப் புதைக்கப்பட்டு, மறக்கப்பட்டு விட்டது என்பதை அனைவரும் அறிவர். அதை யார் கொன்றார்கள்? காங்கிரஸ்தான் கொன்றது. ''அரசியல்தான் முதலில், அரசியல்தான் முடிவில்'', ''அரசியல்தான் ஆதியும் அந்தமும்'', ''ஒவ்வொருவருக்கும் அரசியல், அனைவருக்கும் அரசியல்'' என்பன போன்ற கோஷங்களை முழங்கிய காங்கிரஸ் சமூக சீர்திருத்த மாநாட்டை தனது எதிராளியாகக் கருதிற்று. அரசியல் சீர்திருத்தம் ஏற்படுவதற்கு முன்னர் சமூக சீர்திருத்தம் ஏற்படுவது அவசியம் என்ற மாநாட்டின் கோட்பாட்டை அது வன்மையாக எதிர்த்தது. காங்கிரஸ் மேடையிலிருந்தும், தனிப்பட்ட காங்கிரஸ் தலைவர்களிடமிருந்தும் இடையறாதும் ஓயாதும் வீசப்பட்ட அக்கினி குண்டுகளால், அவர்களது பயங்கர பிரசாரத் தீயால் சமூக சீர்திருத்த மாநாடு எரிந்து சாம்பலாயிற்று. சமூக சீர்திருத்தத்தின் மூலம் தங்களுக்கு விமோசனம் கிட்டும் என்று தீண்டப்படாதவர்கள் கொண்டிருந்த நம்பிக்கை முழுவதும் இவ்வாறு தீய்ந்துபோன பிறகு, காய்ந்து போன பிறகு தங்களைப் பாதுகாத்துக் கொள்வதோடு அரசியல் வழிகளை நாட வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு அவர்கள் உள்ளாயினர். இப்போது காங்கிரஸ்காரர்கள் குட்டிக்கரணம் அடித்து, இது சமூகப் பிரச்சினை என்று கூற ஆரம்பித்துள்ளனர். இது கடைந்தெடுத்த கபட நாடகமே தவிர வேறன்று.

தீண்டப்படாதவர்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினை ஒரு சமூகப் பிரச்சினை என்று கூறுவது தவறு. ஏனென்றால் சீதனம், விதவை மறுமணம், திருமண வயது போன்றவற்றைத்தான் சமூகப் பிரச்சினைகள் எனக் கூறுவது முறையாகும்; தீண்டப்படாதோர் பிரச்சினை

இப்படிப்பட்ட பிரச்சினைகள் போன்றதல்ல. அடிப்படையில் இது முற்றிலும் வேறுபட்டதொரு பிரச்சினை. இன்று பெரும்பான்மையினர் சிறுபான்மையினருக்கு சுதந்திரமும் சமத்துவ வாய்ப்பும் அளிக்க மறுக்கின்றனர்; சிறுபான்மையினர் மீது தமது கொள்கையைத் திணிக்க சதிசெய்து வருகின்றனர்; இத்தகைய பகைமை மனோபாவம் கொண்ட பெரும்பான்மையினர் சிறுபான்மையினருக்கு சுதந்திரமும் சமத்துவ உரிமையும் வழங்கச் செய்வதே இன்று தீண்டப்படாதோரை எதிர்நோக்கும் பிரச்சினையாகும். இந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, தீண்டப்படாதோர் பிரச்சினை அடிப்படையில் ஓர் அரசியல் பிரச்சினை என்பது புலனாகும். சரி, இது ஒரு சமூகப் பிரச்சினை என்று வாதத்திற்காக வைத்துக்கொண்டால் கூட, இந்துக்கள் நல்லெண்ணம் படைத்தவர்களாக இருக்கும் பட்சத்தில், தீண்டப்படாதவர்களுக்கு அரசியல் அங்கீகாரம் வழங்குவதும், அவர்களுடைய பந்தோபஸ்துக்காக பாதுகாப்புகள் அளிப்பதும் அவர்கள் சமூக ரீதியில் இந்துக்களுடன் ஒன்றுபடுவதை எப்படித் தடுக்கும் என்பதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. காங்கிரஸ்காரர்கள் தங்கள் மனத்தில் திட்டவட்டமான, தெளிவான கருத்துகள் ஏதுமின்றியே வாதிடுகிறார்கள் என்றே தோன்றுகிறது. அரசியல் அம்சங்களுக்கும் சமூக அம்சங்களுக்கும் இடையேயான பரஸ்பர உறவுகள் குறித்து, சம்பந்தா சம்பந்தங்கள் குறித்து அவர்களுக்கு ஒரு தெள்ளத் தெளிந்த கருத்து இருப்பதாகத் தெரியவில்லை. அவர்கள் தனிவாக்காளர் தொகுதிகளை எதிர்ப்பதிலிருந்தும், கூட்டு வாக்காளர் தொகுதிகளை ஆதரிப்பதிலிருந்தும் இதனைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். இதற்கு அவர்கள் கூறும் காரணத்தைப் பார்ப்போம். ஒரு கூட்டு வாக்காளர் தொகுதியில் இந்து வாக்காளர்கள் ஒரு தீண்டப்படாதவருக்கும் தீண்டப்படாத இனத்தைச் சேர்ந்த வாக்காளர்கள் இந்துவுக்கும் வாக்களிக்கலாம். இது சமூக ஒற்றுமையைக் கட்டி வளர்க்கிறது. தனி வாக்காளர் தொகுதியிலோ இந்து வாக்காளர்கள் ஓர் இந்துவுக்கும், தீண்டப்படாத இன வாக்காளர்கள் ஒரு தீண்டப்படாதவருக்குமே வாக்களிக்கின்றனர். இது சமூக ஒருமைப்பாடு உருவாவதைத் தடுக்கிறது. ஆனால் வாக்காளர் தொகுதிகள் பிரச்சினையை தீண்டப்படாதவர்கள் இந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கவில்லை. இவை இரண்டில் எது தீண்டப்படாதவர்கள் தாங்கள் விரும்பும் தங்களுடைய இன வேட்பாளரை வெற்றிபெறச் செய்ய உதவும் என்ற கண்ணோட்டத்திலிருந்தே இப்பிரச்சினையை அவர்கள் நோக்குகிறார்கள். ஆனால் இங்கு காங்கிரஸ் வாதத்தை நுணுகி ஆராய்வதிலேயே என் கவனத்தைச் செலுத்த விரும்புகிறேன். விரிவாக சென்று வாதத்தை சிக்கலாக்க விரும்பவில்லை. காங்கிரஸ் முன்வைக்கும்

வாதம் சரியானதாகவே தோன்றுகிறது. ஆனால் இது இவ்விஷயம் குறித்த ஆழமற்ற மேலெழுந்தவாரியான கண்ணோட்டமேயாகும். இந்தத் தேர்தல்கள் ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறுகின்றன என்பதை மறந்துவிடக் கூடாது. அப்படியிருக்கும்போது, இந்த ஐந் தாண்டுகளில் மற்ற நாட்களில் எல்லாம் இந்துக்களும் தீண்டப் படாதவர்களும் கடுமையான முறையில் பிரிந்து வாழ்ந்து வருகை யில் தேர்தல்கள் நடைபெறும் இந்த ஒரு நாளில் கூட்டாக வாக் களிப்பதால் மட்டும் எப்படி அவர்களிடையே ஒருமைப்பாட்டைக் கட்டி வளர்த்துவிட முடியும் என்று கேட்கலாம். அதேபோன்று, இந்த ஐந்தாண்டுகளில் ஒரே ஒரு நாளில் மட்டும் தனிவாக்காளர் தொகுதியில் வாக்களிப்பது ஏற்கெனவே உள்ளதைவிட எப்படி அதிகப் பிரிவினையை ஏற்படுத்திவிட முடியும் என்று கேட்கலாம்; இவ்வாறே, ஐந்தாண்டுகளில் ஒரு நாளை தனி வாக்காளர் தொகுதி யில் வாக்களிப்பதற்கு செலவிடுவது ஒற்றுமைக்காகப் பாடுபடு வோரின் பணியை எப்படித் தடுக்க முடியும் என்றும் கேட்கலாம். இன்னும் ஸ்தூலமாகக் கூறுவதானால், தீண்டப்படாதவர்களுக்கு தனி வாக்காளர் தொகுதிகளை உருவாக்குவது அவர்களுக்கும் இந்துக் களுக்கும் இடையே சமபந்தி போஜனங்களும் கலப்புத் திருமணங் களும் நடைபெறுவதற்கு எப்படி முட்டுக்கட்டையாக இருக்க முடியும்? இது முட்டுக்கட்டையாகத்தான் இருக்கும் என்று பிறவி முழு மூடன்தான் கூற முடியும். எனவே, நிரந்தரப் பிரிவினைக்கு முடிவுகட்ட இந்துக்கள் உண்மையிலேயே விரும்பினால், தீண்டப் படாதவர்களை ஒரு தனி இனமாக அரசியல் ரீதியில் அங்கீகரித்து, அவர்களுக்கு அரசியல் சட்டரீதியான பாதுகாப்புகளை வழங்குவது அவர்களிடையேயான பிளவை சாசுவதமாக்கவே செய்யும் என்று கூறுவதும் வாதிடுவதும் சிறுபிள்ளைத்தனமானதேயாகும்.

## IV

தங்களுக்கு அரசியல் சட்டப் பாதுகாப்புகள் அளிக்கப்பட வேண்டுமென்ற தீண்டப்படாதவர்களின் கோரிக்கைக்கு எதிராக வேறு சில கவைக்குதவாத வாதங்களும் முன்வைக்கப்படுகின்றன. அவற்றையும் இங்கு பரிசீலிப்பது அவசியம். அத்தகைய வாதங் களில் ஒன்றை இங்கு பார்ப்போம். இந்தியாவில் மட்டுமன்றி ஐரோப்பாவிலும் இதர எல்லா இடங்களிலும் சமூகப் பிரிவினை கள் இருந்து வரவே செய்கின்றன; ஆனால் ஐரோப்பிய மக்கள் தங்கள் அரசியலமைப்புச் சட்டங்களை வகுத்துக் கொண்டபோது இவற்றைக்

கணக்கிலெடுத்துக் கொள்ளவில்லை. இவ்வாறு பொதுவாக வாதிடப் படுகின்றது. எனினும் தீண்டப்படாதவர்களின் கோரிக்கையும் இந்த வாதத்திற்குள் அடங்கக்கூடும். எனவே, இந்த வாதம் சிறிதளவும் ஆதாரமற்றது என்று நான் ஏன் நினைக்கிறேன் என்பதை இங்கு கூறவேண்டும்.

இவ்வகையில் என் கருத்துகளைக் கூறும்போது, தெரிவிக்கப் படும் கூற்றுக்கும் அதனை அடிப்படையாகக் கொண்ட வாதத்தை யும் வேறுபடுத்தி அவற்றைத் தனித்தனியாகப் பகுத்தாய விரும்பு கிறேன். ஒரு குறிப்பிட்ட கட்டம் வரை இந்தக் கூற்று ஏற்கத்தக்கதாக இருக்கிறது. ஒவ்வொரு சமுதாயத்திலும் வகுப்புகள் இருக்கின்றன என்று கூறப்படுவதை மறுக்க முடியாது. ஏனென்றால் ஐரோப்பிய அல்லது அமெரிக்க சமுதாயத்தில் கூட பல்வேறு வழிகளில், பல் வேறு நோக்கங்களுக்காக இணைந்த வகுப்பினர் இருக்கின்றனர். சில வகுப்பினர் குருதி உறவால் அல்லது மொழியால் பிணைந்த வகுப்பினர்களாக உள்ளனர். சில வகுப்பினர் சமுதாய படிநிலை யிலும் அந்தஸ்திலும் வேறுபட்ட சமூக வர்க்கங்களைப் போன்று அமைந்துள்ளனர். இதேபோன்று குறிப்பிட்ட சித்தாந்தங்களைப் பின்பற்றும் சமயப் பிரிவினர் இருக்கின்றனர். இதேபோன்று சில சமயங்களில் வேறுபட்ட நோக்கங்களைக் கொண்டவர்களும், சில சமயங்களில் இறுக்கமற்ற பிணைப்புகளைக் கொண்டவர்களும், சில சமயங்களில் வெவ்வேறு அளவில் அமைந்த பிணைப்புகளைக் கொண்டவர்களும், அரசியல் கட்சிகளும், தொழில்துறை இணைக் கழகங்களும் என முடிவே இல்லாமல் இந்தப் பட்டியல் நீண்டு கொண்டே செல்லுகிறது. ஆனால் இதற்கப்பாலும் சென்று இந்தியா விலுள்ள சாதிகள் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலுமுள்ள குழுக் கள், வகுப்புகளைப் போன்றவையே என்று கூறுவது சுத்த முட்டாள் தனமாகும், கடைந்தெடுத்த அபத்தமாகும். ஐரோப்பாவிலுள்ள வகுப்புகளும் குழுக்களும் மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது இந்தியாவிலுள்ள சாதிகள் போல் தோன்றலாம். ஆனால் அடிப் படையில் இவை இரண்டுமே முற்றிலும் வேறுபட்டவை. இதில் பிரதான வேறுபாடு இந்தியாவில் சாதிகள் தனிமைப்படுத்தப்படு வதும் ஒதுக்கப்படுவதுமாகும்; இதுதான் இந்தியாவில் சாதிகள் குறித்த தனி அம்சங்களாகும்; இவை ஏதோ வெறும் நடைமுறைகளாக அன்றி சமய சார்புடைய விதிமுறைகளாகவே கடைப்பிடிக்கப்படு கின்றன; இந்த அம்சங்களில் எதையும் ஐரோப்பாவிலோ அல்லது அமெரிக்காவிலோ உள்ள குழு அல்லது வகுப்பு அமைப்பில் காண முடியாது.

இந்தியாவின் சமூக அமைப்பு முறை ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உள்ள சமூக அமைப்பு முறையிலிருந்து வேறு பட்டிருக்கும் விஷயத்தை எடுத்துக்கொண்டு பார்ப்போமானால், ஐரோப்பாவும் அமெரிக்காவும் தமது அரசியலமைப்பை உரு வாக்கும்போது தமது சமூக அமைப்பு பற்றிய விவரங்களையும், சூழ்நிலைகளையும் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டியதில்லை என்பதும், ஆனால் இந்தியா இது விஷயத்தில் தனது சாதி அமைப்பு முறையையும் தீண்டாமையையும் கணக்கிலெடுத்துக் கொள்ளா மல் இருக்க முடியாது என்பதும் புலனாகும். இந்தப் பிரச்சினையை இன்னும் முழு அளவுக்குப் புரிந்துகொள்வதற்கு இது ஐரோப்பா வுக்கு ஏன் தேவையில்லை, இந்தியாவுக்கு ஏன் தேவைப்படுகிறது என்பதை இங்கு விளக்குவது அவசியம். குழுக்களாக அமைந்துள்ள ஒரு சமுதாயத்தை எதிர்நோக்கும் அபாயம் என்னவென்றால் ஒவ் வொரு குழுவும் ''தனது சொந்த நலன்களை'' வளர்த்துக் கொள்கிறது, அப்போது இத்தகைய நலன்கள் மற்ற குழுக்களது நலன்களுக்கு குந்தகம் விளைவிக்காமல் தடுப்பதற்கு அரசியல் சட்ட பாதுகாப்பு களை உருவாக்க வேண்டியதாகிறது. இந்தத் தீங்கை அரசியல் அல் லாத வழிகளில் தடுத்து நிறுத்துவதற்கு வாய்ப்பு இருக்கும்போது, அரசியல் சட்டப் பாதுகாப்புகளை உருவாக்க வேண்டிய அவசியம் இல்லாது போகிறது. இவ்வாறு இந்தத் தீங்கை அரசியல் அல்லாத வழிகளில் முறியடிப்பதற்கு வாய்ப்பு இருக்கும்போது அரசியல் சட்டப் பாதுகாப்புகளுக்கு வகைசெய்ய வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் இந்த சீர்கேட்டுக்கு முடிவுகட்டுவதற்கு அரசியல் அல்லாத வழிகள் இல்லாதபோது, அரசியல் சட்டப் பாதுகாப்புகள் வழங்கு வது இன்றியமையாதது. ஒரு குறிப்பிட்ட குழு ''தனது சொந்த நலன் களை'' வளர்த்துக் கொள்வதிலிருந்து எழக்கூடிய தீமையை எதிர்க் கக்கூடிய சாத்தியக்கூறு ஐரோப்பாவில் இருக்கிறது. ஏனென்றால் அங்கு பல்வேறு குழுக்கள் தனிமைப்படுத்தப்பட்டோ, ஒதுக்கப் பட்டோ இருக்கவில்லை; அக்குழுக்கள் பரஸ்பரம் சுதந்திரமாக உறவுகளை வளர்த்துக்கொள்ள இது உதவுகிறது; இதன் விளைவாக, குழுக்கள் தமது சொந்த நலன்களுக்காக நிற்பதும், எப்போதும் அவற்றைப் பாதுகாப்பதை தலையாய குறிக்கோளாகக் கொண்டிருப் பதும் வரம்பு மீறிய செயலாகக் கருதப்படுகிறது; இத்தகைய தூய எண்ணம் அவற்றின் குறிக்கோள்களையும் நோக்கங்களையும் விரிவு படுத்தவும் சமூக நலனுக்குகந்தவையாக இருக்கச் செய்யவும் வகை செய்கிறது. ஐரோப்பாவில் பல்வேறு குழுக்களிடையே நிலவும் இத்தகையதொரு நிலை அவற்றின் போக்குகளில் ஆக்கபூர்வமான மாற்றங்களை உண்டுபண்ணுகிறது; இதனால் சிந்தனையில் ஒருமைப்

பாடும், நோக்கங்களில் உடன்பாடும், செயலில் ஒற்றுமையும் நிலவும் ஒரு சமுதாயத்தை உருவாக்க முடிகிறது. ஆனால் இந்தியாவின் விஷயம் இதிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாகும். இந்தியாவில் சாதிகள் என்பவை தனிமைப்படுத்தப்பட்டவையாக, ஒதுக்கப்பட்டவையாக இருந்து வருகின்றன. அவற்றிடையே பரஸ்பர உறவு ஏதுமில்லை; ஒத்த குறிக்கோள்களோ நோக்கங்களோ இல்லை. ஒரு சாதியோ அல்லது சாதிகளின் கூட்டோ தமது ''சொந்த நலன்களை'' ஏனைய சாதிகளின் நலன்களை விட மிகவும் புனிதமானவையாக, என்றென்றும் மீறவொண்ணாதவையாகக் கருதுகின்றன. இந்த சாதிகள் ஒன்றுபடுவதும் ஒத்துழைப்பதும் அவற்றின் இயல்பை மாற்றிவிடுவதில்லை. இந்த ஒத்துழைக்கும் செயல்பாடுகள் வெறும் யாந்திரிகமானவை, சமூக ரீதியானவை அல்ல. தனிநபர்கள் சில குறிப்பிட்ட பலன்களை அடையும் பொருட்டு பரஸ்பரம் ஒருவர் மற்றவரைப் பயன்படுத்திக் கொள்கின்றனர்; இதில் உணர்ச்சிபூர்வமான, அறிவுபூர்வமான மனப்போக்குக்கு இடமில்லை. அவர்கள் பர்ஸ்பரம் கட்டளைகளைப் பிறப்பிப்பதும் கட்டளைகளை ஏற்பதும் அவர்களது செயற்பாடு களிலும் விளைவுகளிலும் வேண்டுமானால் தாக்கத்தை ஏற்படுத் தலாம். ஆனால் இது அவர்களது மனப்போக்குகளை மாற்றாது. ஆதலால் ''சுயநல நோக்கங்கள்'' கொண்ட சாதிகள் ஏனைய நிராதர வான சாதிகளுக்கு கேடு விளைவிப்பதைத் தடுப்பதற்கு இந்திய அரசியலமைப்புச் சட்டம் அவற்றுக்குப் பாதுகாப்புகள் அளிப்பது அவசியம்.

இந்திய அரசியலமைப்பு சட்டம் ஏன் இதனைக் கணக்கி லெடுத்துக் கொள்ள வேண்டும். இதிலிருந்து தோன்றக்கூடிய கேட் டுக்கு எதிராக ஏன் பாதுகாப்புகள் அளிக்க வேண்டும் என்பதை நியாயப்படுத்தும் மற்றொரு அம்சமும் இந்திய சாதி அமைப்பு முறையில் அடங்கியுள்ளது. ஒவ்வொரு சமுதாயமும் பல்வேறு குழுக்களைக் கொண்டதாக இருக்கிறது. ஆனால் இந்தக் குழுக்களுக்கு இடையேயான பரஸ்பர உறவுகள் எல்லா இடங்களிலும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை என்பதைக் கருத்திற் கொள்ள வேண்டும். ஒரு சமுதாயத்தில் குழுக்கள் பரஸ்பரம் ஒன்று மற்றொன்றின்பால் காட்டும் மனப்போக்கு சமூக-சார்பற்றதாக இருக்கக்கூடும். இன்னொரு சமுதாயத்தில் இதுவே சமூக-விரோதப் போக்காக இருக்கக்கூடும். பல்வேறு சமூகக் குழுக்களைச் செயல்பட உந்தும் உணர்வு சமூக சார்பற்றதாக இருக்கும் இடங்களில்தான் இத்தகைய குழுக்கள் இருந்துவருவதை அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்குவதில் கணக்கிலெடுத்துக் கொள்ளத் தேவையில்லை. ஆனால் ஒரு குழு

மற்றொரு குழுவிடம் சமூக-விரோத உணர்வுடன் நடந்துகொள்ளும் போதும், அந்தக் குழுவுக்கு வெளியே இருப்பவர்களைப் பகைவர்களாகக் கருதும்போதுதான் அரசியலமைப்புச் சட்டத்தை வகுக்கும் போது இதனைக் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும்; சமூக-விரோதப் போக்குக்கு இலக்கான வகுப்பினருக்கு முறையான பாதுகாப்புகள் அளிக்கப்பட வேண்டும். இந்தியாவில் சாதிகள் வெறும் சமூக சார்பற்றவையாக மட்டும் இருக்கவில்லை. மிகப்பல சந்தர்ப்பங்களில் அவை சமூக-விரோதமானவையாகவும் இருக்கின்றன. தீண்டப்படாதவர்கள் விஷயத்தில் இந்துக்கள் நடந்துகொள்ளும் போக்கை இவ்வகையில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். தீண்டப்படாதவர்கள்பால் இந்துக்கள் எத்தகைய சமூக-விரோதப் போக்கைக் கடைப்பிடிக்கிறார்கள் என்பதற்கு இங்கு சில உதாரணங்களைக் கூறுவது பொருத்தமாக இருக்கும். ஒரு பொதுக் கிணற்றிலிருந்து தீண்டப்படாதவர்கள் தண்ணீர் எடுப்பதை இந்துக்கள் அனுமதிக்காததை இங்கு ஓர் எடுத்துக்காட்டாகக் கூறலாம். இதேபோல் பொதுப் பள்ளிக்கூடங்களில் தீண்டப்படாத இனத்தைச் சேர்ந்த குழந்தைகளை இந்துக்கள் அனுமதிக்க மாட்டார்கள். தீண்டப்படாதவர்கள் பேருந்துகளில் பயணம் செய்வதையும் இந்துக்கள் அனுமதிக்க மாட்டார்கள். ஒரே ரயில் பெட்டியில் தங்களுடன் சேர்ந்து தீண்டப்படாதவர்கள் பயணம் செய்வதையும் இந்துக்கள் அனுமதிக்க மாட்டார்கள். தீண்டப்படாதவர்கள் அழுக்குப்படாத தூய்மையான உடை உடுத்துவதையும் இந்துக்கள் அனுமதிக்க மாட்டார்கள். தீண்டப்படாதவர்கள் அணிமணிகளை அணிவதையும் இந்துக்கள் அனுமதிக்க மாட்டார்கள். தீண்டப்படாதவர்கள் தங்கள் வீடுகளின் கூரைகளுக்கு ஓடுகள் வேய்வதையும் இந்துக்கள் அனுமதிக்க மாட்டார்கள். தீண்டப்படாதவர்களுக்கு நிலம் சொந்தமாக இருப்பதை இந்துக்கள் சகித்துக் கொள்ள மாட்டார்கள். தீண்டப்படாதவர்கள் ஆடுமாடுகள் போன்ற கால்நடைகளைச் சொந்தமாக வளர்ப்பதை இந்துக்கள் அனுமதிக்க மாட்டார்கள். ஓர் இந்து நின்று கொண்டிருக்கும்போது தீண்டப்படாதவர் அமர்ந்திருப்பதை இந்துக்கள் அனுமதிக்கவே மாட்டார்கள். இவையாவும் இந்துக்களிடையே உள்ள சில தீயவர்கள் அங்குமிங்குமாக செய்யும் அடாவடித்தனங்கள் அல்ல. மாறாக, இவை எல்லாம் தீண்டப்படாதவர்களுக்கு எதிராக இந்து சமூகம் நிரந்தரமாகக் கடைப்பிடிக்கும் சமூக-விரோதப் போக்கின் வெளிப்பாடுகளே

★ இது சம்பந்தமான விவரங்களை, 'இந்துக்கள் எங்களுக்கு என்ன செய்திருக்கிறார்கள்' எனும் பெயரில் வெளிவரவிருக்கும் எனது அடுத்த தொகுதியில் காண்க.

ஆகும்.[1]

இந்த விஷயத்தை மேலும் நீட்டித்துச் செல்லத் தேவையில்லை. இது ஏராளமான குற்றம் குறைகள் நிறைந்த வாதமாகும். அரசியலமைப்புச் சட்டப் பாதுகாப்புகள் தங்களுக்கு அளிக்கப்பட வேண்டுமென்று தீண்டப்படாதவர்கள் முன்வைக்கும் கோரிக்கையை எதிர்ப்பதற்கு இந்த சித்தாந்தம் பயன்படுத்தப்பட்டால் அது மிகவும் மானக்கேடான, பழிப்பிற்கிடமான ஏமாற்றுவித்தையாகவே இருக்கும் என்று கூறினால் போதும் என்று கருதுகிறேன்.

## V

மற்றொரு சொத்தையான வாதம் முன்வைக்கப்படுவதையும் பார்க்கிறோம். தீண்டாமை என்பது மறைந்துபோகக் கூடிய ஒரு நிகழ்வுப் போக்கு, ஆதலால் தீண்டப்படாதவர்களை இந்தியாவின் தேசிய வாழ்வில் ஒரு தனித்த சக்தியினராக, இனத்தினராக அங்கீகரிப்பதில் அர்த்தமில்லை, பயனுமில்லை என்பது இந்த வாதத்தின் அடிப்படை. மனிதகுல வரலாற்றில் எல்லாமே மறைந்து போகக் கூடியதுதான், நிரந்தரமானது என்று எதுவுமே இல்லை. தீண்டாமை வேரோடு வேரடி மண்ணோடு அழிக்கப்பட்ட பிறகு வேண்டுமானால் இதைப் பற்றிப் பரிசீலிக்கலாம். அந்த நிலை வரும் வரை இதுகுறித்து எத்தகைய கவனமும் செலுத்தத் தேவையில்லை. தீண்டாமை ஒழிய வேண்டும், மண்ணோடு மண்ணாக மடிய வேண்டும் என்றே நாம் அனைவரும் விரும்புகிறோம், நம்புகிறோம். ஆனால் அசைக்க முடியாத நம்பிக்கைவாதிகள் என்று தங்களைத் தம்பட்டமடித்துக் கொள்ளும் பேர்வழிகளைப் பற்றி நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். சோர்வுற்றிருக்கும் ஒருவருக்கு உற்சாகமும் உத்வேகமூட்டக்கூடிய ஒரு நம்பிக்கைவாதி ஒரு நல்ல தோழன்தான் என்பதில் ஐயமில்லை. ஆனால் அவன் மெய்ந்நிகழ்வுகளுக்கு எப்போதும் ஓர் உண்மையான சான்றாளனாக எப்போதும் இருப்பான் என்று எதிர்பார்க்க முடியாது.

இந்த வாதம் உண்மையில் வாதமே அல்ல. அவர் இந்த வாதத்தின் மாயவலையில் விழக்கூடுமாதலால் அதன் உண்மை சொரூபத்தைத் தோலுரித்துக் காட்டவும், அது எத்தகைய வீணான, பயனற்ற வாதம் என்பதை அம்பலப்படுத்தவும் விரும்புகிறேன். இந்த விஷயத்தை எழுப்புபவர்கள் ''என்னைத் தொடாதே'' என்கிற ரீதியான தீண்டாமைக்கும் சமூக ரீதியில் தீண்டப்படாதவர்களிடம் பாரபட்ச மனோபாவம் காட்டும் தீண்டாமைக்குமுள்ள வேறுபாட்டைத்

தெரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. இவை இரண்டும் முற்றிலும் வேறுபட்டவை. 'என்னைத் தொடாதே' என்னும் ரீதியான தீண் டாமை நகரங்களில் படிப்படியாக மறைந்து கொண்டிருக்கலாம்; எனினும் இது குறிப்பிடத்தக்க அளவில் நடைபெற்று வருகிறதா என்பதில் எனக்கு ஐயமே. தீண்டப்படாதவர்கள் விஷயத்தில் இந்துக் கள் பாரபட்சம் காட்டும் மனோபாவ ரீதியிலான தீண்டாமை நக ரங்களிலும் சரி, கிராமங்களிலும் சரி அண்மைக் காலத்தில் மறைந் தொழியப் போவதில்லை என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகம் இல்லை. இவ்வாறு பாரபட்ச மனோபாவ ரீதியிலான தீண்டாமை மறையாததோடு, ஏராளமான இந்துக்கள் இப்போது வாழ்ந்து வரு கின்ற, இனியும் தொடர்ந்து வாழ்ந்து வரப்போகின்ற பல்லாயிரக் கணக்கான கிராமங்களில் 'என்னைத் தொடாதே' என்னும் ரீதியி லான தீண்டாமையும் எண்ணிப் பார்க்கத்தக்க காலத்தில் மறையப் போவதில்லை. இரண்டாயிரம் ஆண்டுக்காலமாக திருக்குமறுக்காக உருத்திரிந்துபோன மனித மனத்தை எதிர்நிலையில் திருப்பவிட முடியாது.

இந்து சமயம் நிலைமைக்குத் தக்கபடி தன்னைப் பெரிதும் மாற்றியமைத்துக் கொள்ளக்கூடிய சமயம் என்றும், எல்லாவற்றுக் கும் தன்னை தகவமைத்துக் கொண்டு, எதையும் தன்னுள் ஈர்த்துக் கொள்ளக்கூடிய ஆற்றல் அதற்கு இருக்கிறது என்றும் கூறும் சில இந்து சமய தீவிர ஆதரவாளர்கள் இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். ஒரு சமயத்துக்குள்ள இத்தகைய ஆற்றலை ஒரு மாபெரும் நற்கூறாகப் பலர் கருத மாட்டார்கள் என்பதை நான் நிச்சயமாக அறிவேன். ஏனென்றால் ஒரு குழந்தை சாணத்தைத் தின்று சீர ணிக்கக்கூடிய ஆற்றலைப் பெற்றுவிட்டது என்பதற்காக யாரேனும் பெருமைப்படுவார்களா? எனினும் இது வேறுவிஷயம். இந்து சமயம் எந்த நிலைமைக்கும் தன்னைத் தகவமைத்துக் கொள்ள முடியும் என்பது முற்றிலும் உண்மையே. அக்பர் தீன் இலாஹி என்னும் சமய நூலை உருவாக்கினார்; இந்து சமயத்தினுள் அதற்கு ஓர் இடத்தைப் பெற்றுத் தருவதற்காகவும், அதனை இந்து மெய் விளக்க வியலின் ஏழாவது தொகுதியாக அங்கீகரிப்பதற்காகவும் அக்காலத் திய பிராமணர்கள் அல்லஹுப நிடதம் என்னும் இலக்கிய நூலைப் படைத்தார்கள். தகவமைத்துக்கொள்ள இந்து சமயத்துக்குள்ள ஆற்ற லுக்கு இதனை மிகச் சிறந்த உதாரணமாகக் கூறலாம். இந்து சமயம் பல விஷயங்களைத் தன்னுள் ஈர்த்துக் கொள்ள முடியும் என்பது உண்மையே. மாட்டிறைச்சி உண்பதை ஆரம்பத்தில் ஆதரித்துவந்த இந்து சமயம் (அல்லது சரியாகக் கூறுவதானால் ஆதி நாட்களில் இந்து சமயத்தின் சரியான பெயர் பிராமணீயம் என்பதேயாகும்)

பௌத்த சமயத்தின் அகிம்சைக் கொள்கையைச் சுவீகரித்துக் கொண்டு சைவ உணவுக் கோட்பாட்டை ஆதரிக்கும் சமயமாயிற்று. எனினும் இந்து சமயத்தால் எக்காலத்திலும் செய்ய இயலாத ஒரு விஷயம் இருக்கிறது - தீண்டப்படாதவர்களை ஈர்த்துக் கொள்ளும் வகையில் அல்லது தீண்டாமை என்னும் தடைவேலியை அகற்றும் வகையில் அது தன்னைத் தகவமைத்துக் கொள்ளாததே அது. திரு. காந்திக்கு முன்பே பல சீர்திருத்தவாதிகள் அரங்கில் தோன்றி அவர்கள் அனைவரும் தோல்வியே கண்டனர். என்னைப் பொறுத்தவரையில் அவர்களுடைய தோல்விக்கான காரணத்தை மிக எளிதாகக் கூறிவிடலாம். தீண்டப்படாதவர்களைப் பற்றி இந்துக்கள் அஞ்சுவதற்கு எதுவும் இல்லாதிருப்பதும், தீண்டாமையை ஒழிப்பதால் அவர்களுக்கு எந்த ஆதாயமும் கிட்டப்போவதில்லை என்பதுமே அந்தக் காரணம். இந்துக்கள் மாட்டிறைச்சி உண்பதை கைவிட்டார்களே. ஏன்? ஏனென்றால் அவ்வாறு செய்யவில்லை என்றால் பௌத்த சமயம் இந்து சமயத்தைத் தூக்கி விழுங்கிவிடும் என்ற பயம் இந்துக்களுக்கு. இந்துக்கள் அல்லாஹ¬பனிடதத்தை எழுதினார்கள் என்றால் அக்பர் ஒரு புதிய சமயத்தை உருவாக்குவதற்கு உதவுவதன் மூலம் தங்களுக்கு எல்லாவிதத்திலும் ஆதாயம் கிட்டும் என்று அவர்கள் நம்பியதே இதற்குக் காரணம். இந்த நூலை எழுதியவர் அக்பரை மகிழ்வித்து நிறைய பணம் பெற்றார்; அது மட்டுமல்ல; அக்பர் ஒரு புதிய சமயத்தை உருவாக்குவதற்கு உதவுவதன் மூலம், இந்துக்களுக்கு இதுவரை இஸ்லாமிய மன்னர்கள் இழைத்துவந்த கொடுமையையும் கொடுங்கோன்மையையும் குறைக்க முடியும் என்று அவர் நம்பினார். தீண்டாமை என்னும் சாபத்தீட்டுக்கு, சாபக்கேட்டுக்கு இந்துக்கள் தாமே முன்வந்து முற்றுப்புள்ளி வைப்பார்கள் என்ற நம்பிக்கை தீண்டப்படாதவர்களுக்கு இடையே மிகவும் பரந்த மனோபாவம் படைத்த வர்களுக்கே இல்லை.

தீண்டாமை ஒழித்துக்கட்டப்படுவதால் இந்துக்கள் அஞ்சுவதற்கு எதுவுமில்லை; அவர்கள் பெறக்கூடிய ஆதாயமும் எதுவுமில்லை; ஆனால் உண்மையில் அவர்கள் இழக்கக்கூடியதுதான் மிகவும் அதிகம். தீண்டாமை அமைப்பு முறையை இந்துக்களுக்கு ஒரு தங்கச் சுரங்கம் என்றே கூறவேண்டும். இதில், 24 கோடி இந்துக்கள் தங்களுக்கு ஏவலர்களாக, எடுபிடிகளாக ஊழியம் செய்வதற்கு 6 கோடி தீண்டப்படாதவர்களைப் பெற்றிருக்கின்றனர்; இந்துக்கள் தங்களது ஆடம்பரத்தையும் பகட்டாரவாரத்தையும், ஆர்ப்பாட்டத்தையும் நிலைநாட்ட இது உதவுகிறது; ஓர் எசமான வர்க்கத்திற்குரிய பெருமையையும் செருக்கையும் அகம்பாவத்தையும் கட்டி

வளர்க்க இது துணைபுரிகிறது; தனக்குக் கீழே ஓர் அடிமை வர்க்கம் இல்லையென்றால் இத்தகைய மதிப்பை, மேன்மையைக் கட்டிக் காப்பாற்ற முடியாது. இதில், 24 கோடி இந்துக்கள் கட்டாயமாக உழைப்பதற்கென 6 கோடி தீண்டப்படாதவர்களைப் பெற்றுள்ளனர்; இந்தப் பரிதாபத்துக்குரிய மக்களின் துணையற்ற, வகையற்ற, நிரா தரவான அவலநிலை காரணமாக அவர்கள் மிக அற்பக் கூலிக்கு அல்லது சிலசமயம் கூலியில்லாமலேயே உழைக்க நிர்ப்பந்திக்கப் படுகின்றனர். இதில், 24 கோடி இந்துக்கள் தெருப்பெருக்குதல், துப் புரவு செய்தல் போன்ற அசுத்தமான வேலைகளைச் செய்ய 6 கோடி தீண்டப்படாதவர்களைப் பெற்றிருக்கின்றனர்; இந்தப் பணிகளை எல்லாம் ஓர் இந்து செய்யக்கூடாது, இந்துவல்லாதவர்கள் செய்ய வேண்டும் என்று அவனது சமயம் விதித்துள்ளது; அந்த இந்துவல்லா தவர்கள் வேறு யாருமல்ல, தீண்டப்படாதவர்கள்தான். இதில், 24 கோடி இந்துக்கள் கீழ்மட்ட பணிகளில் அமர்த்தப்படுவதற்கு 6 கோடி தீண்டப்படாதவர்களைப் பெற்றிருக்கின்றனர்; இதனால் இந்துக் களுக்கு ஏகபோகமானவையாகக் கருதப்படும் உயர் பதவிகளுக் கான போட்டியில் தீண்டப்படாதவர்கள் பங்கெடுத்துக்கொள்ள முடியாதபடித் தடுக்கப்படுகின்றனர். இதில், 24 கோடி இந்துக்கள் 6 கோடி தீண்டப்படாதவர்களை பொருளாதார மந்தத்தின்போது அதிர்ச்சி தாங்கிகளாகவும், பொருளாதார ஏற்றத்தின்போது தேவை யற்ற சுமையாகவும் நடத்துகின்றனர்; இதன் காரணமாக பொரு ளாதார மந்தத்தின்போது தீண்டப்படாதவன்தான் முதலில் வேலை யிலிருந்து விலக்கப்படுகிறான், இந்து கடைசியாகத்தான் வேலை இழக்கிறான்; ஆனால் அதேசமயம் பொருளாதார ஏற்றத்தின்போதோ இந்துதான் முதலில் வேலைவாய்ப்பு பெறுகிறான், தீண்டப்படாத வனுக்கோ கடைசியில்தான் வேலைவாய்ப்பு அளிக்கப்படுகிறது.

தீண்டாமை என்பது ஒரு சமய விதிமுறை என்று பலர் நம்புகின்றனர். இது உண்மைதான். ஆனால் இது ஒரு வெறும் சமய விதிமுறை என்று மட்டுமே கருதுவது தவறு. தீண்டாமை சமய விதிமுறைக்கும் அப்பாற் செல்லுகிறது. அது அடிமைத்தனத்தையும் விட மிக மோசமான பொருளாதார விதிமுறையாகவும் உள்ளது. எது எப்படியிருந்தாலும் அடிமை முறையில் எசமான் தனது அடிமைக்கு உணவு, உடை, உறைவிட வசதிகளைச் செய்து தரவும், அவனை நல்ல நிலைமையில் பராமரிக்கவும் கடமைப்பட்டிருக்கிறான்; இல்லையேல் அடிமையின் சந்தை விலை வீழ்ச்சியடைந்துவிடும். ஆனால் தீண்டாமை முறையிலோ அப்படியல்ல; தீண்டப்படாத வனைப் பராமரிக்கும் பொறுப்பு எதையும் இந்து ஏற்றுக்கொள்வ

தில்லை. ஒரு பொருளாதார அமைப்பு முறை என்ற வகையில் தீண்டாமையானது எத்தகைய கடமைப் பொறுப்புமின்றி இஷ்டம் போல் சுரண்டுவதற்கு அனுமதிக்கிறது. எனவே, தீண்டாமை என்பது மட்டுப்படுத்தப்படாத ஒரு சுரண்டல் முறை மட்டுமல்ல, ஒரு கட்டுப் படுத்தப்படாத சுரண்டல் முறையுமாகும். இதனைக் கண்டிக்கக் கூடிய சுதந்திரமான பொதுஜன அபிப்பிராயம் இல்லாதிருப்பதும், அதனைத் தடுத்து நிறுத்தும் நேர்மை வாய்ந்த நிர்வாக அமைப்பு இல்லாதிருப்பதுமே இதற்குக் காரணம். பொதுஜன அபிப்பிராயத் துக்கு வேண்டுகோள் விடுப்பதற்கும் வழியில்லை; ஏனென்றால் பொதுஜன அபிப்பிராயம் என்பது சுரண்டும் வர்க்கத்தைச் சேர்ந்த இந்துக்களின் அபிப்பிராயமே ஆகும்; இந்த அபிப்பிராயம் சுரண் டலை ஆதரிப்பது முற்றிலும் இயல்பே. காவல் துறையோ அல்லது நீதித்துறையோ தடுப்பு நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வதற்கும் வாய்ப்பில்லை; ஏனெனில் இவர்கள் எல்லோரும் இந்துக்கள் வட்டா ரத்திலிருந்து வந்தவர்கள்; சுரண்டல்காரர்களுக்கே அவர்கள் பச்சை விளக்குக் காட்டுகின்றனர்.

தீண்டாமை விரைவில் மறைந்துவிடும் என்று நம்புபவர் கள் இந்துக்களுக்கு அது வழங்கும் பொருளாதார அனுகூலங்களைக் கருத்திற் கொண்டதாகத் தெரியவில்லை. தன்னைப் பீடித்துள்ள தீண் டாமை என்னும் அவக்கேட்டை ஒழித்துக்கட்டுவதற்கு தீண்டப்படாத வனால் எதுவும் செய்ய இயலாது. அவன் தனிப்பட்ட முறையில் இழைக்கும் எந்தத் தவறாலும் இது தோன்றுவதில்லை. தீண்டாமை என்பது இந்துவிடம் குடிகொண்டிருக்கும் ஒரு மனோபாவம். ஆத லால் தீண்டாமை மறைய வேண்டுமானால், இந்து மனம் மாற வேண்டும். அவ்வாறு அவன் மாறுவானா?

இந்துவுக்கு மனச்சான்று என்று எதுவும் இருக்கிறதா? இந்தக் கயமைத்தனமான ஒழுக்கக்கேட்டை, அக்கிரமத்திலும் அக்கிரமான இந்த அநீதியை எதிர்த்து அவன் என்றேனும் தீங்குகள் போல் மனம் குமுறி வெடித்துக் கொதித்தெழுந்தது உண்டா? தனது நியாய மான வெஞ்சினத்தை வெளிப்படுத்தியது உண்டா? தீண்டாமையை ஒரு பெரும் அநீதியாக, பழிச்செயலாகக் கருதும் அளவுக்கு அவன் மாறிவிட்டதாகவே வைத்துக்கொள்வோம்; மனிதனை கடவுளின் நிலைக்கு உயர்த்தும் அளவுக்கு அவன் நேர்மை உணர்வைப் பெற்று விட்டான் என்றே வைத்துக்கொள்வோம்; அப்போது அவன் தீண் டாமை அளிக்கும் பொருளாதார, சமூக ஆதாயங்களை விட்டுக் கொடுக்க இணங்குவானா? ஓர் இந்துவுக்கு நீதி நேர்மையின்

பால்பட்ட மனச்சான்று இருக்கிறது. அநீதியை அழித்தொழிப்பதற்கு ஓர் அறப்போரைத் தொடுக்கும்படி தார்மிக ஆவேசத்துடன் அவனை ஆர்த்தெழச் செய்யும் முடிவுக்கு வருவதை வரலாறு எவ்வகையிலும் நியாயப்படுத்தாது என்றே அஞ்சுகிறேன். அறவியலும் பொருளிய லும் முரண்படும்போது, பரஸ்பரம் ஒன்றுடன் ஒன்று மோதிக் கொள்ளும் போது வெற்றி எப்போதுமே பொருளியலின் பக்கமே இருந்து வந்திருப்பதை வரலாறு காட்டுகிறது. அதிகார நலக் கும்பல் களை நிர்ப்பந்தப்படுத்தக்கூடிய போதிய வலுமிக்க சக்திகள் இருந்தா லொழிய இந்தக் கும்பல்கள் தாமே முன்வந்து தமது அதிகாரங் களைக் கைவிட்டதை நாம் ஒருபோதும் அறிந்ததில்லை. தீண்டப் படாதவர்களால் இத்தகைய ஆற்றலை உருவாக்க முடியும் என்று எதிர்பார்க்க முடியாது. அவர்கள் வறுமையிலும் வெறுமையிலும் கல்லாமையிலும் இல்லாமையிலும் உழன்று சிதறிக் கிடக்கின் றனர். அவர்கள் தலைதூக்கத் துணிந்தால் அவர்களை எளிதாக ஒடுக்கி விட முடியும்.

இந்த அடிப்படையில் நோக்கும்போது, சுயராஜ்யம் இந்துக் களை மேலும் வலிமைமிக்கவர்களாகவும், தீண்டப்படாதவர்களை ஆதரவற்றவர்களாகவுமே ஆக்கும். மேலும், சுயராஜ்யம் இந்துக் களுக்கு ஏராளமான, தாராளமான பொருளாதார அனுகூலங்களை அளிக்கும் என்ற கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, சுய ராஜ்யம் தீண்டாமையை ஒழித்துக் கட்டுவதற்குப் பதிலாக அதற்குப் புத்துயிர் அளிக்கவே செய்யும் என்பது தெளிவு. எனவே, தீண்டாமை மறைந்து வருகிறது என்று கூறுவது வெறும் கட்டுக்கதையே தவிர, இட்டுக்கட்டப்பட்ட பச்சைப் பொய்யே தவிர வேறல்ல. அரசிய லமைப்புச் சட்டப் பாதுகாப்புகள் போன்ற தீண்டப்படாதவர்கள் முன் வைத்துள்ள கோரிக்கையைப் பரிசீலிக்கும்போது இதனைக் கணக்கி லெடுத்துக் கொள்வதும் இன்றைய எதார்த்தங்களையும் எதிர்கால எதார்த்தங்களையும் புறக்கணிப்பதும் வடிகட்டிய முட்டாள்தனமே ஆகும், அறிவு மழுக்கமே ஆகும்.



## இயல் 9

# அயல்நாட்டவருக்கு ஓர் வேண்டுகோள்

# அடிமைப்படுத்துவதற்கு கொடுங்கோன்மைக்கு சுதந்திரம் அளிக்காதீர்

## I

இந்திய அரசியல் விவகாரங்களில் ஆர்வமும் அக்கறையும் காட்டும் அயல்நாட்டினரில் ஒருசிலரைத் தவிர ஏறத்தாழ எல்லோருமே காங்கிரசை ஆதரிப்பது ஒரு பொதுவான அனுபவமாகும். இது நாட்டிலுள்ள இதர அரசியல் கட்சிகளிடம் திகைப்பையும் குழப்பத்தையும் ஏற்படுத்தியிருப்பது இயல்பே. இந்தக் கட்சிகளில் முசல்மான்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதாக உரிமை கொண்டாடும் முஸ்லீம் லீக், பிராமணரல்லாதோர் சார்பில் பேசுவதாகக் கூறிக் கொள்ளும் ஜஸ்டிஸ் கட்சி - இப்போது அது செயலற்றுப் போயிருந்தாலும்- தீண்டப்படாதோரைப் பிரதிநிதித்துவப்படுத்துவதாகக் கூறப்படும் அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் போன்றவற்றை இவ்வகையில் முக்கியமாகக் குறிப்பிடலாம். இக்கட்சிகள் யாவும் தங்களுக்கு ஆதரவு அளிக்கும்படி அயல்நாட்டவரை நெடுகிலும் வேண்டி வருகின்றன. ஆனால் அயல்நாட்டவர் இக்கட்சிகளின் வேண்டுகோளை பரிவோடு செவிமடுத்துக் கேட்கக் கூடத் தயாராக இல்லை. அயல்நாட்டவர் ஏன் காங்கிரசை ஆதரிக்கிறார்? இந்தியாவிலுள்ள மற்ற கட்சிகளை ஏன் ஆதரிக்கவில்லை? அயல்நாட்டவர் தமது இந்தப் போக்குக்கு பொதுவாக இரண்டு காரணங்களைக் கூறுவது வழக்கம். காங்கிரசை ஆதரிப்பதற்கு அவர் கூறும் ஒரு காரணம் காங்கிரசைதான் இந்தியர்களின் ஒரே பிரதிநிதித்துவ அமைப்பாகவும், இந்தியாவின் சார்பில் பேசுவதற்கும் இன்னும் சொல்லப் போனால் தீண்டப்படாதவர்களின் சார்பில் பேசுவதற்கும் கூடத் தகுதி படைத்ததாகவும் அவர் கருதுவதே ஆகும். அவர் இவ்வாறு கருதுவது சரிதானா? இவ்விதம் அவர் கருதுவதற்கு இரண்டு சந்தர்ப்பச் சூழ்நிலைகளே பிரதான காரணம் எனலாம்.

இத்தகைய கருத்து பரவுவதற்கு முதலாவதும் முக்கியமானதுமான காரணம் காங்கிரசை ஆதரித்து இந்தியப் பத்திரிகைகள் இடைவிடாது நடத்திவரும் பிரசாரமேயாகும். இந்தியப் பத்திரிகை உலகம் காங்கிரசின் எடுப்பார் கைப்பிள்ளையாக இருந்து வருகிறது; காங்கிரஸ் ஒருபோதும் தவறு செய்யாது என்ற வரட்டுச் சித்தாந்தத்தை உடும்புப் பிடியாக நம்புகிறது; காங்கிரஸ் செல்வாக்குக்கோ அல்லது காங்கிரஸ் சித்தாந்தத்துக்கோ முரணான எந்தச் செய்தியையும் எத்தகைய முக்கியத்துவம் கொடுத்தும் வெளியிடுவதில்லை என்ற கோட்பாட்டின் அடிப்படையில் அது செயல்பட்டு வருகிறது. காங்கிரஸ் தான் இந்திய மக்கள் அனைவரின் ஏகப்பிரதிநிதி என்ற அதன் இந்தக் கோஷம் இந்தியப் பத்திரிகைகளால் இடைவிடாது தொடர்ச்சியாக விளம்பரப்படுத்தப்பட்டு வந்திருக்கிறது. இதன் விளைவாய் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலுள்ள மக்கள் இந்தியாவைப் பற்றித் தெரிந்து கொண்ட ஒரே ஒரு விஷயம் காங்கிரஸ்தான் இந்தியாவிலுள்ள ஒரே பிரதிநிதித்துவ அமைப்பு என்பதாகும்.

காங்கிரஸ்தான் தீண்டப்படாதோர் உட்பட இந்தியா முழுவதையும் பிரதிநிதித்துவப்படுத்தும் ஒரே அமைப்பு என்று வெளி உலகம் ஏன் நம்புகிறது என்பதற்கு இரண்டாவது சந்தர்ப்ப சூழ்நிலை ஒன்றும் இருக்கிறது. காங்கிரஸ் கொண்டாடும் இந்த உரிமைக்கு எதிராக தீண்டப்படாதோர் சார்பில் பிரசாரம் செய்ய இயலாமல் போனதே அந்தச் சந்தர்ப்ப சூழ்நிலையாகும். தீண்டப்படாதோர் இவ்வாறு செய்ய இயலாமல் போனதற்குப் பல காரணங்கள் உண்டு. அவர்களுக்குப் பத்திரிகைகளின் ஆதரவு ஏதும் இல்லை. காங்கிரஸ் பத்திரிகைகளோ அவர்களுக்குத் தமது கதவுகளை மூடிவிட்டன. தீண்டப்படாதோருக்கு இம்மியும் விளம்பரம் தருவதில்லை என அவை உறுதிபூண்டுள்ளன. தீண்டப்படாதோரால் சொந்தமாகப் பத்திரிகை நடத்த முடியாது. விளம்பர வருவாயின்றி எந்தப் பத்திரிகையும் உயிர் வாழ முடியாது என்பது அனைவரும் அறிந்த உண்மை. வர்த்தக, தொழில் நிறுவனங்களிலிருந்துதான் விளம்பர வருவாய் கிட்ட முடியும். ஆனால் இந்தியாவிலோ எல்லா பெரிய, சிறிய தொழில் நிறுவனங்களும் காங்கிரசுடன் பின்னிப் பிணைந்துள்ளன; காங்கிரஸ் அல்லாத எந்தப் பத்திரிகைகளையும் அவை ஆதரிக்க மாட்டா. இந்தியாவின் பிரதான செய்தி விநியோக நிறுவனமான ''அசோசியேட்டட் பிரஸ் ஆப் இந்தியாவின்'' அலுவலர்கள் அனைவரும் சென்னையைச் சேர்ந்த பிராமணர்கள்; இன்னும் சொல்லப்போனால் இந்தியப் பத்திரிகை உலகம் முழுவதுமே அவர்கள் கையில்தான் இருக்கிறது; அனைவருக்கும் தெரிந்த காரணங்

களால் இவர்கள் முற்றிலும் காங்கிரஸ் ஆதரவாளர்கள்; காங்கிர சுக்கு விரோதமான எந்தச் செய்தியும் பிரதானம் பெற அவர்கள் ஒரு போதும் அனுமதிக்க மாட்டார்கள். இவை எல்லாம் தீண்டப்படாத வர்களின் சக்திக்கு அப்பாற்பட்ட காரணங்கள். எனினும் பிரசாரத் துறையில் அவர்கள் மிகவும் பின் தங்கியிருந்ததற்குப் பிரதான காரணம் பிரசாரம் செய்ய வேண்டுமென்ற ஆர்வம் அவர்களிடம் இல்லாததுதான். வெளி உலகத்தாரின் கண்களில் நாட்டின் லட்சி யத்துக்கு ஊறுவிளைவிக்கக் கூடிய எதையும் செய்துவிடக் கூடாது என்ற தேசபக்த நோக்கிலிருந்தே இந்த ஆர்வமின்மை தோன்றுகிறது என்றும் சொல்லலாம். இந்தியாவின் அரசியலில் இரண்டு வேறு பட்ட அம்சங்கள் அடங்கியுள்ளன; அயல்நாட்டு அரசியல், அரசிய லமைப்புச் சட்ட அரசியல் ஆகியவையே அந்த இரு அம்சங்கள். இந்தியாவின் அயல்நாட்டு அரசியல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தி லிருந்து இந்தியாவின் விடுதலை சம்பந்தப்பட்டது; அரசியலமைப் புச் சட்ட அரசியலோ சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்பு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதுடன் சம்பந்தப்பட்டது. உண்மை யில் இவை இரண்டும் வெவ்வேறானவை. ஆனால் இந்திய அரசி யலின் இந்த இரு அம்சங்களும் தனித்தனியானவை என்றாலும், அயல்நாட்டவர் இவற்றை வேறுபடுத்திப் பார்க்க இயலாமல் போவ தற்கும், அரசியலமைப்பு குறித்த சர்ச்சையை இந்தியாவின் அயல் நாட்டு அரசியலின் இறுதிக் குறிக்கோள் குறித்த கருத்து வேறு பாடாகத் தவறாகப் புரிந்து கொள்வதற்கும் வாய்ப்பு உண்டு. இத னால்தான் இந்த விஷயத்தில் மௌனம் சாதிக்கும் போக்கையும், காங்கிரஸ் பிரசாரம் தங்குதடையின்றி நடைபெறுவதை அனு மதிக்கும் போக்கையும் தீண்டப்படாதவர்கள் மேற்கொண்டனர். தங்களுக்கு எதிராக நடைபெறும் காங்கிரஸ் பிரசாரம் குறித்து தீண்டப்படாதவர்கள் மௌனம் சாதிப்பதற்குப் பின்னாலுள்ள அவர் களது தேசபக்த நோக்கங்களை காங்கிரஸ்காரர்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். எனினும் தீண்டப்படாதவர்களின் இந்த மௌனமும், பகிரங்க எதிர்ப்பைத் தவிர்க்க வேண்டுமென்ற அவர்களது ஆர்வமும் தீண்டப்படாதவர்கள் உட்பட இந்திய மக்கள் அனைவரையுமே காங்கிரஸ் பிரதிநிதித்துவப்படுத்துகிறது என்ற ஒரு பொதுவான கருத் தைத் தோற்றுவிக்க முக்கிய காரணமாக இருந்திருக்கிறது என்பதில் ஐயமில்லை.

காங்கிரசின் பிரதிநிதித்துவத் தன்மை தேர்தலில் சோதித்துப் பார்க்கப்படாத ஒரு சமயத்தில் அயல்நாட்டவர் காங்கிரசின் பிரசார வலையில் விழுந்தது வருந்தத்தக்கதே என்றாலும் மன்னிப்புக்குரி

யதே ஆகும். இப்போது இந்த விஷயம் 1937ல் நடைபெற்ற தேர்தல் களில் சோதித்துப் பார்க்கப்பட்டுவிட்டது. இந்தத் தேர்தல் முடிவுகள் எதைக் காட்டுகின்றன? காங்கிரசின் பிரதிநிதித்துவ இயல்பை அதன் படாடோபமான பிரசாரத்தை மட்டும் வைத்துத் தீர்மானிப்பது நியாயமல்ல என்பதையே இந்தத் தேர்தல் முடிவுகள் புலப்படுத்து கின்றன. இந்தத் தேர்தல் முடிவுகள் எதை வெளிப்படுத்துகின்றன என்பதை ஏற்கெனவே இந்த நூலின் ஆரம்பத்தில் பொதுப்படை யாகவும் அத்துடன் தீண்டப்படாதோர் சம்பந்தமாக குறிப்பாகவும் விளக்கிக் கூறியுள்ளோம். எனவே, அயல்நாட்டவர் இந்த விவரங் களை எல்லாம் கணக்கிலெடுத்துக் கொண்டு பிரச்சினையை சீர் தூக்கிப் பார்க்க வேண்டுகிறோம்; முன்னர் செய்ததுபோன்று, தீண்டப் படாதோர் உட்பட அனைவரையுமே காங்கிரஸ்தான் பிரதிநிதித்துவப் படுத்துகிறது என்ற பிரசாரத்தை இனிமேல் ஏற்க மாட்டார் என்று நம்புகிறோம்; மேலும் காங்கிரஸ் அல்லாத மற்ற கட்சிகள், குறிப்பாக தீண்டப்படாதவர்கள் இந்தியாவின் அரசியல் பிரச்சினை குறித்து வேறுபட்ட கருத்துகளைக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அவர் உணர்வார் என்றும் எதிர்பார்க்கிறோம்.

இந்தியாவின் சுதந்திரத்திற்காக காங்கிரஸ்தான் போராடி வருகிறது என்று தாம் நம்புவதால் காங்கிரசை ஆதரிப்பதாக அயல் நாட்டவர் இரண்டாவது காரணம் ஒன்றைக் கூறுகிறார். காங்கிரஸ் காரர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் மோதலில் ஈடுபட்டிருக்கின் றனர்; சட்ட மறுப்பு இயக்கங்களை நடத்தி வருகின்றனர்; அந்நிய அரசாங்கம் இயற்றிய சட்டங்களை மீறி வருகின்றனர்; வரிகொடா இயக்கங்களை முன்னின்று நடத்தி வருகின்றனர்; ஆயிரக் கணக்கில் வெஞ்சிறைகளை நிரப்பி வருகின்றனர்; ஒத்துழையாமை இயக் கத்தை ஆதரித்துப் பிரசாரம் செய்து வருகின்றனர்; பட்டம் பதவி களைத் துறந்து வருகின்றனர்; நாட்டின் சுதந்திரத்திற்காக எல்லா வகைகளிலும் தியாகம் செய்யத் தயாராக இருக்கின்றனர். இவ்வாறு தான் காங்கிரஸ்காரர்களை அயல்நாட்டினர் பார்க்கின்றனர். ஆனால் அதேசமயம் ஏனைய கட்சிகள் இவற்றிலிருந்தெல்லாம் ஒதுங்கி நிற்பதைக் காண்கின்றனர். இதிலிருந்து, காங்கிரசானது நாட்டின் சுதந் திரத்திற்காகப் போராடும் ஓர் அமைப்பு என்றும், எனவே, ''சுதந்திரப் போராட்டத்தை'' நடத்திவரும் காங்கிரசை ஆதரிப்பது சுதந்திரத்தை விரும்புவர்கள் என்ற முறையில் தமது கடமை என்றும் அயல் நாட் டவர் கருதுகிறார். சுதந்திரத்திற்கான போராட்டத்தில் ஏனைய கட்சி கள் ஏன் பங்கு கொள்ளவில்லை என்பதை வேறொரு இடத்தில் விளக்கியிருக்கிறேன். இப்போது இந்தப் பிரச்சினையின் மற்றொரு

அம்சத்தை அதாவது யாருடைய சுதந்திரத்திற்காக காங்கிரஸ் போராடி வருகிறது என்பதைப் பரிசீலிக்கலாம் என்று நினைக்கிறேன்.

## II

''சுதந்திரத்திற்காகப் போராடும்'' ஓர் அமைப்பு என்ற முறையில் காங்கிரசை ஆதரிக்கும் அயல்நாட்டவர் ஒரு நாட்டின் சுதந்திரத்திற்கும் அந்த நாட்டு மக்களது சுதந்திரத்திற்கும் இடையே உள்ள வேறுபாட்டை எண்ணிப் பார்த்ததாகத் தெரியவில்லை. இங்கு அந்த வேறுபாட்டை எடுத்துரைப்பது என் முழுநோக்கமல்ல, மாறாக, அயல்நாட்டவர் விஷயத்தைப் புரிந்து கொள்வதற்குப் பதிலாக ஏமாற்றப்படுவதற்கு உள்ளாக விட்டாலும் தவறான எண்ணத்தால் வழிநடத்திச் செல்லப்படுவதற்குத் தம்மை அனுமதிக்கிறாரே என்பதால் இந்த வேறுபாடடைப்பற்றி இங்கு குறிப்பிட்டேன். சமுதாயம், தேசம், நாடு போன்ற சொற்கள் திட்டவட்டமான, தெளிவான அர்த்தத்தைக் கொடுக்காத சொற்கள். ''தேசம்'' என்பது ஒரே சொல்லானாலும் அது பல வகுப்பினர்களை அர்த்தப்படுகிறது. தத்துவார்த்த ரீதியில் பார்த்தால் ஒரு தேசத்தை ஒரே யூனிட்டாக கருதலாம்; ஆனால் சமூகரீதியில் பார்க்கும்போது பல வகுப்பினர்கள் கொண்டதாக அதனை கருதமுடியும். ஒரு தேசத்தின் சுதந்திரம் என்று கூறும்போது, அது உண்மையாக இருக்கும் பட்சத்தில், அதில் அடங்கியுள்ள பல்வேறு வகுப்பினர்களின் சுதந்திரத்திற்கு அதிலும் குறிப்பாக அடிமைகள்போல் நடத்தப்படும் வகுப்பினர்களின் சுதந்திரத்தையும் அது உத்தரவாதம் செய்வதாக இருக்க வேண்டும். எனவே, காங்கிரஸ் இந்தியாவின் சுதந்திரத்திற்காகப் போராடி வருவதால் அது இந்திய மக்களின், அடிமட்டத்திலும் அடிமட்டத்திலுள்ள மக்களின் சுதந்திரத்திற்காகவும் போராடுகிறது என்று அர்த்தம் செய்து கொள்வது மடமையிலும் மடமையாகும்.

சுதந்திரத்திற்காக காங்கிரஸ் போராடி வருகிறதா என்ற கேள்வி யாருடைய சுதந்திரத்திற்காக காங்கிரஸ் போராடி வருகிறது என்னும் கேள்வியுடன் ஒப்பிடும்போது மிகமிகக் குறைந்த முக்கியத்துவத்தையே பெறுகிறது. இது பெரிதும் பொருத்தமான, அவசியமான விசாரணையாகும். இந்த விஷயத்தை நன்கு ஆய்ந்து ஆராய்ந்துப் பரிசீலித்து, உண்மை என்னவென்று தெரிந்து கொள்ளாமல் சுதந்திரத்தை விரும்பும் எவரும் காங்கிரசை ஆதரிப்பது பெரும் தவறு. ஆனால் இவ்வாறிருக்கும்போது காங்கிரசை ஆதரிக்கும் அயல்நாட்டவர் இத்தகைய கேள்வியை எழுப்பக்கூட அக்கறை கொள்வதில்லை. இத்

தகைய முக்கியமான பிரச்சினையில் அயல்நாட்டவர் ஏன் இத்தனை மெத்தனத்தோடு, அசட்டை மனப்பான்மையோடு நடந்து கொள்ள வேண்டும்? எனக்குத் தெரிந்தவரை, சுயாட்சி, ஜனநாயகம் போன்றவை குறித்து மேலைய நாடுகளில் நிலவும் தவறான கண்ணோட்டங்களில்தான் இத்தகைய அலட்சியத்தக்கான காரணத்தைக் காண்கிறேன்; இந்தியாவின் அரசியலில் அக்கறை காட்டும் அயல்நாட்டவருக்கு இவைதான் கையிருப்பு சரக்காகும்.

தன்னாட்சி கைவரப்பெறுவதற்கு அவசியமானதெல்லாம் குரேட்டே கூறியதுபோல் மக்களிடையே அரசியலமைப்புச் சட்டம் குறித்துத் தார்மிகப் பண்பு இருக்க வேண்டும் என்பதேயாகும் என மேலைய அரசியல் பண்டிதர்கள் கூறுகின்றனர். அரசியலமைப்புச் சட்டத் தார்மிகப் பண்பு என்பது எதைக் குறிக்கிறது? இது பற்றி குரேட்டே கூறுவதாவது:[1] ''அரசியலமைப்புச் சட்டத் தார்மிகப் பண்பு என்பது பின்வருபவற்றை அர்த்தப்படுத்துகிறது: அரசியலமைப்புச் சட்ட வடிவத்தின்பால் தலையாய மரியாதை காட்டும் மனப்பாங்கை வளர்த்துக் கொள்ள வேண்டும்; இந்த வடிவங்களின் கீழும், அவற்றின் கட்டுக்கோப்புக்குள்ளும் செயல்படும் அதிகாரிகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும்; அதேசமயம் திட்டவட்டமாக சட்ட வரம்புக்குட்பட்டு மட்டுமே வெளிப்படையாகப் பேசலாம், செயல்படலாம்; அதிகாரிகளை அவர்களுடைய பொதுப் பணிகள் சார்ந்த செயல்பாடுகளைத் தாராளமாகக் கண்டிக்கலாம், அத்தோடு ஒவ்வொரு குடிமகனது உள்ளத்திலும் முழுநிறைவான நம்பிக்கை இருக்க வேண்டும்; கட்சிகளிடையே கடுமையான போட்டி அனுமதிக்கப்படுகிறது; ஆனால் அரசியலமைப்புச் சட்ட வடிவங்கள் ஒருவரது சொந்த நோக்கில்கூட எதிராளியின் நோக்கில் குறைந்த புனிதத்தன்மை கொண்டவையாக ஆகிவிடக்கூடாது,'' மக்களிடையே இந்த பழக்க வழக்கங்கள், மனப்பாங்குகள் குடிகொண்டிருக்குமாயின் தன்னாட்சி என்பது எதார்த்தமாகிவிடும், இதற்கு மேல் வேறு எதைக் குறித்தும் கவலைப்பட வேண்டியதில்லை என்று மேலைய அரசியல் எழுத்தாளர்கள் கருதுகின்றனர். இதே போன்று, ஜனநாயகம் பற்றி எழுதும் மேலைய எழுத்தாளர்கள் ஜனநாயக லட்சியம் ஈடேறுவதற்கு அதாவது மக்களுக்காக, மக்களால் நடத்தப்படும் மக்கள் அரசாங்கம் உருவாவதற்கு வேண்டியதெல்லாம் வயது வந்தோர் வாக்குரிமையை நிலைநாட்டுவதுதான் என்று வலியுறுத்துகின்றனர். தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைத் திரும்ப அழைத்

1. குரேட்டே, கிரேக்க வரலாறு, தொகுதி III , பக்கம் 347.

தல், பொதுமக்கள் கருத்தறியும் வாக்கெடுப்பு, குறுகிய கால நாடாளு மன்றங்கள் போன்ற வேறு சில யோசனைகளும் கூறப்பட்டு, சில நாடுகளில் அவை செயல்படுத்தப்பட்டும் வருகின்றன. ஆனால் மிகப் பெரும்பாலான நாடுகளில் வயதுவந்தோர் வாக்குரிமைக்கு அதிகமாக வேறு எதுவும் தேவையில்லை என்று கருதப்படுகிறது.

இந்த இரு கண்ணோட்டங்களுமே குறைபாடுடையவை, பெரிதும் தவறான எண்ணங்களுக்கு இட்டுச் செல்லக்கூடியவை என்று கூறுவதில் எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை. எல்லா இடங் களிலும் ஜனநாயகமும், தன்னாட்சி சித்தாந்தமும் தோல்வியடைந் திருக்கின்றன என்றால் இந்தத் தவறான கண்ணோட்டங்களே அதற்குப் பெரும்பாலும் காரணம். அரசியலைப்புச் சட்ட வடிவ அர சாங்கத்தைப் பேணிக் காப்பதற்கு அரசியல் சட்டத்தார்மிகப் பண்பு கள் இன்றியமையாதவையாக இருக்கலாம். ஆனால் அரசிய லமைப்புச்.சட்ட வடிவ அரசாங்கத்தை நிலைநாட்டுவதும் மக்களின் தன்னாட்சி அரசாங்கமும் ஒன்றல்ல. இதேபோனறு, வயதுவந்தோர் வாக்குரிமை மன்னர் ஆட்சி போன்றல்லாது மக்களின் அரசாங் கத்தை அந்த வாசகத்தின் தருக்கமுறைப்பட்ட அர்த்தத்தில் உருவாக்கக் கூடும். ஆனால் இதை மட்டும் வைத்து மக்களுக்காக மக்களால் நடத்தப்படும் அரசாங்கம் என்ற அர்த்தத்தில் ஒரு ஜனநாயக அர சாங்கத்தை உருவாக்கிவிட முடியாது.

ஜனநாயகம் மற்றும் தன்னாட்சி சம்பந்தமாக மேலைய அர சியல் எழுத்தாளர்கள் தெரிவித்துவரும் கருத்துகள் பல்வேறு கார ணங்களுக்காகத் தவறானவை. முதலாவதாக, ஒவ்வொரு நாட்டி லும் வரலாற்றுச் சந்தர்ப்பச் சூழ்நிலைமைகள் காரணமாக கருவாகி உருவாகி வளர்ந்துள்ள ஓர் ஆதிக்க வகுப்பினர் இருந்து வருகின் றனர். ஆளும் வாய்ப்பைப் பெறக்கூடிய வகுப்பினர் இவர்கள்; இவ்வாறே அவர்கள் ஆளவும் செய்கிறார்கள்; அவர்கள் ஆட்சி பீடத்தை எட்டுவதற்கு வயதுவந்தோர் வாக்குரிமையோ, அரசியல் சட்ட தார்மிகப் பண்புகளோ எவ்விதத்திலும் குறுக்கே நிற்பதில்லை, அடிமட்டத்திலுள்ள வகுப்பினர் இந்த ஆதிக்க வகுப்பினரின் உறுப் பினர்களைத் தங்களது இயல்பான தலைவர்களாகக் கருதும் காரணத் தால் அவர்களையே ஆள்வோராகத் தேர்ந்தெடுக்க முன்வருகின் றனர் - இந்த மறுக்கமுடியாத உண்மையை கணக்கிலெடுத்துக் கொள்ள இந்த மேலைய அரசியல் எழுத்தாளர்கள் தவறிவிடுகின் றனர். இரண்டாவதாக, ஆதிக்க வகுப்பினர் இருந்துவருவது ஜனநாய கத்துக்கும் தன்னாட்சிக்கும் முரண்பாடானது என்பதையும், எங்கு

ஆதிக்க வகுப்பினர் ஆளும் அதிகாரத்தைத் தக்கவைத்துக் கொண் டிருக்கிறார்களோ அங்கு ஜனநாயகமும் தன்னாட்சியும் நிலவுவதாகக் கூறுவது தவறு என்பதையும், அத்தகைய ஜனநாயகமும் தன்னாட்சி யும் வெறும் பெயரளவில் ஏட்டுச் சுரைக்காயாகத்தான் இருக்கும் என்பதையும் இந்த எழுத்தாளர்கள் உணரத் தவறிவிடுகிறார்கள். மூன்றாவதாக, வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் அமைந்த அரசியலமைப்பு உருவாவதால் அன்றி, ஆளும் அதிகாரத்தைக் கைப் பற்றும் ஆற்றலை ஆதிக்க வகுப்பினர் இழந்துவிடும்போதுதான் தன் னாட்சியும், ஜனநாயகமும் மெய்யானவையாகின்றன என்பதையும் இந்த எழுத்தாளர்கள் அறிந்திருப்பதாகத் தோன்றவில்லை. நான்காவ தாக, சில நாடுகளில் வயதுவந்தோர் வாக்குரிமையைப் பயன்படுத்தி ஆதிக்க வகுப்பினரை அதிகார பீடத்திலிருந்து வீழ்த்துவதில் அடி மட்டத்திலுள்ள வகுப்பினர் வெற்றியடையக் கூடும் என்பதையும், வேறு சில நாடுகளில் ஆதிக்க வகுப்பினர் மிக வலுவாக வேரூன்றிக் கொண்டிருக்கும் காரணத்தால் அவர்களை ஆதிக்க பீடத்திலிருந்து இறங்குவதற்கு அடிமட்ட வகுப்பினருக்கு வயதுவந்தோர் வாக் குரிமை தவிர, வேறு சில பாதுகாப்புகளும் தேவைப்படும் என்பதை யும் இந்த எழுத்தாளர்கள் கவனிக்கத் தவறிவிடுகிறார்கள் என்றும் தோன்றுகிறது. இறுதியாக, ஆதிக்க வகுப்பினர் இருந்து வரும் நிலைமையில், எந்த ஒரு ஜனநாயக, தன்னாட்சித் திட்டத்தையும் பரிசீலிக்கும்போது, ஆதிக்க வகுப்பினரின் சமூகக் கண்ணோட்டத்தை யும் சமூக சித்தாந்தத்தையும் கணக்கிலெடுத்துக் கொள்வது அவசிய மாகிறது, ஏனென்றால் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கான வாய்ப்பு வசதிகளை அந்த ஆதிக்க வகுப்பினர் பெற்றிருக்கும் வரை அடிமட்டத்திலுள்ள வகுப்பினரின் சுதந்திரமும், நல்வாழ்வும் ஆதிக்க வகுப்பினரின் சமூக உணர்வையும், அவர்களது வாழ்க்கை சித்தாந் தத்தையும் பொறுத்தே இருக்கும் - மேலைய அரசியல் எழுத்தாளர்கள் இதனைக் கவனத்தில் கொள்ளத் தவறி விட்டனர்.

ஆதிக்க வகுப்பினர் இருந்துவருவது ஜனநாயகத்தையும் தன்னாட்சியையும் எதிர்நோக்கும் ஓர் அடிப்படையான, மிக முக்கிய மான உண்மை என்பதை அங்கீகரிப்பது அவசியம்; இதுதான் ஜன நாயகமும் தன்னாட்சியும் தட்டுத்தடங்கலின்றி வளர்ச்சியுறுவதை விரும்புவோர் கடைப்பிடிக்க வேண்டிய பாதுகாப்பான, எதார்த்த பூர்வமான அணுகுமுறையாக இருக்க முடியும். ஒரு சுதந்திர நாட் டில் சுதந்திரம் என்பது ஆதிக்க வகுப்பினர் மட்டுமே அனுபவிக்கக் கூடிய ஒரு தனிச்சலுகையாக இருக்குமா அல்லது அந்த சுதந்திரம் அனைவருக்கும் பொதுவானதாக எல்லோரும் அனுபவிக்கக் கூடிய

தாக இருக்குமா என்பதை முடிவு செய்வதில் இதனைக் கணக்கி லெடுத்துக் கொள்ளத் தவறுவது பெரிதும் தீங்கு விளைவிக்கக்கூடிய மிகப் பெரும் பிழையாக இருக்கும். ஆதலால் காங்கிரசை ஆதரிக் கும் அயல்நாட்டவர் காங்கிரஸ் சுதந்திரத்திற்காகப் போராடுகிறதா என்று கேட்கக் கூடாது, அதற்குப் பதிலாக பின்கண்ட கேள்வியைக் கேட்க வேண்டும் என்பது என் கருத்து: யாருடைய சுதந்திரத்திற்காக காங்கிரஸ் போராடி வருகிறது? ஆதிக்க வகுப்பினரின் சுதந்திரத் திற்காகவே காங்கிரஸ் போராடுகிறது என்பதை அயல்நாட்டவர் கண்டால் அவர் காங்கிரஸ்காரர்களிடம் பின்வருமாறு கேட்க வேண் டும்: இந்தியாவிலுள்ள ஆதிக்க வகுப்பினர் ஆளுவதற்குத் தகுதி படைத்தவர்களா? காங்கிரசை ஆதரிப்பதற்கு முன்னர் அவர் குறைந்த பட்சம் இதையாவது செய்ய வேண்டும்.

காங்கிரஸ்காரர்கள் இந்தக் கேள்விகளுக்கு என்ன பதிலளிப் பார்கள்? இது எனக்குத் தெரியாது. ஆனால் இந்தக் கேள்விகளுக்கு எவை உண்மையான பதிலாக இருக்க முடியும் என்று நான் கருது வதை மட்டும் இங்கு தருகிறேன்.

## III

முதலில், இந்தியாவில் ஆதிக்க வகுப்பினராக இருப்பது யார் என்பதைத் தெரிந்து கொள்வது நலம். இந்தியாவில் ஆதிக்க வகுப் பினர்களாக இருப்பவர்கள் பிரதானமாக பிராமணர்களே ஆவர். இன்றைய பிராமணர்கள் ஒரு காலத்தில் தங்களை பூதேவர்களாக (அதாவது இப்புவியிலுள்ள தெய்வங்களாக) வருணித்துக் கொண்ட னர்; அப்படிப்பட்டவர்கள் தாங்கள் ஆதிக்க வகுப்பினர் என வரு ணிக்கப்படுவதை இப்போது மறுதலிப்பது விந்தையாக இருக்கிறது. இந்தத் திடீர் குட்டிக்கரணத்துக்கு என்ன காரணம்? ''நீங்கள் உலக நீதிமன்றக் குற்றக்கூண்டில் ஏற்றப்படாதிருக்க வேண்டுமென்றால் உங்கள் சொந்த வகுப்பினர் நலன்களுக்கு மட்டுமே சேவை செய்வதை விடுத்து, அனைவரது நலன்களையும் பாதுகாக்க முன்வாருங்கள்'' என்று ஒவ்வொரு சமுதாயத்திலுமுள்ள அறிவுத்துறையினருக்கு மனித குலப் புனிதச் சட்டம் விதித்துள்ள கடமைப் பொறுப்பை நிறை வேற்றத் தவறி விட்டோமே என்று உணர்ந்ததால் ஏற்பட்ட மனச் சான்றின் பொறுமலா இது? குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கிறதா? அல்லது இது அவர்களது தன்னடக்கமா? இதில் எது உண்மை என்று ஊகித்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை.

பிராமணர்கள் ஆதிக்க வகுப்பினர்தான் என்பது சர்ச்சைக்கு இடமற்ற விஷயம். இது சம்பந்தமாக இரண்டு சோதனைகளைப் பயன்படுத்தலாம். ஒன்று மக்களின் மனப்போக்கு; மற்றொன்று நிர்வாகத்தில் ஆதிக்கம். இவை இரண்டைத் தவிர சிறந்ததான, தீர்மானமான வேறு சோதனைகள் இருக்க முடியும் என்று நான் கருதவில்லை. முதல் சோதனையைப் பொறுத்தவரையில் அதில் எத்தகைய ஐயத்துக்கும் இடமில்லை. மக்களின் மனப்போக்கைக் கொண்டு பார்க்கும்போது பிராமணன் புனிதமானவன். பண்டைக் காலத்தில், அவன் எத்தகைய கொடிய குற்றம் செய்தாலும் அவனைத் தூக்கிவிட முடியாது. புனிதமானவன் என்ற முறையில் அவனுக்குப் பல சட்டக்காப்புரிமைகளும் சலுகைகளும் உண்டு; இவை அடிமட்ட வகுப்பினருக்கு மறுக்கப்பட்டன. எதிலும் முதல் பலன்கள் பிராமணனையே சேரும். சம்பந்தம் என்னும் திருமண முறை நடைமுறையிலுள்ள மலபாரில் நாயர்கள் போன்ற அடிமட்ட வகுப்பினர் தங்கள் பெண்களை பிராமணர்கள் காமக்கிழத்திகளாக வைத்துக் கொள்வதை ஒரு கௌரவமாகக் கருதுகின்றனர். மன்னர்களே கூட தங்கள் ராணிகளுடன் முதலிரவை அனுபவித்துக் கன்னிக் கழிப்பதற்கு பிராமணர்களை விரும்பி அழைத்தனர்.[1] கீழ்மட்ட வகுப்பைச்

---

1. 16-ஆம் நூற்றாண்டின் மத்தியில் இந்தியாவுக்கு வந்து மலபாரில் சுற்றுப் பயணம் செய்த லுதவிகோ டி. வர்த்தேமா பின்வருமாறு கூறுகிறார்:

''இந்தப் பிராமணர்கள் யார் என்பதைத் தெரிந்து கொள்வது முறையானதும் அதேசமயம் உகந்ததுமாகும். நம்மிடையே குருமார்கள் இருப்பதுபோன்று இவர்கள்தான் சமய வினை முறைகளில் பிரதானமானவர்கள். மன்னர் ஒரு பெண்ணை தன்னுடைய மனைவியாகத் தேர்ந்தெடுத்ததும் இந்தப் பிராமணர்களில் மிகச் சிறந்தவனை மிகவும் தகுதியானவனை அழைத்து தன்னுடைய மனைவியுடன் முதலிரவைக் கழித்து கன்னிக் கழிக்கும்படிக் கேட்டுக் கொள்கிறான். அந்தப் பிராமணன் இந்தக் காரியத்தைச் செய்ய தானே விருப்பார்வத்துடன் செல்லுவதாக நினைத்துவிடாதீர்கள். இதன் பொருட்டு மன்னன் அவனுக்கு நூறு முதல் ஐநூறு டுகாட் பணம் தருவதற்குக் கடமைப்பட்டிருக்கிறான். கள்ளிக் கோட்டையில் மன்னனைத் தவிர வேறு எவரும் இவ்வாறு செய்வதில்லை. வர்த்தேமாவின் சுற்றுப் பயணம் (ஹக்லுயத் சமுதாயம்), தொகுதி I பக். 141.

ஏனைய யாத்ரிகர்கள் இந்தப் பழக்கம் மிகப் பரவலாக இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளனர். ஹாமில்டன் தமது கிழக்கிந்தியப் பயண அனுபவங்களில் பின்வருமாறு கூறுகிறார்:

''சமோரின் திருமணம் செய்து கொள்ளும்போது, மணப்பெண்ணை நம்பூரி (நம்பூத்ரி) அல்லது தலைமைப் புரோகிதன் அனுபவிக்கும்வரை அவளுடன் அவன் கூடி வாழ முடியாது. புரோகிதன் விரும்பினால் மேலும் மூன்று இரவுகளை அவளுடன் கூடி மகிழலாம். ஏனென்றால் அவளது மண உறவின் முதல் கனிகள் அவள் வழிபடும் தெய்வத்துக்கு புனித காணிக்கையாகப் படைக்கப்பட வேண்டும். பிரபுக்கள் சிலரும் புரோகிதர்கள் இதே மாதிரி தங்களுடைய பெண்களை அனுபவிப்பதை மகிழ்வோடு வரவேற்கின்றனர். சாமானிய மக்களும் தங்கள் பெண்களை புரோகிதர்களின் வீடுகளுக்கு அனுப்பும்படி நிர்ப்பந்திக்கப்படுகின்றனர். தொகுதி I, பக்கம் 308.

சேர்ந்த எந்த ஒரு நபரும் பிராமணர்களின் பாதங்களைக் கழுவிய நீரை அருந்தாமல் தனது உணவை உண்ண முடியாத காலம் ஒன்று இருந்தது. இது சம்பந்தமாக தமது குழந்தைப் பருவ நாட்களை சர் பி.சி. ரே பின்வருமாறு வருணிக்கிறார்: அந்நாட்களில் கீழ்ச் சாதிகளைச் சேர்ந்த குழந்தைகள் காலை வேளையில் கல்கத்தாவின் சாலை ஓரத்தில் கையில் நீர் நிறைந்த குவளைகளுடன் வரிசை வரிசையாக நிற்பார்கள்; அந்தப் பக்கம் ஒரு பிராமணன் எப்போது வருவான் என்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். ஏன் தெரியுமா? அந்தப் பிராமணனின் பாதங்களைக் கழுவிய நீரை வீட்டிற்கு எடுத்துச் சென்றால்தான் அவர்களுடைய பெற்றோர்கள் அதனைச் சிறிதளவு உறிஞ்சிக் குடித்துவிட்டு உணவு உண்ண ஆரம்பிப்பார்கள். பிரிட்டிஷ் ஆட்சியில் சமத்துவ சட்டக்கோட்பாடு காரணமாக இந்த உரிமைகள், காப்புரிமைகள், சலுகைகள் யாவும் முடிவுக்கு வந்தன. எனினும் இந்த உரிமைகள் தந்த அனுகூலங்கள் இன்னும் இருந்து வரவே செய்கின்றன; கீழ்ப்பட்ட வகுப்பினர்களின் கண்ணோட்டத்தில் பிராமணன் இன்னும் தனிச் சிறப்புடையவனாக, புனிதமானவனாகவே கருதப்படுகிறான்; இன்னமும் அவன் ''சாமி'' (எசமான் என்று இதற்குப் பொருள்) என்றே அழைக்கப்படுகிறான்.

---

(அடிக்குறிப்புத் தொடர்ச்சி)

இந்தப் பழக்கம் குறித்து புச்சனன் தமது பயண நூலில் பின்கண்டவாறு குறிப்பிடுகிறார்:

> ''தமூரி குடும்பப்பெண்கள் பொதுவாக நம்பூதிரிகளால் கருவுறச் செய்யப்படுகின்றனர்; அவர்கள் விரும்பினால் நாயர்களில் உயர்நிலையில் உள்ளவர்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம்; எனினும் நம்பூதிரிகள் புனிதத்தன்மை வாய்ந்தவர்களாகக் கருதப்படுவதால் எப்போதும் அவர்களுக்கு முன்னுரிமை அளிக்கப்படுகிறது.''
> பிங்கர்டெனின் பயணங்கள், தொகுதி VIII, பக்கம் 734.

மலபார் மற்றும் அஞ்செங்ரோ கெஜட்டீரின் ஆசிரியரான திரு. சி.ஏ. இன்னஸ் சென்னை அரசாங்கத்தின் அனுமதியோடு பின்வருமாறு கூறுகிறார்: மருகக்கத்தாயம் என்னும் முறையைப் பின்பற்றும் எல்லா வகுப்பினரிடையேயும் அதேபோன்று மக்கத்தாயத்தைக் கடைப்பிடிப்போரில் பலரிடையேயும் ''தாலிகட்டும் திருமணம்'' என்னும் மற்றொரு ஏற்பாடு நடைமுறையில் இருந்து வருகிறது. மலையாளிகளின் திருமண பழக்க வழக்கங்களிலேயே இது நூதனமானது, தனித்தன்மை வாய்ந்தது என வருணிக்கப்படுகிறது. இதன்படி, ஒரு யுவதி பூப்புப் பருவம் எய்துவதற்கு முன்னர் அவள் கழுத்தில் தாலி (தங்கத்தாலோ அல்லது வேறு ஏதேனும் உலோகத்தாலோ செய்யப்பட்ட பதக்கம் போன்ற ஒரு சிறு ஆபரணம் நூல்கயிற்றில் கட்டப்படுவது) கட்டப்படுகிறது. அதே சாதியை அல்லது உயர் சாதியைச் சேர்ந்த ஒருவனால் இவ்வாறு தாலி கட்டப்படுகிறது. இவ்வாறு செய்த பிறகுதான் அந்த இளம் பெண் சம்பந்தம் செய்து கொள்ள முடியும். தாலிகட்டுபவனுக்கு அல்லது மணவாளனுக்கு (மணமகன்) அந்தப் பெண்ணுடன் கூடி வாழும் உரிமை அளிப்பதற்காகவே இந்தச்சடங்கு செய்யப்படுவதாக பொதுவாகக்கருதப்படுகிறது. கீழ்ச்சாதிப் பெண்களை முதலில் அனுபவிப்பதற்கு பூதேவர்களும் (அதாவது பிராமணர்களும்) சத்திரியர்களும் உரிமை கொண்டாடி வந்ததிலிருந்தும் இந்த வழக்கம் தோன்றியிருக்கக் கூடும், தொகுதி I, பக்கம் 101.

இரண்டாவது சோதனையும் இதுபோன்றே ஐயத்துக்கிட மற்ற உண்மையை வெளிப்படுத்துகிறது. உதாரணத்துக்கு சென்னை மாகாணத்தை மட்டும் எடுத்துக் கொள்வோம். 17 ஆவது அட்டவணை யைப் பாருங்கள் (பக்கம் 335). 1943ல் அரசு பதிவு பெற்ற பதவிகளில் பிராமணர்களும் ஏனைய வகுப்பினர்களும் பெற்றுள்ள பதவிகளின் எண்ணிக்கையை அது காட்டுகிறது.

இதர மாகாணங்களின் புள்ளி விவரங்களும் இதனையே உறுதிப்படுத்துகின்றன. எனினும் அவற்றை எல்லாம் இங்கு எடுத்துக் காட்ட வேண்டிய அவசியம் இல்லை. பிராமணர்கள் தாங்கள் ஆதிக்க வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்று உரிமை கொண்டாடினாலும் சரி, கொண்டாடாவிட்டாலும் சரி, நிர்வாகத்தை அவர்கள் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறார்கள் என்ற உண்மையும், அதே போன்று கீழ்மட்ட வகுப்பினர்கள் அவர்களது உச்ச நிலையை ஏற்றுக் கொண்டிருக்கின்றனர் என்றஉண்மையும் நாம் கூற வந்த விஷயத்தை நிலைநாட்டப் போதுமானவையாகும்.

ஆதிக்க வகுப்பு அந்தஸ்தை தனக்கு அளிக்கத் தயாராக இருப் பவர்களும், தனக்கு அடிபணிந்து ஒத்துழைக்கக் கூடியவர்களுமான ஏனைய வகுப்பினரை பிராமணன் எப்போதுமே தன்னுடைய கூட் டாளிகளாக வரித்துக் கொண்டு வந்திருக்கிறான் என்பதை வரலாறு காட்டுகிறது. பண்டைக் காலத்திலும் மத்தியக் காலத்திலும் போர்வீரர் வகுப்பினரான சத்திரியர்களுடன் அவன் இத்தகைய நேச உறவை வளர்த்துக் கொண்டு வந்திருக்கிறான். இந்த இரு வகுப்பினரும் சேர்ந்து பொது மக்களை அடக்கி ஆண்டு வந்திருக்கின்றனர்; இன்னும் சொல்லப்போனால் பிராமணன் தனது எழுதுகோலைக்கொண்டும், சத்திரியன் தனது வாளைக் கொண்டும் அவர்களைப் பணியவைத்து வந்திருக்கின்றனர் என்று கூற வேண்டும். தற்போது, பனியாக்கள் எனப் படும் வைசிய வகுப்பினருடன் பிராமணன் கூட்டுறவை வளர்த்துக் கொண்டு வருகிறான். இந்தக் கூட்டுறவு சத்திரியனிடமிருந்து பனியாவுக்கு மாறியது முற்றிலும் இயல்பே. பெரு வணிகம் கொடி கட்டிப் பறந்து வரும் இக்காலத்தில் பணம் வாளைவிட வலிமை மிக்கது. வகுப்புகளின் உறவில் இந்த மாற்றம் ஏற்பட்டிருப்பதற்கு இதுவும் ஒரு காரணம். இரண்டாவது காரணம் அரசியல் எந்திரத்தை செம்மையுற இயக்குவதற்குப் பணம் இன்றியமையாததாக இருப்ப தாகும். பனியாவிடமிருந்தே பணம் கிடைக்க முடியும். பனியாக்கள் தான் காங்கிரசுக்குப் பிரதானமாக நிதி உதவி அளித்து வருகின்றனர். திரு. காந்தி ஒரு பனியாவாக இருப்பதும், அரசியலில் முதலீடு

## அட்டவணை - 17

| வகுப்பினர் | மக்கள் தொகை லட்சத்தில் | மக்கள் தொகை சத வீதம் | அரசு பதிவு பெற்ற மொத்த பதவிகளில் (2,200) ஒவ்வொரு வகுப்பினரும் பெற்றுள்ள பதவிகளின் எண்ணிக்கை | பணி நிய மனங்களின் சதவிகிதம் | அரசு பதிவு பெறாத பதவிகள் — ரூ. 100க்கு மேல் மொத்தம் 7,500 — ஒவ்வொரு வகுப்பினரும் பெற்றுள்ள பதவிகளின் எண்ணிக்கை | ரூ. 100க்கு மேல் மொத்தம் 7,500 — ஒவ்வொரு வகுப்பினரும் பெற்றுள்ள பதவிகளின் சதவிகிதம் | ரூ. 35க்கு மேல் மொத்தம் 20,732 — ஒவ்வொரு வகுப்பினரும் பெற்றுள்ள பதவிகளின் எண்ணிக்கை | ரூ. 35க்கு மேல் மொத்தம் 20,732 — ஒவ்வொரு வகுப்பினரும் பெற்றுள்ள பதவிகளின் சதவிகிதம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) |
| பிராமணர்கள் | 15 | 3 | 820 | 37 | 3,280 | 43.73 | 8,812 | 42.4 |
| கிறித்தவர்கள் | 20 | 4 | 190 | 9 | 750 | 10 | 1,655 | 8.0 |
| முகமதியர்கள் | 37 | 7 | 150 | 7 | 497 | 6.63 | 1,624 | 7.8 |
| தாழ்த்தப்பட்ட வகுப்பினர் | 70 | 14 | 25 | 1.5 | 39 | .52 | 144 | .69 |
| பிராமணரல்லாதோர் — முன்னேறிய பிராமணரல்லாதோர் | 113 | 22 | 620 | 27 | 2,543 | 33.9 | 8,440 | 40.6 |
| பிராமணரல்லாதோர் — பின்தங்கிய வகுப்பினர் | 245 | 50 | 50 | 2 | | | | |
| ஆசியரல்லாதோரும் ஆங்கிலோ-இந்தியர்களும் | - | - | - | - | 372 | 5.0 | 83 | .4 |
| இதர வகுப்பினர் | - | - | - | - | 19 | .5 | 24 | .11 |

செய்யப்படும் பணம் நல்ல ஆதாயத்தை அளிக்கும் என்று அவன் உணர்ந்திருப்பதும்தான். இது விஷயத்தில் எவருக்கேனும் ஐயமிருக்கு மாயின் 1942 ஜூன் 6ஆம் தேதி திரு. லூயி பிஷரிடம் திரு. காந்தி என்ன கூறினார் என்பதைப் படித்துப் பார்ப்பது நலம். பிஷர் கூறு கிறார்:[1]

''காங்கிரஸ் கட்சியைப் பற்றி அவரிடம் கேட்பதற்கு ஏராளமான கேள்விகள் இருப்பதாக நான் கூறினேன். காங் கிரஸ் பெரு முதலாளிகளின் ஆதிக்கத்தில் இருக்கிறதென்றும், திரு. காந்தி பம்பாய் மில் முதலாளிகளின் ஆதரவைப் பெற் றிருக்கிறார் என்றும், அதனால் அவர் எவ்வளவு பணம் கேட் டாலும் அவர்கள் அள்ளி வாரித் தருகிறார்கள் என்றும் உயர் நிலையிலுள்ள பல பிரிட்டிஷ்காரர்கள் என்னிடம் கூறியதை நினைவு கூர்ந்தேன். 'இந்தக் கூற்றுகளில் எந்த அளவுக்கு உண்மை இருக்கிறது' என்று அவரிடமே கேட்டேன்.''

''துரதிர்ஷ்டவசமாக அது உண்மைதான்' என்று சர்வ சாதாரணமாகக் கூறினார். 'காங்கிரஸ் தனது பணியைச் செய்ய அதனிடம் போதிய பணமில்லை, ஒவ்வொரு உறுப் பினரிடமிருந்து ஆண்டுக்கு நான்கு அணாக்கள் (சுமார் எட்டு சென்ட்டுகள்) வசூலித்து கட்சியை நடத்தலாம் என்று ஆரம் பத்தில் நினைத்தோம். ஆனால் அது காரியசாத்தியமாக வில்லை.'''

'''காங்கிரசின் வரவு செலவுத் திட்டத்தில் செல்வந்தர் களின் பங்கு எவ்வளவு என்று' கேட்டேன்.'''

'''அநேகமாக எல்லாம் அவர்கள் பங்குதான்' என்று அவர் கூறினார். 'உதாரணமாக இந்த ஆசிரமத்தில் நாங்கள் இப்போது செய்வதைவிட மிகச் சிக்கனமாக வாழ முடியும், மிகக் குறைவாக செலவிட முடியும். ஆனால் நாங்கள் அவ் வாறு செய்வதில்லை. ஏனென்றால் எங்களுடைய செல்வந் தர்களான நண்பர்களிடமிருந்து எங்களுக்குப் பணம் வரு கிறது.''

1. காந்தியுடன் ஒரு வாரம் (1943), பக்கம் 41.

இந்தக் காரணத்துக்காக பனியாவை ஆதிக்க வகுப்பு அந்தஸ்திலிருந்து கீழே இறக்குவது பிராமணனுக்கு சாத்தியமில்லை. உண்மையில், பனியாவுடன் வெறும் செயல் முறையிலான உறவை மட்டுமன்றி, நேச பூர்வமான உறவையும் பிராமணன் வளர்த்து வருகிறான் என்றே கூற வேண்டும். இதன் விளைவாக இன்று இந்தியாவில் ஆதிக்க வகுப்பினர் பிராமணன் - சத்திரியன் என்றிருந்தது மாறி பிராமணன் - பனியா என்றாகிவிட்டது.

ஆதிக்க வகுப்பினர் இருந்து வருவதை கூறுவது மட்டுமே எல்லாவற்றையும் விளக்கி விட்டதாகாது. இதில் குறிப்பிடத்தக்கது என்னவென்றால், இந்தியாவிலுள்ள ஆதிக்க வகுப்பின் உறுப்பினர்கள் தாங்கள் ஆதிக்க வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்பதையும், தாங்கள் மட்டுமே நாட்டை ஆளப்பிறந்தவர்கள் என்பதையும் முற்றிலும் உணர்ந்திருப்பதேயாகும். காலஞ்சென்ற திரு. திலகர் தாம் ஒரு பிராமணர் என்பதையும், ஆதிக்க வகுப்பைச் சேர்ந்தவர் என்பதையும் என்றுமே மறந்ததில்லை. பண்டித ஜவஹர்லால் நேரு, அவருடைய சகோதரியான திருமதி விஜயலட்சுமி பண்டிட் ஆகியோர் விஷயமும் இதேபோன்றதுதான்.[1] திரு. வல்லபாய் பட்டேலும் இதற்கு விதிவிலக்கல்ல; அவரும் தாம் ஆதிக்க வகுப்பைச் சேர்ந்த பெருமிக உணர்வைப் பெற்றிருந்தார். திரு. திலகர் சுயராஜ்ய இயக்கத்தின் தந்தை எனப் போற்றப்படுகிறார். பண்டித நேருவும் திரு. வல்லபாய் பட்டேலும் காங்கிரஸ் மேலிடத்தில் பிரதான இடங்களை வகிப்பவர்கள். இவர்களும் இவர்களைப் போன்றவர்களும் தாங்கள் ஆதிக்க

1. திரு. ஒய்.ஜி. கிருஷ்ண மூர்த்தி எழுதிய பண்டித ஜவஹர்லால் நேருவின் வாழ்க்கை வரலாற்று நூலுக்கு திரு. பட்டாபி சீத்தாராமய்யா அளித்த முன்னுரையில் பண்டித நேரு தாம் ஒரு பிராமணர் என்பதை நன்கு உணர்ந்திருந்தார் என்று கூறுகிறார். பண்டித நேரு ஒரு சோஷலிஸ்டு என்றும் சாதிஅமைப்பில் அவருக்கு நம்பிக்கை இல்லை என்றும் எண்ணியிருக்கக்கூடிய பலரை இது நிச்சயம் அதிர்ச்சிக்குள்ளாக்கவே செய்யும். ஆனால் திரு. பட்டாபி சீத்தாராமய்யா தாம் என்ன கூறுகிறோம் என்பதைத் தெரிந்திருக்க வேண்டும். தாம் ஒரு பிராமணர் என்பதை பண்டித நேரு உணர்ந்திருந்தார் என்பது மட்டுமல்ல, அவருடைய சகோதரி திருமதி விஜயலட்சுமி பண்டிட்டும் இவ்வாறே தாம் ஒரு பிராமணர் என்பதை உணர்ந்திருந்தார் என்றே தோன்றுகிறது. 1940 டிசம்பரில் டில்லியில் கூடிய அகில இந்திய மாதர் மாநாட்டில், குடிமதிப்புக் கணக்கில் ஒருவர் தாம் இந்த சாதியைச் சேர்ந்தவர் என்பதைக் கூறக்கூடாது என்னும் பிரச்சினை விவாதத்திற்கு வந்தது. திருமதி பண்டிட்டுக்கு இந்தக் கருத்தில் உடன்பாடில்லை, தமது உடலில் பிராமண இரத்தம் ஓடுவது குறித்துத் தாம் ஏன் பெருமிதம் கொள்ளக்கூடாது என்பதற்கும், குடிமதிப்புக் கணக்கில் தம்மை ஒரு பிராமணத்தியாக ஏன் அறிவித்துக் கொள்ளககூடாது என்பதற்கும் தாம் எத்தகைய காரணத்தையும் காணவில்லை என்று அவர் கூறினார். ''ராஸ்த் ரஹபார்'' என்னும் குஜராத்தி வார இதழில் 1945 ஜனவரி 14-ஆம் தேதி திரு. ஜே.சி. சஞ்சனா எழுதிய ''அரசியலில் அர்த்தமும் அனர்த்தமும்'' என்னும் கட்டுரையைக் காண்க. தொடர் எண். XII.

வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்ற உணர்வைக் கொண்டிருந்தது மட்டு மல்லாமல், கீழ்த்தட்டு வகுப்பினர் வெறுக்கத்தக்கவர்கள் என்றும், அவர்கள் அடித்தட்டில்தான் இருக்க வேண்டும் என்றும், ஆட்சிக்கு வருவதற்கு அவர்கள் ஒருபோதும் ஆசைப்படக்கூடாது என்றும் கருதி வந்தனர். இத்தகைய கருத்துகளை அவர்கள் பகிரங்கமாகவே வெளி யிட்டனர்; இதற்காக அவர்கள் சிறிதும் வெட்கப்படவோ, கழி விரக்கம் கொள்ளவோ இல்லை. சட்டமன்றங்களில் தங்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும் என்று 1918ல் பிராமணரல்லாதோரும் பிற்பட்ட வகுப்பினரும் ஓர் இயக்கத்தைத் தொடங்கினர். அச்சமயம் ஷோலாப்பூரில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் திரு. திலகர் பேசும்போது, எண்ணெய் எடுக்கும் செட்டி யார்களும், புகையிலைக் கடைக்காரர்களும், சலவையாளர்களும், அவர்களைப் போன்ற ஏனையோரும் - இதுதான் பிராமணரல்லா தோரையும் பிற்பட்ட வகுப்பினரையும் பற்றிய அவரது வருணனை யாகும் - சட்டமன்றத்துக்குச் செல்ல வேண்டுமென்று ஏன் ஆசைப் படுகிறார்கள் என்பதை தம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை என்று கூறினார். தமது அபிப்பிராயத்தில், சட்டத்திற்குக் கீழ்ப்படிந்து நடந்து கொள்வதுதான் அவர்களது கடமையே தவிர சட்டங்களை இயற்றும் அதிகாரங்களைப் பெறுவதற்கு அவர்கள் விழையக்கூடாது என்னும் குறிப்பிட்டார். 1942ல் லின்லித்கோ பிரபு இந்திய மக்களில் பல்வேறு பகுதியினரையும் பிரதிநிதித்துவப்படுத்தும் 52 முக்கிய மான இந்தியப் பிரமுகர்கள்ளைத் தமது இருப்பிடத்துக்கு அழைத்தார்; போர் முயற்சியில் அனைத்து இந்தியர்களது ஒத்துழைப்பையும் ஒத்துணர்வையும் ஈடுபடுத்தும் வகையில் மத்திய அரசாங்கத்துக்கு பொது மக்களின் ஆதரவை மேலும் திரட்டுவதற்கு என்ன வழிவகை களை மேற்கொள்ளலாம் என்பது குறித்து இந்தப் பிரமுகர்களுடன் கலந்தாலோசிப்பதே இதன் நோக்கம். இவ்வாறு அழைக்கப்பட்ட வர்களில் ஷெட்யூல்டு வகுப்புகளைச் சேர்ந்தவர்களும் இருந்தனர். இத்தகைய கீழ்த்தரமானவர்களுக்கு வைசிராய் அழைப்பு விடுத் ததை திரு. வல்லபாய் பட்டேலால் சகித்துக் கொள்ள முடியவில்லை. இந்த நிகழ்ச்சி முடிந்த பிறகு ஆமதாபாத்தில் நடைபெற்ற பொதுக் கூட்டம் ஒன்றில் பேசிய திரு. வல்லபாய் பட்டேல் பின்கண்டவாறு கூறினார்:[1]

3. அரசியலில் அர்த்தமும் அனர்த்தமும் என்னும் கட்டுரையில் திரு. சஞ்சனாவின் மேற்கோள்.

''வைசிராய் இந்துமகாசபைத் தலைவர்களை அழைத்தார், முஸ்லீம் லீக் தலைவர்களை அழைத்தார், அத்தோடு காஞ்சிகள் (எண்ணெய் எடுப்போர்), மோச்சிகள் (செருப்பு செப்பனிடும் செம்மான்கள்) போன்றோரையும் கூட அழைத்தார்.''

திரு. வல்லபாய் பட்டேல் மனக்காழ்ப்பும் வன்மமும் சுடுசொல்லும் கொண்ட தமது சொற்களில் காஞ்சிகளையும், மோச்சிகளையும் மட்டுமே குறிப்பிட்ட போதிலும், இந்த நாட்டின் அடிமட்ட வகுப்புகளிடம் ஆதிக்க வகுப்புகளும் காங்கிரஸ் மேலிடமும் கொண்டுள்ள பொதுவான வெறுப்பையும் இகழ்ச்சியையுமே அவருடைய உரை குறிக்கிறது என்பதில் அணுவளவும் ஐயமில்லை. மேலும், ஆதிக்க வகுப்பினரும் காங்கிரஸ் மேலிடமும் கொண்டுள்ள இந்த விபரீதப் போக்கை தேர்தல் பிரசாரத்தின்போது நடைபெற்ற சில நிகழ்ச்சிகளிலிருந்தும் தெரிந்து கொள்ளலாம். அவை ஆதிக்க வகுப்பினரதும் காங்கிரசினதும் உண்மை சொரூபத்தை அம்பலப்படுத்துபவையாகவும், சில கசப்பான உண்மைகளை வெளிப்படுத்துபவையாகவும் இருப்பதால் அவற்றை இங்கு விசேடமாகக் குறிப்பிடுவது முற்றிலும் பொருத்தமானதாக இருக்கும்.

திரு. காந்தி 1919ல் காங்கிரசைக் கைப்பற்றியதிலிருந்து சுயராஜ்யக் கோரிக்கைக்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்தை இணங்க வைக்கும் நிர்ப்பந்த நடவடிக்கைகளில் ஒன்றாக சட்டமன்றப் பகிஷ்காரத்தை காங்கிரஸ்காரர்கள் கருதி வந்துள்ளனர். இந்தக் கொள்கையின்படி, தேர்தல் நடைபெறும் ஒவ்வொரு சமயத்திலும் அதில் கலந்து கொள்வதில்லை என்று காங்கிரஸ் தீர்மானித்து வந்தது; காங்கிரஸ் சார்பில் வேட்பாளர் எவரையும் நிறுத்தாததோடு, சுயேச்சை வேட்பாளராகப் போட்டியிட முன்வரும் எந்த இந்துவையும் எதிர்த்துக் கடுமையான பிரசாரமும் செய்து வந்தது. இத்தகைய கொள்கையின் தகுதி பற்றி எவரும் சர்ச்சை செய்ய வேண்டியதில்லை. ஆனால் இந்துக்கள் சுயேட்சை வேட் பாளர்களாகப் போட்டியிடுவதைத் தடுப்பதற்கு காங்கிரஸ் கையாண்ட வழிமுறைகள்' என்ன? சட்டமன்றங்களை இகழ்ச்சிக்கும் ஏளனத்துக்கும், அவமதிப்புக்கும் வெறுப்புக்கும் உரியவையாக சித்தரித்துக் காட்டும் கீழ்த்தரமான வழிகளை அவர்கள் கையாண்டனர். இதன்படி, பல்வேறு மாகாணங்களில் விதம் விதமான விளம்பர அட்டைகளைத் தாங்கிச் செல்லும் ஊர்வலங்களை காங்கிரஸ் நடத்தத் தொடங்கிற்று; ''சட்டமன்றங்களுக்கு யார் செல்வார்கள்? சவரம்

செய்பவர்களும், செருப்புத் தைப்பவர்களும், குயவர்களும், தோட்டி களும்தான் அங்கு செல்வார்கள்'' என்ற சுலோகங்கள் அந்த அட்டை களில் எழுதப்பட்டிருந்தன. ஊர்வலத்தில் செல்லும் ஒருவர் சுலோ கத்தின் ஒரு பகுதியாக மேற்கண்ட கேள்வியை உரத்த குரலில் கேட்பார்; கூட்டத்தினர் சுலோகத்தின் இரண்டாவது பகுதியை இதற்குப் பதிலாக முழக்கமிடுவர். எவரும் தேர்தலில் நிற்காதபடி தடுப்பதற்கு இது போதுமானதல்ல என்பதை காங்கிரஸ்காரர்கள் கண்டபோது, இவற்றைவிட கடுமையான நடவடிக்கைகளை எடுப்ப தெனத் தீர்மானித்தனர். சவரம் செய்வோர், குயவர்கள், தோட்டி கள் போன்றோருடன் சேர்ந்து சட்டமன்றங்களில் தாங்கள் அமர நேரிடும் என அஞ்சி கௌரவமானவர்கள் தேர்தல்களில் போட்டி யிட மாட்டார்கள் எனக் காங்கிரஸ் நம்பிற்று. இந்த நம்பிக்கை யோடு, இந்தக் கீழான வகுப்புகளைச் சேர்ந்த வேட்பாளர்களை காங்கிரஸ் சார்பில் நிறுத்தி அவர்களை வெற்றி பெறச் செய்யும் அளவுக்கும் காங்கிரஸ் சென்றது. காங்கிரசின் இந்த அருவருப்பான நடத்தைக்கு சான்று கூறும் சில நிகழ்ச்சிகளை இங்கு கூறுவது பொருத்தமாக இருக்கும். 1920 தேர்தலில் மத்திய மாகாண சட்ட மன்றத்திற்கு ஒரு செருப்புத் தைக்கும் தொழிலாளியைத் தேர்ந் தெடுத்தது.[1] 1930ஆம் ஆண்டுத் தேர்தலில் மத்திய மாகாணங்களில் இரண்டு செருப்புத் தைக்கும் தொழிலாளர்களையும்[2], ஒரு பால்கார ரையும்[3], ஒரு சவரத் தொழிலாளியையும்[4], பஞ்சாபில் ஒரு தோட்டி யையும்[5] காங்கிரஸ்காரர்கள் தேர்ந்தெடுத்தனர். 1934ல் மத்திய சட்டமன்றத்திற்கு ஒரு குயவரை[6] காங்கிரஸ் தேர்ந்தெடுத்து அனுப் பிற்று. இதெல்லாம் பழங்கதை என்று கூறலாம். இந்தக் கருத்து சரி யானதல்ல என்பதை மெய்ப்பிக்க 1943ல், பம்பாயின் புறநகர்ப் பகுதி யான அந்தேரியில் நடைபெற்ற நகரசபைத் தேர்தல்களில் என்ன நிகழ்ந்தது என்பதை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். நகரசபைத் தேர்தல்களை மற்றவர்கள் பகிஷ்கரிக்கச் செய்ய வேண்டும் என்ற நயவஞ்சக நோக்கத்துக்காக காங்கிரஸ் ஒரு சவரத் தொழிலாளியை வேட்பாளராக நிறுத்திற்று.

1. ஃபகுவா ரோஹிதாஸ்.
2. குரு கோரிசைன் அகம்தாஸ் மற்றும் பலராஜ் ஜைஸ்வார்.
3. சுன்னு
4. அர்ஜுன்லால்
5. பன்ஸிலால் சௌதாரி
6. பகத் சண்டி மால்கோலா

எத்தகைய வெங்கொடுமை! அயர்லாந்திலுள்ள சின் ஃபெயின் இயக்கமும் கூட பிரிட்டிஷ் பாராளுமன்றத்தைப் பகிஷ்கரிக்கவே செய்தது. ஆனால் தங்கள் நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்வதற்காக தங்கள் நாட்டு மக்களையே அவர்கள் இவ்வாறு அருவருக்கத்தக்க முறையில் பயன்படுத்திக் கொண்டார்களா? 1930ல் இந்தியாவில் நடைபெற்ற சட்டமன்றப் பகிஷ்கார இயக்கம் ஒருவகையில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். நாம் மேலே குறிப்பிட்ட சம்பவங்கள் நடைபெற்ற 1930ஆம் வருட மாகாண சட்டமன்றத் தேர்தல்களின் போதுதான் திரு. காந்தியின் 1930 ஆம் வருட உப்பு சத்தியாக்கிரகமும் நடைபெற்றது! அச்சமயம் எவ்வாறு திரு. காந்தி சில கோரிக்கைகளை வைசிராய் இர்வின் பிரபுவிடம் முன்வைத்து அவை குறிப்பிட்ட கால கெடுவுக்குள் நிறைவேற்றப்பட வேண்டுமென வற்புறுத்தினார் என்பதையும், இக்கோரிக்கைகளை வைசிராய் ஏற்காவிட்டால் சட்ட மறுப்பு இயக்கம் நடத்த எவ்வாறு திரு. காந்தி தீர்மானித்தார் என்பதையும், இது சம்பந்தமான தனது எச்சரிக்கையை வைசிராயிடம் தெரிவிக்க எவ்வாறு திரு. காந்தி ஓர் ஆங்கிலேயரைத் தேர்ந்தெடுத்தார் என்பதையும், எவ்வாறு திரு. காந்தி தனது தாக்குதலுக்கு உப்புச் சட்டத்தைத் தேர்ந்தெடுத்தார் என்பதையும், எவ்வாறு அவர் தண்டியை போராட்டக் களமாகப் பொறுக்கியெடுத்தார் என்பதையும், எவ்வாறு அவர் இந்த இயக்கத்துக்குத் தாமே தலைமை தாங்க முடிவு செய்தார் என்பதையும், எவ்வாறு அவர் ஆமதாபாத்திலுள்ள தமது ஆசிரமத்திலிருந்து ஆடம்பர ஆர்ப்பாட்டமாக பவனி புறப்பட்டார் என்பதையும், எவ்வாறு ஆமதாபாத் பெண்மணிகள் அவருக்கு ஆரத்தி எடுத்தும், நெற்றியில் வெற்றித் திலகமிட்டும் அவரை வழியனுப்பி வைத்தார்கள் என்பதையும், இந்தியாவுக்கு சுதந்திரம் பெற்றுத் தருவதற்கு குஜராத் மட்டுமே கூடப் போதும் என்று எவ்வாறு திரு. காந்தி அவர்களுக்கு உறுதி கூறினார் என்பதையும், சுயராஜ்யம் கிடைக்காமல் தாம் ஆமதாபாத்துக்குத் திரும்பப் போவதில்லை என்று எவ்வாறு திரு. காந்தி பிரகடனம் செய்தார் என்பதையும் எதிர்கால காங்கிரஸ் வரலாற்றாசிரியர்கள் பதிவு செய்வார்கள் என்று நம்புகிறேன். அதேசமயம் இன்னொரு விஷயத்தையும் அவர்கள் குறிப்பிடத்தவற மாட்டார்கள் (காங்கிரசின் அதிகாரப்பூர்வமான வரலாற்றாசிரியரான டாக்டர் பட்டாபி சீத்தாராமய்யா இதைச் செய்யத் தவறிவிட்டார்) என்று எதிர்பார்க்கிறேன்; அதாவது மக்களின் சார்பில் மக்களுக்காக நாங்கள் சுயராஜ்யப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறோம் என்று காங்கிரஸ்காரர்கள் ஒருபுறம் கூறிக் கொண்டு இன்னொருபுறம் இதே ஆண்டில் அதே மக்களை வெறுத்தொதுக்கப்

பட வேண்டியவர்களாக, தவிர்க்கப்பட வேண்டியவர்களாகப் பகிரங்கமாப் படம்பிடித்துக் காட்டி அவர்களுக்கு எதிராக கொடிய அட்டூழியங்கள் புரிந்து வருகிறார்கள் என்பதையும் அவர்கள் பதிவு செய்யத் தவற மாட்டார்கள் என்று நம்புகிறேன்.

கீழ்மட்ட வகுப்பினர்கள் பால் இந்தியாவிலுள்ள ஆதிக்க வகுப்பினர்கள் காட்டும் மனப்பாங்கு இத்தகையதாகும்.

## IV

இந்த ஆதிக்க வகுப்பினர்களின் கீழ் இந்தியாவின் கீழ்மட்ட வகுப்பினர்களின் கதி எப்படி இருக்கும்?

சுயராஜ்யம் உதித்ததும் கீழ்மட்ட வகுப்பினர்களுக்கு - காங்கிரஸ் மக்கள் என்ற கூறுகிறது, ஆதிக்க வகுப்பினர்களால் அடிமைகள் போல் நடத்தப்படும் அடிமட்ட வகுப்பினர் என்றே உண்மையில் அவர்களைக் குறிப்பிட்டிருக்க வேண்டும் - மந்திரத்தில் மாங்காய் விழுவது போல் பல அற்புதங்களை நிகழ்த்தப் போவதாக படாடோபமாக காங்கிரஸ் பறைசாட்டுகிறது. புரட்சிகர மாற்றங்களைச் செய்யவே தான் விரும்புவதாகவும், ஆனால் அதற்கான அதிகாரம் தன்னிடம் இல்லை என்னும், எனவே சுயராஜ்யத்திற்காகக் காத்திருக்க வேண்டும் என்றும் அது பசப்புகிறது. இந்த வெறும் வாய்ச்சவடால் பேச்சுதான் அப்பாவியான அயல்நாட்டவரை எளிதில் ஏமாற்றுவதற்குப் பயன்படுத்துகிறது. இந்தக் கூற்றுக்குப் பின்னாலுள்ள சொற்சிலம்பத்தையும் வீம்புரையையும் ஒதுக்கி வைத்துவிட்டு, ஒருவர் பின்வருமாறு வினவக்கூடும்: இந்தியா முழு அரசுரிமை படைத்த ஒரு சுதந்திர நாடாக ஆன பிறகு உண்மையில் என்ன நிகழும்? எது எப்படியிருப்பினும் ஒன்று மட்டும் நிச்சயம். சுதந்திரம் என்னும் மந்திரக்கோலால் ஆதிக்க வகுப்பு மறைந்துவிட மாட்டாது. அது என்றும் போல் சிரஞ்சீவியாக இருக்கும். அது மட்டுமல்ல, கொடுங்கனா போல் வந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்திய பூதத்திடமிருந்து விடுபட்ட காரணத்தால் அது முன்னிலும் வலுவும் வலிமையும் பெற்றதாக இருக்கும். எல்லா நாடுகளிலும் ஆதிக்க வகுப்புகள் செய்வது போன்றே அது அதிகாரத்தைக் கைப்பற்றும். சுருக்கமாகக் கூறினால் சுயராஜ்யம் மக்களின் அரசாங்கமாக இருக்காது; மாறாக அது ஆதிக்க வகுப்பால் நடத்தப்படும் அரசாங்கமாகவே இருக்கும்; மக்களால், மக்களுக்காக நடத்தப்படும் அரசாங்கமாக இருக்காது; அதற்குப்

பதிலாக ஆதிக்க வகுப்பின் சித்தம் எப்படியோ அப்படி அது இருக்கும்.

இந்தியா முழு அரசுரிமை படைத்த சுதந்திர அரசாக மாறியதும் ஆதிக்க வகுப்பினர் என்ன செய்வார்? அவர்கள் குத்தகைச் சட்டங்களைத் திருத்துவார்கள்; ஆரம்பக் கல்வியை விஸ்தரிப்பார்கள்; மது விலக்கை அமல்படுத்துவார்கள்; சர்க்காக்களைச் சுற்றுவதற்கு மக்களுக்குப் பயிற்சி அளிப்பார்கள்; சாலைகள் போடுவார்கள், கால்வாய்கள் வெட்டுவார்கள்; நாணய செலாவணியை சீர்திருத்துவார்கள்; எடுத்தலளவையும் முகத்தலளவைகளையும் செம்மை செய்வார்கள்; மருத்துவமனைகளையும் மருந்தகங்களையும் திறப்பார்கள்; அடிமட்ட வகுப்பினர்களின் நிலைமையை மேம்படுத்த இதர பல நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வார்கள் என்றெல்லாம் சிலர் எதிர்பார்க்கின்றனர். அடிமட்ட வகுப்புகளைச் சேர்ந்த எவரும் இத்தகைய திட்டங்களைக் கண்டு உற்சாக மிகுதியால் மிகவும் துள்ளிக் குதிக்க மாட்டார்கள்: ஏனென்றால் முதலாவதாக மிகவும் பெருமைப் படத்தக்க எதுவும் இதில் இல்லை. இன்றைய உலகில், சமுதாயத்தை நாகரிக நிலையில் பேணிக் காப்பதற்கு அவசியமான சீர்திருத்தங்களைச் செய்யாமல் எந்த ஆதிக்க வகுப்பாலும் இருக்க முடியாது. இத்தகைய சர்வசாதாரண சமூக மேம்பாட்டுத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்குக் கூட இந்தியாவிலுள்ள ஆதிக்க வகுப்பினர் முன்வருவார்களா என்பது ஐயமே என்பது என் சொந்தக்கருத்து. பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தை விட காங்கிரஸ் சிறந்தது என்பதை வெளி உலகுக்குக் காட்டும் ஆர்வத்தால் உந்தப்பட்டே காங்கிரஸ் இத்தகைய திட்டத்தை பறைசாற்றுகிறது என்பதை பெரும்பாலான மக்கள் மறந்துவிடுகிறார்கள். ஆனால் அதிகார வர்க்கம் ஒழித்துக் கட்டப்பட்டதும் மக்களின் நிலையை மேம்படுத்தும் இதே ஆர்வம், அக்கறை இருக்குமா? இது விஷயத்தில் எனக்கு மிகுந்த ஐயப்பாடு உண்டு. இது ஒருபுறமிருக்க, சமூக மேம்பாடுதான் சுயராஜ்யத்தின் எல்லாமுமே ஆகுமா? அடிமட்ட வகுப்பினர் சார்பில் ஒன்றைக் கூறிக் கொள்ள விரும்புகிறேன்: முழு அரசுரிமைப்படைத்த சுதந்திர இந்தியாவில் ஒரு வாழ்க்கைத் தத்துவம் என்ற முறையிலும், ஒரு சமூக அமைப்பு என்ற முறையிலும் பிராமணீயம் அடியோடு ஒழித்துக் கட்டப்பட வேண்டும், ஆழ குழிதோண்டிப் புதைக்கப்பட வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள் என்பதில் எனக்கு எந்த ஐயமும் இல்லை. இவ்வாறில்லாமல் சமூக மேம்பாடு குறித்து அவர்களுக்கு எத்தகைய அக்கறையும் இல்லை என்று துணிந்து கூறுவேன். அவர்களுடைய வறுமையும் இல்லாமையும் நேர்மையற்ற, கொடிய,

நச்சுத்தனமான சமூக அமைப்பில் அவர்கள் அனுபவிக்கும் அவமதிப்பு, அவமரியாதை, ஏளனம், இகழ்ச்சி, நிந்தை, பரிகாசம் இவற்றுடன் ஒப்பிடும்போது அத்தனை ஒன்றும் பெரிதல்ல. அவர்களுக்கு வேண்டியது மானமும் மரியாதையுமே தவிர ரொட்டியல்ல. ஆதலால் இங்கு எழும் கேள்வி இதுதான்: இந்தியாவிலுள்ள ஆதிக்க வகுப்பினர்கள் அரசு எந்திரத்தைக் கைப்பற்றிய பிறகு சமூக மேம்பாட்டுத் திட்டத்திலிருந்து வேறுபட்டதொரு திட்டத்தை அதாவது சமூக அமைப்பைச் சீர்திருத்தும் திட்டத்தை மேற்கொள்வார்களா?

இந்தியா மட்டும் முழு அரசுரிமை படைத்த நாடாக, சுதந்திர நாடாக இருக்குமாயின் எத்தனை எத்தனையோ அற்புதங்களை காங்கிரஸ் புரிய முடியும் என்று காங்கிரஸ்காரர்கள் கூறுகிறார்கள். சரி, இது வெறும் பிரசாரமல்ல, மெய்யான விழைவு, நாட்டம் என்றே வைத்துக் கொள்வோம். அப்போது மக்கள் விரும்புவதைச் செய்ய வேண்டுமானால் அதற்கு அதிகாரம் தேவை என்ற கருத்தின் அடிப்படையில் செயல்பட காங்கிரஸ் முற்படக்கூடுமல்லவா? இத்தகைய கருத்து பரிதாபத்துக்குரியது மட்டுமல்ல, உண்மையில் ஓர் அபாயகரமான போலி நம்பிக்கையுமாகும். இத்தகைய ஒரு விபரீதக் கற்பனையில் மூழ்கிப் போவதில் நாட்டம் கொண்டோர் அரசதிகாரத்துக்கும், அது எத்தனைதான் முழுமையானதாக இருந்தாலும், சில கடுமையான வரையறைகள் உண்டு என்பதை மறந்து விடுகிறார்கள். இந்த வரம்புகளை மிகவும் தெள்ளத் தெளிந்த வார்த்தைகளில் கூறியவர் டிசேயைவிட வேறு யாரும் இருக்க முடியாது. அவர் தமது அரசியலமைப்புச் சட்டத் தொகுதியில் பின்வருமாறு கூறுகிறார்:-

''எந்த ஓர் ஆட்சியாளனும், குறிப்பாக நாடாளுமன்றம் கையாளும் அதிகாரம் இருவகை வரம்புகளுக்கு உட்பட்டுள்ளது அல்லது கட்டுப்பட்டுள்ளது. இவற்றில் ஒன்று புறவயவரம்பு; மற்றொன்று அகவயவரம்பு.

''ஓர் ஆட்சியாளனது உண்மையான அதிகாரத்தின் அகவய வரம்பு அவனது குடிமக்கள் அல்லது அவர்களில் பெரும் எண்ணிக்கையினர் அவனது சட்டங்களுக்குக் கீழ்ப்படிய மறுக்கும் அல்லது அவற்றை எதிர்க்கும் சாத்தியக் கூறில் அல்லது நிச்சயத்தன்மையில் அடங்கியுள்ளது.

''மிகவும் வல்லாட்சியான, கொடுங்கோன்மையான முடியாட்சிகளில் கூட இந்த வரம்பு நிலவுகிறது. பதினெட்டாம்

நூற்றாண்டின் மத்தியில் ஒரு ரோமாபுரி சக்கரவர்த்தி அல்லது பிரெஞ்சு மன்னன் (தற்காலத்தில் ஜார் இருப்பது போன்று) ''முழு அரசதிகாரம் படைத்தவனாக'' அந்தச் சொல்லின் கறாரான சட்ட அர்த்தத்தில் இருந்து வந்தான். அவன் சட்டம் இயற்றும் முழு அதிகாரத்தைப் பெற்றிருந்தான். அவனால் இயற்றப்படும் எந்தச் சட்டமும் எல்லோரையும் கட்டுப் படுத்துவதாக இருந்தது; அந்தப் பேரரசிலோ அல்லது இராச் சியத்திலோ இத்தகைய சட்டத்தை ரத்து செய்யக்கூடியவர் கள் எவருமே இல்லை. ஆனால் இதை வைத்து எப்படிப் பட்ட முழு சர்வாதிகாரம் படைத்த ஆட்சியாளனும் தன் விருப்பம் போல் உண்மையில் ஒவ்வொரு சட்டத்தையும் இயற்ற முடியும் என்றோ, மாற்ற முடியும் என்றோ எண் ணுவது தவறாகும்....

''ஒரு சர்வாதிகாரியின் அதிகாரம் கூட அவனுடைய குடிமக்கள் அல்லது அவர்களில் ஒரு பகுதியினர் அவனது ஆணைகளுக்குக் கீழ்ப்படிய தயாராக இருப்பதையே பொறுத் திருக்கிறது; கீழ்ப்படிய தயாராக இருக்கும் இந்த நிலை உண்மையில் எப்போதுமே ஒரு வரையறைக்குட்பட்ட தாகும். மிகவும் அபகீர்த்தி வாய்ந்த வரலாற்று உண்மை கள் இதனை மெய்ப்பிக்கின்றன. ஆரம்பகால சீசர்களில் எவராலும் பண்டைய ரோமாபுரியினர் தங்களது பழக்க வழக்க மரபுகளைப் பின்பற்றுவதைச் சீர்குலைக்க முடிய வில்லை.... சுல்தானால் முகமதியத்தை ஒழித்துக் கட்ட முடியவில்லை. பதினான்காம் லூயி அதிகாரத்தின் உச்சக் கட்டத்திலிருந்த போது நான்டெசின் ஆணையை ரத்து செய்ய முடிந்தது; ஆனால் அவனால் புராட்டஸ்டென்டி சத்தின் மேலாண்மையை நிலைநாட்ட இயலவில்லை; இதே காரணத்தால்தான் இரண்டாம் ஜேம்ஸால் ரோமன் கத்தோலிசத்தின் மேலாண்மையை நிலைநாட்ட முடிய வில்லை... ஒரு சர்வாதிகாரியின் அதிகாரத்திற்கு அல்லது அரசியல் நிர்ணய சபையின் ஆணையுரிமைக்குப் பொருந்தும் உண்மை நாடாளுமன்றத்தின் அரசுரிமைக்கும் விசேட மாகப் பொருந்தும்; மக்களின் எதிர்ப்பு காரணமாக அது பல வகையிலும் வரம்புக்குட்பட்டதாகும். நாடாளுமன்றம் ஸ்காட்லாந்தில் சட்டரீதியாக எபிஸ்கோபல் திருச்சபையை அமைக்க முடிந்தது; நாடாளு மன்றம் சட்ட ரீதியாக காலனி

நாடுகள்மீது வரி விதிக்க முடிந்தது; நாடாளுமன்றம் சட்டத்திற்குப் புறம்பாக இல்லாத முறையில், அரியாசனம் ஏறுவதற்குள்ள வாரிசுரிமையை மாற்ற முடிந்தது அல்லது மன்னராட்சியையே ஒழித்துக் கட்ட முடிந்தது; ஆனால் இன்றைய உலக நிலைமையில் பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தால் இவற்றில் எதையும் செய்ய இயலாது என்பதை அனைவருமே அறிவர். ஒரு குறிப்பிட்ட சட்டம் சட்டரீதியாக செல்லுபடியாகத்தக்கதாக இருந்தாலும் மிகப் பரவலான எதிர்ப்பு காரணமாக உண்மையில் மிகப்பல சந்தர்ப்பங்களில் அது நாடாளுமன்றத்தின் அதிகார வரம்புக்கு அப்பாற்பட்டதாகி விடுகிறது.

* *

''அரசு அதிகாரத்தைப் பயன்படுத்தும் அகவய வரம்பு அந்த அரசு அதிகாரத்தின் இயல்பையே பொறுத்திருக்கிறது. ஒரு சர்வாதிகாரி கூட தனது அதிகாரங்களை தன் இயல்புக்கு ஏற்பவே பயன்படுத்துகிறான்; அந்த இயல்பு அவன் வாழும் சந்தர்ப்ப சூழ்நிலைகளால் உருவாக்கப்படுகிறது; அவன் சார்ந்த சமுதாயம் மற்றும் காலத்தின் தார்மிக உணர்வுகளும் இதில் முக்கிய பங்கு வகிக்கின்றன. சுல்தானால் முகமதிய உலகின் சமயத்தை மாற்ற முடியாது; முகமதியிசத்தின் தலைவன் முகமதின் சமயத்தைக் கவிழ்க்க விரும்புவது என்பது பெரிதும் நம்புதற்கரியதாகவே இருக்கும்; சுல்தானின் அதிகாரத்தைப் பயன்படுத்துவதற்கான அகவய வரம்பு குறைந்த பட்சம் புறவயது வரம்பு போன்றே வலுவானதாக இருக்கும். போப்பாண்டவர் ஏன் இந்தச் சீர்திருத்தத்தைச் செய்யவில்லை, அந்த சீர்திருத்தத்தைச் செய்யவில்லை என்று மக்கள் சில சமயங்களில் வீண் கேள்வி கேட்பது உண்டு. இந்தக் கேள்விக்கான உண்மையான பதில் ஒரு புரட்சிக்காரன் போப்பாண்டவர் ஆவதில்லை, அதேபோல் போப்பாண்டவராக மாறிய ஒரு மனிதன் புரட்சிக்காரனாக இருக்க விரும்புவதில்லை என்பதுதான்.''

டிசே கூறிய உண்மையை எவரும் மறுக்க முடியாது. டிசே கூறியதுபோன்று ஆதிக்க வகுப்பு என்ன சாதிக்க முடியும் என்பது அதன் அரசு அதிகாரத்தின் அளவைப் பொறுத்தல்லாமல் அந்த அரசு அதிகாரத்துக்குள்ள புறவய, அகவய வரம்புகளையே பொறுத்

துள்ளது. இவை இரண்டில், நன்மை செய்யத் தவறுவதற்கு புறவய வரம்புகள் காரணமாக இருக்குமானால் ஆதிக்க வகுப்பினரை எவரும் குறை கூற முடியாது. புறவய வரம்புகள் முன்னேற்றத்தைத் தடை செய்து விடுமோ என்ற அச்சம் காரணமாக அதிகம் கவலைப்படத் தேவை யில்லை. ஏனென்றால் ஆதிக்க வகுப்பினரின் அகவய வரம்பு களுக்குத்தான் புற வயது வரம்புகளைவிடத் தீர்மானிக்கும் சக்தி அதிகம். முன்னேற்ற மானது ஆதிக்க வகுப்பினரின் புறவய வரம்பு களை விட அகவய வரம்புகளையே பெரிதும் சார்ந்துள்ளது. இந்த அகவய வரம்புகளைத் தீர்மானிக்கும் அம்சங்கள் யாவை? ஆதிக்க வகுப்பினரின் கண்ணோட் டம், பாரம்பரியங்கள், சுயநல நோக்கங் கள், சமூக சித்தாந்தம் போன்ற வற்றிலிருந்தே அகவய வரம்புகள் தோன்றுகின்றன. இந்த விவாதத்தின் நோக்கம் அடிமட்ட வகுப் பினர்களுக்கு காங்கிரஸ் என்ன சாதிக்கும் என்பது குறித்து ஒரு முடிவுக்கு வருவதற்கு முன்னதாக பின்கண்ட கேள்வியைக் கேட்க வேண்டும் என்று அயல் நாட்டவரை எச்சரிப்பதே ஆகும்; ஆதிக்க வகுப்பினரின் மனோபாவம் என்ன? அதன் பாரம்பரியங்கள் யாவை? அதன் சமூக சித்தாந்தம் யாது?

இவ்வகையில் முதலில் பிராமணர்களை எடுத்துக் கொள் வோம். மொத்த இந்துக்களின் மக்கட் தொகையில் சுமார் 80 சதவீதத் தினராக உள்ள சூத்திரர்கள், தீண்டப்படாதவர்கள் போன்ற அடிமட்ட வகுப்பினர்களின் நீண்ட நெடுங்கால வன்நெஞ்சம் படைத்த வைரி களாக பிராமணர்கள் இருந்து வந்திருக்கிறார்கள். இது வரலாறு கூறும் அசைக்க, மறுக்க முடியாத உண்மை. இந்தியாவிலுள்ள அடிமட்ட வகுப்புகளைச் சேர்ந்த ஒரு சாமானிய மனிதன் இன்று தாழ்ந்து பட்டவனாக, வீழ்ந்துபட்டவனாக, இழிவினும் இழிந்த பிறவியாக, எத்தகைய லட்சியங்களும் இல்லாதவனாக இருக்கிறான் என்றால் அதற்கு பிராமணர்களும் அவர்களுடைய சித்தாந்தமுமே முற்றிலும் காரணம். பிராமணீய சித்தாந்தத்தின் அடிப்படையான, முக்கியமான ஐந்து கோட்பாடுகள் வருமாறு: (1) பல்வேறு வகுப்பினர்களிடையே படிநிலையில் அமைந்த ஏற்றத்தாழ்வு: (2) சூத்திரர்கள் மற்றும் தீண்டப்படாதவர்களின் அறவே பாதுகாப்பற்ற நிலைமை; (3) சூத்தி ரர்களுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் கல்வி வசதி முற்றிலும் மறுக்கப்படுதல்; (4) சூத்திரர்களும் தீண்டப்படாதவர்களும் உயர் பதவிகள் வகிப்பதைத் தடை செய்தல்; (5) சூத்திரர்களும் தீண்டப் படாதவர்களும் சொத்துகள் வைத்துக் கொள்வதைத் தடை செய்தல். (6) பெண்களை முற்றிலும் அடிமைப்படுத்தி ஒடுக்குதல். ஏற்றத் தாழ்வு என்பது பிராமணீயத்தின் அதிகாரப்பூர்வமான கோட்பாடு; சமத்துவம் விழையும் கீழ்மட்ட வகுப்பினரை ஈவு இரக்கமின்றி,

மனச்சான்றின் உறுத்தலின்றி அடக்கி ஒடுக்குவதை பிராமணீயம் தனது புனித கடமையாகக் கருதுகிறது. கல்வி ஒரு சிலருக்கு அப்பால் பரவாத நாடுகள் இருக்கின்றன. ஆனால் இந்தியா ஒன்றில்தான் கல்வியை பிராமணர்கள் தங்களுடைய ஏகபோகச் சொத்தாக்கிக் கொண்டிருந்தனர். கீழ் மட்ட வகுப்பினர்கள் கல்வி கற்க விரும்புவதை தண்டனைக்குரிய கொடுங் குற்றமாகப் பிரகடனம் செய்தனர்; அவர்களுடை நாவுகள் துண்டிக்கப்படும் அல்லது அவர்களுடைய செவிகளில் பழுக்கக் காய்ச்சிய ஈயம் ஊற்றப்படும் என்று எச்சரிக்கை செய்தனர். இந்திய மக்களை முற்றிலும் நிராயுதபாணிகளாக, பாதுகாப்பற்றவர்களாக ஆக்கி பிரிட்டிஷார் இந்தியாவை ஆண்டு வருகின்றனர் என்று காங்கிரஸ் அரசியல்வாதிகள் குற்றம் சாட்டி வருகிறார்கள். ஆனால் சூத்திரர்களையும் தீண்டப்படாதவர்களையும் நிராயுதபாணிகளாகவும், பாதுகாப்பற்றவர்களாகவும் ஆக்குவது பிராமணர்களின் பிரகடனப்படுத்தப்படாத சட்டமாக இருந்து வருவதை அவர்கள் மறந்து விட்டார்கள். உண்மையில், சூத்திரர்களும் தீண்டப்படாதவர்களும் நிராயுதபாணிகளாக்கப்பட வேண்டும் என்பதில் பிராம ணர்கள் மிகத் தீவிரமாக இருந்தார்கள். இதனால்தான் பிராமணர்கள் தங்களுடைய உரிமைகளையும் சலுகைகளையும் பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டு தங்களை ஆயுதபாணிகளாக்கிக் கொள்வதற்கு சட்டத்தைத் திருத்தியபோது இது விஷயத்தில் சூத்திரர்கள் மீதும் தீண்டப்படாதவர்கள் மீதும் இருந்த தடையை அதன் கடுமையைச் சற்றுக்கூடக் குறைக்காமல் அப்படியே நீடிக்க விட்டு விட்டனர். இந்திய மக்களில் மிகப் பெரும்பாலோர் இன்று கோழைகளாக, மோழைகளாக, எழுச்சியற்றவர்களாக, கிளர்ச்சியற்றவர்களாக தோன்றுகிறார்கள் என்றால் பிராமணர்கள் அவர்களைக் காலகாலமாக முற்றிலும் நிராயுதபாணிகளாக ஆக்கி வைத்திருந்ததே அதற்குக் காரணம். பிராமணன் தன் ஆதரவை அளித்திடாத எந்த சமூகக் கேடுமே, சமூக அநீதியுமே இல்லை எனலாம். வெறித்தனமான சாதி உணர்வு, தீண்டாமை, அணுகாமை, பார்க்காமை போன்ற மனிதனிடம் மனிதன் நடந்து கொள்ளும் சிறிதும் மனிதாபிமானமற்ற, மனித நேயமற்ற செயல்கள் அவனுக்கு தர்மம் போன்றதாகும். எனினும் மனிதனுக்கு இழைக்கப்படும் கொடுமைகள் மட்டுமே அவனுக்கு தர்மம் என்று எண்ணிவிடாதீர்கள். உலகின் எந்தப் பகுதி யிலும் பெண்களுக்கு இழைக்கப்படும் மிகமிக மோசமாக அக்கிர மங்களை எல்லாம், அட்டூழியங்களை எல்லாம் அவன் ஆதரித்திருக்கிறான். விதவைகள் சதிகளாக உயிரோடு சுட்டெரிக்கப்பட்டனர். விதவைப் பெண்களை உயிரோடு துள்ளத்துடிக்க சுட்டெரிக்கும் சதி முறைக்கு பிராமணன் தனது முழு ஆதரவை அளித்தான்.

விதவைகள் மறுமணம் செய்து சொள்ள அனுமதிக்கப்படவில்லை. இந்த சித்தாந்தத்தை அவன் உறுதியோடு நிலைாட்டினான். சிறுமி கள் 8 வயதுக்கு முன்னதாக திருமணம் செய்து வைக்கப்பட்டனர். அவள் பூப்புப் பருவத்தை எய்தியிருந்தாலும் இல்லாவிட்டாலும் அவ ளுடைய கணவன் அவளுடன் உடல் உறவு கொள்ள உரிமை பெற்றி ருந்தான். இந்த சித்தாந்தத்துக்கும் பிராமணனது பலமான ஆதரவு இருந்தது. சூத்திரர்களுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும், பெண் களுக்கும் சாஸ்திர சட்ட விதிமுறைகளை வகுத்துத் தருபவர்கள் என்ற முறையில் பிராமணர்கள் நிகழ்த்தியிருக்கும் சாதனை உலகின் இதர பகுதிகளிலுள்ள அறிவுத்துறை வகுப்பினர்களின் சாதனைகளுடன் ஒப்பிடும்போது மிகவும் குரூரமானதாகும். ஏனென்றால் கல்வி அறி வற்ற தனது நட்டு மக்களை என்றென்றும் சாசுவதமாக அறியாமை யிலும் வறுமையிலும் ஆழ்த்திவைப்பதற்கு ஒரு சித்தாந்தத்தை உரு வாக்க இந்தியாவிலுள்ள பிராமணர்களைப் போல் வேறு எந்த அறிவுத்துறை வகுப்பினரும் தங்கள் அறிவை சோரம் போகவிட்ட தில்லை. தன்னுடைய முன்னோர்களால் வகுத்துத் தரப்பட்ட இந்தப் பிராமணீய சித்தாந்தத்தில் இன்று ஒவ்வொரு பிராமணனும் முழு நம்பிக்கை வைத்திருக்கிறான். அவன் இந்து சமுதாயத்தில் ஓர் அந்நிய சக்தி ஆவான். பிரெஞ்சுக்காரனுக்கு ஜெர்மானியன் எவ்வாறு அந்நி யனோ, யூதனல்லாதவனுக்கு யூதன் எவ்வாறு அந்நியனோ, நீக்ரோ வுக்கு வெள்ளையன் எவ்வாறு அந்நியனோ அவ்வாறே சூத்திரர் களுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் பிராமணன் அந்நியன். அவ னுக்கும் கீழ்மட்ட வகுப்பினர்களான சூத்திரர்களுக்கும் தீண்டப் படாதவர்களுக்கும் இடையே உண்மையிலேயே ஒரு படு பாதாளம் இருக்கிறது. அவன் அவர்களுக்கு அந்நியன் மட்டுமல்ல, பகை வனுமாவான். அவர்களுக்கிடையேயான உறவில் மனச்சான்றுக்கு, நேர்மை உணர்வுக்கு இடமில்லை; நியாயத்தின் குரலை அங்கு கேட்க முடியாது.

பனியாதான் வரலாற்றிலேயே மிகவும் புல்லுருவித்தனமான, அட்டை போன்ற வகுப்பாகும். பணம் சேர்க்கும் அவனது பேராசை யில் மனச்சான்றுக்கோ பண்பாட்டுக்கோ இடமில்லை. எங்கும் கொள்ளை நோய் பரவி சாவு தலைவிரித்தாடும்போது அதில் ஆதாயம் பெற நினைக்கும் வெட்டியான் போன்றவன் அவன். பனியாவுக்கும் வெட்டியானுக்கும் இடையே உள்ள ஒரே வேறுபாடு வெட்டியான் கொள்ளை நோயைத் தோற்றுவிப்பதில்லை, பனியா அதைச் செய் கிறான். அவன் தனது பணத்தை உற்பத்தி நோக்கங்களுக்குப் பயன் படுத்துவதில்லை. மாறாக, ஆக்கவளமற்ற காரியங்களுக்கு கடுவட்டிக்கு

பணத்தைக் கடன் கொடுத்து, வறுமையை, ஏழ்மையை மேன்மேலும் வளர்க்கிறான். வட்டியைக் கொண்டே அவன் பிழைக்கிறான்; வாழ் கிறான்; லேவாதேவிதான் மனு அவனுக்கு வகுத்துத்தந்த தொழில் என்று அவனுடைய மதம் அவனுக்குக் கூறுகிறது; இத்தொழிலை அவன் தனது புனித உரிமையாகவும் தர்மமாகவுமே கருதுகிறான். அவன் தொடுக்கும் வழக்குகளில் எல்லாம் சாதகமாகத் தீர்ப்பளிக்கும் பிராமண நீதிபதியின் உதவியோடு அவன் தனது தொழிலை தங்கு தடையின்றிச் செய்கிறான். வட்டி, வட்டி, வட்டி என்று மேன்மேலும் கூட்டிக் கொண்டே சென்று அதன் மூலம் குடும்பம் குடும்பமாக தனது நயவஞ்சக வலையில் நிரந்தரமாக வீழ்த்துகிறான். அவன் கடன் மேல் கடன் கொடுத்து ஏழை எளிய மக்களை என்றென்றைக்கும் கடனாளிகளாக்குகிறான். அணுவளவும் மனச்சான்று இன்றி அவன் செய்யாத பித்தலாட்டம் இல்லை, மோசடி இல்லை, ஏமாற்று வித்தை இல்லை. நாட்டின்மீது அவனுக்குள்ள பிடி முழுமையானது. ஏழ்மை யிலும், பட்டினியிலும், கல்லாமையிலும் மூழ்கிக் கிடக்கும் இந்தியா முழுவதுமே பனியாவிடம் அடமானம் வைக்கப்பட்டுள்ளது.

இரத்தினச்சுருக்கமாகக் கூறினால் பிராமணன் உள்ளத்தை அடிமைப்படுத்துகிறான், பனியாவோ உடலை அடிமைப்படுத்து கிறான். அவர்கள் தங்களது பகற்கொள்ளையை, சூறையாடலை தங்க ளுக்குள் பகிர்ந்து கொள்கின்றனர்; இவை ஆதிக்க வகுப்பினர்களுக் குச் சொந்தமாகின்றன. இந்தியாவிலுள்ள ஆதிக்க வகுப்புகளின் கண்ணோட்டம், பாரம்பரியம், சமூக சித்தாந்தம் ஆகியவற்றை அறிந்த எவரும் காங்கிரஸ் ஆட்சியில் சுதந்திர இந்தியா இன்றைய இந்தியாவிலிருந்து மாறுபட்டதாக இருக்கும் என்று நம்ப முடியுமா?

## V

கீழ்மட்ட வகுப்பினரின் ஆதரவாளன், பாதுகாவலன் என்று காங்கிரஸ் தன்னைக் கூறிக்கொள்கிறது; இந்தக் கூற்றில் வாய்மை யும் நேர்மையும் இருக்குமானால், ஆதிக்க வகுப்பினர்களின் அதி காரத்தை அழித்தொழிக்க அது என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்கிறது என்பதைக் கூறுவதற்கு காங்கிரஸ் முன்வர வேண் டும். 1937 ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தல்களில் காங்கிரஸ் மகத் தான வெற்றி பெற்றுவிட்டதாகக் கூரை மீதேறி நின்று திரும்பத் திரும்பக் கூவப்படுகிறது. இதிலுள்ள உயர்வு நவிற்சியை ஒதுக்கி வைத்துவிட்டு எவரும் பின்வரும் கேள்வியைக் கேட்கக்கூடும்:

காங்கிரஸ் வெற்றி பெற்றுள்ளது என்பது உண்மைதான், ஆனால் இந்திய மக்களில் வாகைப்பதக்கத்தைத் தட்டிச் சென்றவர்கள் எந்த வகுப்பினர்? துரதிர்ஷ்டவசமாக எந்த இந்தியப் பத்திரிகையாளரும் டோடின் நாடாளுமன்றக் கையேடு போன்ற எதையும் தயாரிக்க வில்லை. இதன் விளைவாக, காங்கிரஸ் சார்பில் போட்டியிட்டு வெற்றி பெற்ற சட்டமன்ற உறுப்பினர்களது சாதி, தொழில், கல்வி, சமூக அந்தஸ்து போன்றவை குறித்துத் துல்லியமான விவரங்கள் கிடைக்கவில்லை. இது மிக முக்கியமான விஷயம். எனவே, 1937-ஆம் ஆண்டுத் தேர்தல்களில் மாகாண சட்டமன்றங்களுக்குத் தேர்ந் தெடுக்கப்பட்ட காங்கிரஸ் உறுப்பினர்கள் குறித்த இந்த விவரங் களைச் சேகரிக்க முற்பட்டேன். ஒவ்வொரு உறுப்பினர் குறித்த துல் லியமான விவரங்களைச் சேகரிப்பதில் நான் வெற்றி பெறவில்லை. இதனால் பல உறுப்பினர்களை வகைப்படுத்தப்படாதவர்களாக விட்டு விட நேர்ந்தது. எனினும் என்னால் திரட்ட முடிந்த தகவல்கள் காங்கிரஸ் வெற்றி பற்றிய சில உண்மைகளை வெட்ட வெளிச்ச மாக்குகிறது; இந்திய மக்களின் சுதந்திரத்தையும் சுபிட்சத்தையும் பொறுத்த வரையில் இந்த வெற்றியின் பொருள் என்ன என்பதையும் காட்டுகிறது.

காங்கிரஸ் சார்பில் மாகாண சட்ட மன்றங்களுக்குத் தேர்ந் தெடுக்கப்பட்ட பிராமணர்கள், பிராமணரல்லாதோர், ஷெட்யூல்டு சாதியினரின் விகிதாசாரத்தை அட்டவணை 18 (பக்கம் 353 பார்க்க) காட்டுகிறது.

இந்துக்களின் மொத்த மக்கட்தொகையில் பிராமணர்களின் விகிதாசாரம் எவ்வளவு குறைவாக இருக்கிறது என்பதை அறியாத வர்கள் காங்கிரஸ் தேர்தலில் பிராமணர்கள் பெற்றுள்ள பிரதிநிதித் துவத்தைப் புரிந்து கொள்வது சாத்தியமல்ல. ஆனால் இதை அறிந்த வர்கள் பிராமணர்கள் அவர்களுடைய எண்ணிக்கையின் விகிதாசாரத் தின் அடிப்படையில் நோக்கும்போது அபரிமிதமான பிரதிநிதித் துவத்தைப் பெற்றிருப்பதைப் புரிந்து கொள்வார்கள்.

பனியாக்கள், தொழிலதிபர்கள், நிலப்பிரபுக்கள் போன்ற செல்வவளம் படைத்த வகுப்பினர்களுக்கு காங்கிரஸ் எந்த அள வுக்குப் பிரதிநிதித்துவம் அளித்திருக்கிறது? காங்கிரஸ் சார்பில் எத்தனை பனியாக்களும், வர்த்தக, தொழிலதிபர்களும், நிலப்பிரபுக் களும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை அட்டவணை 19 (பக்கம் 354) காட்டுகிறது.

இங்கும் பனியாக்களும், நிலப்பிரபுக்களும், தொழிலதிபர்களும் பெற்றுள்ள பிரதிநிதித்துவம் மிகப்பெருமளவில் இருப்பதைப் பார்க்கிறோம். ஆதிக்க வகுப்பினர்களை எதிர்ப்பதற்குப் பதிலாக அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு அந்த ஆதிக்க வகுப்பினர்களுக்கு உண்மையில் காங்கிரஸ் உதவியுள்ளது என்பதில் ஐயம் ஏதும் இருக்க முடியுமா? தேர்தலில் காங்கிரஸ் பெற்றுள்ள வெற்றியில் மற்றொரு முக்கிய அம்சமும் இருக்கிறது. அதனை இங்கு அம்பலப்படுத்துவது அவசியம். காங்கிரஸ் அமைச்சரவைகளின் இயல்பு சம்பந்தப்பட்டது அந்த அம்சம்.

காங்கிரஸ் பெரும்பான்மை பெற்றுள்ள மாகாணங்களில் அமைக்கப்பட்டுள்ள அமைச்சரவைகளில் பிராமணர்களின் நிலை என்ன என்பதை அட்டவணைகள் 20, 21லிருந்து (355, 358 பக்கங்கள் பார்க்க) தெரிந்து கொள்ளலாம்.

அனைத்து இந்து மாகாணங்களிலும் பிரதமர்களாக இருப்பவர்கள் பிராமணர்களே. எல்லா இந்து மாகாணங்களிலும் இந்துக்களல்லா அமைச்சர்களை விலக்கிவிட்டுப் பார்த்தால் அமைச்சரவைகள் முற்றிலும் பிராமணர்களைக் கொண்டவைகளாகவே இருப்பது தெரியவரும். பண்டித ஜவஹர்லால் நேருவின் சொந்த மாகாணமான ஐக்கிய மாகாணங்களில் முக்கியமாக இந்தக் காட்சியைக் காணலாம்.

இதற்கு மேலும், இந்தியாவில் பிராமணர்கள் ஆதிக்க வகுப்பினராக அமைந்துள்ளனர் என்பதில் ஐயம் ஏதும் உண்டா? சுதந்திரத்திற்காகப் போராடுவதாக காங்கிரஸ் கூறுவது உண்மையில் ஆதிக்க வகுப்பின் சுதந்திரத்திற்காகப் போராடுவதையே குறிக்கிறது என்பதில் ஐயம் ஏதும் உண்டா? காங்கிரஸ்தான் ஆதிக்க வகுப்பு, ஆதிக்க வகுப்புதான் காங்கிரஸ் என்பதில் ஐயம் ஏதும் உண்டா? 1937ல் மாகாண சுயாட்சி வடிவத்தில் சுயராஜ்யம் வந்தபோது காங்கிரசானது ஆதிக்க வகுப்பினரை வெட்கக்கேடான முறையில் ஆட்சி பீடத்திலும், அதிகாரத்திலும் அமர்த்தியது என்பதில் ஐயம் ஏதும் உண்டா?

இந்தக் காரணத்துக்காக பனியாவை ஆதிக்க வகுப்பு அந்தஸ் திலிருந்து கீழே இறக்குவது பிராமணனுக்கு சாத்தியமில்லை. உண்மையில், பனியாவுடன் வெறும் செயல் முறையிலான உறவை மட்டுமன்றி, நேச பூர்வமான உறவையும் பிராமணன் வளர்த்து வரு கிறான் என்றே கூற வேண்டும். இதன் விளைவாக இன்று இந்தியா வில் ஆதிக்க வகுப்பினர் பிராமணன் - சத்திரியன் என்றிருந்தது மாறி பிராமணன் - பனியா என்றாகிவிட்டது.

ஆதிக்க வகுப்பினர் இருந்து வருவதை கூறுவது மட்டுமே எல்லாவற்றையும் விளக்கி விட்டதாகாது. இதில் குறிப்பிடத்தக்கது என்னவென்றால், இந்தியாவிலுள்ள ஆதிக்க வகுப்பின் உறுப்பினர் கள் தாங்கள் ஆதிக்க வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்பதையும், தாங்கள் மட்டுமே நாட்டை ஆளப்பிறந்தவர்கள் என்பதையும் முற்றிலும் உணர்ந்திருப்பதேயாகும். காலஞ்சென்ற திரு. திலகர் தாம் ஒரு பிரா மணர் என்பதையும், ஆதிக்க வகுப்பைச் சேர்ந்தவர் என்பதையும் என்றுமே மறந்ததில்லை. பண்டித ஜவஹர்லால் நேரு, அவருடைய சகோதரியான திருமதி விஜயலட்சுமி பண்டிட் ஆகியோர் விஷ யமும் இதேபோன்றதுதான்.[1] திரு. வல்லபாய் பட்டேலும் இதற்கு விதிவிலக்கல்ல; அவரும் தாம் ஆதிக்க வகுப்பைச் சேர்ந்த பெருமித உணர்வைப் பெற்றிருந்தார். திரு. திலகர் சுயராஜ்ய இயக்கத்தின் தந்தை எனப் போற்றப்படுகிறார். பண்டித நேருவும் திரு. வல்லபாய் பட்டேலும் காங்கிரஸ் மேலிடத்தில் பிரதான இடங்களை வகிப்பவர் கள். இவர்களும் இவர்களைப் போன்றவர்களும் தாங்கள் ஆதிக்க

1. திரு. ஒய்.ஜி. கிருஷ்ண மூர்த்தி எழுதிய பண்டித ஜவஹர்லால் நேருவின் வாழ்க்கை வரலாற்று நூலுக்கு திரு. பட்டபி சீத்தாராமய்யா அளித்த முன்னுரையில் பண்டித நேரு தாம் ஒரு பிராமணர் என்பதை நன்கு உணர்ந்திருந்தார் என்று கூறுகிறார். பண்டித நேரு ஒரு சோஷலிஸ்டு என்றும் சாதிஅமைப்பில் அவருக்கு நம்பிக்கை இல்லை என்றும் எண்ணி யிருக்கக்கூடிய பலரை இது நிச்சயம் அதிர்ச்சிக்குள்ளாக்கவே செய்யும். ஆனால் திரு. பட்டாபி சீத்தாராமய்யா தாம் என்ன கூறுகிறோம் என்பதைத் தெரிந்திருக்க வேண்டும். தாம் ஒரு பிராமணர் என்பதை பண்டித நேரு உணர்ந்திருந்தார் என்பது மட்டுமல்ல, அவருடைய சகோதரி திருமதி விஜயலட்சுமி பண்டிட்டும் இவ்வாறே தாம் ஒரு பிராமணர் என்பதை உணர்ந்திருந்தார் என்றே தோன்றுகிறது. 1940 டிசம்பரில் டில்லியில் கூடிய அகில இந்திய மாதர் மாநாட்டில், குடிமதிப்புக் கணக்கில் ஒருவர் தாம் இந்த சாதியைச் சேர்ந்தவர் என் பதைக் கூறக்கூடாது என்னும் பிரச்சினை விவாதத்திற்கு வந்தது. திருமதி பண்டிட்டுக்கு இந்தக் கருத்தில் உடன்பாடில்லை, தமது உடலில் பிராமண இரத்தம் ஓடுவது குறித்துத் தாம் ஏன் பெருமிதம் கொள்ளக்கூடாது என்பதற்கும், குடிமதிப்புக் கணக்கில் தம்மை ஒரு பிராமணத்தியாக ஏன் அறிவித்துக் கொள்ளககூடாது என்பதற்கும் தாம் எத்தகைய காரணத்தையும் காணவில்லை என்று அவர் கூறினார். ''ராஸ்த் ரஹபார்'' என்னும் குஜராத்தி வார இதழில் 1945 ஜனவரி 14-ஆம் தேதி திரு. ஜே.சி. சஞ்சனா எழுதிய ''அரசியலில் அர்த் தமும் அனர்த்தமும்'' என்னும் கட்டுரையைக் காண்க. தொடர் எண். XII.

வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்ற உணர்வைக் கொண்டிருந்தது மட்டு மல்லாமல், கீழ்த்தட்டு வகுப்பினர் வெறுக்கத்தக்கவர்கள் என்றும், அவர்கள் அடித்தட்டில்தான் இருக்க வேண்டும் என்றும், ஆட்சிக்கு வருவதற்கு அவர்கள் ஒருபோதும் ஆசைப்படக்கூடாது என்றும் கருதி வந்தனர். இத்தகைய கருத்துகளை அவர்கள் பகிரங்கமாகவே வெளி யிட்டனர்; இதற்காக அவர்கள் சிறிதும் வெட்கப்படவோ, கழி விரக்கம் கொள்ளவோ இல்லை. சட்டமன்றங்களில் தங்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும் என்று 1918ல் பிராமணரல்லாதோரும் பிற்பட்ட வகுப்பினரும் ஓர் இயக்கத்தைத் தொடங்கினர். அச்சமயம் ஷோலாப்பூரில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் திரு. திலகர் பேசும்போது, எண்ணெய் எடுக்கும் செட்டி யார்களும், புகையிலைக் கடைக்காரர்களும், சலவையாளர்களும், அவர்களைப் போன்ற ஏனையோரும் - இதுதான் பிராமணரல்லா தோரையும் பிற்பட்ட வகுப்பினரையும் பற்றிய அவரது வருணனை யாகும் - சட்டமன்றத்துக்குச் செல்ல வேண்டுமென்று ஏன் ஆசைப் படுகிறார்கள் என்பதை தம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை என்று கூறினார். தமது அபிப்பிராயத்தில், சட்டத்திற்குக் கீழ்ப்படிந்து நடந்து கொள்வதுதான் அவர்களது கடமையே தவிர சட்டங்களை இயற்றும் அதிகாரங்களைப் பெறுவதற்கு அவர்கள் விழையக்கூடாது என்னும் குறிப்பிட்டார். 1942ல் லின்லித்கோ பிரபு இந்திய மக்களில் பல்வேறு பகுதியினரையும் பிரதிநிதித்துவப்படுத்தும் 52 முக்கிய மான இந்தியப் பிரமுகர்களைத் தமது இருப்பிடத்துக்கு அழைத்தார்; போர் முயற்சியில் அனைத்து இந்தியர்களது ஒத்துழைப்பையும் ஒத்துணர்வையும் ஈடுபடுத்தும் வகையில் மத்திய அரசாங்கத்துக்கு பொது மக்களின் ஆதரவை மேலும் திரட்டுவதற்கு என்ன வழிவகை களை மேற்கொள்ளலாம் என்பது குறித்து இந்தப் பிரமுகர்களுடன் கலந்தாலோசிப்பதே இதன் நோக்கம். இவ்வாறு அழைக்கப்பட்ட வர்களில் ஷெட்யூல்டு வகுப்புகளைச் சேர்ந்தவர்களும் இருந்தனர். இத்தகைய கீழ்த்தரமானவர்களுக்கு வைசிராய் அழைப்பு விடுத் ததை திரு. வல்லபாய் பட்டேலால் சகித்துக் கொள்ள முடியவில்லை. இந்த நிகழ்ச்சி முடிந்த பிறகு ஆமதாபாத்தில் நடைபெற்ற பொதுக் கூட்டம் ஒன்றில் பேசிய திரு. வல்லபாய் பட்டேல் பின்கண்டவாறு கூறினார்:[1]

3. அரசியலில் அர்த்தமும் அனர்த்தமும் என்னும் கட்டுரையில் திரு. சஞ்சனாவின் மேற்கோள்.

''வைசிராய் இந்துமகாசபைத் தலைவர்களை அழைத்தார், முஸ்லீம் லீக் தலைவர்களை அழைத்தார், அத்தோடு காஞ்சிகள் (எண்ணெய் எடுப்போர்), மோச்சிகள் (செருப்பு செப்பனிடும் செம்மான்கள்) போன்றோரையும் கூட அழைத்தார்.''

திரு. வல்லபாய் பட்டேல் மனக்காழ்ப்பும் வன்மமும் சுடுசொல்லும் கொண்ட தமது சொற்களில் காஞ்சிகளையும், மோச்சிகளையும் மட்டுமே குறிப்பிட்ட போதிலும், இந்த நாட்டின் அடிமட்ட வகுப்புகளிடம் ஆதிக்க வகுப்புகளும் காங்கிரஸ் மேலிடமும் கொண்டுள்ள பொதுவான வெறுப்பையும் இகழ்ச்சியையுமே அவருடைய உரை குறிக்கிறது என்பதில் அணுவளவும் ஐயமில்லை. மேலும், ஆதிக்க வகுப்பினரும் காங்கிரஸ் மேலிடமும் கொண்டுள்ள இந்த விபரீதப் போக்கை தேர்தல் பிரசாரத்தின்போது நடைபெற்ற சில நிகழ்ச்சிகளிலிருந்தும் தெரிந்து கொள்ளலாம். அவை ஆதிக்க வகுப்பினரதும் காங்கிரசினதும் உண்மை சொரூபத்தை அம்பலப்படுத்துபவையாகவும், சில கசப்பான் உண்மைகளை வெளிப்படுத்துபவையாகவும் இருப்பதால் அவற்றை இங்கு விசேடமாகக் குறிப்பிடுவது முற்றிலும் பொருத்தமானதாக இருக்கும்.

திரு. காந்தி 1919ல் காங்கிரசைக் கைப்பற்றியதிலிருந்து சுயராஜ்யக் கோரிக்கைக்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்தை இணங்க வைக்கும் நிர்ப்பந்த நடவடிக்கைகளில் ஒன்றாக சட்டமன்றப் பகிஷ்காரத்தை காங்கிரஸ்காரர்கள் கருதி வந்துள்ளனர். இந்தக் கொள்கையின்படி, தேர்தல் நடைபெறும் ஒவ்வொரு சமயத்திலும் அதில் கலந்து கொள்வதில்லை என்று காங்கிரஸ் தீர்மானித்து வந்தது; காங்கிரஸ் சார்பில் வேட்பாளர் எவரையும் நிறுத்தாததோடு, சுயேச்சை வேட்பாளராகப் போட்டியிட முன்வரும் எந்த இந்துவையும் எதிர்த்துக் கடுமையான பிரசாரமும் செய்து வந்தது. இத்தகைய கொள்கையின் தகுதி பற்றி எவரும் சர்ச்சை செய்ய வேண்டியதில்லை. ஆனால் இந்துக்கள் சுயேட்சை வேட் பாளர்களாகப் போட்டியிடுவதைத் தடுப்பதற்கு காங்கிரஸ் கையாண்ட வழிமுறைகள்' என்ன? சட்டமன்றங்களை இகழ்ச்சிக்கும் ஏளனத்துக்கும், அவமதிப்புக்கும் வெறுப்புக்கும் உரியவையாக சித்தரித்துக் காட்டும் கீழ்த்தரமான வழிகளை அவர்கள் கையாண்டனர். இதன்படி, பல்வேறு மாகாணங்களில் விதம் விதமான விளம்பர அட்டைகளைத் தாங்கிச் செல்லும் ஊர்வலங்களை காங்கிரஸ் நடத்தத் தொடங்கிற்று; ''சட்டமன்றங்களுக்கு யார் செல்வார்கள்? சவரம்

செய்பவர்களும், செருப்புத் தைப்பவர்களும், குயவர்களும், தோட்டிகளும்தான் அங்கு செல்வார்கள்'' என்ற சுலோகங்கள் அந்த அட்டைகளில் எழுதப்பட்டிருந்தன. ஊர்வலத்தில் செல்லும் ஒருவர் சுலோகத்தின் ஒரு பகுதியாக மேற்கண்ட கேள்வியை உரத்த குரலில் கேட்பார்; கூட்டத்தினர் சுலோகத்தின் இரண்டாவது பகுதியை இதற்குப் பதிலாக முழக்கமிடுவர். எவரும் தேர்தலில் நிற்காதபடி தடுப்பதற்கு இது போதுமானதல்ல என்பதை காங்கிரஸ்காரர்கள் கண்டபோது, இவற்றைவிட கடுமையான நடவடிக்கைகளை எடுப்பதெனத் தீர்மானித்தனர். சவரம் செய்வோர், குயவர்கள், தோட்டிகள் போன்றோருடன் சேர்ந்து சட்டமன்றங்களில் தாங்கள் அமர நேரிடும் என அஞ்சி கௌரவமானவர்கள் தேர்தல்களில் போட்டியிட மாட்டார்கள் எனக் காங்கிரஸ் நம்பிற்று. இந்த நம்பிக்கையோடு, இந்தக் கீழான வகுப்புகளைச் சேர்ந்த வேட்பாளர்களை காங்கிரஸ் சார்பில் நிறுத்தி அவர்களை வெற்றி பெறச் செய்யும் அளவுக்கும் காங்கிரஸ் சென்றது. காங்கிரசின் இந்த அருவருப்பான நடத்தைக்கு சான்று கூறும் சில நிகழ்ச்சிகளை இங்கு கூறுவது பொருத்தமாக இருக்கும். 1920 தேர்தலில் மத்திய மாகாண சட்ட மன்றத்திற்கு ஒரு செருப்புத் தைக்கும் தொழிலாளியைத் தேர்ந்தெடுத்தது.[1] 1930ஆம் ஆண்டுத் தேர்தலில் மத்திய மாகாணங்களில் இரண்டு செருப்புத் தைக்கும் தொழிலாளர்களையும்[2], ஒரு பால்காரரையும்[3], ஒரு சவரத் தொழிலாளியையும்[4], பஞ்சாபில் ஒரு தோட்டியையும்[5] காங்கிரஸ்காரர்கள் தேர்ந்தெடுத்தனர். 1934ல் மத்திய சட்டமன்றத்திற்கு ஒரு குயவரை[6] காங்கிரஸ் தேர்ந்தெடுத்து அனுப்பிற்று. இதெல்லாம் பழங்கதை என்று கூறலாம். இந்தக் கருத்து சரியானதல்ல என்பதை மெய்ப்பிக்க 1943ல், பம்பாயின் புறநகர்ப் பகுதியான அந்தேரியில் நடைபெற்ற நகரசபைத் தேர்தல்களில் என்ன நிகழ்ந்தது என்பதை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். நகரசபைத் தேர்தல்களை மற்றவர்கள் பகிஷ்கரிக்கச் செய்ய வேண்டும் என்ற நயவஞ்சக நோக்கத்துக்காக காங்கிரஸ் ஒரு சவரத் தொழிலாளியை வேட்பாளராக நிறுத்திற்று.

1. ஃபகுவா ரோஹிதாஸ்.
2. குரு கோரிசைன் அகம்தாஸ் மற்றும் பலராஜ் ஜைஸ்வார்.
3. சுன்னு
4. அர்ஜுன்லால்
5. பன்ஸிலால் சௌதாரி
6. பகத் சண்டி மால்கோலா

எத்தகைய வெங்கொடுமை! அயர்லாந்திலுள்ள சின் ஃபெயின் இயக்கமும் கூட பிரிட்டிஷ் பாராளுமன்றத்தைப் பகிஷ்கரிக்கவே செய்தது. ஆனால் தங்கள் நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்வதற்காக தங்கள் நாட்டு மக்களையே அவர்கள் இவ்வாறு அருவருக்கத் தக்க முறையில் பயன்படுத்திக் கொண்டார்களா? 1930ல் இந்தியாவில் நடைபெற்ற சட்டமன்றப் பகிஷ்கார இயக்கம் ஒருவகையில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். நாம் மேலே குறிப்பிட்ட சம்பவங்கள் நடைபெற்ற 1930ஆம் வருட மாகாண சட்டமன்றத் தேர்தல்களின் போதுதான் திரு. காந்தியின் 1930 ஆம் வருட உப்பு சத்தியாக்கிரகமும் நடைபெற்றது! அச்சமயம் எவ்வாறு திரு. காந்தி சில கோரிக்கைகளை வைசிராய் இர்வின் பிரபுவிடம் முன்வைத்து அவை குறிப்பிட்ட கால கெடுவுக்குள் நிறைவேற்றப்பட வேண்டுமென வற்புறுத்தினார் என்பதையும், இக்கோரிக்கைகளை வைசிராய் ஏற்காவிட்டால் சட்ட மறுப்பு இயக்கம் நடத்த எவ்வாறு திரு. காந்தி தீர்மானித்தார் என்பதையும், இது சம்பந்தமான தனது எச்சரிக்கையை வைசிராயிடம் தெரிவிக்க எவ்வாறு திரு. காந்தி ஓர் ஆங்கிலேயரைத் தேர்ந்தெடுத்தார் என்பதையும், எவ்வாறு திரு. காந்தி தனது தாக்குதலுக்கு உப்புச் சட்டத்தைத் தேர்ந்தெடுத்தார் என்பதையும், எவ்வாறு அவர் தண்டியை போராட்டக் களமாகப் பொறுக்கியெடுத்தார் என்பதையும், எவ்வாறு அவர் இந்த இயக்கத்துக்குத் தாமே தலைமை தாங்க முடிவு செய்தார் என்பதையும், எவ்வாறு அவர் ஆமதாபாத்திலுள்ள தமது ஆசிரமத்திலிருந்து ஆடம்பர ஆர்ப்பாட்டமாக பவனி புறப்பட்டார் என்பதையும், எவ்வாறு ஆமதாபாத் பெண்மணிகள் அவருக்கு ஆரத்தி எடுத்தும், நெற்றியில் வெற்றித் திலகமிட்டும் அவரை வழியனுப்பி வைத்தார்கள் என்பதையும், இந்தியாவுக்கு சுதந்திரம் பெற்றுத் தருவதற்கு குஜராத் மட்டுமே கூடப் போதும் என்று எவ்வாறு திரு. காந்தி அவர்களுக்கு உறுதி கூறினார் என்பதையும், சுயராஜ்யம் கிடைக்காமல் தாம் ஆமதாபாத்துக்குத் திரும்பப் போவதில்லை என்று எவ்வாறு திரு. காந்தி பிரகடனம் செய்தார் என்பதையும் எதிர்கால காங்கிரஸ் வரலாற்றாசிரியர்கள் பதிவு செய்வார்கள் என்று நம்புகிறேன். அதேசமயம் இன்னொரு விஷயத்தையும் அவர்கள் குறிப்பிடத்தவற மாட்டார்கள் (காங்கிரசின் அதிகாரப்பூர்வமான வரலாற்றாசிரியரான டாக்டர் பட்டாபி சீத்தாராமய்யா இதைச் செய்யத் தவறிவிட்டார்) என்று எதிர்பார்க்கிறேன்; அதாவது மக்களின் சார்பில் மக்களுக்காக நாங்கள் சுயராஜ்யப் போராட்டத்தில் ஈடுபட்டிக்கிறோம் என்று காங்கிரஸ்காரர்கள் ஒருபுறம் கூறிக் கொண்டு இன்னொருபுறம் இதே ஆண்டில் அதே மக்களை வெறுத்தொதுக்கப்

பட வேண்டியவர்களாக, தவிர்க்கப்பட வேண்டியவர்களாகப் பகிரங்கமாப் படம்பிடித்துக் காட்டி அவர்களுக்கு எதிராக கொடிய அட்டூழியங்கள் புரிந்து வருகிறார்கள் என்பதையும் அவர்கள் பதிவு செய்யத் தவற மாட்டார்கள் என்று நம்புகிறேன்.

கீழ்மட்ட வகுப்பினர்கள் பால் இந்தியாவிலுள்ள ஆதிக்க வகுப்பினர்கள் காட்டும் மனப்பாங்கு இத்தகையதாகும்.

## IV

இந்த ஆதிக்க வகுப்பினர்களின் கீழ் இந்தியாவின் கீழ்மட்ட வகுப்பினர்களின் கதி எப்படி இருக்கும்?

சுயராஜ்யம் உதித்ததும் கீழ்மட்ட வகுப்பினர்களுக்கு - காங்கிரஸ் மக்கள் என்ற கூறுகிறது, ஆதிக்க வகுப்பினர்களால் அடிமைகள் போல் நடத்தப்படும் அடிமட்ட வகுப்பினர் என்றே உண்மையில் அவர்களைக் குறிப்பிட்டிருக்க வேண்டும் - மந்திரத்தில் மாங்காய் விழுவது போல் பல அற்புதங்களை நிகழ்த்தப் போவதாக படாடோபமாக காங்கிரஸ் பறைசாட்டுகிறது. புரட்சிகர மாற்றங்களைச் செய்யவே தான் விரும்புவதாகவும், ஆனால் அதற்கான அதிகாரம் தன்னிடம் இல்லை என்னும், எனவே சுயராஜ்யத்திற்காகக் காத்திருக்க வேண்டும் என்றும் அது பசப்புகிறது. இந்த வெறும் வாய்ச்சவடால் பேச்சுதான் அப்பாவியான அயல்நாட்டவரை எளிதில் ஏமாற்றுவதற்குப் பயன்படுத்துகிறது. இந்தக் கூற்றுக்குப் பின்னாலுள்ள சொற்சிலம்பத்தையும் வீம்புரையையும் ஒதுக்கி வைத்துவிட்டு, ஒருவர் பின்வருமாறு வினவக்கூடும்: இந்தியா முழு அரசுரிமை படைத்த ஒரு சுதந்திர நாடாக ஆன பிறகு உண்மையில் என்ன நிகழும்? எது எப்படியிருப்பினும் ஒன்று மட்டும் நிச்சயம். சுதந்திரம் என்னும் மந்திரக்கோலால் ஆதிக்க வகுப்பு மறைந்துவிட மாட்டாது. அது என்றும் போல் சிரஞ்சீவியாக இருக்கும். அது மட்டுமல்ல, கொடுங்கனா போல் வந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்திய பூதத்திடமிருந்து விடுபட்ட காரணத்தால் அது முன்னிலும் வலுவும் வலிமையும் பெற்றதாக இருக்கும். எல்லா நாடுகளிலும் ஆதிக்க வகுப்புகள் செய்வது போன்றே அது அதிகாரத்தைக் கைப்பற்றும். சுருக்கமாகக் கூறினால் சுயராஜ்யம் மக்களின் அரசாங்கமாக இருக்காது; மாறாக அது ஆதிக்க வகுப்பால் நடத்தப்படும் அரசாங்கமாகவே இருக்கும்; மக்களால், மக்களுக்காக நடத்தப்படும் அரசாங்கமாக இருக்காது; அதற்குப்

பதிலாக ஆதிக்க வகுப்பின் சித்தம் எப்படியோ அப்படி அது இருக்கும்.

இந்தியா முழு அரசுரிமை படைத்த சுதந்திர அரசாக மாறியதும் ஆதிக்க வகுப்பினர் என்ன செய்வார்? அவர்கள் குத்தகைச் சட்டங்களைத் திருத்துவார்கள்; ஆரம்பக் கல்வியை விஸ்தரிப்பார்கள்; மது விலக்கை அமல்படுத்துவார்கள்; சர்க்காக்களைச் சுற்றுவதற்கு மக்களுக்குப் பயிற்சி அளிப்பார்கள்; சாலைகள் போடுவார்கள், கால்வாய்கள் வெட்டுவார்கள்; நாணய செலாவணியை சீர்திருத்துவார்கள்; எடுத்தலளவையும் முகத்தலளவைகளையும் செம்மை செய்வார்கள்; மருத்துவமனைகளையும் மருந்தகங்களையும் திறப்பார்கள்; அடிமட்ட வகுப்பினர்களின் நிலைமையை மேம்படுத்த இதர பல நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வார்கள் என்றெல்லாம் சிலர் எதிர்பார்க்கின்றனர். அடிமட்ட வகுப்புகளைச் சேர்ந்த எவரும் இத்தகைய திட்டங்களைக் கண்டு உற்சாக மிகுதியால் மிகவும் துள்ளிக் குதிக்க மாட்டார்கள்: ஏனென்றால் முதலாவதாக மிகவும் பெருமைப் படத்தக்க எதுவும் இதில் இல்லை. இன்றைய உலகில், சமுதாயத்தை நாகரிக நிலையில் பேணிக் காப்பதற்கு அவசியமான சீர்திருத்தங்களைச் செய்யாமல் எந்த ஆதிக்க வகுப்பாலும் இருக்க முடியாது. இத்தகைய சர்வசாதாரண சமூக மேம்பாட்டுத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்குக் கூட இந்தியாவிலுள்ள ஆதிக்க வகுப்பினர் முன் வருவார்களா என்பது ஐயமே என்பது என் சொந்தக்கருத்து. பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தை விட காங்கிரஸ் சிறந்தது என்பதை வெளி உலகுக்குக் காட்டும் ஆர்வத்தால் உந்தப்பட்டே காங்கிரஸ் இத்தகைய திட்டத்தை பறைசாற்றுகிறது என்பதை பெரும்பாலான மக்கள் மறந்துவிடுகிறார்கள். ஆனால் அதிகார வர்க்கம் ஒழித்துக் கட்டப்பட்டதும் மக்களின் நிலையை மேம்படுத்தும் இதே ஆர்வம், அக்கறை இருக்குமா? இது விஷயத்தில் எனக்கு மிகுந்த ஐயப்பாடு உண்டு. இது ஒருபுறமிருக்க, சமூக மேம்பாடுதான் சுயராஜ்யத்தின் எல்லாமுமே ஆகுமா? அடிமட்ட வகுப்பினர் சார்பில் ஒன்றைக் கூறிக் கொள்ள விரும்புகிறேன்: முழு அரசுரிமைப்படைத்த சுதந்திர இந்தியாவில் ஒரு வாழ்க்கைத் தத்துவம் என்ற முறையிலும், ஒரு சமூக அமைப்பு என்ற முறையிலும் பிராமணீயம் அடியோடு ஒழித்துக் கட்டப்பட வேண்டும், ஆழ குழிதோண்டிப் புதைக்கப்பட வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள் என்பதில் எனக்கு எந்த ஐயமும் இல்லை. இவ்வாறில்லாமல் சமூக மேம்பாடு குறித்து அவர்களுக்கு எத்தகைய அக்கறையும் இல்லை என்று துணிந்து கூறுவேன். அவர்களுடைய வறுமையும் இல்லாமையும் நேர்மையற்ற, கொடிய,

நச்சுத்தனமான சமூக அமைப்பில் அவர்கள் அனுபவிக்கும் அவமதிப்பு, அவமரியாதை, ஏளனம், இகழ்ச்சி, நிந்தை, பரிகாசம் இவற்றுடன் ஒப்பிடும்போது அத்தனை ஒன்றும் பெரிதல்ல. அவர்களுக்கு வேண்டியது மானமும் மரியாதையுமே தவிர ரொட்டியல்ல. ஆதலால் இங்கு எழும் கேள்வி இதுதான்: இந்தியாவிலுள்ள ஆதிக்க வகுப்பினர்கள் அரசு எந்திரத்தைக் கைப்பற்றிய பிறகு சமூக மேம்பாட்டுத் திட்டத்திலிருந்து வேறுபட்டதொரு திட்டத்தை அதாவது சமூக அமைப்பைச் சீர்திருத்தும் திட்டத்தை மேற்கொள்வார்களா?

இந்தியா மட்டும் முழு அரசுரிமை படைத்த நாடாக, சுதந்திர நாடாக இருக்குமாயின் எத்தனை எத்தனையோ அற்புதங்களை காங்கிரஸ் புரிய முடியும் என்று காங்கிரஸ்காரர்கள் கூறுகிறார்கள். சரி, இது வெறும் பிரசாரமல்ல, மெய்யான விழைவு, நாட்டம் என்றே வைத்துக் கொள்வோம். அப்போது மக்கள் விரும்புவதைச் செய்ய வேண்டுமானால் அதற்கு அதிகாரம் தேவை என்ற கருத்தின் அடிப்படையில் செயல்பட காங்கிரஸ் முற்படக்கூடுமல்லவா? இத்தகைய கருத்து பரிதாபத்துக்குரியது மட்டுமல்ல, உண்மையில் ஓர் அபாயகரமான போலி நம்பிக்கையுமாகும். இத்தகைய ஒரு விபரீதக் கற்பனையில் மூழ்கிப் போவதில் நாட்டம் கொண்டோர் அரசதிகாரத்துக்கும், அது எத்தனைதான் முழுமையானதாக இருந்தாலும், சில கடுமையான வரையறைகள் உண்டு என்பதை மறந்து விடுகிறார்கள். இந்த வரம்புகளை மிகவும் தெள்ளத் தெளிந்த வார்த்தைகளில் கூறியவர் டிசேயைவிட வேறு யாரும் இருக்க முடியாது. அவர் தமது அரசியலமைப்புச் சட்டத் தொகுதியில் பின்வருமாறு கூறுகிறார்:-

> ''எந்த ஓர் ஆட்சியாளனும், குறிப்பாக நாடாளுமன்றம் கையாளும் அதிகாரம் இருவகை வரம்புகளுக்கு உட்பட்டுள்ளது அல்லது கட்டுப்பட்டுள்ளது. இவற்றில் ஒன்று புறவயவரம்பு; மற்றொன்று அகவயவரம்பு.
>
> ''ஓர் ஆட்சியாளனது உண்மையான அதிகாரத்தின் அகவய வரம்பு அவனது குடிமக்கள் அல்லது அவர்களில் பெரும் எண்ணிக்கையினர் அவனது சட்டங்களுக்குக் கீழ்ப்படிய மறுக்கும் அல்லது அவற்றை எதிர்க்கும் சாத்தியக் கூறில் அல்லது நிச்சயத்தன்மையில் அடங்கியுள்ளது.
>
> ''மிகவும் வல்லாட்சியான, கொடுங்கோன்மையான முடியாட்சிகளில் கூட இந்த வரம்பு நிலவுகிறது. பதினெட்டாம்

போக்குடையதாகவும் இருக்கும். இந்த வேறுபாடுகள் பற்றிய உண்மையை உணர்ந்து கொண்ட அயல்நாட்டவர் இதர நாடுகளில் ஆதிக்க வர்க்கத்தினரை ஒரு கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பதற்கு வெறும் வயதுவந்தோர் வாக்குரிமையே போதுமானதாக இருப்பதையும் ஆனால் இந்தியாவில் வயதுவந்தோர் வாக்குரிமையால் அத்தகைய பலனை ஏற்படுத்த இயலாமற் போவதையும் காண்பார்கள். இதனால் சுதந்திர இந்தியாவை ஜனநாயகத்துக்குப் பெரிதும் பாதுகாப்பானதாக ஆக்கும் ஆர்வத்தில் அரசியலமைப்புச் சட்டத்தில் கூடுதல் பாதுகாப்புகளைக் கோரிவரும் தீண்டப்படாதவர்கள் போன்றவர்கள் இந்தப் பாதுகாப்பை எதிர்த்து வருபவர்களும், சுதந்திர இந்தியாவை ஆதிக்க வகுப்பினர் கைகளில் தாரை வார்த்திட எண்ணியுள்ள காங்கிரசை விடவும் அதிக ஆதரவு பெற வெகுவாகத் தகுதியுடையவர்களாகின்றனர்.

அடுத்து, இரண்டாவது அம்சம் குறித்த முழு விவரங்களும் அயல் நாட்டவர் கண்முன்னே இருக்கின்றன. இவற்றிலிருந்து காங்கிரசுக்கும் ஆதிக்க வகுப்பினருக்கும் இடையே எவ்வளவு நெருங்கிய ஒட்டும் உறவும் உள்ளது என்பதை அவர் தெள்ளத் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியும். இதேபோல், இந்தியாவிலுள்ள ஆதிக்க வகுப்பினர் தங்களை காங்கிரசின் முன்னணிப்படையினராக ஏன் கருதுகின்றனர் என்பதற்கும், எல்லோரையும் காங்கிரசின் அரவணைப்பிற்குள் கொண்டு வருவதற்கு அவர்கள் ஏன் அயராது பாடுபட்டு வருகின்றனர் என்பதற்கும் இதில் விளக்கம் காணமுடியும். இரத்தினச் சுருக்கமாகக் கூறினால், வகுப்பு சித்தாந்தம், வகுப்பு நலன்கள், வகுப்புப் பிரச்சினைகள், வகுப்பு மோதல்கள் இவற்றை அடிப்படையாகக் கொண்ட ஓர் அரசியல் இயக்கம் தனக்கு சாவுமணி அடிக்கும் என்பதை ஆதிக்க வகுப்பு நன்கு உணர்ந்துள்ளது. கீழ் வகுப்புகளைத் திசை திருப்புவதற்கும் அவற்றை ஏமாற்றுவதற்கும் மிகச் சிறந்த வழி தேசிய உணர்வையும், தேச ஒற்றுமையையும் நன்கு பயன்படுத்திக் கொள்வதுதான் என்பதை அது நன்கு அறியும். ஆதிக்க வகுப்பின் நலன்களைப் பெரிதும் பயனுள்ள முறையில் பாதுகாப்பதற்கு ஒரே மேடை காங்கிரஸ் மேடைதான் என்பதையும் அது தெரிந்து வைத்துள்ளது. பணக்காரனுக்கும் ஏழைக்கும், பிராமணனுக்கும் பிராமணனல்லாதவனுக்கும், நிலப்பிரபுவுக்கும் குத்தகைக்குப் பயிர் செய்பவனுக்கும், லேவாதேவிக்காரனுக்கும் கடன்பட்டவனுக்கும் இடையே உள்ள மோதல்களைப் பற்றிப் பேசுவது ஆதிக்க வகுப்புக்குப் பிடிக்காத விஷயம். இவற்றைப் பற்றி எல்லாம் பேசமுடியாத ஒரு மேடை இருக்க முடியுமானால் அது காங்கிரஸ் மேடையாகத்

தான் இருக்க முடியும். இத்தகைய மேடையில் தேசியத்தையும் தேச ஒற்றுமையையும் பற்றித்தான் பிரசாரம் செய்ய முடியும். இதன் மேடையிலிருந்து தேசியத்துக்கு முரண்பாடான வேறு எதையும் பிர சாரம் செய்ய முடியாது. இதைத்தான் ஆதிக்க வகுப்பு விரும்புகிறது. இதில்தான் அதன் பாதுகாப்பு முழுவதுமே அடங்கியுள்ளது.

இந்த இரண்டு அம்சங்களையும் கிரகித்துக் கொண்டு விட் டால் மூன்றாவது அம்சத்தை அதாவது கீழ்த்தட்டு வகுப்புகளின் அரசியல் கோரிக்கைகளுக்கான மூல காரணங்களைப் புரிந்து கொள் வதில் அயல்நாட்டவருக்கு எந்தச் சிரமமும் இருக்காது.

கீழ்த்தட்டு வகுப்புகள் கோரும் தனி இட ஒதுக்கீடுகள் ஆதிக்க வகுப்பார்களின் அதிகாரத்தை உண்மையில் கட்டுப்படுத்துகின்றன. ஐரோப்பிய நாடுகளில்கூட சமுதாயத்தின் சில பிரிவினரது அதிகாரங் களைக் கட்டுப்படுத்த வேண்டும் என்ற ஒரு கோரிக்கை இருந்து வருகிறது. உற்பத்தியாளர்கள், விநியோகஸ்தர்கள், லேவாதேவிக் காரர்கள், நிலப்பிரபுக்கள் போன்றோர் மீது கட்டுப்பாடு இருக்கிறது. இந்தியாவில் இருப்பதைவிட நலன்கள் பெரிதும் ஒருபடித்தானவை யாகவும், ஒரே மாதிரியானவையாகவும் இருக்கும் நாடுகளில் சில வர்க்கங்களின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்துவது அவசியம் என்று ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பதை பாராட்டுவதில் அயல்நாட்டவ ருக்கு சிரமம் ஏதும் இருக்காது. இத்தகைய பாதுகாப்புகள் அரசியல் அதிகாரம் ஆதிக்க வகுப்பாரின் கைகளில் சிக்கிவிடுவதைத் தடுக்கும் பொருட்டு அரசியலமைப்பை சமூக அமைப்புகளுடன் பரஸ்பரம் தொடர்புடையதாக்க வகை செய்கின்றன.

இதுவரை முன்வைக்கப்பட்டுள்ள கண்ணோட்டத்தை அயல் நாட்டவர் ஏற்கத் தயாராக இல்லாவிட்டாலும் பரவாயில்லை. ஆனால் இவ்வளவு விளக்கங்களும், விவரங்களும், வாதங்களும் முன்வைக்கப்பட்ட பிறகு காங்கிரஸ் பிரசாரத்திற்கு மற்றொரு பக்கம் இருக்கிறது என்பதையாவது குறைந்தபட்சம் ஏற்பதில் அயல் நாட்ட வருக்கு எந்தச் சிரமமும் இருக்கும் என்று நான் நம்பவில்லை. மேலே தெரிவித்த உண்மைகளையும் புள்ளி விவரங்களையும் தெரிந்து கொண்ட பிறகும் காங்கிரஸ் கண்ணோட்டத்தை ஏற்காதவர்கள் பால் அமைதியான, உணர்ச்சிகளுக்கு இடம் கொடுக்காத நடுநிலை உணர்வு கொண்ட ஒரு போக்கை அயல் நாட்டவர் கைக்கொள்ள இயலவில்லை என்றால் அவரது இயல்பையும் விவேகத்தையும் பற்றித் தவறான கருத்தையே மேற்கொள்ள வேண்டியிருக்கும்.

# IX

இந்திய அரசியல் குறித்த அயல்நாட்டவரின் கண்ணோட்டத்தில் ஒரு வருந்தத்தக்க அம்சம் இருக்கிறது; அதனை இங்கு குறிப்பிடாமல் இருப்பது சாத்தியமல்ல, இந்திய அரசியலில் ஆர்வமும் அக்கறையும் கொண்டிருக்கும் அயல் நாட்டினரை மூன்று பகுதியினராகப் பிரிக்கலாம். முதல் பகுதியினர் இந்திய அரசியலை அதலகுதலப்படுத்தும் சமூக பிளவுகளையும், பெரும்பான்மையினருக்கும் சிறுபான்மையினருக்கும் இடையேயான பிளவுகளையும், இந்துக்களுக்கும் தீண்டப்படாதோருக்கும் இடையேயான பிளவுகளையும் நன்கு அறிந்தவர்கள். தகுந்த அரசியல் சட்டப் பாதுகாப்புகள் மூலம் இந்தப் பிளவுகளைச் சரிசெய்துவிடக்கூடாது, அரசியல் சட்ட ரீதியில் இந்தியா முன்னேறுவதற்கு வழி திறந்து விட்டு விடக்கூடாது, மாறாக அரசியல் சட்ட முன்னேற்றத்தை இந்தப் பிளவுகளைப் பயன்படுத்தித் தடுத்து நிறுத்திட வேண்டும் என்பதே இவர்களது பிரதான நோக்கம். இரண்டாவது பகுதியினர் இந்தப் பிளவுகள் குறித்து எத்தகைய கவனமும் செலுத்தாதவர்கள்; சிறுபான்மையினருக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் என்ன நேர்ந்தாலும் அதைப் பற்றி அணுவளவும் கவலைப்படாதவர்கள். அவர்கள் காங்கிரஸ் கோரிக்கையை முற்றிலுமாக ஆதரிப்பவர்கள்; பாதுகாப்புகளைப் பற்றி எவ்வகையிலும் அலட்டிக்கொள்ளாமல் காங்கிரஸ் கோரிக்கையை நிறைவேற்ற சித்தமாக இருப்பவர்கள். மூன்றாவது பகுதியினர் இந்தியாவைப் பற்றி ஏதேனும் தெரிந்து கொள்வதற்காக வரும் பயணிகள்; ஒரே நாளில் இந்திய அரசியலைக் கரைத்துக் குடித்து விட்டதாகக் கற்பனை செய்து கொள்பவர்கள். இந்த மூன்று வகையினருமே அபாயகரமானவர்கள். ஆனால் இந்திய மக்களின் இறுதி நலன்கள் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது மூன்றாவது பகுதியினர் மிகவும் அபாயகரமானவர்கள்.

வழிப் போக்கர்கள் போன்ற அயல்நாட்டினரால் இந்திய அரசியலின் நுட்பங்களைப் புரிந்து கொள்ள முடியாது; எனவே, சாம்வெல்லருக்கு திரு. பிக்விக் அறிவுரை கூறியதுபோல் மிகப் பெரும் கும்பலோடு சேர்ந்து கூச்சல் போடும் வகையில் அவர்கள் காங்கிரசை ஆதரிக்கிறார்கள்; இது முற்றிலும் புரிந்து கொள்ளக் கூடியதே. ஆனால் அடக்கப்பட்டவர்களின் ஒடுக்கப்பட்டவர்களின் நலனுக்காகப் பாடுபடுவதாகக் கூறிக் கொள்ளும் லாஸ்கி, கிங்ஸ்லே மார்ட்டின், பிரெய்ல்ஸ்போர்டு போன்ற பிரிட்டிஷ் தொழிற்கட்சித்

தலைவர்களும், ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலுமுள்ள இடது சாரிக் குழுக்களின் தலைவர்களும், அமெரிக்காவில் நேஷன், இங்கிலாந்தில் நியூ ஸ்டேட்ஸ்மேன் போன்ற பத்திரிகைகளின் ஆசிரியர்களும் கடைப்பிடிக்கும் போக்குதான் மிகுந்த கவலை தருவதாகவும், அதிர்ச்சி அளிக்கக் கூடியதாகவும் இருக்கிறது. இவர்கள் எவ்வாறு காங்கிரசை ஆதரிக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. காங்கிரஸ் என்றால் ஆதிக்க வகுப்பினர், ஆதிக்க வகுப்பினர் என்றால் காங்கிரஸ் என்பது அவர்களுக்குத் தெரியாதா? இந்தியாவில் ஆதிக்க வகுப்பினராக இருப்பது பிராமணன் - பனியா கூட்டுதான் என்பது அவர்களுக்குத் தெரியாதா? காங்கிரசில் ஈர்க்கப்படும் மக்கள் 'காந்திக்கும் காங்கிரசுக்கும் ஜே' போடும் வெறும் தொண்டர் திருக்கூட்டத்தினரே தவிர காங்கிரஸ் கொள்கையை வகுப்பதில் அவர்களுக்கு எந்தப் பங்கும் இல்லை என்பது அவர்களுக்குத் தெரியாதா? எந்தக் காரணங்களால் சுல்தானால் இஸ்லாமை ஒழித்துக் கட்ட முடியாதோ, எந்தக் காரணங்களால் போப்பாண்டவரால் ரோமன் கத்தோலிக்க சமயக் கோட்பாடுகளை மறுதலிக்க முடியாதோ அதே காரணங்களால் இந்தியாவிலுள்ள ஆதிக்க வகுப்பினர்கள் பிராமணீயத்தை ஒழித்துக் கட்ட முன்வர மாட்டார்கள் என்பது அவர்களுக்குத் தெரியாதா? இந்தியாவின் ஆதிக்க வகுப்பினர்கள் இப்போதிருப்பதுபோல் தொடர்ந்து இருந்தால், பிராமணர்களின் மற்றும் அவர்களை ஒத்தவர்களின் மேலாதிக்கத்தைப் பறைசாற்றும் பிராமணீயம், சூத்திரர்களையும் தீண்டப்படாதவர்களையும் அடக்கி ஒடுக்குவதையும் அவர்களை இழிவுபடுத்துவதையும் அரசின் புனிதமான கடமையாக அங்கீகரிக்கும் பிராமணீயம் இந்தியா சுதந்திரமடைந்த பிறகும் அரசின் சித்தாந்தமாகத் தொடர்ந்து இருந்து வரும் என்பது அவர்களுக்குத் தெரியாதா? இந்தியாவின் இந்த ஆதிக்க வகுப்பினர் இந்திய மக்களின் ஒரு பகுதியினர் அல்லவென்பதும், அவர்களிடமிருந்து அறவே தனித்தொதுங்கி இருப்பதோடு, அவர்களால் தங்களுக்குத் தூய்மைக் கேடு ஏற்பட்டு விடாதபடித் தனித்தொதுங்கி இருக்கவே அவர்கள் விரும்புகிறார்கள் என்பதும், அவர்களது அரவணைப்புக்கு வெளியே உள்ளவர்களுக்கு எதிரான நோக்கங்களையும் கருத்துகளையும் பிராமணீய சித்தாந்தத்தின் துணை கொண்டு மக்கள் மனத்தில் திணித்து வருகிறார்கள் என்பதும், தாங்கள் மிதித்துத் துவைத்த அடிமட்ட வகுப்பினர்களிடையே செயல்பட்டு வரும் ஜீவ சக்திகளிடம் எத்தகைய பரிவையும் காட்டுவதில்லை என்பதும், தங்களது ஆர்வ விருப்பங்களுக்கு விரோதமான அவர்களது தேவைகளிலும் கஷ்ட நஷ்டங்களிலும், ஏக்கங்களிலும், விருப்பங்களிலும் ஆதிக்க வகுப்பினர் எத்தகைய அக்கறையும் எடுத்துக்

கொள்வதில்லை என்பதும் இந்த அயல்நாட்டுத் தலைவர்களுக்குத் தெரியாதா? அது மட்டுமல்ல, கீழ்தட்டு வகுப்பினர் கல்வித் துறையில் முன்னேறுவதையும், பதவி உயர்வுகள் பெறுவதையும் ஆதிக்க வகுப்பினர் விரும்பவில்லை என்பதும், தங்களது கௌரவத்தையும் சுயமரியாதையையும் உயர்த்திக் கொள்ளும் நோக்கங்கள் கொண்டு அவர்களது எந்த இயக்கத்தையும் ஆதிக்க வகுப்பினர் எதிர்க்கின்றனர் என்பதும் இந்த அயல்நாட்டினருக்குத் தெரியாதா? இந்தியாவின் சுயராஜ்யத்தில் 6 கோடி தீண்டப்படாதவர்களின் கதிப் போக்கும், எதிர்காலமும் அடங்கியுள்ளது என்பது அவர்களுக்குத் தெரியாதா? சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் பற்றி உள்ளம் உருக, உணர்ச்சி பொங்க, ஆவேசமிக்க முறையில் எழுதி, அனைத்து ஒடுக்கப்பட்ட மக்களுக்கும் ஊக்கமும் உத்வேகமுமளித்த பிரிட்டிஷ் தொழிற்கட்சித் தலைவர்களுக்கும், கிங்ஸ்லே மார்ட்டினுக்கும், பிரெய்ல்ஸ்போர்டுக்கும் இந்த உண்மைகள் எல்லாம் தெரியாது என்று எவரும் கூற முடியாது. அப்படியிருக்கும்போது அவர்கள் இந்தியாவைப் பற்றிக் குறிப்பிடும்போதெல்லாம் காங்கிரசுக்கு ஆதரவு அளிப்பதைப் பற்றியே எப்போதும் பேசுகிறார்கள். தீண்டப் படாதவர்களின் பிரச்சினை பற்றி அவர்கள் விவாதிப்பது மிக மிக அரிது; இத்தனைக்கும் அனைத்து முற்போக்காளர்களும் ஜனநாயக வாதிகளும் தீவிர அக்கறை காட்ட வேண்டிய பிரச்சினை இது. காங்கிரஸ் நடவடிக்கைகளில் அவர்கள் முழுமுதல் அக்கறை காட்டி வருவதும், இந்தியாவின் தேசிய வாழ்வில் இடம் பெற்றுள்ள ஏனைய சக்திகளை அலட்சியம் செய்து வருவதும் அவர்கள் எந்த அளவுக்கு தவறான வழியில் சென்று வருகிறார்கள் என்பதையே காட்டுகிறது. அரசியல் ஜனநாயகத்துக்காக காங்கிரஸ் போராடி வருகிறது என்றால் அவர்கள் காங்கிரசை ஆதரிப்பதை எவரும் புரிந்து கொள்ள முடியும். இவ்வாறுதான் உண்மையில் நடைபெறுகிறதா? காங்கிரஸ் தேசவிடுதலைக்காகப் போராடி வருகிறதே தவிர அரசியல் ஜனநாயகத்தில் அதற்கு அக்கறை இல்லை என்பதை அனைவருமே அறிவர். இந்தியாவில் அரசியல் ஜனநாயகத்துக்காகப் பாடுபட்டு வரும் கட்சி தீண்டப்படாதவர்களின் கட்சியேயாகும். பலவீனமானவர்களும் அடக்கி ஒடுக்கப்பட்டவர்களும் மிதித்துத் துவைக்கப்பட்டவர்களும் அரசியல் சட்டப்பாதுகாப்புகள் அளித்துப் பாதுகாக்கப்பட வேண்டும், அவ்வாறு இல்லாத பட்சத்தில் காங்கிரசின் இந்த சுதந்திரப் போராட்டம் வெற்றிபெறுமானால், இந்தப் பரிதாபத்துக்குரிய, நிராதரவான மக்களை மேலும் நசுக்குவதற்கு வலிமையும் அதிகாரமும் கொண்டவர்களுக்கு சுதந்திரமளிப்பதாகவே முடியும்

என்று தீண்டப்படாதோர் அஞ்சுகின்றனர். அவர்கள்தான் இந்த முற்போக்கான தலைவர்களின் ஆதரவைப் பெற உரிமை பெற்றிருப் பவர்கள். இவர்களிடமிருந்து ஒரு சிறு நல்லெண்ண சமிக்ஞை வராதா, ஆதரவு கிட்டாதா என்று இவர்கள் இத்தனை ஆண்டுகளாக வீணே காத்துக் கொண்டிருந்திருக்கிறார்கள். காங்கிரசுக்குப் பின்னா லுள்ள சக்திகள் யாவை என்று தெரிந்து கொள்வதற்குக் கூட ஐரோப் பாவிலும் அமெரிக்காவிலுமுள்ள இந்த முற்போக்காளர்களும் இடது சாரிகளும் அக்கறை எடுத்துக் கொண்டதில்லை. இதற்குக் காரணம் அறியாமையா அல்லது அக்கறையின்மையா என்று தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் ஒரு விஷயம் தெளிவாகத் தெரிகிறது: முத லாளிகள், நிலப்பிரபுக்கள், லேவாதேவிக்காரர்கள், பிற்போக்காளர் கள் போன்றோரால் நடத்தப்படும் ஸ்தாபனம் காங்கிரஸ்; இத்தகைய தோர் அமைப்புக்கு இவர்கள் கண்ணை மூடிக்கொண்டு, எதிர்ப்போ மறுப்போ இன்று ஆதரவளித்து வருகின்றனர். இதற்கு ஒரே காரணம் காங்கிரஸ் தனது செயல்பாடுகளை ''சுதந்திரப் போராட்டம்'' என் னும் ஆடம்பர ஆர்ப்பாட்ட பெயரால் அழைப்பதே ஆகும். சுதந் திரத்திற்கான எல்லாப் போராட்டங்களுமே தார்மீக அடிப்படை யில் அமைந்தவை என்று கூற முடியாது; ஏனென்றால் இந்தப் போராட்டங்களுக்கான குறிக்கோள்களும் நோக்கங்களும் எப்போதும் ஒரே மாதிரியானவையாக இருப்பதில்லை. பிரிட்டிஷ் வரலாற்றி லிருந்து இதற்கு ஒரு சில உதாரணங்களை மட்டும் இங்கு கூறு வோம். பிரிட்டனில் ஜான் மன்னனை எதிர்த்து பரோன்கள் நடத்திய கிளர்ச்சியை சுதந்திரப் போராட்டம் எனக் கூறுவது தகும்; இந்தக் கிளர்ச்சியின் விளைவாகத்தான் மாக்னகார்ட்டா என்னும் அரசியல் உரிமை சாசனம் உதயமாயிற்று. ஆனால், அதே சமயம் இங்கிலாந் தின் வரலாற்றில் இடம் பெற்ற லெவல்லர்களின் கலகத்துக்கோ அல்லது குடியானவர்கள் கலகத்துக்கோ இன்றைய ஜனநாயக வாதி எவரும் இதே போன்ற ஆதரவை அளிக்க முடியுமா? இவற்றைச் சுதந்திரப் போராட்டம் என்று வருணிக்க முடியுமா? இவ்வாறு செய்வது ஒரு போலி சுதந்திரக் கோஷத்துக்கு ஆதரவளிப்பதாகவே இருக்கும். வாழுவதற்கான சுதந்திரத்திற்கும் ஒடுக்குவதற்கான சுதந்திரத்துக்கு முள்ள வேறுபாட்டைத் தெரிந்து கொள்ளும் அறிவுக்கூர்மை இல் லாதவர்கள் இவ்விதம் பண்பற்ற முறையில் நடந்து கொண்டால் அதனை மன்னித்துவிடலாம். ஆனால் லாஸ்கி, கிங்ஸ்லே மார்ட்டின், பிரெய்ல்ஸ்போர்டு, லூயி பிஷர் போன்ற புகழ்பெற்ற ஜனநாயக வாதிகளைக் கொண்ட முற்போக்கான, இடதுசாரிக் குழுக்கள் விஷ யத்தில் இது எவ்வகையிலும் மன்னிக்க முடியாததாகும்.

- . உண்மையான ஜனநாயகத்துக்காகப் பாடுபடும் இந்தியக் கட்சிகளை நீங்கள் ஏன் ஆதரிக்கவில்லை என்று அவர்களிடம் கேட்டால் அவர்கள் ஓர் எதிர்க்கேள்வியைத் தொடுக்கிறார்கள்: இத்தகைய கட்சிகள் எவையும் இந்தியாவில் இருக்கின்றனவா? இப்படிப் பட்ட கட்சிகள் இருந்துவரவே செய்கின்றன என்று வலியுறுத்திக் கூறினால், அக்கட்சிகளின் செயற்பாடுகளைப் பற்றி பத்திரிகைகள் ஏன் வெளியிடவில்லை என்று கேட்கிறார்கள். பத்திரிகைகள் எல்லாம் காங்கிரசுக்குத் துதிபாடும் காங்கிரஸ் பத்திரிகைகள் என்று கூறினால் அதற்குப் பின்வருமாறு எதிர்வாதம் செய்கிறார்கள்: சரி, அவைதான் காங்கிரஸ் பத்திரிகைகள் என்றால் அயல்நாட்டுப் பத்திரிகைகளின் நிருபர்களாவது வெளியிடலாம் அல்லவா, அதை அவர்கள் ஏன் செய்யவில்லை? இந்த அயல்நாட்டு நிருபர்களிடமிருந்து நல்லது எதையும் எதிர்பார்க்க முடியாது என்பதை நான் எடுத்துக்காட்டினேன். இது விஷயத்தில் அயல்நாட்டுச் செய்தி நிறுவனம் இந்தியப் பத்திரிகைகளைவிட எவ்வகையிலும் மேம்பட்டதல்ல; உண்மையில் அவ்வாறு மேம்பட்டதாகவும் இருக்க முடியாது. அயல்நாட்டு நிருபர்கள் எனப்படுவோர் பலர் இந்தியாவில் இருக்கின்றனர். இவர்களில் பெரும்பாலோர் இந்தியர்களே; ஒரு சிலர்தான் அயல் நாட்டினர். அயல் நாட்டு நிருபர்களாகத் தேர்ந்தெடுக்கப்படுவோரில் அநேகர் கிட்டத்தட்ட எப்போதுமே காங்கிரஸ் முகாமைச் சேர்ந்தவர்களாகவே இருக்கின்றனர். அயல்நாட்டு நிருபர்களாக உள்ள அயல்நாட்டவர்களை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவர்கள் அமெரிக்கர்களாக இருந்தால் பிரிட்டிஷ் எதிர்ப்பாளர்களாக இருக்கின்றனர், இந்தக் காரணத்தால் அவர்கள் காங்கிரஸ் ஆதரவாளர்களாக உள்ளனர். வெறித்தனமான பிரிட்டிஷ் எதிர்ப்பைக் காட்டாத இந்தியாவிலுள்ள எந்த அரசியல் கட்சியும் அவர்களது கவனத்தை ஈர்ப்பதில்லை. 1941-42ல் அமெரிக்க யுத்த நிருபர்கள் ஏராளமானோர் இந்த நாட்டில் குவிந்திருந்தனர்; காங்கிரஸ் ஒன்று மட்டுமே இந்தியாவிலுள்ள ஒரே அரசியல் கட்சி அல்ல என்று அவர்களை நம்ப வைப்பதற்கும் இன்னும் சொல்லப்போனால் இதர அரசியல் கட்சிகள் பால் அவர்களது கவனத்தைத் திருப்புவதற்கும் எவ்வளவு மிகுந்த பிரயாசை எடுத்துக்கொள்ள வேண்டியிருந்தது என்பதை காங்கிரசில் இல்லாதவர்கள் நன்கு அறிவார்கள். இந்த நிருபர்களுக்கு நல்லறிவு திரும்புவதற்கு நீண்டகாலம் ஆயிற்று. அவ்வாறு அவர்களுக்கு விவேகம் திரும்பியபோது ஒன்று எதார்த்த நிலையைப் புரிந்து கொள்ளாதவர்களால் தலைமைதாங்கி நடத்தப்படும் கட்சி என்று அவர்கள் காங்கிரசை சாடினர் அல்லது இந்திய அரசியலிலேயே

அக்கறை காட்டுவதை அடியோடு விட்டு விட்டனர். இதேபோன்று இந்தியாவிலுள்ள இதர கட்சிகள் பாலும் அவர்கள் ஒருபோதும் ஆர்வம் காட்டியதில்லை; அவர்களது கண்ணோட்டம்தான் என்ன என்பதைத் தெரிந்து கொள்ள சிரத்தை எடுத்துக்கொள்ளவும் இல்லை. பிரிட்டிஷ் நிருபர்களது நிலையும் அப்படி ஒன்றும் சிலாகிக்கத் தக்கதாக இல்லை. பிரிட்டிஷ் எதிர்ப்பு வகையைச் சேர்ந்த அரசியலில் மட்டுமே அவர்களும் ஆர்வம் காட்டினர். சுதந்திர இந்தியாவை ஜனநாயகத்துக்குப் பாதுகாப்பானதாக்குவதில் பிரதான கவனம் செலுத்தும் இந்தியாவிலுள்ள ஏனைய அரசியல் கட்சிகளிடம் அவர்கள் எத்தகைய அக்கறையும் காட்டவில்லை. இதன் விளைவாக இந்திய அரசியலைப் பற்றி இந்தியப் பத்திரிகைகள் எத்தகைய செய்திகளை வெளியிடுகின்றனவோ அதே போன்ற செய்திகளையே அயல்நாட்டுப் பத்திரிகைகளும் வெளியிடுகின்றன. இதற்கான காரணங்கள் இந்த முற்போக்காளர்களுக்குத் தெரியாமல் இருக்க முடியாது. நிருபர்களோ, நிருபர்கள் இல்லையோ இந்த முற்போக்காளர்கள் உலகின் ஏனைய பகுதிகளிலுள்ள தம்மையொத்த மனோபாவமுடையவர்களுடன் தொடர்பு கொண்டு எங்கெங்கும் உண்மை ஜனநாயகம் தழைத்தோங்க அவர்களுக்கு உதவுவதும் அவர்களை ஊக்குவிப்பதும் கடமை அல்லவா? இங்கிலாந்தையும் அமெரிக்காவையும் சேர்ந்த முற்போக்காளர்கள் எந்த வர்க்கத்துக்கு உதவி செய்யத் தாம் கடமைப்பட்டிருக்கிறார்களோ அவர்களை மறந்து, உலகை ஏமாற்றவும் அதன் கண்களில் மண்ணைத் தூவவும் சுதந்திரக் கோஷத்தைத் தவறான முறையில் பயன்படுத்தி வரும் இந்திய டோரிகளின் பிற்போக்காளர்களின் விளம்பரத் தரகர்களாக, ஏஜண்டுகளாக மாறியிருப்பது மிகவும் வருந்தத்தக்கதாகும், பெரிதும் துரதிர்ஷ்டவசமானதாகும்.

காங்கிரஸ் விரித்துள்ள மாய வலையிலிருந்து இவர்கள் விரைவிலேயே விடுபடுவதும், சுதந்திரம் அனைவருக்கும் நடைமுறையில், செயலளவில் உரித்தானதாகும் வரை, இந்திய மக்களுக்கு மேம்பட்டதாக, உகந்ததாக ஆகும் வரை இந்தியாவில் ஜனநாயகமும் தன்னாட்சியும் உண்மையானதாக இருக்க முடியாது என்று இவர்கள் உணர்ந்து கொள்வதும் மிக அவசியம். ஆனால் அதற்கு மாறாக, எதார்த்த உண்மைகளுடனும் நோக்கங்களுடனும் சிறிதும் சம்பந்தமில்லாத வெற்று ஆரவாரக் கோஷத்தின் அடிப்படையில் காங்கிரசுக்கு கண்மூடித்தனமாக ஆதரவளிக்கத்தான் செய்வோம் என்று அவர்கள் பிடிவாதம் பிடிப்பார்களேயானால், இவர்களை இந்தியா

வின் நண்பர்கள் என்று கூறுவதைவிட இந்திய மக்களது சுதந்திரத்தின் விரோதிகள் என்று கூறுவதற்கு எவ்வகையிலும் தயங்க மாட்டேன். மற்றவர்களை ஒடுக்குவதற்கு தனக்குள்ள அதிகாரத்தை நிலை நாட்டிக் கொள்வதற்காக சுதந்திரக் கோஷத்தை முன்வைக்கும் ஒரு கொடுங்கோலனுக்கும் அந்தக் கொடுங்கோலனின் அடக்கு முறை யிலிருந்து விடுபடுவதற்குப் பாடுபடும் ஒடுக்கப்பட்ட வகுப்பினருக் கும் உள்ள வேறுபாட்டை அவர்கள் கண்டறிய இயலாது போனது உண்மையிலேயே பரிதாபத்திலும் பரிதாபமானதாகும். இந்தியா வுக்குச் சுதந்திரம் கிட்ட வேண்டுமென்ற அவசரத்தில் காங்கிரசை ஆதரிப்பது இந்தியாவை ஜனநாயகத்துக்குப் பாதுகாப்பானதாக் காது, மாறாக கொடுங்கோலன் தனது கொடுமைகளை, அட்டூழி யங்களை, அக்கிரமங்களை தட்டுத்தடையின்றிச் செய்வதற்கான சுத்ந்திரத்தைத்தான் அவனுக்கு வழங்கும் என்பதை அவர்கள் உணரத் தவறிவிட்டார்கள். காங்கிரசை ஆதரிப்பது என்பதற்கு மற்றவர்களை அடிமைப்படுத்த கொடுங்கோன்மைக்கு சுதந்திரமளிப்பதையே குறிக் கும் என்பதை அவர்களுக்குச் சொல்லவும் வேண்டுமா?



# இயல் 10

# தீண்டப்படாதவர்கள் கூறுவது என்ன?

## திரு. காந்தியைப் பற்றி எச்சரிக்கையாக இருங்கள்

திரு. காந்தி தீண்டப்படாதோரின் ரட்சகர் என்று அவர்கள் மனத்தில் பதியவைக்க காங்கிரஸ்காரர்கள் ஒருபோதும் தயங்குவதில்லை. திரு. காந்தி உண்மையிலேயே ஒரு ரட்சகர்தான் என்று அகில இந்தியாவிலுள்ள காங்கிரஸ்காரர்கள் நம்புவது மட்டுமல்ல, அவர்தான் தீண்டப்படாதோரின் ஒரே பாதுகாவலர் என்று அம் மக்களை நம்பவைப்பதற்கும் முனைந்து ஈடுபடுகின்றனர். இதற்கு சான்று என்ன என்று கேட்டால், தீண்டப்படாதோருக்காக சாகும் வரை உண்ணாவிரதமிருக்க பிரதிக்கினை மேற்கொண்டவர்கள் திரு. காந்தியைத் தவிர வேறு யாரேனும் இருக்கிறார்களா என்று அவர்கள் திருப்பிக் கேட்கின்றனர். புனா ஒப்பந்தத்தின்படி தீண்டப் படாதோருக்கு என்னென்ன அரசியல் உரிமைகள் கிடைத்திருக் கின்றனவோ அவை எல்லாம் காந்தியின் அயராத, சளையாத முயற்சியால் கிட்டியவையேயாகும் என்று சிறிதளவும் மனச்சான்றின் உறுத்தலின்றி தீண்டப்படாதோரிடம் அவர்கள் கூறுகின்றனர். இத்தகைய கட்டுப்பாடான, திட்டமிட்ட பிரசாரத்திற்கு ஓர் உதாரண மாக ராய் பகதூர் மேகர்சந்த் கன்னா[1] கூறியதை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். 1945 ஏப்ரல் 12ஆம் தேதி பெஷாவரில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கழகத்தின் சார்பாக நடைபெற்ற ஒரு கூட்டத்தில் அவர் பின்கண்டவாறு பேசினார்:

''மகாத்மா காந்திதான் உங்களுடைய மிகச் சிறந்த நண்பர். உங்களுக்காக அவர் உண்ணாவிரதம்கூட மேற்கொண்டு, புனா ஒப்பந்தத்தைச் சாதித்தார். இந்த புனா ஒப்பந்தம்தான் உங்களுக்கு வாக்குரிமையை வாங்கித் தந்தது. ஸ்தல ஸ்தாபன அமைப்புகளிலும் சட்டமன்றங்களிலும் உங்களுக்குப் பிரதி நிதித்துவத்தைப் பெற்றுத் தந்தது. உங்களில் சிலர் டாக்டர் அம்பேத்கருக்குப் பின்னால் ஓடிக்கொண்டிருப்பது எனக்குத்

---

1. பிரீபிரஸ் ஜர்னல், 14-4-45

தெரியும்; அவருக்கு வால் பிடித்து வருவதை நான் அறிவேன். ஆனால் டாக்டர் அம்பேத்கர் யார்? பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகளின் சிருஷ்டி அவர்; அவர்களது கையாள் அவர்; இந்தியா துண்டாடப்படவும், அதன் மூலம் பிரிட்டிஷார் தொடர்ந்து ஆட்சிபீடத்தில் ஒட்டிக்கொண்டிருக்கவும் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு அவர் ஆதரவளித்து வருகிறார்; அவர்களது கரங்களைப் பலப்படுத்தி வருகிறார். வேஷம் போட்டு நாடகமாடும் போலித் தலைவர்களையும் உங்களுடைய உண்மையான நண்பர்களையும் பிரித்து இனம் காணுவது உங்கள் நலன்களுக்குத்தான் நன்மை என்பதை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.''

ராய் பகதூர் மேகர்சந்த் கன்னாவின் பேச்சை இங்கு நான் குறிப்பிடுவதைக் கண்டு, அவர் ஏதோ நமது கவனத்திற்குரிய பெரிய மனிதர் என்று தவறாக எடைபோட்டு விடாதீர்கள். ஏனென்றால் இந்திய அரசியலில் இந்த ஆளைப் போன்ற கடைந்தெடுத்த கயமைத் தனம் கொண்ட வேறு நபர் எவரையும் காணமுடியாது. அவர் புரிந்த சித்துகள் கொஞ்சநஞ்சமல்ல; அவர் ஆடிய ஆட்டங்கள் அற்ப சொற்பமல்ல. ஒரே ஆண்டில், அதிலும் வெகுதொலைவில் அல்ல 1944ல் அவர் வெவ்வேறு மூன்று நாடகப் பாத்திரங்களை அற்புதமாக நடித்துக் காட்டியிருக்கிறார். அவர் முதலில் இந்துமகாசபையின் செயலாளராகத் தமது பணியைத் தொடங்கினார்; பிறகு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கையாளாக எடுபிடியாக மாறினார்; பின்னர் வெளிநாடுகள் சென்று பிரிட்டிஷ் மக்களுக்கும் அமெரிக்க மக்களுக்கும் இந்தியாவின் போர் முயற்சிகள் குறித்துப் படாடோபமாகப் பிரசாரம்; இப்போது அடுத்த அவதாரம் எடுத்திருக்கிறார்; மேற்கு எல்லைப்புற மாகாணத்தின் காங்கிரசின் ஏஜெண்டாக மாறியிருக்கிறார். ராய் பகதூர் கன்னா போன்றவர்கள் என்ன செய்வார்கள், ஏது செய்வார்கள் என்று தெரியாது; எதுவும் நீண்டகாலம் நீடிக்காது; டிரைடன் மொழியில் கூறுவதானால் அமாவாசை போய் பௌர்ணமி வருவதற்குள்ளாக அவர்கள் செய்யாதது எதுவுமே இருக்காது; ஒரு சமயம் வேதியல் வல்லுநர்களாக இருப்பார்கள்; இன்னொரு சமயம் 'பிடில்' வாசிக்கப் புறப்பட்டு விடுவார்கள்; மற்றொரு சமயம் பழுத்த ராஜதந்திரியாகத் தூள் பரப்புவார்கள்; இறுதியாக கோமாளிகளாகக் காட்சியளிப்பார்கள். இத்தகையவர்களின் கருத்துகள் இகழ்ச்சிக்கும் ஏளனத்துக்குரியவையே ஆகும். அப்படியிருக்கும்போது ராய் பகதூர் கன்னாவை இங்கு நான் ஏன் குறிப்பிட வேண்டும் என்று கேட்கலாம்.

தீண்டப்படாதோரை ஏமாற்றுவதற்கு, வஞ்சிப்பதற்கு திரு. காந்தியின் நண்பர்கள் எத்தகைய கீழ்த்தரமான, அபத்த பிரச்சாரத்தைச் செய்து வருகிறார்கள் என்பதை எடுத்துக்காட்டவே இங்கு கன்னாவைப் பற்றிக் குறிப்பிட்டேன்:[1]

இத்தகைய ஓர் அப்பட்டமான பொய்யை தீண்டப்படாதோரில் எத்தனை பேர் ஏற்றுக்கொள்வார்கள் என்று எனக்குத் தெரியாது. ஆனால் இந்தச் சந்தர்ப்பத்தில் நாஜிகளின் சித்தாந்தம் ஒன்றை இங்கு குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். 'சாமானிய மனிதனின் அறிவுத் திறத்தால் நுணுகி ஆராய முடியாத ஒரு பொய்யை தயக்கமின்றிக் கூறுங்கள்; அது எவ்வளவு பெரிய பொய்யாக இருந்தாலும் அதையே மீண்டும் மீண்டும், திரும்பத் திரும்பக் கூறினால் அது மெய்யாகி விடும்; அப்படியே ஒருக்கால் உண்மை என்று அது உடனடியாக ஏற்றுக்கொள்ளப்படாவிட்டாலும், உங்கள் பிரசாரத்திற்கு இலக்கானவர்களிடம் அது படிப்படியான பிடிப்பை ஏற்படுத்தி, இறுதியில் அதனை ஒப்புக்கொள்ளச் செய்துவிடும்.' இதுதான் நாஜிகளின் சித்தாந்தம். இந்தச் சித்தாந்தத்தைத்தான் திரு. காந்தியின் நண்பர்கள் தொடர்ந்து கடைப்பிடித்து வருகிறார்கள். இத்தகைய சூழ்நிலையில், தீண்டப்படாதோர் இயக்கத்தில் திரு. காந்தி ஆடிவரும் நாடகத்தை அம்பலப்படுத்துவதும், இந்த மாய பிரசார வலையில் விழுந்து விடாதபடி தீண்டப்படாதோரை எச்சரிப்பதும் எனக்கு அவசியமாகிறது.

# I

தீண்டப்படாதோர் இயக்கத்தில் திரு. காந்தி ஆற்றிவந்திருக்கும் பங்கை நாம் ஆராய முற்படும்போது, தீண்டாமை என்பது ஒரு தீமை, ஒரு கொடுமை என்பதை திரு. காந்தி எப்போது முதல் தடவையாக உணர்ந்து கொண்டார் என்பதை நிச்சயித்துக் கொள்வது உசிதமாக இருக்கும். இது விஷயத்தில், திரு. காந்தியே வாய்மொழியாகக்

1. இத்தகைய பிரசாரத்திற்கு மற்றோர் உதாரணமாக பேராசிரியர் ஏ.ஆர். வாடியா என்ற பார்சி கனவான் செய்து வந்த பிரசாரத்தைக் கூறலாம். பேராசிரியர் வாடியாவின் கருத்துகளைக் கடுமையாக விமர்சித்து, ராஸ்த்-ரஹபா என்ற பெயரில் பம்பாயிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த வார இதழில் திரு. இ.ஜே. சஞ்சானா "அர்த்தமும் அனர்த்தமும்" என்ற தலைப்பில் அக்டோபர் 29 முதல் 1945 ஏப்ரல் 15 வரை பல தொடர் கட்டுரைகளை எழுதினார்.

கூறியதை இங்கு மேற்கோள் காட்டினால் போதும். 1921 ஏப்ரல் 14, 15 தேதிகளில் ஆமதாபாத்தில் ஒடுக்கப்பட்ட இனத்தவர்களின் மாநாடு நடைபெற்றது. அம்மாநாட்டுக்குத் தலைமை வகித்து உரையாற்றும் போது திரு. காந்தி கூறியதாவது:

''அப்போது எனக்கு பன்னிரண்டு வயதுகூட நிரம்பவில்லை. அச்சமயம்தான் தீண்டாமை குறித்த கருத்து என் மனத்தில் உதித்தது. தீண்டப்படாதாரான உக்கா என்ற தோட்டிதான் எங்கள் வீட்டிலுள்ள மலசல கழிவிடங்களைச் சுத்தம் செய்வது வழக்கம். அவனைத் தொடக்கூடாது என்று நான் தடைசெய்யப் பட்டிருந்தேன். அவனைத் தொடுவதில் என்ன தவறு என்று நான் அடிக்கடி என் தாயிடம் கேட்பேன். அப்படியே தற்செயலாக உக்காவை தொட்டுவிடும்போது, உடனே குளிக்க வேண்டும் என்று என்னிடம் கூறுவார்கள். இயல்பாகவே இந்த ஆணைக்கு நான் கீழ்ப்படிந்தாலும், சிரித்துக் கொண்டே என் ஆட்சேபத் தைத் தெரிவிக்காமல் விடமாட்டேன்; தீண்டாமையை மதம் அனுமதிக்கவில்லை, அப்படி அது அனுமதிப்பதும் சாத்திய மில்லை என்று விவாதிப்பேன். எனினும் பெற்றோருக்கு மதிப்பும் மரியாதையும் தரும் மிகவும் கடமை உணர்ச்சியும் கீழ்ப்படித லுமுள்ள குழந்தையாகவே வளர்ந்து வந்தேன். தீண்டாமை விஷயத்தில் அவர்களுடன் எனக்கு அடிக்கடி சச்சரவுகள் ஏற்படுவது உண்டு. உத்காவைத் தீண்டுவது பாபம் என்று கூறுவது முற்றிலும் தவறு என்று என் தாயிடமே வாதிட்டேன்.

''நான் பள்ளிக்கூடத்தில் படித்து வந்தபோது, 'தீண்டப் படாதோரை' அடிக்கடி தீண்ட நேரிடும். ஆனால் இதை என் பெற்றோரிடமிருந்து ஒருபோதும் மறைக்க மாட்டேன்; உண்மையை அப்படியே சொல்லிவிடுவேன். அப்போது என் தாய் என்ன சொல்லுவார் தெரியுமா? 'பரவாயில்லை. அந்த வழியே போகும் ஒரு முசல்மானைத் தொட்டால் இந்தத் தீட்டு போய்விடும்' என்று கூறுவார். தாயிடம் எனக்குள்ள மதிப்பு, மரியாதை, பயபக்தி காரணமாக நானும் அப்படியே செய் வேன். ஆனால் இதனை ஒரு சமயக் கடமையாக, சடங்காகக் கருதி ஒருபோதும் செய்ததில்லை. சிறிது காலத்திற்குப் பிறகு நாங்கள் போர்பந்தரில் போய்க் குடியேறினோம். அங்குதான் சமஸ்கிருதத்துடன் எனக்கு முதன் முதலில் பரிச்சயம் ஏற் பட்டது. அப்போது இன்னமும் நான் ஆங்கிலப் பள்ளியில்

சேர்க்கப்படவில்லை. என் சகோதரரும் நானும் ஒரு பிராமணர் பொறுப்பில் விடப்பட்டோம். அவர் எங்களுக்கு ராம் ரக்ஷா வையும், விஷ்ணு பஞ்சாரையும் போதித்தார். 'ஜலே விஷ்ணு' 'ஸ்தலே விஷ்ணு' (பகவான் நீரிலும் இருக்கிறார், நிலத்திலும் இருக்கிறார் என்பது இதற்குப் பொருள்) என்ற சுலோகங்கள் இன்னமும் என் நினைவிலிருந்து அகலவில்லை. அந்நாட் களில் ஒரு மூதாட்டி எங்கள் வீட்டருகே வசித்துவந்தாள். அப்போதெல்லாம் நான் பெரும் 'பயங்கொள்ளி'யாக இருந்து வந்தேன். விளக்குகள் அணைந்து இருள் சூழ்ந்துவிட்டால் போதும், பேய், பிசாசு பயம் என்னைப் பிடித்துக் கொள்ளும். அப்போது இந்தப் பெருமாட்டி எனது அச்சங்களைப் போக்கு வதற்கு ஒரு யோசனை தெரிவித்தார். என்னை பயம் பீடிக்கும் போதெல்லாம் ராம ரக்ஷா சுலோகங்களை முணுமுணுத்தால் போதும், கெட்ட ஆவிகள் எல்லாம் பறந்தோடிவிடும் என்று கூறினார். நானும் அவ்வாறே செய்தேன்; இதற்கு நல்ல பலன் கிடைத்ததாகவே தோன்றிற்று. 'தீண்டப்படாதோரை'த் தீண்டுவது ஒரு பாவம் என்பதைக் குறிக்கும் ஒரு சுலோகம் ராம் ரகைஷயில் இருக்கும் என்று என்னால் ஒருபோதும் நம்ப முடியவில்லை. அச்சமயம் அதன் பொருளை என்னால் புரிந்துகொள்ள முடிய வில்லை; அல்லது மிகவும் தவறாகப் புரிந்துகொண்டிருக்கக் கூடும். எனினும் எல்லா வகையான பேய் பிசாசுகளைப் பற்றிய அச்சத்தையும் அகற்றும் ராம்ரகைஷயால் 'தீண்டப்படாதோரை' தீண்டும் பயத்தையும் விரட்டியடிக்காமல் இருக்க முடியாது என்று நம்பினேன்.

''எங்கள் குடும்பத்தில் ராமாயணம் ஆசார முறைப்படி படிக்கப்படுவது உண்டு. லாதா மகாராஜ் என்ற ஒரு பிராமணர் தான் அதைப் படித்துக் காட்டுவது வழக்கம். அவரைத் தொழு நோய் பீடித்திருந்தது; ராமாயணத்தை ஒழுங்காகப் படித்து வந்தால் தொழுநோய் குணமாகிவிடும் என்று அவர் திடமாக நம்பினார். உண்மையில் அவர் குணமடையவும் செய்தார். தற்காலத்தில் 'தீண்டப்படாதவர்' என்று கருதப்படும் ஒருவர் தான் ராமபிரானை தமது படகில் வைத்து கங்கையைக் கடக்கச் செய்தார் என்று கூறும் ராமாயணம் மாசுபட்ட ஆத்மாக்கள் என்று கூறி மனித ஜீவன்களை 'தீண்டத்தகாதவர்களாக' நடத்தப் படுவதை எப்படி ஆதரிக்க முடியும் என்று எனக்குள் நினைத்துக் கொண்டேன். 'மாசடைந்தோரைப் புனிதப்படுத்துபவர்' என்பன

போன்றெல்லாம் துதித்துப் பகவானைப் போற்றுகிறோம். இது எதைக் காட்டுகிறது? இந்து மதத்தில் பிறந்த எவரையும் தீட்டுப்பட்டவர், தீண்டப்படாதவர் என்றெல்லாம் பழிப்பது, ஒதுக்குவது மகாபாவம், பேய்த்தனமான செயல் என்பதையே இது காட்டுகிறது. அன்று முதல் இது மிகக் கொடிய பாவம் என்று திரும்பத் திரும்பக் கூறுவதில் நான் என்றும் சளைத்ததே இல்லை, சலித்ததே இல்லை. அந்த பன்னிரண்டு வயதில் இது ஒரு பற்றுக்கோளாக, ஒரு மெய்ம்மையாக என்னுள் உரு வெடுத்துவிட்டது என்று பாசாங்கு செய்ய நான் விரும்ப வில்லை. எனினும் அச்சமயம் தீண்டாமையை ஒரு பாபமாகக் கருதினேன் என்று நிச்சயமாக என்னால் கூறமுடியும். வைஷ்ண வர்களும் வைதிக இந்துக்களும் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே இதையெல்லாம் கூறுகிறேன்''.

குருட்டுத்தனமான சமயப்பற்று கொடிகட்டிப் பறந்துவந்த அந்த நாட்களில், அதுவும் மிக இளமைப் பருவமான 12 வயதில் தீண்டாமை ஒரு சாபக்கேடு என்பதை திரு. காந்தி உணர்ந்திருந்தார் என்பது உண்மையிலேயே சுவையான விஷயம் என்பதில் ஐய மில்லை. ஆனால் இந்தத் தீமையை, அனாசாரத்தை ஒழித்துக்கட்ட திரு. காந்தி என்ன செய்தார் என்று அறிய தீண்டப்படாதோர் விரும்பு கின்றனர். சென்னையைச் சேர்ந்த தாகூர் அண்ட் கோ என்ற வெளி யீட்டாளர்கள் 1922ல் திரு. காந்தியின் வாழ்க்கை வரலாறு பற்றி யங் இந்தியா என்ற தலைப்பில் 30 தொகுதியை வெளியிட்டிருந் தனர். திரு. காந்தி பொதுவாழ்க்கையில் ஈடுபட்ட காலம் முதல் மேற்கொண்ட முக்கிய நடவடிக்கைகளின் ஒரு பகுதியை அத்தொகுதி யிலிருந்து கீழே தந்துள்ளோம்:

''மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி 1869 அக்டோபர் 2 ஆம் தேதி பிறந்தார். அவர் பனியா சாதியைச் சேர்ந்தவர்; போர்பந்தர், ராஜ்கோட் மற்றும் இதர சில கத்தியவார் சமஸ்தானங்களின் திவானாக இருந்த கரம்சந்த் காந்தியின் புதல்வர்; அவர் கத்திய வார் உயர்நிலைப் பள்ளியில் கல்வி பயின்றார்; பின்னர் லண்டன் பல்கலைக் கழகத்திலும் இன்னர் டெம்பிளிலும் படித்தார். லண்டனிலிருந்து திரும்பியதும் பம்பாய் உயர்நீதி மன்றத்தில் ஒரு வழக்குரைஞராகப் பதிவுசெய்து கொண்டார். ஒரு வழக்கில் வாதாடும் பொருட்டு முதலில் நேட்டாலுக்கும் பின்னர் டிரான்ஸ்வாலுக்கும் சென்றார். நேட்டால் உச்ச

நீதிமன்றத்தில் ஒரு வழக்குரைஞராகத் தம்மைப் பதிவு செய்து கொண்டார். அங்கேயே தங்கிவிடத் தீர்மானித்தார். 1894ல் நேட்டால் இந்திய காங்கிரசை நிறுவினார். 1895ல் இந்தியா திரும்பினார். நேட்டால் மற்றும் டிரான்ஸ்வால் இந்தியர்களின் சார்பாக ஒரு கிளர்ச்சியை மேற்கொண்டார். பிறகு டர்பனுக்குத் திரும்பினார். அங்கு போய் இறங்கியதும் ஒரு வெறிகொண்ட கூட்டத்தால் தாக்கப்பட்டார்; மரணத்திலிருந்து நூலிழையில் தப்பினார்; 1899ல் பிரிட்டிஷ் போயர் போரின்போது, காயமடைந்தோரைப் போர்க்களத்திலிருந்து அப்புறப்படுத்தும் இந்திய ஆம்புலன்ஸ் படை ஒன்றைத் தலைமை தாங்கி நடத்தினார். உடல்நலம் பெறும் பொருட்டு 1901ல் மீண்டும் இந்தியாவுக்குத் திரும்பினார். தென்னாப்பிரிக்க இந்தியர்களுக்குள்ள சிரமங்கள் குறித்து இந்தியர்களின் கருத்தை திரு.சேம்பர்லேனிடம் எடுத்துரைக்கும் பொருட்டு மீண்டும் தென்னாப்பிரிக்கா திரும்பினார். டிரான்ஸ்வால் உச்சநீதிமன்றத்தில் வழக்குரைஞராகப் பதிவு செய்துகொண்டார்; டிரான்ஸ்வால் பிரிட்டிஷ் இந்திய சங்கத்தை நிறுவி கௌரவ செயலாளராகவும், தலைமை சட்ட ஆலோசகராகவும் இருந்தார். 1903ல் இந்தியன் ஒப்பீனியன் என்ற பத்திரிக்கையைத் தொடங்கினார்; 'போனிக்ஸ்' குடியேற்றத்தை நிறுவினார். 1906ல் நடைபெற்ற ஸ்தல கலகத்தின்போது, காயம் பட்டோரை இட்டுச் செல்லும் தூக்குப்படுக்கை படை ஒன்றை தலைமைதாங்கி நடத்தினார்; 1906 ஆம் வருட ஆசியர் - எதிர்ப்புச் சட்டத்தை எதிர்த்து கிளர்ச்சி மேற்கொண்டார்; இந்தச் சட்டத்தை ரத்து செய்யும்படி வலியுறுத்துவதற்காக இங்கிலாந்துக்கு தூது சென்றார்; இந்த சட்டத்திற்கு எதிராக சாத்வீக எதிர்ப்புப் போராட்டம் ஆரம்பிக்கப்பட்டது; ஜெனரல் ஸ்மட்சுக்கும் திரு.காந்திக்கும் இடையே பேச்சுவார்த்தைகள் நடைபெற்று சமசரம் ஏற்பட்டது. சட்டத்தை ரத்து செய்ய தாம் வாக்குறுதி அளிக்கவில்லை என்று ஸ்மட்ஸ் மறுத்தார். இதனைத் தொடர்ந்து மீண்டும் சாத்வீக போராட்டம் ஆரம்பிக்கப்பட்டது. சட்டத்தை மீறி இருமுறை கைதானார். இந்தியர்களின் கட்சியை பிரிட்டிஷ் பொதுமக்களிடம் எடுத்துரைப்பதற்காக மீண்டும் 1909 ல் இங்கிலாந்து சென்றார்; 1911ல் இடைக்கால உடன்பாடு ஏற்பட்டது. திரு.கோகலே தென்னாப்பிரிவுக்கு வருகை புரிந்தார். 1911 ஆம் வருட உடன்பாட்டைச் செயல்படுத்த அரசாங்கம் மறுத்ததனால் சாத்வீக எதிர்ப்புப் போராட்டத்தை மீண்டும் மேற்கொண்டார். 1914ல் இறுதி உடன்பாடு ஏற்பட்டது.

*இங்கிலாந்து சென்றார்; 1914-ல் இந்திய - ஆம்புலன்ஸ் படை ஒன்றை உருவாக்கினார்.''*

*இந்த வாழ்க்கை வரலாற்றுக் குறிப்பிலிருந்து என்ன தெரிகிறது? 1894ல் நேட்டால் இந்திய காங்கிரசை நிறுவிய திரு.காந்தி தமது பொது வாழ்க்கையைத் தொடங்கினார் என்பது தெளிவாகிறது. 1894 முதல் 1915 வரை அவர் தென்னாப்பிரிக்காவில் இருந்தார். இந்த காலகட்டத்தில் தீண்டப்படாதோரைப் பற்றி அவர் ஒருபோதும் எண்ணிப் பார்த்ததில்லை; உத்காவைப் பற்றி விசாரித்தறியவும் இல்லை.*

*திரு.காந்தி 1915ல் இந்தியா திரும்பினார். அப்போதேனும் தீண்டப்படாதோர் விஷயத்தில் கவனம் செலுத்தினாரா? அக்கறை காட்டினாரா? இது விஷயமாக மேலே குறிப்பிட்ட வாழ்க்கை வரலாற்றுக் குறிப்பிலிருந்து மேற்கோள் காட்டுகிறோம். அது கூறுவதாவது:*

*''1915ல் இந்தியா திரும்பினார்; ஆமதாபாத்தில் சத்தியாக்கிரக ஆசிரமத்தை நிறுவினார். 1917ல் சாம்பிரான் தொழிலாளர் பிரச்சினைக்குத் தீர்வு காணுவதிலும், கய்ரா பஞ்ச நிவாரணப் பணிகளிலும், 1918ல் ஆமதாபாத் பஞ்சாலைத் தொழிலாளர் போராட்டத்தைத் தலைமை தாங்கி நடத்துவதிலும் பங்கு கொண்டார்; 1918ல் படைக்கு ஆட்சேர்ப்பு இயக்கம்; ரௌலட் சட்டத்திற்கு எதிராகக் கிளர்ச்சி; 1919ல் சத்தியாக்கிரக இயக்கத்தைத் தொடங்குதல்; டில்லி செல்லும் வழியில் கோசியில் கைது செய்யப்பட்டு பம்பாய்க்குத் திருப்பி அனுப்பப்படல்; 1919ல் பஞ்சாப் குழப்பங்கள், அதிகார வர்க்கத்தின் அட்டூழியங்கள்; பஞ்சாப் படுகொலைகள், அக்கிரமங்கள் பற்றிய காங்கிரஸ் விசாரணைக்குழுவில் உறுப்பினர்; கிலாபத் இயக்கத்தில் பங்குகொள்ளுதல். மேமாதம் ரீடிங் பிரபுவிடம் பேட்டி: 1921ல் நடைபெற்ற காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் காங்கிரசின் ஒரே நிர்வாகப் பொறுப்பாளராக நியமனம். 1922 பிப்ரவரியில் சட்டமறுப்பு இயக்கம்; சௌரி சௌரா கலகங்கள் காரணமாக 1922 பிப்ரவரியில் சட்டமறுப்பு இயக்கம் நிறுத்தம்; 1922 மார்ச்சில் கைது செய்யப்பட்டு, விசாரணைக்குப் பின்னர் ஆறு ஆண்டுகால வெறுங்காவல் தண்டனை விதிக்கப்படல்.''*

இந்தக் குறிப்பில் சில முக்கிய விஷயங்கள் விட்டுப் போய்விட்டன. இவை திரு.காந்தியின் வாழ்க்கையில் முக்கியமான இடத்தைப் பெறுபவை. அவற்றை இங்கு தருகிறோம்:

*''பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலிருந்து இந்தியா விடுதலை பெறுவதற்காக இந்தியா மீது ஆப்கானிஸ்தானின் படை யெடுப்பை ஆதரிக்கத் தயாராக இருப்பதாக அறிவித்தல்; 1920ல் பர்தோலி நிர்மாணப்பணி திட்டத்தை நாட்டின் முன்வைத்தல்; சுயராஜ்யத்தைப் பெறுவதற்கு நாட்டைத் தயாரிக்கும் பொருட்டு 1921ல் திலகர் சுயராஜ்ய நிதியைத் தொடங்கி 1 கோடி 25 லட்சம் ரூபாய் வசூலித்தல்.*

இந்த ஐந்தாண்டுகளில் காங்கிரசை ஒரு செயலூக்கமிக்க அமைப்பாக மாற்றுவதிலும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து அதனைத் துவம்சமாக்கக் கூடிய ஒரு வெல்லற்கரிய போர் எந்திரமாக உருவாக்குதிலுமே முழுமூச்சாக ஈடுபட்டிருந்தார். கிலாபத் பிரச் சினையில் மிகுந்த ஆர்வம் காட்டினார்; முஸ்லீம்களை பெரும் எண் ணிக்கையில் காங்கிரசில் இணைப்பதே இதன் நோக்கம்; இந்தக் குறிக்கோளோடு கிலாபத்துக்கு ஆதரவாக இந்துக்களை அணி திரட்டு வதற்கு தம்மால் முடிந்த அனைத்தையும் செய்தார்.

மற்றபடி, இந்த காலகட்டத்தில் தீண்டப்படாதோருக்காக திரு.காந்தி என்ன செய்தார்? இது விஷயத்தில் காங்கிரசார் பர்தோலி திட்டத்தைச் சுட்டிக்காட்டுவார்கள் என்பது நிச்சயம். தீண்டப்படா தோரின் நிலையை மேம்படுத்துவது, அவர்களது வாழ்க்கையை வலுப்படுத்துவது பர்தோலி திட்டத்தில் ஒரு அம்சமாக இடம் பெற்றி ருந்தது என்பது உண்மையே. ஆனால் அந்தத் திட்டம் என்ன வாயிற்று? அதற்கு நேர்ந்த கதி என்ன? இதைத் தெரிந்து கொள்வதே இங்கு முக்கியம். இரத்தினச் சுருக்கமாகக் கூறுவதென்றால் பர்தோலி திட்டம் தீண்டாமையை ஒழித்துக்கட்டுவதற்கான ஒரு திட்டமல்ல.[1] டிஸ்ரேலி வருணித்தது போன்று இத்திட்டம் பண்டைய அமைப்பு களையும் தற்கால முன்னேற்றங்களையும் இணைத்துச் சீர்செய்யும் ஒரு முயற்சியே தவிர வேறல்ல. நாட்டில் தீண்டாமை நிலவி வருவதை இந்தத் திட்டம் பகிரங்கமாக ஒப்புக்கொண்டது; தீண்டப்

1. விவரங்களுக்கு இயல் II பார்க்க.

படாதோருக்கு தனிக் கிணறுகளையும் தனிப் பள்ளிக்கூடங்களை யும் அமைத்துத் தருவதைத் தவிர வேறு எந்த உருப்படியான நட வடிக்கைகளுக்கும் அது வகை செய்யவில்லை. தீண்டப்படாதோரின் முன்னேற்றத்திற்கு ஒரு திட்டம் வகுக்க நியமிக்கப்பட்ட துணைக் குழுவின் லட்சணம் பற்றியோ சொல்லவே வேண்டியதில்லை. தீண்டப்படாதோர் பற்றி எக்காலத்திலும் எத்தகைய ஆர்வமும் அக்கறையும் கரிசனமும் காட்டப்படாதோரே பெரும்பாலும் குழு உறுப்பினர்களாக இருந்தனர்; இவர்களில் சிலர் தீண்டப்படாதோர் மீது வெறுப்பும் பகைமையும் கொண்டவர்கள் என்று கூடச் சொல்ல வேண்டும். தீண்டப்படாதோருக்காக ஏதேனும் கணிசமாக, உருப் படியாக செய்யவேண்டும் என்ற உண்மையான ஆர்வம் கொண்ட ஒரே ஒருவர் இந்தக் குழுவில் இருந்தார். அவர்தான் சுவாமி சிரத்தா னந்தர். அவரும் நிர்ப்பந்தம் காரணமாக பதவி விலகவேண்டிய தாயிற்று. இது மட்டுமல்ல, குழு தனது பணியைச் செய்வதற்கு அற்பத் தொகையே ஒதுக்கப்பட்டது. இத்துடன் நிற்கவில்லை. குழு ஒரு முறை கூடக் கூடாமல் கலைக்கப்பட்டது. தீண்டப்படாதோரைக் கைதூக்கி விடும் பணியை இந்துமகாசபைதான் சிறந்த முறையில் செய்ய முடியும் என்று கூறி பொறுப்பு அதன் தலையில் சுமத்தப்பட்டது. குறிப்பிடப்பட்டிருந்த பணியில் திரு.காந்தி எத்தகைய ஆர்வமும் அக்கறையும் காட்டவில்லை. இதற்கு மாறாக அவர் செய்தது என்ன? நியாயமாக சுவாமி சிரத்தானந்தர் பக்கம் அவர் உறுதியாக நின்றிருக்க வேண்டும்; அதற்குப்பதிலாக சுவாமி சிரத்தானந்தரை எதிர்க்கும் பிற்போக்குவாதிகளுக்கே அவர் பச்சைக்கொடி காட்டினார். இத்தனைக் கும் தீண்டப்படாதோருக்காகப் பெரிதாக எதுவும் சாதிக்கப்படு வதைக் கடுமையாக எதிர்ப்பவர்கள் அவர்கள் என்பது திரு. காந்திக்கு மிக நன்றாகத் தெரியும். இவைதான் 1921ல் பர்தோலி திட்டம் சம்பந்தமாக திரு. காந்தி சாதித்த மாபெரும் சாதனைகள்!

சரி போகட்டும். 1922க்குப் பிறகுதான் திரு.காந்தி என்ன செய்தார்? ஆரம்பத்தில் குறிப்பிட்ட வாழ்க்கைக் குறிப்பிலிருந்து நாம் முன்னர் பிரசுரித்த பகுதி 1922 ஆம் ஆண்டு சம்பந்தப்பட்டது. இந்த வாழ்க்கைக் குறிப்பை காலத்திற்கொப்ப ஆக்குவதற்குப் பின்கண்ட விவரங்களையும் சேர்த்துக் கொள்வது அவசியம்:

''1924ல் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார்; அவர் சிறை யிலிருந்தபோது காங்கிரசில் இரு தரப்பினர் தோன்றி, ஒரு தரப்

பினர் சட்டசபைத் தேர்தல்களில் போட்டியிட வேண்டுமென்று வலியுறுத்தினர்; இன்னொரு தரப்பினர் நிர்மாணத்திட்டத்தில் முற்றிலுமாக ஈடுபட வேண்டும் என்று வாதிட்டனர். சிறையிலிருந்து வெளிவந்த திரு.காந்தி இவர்களிடையே சமரசம் செய்துவைத்தார்; 1929ல் பரிபூரண சுதந்திரமே இந்தியாவின் அரசியல் குறிக்கோள் என்று பிரகடனம் செய்யப்பட்டது; 1930ல் திரு.காந்தி ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கினார்; 1931ல் வட்டமேசை மாநாட்டில் காங்கிரஸ் சார்பில் கலந்துகொள்ள லண்டன் சென்றார். 1932ல் சிறைவைக்கப்பட்டார். மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசின் வகுப்புத் தீர்ப்பை எதிர்த்து சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கப் போவதாக அறிவித்தார்; 1933ஆம் வருடப் புனா ஒப்பந்தத்தால் அவர் உயிர் காப்பாற்றப்பட்டது. தீண்டப்படாதோரின் ஆலயப் பிரவேசத்துக்கு ஆதரவாக இயக்கம் ஆரம்பிக்கத் திட்டமிட்டார்; அரிஜன சேவா சங்கத்தை நிறுவினார்; 1934ல் காங்கிரஸ் உறுப்பினர் பதவியிலிருந்து விலகினார்; 1942ல் 'இந்தியாவை விட்டு வெளியேறு' இயக்கத்தைத் தொடங்கத் திட்டமிட்டார்; ஆனால் கைது செய்யப்பட்டார்; 1944ல் உண்ணாவிரதம் மேற்கொண்டார். விடுதலை செய்யப்பட்டார்; 1944ல் வேவல் பிரபுவுடன் கடிதப் போக்குவரத்து நடத்தி வந்தார்; 1942 ஆகஸ்டு 8 தீர்மானத்தை விளக்கி தொடர்ந்து அறிக்கைகள் வெளியிட்டார்; 1945ல் கஸ்தூரிபாய் நிதி திரட்டுவதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்.''

தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தை மேலும் தீவிரப்படுத்துவதற்கும் அதனைப் பயனுறுதியுடையதாக்குவதற்கும் 1924 ஆம் ஆண்டு அவருக்கு மற்றொரு அரிய வாய்ப்பினை அளித்தது. ஆனால் திரு. காந்தி செய்தது என்ன?

1922க்கும் 1944க்கும் இடைப்பட்ட ஆண்டுகள் காங்கிரஸ் அரசியல் வரலாற்றில் தனி முக்கியத்துவம் வாய்ந்தவை. 1920 செப்டம்பரில் கல்கத்தாவில் நடைபெற்ற விசேட மாநாட்டில் ஒத்துழையாமைத் திட்டத்தை காங்கிரஸ் ஏற்றுக்கொண்டது. சட்டசபைப் பகிஷ்காரம், அந்நியத்துணிகள் பகிஷ்காரம் முதலியவை அத்திட்டத்தில் அடங்கியிருந்தன. ஒத்துழையாமைத் தீர்மானம் அறிவுத்துறையைச் சேர்ந்த தலைவர்களால் எதிர்க்கப்பட்டது; பிபின் சந்திர பால்,

சி.ஆர். தாஸ், லாலா லஜபதி ராய் ஆகியோர் இவர்களில் முக்கியமானவர்கள்; எனினும் அவர்களது கடுமையான எதிர்ப்புக்கிடையேயும் தீர்மானம் ஏற்கப்பட்டது. காங்கிரசின் வருடாந்தர மாநாடு 1920 டிசம்பரில் நாகபுரியில் நடைபெற்றது. ஒத்துழையாமை குறித்த தீர்மானம் மீண்டும் விவாதத்திற்கு வந்தது. இதில் விந்தை என்னவென்றால் முன்னர் எதிர்த்த சி.ஆர்.தாஸே[1] இத் தீர்மானத்தை முன்மொழிந்தார்; லாலா லஜபதிராய் வழிமொழிந்தார்; தீர்மானம் ஏற்கப்பட்டது. இதன் விளைவாக 1921 ஆம் ஆண்டு ஒத்துழையாமை இயக்க ஆண்டாகத் திமிலோகப்பட்டது. 1922 மார்ச் 19 ஆம் தேதி திரு. காந்தி இராஜதுரோகக் குற்றம்சாட்டப்பட்டு விசாரிக்கப்பட்டு ஆறு ஆண்டு சிறைவாசம் விதிக்கப்பட்டார். திரு. காந்தி சிறைக்குள் தள்ளப்பட்டதுமே சி.ஆர்.தாஸ் தமது பழைய நிலைக்கு மீண்டும் திரும்பி, சட்டமன்றப் பகிஷ்கரத்தைக் கைவிடவேண்டுமென்று கோரத் தலைப்பட்டார்; அதற்காக ஓர் இயக்கத்தையும் தொடங்கினார்; வித்தல்பாய் பட்டேல், பண்டித மோதிலால்நேரு, பண்டித மாளவியா போன்றோரும் அவருடன் சேர்ந்துகொண்டனர். இந்த முயற்சியை திரு.காந்தியின் ஆதரவாளர்கள் கடுமையாக எதிர்த்தனர்; கல்கத்தாவில் ஏற்கப்பட்டு நாகபுரியில் உறுதிசெய்யப்பட்ட ஒத்துழையாமைத் தீர்மானத்தில் இம்மியளவு மாற்றத்தை அனுமதிக்கக்கூட அவர்கள் தயாராக இல்லை. இது காங்கிரசில் பிளவை உண்டுபண்ணிற்று. நோய்வாய்ப்பட்டதன் காரணமாக 1924ல் திரு.காந்தி உரிய காலத்திற்கு முன்னரே விடுதலை செய்யப்பட்டார். சிறையிலிருந்து வெளியே வந்தபோது, சட்டசபைப் பகிஷ்கார விஷயத்தில் காங்கிரஸ் இரண்டு போரிடும் முகாம்களாகப் பிரிந்திருப்பதைக் கண்டார். ஒருவர் மீது ஒருவர் சேற்றை வாரி

---

1. காங்கிரசின் அதிகாரபூர்வமான வரலாற்றாசிரியரான திரு. பட்டாபி சீதாராமையா இதுபற்றி கூறியிருப்பதாவது:

> "திரு. சி.ஆர். தாஸ் கிழக்கு வங்கத்திலிருந்தும் அசாமிலிருந்தும் சுமார் 250 பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு குழுவை மாநாட்டிற்கு அழைத்து வந்திருந்தார்; அவர்கள் மாநாட்டுக்கு வந்து திரும்புவதற்கான செலவை தாமே ஏற்றுக்கொண்டார்; கல்கத்தாவில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை ரத்து செய்வதற்கு தமது பையிலிருந்து ரூ. 36,000 செலவிட்டார். அவருடைய ஆட்களுக்கும் அவரை எதிர்க்கும் ஜிதேந்திரலால் பானர்ஜியின் ஆட்களுக்கும் இடையே ஒரு சிறிய கைகலப்புக் கூட நடைபெற்றது, காங்கிரஸ் வரலாறு, பக்கம். 347.

வீசிக் கொண்டிருந்தனர்; சிண்டுபிடித்துக் கொண்டிருந்தனர். இந்த சண்டை நீடித்தால் காங்கிரஸ் பெரிதும் பலவீனப்பட்டு விடும் என்பது திரு. காந்திக்குத் தெரியும்; எனவே, இருதரப்பினரின் பூசலுக்கு ஒரு முடிவு கட்ட விரும்பினார். எந்தத் தரப்பும் விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. அறிக்கைகளும் எதிர்அறிக்கைகளும் தூள் பறந்தன. முடிவில், திரு.காந்தி தலையிட்டு, இரு முகாம்களுக்கும் இடையே சமாதானத்தை ஏற்படுத்த சில யோசனைகளைத் தெரிவித்தார். இரு தரப்பினராலும் அவை ஏற்றுக்கொள்ளப்பட்டன. இந்த யோசனைகள் இரு தரப்புகளையும் திருப்திப்படுத்தும் முறையில் அமைந்திருந்தன. சட்டசபைப் பிரவேசத்தை ஆதரிப்போரை மகிழ்விக்க ஒரு திட்டத்தை முன்வைத்தார்; அதாவது சட்டசபைப் பிரவேசத்தை காங்கிரஸ் நடவடிக்கைகளின் ஒரு சட்டபூர்வமான பகுதியாக ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும், சட்டசபைப் பிரவேசத்தை எதிர்ப்போர் அதற்கு எதிரான தமது பிரசாரத்தை நிறுத்தி விட வேண்டுமென்றும் கூறினார். இதேபோன்று, சட்டசபைப் பிரவேசத்தை எதிர்ப்போரது மனத்தை குளிரவைக்கவும் பின்கண்டவாறு பிரரேபித்தார்: காங்கிரசில் உறுப்பினராகச் சேர்வதற்கு ஒரு புதிய அடிப்படையைக் கொள்ளவேண்டும்; அதாவது (i) வருடம் நான்கணா செலுத்தினால் உறுப்பினராகலாம் என்பதற்குப் பதிலாக, தமது கையால் ராட்டையில் 2,000 கஜம் நூல் நூற்பவரே காங்கிரஸ் உறுப்பினராக முடியும்; இதைச் செய்யத் தவறினால் காங்கிரஸ் உறுப்பினராக இருப்பதற்குத் தகுதியற்றவராகிவிடுவார்; (ii) அந்நியத் துணிப் பகிஷ்காரம், அரசாங்க நீதிமன்றங்கள் பகிஷ்காரம், பள்ளிக் கூடங்கள், கல்லூரிகள் பகிஷ்காரம், பட்டம் பதவிகளைத் துறத்தல் போன்றவை அமைப்புக்குள் எந்த ஒரு பதவியும் வகிப்பதற்கு ஒரு தகுதியாகக் கருதப்படும்; பகிஷ்காரக் கோட்பாட்டில் நம்பிக்கை இல்லாத, தமது சொந்த வாழ்க்கையில் இந்தப் பகிஷ்காரங்களைக் கடைப்பிடிக்காத எவரும் காங்கிரசில் எந்த ஒரு பதவிக்கும் போட்டியிடும் வேட்பாளராகத் தகுதி பெற முடியாது.

திரு.காந்தி தமது தீண்டாமை எதிர்ப்பு இயக்கத்தைத் தீவிரப்படுத்துவதற்கு, முன்கொண்டு செல்லுவதற்கு இப்போது அவருக்கு ஓர் அருமையான வாய்ப்பு இருந்தது. காங்கிரசில் உறுப்பினராவதற்கு ஓர் இந்து விரும்பினால் தாம் தீண்டாமையைக் கடைப்பிடிப்பவனல்ல என்பதை நிரூபிக்கவேண்டும். தீண்டப்படாத ஒருவனை தனது வீட்டில் வேலைக்கமர்த்திக் கொள்வதன் மூலம்

இதை மெய்ப்பிக்க வேண்டும்; இதைத் தவிர வேறு எந்த சான்றும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது என்று அவர் திட்டவட்டமாகக் கூறியிருக்கமுடியும். இத்தகைய ஒரு யோசனை ஒன்று காரியசாத்திய மற்றதல்ல; ஏனென்றால் கிட்டத்தட்ட ஒவ்வொருவரும் தமது இல் லத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட ஆட்களை வேலைக்கமர்த்திக் கொண் டிருப்பதை இன்று சர்வசாதாரணமாகப் பார்க்கிறோம். காங்கிரசில் சேருவதற்கு நூல் நூற்பதையும், பகிஷ்கார நடவடிக்கைகளை மேற் கொள்வதையும் இந்து ஏற்கும்படிச் செய்ய திரு.காந்தியால் முடியு மானால், ஓர் இந்து இல்லத்தில் ஒரு தீண்டப்படாதவனை வேலைக் கமர்த்திக் கொள்வதையும் காங்கிரசில் உறுப்பினராகச் சேருவ தற்கு ஒரு தகுதியாக ஏற்றுக்கொள்ளும்படி அவரால் செய்திருக்க முடியும். ஆனால் திரு. காந்தி அதைச் செய்யவில்லை.

1924க்குப் பிறகு 1930 வரை ஒரு பரிபூரண சூன்ய நிலை நிலவியதையே காண்கிறோம். திரு.காந்தி தீண்டாமையை ஒழிப்ப தற்கு எத்தகைய செயலூக்கமிக்க நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டதாகவோ அல்லது இந்த காலகட்டத்தில் தீண்டப்படா தோருக்கு அனுகூலம் செய்யும் எந்த நடவடிக்கைகளிலும் அவர் தம்மை ஈடுபடுத்திக் கொண்டதாகவோ தெரியவில்லை. இவ்வாறு திரு.காந்தி செயலற்றுப்போயிருந்தபோது, தீண்டப்படாதவர்கள் சத்தியாக்கிரக இயக்கம் என்ற ஓர் இயக்கத்தைத் தொடங்கினர். பொதுக் கிணறுகளிலிருந்தும், பொதுக் கோவில்களிலிருந்தும் தண்ணீர் எடுப்பதற்குத் தங்களுக்குள்ள உரிமையை நிலைநாட்டுவதே இந்த இயக்கத்தின் குறிக்கோள். பம்பாய் ராஜதானியைச் சேர்ந்த கொலாபா மாவட்டத்தில் மஹத் எனும் நகரில் அமைந்திருக்கும் சௌதார் குளத்தில் ஒரு சத்தியாக்கிரக இயக்கம் நடைபெற்றது. பொது நீர் நிலைகளிலிருந்து தண்ணீர் எடுப்பதற்கு தீண்டப்படாதவர்களுக் குள்ள உரிமையை உறுதிசெய்வதே இந்த சத்தியாக்கிரகத்தின் நோக்கம். இதேபோன்று, ஆலயப்பிரவேசம் செய்வதற்கு தீண்டப் படாதோருக்குள்ள உரிமையை நிலைநாட்ட பம்பாய் ராஜாதானி யைச் சேர்ந்த நாசிக் மாவட்டம் நாசிக் நகரிலுள்ள காலாராம் ஆலயத்திலும் சத்தியாக்கிரக இயக்கம் நடத்தப்பட்டது. இத்தகைய இதர பல சிறு சத்தியாக்கிரக இயக்கங்களும் நடத்தப்பட்டன. எனினும் மேலே கூறிய இரண்டு சத்தியாக்கிரகங்கள்தான் தீண்டப் படாதோரும் அவர்களுடைய எதிராளிகளான சாதி இந்துக்களும் தங்களுடைய முயற்சிகளை ஒன்றுகுவித்த பிராதன சத்தியாக்கிரகங்

களாகும். அவர்கள் எழுப்பிய பேரொலியும் இரைச்சலும் இந்தியா வெங்கணும் எதிரொலித்தன. தீண்டப்படாதோர் இனத்தைச் சேர்ந்த ஆயிரக்கணக்கான ஆண்களும் பெண்களும் இந்த சத்தியாக்கிரகங் களில் ஆர்வத்தோடு, உணர்ச்சி பீறிட பங்கெடுத்துக்கொண்டனர். இந்த இனத்தின் ஆடவரும் பெண்டிரும் இந்துக்களால் இகழப் பட்டனர்; அவமதிக்கப்பட்டனர்; நையப்புடைக்கப்பட்டனர்; பலர் படுகாயமுற்றனர். அமைதிக்குப் பங்கம் விளைவித்ததாக சாக்குப் போக்குக் கூறி சிலர் காவல்துறையினரால் கைது செய்யப்பட்டனர். இந்த சத்தியாக்கிரக இயக்கம் ஆறு ஆண்டுக்காலம் நடைபெற்றது. 1935ல் நாசிக் மாவட்டம் இயோலாவில் அது முடிவுக்கு வந்தது. இந்துக்கள் தங்களுக்கு சமத்துவ சமூக உரிமைகள் வழங்க உடும்புப் பிடிவாதமாக மறுப்பதால் இந்து அரவணைப்பிலிருந்து வெளி யேறுவது என்று தீண்டப்படாதவர்கள் முடிவுசெய்தனர். இந்த சத்தி யாக்கிரக இயக்கத்துக்கும் காங்கிரசுக்கும் எத்தகைய சம்பந்தமும் இல்லை; ஒட்டும் இல்லை உறவும் இல்லை. இந்த இயக்கம் தீண்டப்படாதவர்களால், தீண்டப்படாதவர்களின் தலைமையில், தீண்டப்படாதவர்களின் பணத்தைக் கொண்டு நடைபெற்றது. எனினும் திரு.காந்தி தங்களுக்கு தார்மீக ஆதரவாவது அளிப்பார் என்று தீண்டப்படாத மக்கள் உறுதியாக நம்பினர். இதனைப் பெறு வதற்கான பலமான ஆதாரமும் இருந்தது. தங்களை வறுத்திக் கொள் வதன் மூலம் எதிராளியின் உள்ளத்தை நெக்குருகச் செய்வதே இந்த இயக்கத்தின் உள்ளுறை சாரம். இந்த ஆயுதத்தை உருவாக்கித் தந்த வரே திரு.காந்திதான். பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து சுயராஜ் யத்தை வெல்வதற்கு இந்த ஆயுதத்தை ஏந்தித்தான் அவர் காங் கிரசை வழிநடத்திச் சென்றார். எனவே, பொதுக் கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுப்பதற்கும், பொது இந்து ஆலயங்களில் பிரவேசிப் பதற்கும் தங்களுக்குள்ள நியாயமான உரிமையை நிலைநாட்டும் பொருட்டு தாங்கள் நடத்தும் சத்தியாக்கிரக இயக்கத்திற்கு, அறப் போருக்கு, புனித உரிமைப் போருக்கு திரு.காந்தி முழு ஆதரவு அளிப்பார் என்றே தீண்டப்படாதவர்கள் எதிர்பார்த்தனர்; இது முற்றி லும் இயல்பே; நியாயமும்கூட; ஆனால் திரு.காந்தி இந்த சத்தியாக் கிரக இயக்கத்திற்குத் தமது ஆதரவை அளிக்க மறுத்துவிட்டார். அதுமட்டுமல்ல. குதிரை குப்புறத் தள்ளியது மட்டுமன்றி குழியை வேறு தோண்டிய கதையில், அவர் இந்த இயக்கத்தை கடின மொழியில் வன்மையாகக் கண்டிக்கவும் செய்தார்.

மனிதர்கள் செய்யும் தவறுகளைக் களைவதற்கு, திருந்துவதற்கு இரண்டு நவீன ஆயுதங்கள் இருப்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். அந்த ஆயுதங்களை உருவாக்கி சீர்செய்து, செம்மைப்படுத்தி, பண்படுத்தியபெருமை தம்மையே சேரும் என்று திரு.காந்தி உரிமை கொண்டாடுகிறார். இவ்விரு ஆயுதங்களில் முதலாவது ஆயுதம் சத்தியாக்கிரகம். அரசியல் அநீதிகளை, பழிச்செயல்களை, அக்கிரமங்களை, தவறுகளைத் துடைத்தெறிய திரு.காந்தி இந்த சத்தியாக்கிரக ஆயுதத்தை பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராகப் பன்முறைப் பயன்படுத்தியிருக்கிறார். ஆனால் கிணறுகளையும் ஆலயங்களையும் தீண்டப்படாதோருக்குத் திறந்துவிடப்படுவதற்கு இந்துக்களுக்கு எதிராக சத்தியாக்கிரக ஆயுதத்தை திரு. காந்தி ஒருமுறைகூடப் பயன்படுத்தவில்லை. உண்ணாவிரதம் இருப்பது திரு.காந்தியின் பாசறையிலுள்ள மற்றொரு படைக்கலம். திரு.காந்தி மொத்தம் 21 உண்ணாவிரதங்களை மேற்கொண்டிருப்பதாகக் கூறப்படுகிறது. இவற்றில் சில உண்ணாவிரதங்கள் இந்து- முஸ்லீம் ஒற்றுமைக்காக நடத்தப்பட்டவை; பல உண்ணாவிரதங்கள் ஆசிரமவாசிகள் செய்த தவறுகளுக்கு கழுவாய் தேடுவதற்கு நிகழ்த்தப்பட்டவை; இவற்றில் ஒரு உண்ணாவிரதம் மிகவும் சுவையான சூழ்நிலையில் நடைபெற்றது. திரு. பட்டவர்த்தன் என்பவர் ஒரு சிறைக் கைதி; சிறைக்கூடத்தில் துப்புரவுப் பணியை அதாவது தோட்டி வேலையைச் செய்ய தன்னை அனுமதிக்க வேண்டும் என அவர் அரசைக் கேட்டுக்கொண்டார்; ஆனால் பம்பாய் அரசாங்கமோ இதற்கு அனுமதி மறுத்து உத்தரவிட்டது; இந்த ஆணையை எதிர்த்துத் தான் திரு.காந்தி உண்ணாவிரதம் மேற்கொண்டார். இதில் விந்தை என்னவென்றால் இந்த 21 உண்ணாநோன்புகளில் ஒன்றைக்கூட அவர் தீண்டாமையை அகற்றுவதற்காக மேற்கொள்ளவில்லை என்பதுதான். இவை யாவும் கவனத்திற் கொள்ள வேண்டிய முக்கியமான விஷயங்கள்.

1930ல் வட்டமேசை மாநாடு நடைபெற்றது. ஆனால் திரு. காந்தி 1931ல் நடைபெற்ற இரண்டாவது வட்டமேசை மாநாட்டு நடவடிக்கைகளில்தான் பங்குகொண்டார். சுயாட்சி பெறும் இந்தியாவுக்கு ஓர் அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கும் உயிர்நாடியான பிரச்சினையில் மாநாடு மிகுந்த கவனம் செலுத்திற்று. இந்தியா ஒரு சுயாட்சி பெற்ற நாடாக இருக்க வேண்டுமென்றால் அதன் அரசாங்கம் மக்களால் மக்களுக்காக நடத்தப்படும் மக்கள் அரசாங்கமாக இருக்க வேண்டுமென்ற கருத்து மாநாட்டில் ஒருமனதாகத் தெரி

விக்கப்பட்டது. உண்மையிலேயே மக்களால் நடத்தப்படும் ஓர் அரசாங்கம் மக்களது அரசாங்கமாக, மக்களுக்கான அரசாங்கமாக இருக்கும் என்பதை அனைவருமே ஏற்றுக்கொண்டனர். ஆனால் இதில் ஒரு பிரச்சினை குறுக்கிட்டது. பல்வேறு சமூகங்களையும் வகுப்புகளையும் பெரும்பான்மையினரையும் சிறுபான்மையினரையும் கொண்ட ஒரு நாட்டில் ஓர் அரசாங்கத்தை மக்களால் நடத்தப்படும் அரசாங்கமாக எப்படி ஆக்குவது என்பதே அந்தப் பிரச்சினை. இவர்கள் எல்லாம் வெறும் சமூகவேறுபாடுகளால் மட்டுமன்றி, கடுமையான சமூகப் பகைமையாலும் மிகவும் உணர்ச்சிவசப்பட்டிருப்பவர்கள். இத்தகைய சூழ்நிலைமையில், சட்டமன்றங்களும் நிர்வாக சபைகளும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டாலன்றி, இந்தியாவில் மக்களால் நடத்தப்படும் ஓர் அரசாங்கத்தை உருவாக்குவது சாத்தியமல்ல என்ற கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டது.

தீண்டப்படாதோரின் பிரச்சினை மாநாட்டில் பூதாகரமாக எழுந்து நின்றது. அது முற்றிலும் புதியதோர் அம்சத்தையும் பெற்றது: அதாவது விஷயம் இதுதான்: தீண்டப்படாதோரை இப்போது போன்றே எப்போதும் இந்துக்களின் தயவை, கருணையை, அருள் பாலிப்பைச் சார்ந்திருக்கும்படி விட்டுவிடுவதா? அவர்கள் கதி அதோகதியாகட்டும் என்று கைகட்டிக்கொண்டு சும்மா இருப்பதா? அல்லது வகுப்புவாரிப் பிரதிநிதித்துவக் கோட்பாட்டை அவர்களுக்கும் விஸ்தரித்து, அவர்கள் தம்மைப் பாதுகாத்துக்கொள்வதற்கு வழி வகை செய்ய வேண்டுமா? தங்கள் எதிர்காலம் இந்துக்களின் கையில் ஒப்படைக்கப்படுவதை, இன்னமும் ஆண்டாண்டுக்காலம் அவர்களை அண்டிஒண்டி அவர்களது நிழலில் நிற்கவேண்டிய அவல நிலையை தீண்டப்படாதோர் மிக வன்மையாக எதிர்த்தனர்; இதர சிறுபான்மையினருக்குத் தரப்படும் அதே பாதுகாப்பை தங்களுக்கும் வழங்கவேண்டுமென்று உரிமை முழக்கமிட்டனர். தீண்டப்படாதோரின் இந்த வாதத்தை எல்லோருமே ஏற்றுக்கொண்டனர். இது நியாயமானதாகவும் தருக்கவியல் ரீதியானதாகவும் கருதப்பட்டது. இது சம்பந்தமாக பின்வருமாறு வாதிக்கப்பட்டது. இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும், இந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் உள்ள வேறுபாட்டை இந்துக்களுக்கும் தீண்டப்படாதோருக்கும் இடையேயான வேறுபாட்டுடன் ஒப்பிடும்போது ஒன்றுமே இல்லை எனலாம். அந்த அளவுக்கு இந்துக்களுக்கும் தீண்டப்படாதோருக்கும் இடையே உள்ள பிளவு மிக ஆழமானது, விரிவானது; மலைக்கும் மடுவுக்குமுள்ள பிளவு. இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையேயான

பிளவு சமயச் சார்புடையது, சமூக சார்புடையது அன்று. ஆனால் அதேசமயம் இந்துக்களுக்கும் தீண்டப்படாதோருக்குமிடையே உள்ள வேறுபாடோ சமயச் சார்பும் அத்துடன் சமூகச் சார்பும் கொண்டது. இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே உள்ள பிளவால் ஏற்படும் பகைமை முஸ்லீம்களுக்கு அரசியல் பேரிடர் அல்லது நாசம் எதையும் விளைவித்து விடாது; ஏனென்றால் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையேயான உறவு எசமான், அடிமை உறவின்பாற்பட்டதல்ல. அது வெறும் மனஸ்தாபத்தை அடிப்படையாகக் கொண்டதே ஆகும். ஆனால் அதேசமயம் இந்துக் களுக்கும் தீண்டப்படாதோருக்கும் இடையேயான பிளவே நிச்சயம் தீண்டப்படாதோருக்கு விநாசகரமான அரசியல் விளைவை ஏற் படுத்தவே செய்யும்; ஏனென்றால் அவர்களுக்கு இடையே நிலவும் உறவு எசமான், அடிமைக்கிடையே உள்ள உறவாகும். எங்களுக்கும் இந்துக்களுக்கும் இடையேயான இடைவெளியை சமூக இயக்க நிகழ்வுமூலம் நிரப்ப காலம் காலமாக எவ்வளவோ பெருமுயற்சி கள் எடுத்துக்கொள்ளப்பட்டு வந்திருக்கின்றன; ஆனால் அந்த முயற்சிகள் அனைத்தும் படுதோல்வியே கண்டன; அவை வெற்றி பெறும் வாய்ப்பில்லை; நம்பிக்கை இல்லை; இந்நிலையில், ஆட்சி அதிகாரம் இந்து பெரும்பான்மையினருக்கு மாற்றப்படும்போது, முஸ்லீம்களுக்கும் ஏனைய சிறுபான்மையினருக்கும் அளிக்கப்படும் அதே வகையான பாதுகாப்பு எங்களுக்கும் வழங்கப்பட வேண்டும். இவ்வாறு தீண்டப்படாதவர்கள் வாதிட்டனர்.

தீண்டப்படாதோரின் இந்தக் கோரிக்கைக்கு ஆதரவளித்து, இந்துக்களின் கொடுங்கோன்மைக்கும் ஒடுக்குமுறைக்கும் அடக்கு முறைக்கும் எதிராக அவர்களது எதிர்ப்பு வலிமையைப் பலப்படுத்து வதன் மூலம் தீண்டப்படாதோர்பால் தமக்குள்ள பரிவையும் ஒருமைப்பாட்டு உணர்வையும் வெளிப்படுத்த திரு.காந்திக்கு இங்கு அரியதோர் வாய்ப்பு கிடைத்தது. ஆனால் அவர் அந்த வாராது வந்த வாய்ப்பை எப்போதும் போல் கைநழுவவிட்டுவிட்டார். திரு.காந்தி அவர்களிடம் அனுதாபம் காட்டுவதற்குப் பதிலாக, அவர்களைத் தோற்கடிப்பதற்கு தமது சக்திக்குட்பட்ட அனைத்தை யும் செய்தார். தீண்டப்படாதோரைத் தனிமைப்படுத்தும் நோக்கத் தோடு, முஸ்லீம்களுடன் ஓர் உடன்பாடு செய்து கொண்டார். அப்படி யும் அவர்களைத் தம்பக்கம் இழுக்க அவரால் முடியவில்லை. இப்போரில் அவர் சாகும்வரை உண்ணாவிரதத்தை மேற்கொண் டார்; முஸ்லீம்களுக்கும் ஏனைய சிறுபான்மையினருக்கும் அளிக்கப் படும் அதே அரசியல் உரிமைகளை தீண்டப்படாதோருக்கும்

வழங்குவதென தாங்கள் செய்த முடிவைத் திரும்பப் பெற்றுக் கொள்ளும்படி பிரிட்டிஷ் அரசாங்கத்தை நிர்ப்பந்திப்பதே அவரது இந்த உண்ணாவிரதத்தின் நோக்கம். உண்ணாவிரதம் தோல்வியுற்ற போது திரு.காந்தி ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ளும் கட்டாயத்துக்கு ஆளானார். அதுதான் புனா ஒப்பந்தம் என்பது. தீண்டப்படாதோரின் அரசியல் உரிமைகளை இந்த ஒப்பந்தம் ஏற்றுக்கொண்டது. இந் நிலையில் திரு. காந்தி வாளாயிருப்பாரா? அவர்களது அரசியல் உரிமைகளை பயனற்றதாக்குவதற்கு, செல்லாக்காசாக்குவதற்கு கீழ்த் தரமான, அருவருக்கத்தக்க தேர்தல் உத்திகளைக் கையாளும்படி காங்கிரசைத் தூண்டிவிட்டு வஞ்சம் தீர்த்துக்கொண்டார்.

1933ல், திரு.காந்தி இரண்டு இயக்கங்களைத் தொடங்கினார். முதலாவது ஆலயப்பிரவேச இயக்கம். இது சம்பந்தமான இரண்டு நடவடிக்கைகளை தாமே நேரடியாகப் பொறுப்பேற்று மேற் கொண்டார். ஒன்று குருவாயூர் ஆலயப்பிரவேசம். மற்றது திரு.ரங்க அய்யரின் ஆலயப்பிரவேச மசோதாவை மத்திய சட்டசபையில் நிறைவேற்ற முயற்சி எடுத்துக்கொள்வது. குருவாயூர் கோவிலின் தர்மகத்தா அக்கோவிலை ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் தீண்டப் படாதோருக்குத் திறந்துவிடவில்லை என்றால் தாம் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கப்போவதாக திரு.காந்தி ஆடம்பர ஆர்ப் பாட்டமாக அறிவித்தார். குருவாயூர் ஆலயத்தின் கதவுகள் தீண்டப் படாதோருக்குத் திறந்துவிடப்படாமல் இன்னமும் மூடிக்கிடக் கின்றன. ஆனால் திரு.காந்தியோ உண்ணாவிரதமிருக்கும் தமது வாக்குறுதியைக் காப்பாற்றாமல் ஆடிக்காற்றில் 'அம்போ' வென்று பறக்கவிட்டுவிட்டார். இதில் வியப்புக்குரிய விஷயம் என்னவென் றால், நோன்புறுதி மேற்கொண்டு இப்போது பதிமூன்று ஆண்டு களாகியும், தீண்டப்படாதோருக்குக் கோவிலைத் திறந்துவிட அவர் எந்த நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை என்பதுதான். ஆலயப்பிரவேச மசோதாவைக் கொண்டு வருவதற்கு அனுமதி யளிக்கும்படி கிட்டத்தட்ட கவர்னர்-ஜெனரலை நிர்ப்பந்திக்கும் அளவுக்கு திரு.காந்தி சென்றார்; ஆனால் கதை வேறுவிதமாகி விட்டது; பொறுக்குக் கமிட்டிக்கு மசோதாவை அனுப்பும் கட்டம் வந்தபோது மத்திய சட்டமன்றத்திலுள்ள காங்கிரஸ் கட்சி அதனை ஆதரிக்க மறுத்துவிட்டது. மசோதா இந்துக்களின் மனத்தைப் புண் படுத்தும் முறையில் இருப்பதாகவும், இத்தகைய மசோதாவுக்கு

1. விவரங்களுக்கு இயல் IV பார்க்க.

ஆதரவளித்தால் இந்துக்கள் காங்கிரசைத் தோல்வி காணச் செய்து பழிதீர்த்துக் கொள்வார்கள் என்றும் காங்கிரஸ் கட்சி அச்சம் கொண்டது. எனவே, திரு. ரங்க அய்யர் பெருத்த ஏமாற்றத்துக்கு உள்ளாகும் வகையில் காங்கிரஸ் அவரை கைகழுவி விட்டு, மசோதாவைக் ஆழக்குழி தோண்டி புதைத்துவிட்டது. திரு. காந்தி இதைப் பற்றி எல்லாம் எவ்வகையிலும் கவலைப் படவில்லை. இன்னும் சொல்லப்போனால் காங்கிரஸ் கட்சியின் போக்கை நியாயப்படுத்தும் அளவுக்குக் கூடச் சென்றார்.

1933ல் திரு.காந்தி தொடங்கிய மற்றொரு இயக்கம் அகில இந்தியாவிலும் கிளைகள் கொண்ட ஹரிஜன சேவா சங்கத்தை நிறுவியதாகும். இந்த சங்கத்தை நிறுவுவதற்கு மூன்று நோக்கங்கள் இருந்தன. முதலாவது நோக்கம் இந்துக்கள் தீண்டப்படாதோர்பால் பரந்து விரிந்த மனோபாவமும் பரிவும் கொண்டவர்கள் என்பதை யும், அவர்களது மேம்பாட்டுக்காக மிகுந்த அறச்சிந்தனையோடு பணத்தை வாரி வழங்கி ஆதரவுக் காட்டுவார்கள் என்பதையும் மெய்ப் பிப்பதாகும். இரண்டாவது நோக்கம் தீண்டப்படாதோர் தமது அன்றாட வாழ்வில் எதிர்ப்படும் எத்தனை எத்தனையோ இன்னல் களில் அவர்களுக்கு உதவிக்கரம் காட்டுவதாகும். மூன்றாவது நோக்கம் அரசியல் விஷயங்களில் மனவேறுபாடு கொண்ட இந்துக் கள் குறித்து தீண்டப்படாதோரின் மனத்தில் நம்பிக்கையைத் தோற்று விப்பதாகும். ஆனால் இந்த மூன்று குறிக்கோள்களில் எதுவுமே நிறைவேறவில்லை. எடுத்த எடுப்பில் சங்கத்திற்கு இந்துக்கள் மொத்தம் சுமார் 8 லட்சம் ரூபாய் நன்கொடை அளித்தனர். பொது அரசியல் காரியங்களுக்கு அவர்கள் வழங்கிய கோடிக்கணக்கான ரூபாய்களுடன் ஒப்பிடும்போது இது மிகமிக அற்பத் தொகையாகும். இதற்குப்பிறகு நிதி வறண்டுவிட்டது. இப்போது சங்கம் அரசாங்க மானியங்களையோ, அல்லது திரு.காந்தியின் கையொப்பங்களை விற்பனை செய்வதால் கிடைக்கும் வருமானத்தையோ அல்லது தீண்டப்படாதோரின் பாலுள்ள பரிவினாலன்றி திரு.காந்தியை மகிழ்விக்கும் நோக்கத்தோடு சில செல்வந்த வணிகர்கள் அளிக்கும் நன்கொடைகளையோதான் நம்பியிருக்கிறது. சங்கக்கிளைகளுக்கு ஆண்டுதோறும் மூடுவிழா நடத்தப்பட்டுவருகிறது. சங்கம் நாளுக்கு நாள் துரிதமாகச் சுருங்கி வருகிறது; வெகுவிரைவில் அது சுற்றுவரை

1. விவரங்களுக்கு இயல் V பார்க்க.

யில்லாத ஒரு வெறும் வட்டமாக மட்டுமே இருக்கும். இந்துக்கள் சங்கத்திடம் ஆர்வம் இழந்தது மட்டுமே திரு. காந்தியின் இந்த நடவடிக்கைகளில் வருந்தத்தக்க அம்சமல்ல. எவருடைய நல னுக்காக, நன்மைக்காக இந்த சங்கம் தொடங்கப்பட்டதாகக் கூறப் பட்டதோ, அந்தத் தீண்டப்படாதோரின் நல்லெண்ணத்தையும், ஒத்துழைப்பையும் அது பெறத்தவறிவிட்டது. இதற்குப் பல கார ணங்கள் உண்டு. சங்கத்தின் பணி சம்பந்தா சம்பந்தமின்றி அமைந் திருக்கிறது. அது எவரையும் கவரவில்லை. தீண்டாதோருக்கு உதவி யும் ஒத்துழைப்பும் தேவைப்படும் மிக அவசரமான பணிகளை அது புறக்கணிக்கிறது. சங்கம் தனது நிர்வாகத்தில் தீண்டத்தகாதோர் எவரையும் சேர்த்துக் கொள்ளவில்லை. தீண்டப்படாதோர் ஏதோ பிச்சைக்காரர்களாக, தானம் தர்மம் பெறுவோர்களாகவே நடத்தப் படுகின்றனர். இதனால் சங்கத்திடம் தீண்டப்படாதோர் எத்தகைய ஆர்வமும் காட்டுவதில்லை. இந்துக்களால் உள்நோக்கத்தோடு உரு வாக்கப்பட்ட ஓர் அந்நிய அமைப்பு என்றே அதனைக் கருதுகின் றனர். இந்துக்களையும் தீண்டப்படாதோரையும் இணைக்கும் ஒரு பாலமாக சங்கத்தை அவர் கட்டி வளர்த்திருக்கமுடியும்; அதற்கு அவருக்கு ஒரு நல்ல வாய்ப்பு இருந்தது. சங்கத்தின் வேலைத் திட் டத்தை மேம்படுத்தியும், அதன் பணியில் தீண்டப்படாதோரைப் பங்கேற்கச் செய்தும் அதனை மிகவும் செயலூக்கமிக்க, ஆற்றல் மிக்க ஓர் அமைப்பாக மாற்றியிருக்க முடியும். ஆனால் திரு.காந்தி இவ்வாறு எதுவும் செய்யவில்லை. அதனை நலிவுறவும் மெலிவுறவும் செய்தார். அது அமைதியாக, அணுஅணுவாக செத்துக் கொண்டிருக் கிறது. அநேகமாக அவரது ஆயுட்காலத்திற்குள்ளேயே அது அழித் தொழிந்துபோகும்.

திரு.காந்தியின் தீண்டாமை எதிர்ப்பு இயக்கத்தையும், அவரது பேச்சுக்களையும், செயல்களையும் பற்றிய இந்த மதிப்பீடு வாசகரை வியப்புக்கும், குழப்பத்துக்கும், திகைப்புக்கும் உள்ளாக்கினால் அதில் ஆச்சரியப்படுவதற்கு எதுவுமில்லை. வாசகர் தனது மனத்திலுள்ள குழப்பத்தைத் தெளிவுபடுத்திக் கொள்வதற்கு பின்கண்ட ரீதியில் சில கேள்விகளைக் கேட்பது முற்றிலும் இயல்பானதே:

(1) 1921ல் திலகர் சுயராஜ்ய நிதிக்கு திரு.காந்தி 1 கோடி 35 லட்சம் நிதி வசூலித்தார். தீண்டாமை ஒழிக்கப்பட்டாலொழிய சுயராஜ்யம் பெறுவது சாத்தியமில்லை என்று அடிக்கடி வலியுறுத்தி யும் வந்தார். அப்படியிருக்கும்போது தீண்டப்படாதோரின் ஆக்க

நலத்துக்காக கேவலம் அற்பத்தொகையான ரூ.43,000 மட்டுமே வழங்கப்பட்டபோது, அவர் ஏன் ஆட்சேபிக்கவில்லை?

(2) 1922ல் பர்தோலி நிர்மாணத்திட்டம் வகுக்கப்பட்டது. தீண்டப்படாதோர் நிலையை மேம்படுத்துவது அத்திட்டத்தில் ஒரு முக்கியமான அம்சம். இது சம்பந்தமான விவரங்களைத் தயாரிப் பதற்கென ஒரு குழு நியமிக்கப்பட்டது. ஆனால் இந்தக்குழு செயல் படவே இல்லை; விரைவிலேயே அது கலைக்கப்பட்டது; தீண்டப் படோதோரைக் கைதூக்கிவிடுதல் சம்பந்தமாக நிர்மாணத்திட்டத் தில் இடம் பெற்றிருந்த பகுதியும் கைகழுவப்பட்டது. காங்கிரஸ் காரியக் கமிட்டி இக்குழுவை இவ்வாறு மாற்றந்தாய் போக்குடனும், கருமித்தனமாகவும், பிசினாறித்தனமாகவும் நடத்தியதை திரு. காந்தி ஏன் ஆட்பேசபிக்கவில்லை? ஏன் எதிர்ப்புக் குரல் எழுப்பவில்லை? மற்றொரு குழுவை அவர் ஏன் நியமிக்கவில்லை? தீண்டப்படா தோரின் நல்வாழ்வுக்கான பணி முக்கியத்துவம் அல்லாததுபோல் அதனைக் கைவிட திரு. காந்தி ஏன் அனுமதித்தார்?

(3) சுயராஜ்ய இயக்கத்தை ஆரம்பிக்கும்போதே சுய ராஜ்யம் பெறுவதற்கு கீழ்க்கண்ட ஐந்து நிபந்தனைகளை திரு.காந்தி வலியுறுத்தினார். i. இந்து-முஸ்லீம் ஒற்றுமை; ii. தீண்டாமையை ஒழித்தல் iii. கையால் நூற்று கையாலேயே நெய்த கதரை அனைவரும் அணிதல்; iv. பரிபூரண அகிம்சை; v. முழு ஒத்துழையாமை. திரு. காந்தி இந்த நிபந்தனைகளை விதித்ததுடன் நில்லாமல், இவற்றை நிறைவேற்றப்பட்டாலொழிய சுயராஜ்யம் சாத்தியமில்லை என்பதை யும் இந்தியர்களுக்கு வலியுறுத்தி வந்தார். 1922ல் இந்து-முஸ்லீம் ஒற்றுமைக்காக உண்ணா விரதம் மேற்கொண்டார். கையால் நூல் நூற்பதை காங்கிரஸ் உறுப்பினராவதற்கு அடிப்படைத் தகுதியாக 1924ல் நிர்ணயித்தார். இதே திரு. காந்தி, தீண்டாமையைக் கைக்கொள் ளாமையை காங்கிரஸ் உறுப்பினராவதற்கான அடிப்படைத் தகுதி யாக 1924லோ அல்லது அதற்குப் பின்னரோ ஏன் நிர்ணயிக்க வில்லை?

(4) திரு.காந்தி தாம் மிகவும் நேசிக்கிற பல்வேறு நோக்கங் களுக்காக எத்தனையோ முறை உண்ணாவிரதமிருந்திருக்கிறார்? இதே திரு.காந்தி தீண்டப்படாதோருக்காக ஏன் ஒருமுறைகூட உண்ணாவிரதம் மேற்கொள்ளவில்லை?

(5) தவறுகளைக் களைவதற்காகவும், சுதந்திரம் பெறு வதற்காகவும் திரு.காந்தி சத்தியாக்கிரகம் என்னும் ஆயுதத்தை

உருவாக்கி, பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு எதிராக அதனைப் பயன் படுத்தி இருக்கிறார். பொதுக் கிணறுகளையும், கோவில்களையும், இதர பொது இடங்களையும் பயன்படுத்திக்கொள்ளும் உரிமையை தீண்டப்படாதோருக்கு இந்துக்கள் மறுத்து வருகின்றனர். இவ்வாறு அடம்பிடிக்கும், அநீதி இழைக்கும் இந்துக்களை எதிர்த்து தீண்டப் படாதோருக்கு ஆதரவாக திரு.காந்தி ஏன் ஒருமுறைகூடச் சத்தியாக் கிரகத்தை ஆரம்பிக்கவில்லை?

(6) பொதுக்கிணறுகளையும் ஆலயங்களையும் பயன் படுத்திக் கொள்வதற்கு இந்துக்களுக்கு எதிராக தீண்டப்படாதோர் திரு.காந்தியின் வழியைப் பின்பற்றி 1929 முதல் சத்தியாக்கிரகம் செய்து வந்துள்ளனர். அவர்களது சத்தியாக்கிரகத்தை திரு.காந்தி ஏன் எதிர்க்க வேண்டும்?

(7) ஜமோரின் மன்னர் குருவாயூர் ஆலயத்தை தீண்டப் படாதோருக்குத் திறந்துவிடவில்லை என்றால் உண்ணாவிரதம் இருப்பேன் என்று திரு.காந்தி அறிவித்தார். கோவில் திறந்துவிடப் படவில்லை. திரு.காந்தி தாம் அறிவித்தபடி ஏன் உண்ணாவிரதம் இருக்கவில்லை?

(8) மத்திய சட்டமன்றத்தில் காங்கிரஸ் கட்சி சார்பாக ஆலயப் பிரவேச மசோதா கொண்டு வருவதற்கு கவர்னர் - ஜெனரல் அனுமதி தரவில்லை என்றால் பயங்கரமான விளைவுகள் ஏற் படும் என்று 1932ல் திரு.காந்தி பிரிட்டிஷ் அரசாங்கத்தை எச்சரித்தார். ஆனால் மத்திய சட்டசபைக்கு புதிய தேர்தல்கள் அறிவிக்கப்பட்ட தால், மசோதாவிற்கான ஆதரவை காங்கிரஸ் விலக்கிக் கொண்டது; திரு. ரங்க அய்யர் தமது மசோதாவைக் கைவிட வேண்டியதாயிற்று. ஆலயப் பிரவேசத்தில் திரு.காந்தி மெய்யார்வமும் அக்கறையும் கொண்டவராக இருக்கும் பட்சத்தில், காங்கிரஸ் கட்சியின் இந்தச் செயலை அவர் ஏன் ஆதரித்தார்? தீண்டப்படாதோரின் ஆலயப் பிரவேசமா, தேர்தல்களில் காங்கிரஸ் வெற்றியா எது முக்கியம்?

(9) தீண்டப்படாதோருக்குள்ள இடர்ப்பாடு அவர்களுக் குக் குடிஉரிமைகள் இல்லாதிருப்பதில் அடங்கியிருக்கவில்லை என்பது திரு.காந்திக்குத் தெரியும். தீண்டப்படாதோர் இந்த உரிமை களைப் பயன்படுத்துவதற்குத் துணிந்தால் அவர்கள் கடுமையான விளைவுகளைச் சந்திக்க நேரும் என்ற இந்துக்களின் அச்சுறுத்

தலிலும் சதியிலும்தான் அவர்களது இடுக்கண் அடங்கியுள்ளது. இந்நிலைமையில் தீண்டப்படாதோரைப் பாதுகாப்பதற்கான உண்மையான வழி அவர்களது குடிஉரிமைகளைப் பாதுகாக்கக் கூடிய ஏதேனும் ஓர் அமைப்பை உருவாக்குவதே ஆகும். தீண்டப் படாதோரை வெறித்தனமாகத் தாக்குகின்ற அல்லது அவர்களுக்கு எதிராக சமூக, பொருளாதார பகிஷ்காரத்தைக் கையாண்டு, அதன் மூலம் அவர்கள் தங்களது குடி உரிமைகளைப் பயன்படுத்த இயலாத வாறு தடுக்கின்ற இந்துக்களை குற்றவாளிக் கூண்டில் ஏற்றும் கடமையை இந்த அமைப்பு செய்யும். ஹரிஜன சேவா சங்கத்தின் குறிக்கோள்களில் ஒன்றாக திரு. காந்தி ஏன் இதைக் கைக்கொள்ள வில்லை?

(10) திரு. காந்தி அரங்கில் நுழைவதற்கு முன்னர் தீண்டப் படாதோரின் மேம்பாட்டிற்காக சாதி இந்துக்கள் தாழ்த்தப்பட்டோர் சேவைக் கழகத்தை அமைத்திருந்தனர். இதற்கு வேண்டிய நிதியை இந்துக்களே வழங்கினர். எனினும் இந்துக்களும் தீண்டப்படாதோரும் அடங்கிய கூட்டுக் குழுமங்களால்தான் கழகத்தின் விவகாரங்கள் அனைத்தும் நிர்வகிக்கப்பட்டன. அப்படியிருக்கும்போது ஹரிஜன சேவா சங்கத்தின் நிர்வாகப் பொறுப்பிலிருந்து தீண்டப்படாதோரை திரு. காந்தி ஏன் விலக்கி வைத்திருக்கிறார்?

(11) திரு. காந்தி தீண்டப்படாதோரின் உண்மையான நண்பர் என்றால் அரசியல் பாதுகாப்புகள்தான் தங்களைப் பாது காத்துக் கொள்வதற்கு மிகச் சிறந்த சாதனம் என்று தீர்மானித்துக் கொள்ள தீண்டப்படாதோரை அவர் ஏன் விடவில்லை? தீண்டப் படாதோரைத் தனிமைப்படுத்தி அவர்களை முறியடிப்பதற்காக முஸ்லீம்களுடன் உடன்பாடு செய்து கொள்ளும் அளவுக்கு அவர் ஏன் சென்றார்? வகுப்புத் தீர்ப்பின் மூலம் தீண்டப்படாதோருக்கு கிட்டக் கூடிய அனுகூலத்தைப் பறிக்கும் நோக்கத்தோடு திரு. காந்தி ஏன் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கப்போவதாக அறிவித்தார்? இத்தகைய தீவிர நிர்ப்பந்த முறையை அவர் ஏன் கைக்கொண்டார்?

(12) புனா ஒப்பந்தத்தை ஏற்றுக்கொண்டு விட்ட பிறகு தீண்டப்படாதோரிடம் நம்பிக்கை வைக்கும் வகையில் திரு. காந்தி ஏன் நடந்து கொள்ளவில்லை? தீண்டப்படாதோருக்கு ஒதுக்கப்பட் டுள்ள இடங்களுக்கு இந்துக்களின் கைம்பொம்மைகளாக இருக்கக் கூடிய தீண்டப்படாத வேட்பாளர்களைத் தேர்ந்தெடுக்கச் செய்து,

தீண்டப்படாதோரின் அரசியலைப் பாழ்ப்படுத்தாதீர்கள் என்று காங்கிரசுக்கு அவர் ஏன் அறிவுரை கூறவில்லை?

(13) புனா ஒப்பந்தத்தை ஏற்றுக்கொண்ட பிறகு திரு. காந்தி அந்த ஒப்பந்தத்தின்படி நடந்துகொண்டு, காங்கிரஸ் மந்திரிசபைகளில் தீண்டப்படாதோரின் பிரதிநிதிகளையும் சேர்த்துக் கொள்ளும்படி காங்கிரஸ் தலைமையை ஏன் பணிக்கவில்லை?

(14) ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்த திரு. அக்னிபோஜை டாக்டர் கரே தமது மத்திய மாகாண அமைச்சரவையில் சேர்த்துக் கொண்டபோது, அமைச்சராக இருப்பதற்கு அவருக்கு எல்லாத் தகுதிகளும் இருந்தபோதிலும், அந்த நியமனத்தை திரு. காந்தி ஏன் ஏற்கவில்லை? ஷெட்யூல்டு வகுப்புகளைச் சேர்ந்தவர்களிடையே இத்தகைய உயர்ந்த அபிலாஷையைத் தோற்றுவிப்பதைத் தாம் எதிர்ப்பதாக திரு. காந்தி கூறினாரா?

## III

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் திரு. காந்தி அளிக்கக்கூடிய பதில் என்ன? திரு. காந்தியின் நண்பர்கள் அளிக்கக்கூடிய விளக்கங்கள் யாவை? திரு. காந்தியின் தீண்டாமை எதிர்ப்பு இயக்கத்தில் இத்தனை மாற்றங்களும் திடீர் திருப்பங்களும், முரண்பாடுகளும் எதிர்மறைகளும், தாக்குதல்களும் சரணடைதல்களும், முன்னேற்றங்களும் பின்வாங்கல்களும் இருப்பதைக் கொண்டு பார்க்கும் போது, இந்த இயக்கம் முழுவதுமே ஒரு மர்மக் கதையாகத் தோன்றுகிறது. அதன் பயனிறைவுடைமையில் ஒரு சிலரே நம்பிக்கை வைத்துள்ளனர்; இந்த இயக்கத்துக்குப் பின்னால் போதிய மெய்யுறுதிப்பாடும், அக்கறையும், ஆர்வமும், நேர்மையும் இல்லை என்று பலர் கருதுகின்றனர். எனவே இதற்கு விளக்கம் தேவை. திரு. காந்தியின் குறிக்கோள்களையும் முறைகளையும் வாசகர் தெளிவாகப் புரிந்து கொள்வதற்காக இல்லாவிட்டாலும், நேர்மையானவர், வாய்மைமிக்கவர் என்று அவர் பெற்றிருக்கும் புகழின் பொருட்டாவது திரு. காந்தியும் அவருடைய நண்பர்களும் முன்கூறிய கேள்விகளுக்குப் பதிலளிக்க, விளக்கம் தர முன்வர வேண்டும்.

இக்கேள்விகளுக்கு திரு. காந்தியும் அவருடைய நண்பர்களும் என்ன பதிலளிப்பார்கள் என்று தெரிந்து கொள்வது சுவையான

விஷயம் என்பதில் ஐயமில்லை. இந்தப் பிரச்சினையில் ஆர்வமும் அக்கறையும் கொண்டுள்ள ஒவ்வொருவரும் இப்பதில்களை எதிர் பார்ப்பது இயல்பே. எனினும் அவர்களுடைய பதில் இப்படித்தான் இருக்கும் என்று அனுமானித்து, அதனைப் பரிசீலிக்க நான் விரும்ப வில்லை. அவர்கள் தங்களுக்கு விருப்பமான முறையில் தங்கள் பதில்களை வடிவமைத்து, தங்களுக்கு விருப்பப்பட்ட நேரத்தில் அவற்றை வெளியிடலாம். இதற்கிடையே, திரு. காந்தியையும் அவ ருடைய தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தையும் பற்றி தீண்டப்படா தோர் என்ன சொல்கிறார்கள் என்று கேட்கலாம். திரு. காந்தியின் தீண்டாமை ஒழிப்பு இயக்கம் பற்றி தீண்டப்படாதோர் என்ன கருத்து கொண்டிருக்கிறார்கள் என்று கூறுவது அப்படி ஒன்றும் சிரமமான தல்ல.

திரு. காந்தியை நேர்மையானவர் என்று தீண்டப்படாதோர் கருதுகிறார்களா? 'இல்லை' என்ற எதிர்மறையான பதிலே இதற்குக் கிடைக்கும். காந்தியை நேர்மையானவராக அவர்கள் கருதவில்லை. எப்படி அவர்கள் கருத முடியும்? பர்தோலித் திட்டத்தைச் செயல் படுத்த 1921ல் நாடு முழுவதுமே ஆர்த்தெழுந்தபோது, எழுச்சியுற்ற போது அத்திட்டத்தின் ஓர் அம்சமாக விளங்கிய தீண்டாமை எதிர்ப்புப் பற்றி முற்றிலும் பாராமுகமானவராக, கவலையற்றவராக இருந்த ஒரு மனிதரை நேர்மையானவர் என்று அவர்கள் எப்படிக் கருதமுடியும்? ரூ. 1 கோடி 25 லட்சம் கொண்ட சுயராஜ்ய நிதியி லிருந்து தீண்டப்படாதோர் நல்னுக்காக ரூபாய் 43 ஆயிரம் மட்டுமே ஒதுக்கப்பட்டபோது, நீண்டகாலமாகப் புறக்கணிக்கப்பட்டு வந்த ஒரு லட்சியத்தின் விஷயத்தில் இவ்வளவு கஞ்சத்தனமாக நடந்து கொண்ட போக்கை எதிர்த்து எத்தகைய ஆட்சேபக் குரலும் எழுப்பாத ஒரு மனிதரை நேர்மையானவர் என்று எப்படிக் கருத முடியும்? தீண்டாமையை ஒழித்துக்கட்டும் கடமையை இந்துக்களை ஏற்கச் செய்வதற்கு 1924ல் அரியதோர் வாய்ப்புக் கிட்டியபோது, அதற் கான அதிகாரமும் அதனைச் செயல்படுத்தும் சந்தர்ப்பமும் இருந்தும் கூட எதுவும் செய்யாது இருந்துவிட்ட ஒரு மனிதரை நேர்மையானவர் என்று எப்படிக் கருதமுடியும்? அப்போது இந்த நடவடிக்கையை மேற்கொண்டிருந்தால் மூன்று காரியங்கள் நிறைவேறியிருக்கும். காங்கிரஸ்காரர்களின் தேசியத்தை அக்னிப் பரீட்சைக்கு உட்படுத்தி யிருக்கும். தீண்டாமையை அகற்றுவதற்குத் துணைபுரிந்திருக்கும். தீண்டாமை என்பது ஒரு பெரும்கேடு, இந்து மதத்திற்கு ஏற்பட் டுள்ள ஓர் இழுக்கு, பழி என்றெல்லாம் காந்தி இதயசுத்தியோடு

தான், வாய்மையோடுதான் பேசி வருகிறார் என்பது மெய்ப்பிக்கப் பட்டிருக்கும். பின் ஏன் திரு. காந்தி இதைச் செய்யவில்லை? தீண் டாமையை அகற்றுவதைவிட ராட்டையில் நூல் நூற்கும் இயக் கத்தைப் பரப்புவதில்தான் திரு. காந்தி அதிக ஆர்வம் கொண்டிருக் கிறார், அக்கறை கொண்டிருக்கிறார் என்பதை இது காட்டவில் லையா? தீண்டாமையை ஒழித்துக் கட்டுவது என்பது திரு. காந்தியின் திட்டத்தில் மிகவும் அற்பமான அம்சம், இன்னும் சொல்லப்போனால் அதற்குக் கடைசி இடம்கூட தரப்படவில்லை என்பதை இது காட்ட வில்லையா? தீண்டாமையானது இந்து மதத்தின்மீது படிந்துள்ள ஒரு கறை, தீண்டாமையை அகற்றாமல் சுயராஜ்யம் பெறமுடியாது என்று திரு. காந்தி விடுத்த அறிக்கைகள் யாவும் உள்ளத்தின் அடி ஆழத் திலிருந்து வெளிவராத பொருளற்ற வெற்றுச் சொற்கள் என்பதை இது காட்ட வில்லையா? தீண்டப்படாதோருக்கு குருவாயூர் ஆலயம் திறந்துவிடப்படவில்லை என்றால் உண்ணாவிரதம் இருக்கப் போவ தாக பிரதிக்கினை செய்துவிட்டு, கோவில் மூடப்பட்டுவிட்ட பிறகும் கூட உண்ணாவிரதத்தை ஆரம்பிக்காத ஒரு மனிதரின் நேர்மையை எப்படி நம்ப முடியும்? ஆலயப் பிரவேச மசோதா கொண்டு வருவ தற்குத் தூண்டுதலாக இருந்துவிட்டு, பிறகு அம்மசோதாவைக் கைவிடுவதில் உடந்தையாக இருந்த ஒரு மனிதரை நேர்மை யானவர் என்று அவர்கள் எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்? தீண்டப் படாதோருக்குக் கோவில்களைத் திறந்துவிடுவதற்கு சகல முயற்சி களையும் எடுத்துக் கொள்ளாமல், தீண்டப்படாதோருக்குக் கதவு கள் திறக்கப்படாத ஒரு கோயிலுக்கு நான் செல்ல மாட்டேன் என்று கூறுவதோடு தமது கடமை முடிந்துவிட்டதாகக் கருதும் ஒரு மனிதரது நேர்மையை அவர்கள் எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்? எல்லாவற்றுக்கும் உண்ணாவிரதம் இருக்கத் தயாராக இருக்கின்ற ஆனால் தீண்டப்படாதோருக்காக மட்டும் உண்ணாவிரதம் இருக்க எந்தக் கட்டத்திலும் முன்வராத ஒரு மனிதரது நேர்மையை எப்படி அவர்கள் நம்பமுடியும்? எதற்கேனும் சரி, எவரை எதிர்த்தேனும் சரி சத்தியாக்கிரகம் செய்ய சித்தமாக இருக்கின்ற ஆனால் தீண்டப் படாதோரின் பொருட்டு இந்துக்களை எதிர்த்து மட்டும் சத்தியாக் கிரகம் செய்ய விரும்பாத ஒரு மனிதரது நேர்மையை எப்படி அவர்கள் நம்பமுடியும்? தீண்டாமையைப் பற்றி நீண்ட நெடும் உபதேசங்கள் செய்வதோடு நின்றுகொண்டு அதற்கு மேல் எதுவும் செய்ய ஆர்வ மில்லாத ஒரு மனிதரின் நேர்மையை எப்படி அவர்கள் நம்ப முடியும்?

திரு. காந்தியை நேர்மையானவராகவும் வாய்மை தவறாதவராகவும் அவர்கள் கருதுகிறார்களா? அவர்கள் திரு. காந்தியை நேர்மையாளராகவும் வாய்மை தவறாதவராகவும் கருதவில்லை என்பதே இதற்குப் பதில். சுயராஜ்ய இயக்கத்தின் ஆரம்பத்தில், பிரிட்டிஷாருடன் சேர வேண்டாம் என்று தீண்டப்படாதோரிடம் திரு. காந்தி கூறினார். கிறித்தவ மதத்தையோ வேறு எந்த மதத்தையோ தழுவ வேண்டாம் என்றும் அவர்களுக்கு அவர் அறிவுரை கூறினார். இந்து மதத்திலேயே அவர்களுக்கு விமோசனம் கிட்டும் என்றும் உறுதியளித்தார். சுயராஜ்யம் பெற வேண்டுமென்றால் தீண்டாமையை ஒழித்துக்கட்ட வேண்டும் என்று அவர் இந்துக்களுக்குப் போதனை செய்தார். அப்படியிருந்தும் 1921ல் திலகர் சுயராஜ்ய நிதியிலிருந்து தீண்டப்படாதோரின் நலனுக்காக மிக அற்பத் தொகையே ஒதுக்கப்பட்டது; அது மட்டுமல்ல தீண்டப்படாதோரின் மேம்பாட்டுக்காகப் பாடுபடுவதற்கென்று நியமிக்கப்பட்ட குழுவும் கலைக்கப்பட்டது. அப்போது திரு. காந்தி என்ன செய்தார்? இதை எதிர்த்து சுண்டு விரலையாவது அசைத்தாரா? ஆட்சேபக்குரல் எழுப்பினாரா?

திலகர் சுயராஜ்ய நிதியான ரூ. 1 கோடி 25 லட்சம் திரு. காந்தியின் பொறுப்பில் இருந்தது. இந்தத் தொகையில் ஒரு கணிசமான பகுதி தீண்டப்படாதோரின் நலனுக்காக ஒதுக்க வேண்டும் என்று திரு. காந்தி ஏன் வலியுறுத்தவில்லை? இதில் திரு. காந்தி முற்றிலும் அக்கறையில்லாமல் இருந்தார் என்பது சர்ச்சைக்கு இடமற்றது. இதில் வேதனைக்கும் விந்தைக்குமுரிய விஷயம் என்னவென்றால், தமது அக்கறையின்மையை நியாயப்படுத்தித் தந்த விளக்கமே ஆகும். சுயராஜ்யத்தை அடையப் பெறுவதற்கு ஓர் இயக்கத்தைத் தொடங்குவதற்குத் திட்டமிடுவதில் மும்முரமாக ஈடுபட்டிருப்பதால் தீண்டப்படாதோரின் நலனுக்குப் பாடுபடுவதற்குத் தமக்கு அவகாசமில்லை என்று அவர் சமாதானம் கூறினார். இந்த நொண்டிச் சமாதானம் கூறியதற்காக அவர் வெட்கப்படாதது மட்டுமல்ல, தீண்டப்படாதோரின் நலனில் அக்கறை காட்டாததை நியாயப்படுத்தும் ஒரு விளக்கத்தையும் அளித்தார். தீண்டப்படாதவர்களின் நலனில் கவனம் செலுத்தாமல், இந்தியாவின் அரசியல் லட்சியத்துக்குத் தம்மை முழுக்க முழுக்க அர்ப்பணித்துக் கொண்டதில் தவறு ஏதுமில்லை, முழுமை என்பதில் பகுதியும் அடங்கும், இந்துக்கள் பிரிட்டிஷாரின் அடிமைகளாக இருப்பதால் அடிமைகள் அடிமைகளை விடுவிக்க முடியாது என்று வாதிட்டார். 'அடிமைகளின்

அடிமை', 'பெரியதில் சிறியதும் அடங்கும்' என்பன போன்ற வாசகங்கள் வியக்கத்தக்க வாதத்திறமையை வெளிப்படுத்துபவை யாக இருக்கலாம். ஆனால் நாட்டின் செல்வம் அதிகரித்து விட்ட தால், எல்லோரது செல்வமும் அதிகரித்து விட்டது என்று வாதிப் பதைப் போன்றதுதான் இதுவும்; இதில் துளியும் உண்மை இருக்க முடியாது. ஆனால் இங்கு திரு. காந்தியின் வாதத் திறமையைப் பற்றி நாம் ஆராய்ந்து கொண்டிருக்கவில்லை. அவரது வாய்மையைத் தான், நேர்மையைத்தான் இங்கு சோதித்துக் கொண்டிருக்கிறோம். தமக்குள்ள பொறுப்பைத் தட்டிக் கழித்து, ஏதோ உப்பு சப்பில்லாத ஒரு சமாதானம் கூறுவதோடு திருப்தியடையும் ஒரு மனிதனுடைய நேர்மையை நாம் ஏற்றுக் கொள்ள முடியுமா? திரு. காந்தி தங்க ளுடைய லட்சியத்தை உறுதியோடு ஆதரித்து நிற்பவர் எனத் தீண்டப் படாதவர்கள் நம்ப முடியுமா?

அரசியல் சட்டப் பாதுகாப்புகள் விஷயத்தில் திரு. காந்தி தங்கள் பாலும், முஸ்லீம்கள் மற்றும் சீக்கியர்கள் பாலும் நடந்து கொண்ட முறையைக் கொண்டு பார்க்கும்போது அவர்கள் திரு. காந்தியை எவ்வாறு நேர்மையாளராக, கண்ணியமிக்கவராகக் கருத முடியும்?

அரசியல் சட்டப் பாதுகாப்புகள் விஷயத்தில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கும் இதர சிறுபான்மையினருக்கும் இடையே தாம் பாகுபாடு காட்டுவதை நியாயப்படுத்தும் பொருட்டு திரு. காந்தி மற்றொரு வாதத்தை முன்வைப்பது வழக்கம். முஸ்லீம்களையும் சீக்கியர்களையும் சிறுபான்மையினராக தாம் அங்கீகரித்ததற்கு வர லாற்று ரீதியான காரணங்கள் உண்டு என்பதுதான் அந்த வாதம். அந்தக் காரணங்கள் என்ன என்பதை அவர் ஒருபோதும் விளக்கிக் கூறியதில்லை. முஸ்லீம் களும் சீக்கியர்களும் பழைய ஆளும் வகுப் பினர்களின் எச்சமிச்சப் பகுதியினர் என்பதைத் தவிர இதற்கு வேறு வரலாற்றுக் காரணங்கள் ஏதும் இருக்க முடியாது. எல்லா சிறுபான்மை யினரையும் சமத்துவ அடிப்படையிலேயே நான் பாவிப்பேன், இத் தகைய தருக்க முரணான, பொருத்தமற்ற கருத்துகளுக்கு எத்தகைய மதிப்பும் அளிக்க மாட்டேன் என்றுதான் அவர் நியாயமாக வலி யுறுத்தி இருக்க வேண்டும். அவ்வாறு செய்யாமல் இத்தகைய சிறு பிள்ளைத்தனமான, ஜனநாயக விரோத வாதங்களுக்கு அடிபணிந்து விட்டதைக்கூட எவரும் பொருட்படுத்த மாட்டார்கள். ஆனால் இங்கு ஒரு கேள்வி எழுகிறது: இத்தகைய வாதத்தை ஏற்றுக்கொள்வது ஷெட்யூல்டு வகுப்பினரின் கோரிக்கையை எதிர்ப்பதிலிருந்து திரு.

காந்தியை எவ்வாறு தடுத்திருக்க முடியும்? வரலாற்றுக் காரணங்களைத் தவிர வேறு எந்தக் காரணங்களுக்கும் தாம் கட்டுப்பட்டிருக்கவில்லை என்று திரு. காந்தி ஏன் தம்மைக் கருதிக்கொள்ளவில்லை? முஸ்லீம்கள் விஷயத்தில் வரலாற்றுக் காரணங்கள் தீர்மானமானவை என்றால் தீண்டப்படாதவர்கள் விஷயத்தில் தார்மிக காரணங்கள் தீர்மானமானவை என திரு. காந்தி ஏன் நினைக்கவில்லை? வரலாற்றுக் காரணங்கள் என்ற வாதம் போலியான, பொய்யான வாதம் என்பதுதான் உண்மை. இது ஒரு வாதமே அல்ல. தீண்டப்படாதவர்களின் கோரிக்கையை ஏற்காததற்கு இது ஒரு சாக்கு போக்கே தவிர வேறல்ல.

பெரும்பான்மையினர், சிறுபான்மையினர் பிரச்சினையை எதிர்கொள்ள நேர்ந்தபோது திரு. காந்தி அடைந்த கடுவெறுப்பையும் சீற்றத்தையும் போல் வேறு எப்போதும் அவர் அடைந்ததில்லை என்றே கூறலாம். அப்பிரச்சினையை மறக்கவும் உதாசீனம் செய்யவுமே அவர் விரும்பினார். ஆனால் சந்தர்ப்ப சூழ்நிலைகள் இவற்றில் எதையும் செய்ய அவரை விடவில்லை. பல சந்தர்ப்பங்களில் இப்பிரச்சினையை அவர் கையாள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. கடைசியாக இப்பிரச்சினையை 1939 அக்டோபர் 21 ஆம் தேதி கையாண்டார். ''பெரும்பான்மை என்னும் கற்பனை'' என்ற தலைப்பில் ஹரிஜன் இதழில் அவர் எழுதிய தலையங்கத்தின் வடிவத்தில் இது அமைந்திருந்தது. இந்தக் கட்டுரையில் அவர் கொடிய விஷத்தைக் கக்கியிருந்தார்; இந்தப் பிரச்சினையை அடிக்கடி எழுப்புவோரை எள்ளி நகையாடியிருந்தார். அந்தக் கட்டுரையில் முஸ்லீம்கள் சிறுபான்மையினர் என்பதை வன்மையாக மறுத்தார். சீக்கியர்கள் சிறுபான்மையினர் என்பதை மறுத்தார். இந்தியக் கிறித்தவர்கள் சிறுபான்மையினர் என்பதையும் மறுத்தார். ஒடுக்கப்பட்ட வகுப்பினர்கள் என்ற அர்த்தத்தில் அவர்கள் சிறுபான்மையினர் அல்லவென்றும், எண்ணிக்கை அடிப்படையில் மட்டுமே அவர்கள் சிறுபான்மையினர் என்றும் வாதிட்டார்; அதாவது அவர்கள் சிறுபான்மையினரே அல்ல என்பதே இதற்குப் பொருள். ஷெட்யூல்டு வகுப்பினரைப் பற்றி திரு. காந்தி என்ன சொல்லுகிறார்? தாங்கள் ஒரு சிறுபான்மையினர் என்ற அவர்களது வாதத்தை அவரால் மறுக்க முடியுமா? திரு. காந்தியின் வாய்மொழி வார்த்தைகளையே இங்கு மேற்கோள் காட்டுகிறேன். திரு. காந்தி பின்வருமாறு கூறினார்:

> ''இந்தியா சுதந்திரமடைவதால் தங்கள் உரிமைகள் அபாயத்துக்குள்ளாகக் கூடிய உண்மையான சிறுபான்மையினர் என்று எவரும் இந்தியாவில் இல்லை என்பதை

நிரூபிக்க நான் நெடுகிலும் முயன்று வந்திருக்கிறேன். தாழ்த்தப்பட்ட வகுப்பினரைத் தவிர தன்னைத்தானே கவனித்துக் கொள்ள இயலாத எந்தச் சிறுபான்மையினருமே இல்லை.''

ஷெட்யூல்டு வகுப்பினர் சிறுபான்மையினர் என்ற சொல்லின் உண்மையான அர்த்தத்தில் சிறுபான்மையினர் என்பதையும், இந்து பெரும்பான்மையினரால் ஆளப்படும் ஒரு சுதந்திர இந்தியாவில் தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்ள இயலாத ஒரே சிறு பான்மையினர் என்பதையும் இங்கு திரு. காந்தி ஒப்புக் கொள்வதைப் பார்க்கிறோம். ஆனால் உள்ளத்தில் இத்தகைய மெய்மையைக் கொண்டிருந்த போதிலும் தீண்டப்படாதவர்களுக்கு எத்தகைய அரசியல் பாதுகாப்புகள் அளிப்பதையும் தாம் ஏற்க முடியாது என்று திரு. காந்தி மிகவும் கடுமையான முறையில் அடம் பிடித்தார். இத்தகைய ஒரு மனிதரை நேர்மையானவர், வாய்மை மிக்கவர் என்று தீண்டப் படாதவர்கள் எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்?

தங்களுக்கு அரசியல் பாதுகாப்புகள் அளிக்கப்பட வேண்டுமென்ற தீண்டப்படாதவர்களின் கோரிக்கைகளை வட்டமேசை மாநாட்டில் திரு. காந்தி எதிர்த்தார். தீண்டப்படாதவர்களின் குறிக்கோளை முறியடிக்க அவர் தம்மால் முடிந்த அனைத்தையும் செய்தார். அவர்களது கோரிக்கைகளுக்குப் பின்னால் உள்ள வாத வலிமையைப் பலவீனப்படுத்துவதற்கும், அவர்களைத் தனிமைப்படுத்துவதற்கும் முஸ்லீம்களை தமது பக்கம் ஈர்ப்பதற்கு அவர்களது பதினான்கு அம்சக் கோரிக்கைகள் முழுவதையும் ஏற்க முன்வந்தார். சிறுபான்மையினர் துணைக்குழுக் கூட்டத்தில் பேசும்போது திரு. காந்தி பின் வருமாறு கூறினார்: ''குழு தனது அங்கீகாரத்தை அளிக்குமானால் தீண்டப்படாதவர்களின் கோரிக்கையை எதிர்க்க நான் யார்.'' ஷெட்யூல்டு வகுப்பினரின் கோரிக்கைகளை எதிர்ப்பதற்குப் பிரதியாக முஸ்லீம்களின் பதினான்கு அம்சக்கோரிக்கை முற்றிலுமாக ஏற்பதற்கு முன்வந்து சிறுபான்மை குழுவின் முடிவை முறியடிப்பதற்கு திரு. காந்தி முயன்றார்: இது திரு. காந்தி செய்த மிகப் பெரிய தவறாகும்!! இதில் அவர் மிகவும் சூட்சுமான சூழ்ச்சி முறையைக் கையாண்டார். ஒன்று, தங்களது பதினான்கு அம்சக் கோரிக்கைகளை ஏற்க திரு. காந்தி முன்வந்ததை ஏற்று, தீண்டப்படாதவர்களின் கோரிக்கைக்கு அளிக்கும் ஆதரவை அவர்கள் திரும்பப் பெற வேண்டும் அல்லது தீண்டப்படாதவர்களுடன் சேர்ந்து கொண்டு தமது பதினான்கு அம்சக் கோரிக்கைகளை இழக்க வேண்டும் என்ற மிகக்

கடினமான சோதனையை முசல்மான்கள் முன் அவர் வைத்தார். முடிவில் திரு. காந்தியின் சூழ்ச்சி படுதோல்வி அடைந்தது; முஸல் மான்கள் தங்கள் பதினான்கு அம்சக் கோரிக்கைகளை இழக்கவும் இல்லை, தீண்டப்படாதவர்களும் தங்கள் குறிக்கோளில் தோல்வி யடையவும் இல்லை. எனினும் இந்த நிகழ்ச்சி திரு. காந்தியின் நய வஞ்சகத்துக்கு ஒரு கண்கண்ட சாட்சியாக அமைந்துள்ளது. ஒருவர் மற்றவருக்கு அளித்த வாக்குறுதியை மீறும்படி பண்பற்ற முறையில் தூண்டும் ஒரு மனிதரை, ஒருவரை நண்பர் என்று அன்போடு, பரி வோடு அழைத்துவிட்டு பின்னர் அவர் முதுகில் குத்துவதற்குத் திட்ட மிடும் ஒருவரை வேறு எந்த முறையில் வருணிக்க முடியும்? இத் தகைய ஒருவரை நேர்மையானவர், நாணயமானவர் என்று தீண்டப் படாதவர்கள் எப்படிக் கருத முடியும்?

வகுப்புத் தீர்ப்பு சம்பந்தப்பட்ட முடிவை பிரிட்டிஷ் பிரத மரின் மத்தியஸ்தத்துக்கு திரு. காந்தி விட்டுவிட்டார். தீண்டப் படாதோரை முறியடிக்க திரு. காந்தி எவ்வளவோ முயற்சி எடுத்துக் கொண்டபோதிலும் மன்னர் பிரான் அரசாங்கம் அவர்களது அர சியல் கோரிக்கைகளை ஏற்றுக் கொண்டது. மத்தியஸ்த நடவடிக்கை யில் ஓர் உடைந்தையாளர் என்ற முறையில் அந்த தீர்ப்பை ஏற்கக் கட்டுப்பட்டிருந்தார். ஆனால் திரு. காந்தி அதனை மீறினார்; இதன் பொருட்டு சாகும் வரை உண்ணாவிரதம் இருக்க முடிவு செய்தார். திரு. காந்தி தமது சாகும்வரை உண்ணா விரதத்தின் மூலம் இந்தியா வையும் வெளி உலகையும் அதிர்ச்சியுறச் செய்தார். புதிய அரசிய லமைப்பில் தீண்டப்படாதவர்களுக்கு அரசியல் சட்டப் பாதுகாப்பு கள் அளிக்க பிரிட்டிஷ் பிரதமர் தமது தீர்ப்பில் முன்வந்திருந்தார்; இந்த அரசியல் சட்டப் பாதுகாப்புகளைத் திரும்பப்பெறும்படி பிரிட்டிஷ் அரசாங்கத்தை நிர்ப்பந்திப்பதே இந்த உண்ணா விரதத் தின் நோக்கம். திரு. காந்தியின் சீடர்களில் ஒருவர் இந்த உண்ணா விரதத்தை காவியப்புகழ்பெற்ற உண்ணா விரதம் என்று வான ளாவப் புகழ்ந்தார். இந்த உண்ணா விரதம் ஒரு வீரகாவியம் என்று ஏன் வருணிக்கப்பட்டது என்று தெரியவில்லை. இதில் வீரத்துக்கு எந்த இடமும் இல்லை. வீரத்துக்கு எதிரானதைத்தான் இதில் பார்க் கிறோம். இதனை ஒரு வெறும் சாகசச் செயல் என்றுதான் கூற வேண் டும். தாம் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கப் போவதாகப் பய முறுத்தினால் தீண்டப்படாதவர்களும் பிரிட்டிஷ் அரசாங்கமும் அதிர்ந்து போய் விடுவார்கள், அஞ்சி நடுநடுங்குவார்கள், கோரிக் கைக்கு இணங்கி விடுவார்கள் என்று நினைத்தே திரு. காந்தி இந்த முடிவுக்கு வந்தார். ஆனால் இந்த வெற்று வேட்டை அம்பலப்படுத்த

பிரிட்டிஷ் அரசாங்கமும் சரி, தீண்டப்படாதவர்களும் சரி தயா ராகவே இருந்தனர்; அதைச் செயலிலும் காட்டினர். அளவுக்கு மீறி விளையாடி விட்டதை திரு. காந்தி உணர்ந்த கணமே அவரது வீரம் எங்கோ ஓடி ஒளிந்து கொண்டது. தீண்டப்படாதவர்களுக்கான பாதுகாப்புகள் முற்றிலுமாக விலக்கிக் கொள்ளப்பட்டாலொழிய, உரிமைகள் ஏதுமின்றி, அங்கீகாரம் ஏதுமின்றி நிராதரவான நிலை மைக்கு அவர்கள் தள்ளப்பட்டாலொழிய சாகும்வரை உண்ணா விரதம் இருக்கும் தமது முடிவை மாற்றிக் கொள்ள முடியாது என்று கம்பீரமாக ஆரம்பித்த மனிதர் இப்போது ''எனது உயிர் உங்கள் கைகளில்தான் இருக்கிறது, என்னைக் காப்பாற்றுவீர்களா?'' என்று சோகம் ததும்ப பிரலாபித்தார். புனா ஒப்பந்தம் எப்படியேனும் கையெழுத்திடப்பட வேண்டுமே என்று அவர் துடித்து துடிப்பு அந்த மாவீரர் தமது வீரத்தை இழந்துவிட்டார் என்பதையும், தமது மானத் தையும் உயிரையும் காப்பாற்றிக் கொள்ள மிகவும் ஆவலோடு இருக் கிறார் என்பதையும் தெள்ளத் தெளிவாகப் புலப்படுத்திற்று; இந்தப் புனா ஒப்பந்தம் திரு. காந்தி கோரியபடி பிரதமரின் வகுப்புத் தீர்ப்பை அடியோடு ரத்து செய்துவிடவில்லை, மாறாக வேறுபட்ட அரசியல் சட்டப் பாதுகாப்பு முறையைத்தான் அது வழங்கிற்று.

இந்த உண்ணாவிரதத்தில் உயர்நோக்கம் ஏதுமில்லை, அது அருவருக்கத்தக்க, தகாத செயலாகும். இந்த உண்ணா விரதம் தீண்டப் படாதவர்களின் நலனுக்காக நடத்தப்படவில்லை. உண்மையில் அவர்களுக்கு எதிராக நடத்தப்பட்ட உண்ணாவிரதமேயாகும்; பிரத மரின் வகுப்புத் தீர்ப்பின்படி தமக்குக் கிட்டவிருந்த அரசியல் சட்டப் பாதுகாப்புகளை இழக்கவும், இந்துக்களின் தயவில் வாழவும் நிராதரவான மக்களை மிக மோசமான முறையில் ஒப்புக் கொள்ள நிர்ப்பந்தித்த உண்ணாவிரதமாகும். இதனை கொடுமையிலும் கொடுமையான அவக்கேடான செயல் என்றே கூற வேண்டும். இப்படிப் பட்ட மனிதரை தீண்டப்படாதவர்கள் நேர்மையானவராக, நாணய மானவராக எப்படிக் கருத முடியும்?

சாகும்வரை உண்ணாவிரதம் மேற்கொண்ட அவர் புனா ஒப் பந்தத்தில் கையொப்பமிட்டார். அரசியல் சட்டப் பாதுகாப்புகள் தீண்டப்படாதவர்களுக்கு தீமையே விளைவிக்கும் என்று திரு. காந்தி உண்மையிலேயே நம்பினார் என்று சிலர் கூறுகின்றனர். ஆனால் ஒரு நேர்மையான, நியாயமான மனிதர் தீண்டப்படாதவர்களின் அர சியல் கோரிக்கைகளை எவ்வாறு எதிர்க்க முடியும்? அவர்களைத் தோற்கடிப்பதற்காக முஸ்லீம்களைப் பயன்படுத்திக் கொள்ள எவ்வாறு

தயாராக இருக்க முடியும்? சாகும்வரை உண்ணாவிரதம் ஆரம்பித்த அவர் இறுதியில், இந்தக் கோரிக்கைகளை எதிர்ப்பதில் அர்த்தமில்லை, அந்த எதிர்ப்பு வெற்றி பெறாது என்று அவற்றை எவ்வாறு ஏற்றுக் கொள்ள முடிந்தது? உண்மையில் புனா ஒப்பந்தத்திற்கும் வகுப்புத் தீர்ப்புக்கும் அதிக வித்தியாசமுமில்லை என்பதை இங்கு குறிப்பிட்டாக வேண்டும். தீண்டப்படாதவர்களுக்கு தீமை பயக்கக் கூடியவை என்று ஒரு சமயம் அவரே வருணித்த கோரிக்கைகளை ஒரு நேர்மையான, கண்ணியமான மனிதர் எப்படி ஏற்றுக் கொண்டார்? தீங்கு விளைவிக்கக்கூடியவை என்று ஒரு சமயம் அவரே கருதிய தீண்டப்படாதவர்களின் கோரிக்கைகளை தீங்கற்றவை என்று ஒரு நியாயமான, நேர்மையான மனிதர் எப்படி ஏற்றுக் கொண்டார்?

தீண்டப்படாதவர்கள் திரு. காந்தியை தங்களுடைய நண்பராகவும் தோழராகவும் ஏற்றுக் கொள்கின்றனரா? இதற்குப் பதில் 'இல்லை' என்பதாகத்தான் இருக்க முடியும். அவரை அவர்கள் தங்களுடைய நண்பராகக் கருதவில்லை. எப்படி முடியும்? தீண்டப்படாதவர்களின் பிரச்சினை ஒரு சமூகப் பிரச்சினை என்று திரு. காந்தி நேர்மையாக, உண்மையாகக் கருதலாம். ஆனால் தீண்டாமை என்பது சாதி அமைப்பு முறையின் ஒரு வெளிப்புற வடிவமே ஆகும்; ஆதலால் சாதி அமைப்பு முறையை ஒழித்துக் கட்டாமல் தீண்டாமைக்கு முடிவுகட்டும் பேச்சுக்கே இடமில்லை; அப்படியிருக்கும் போது திரு. காந்தி சாதி அமைப்பு முறையை அப்படியே வைத்துக் கொண்டு தீண்டாமையை மட்டும் அகற்றிவிடலாம் என்று கூறுகையில் அவரைத் தம்முடைய நண்பராக தீண்டப்படாதவர்கள் எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்? தீண்டப்படாதவர்களின் பிரச்சினைக்கு சமூக இயக்க நிகழ்வுகள் மூலம் தீர்வு காணமுடியும் என திரு. காந்தி எதார்த்தமாகவே நம்புவதாக இருக்கலாம். ஆனால் அரசியல் வழிமுறைகளைப் பயன்படுத்துவது சமூக வழிமுறையால் கிட்டும் பலன்களை எவ்வகையிலும் பாதிக்காது. அதற்குப்பதில் பிரச்சினையின் தீர்வைத் துரிதப்படுத்த உதவும் என்று எல்லோருமே ஏற்றுக் கொள்ளும்போது அரசியல் வழிமுறைகளைப் பயன்படுத்துவதை சீற்றத்தோடு, மூர்க்க வெறியோடு எதிர்க்கும் ஒரு மனிதரை தீண்டப்படாதவர்கள் எப்படித் தங்கள் நண்பராகப் பாவிக்க முடியும்? தீண்டப்படாதவர்கள் ஆட்சிப்பீடத்துக்கும் அதிகாரத்துக்கும் வருவதை விரும்பாத ஒரு மனிதரை தீண்டப்படாதவர்கள் எப்படித் தங்களுடைய நண்பராகக் கருதமுடியும்? அரசியல் பாதுகாப்புகள் குறித்த சர்ச்சையில் திரு. காந்தி பின் கண்டவழிகளில் எதையேனும் ஒன்றைப்

பின்பற்றி இருக்கலாம். அவர் தீண்டப்படாதவர்களின் தீவிர ஆதர வாளராக மாறியிருக்கலாம். அவ்வாறான நிலைமையில் அரசியல் பாதுகாப்புக்கான அவர்களது கோரிக்கைகளை வரவேற்பதோடு, அவற்றை அவர்கள் முன்வைப்பதற்கு முன்னதாக அவரே மனமுவந்து அவற்றைப் பிரரேபித்திருக்கலாம். அவ்வாறு பிரரேபிப்பதோடு நில் லாமல் அவற்றுக்காக போராடியும் இருக்கலாம். தீண்டப்படாத வர்கள் சட்ட மன்ற உறுப்பினர்களாகவும், அமைச்சர்களாகவும், உயர் அதிகாரிகளாகவும் ஆவதற்கு இந்தப் பாதுகாப்புகள் வகை செய்வதைக் கண்குளிரக் காண்பதைவிட தீண்டப்படாதவர்களின் உண்மையான ஆதரவாளருக்கு மிகுந்த மகிழ்ச்சியும் பெருமிதமும் தரக்கூடியது வேறு என்ன இருக்க முடியும்? உண்மையில் திரு. காந்தி தீண்டப்படாதவர்களின் நலன்களுக்குப் பாடுபடுபவராக இருந்தால், அவர் போராட வேண்டியவை இந்தப் பாதுகாப்புகளை அவர்களுக் குப் பெற்றுத் தருவதற்காகத்தான். இரண்டாவதாக, தீண்டப்படாத வர்களின் ஆதரவாளராக இருக்க அவர் விரும்பவில்லை என்றால், அவர்களது தோழனாக இருந்திருக்க முடியும். அவர்களுக்குத் தமது தார்மிக, பொருளாயத ஆதரவை நல்கி அவர்களுக்கு உதவி இருக்க முடியும். மூன்றாவதாக, திரு. காந்தி தீண்டப்படாதவர்களின் ஆதர வாளராகவும் இன்னும் சொல்லப்போனால் அவர்களது தோழனாக வும் கூட இருக்க விரும்பவில்லை என்றால், இதுவரை பெரிதும் பிரகடனப்படுத்தப்பட்டு வந்ததுபோல், வெகுவாக விளம்பரப் படுத்தப்பட்டு வந்தது போல் தீண்டப்படாதவர்களிடம் தாம் காட்டும் அனுதாபத்தோடு நின்று கொண்டு அவர்களுடைய நண்பராக இருந் திருக்க முடியும். இங்கும், ஒரு நண்பர் என்ற முறையில், நலம் பயக்கக்கூடிய நடுநிலைப் போக்கைக் கடைப்பிடித்திருக்க முடியும், பாதுகாப்புக் கோரிக்கைகளுக்காகப் போராடா விட்டாலும் அந்தக் கோரிக்கைகள் ஏற்கப்படுவதற்கு அனைத்து உதவிகளையும் செய் திருக்க முடியும். நலம் பயக்கக் கூடிய நடுநிலைமையைக் கடைப் பிடிக்க இயலாவிட்டாலும் கண்டிப்பான நடுநிலைமைப் போக்கை, அந்தச் சொல்லின் கறாரான அர்த்தத்தில் அவர் பின்பற்றியிருக்க முடியும்; வட்டமேசை மாநாடு பாதுகாப்புகளைத் தரத் தயாராக இருக்கும் பட்சத்தில் அவற்றை ஏற்றுக் கொள்ளும்படியும், இதற்கு தாம் உதவவோ அல்லது முட்டுக்கட்டைப் போடவோ போவ தில்லை என்றும் அவர் தீண்டப்படாதவர்களிடம் கூறியிருக்க முடியும். இந்த நேரிய வழிகளை எல்லாம் கைவிட்டுவிட்டு திரு. காந்தி தீண்டப்படாதவர்களின் பகிரங்கமான பகைவராகத் தம்மைக் காட்டிக் கொண்டார். இத்தகைய ஒரு மனிதரை தீண்டப்படாதவர்கள் எப்படி தங்களுடைய நண்பராகவும் தோழராகவும் கருத முடியும்?

## IV

திரு. காந்தியின் தீண்டாமை எதிர்ப்பு இயக்கம் தோல்வியடைந்தது என்பது தர்க்கத்திற்கு அப்பாற்பட்ட விஷயம். காங்கிரஸ் பத்திரிகைகளே கூட இதனை ஒப்புக் கொண்டன. அவற்றிலிருந்து சில மேற்கோள்களை இங்கு தருகிறேன்.

1939 ஆகஸ்டு 17-ஆம் தேதி பம்பாய் சட்டமன்ற உறுப்பினரான ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்த திரு. பி.கே. கெய்க்வாடு ஒரு கேள்வி கேட்டார்: 1932ல் திரு. காந்தி தமது ஆலயப்பிரவேச இயக்கத்தைத் தொடங்கியதிலிருந்து பம்பாய் மாகாணத்தில் எத்தனை கோவில்கள் தீண்டப்படாதவர்களுக்குத் திறந்து விடப்பட்டன என்பதே அந்தக் கேள்வி. காங்கிரஸ் அமைச்சர் அப்போது தந்த புள்ளி விவரங்களின்படி, தீண்டப்படாதவர்களுக்கு மொத்தம் திறந்துவிடப்பட்ட கோவில்கள் 142, இவற்றில் 121 கோவில்கள் சாலையோரத்தில் அமைந்திருப்பவை; அவை உரிமையாளர்களற்ற கோவில்கள்; அவற்றைக் கவனித்துக் கொள்வதற்கும் பராமரிப்பதற்கும் எவரும் இல்லை; அவற்றை வழிபாட்டுத் தலங்களாக யாரும் பயன்படுத்துவதும் இல்லை. மற்றொரு உண்மையையும் இங்கு அம்பலப்படுத்துவது அவசியம்; திரு. காந்தியின் தாயகமான குஜராத்தில், அவருடைய சொந்த மாவட்டத்தில் ஒரு கோவில்கூடத் தீண்டப்படாதவர்களுக்குத் திறந்து விடப்படவில்லை.

திரு. காந்தியின் குஜராத்து பத்திரிகையான ஹரிஜன் பந்து 1940 மார்ச் 10 ஆம் தேதிய இதழில் பின்வருமாறு எழுதிற்று:

> "ஹரிஜனங்களைப் பள்ளிக் கூடங்களில் அனுமதிக்கும் விஷயத்தில் குஜராத்தில் போல் வேறு எங்குமே இவ்வளவு மோசமான முறையில் தீண்டாமைக் கடைப்பிடிக்கப்பட்டதில்லை."[1]

பம்பாய் கிரானிக்கல் தனது 1940 ஆகஸ்டு 27ஆம் தேதிய இதழில் ஹரிஜன சேவா சங்கத்தின் மாதாந்திர கடிதத்திலிருந்து ஒரு பகுதியை வெளியிட்டிருந்தது. அது கூறுவதாவது:

---

1. சஞ்சனாவின் அரசியலில் அர்த்தமும் அனர்த்தமும் என்னும் நூலிலிருந்து எடுத்தாளப்பட்ட மேற்கோள்.

''ஆமதாபாத் மாவட்டத்திலுள்ள கோதாவியைச் சேர்ந்த ஹரிஜனங்கள் தங்கள் குழந்தைகளை ஸ்தல ஸ்தா பனப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பியமைக்காக சாதி இந்துக் களால் மிகுந்த அடக்குமுறை அட்டூழியத்துக்கு ஆளாக்கப் பட்டனர். இந்த வன்நெஞ்சக் கொடுமை தாங்க முடியாமல் 42 ஹரிஜனக் குடும்பங்கள் அந்த இடத்தைக் காலி செய்து விட்டு சானந்த் என்னும் தாலுகா நகரத்தில் போய்த் தஞ்சம் புகுந்தன.''

1943 ஆகஸ்டு 27ஆம் தேதியன்று, பம்பாய் மாகாணம் தானா வில் வசிக்கும் தீண்டப்படாதவர்களின் தலைவரும், தானா நகர சபையின் முன்னாள் துணைத்தலைவருமான திரு. எம்.எம். நந்த் கவுன்கருக்கு ஓர் இந்து உணவகத்தில் தேநீர் தர மறுத்துவிட்டனர். பம்பாய் கிராணிக்கல் இந்த நிகழ்ச்சியை விமர்சித்து தனது 1948 ஆகஸ்டு 28-ம் தேதி இதழில் எழுதும்போது பின்கண்டவாறு குறிப் பிட்டது.

''1932ல் காந்திஜி உண்ணாவிரதம் மேற்கொண்டபோது, சில கோவில்களையும் உணவு விடுதிகளையும் ஹரிஜனங் களுக்குத் திறந்துவிடுவதற்கு சில பரபரப்பான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால் ஆலயப் பிரவேசம் சம்பந்த மாகவும், உணவு விடுதிகளில் தீண்டப்படாதவர்களை அனு மதிப்பது சம்பந்தமாகவும் முன்பு என்ன நிலைமை நிலவி யதோ கிட்டத்தட்ட அதே நிலைமைதான் இப்போதும் நிலவு கிறது. மிகவும் சுத்தமான ஹரிஜன் கூட கோவில்களிலும் உணவுவிடுதிகளிலும் அனுமதிக்கப்படுவதில்லை. அப்படி யிருக்கும்போது தீண்டாமை எதிர்ப்பு இயக்கத்தைச் சேர்ந்த பல ஊழியர்கள் இத்தகைய தடைகள் குறித்து ஏனோதானோ வென்ற போக்கையே கடைப்பிடிக்கின்றார்; 'முதலில் ஹரி ஜனங்களைக் கைதூக்கிவிடுவது' பற்றி மிகவும் பாவனை யோடு, பசப்போடு பேசுகின்றனர்; ஹரிஜனங்கள் சுத்தமாக இருக்கக்கற்றுக்கொண்டு விட்டால் சமுதாயத்தில் அவர் களுக்குள்ள தடைகள் எல்லாம் தாமாகவே மறைந்து விடும் என்று கூறுகின்றனர். இது அருவருப்பு தரும் சுத்த பிதற்ற லாகும்.''

1944 ஜனவரியில் கான்பூரில் நடைபெற்ற அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனக் கூட்ட நடவடிக்கைகள் பற்றி

1944 பிப்ரவரி 4ஆம் தேதியிட்ட தனது இதழில் எழுதும்போது **பம்பாய் கிராணிக்கல்** பின்வருமாறு குறிப்பிட்டது:

> ''இந்து சமுதாயத்தின் இத்தகைய செயலாக்கமின்மை காரணமாக சாதி அமைப்பும், தீண்டாமையும் இன்னமும் செழித்துக் கொழித்து வருகின்றன. இன்னும் சொல்லப் போனால் அநேக இந்துத் தலைவர்களே குறிப்பிட்ட சில பிரிட்டிஷாரின் பிரசார வலையில் வீழ்ந்து, இந்துக் கலா சாரம் இன்றளவும் உயிர்வாழ்ந்து வருகிறதென்றால் சாதி அமைப்பு முறையில் ஏதோ ஓர் மர்மமான ஆற்றல், சிறந்த பண்பு, நற்கூறு இருக்க வேண்டும் என்று வாதிட்டு வரு கின்றனர்; இல்லையென்றால் சாதி அமைப்பு முறை பல நூற்றாண்டுக் காலமாக எத்தனை எத்தனையோ அதிர்ச்சி களிலிருந்து, குழப்பங்களிலிருந்து மீண்டு வந்திருக்க முடியாது என்றும் விடாப்பிடியாக சாதிக்கின்றனர். காந்தி யும் ஏனைய சீர்திருத்தவாதிகளும் எவ்வளவோ செய்தும், தீண்டாமை இன்னமும் பெரிய அளவுக்கு நிலவிவருவது உண்மையிலேயே மிகவும் வருந்தத்தக்க, இரங்கத்தக்க அவல நிலையாகும். அதிலும் கிராமங்களில் அது கொடி கட்டிப் பறந்து வருகிறது.... அது மட்டுமல்ல, பம்பாய் போன்ற ஒரு நகரத்திலேயே கூட ஒரு தோட்டியோ அல்லது துப்புரவுத் தொழிலாளியோ என்னதான் தூய்மையான, சுத்தமான உடை உடுத்திருந்தாலும் ஒரு சாதி இந்து உணவு விடுதி யில் நுழைய அனுமதிக்கப்பட மாட்டான், அதிகம் போவா னேன் தேநீர் அருந்த ஓர் ஈரானி உணவகத்தில் கூட அவன் அனுமதிக்கப்படுவதில்லை.''

திரு. காந்தியின் தீண்டாமை எதிர்ப்பு இயக்கம் தோல்வி யடைந்து விடடது என்று தீண்டப்படாதவர்கள் எப்போதுமே கூறி வந்திருக்கின்றனர். இந்த இயக்கம் 25 வருடகாலம் பாடுபட்ட பிறகும் தீண்டப்படாதவர்களுக்கு உணவு விடுதிகள் இன்னமும் மூடப்பட் டிருக்கின்றன. கிணறுகள் இன்னமும் மூடப்பட்டு இருக்கின்றன, கோவில்கள் இன்னமும் மூடப்பட்டிருக்கின்றன, இந்தியாவின் மிகப் பலப் பகுதிகளில் குறிப்பாக குஜராத்தில் பள்ளிக்கூடங்கள் கூட இன்னமும் மூடப்பட்டிருக்கின்றன. இது சம்பந்தமாக பத்திரிகை களில் வெளிவந்துள்ள செய்திகள், அதிலும் அவை குறிப்பாக காங்

கிரஸ் பத்திரிகைகளாக இருக்கும் நிலைமையில் அவற்றில் பிரசுரிக்கப்பட்டிருக்கும் செய்திகள் தீண்டப்படாதோரின் கூற்றுக்கு மிகவும் வரவேற்கத்தக்க சான்றுகளாக அமைந்துள்ளன. இது விஷயம் குறித்து தீண்டப்படாதவர்கள் கூறிவருவதை முற்றிலும் உறுதி செய்வதாக இச்செய்திகள் இருப்பதால் ஒரு கேள்வியைக் கேட்பதைத் தவிர மேற்கொண்டு எதுவும் கூறத் தேவையில்லை என்றே கருதுகிறேன்.

இந்த விஷயத்தில் திரு. காந்தி ஏன் தோல்வியடைந்தார்? இந்தத் தோல்விக்கு மூன்று காரணங்கள் இருக்கின்றன என்று நினைக்கிறேன்.

முதல் காரணம், தீண்டாமையை ஒழித்துக்கட்டும்படி இந்துக்களுக்கு அவர் விடுத்த வேண்டுகோளுக்கு அவர்கள் செவிசாய்க்கவில்லை. இது ஏன்? ஒருவர் பயன்படுத்தும் சொற்களும் அவை ஏற்படுத்தும் விளைவும் எப்போதும் ஒத்தவையாக இருப்பதில்லை என்பது பொதுவான அனுபவம். அவர் என்ன கூறுகிறாரோ அதன் தாக்கம் ஒன்று வரைமுறையற்று மிகுதியாகிறது அல்லது அறவே பயனற்றதாகி விடுகிறது; பேச்சாளரின் மனோபாவம் கேட்பவரையும் ஆட்கொள்வதே இதற்குக் காரணம். தீண்டாமையைப் பற்றிய திரு. காந்தியின் உபதேசங்கள் இந்துக்களிடம் உணர்ச்சி ஊட்டி அவர்களைக் கவர்வதில் ஏன் படுதோல்வியடைந்தன. பிரார்த்தனைக்குப் பின்னர் அவர் ஆற்றும் சொற்பொழிவுகளை ஒரு சில நிமிடங்கள் கேட்டுவிட்டு பிறகு அவர்கள் பழைய குருடி கதவைத் திறடி என்று ஏன் பழைய நிலைமைக்கே திரும்புகிறார்கள், இதைத் தவிர அவரது உபதேசங்களால் ஏன் வேறு எதுவும் நிகழ்வதில்லை என்ற புதிர்களுக்கு எல்லாம் இது விடை அளிக்கிறது. தவறு முற்றிலும் இந்துக்களினுடையது என்று கூறமுடியாது. தவறு காந்தியினுடையதே ஆகும். திரு. காந்தி மகாத்மா என்ற பட்டத்தை, புகழைப் பெற்றது அரசியல் சுதந்திரத்தின் முன்னோடி, கட்டியக்காரர் என்ற முறையிலே அன்றி ஆன்மீகப் போதனையாளர் என்ற அடிப்படையில் அல்ல. திரு. காந்தியின் நோக்கங்கள், குறிக்கோள்கள் எவையாக இருந்தபோதிலும் அவர் சுயராஜ்யத்தின் திருத்தூதவராகக் கருதப்படுகிறார். அவரது தீண்டாமை இயக்கமோ ஏதோ ஒரு நாடகமாக எண்ணப்படுகிறது. இதனால்தான் இந்துக்கள் அவரது அரசியல் உபதேசங்களைச் செவிமடுத்துக் கேட்கிறார்களே தவிர அவரது

சமூக அல்லது சமய உபதேசங்களுககு மதிப்பு அளிப்பதில்லை. இதனால் அவரது தீண்டாமை எதிர்ப்பு இயக்கம் சூடுபிடிக்காமல் மந்தகதியில் இருந்து வருகிறது. திரு. காந்தி ஓர் அரசியல் வித்தகர்; அவர் இறுதிவரை பிடிவாதமாக இருந்தாக வேண்டியிருக்கிறது. சமூகப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் பணியை மேற்கொள்ளலாம் என்று நினைத்தார். அது தவறாகி விட்டது. ஓர் அரசியல்வாதி இப் பணிக்கு தகுதியானவர் அல்ல. இதனால்தான் திரு. காந்தியின் உப தேசங்கள் பல அற்புதங்கள் புரியும் என்று தீண்டப்படாதவர்களிடம் தெரிவிக்கப்பட்ட நம்பிக்கை பொய்த்து விட்டது.

இரண்டாவது காரணம் இந்துக்களைப் பகைத்துக் கொள்ள திரு. காந்தி விரும்பவில்லை; தமது தீண்டாமை எதிர்ப்புத் திட் டத்தை நிறைவேற்ற இந்துக்களைப் பகைத்துக் கொள்வது தவிர்க்க முடியாதது என்றாலும் அதை அவர் விரும்பவில்லை. திரு. காந்தி யின் மனப்பேக்குக்கு ஒரு சில உதாரணங்களை இங்கு கூறுவது பொருத்தமாக இருக்கும்.

தீண்டப்படாதோரின் நலனுக்காக திரு. காந்தி உண்மையி லேயே பாடுபடுகிறார் என்ற பெருமையை அவருடைய பெரும் பாலான நண்பர்கள் அவருக்கு அளிக்கின்றனர்; தீண்டாமையை ஒழித்துக்கட்ட வேண்டிய அவசியத்தை இந்துக்களுக்கு இடைவிடாது உபதேசித்துக் கொண்டிருக்கும் ஒரே மனிதர் திரு. காந்திதான் என்ற அடிப்படையில் தீண்டப்படாதவர்களும் இதை நம்புவார்கள் என்று எதிர்பார்த்தனர். ஓர் அவுன்ஸ் நடைமுறைச் செயல் ஒரு டன் உப தேசத்துக்குச் சமம் என்ற மூதுரையை இந்தக் கனவான்கள் மறந்து விட்டார்கள் போலும். மேலும், தீண்டாமையை ஒழிக்க வேண்டிய அவசியம் பற்றி இந்துக்களுக்கு ஓயாது ஒழியாது உபதேசம் செய் வதை விடுத்து, நீங்கள் ஏன் ஒரு சத்தியாக்கிரக இயக்கத்தைத் தொடங்கக் கூடாது அல்லது உண்ணாவிரதத்தை மேற்கொள்ளக் கூடாது என்று திரு. காந்தியிடம் விளக்கம் கேட்கவும் இவர்கள் ஒருபோதும் கவலைப்பட்டதோ, அக்கறை எடுத்துக் கொண்டதோ இல்லை. இத்தகைய ஒரு விளக்கத்தை கேட்டிருந்தால் திரு. காந்தி தீண்டாமையைப் பற்றி வெறும் உபதேசம் செய்வதோடு ஏன் நிறுத்திக் கொண்டு விடுகிறார் என்பதைத் தெரிந்து கொண்ருப் பார்கள்.

உபதேசங்களுக்கு அப்பால் திரு. காந்தி ஏன் செல்லுவதில்லை என்பதற்கான உண்மையான காரணங்கள் 1929ல் முதல் தடவை யாக அம்பலமாயின[1]; அப்போது ஆலயப்பிரவேச விஷயத்திலும், பொதுக் கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுக்கும் விஷயத்திலும் தங்க ளுக்கு உள்ள உரிமைகளை நிலைநாட்டிக் கொள்ளும் பொருட்டு பம்பாய் மாகாணத்தில் இந்துக்களுக்கு எதிராக தீண்டப்படாதோர் சத்தியாக்கிரக இயக்கத்தைத் தொடங்கினர். சத்தியாக்கிரகம் என்பது அநீதியை ஒழித்துக்கட்டுவதற்கு திரு. காந்தி பிரயோகிக்ககும் ஆயுதம் என்பதால் இதில் அவரது ஆசியைப் பெறமுடியும் என்று அவர்கள் நம்பினர். ஆனால் அவர் ஆதரவளிக்க வேண்டுமென்று அவர்கள் வேண்டுகோள் விடுத்தபோது அவர்களுக்கு ஒரு பெரும் அதிர்ச்சி தான் காத்திருந்தது. இந்துக்களுக்கு எதிராக தீண்டப்படாதோர் நடத்தும் சத்தியாக்கிரகத்தைக் கண்டித்து திரு. காந்தி ஓர் அறிக்கை வெளியிட்டு அவர்களைத் திகைக்க வைத்துவிட்டார். இதற்கு ஆதர வாக திரு. காந்தி முன்வைத்த வாதம் மிகவும் குள்ள நரித்தனமானது. சத்தியாக்கிரகத்தை அயல்நாட்டினருக்கு எதிராகத்தான் பயன்படுத்த வேண்டும்; தமது சொந்த நாட்டினருக்கு எதிராக அதனைப் பயன் படுத்தக்கூடாது; இந்துக்கள் தீண்டப்படாதவர்களின் சொந்த நாட்ட வர்களாதலால் சத்தியாக்கிரக விதிகளின்படி இந்த ஆயுதத்தை முந்திய வர்களுக்கு எதிராகப் பயன்படுத்தப்படுவது தடை செய்யப்படுகிறது என்று அவர் ஒரு பெரிய பாணத்தைத் தொடுத்தார்!! உச்சி பீடத்தி லிருந்து எத்தகைய அவமானகரமான வீழ்ச்சி! இதன் மூலம் திரு. காந்தி சத்தியாக்கிரகத்தையே கேலிக்கூத்தாக்கி விட்டார். திரு. காந்தி இதனை ஏன் செய்தார்? இந்துக்களுக்கு தொந்தரவு கொடுக்கவும், எரிச்சலூட்டி அவர்களைச் சினங்கொள்ளச் செய்யவும் அவர் விரும் பாததே இதற்குக் காரணம்.

இனி, அடுத்த சம்பவத்தைப் பார்ப்போம். கவிதா நிகழ்ச்சி என இது அறியப்படுகிறது. கவிதா என்பது குஜராத்தில் ஆமதாபாத் மாவட் டத்திலுள்ள ஒரு கிராமம். 1935ல் அக்கிராமத்தைச் சேர்ந்த தீண்டப் படாதவர்கள் அதே கிராமத்தைச் சேர்ந்த சாதி இந்துக்களிடம் ஒரு

1. திருவாங்கூரில் ஒரு பொது சாலையை தீண்டப்படாதவர்களும் பயன்படுத்திக் கொள்வ தற்கு அனுமதிக்க வேண்டும் என்பதே 1924-ல் வைக்கம் சத்தியாக்கிரகத்தின் குறிக்கோளாக இருந்தது. அவ்வாறிருக்க சத்தியாக்கிரகிகளுக்காக சீக்கியர்கள் ஒரு சமையலறையைத் திறந்து விடுவதை திரு. காந்தி ஆட்சேபித்தார். இதற்கு திரு. காந்தி கூறிய காரணங்கள் அத்தனை தெளிவானவையாக, ஐயத்துக்கிடமற்றவையாக இல்லை.

கோரிக்கையை முன்வைத்தனர்; அதாவது கிராமப் பொதுப் பள்ளிக் கூடத்தில் ஏனைய இந்து குழந்தைகளுடன் தங்கள் குழந்தைகளை யும் அனுமதிக்க வேண்டுமென்று கோரினர். இது கேட்டு சாதி இந்துக்கள் அடக்க முடியாத சினம் கொண்டு எரிமலையாகக் கொதித் தெழுந்தனர்; இதற்குப் பழிக்கு பழிவாங்கத் துடித்தனர்; தீண்டப் படாதவர்களுக்கு எதிராக முழு சமூகப் பகிஷ்காரத்தைப் பிரகடனம் செய்தனர். இதன் பேரில் தீண்டப்படாதவர்களுக்கு ஆதரவாக இந்துக் களிடம் பரிந்து பேசும் பொருட்டு திரு. ஏ.வி. தாக்கர் கவிதா கிராமத் துக்குச் சென்றார். இந்தப் பகிஷ்காரம் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளை திரு. ஏ.வி. தாக்கர் பின்வருமாறு விவரிக்கிறார்:-

''கவிதாவிலுள்ள கிராமப்பள்ளியில் ஹரிஜன சிறுவர் களை அனுமதிப்பதற்கு கவிதா கிராமத்தைச் சேர்ந்த சாதி இந்துக்கள் சம்மதித்து விட்டார்கள் என்றும், விவகாரம் சுமுகமாகத் தீர்க்கப்பட்டு விட்டது என்றும் 10ஆம் தேதி அன்று அசோசியேட்டட் பிரஸ் செய்தி நிறுவனம் அறி வித்தது, ஆனால் 13ஆம் தேதி அன்று ஆமதாபாத் ஹரிஜன சேவா சங்கத்தின் செயலாளர் இதற்கு மறுப்பு தெரிவித்தார், அது சம்பந்தமாக அவர் வெளியிட்ட அறிக்கையில் கூறிய தாவது:- தங்களுடைய குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவதில்லை என்று ஹரிஜனங்கள் (தனிப்பட்ட முறை யில்) ஒப்புக்கொண்டுள்ளனர். ஆனால் இந்த ஒப்புதலை அவர்கள் தாங்களே முன்வந்து தரவில்லை; மாறாக சாதி இந்துக்கள் கட்டாயப்படுத்தித்தான் இந்த ஒப்புதலைப் பெற் றுள்ளனர். கராசியர்கள் என்ற சாதி இந்துக்கள்தான் இந்த ஏழை ஹரிஜனங்களுக்கு எதிராக சமூக பகிஷ்கரிப்பைப் பிரகடனம் செய்தவர்கள். நெசவாளர்கள், சமார்கள் (செருப்புத் தைப்ப வர்கள்) என்று 100க்கு மேற்பட்ட குடும்பங்கள் இங்கு இருக்கின்றன. விவசாயக் கூலி வேலை அவர்களுக்கு மறுக்கப்பட்டது; அவர்களது கால்நடைகள் மேய்ச்சல் நிலத் தில் மேய்வது தடுக்கப்பட்டது; அவர்களுடைய குழந்தை களுக்கு மோர் வழங்குவது நிறுத்தப்பட்டது. அது மட்டு மல்ல, இனி மேல் தங்களுடைய குழந்தைகளை பொதுப் பள்ளிக் கூடத்தில் சேர்க்க எந்த முயற்சியும் எடுத்துக் கொள்ள மாட்டோம் என்று ஒரு அரிசனத் தலைவர் மகா தேவன் பெயரால் சத்தியம் செய்யும்படி நிர்ப்பந்திக்கப்பட்டார். மேலே கூறிய உடன்பாடு என்பது இவ்வாறுதான் ஏற்பட்டது.

''ஆனால் 10 ஆம் தேதி அறிவிக்கப்பட்ட இந்த போலியான, மோசடியான உடன்பாட்டிற்குப் பிறகு கூட, ஏழை ஹரிஜனங்கள் முற்றிலும் சரணடைந்த பிறகுகூட 19ஆம் தேதிவரை பகிஷ்காரம் விலக்கிக் கொள்ளப்படவில்லை; நெசவாளர்களைப் பொறுத்தவரையில் 22ஆம் தேதி வரை கூட அது நீடித்தது. இதற்கு சற்று முன்னதாக சமார்களுக்கு எதிரான பகிஷ்காரம் விலக்கிக் கொள்ளப்பட்டது. ஏனென்றால் செத்த விலங்குகளின் அழுகி நாற்றமெடுத்துப்போன பிணங்களை கராசியர்களால் அப்புறப்படுத்த முடியாததால் அவர்கள் சமார்களுடன் உடன்பாட்டிற்கு வரவேண்டியதாயிற்று. ஹரிஜனங்களுக்கு எதிராக இழைக்கப்பட்ட இந்த அட்டூழியங்கள், அராஜகங்கள், கோரக் கொடுமைகள் போதாது என்று ஹரிஜனங்களின் கிணறுகளில் 15ஆம் தேதியும் மீண்டும் 19ஆம் தேதியும் மண்ணெண்ணெய் ஊற்றப்பட்டது. ஹரிஜனங்கள் தங்களுடைய குழந்தைகளை கிராமத்தின் பொதுப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்புவதற்கும், அங்கு 'இளவரசர்கள்' போன்ற கராசியர் குழந்தைகளுடன் சேர்ந்து அமரச் செய்வதற்கும் துணிந்தமைக்காக ஏழை ஹரிஜனங்களுக்கு எதிராக ஏவிவிடப்பட்ட அடக்குமுறை ஒடுக்குமுறை கணைகள், குரூர பாணங்கள் சொல்லத் தரமன்று.

''22ஆம் தேதி காலை கராசியர்களின் தலைவர்களைச் சந்தித்துப் பேசினேன். தெத்கர் மற்றும் சமார்களின் குழந்தைகள் தங்கள் குழந்தைகளுடன் அருகருகே சேர்ந்து அமரும் காட்சியைத் தங்களால் சகித்துக் கொள்ள முடியாது என்று அவர்கள் பிடிவாதமாகக் கூறினர். 23ஆம் தேதி ஆமதாபாத் மாவட்ட மாஜிட்ரேட்டையும் சந்தித்துப் பேசினேன். சிக்கலைத் தீர்ப்பதற்கு அவரால் ஏதேனும் செய்ய முடியுமா என்று முயற்சித்துப் பார்த்தேன். ஆனால் பலன் ஏதும் கிட்டவில்லை.

''இவ்வாறு ஹரிஜனக் குழந்தைகள் கிராமப்பள்ளியிலிருந்து ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளனர்; அவர்களுக்கு உதவி செய்ய யாரும் இல்லை. இது ஹரிஜனங்களுக்கு இடையே மிகுந்த சோர்வையும் மனத்தளர்ச்சியையும் உண்டு பண்ணியுள்ளது. இதனால் கூண்டோடு வேறு ஏதேனும் கிராமத்திற்குச் சென்றுவிடலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறார்கள்.''

இதுதான் திரு. காந்தியிடம் சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கை. அப்போது திரு. காந்தி செய்தது என்ன? கவிதா கிராமத்தைச் சேர்ந்த

தீண்டப்படாதவர்களுக்கு அவர் பின்கண் அறிவுரையை வழங்கினார்:-

> ''தன் கையே தனக்கு உதவி. இதைவிடச் சிறந்த உதவி வேறு எதுவும் இல்லை. தங்களுக்குத் தாங்களே உதவி செய்து கொள்பவர்களுக்கு ஆண்டவன் உதவுகிறார். சம்பந்தப்பட்ட ஹரிஜனங்கள் கவிதாவின் மண்ணை தங்கள் காலடிகளிலிருந்து துடைத்துவிடத் தீர்மானித்திருப்பதாகக் கூறப்படுகிறது. இவ்வாறு செய்தால் அவர்கள் மகிழ்ச்சி அடைவதோடு, இதே போன்று நடத்தப்படும் இதரர்களுக்கும் பாதை செப்பனிட்டுத் தந்தவர்களாவார்கள். வேலை தேடுவதற்கே இடம் விட்டு இடம் செல்ல வேண்டியிருக்கும்போது சுயமரியாதையைத் தேடி அவர்கள் இவ்வாறு செய்வதில் தவறு என்ன இருக்க முடியும்? அன்பாதரவற்ற இந்தக் கவிதாவிலிருந்து வெளியேறுவதற்கு ஹரிஜனங்களின் நலத்தில் அக்கறை கொண்டவர்கள் இந்த ஏழை எளிய குடும்பங்களுக்கு உதவுவார்கள் என்று நம்புகிறேன்.

இவ்வாறு கவிதாவிலிருந்து வெளியேறுமாறு அக்கிராமத்தைச் சேர்ந்த ஹரிஜனங்களுக்கு திரு. காந்தி ஆலோசனை கூறினார். ஆனால் கவிதாவின் சாதி இந்துக்கள்மீது வழக்குத் தொடரும்படியும், தீண்டப்படாதவர்கள் தங்கள் உரிமைகளை நிலைநாட்டிக் கொள்வதற்கு அவர்களுக்கு உதவும்படியும் திரு. தாக்கருக்கு திரு. காந்தி ஏன் ஆலோசனை கூறவில்லை? இந்துக்களின் மனம் புண்படாதபடி தீண்டப்படாதவர்களைக் கைதூக்கி விட அவர் எண்ணினார் போலும்! இத்தகைய ஒரு மனிதரால் தீண்டப்படாதவர்களின் நல்வாழ்வுக்காக என்ன நன்மை செய்து விட முடியும்? இந்துக்களிடம் நற்பெயர் சம்பாதித்துக் கொள்வதில் அவர் மிகவும் ஆர்வமாக இருந்தார் என்பதையே இவை யாவும் காட்டுகின்றன. இதனால்தான் இந்துக்களுக்கு எதிராக சத்தியாக்கிரகம் நடத்துவதை அவர் எதிர்க்கிறார். இதனால்தான் தீண்டப்படாதவர்களின் அரசியல் கோரிக்கைகளை அவர் எதிர்த்தார்; அந்தக் கோரிக்கைகள் இந்துக்களுக்கு எதிரானவை என்று அவர் கருதினார். இந்துக்களின் நன்மதிப்பைப் பெறுவதில் அவர் மிகுந்த ஆர்வமும் அக்கறையும் கொண்டிருக்கிறார்; இதனால் தீண்டப்படாதவர்கள் அவரை ஒன்றுக்கும் உதவாதவர் என்று சாடினாலும் அதைப் பற்றி அவருக்குக் கவலை இல்லை. இதனால் தான் தீண்டாமையை ஒழித்துக்கட்டுவதற்கான அவரது வேலைத்திட்டம் முழுவதுமே சொற்கள், சொற்கள், வெறும்

வாய்ச்சொற்களைத் தவிர அவற்றுக்குப் பின்னால் செயல் ஏதும் இல்லாதிருப்பதைப் பார்க்கிறோம்.

மூன்றாவது காரணம் தீண்டப்படாதவர்கள் ஸ்தாபன ரீதியாக அணி திரண்டு, வலுவடைவதை திரு. காந்தி விரும்பவில்லை. இதன் மூலம் அவர்கள் இந்துக்களிடமிருந்து சுதந்திரமானவர்களாகி, இந்துக் களின் அணியைப் பலவீனப்படுத்தக்கூடும் என்று அவர் அஞ்சி னார். ஹரிஜன சேவா சங்கத்தின் நடவடிக்கைகளிலிருந்து இதனைத் தெள்ளத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். தங்களுடைய இந்து எசமானர்கள் பால் ஓர் அடிமை மனப்பான்மையை தீண்டப்படாத வர்களிடையே ஊட்டி வளர்ப்பதே சங்கத்தின் முழுமுதல் குறிக் கோளாகும். சங்கத்தின் செயற்பாடுகளை எந்தக் கோணத்திலிருந்து பரிசீலித்துப் பார்த்தாலும் தீண்டப்படாதவர்களிடம் அடிமை மனப் பான்மையை வளர்ப்பதே அதன் பிராதன நோக்கம் என்பது தெரிய வரும்.

சங்கத்தின் பணி மகாபாரதம் பாகவதத்தில் வருணிக்கப் பட்டிருக்கும் பூதகி என்னும் அரக்கியின் செயலையே நினைவுப் படுத்துகிறது. மதுராவின் மன்னன் கம்சன் கிருஷ்ணனைக் கொல்ல விரும்பினான்; கிருஷ்ணனால் கம்சன் கொல்லப்படுவான் என்று அசரீரி கூறியதே இதற்குக் காரணம். கிருஷ்ணன் எங்கு பிறந்திருக் கிறான் என்பதை கம்சன் தெரிந்து கொண்டான்; அப்போது பூதகியை அழைத்து கிருஷ்ணன் குழந்தையாக இருக்கும்போதே அவனைக் கொன்று விடும்படிப் பணித்தான். அவ்வாறே பூதகி எழில்மிக்க ஒரு மங்கையாக மாறி கிருஷ்ணனின் வளர்ப்புத் தாயான யசோதையிடம் சென்றாள்; போகும்போதே தன் மார்பகத்தில் திரவ வடிவத்திலுள்ள விஷத்தைத் தடவிக் கொண்டாள்; தன்னை பாலூட்டும் செவிலி யாக வேலைக்கு அமர்த்துக்கொள்ளும்படி அவளிடம் கேட்டுக் கொண்டாள். விஷம் கலந்த பாலை ஊட்டிக் கிருஷ்ணனைக் கொல் வதே அவளது திட்டம். இதற்கு மேல் நடந்த கதையைச் சொல்ல வேண்டியதில்லை; அது அனைவருக்கும் தெரியும். உண்மையான நோக்கமும் பாசாங்குத் தனமான நோக்கமும் எப்போதும் ஒன்றாக இருக்க வேண்டும் என்பதில்லை, ஒரு செவிலித்தாயும் கூட ஒரு கொலைகாரியாக இருக்க முடியும் என்பதையே இந்தக் கதையின் மூலம் எடுத்துக்காட்ட முயன்றிருக்கிறோம். கிருஷ்ணனுக்குப் பூதகி எப்படியோ அப்படித்தான் தீண்டப்படாதவர்களுக்கு சங்கம் என்று சொல்லலாம். சேவை என்ற பெயரால் தீண்டப்படாதவர்களின் சுதந்திர உணர்வைக் கொல்வதற்கு சங்கம் முயல்கிறது. தீண்டப்படாதவர்கள்

தங்களது போராட்டத்தின் ஆரம்பக் கட்டங்களில் நல்லெண்ணம் படைத்த சில இந்துக்களின் ஆதரவை நாடிப் பெற்றனர்; அவர்களது தலைமையையும் பின்பற்றினர். எனினும் வட்ட மேசை மாநாடு நடைபெறும் காலத்திற்குள் தீண்டப்படாதவர்கள் முற்றிலும் தன்னம்பிக்கையும் சுதந்திர உணர்வும் கொண்டவர்களாகி விட்டனர். இந்துக்களின் அருளிரக்கத்திற்காக இனியும் அவர்கள் காத்துக் கொண்டிருக்கவில்லை. தாங்கள் கூறுவது சரியென்று சொல்லுவதற்குத் தங்களுக்கு உரிமை உண்டு என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினர். தீண்டப்படாதவர்களிடைய கருவாகி உருவாகி வந்த இந்த சுதந்திர உணர்வை முளையிலேயே கிள்ளியெறிவதற்கே திரு. காந்தி ஹரிஜன சேவா சங்கத்தைத் தொடங்கினார். ஹரிஜன சோவ சங்கம் சிறு சிறு சேவைகளின் மூலம் நன்றி விசுவாசமுள்ள தீண்டப்படாதவர்களின் ஒரு பெருந்திரளையே திரட்டி விட்டது; திரு. காந்தியும் இந்துக்களும் தான் தீண்டப்படாதவர்களின் கண்கண்ட ரட்சகர்கள் என்று பிரசாரம் செய்தற்கு அவர்கள் அமர்த்தப்பட்டனர். எந்த ஒரு மனிதனும் தனது சுயமரியாதையைப் பறிகொடுத்து நன்றி காட்ட முடியாது, எந்த ஒரு பெண்ணும் தனது கற்பைப் பறி கொடுத்து நன்றி காட்ட முடியாது, எந்த ஒரு நாடும் தனது சதந்திரத்தைப் பறிகொடுத்து நன்றி காட்டமுடியாது என்று அயரிஷ் தலைவரான டேனியல் ஓ 'அன்னல் ஒரு சமயம் குறிப்பிட்டார். ஹரிஜன சேவா சங்கம் செய்யும் சேவைக்குத் தாங்கள் கொடுக்கும் விலை சுதந்திர இழப்பு என்பதை பாவம் அப்பாவியான, சூதுவாதில்லாத பல தீண்டப்படாதவர்கள் அறிய மாட்டார்கள், இதைத்தான் திரு. காந்தி விரும்பினார்.

ஹரிஜன சேவா சங்கத்தின் செயற்பாடுகளிலேயே மிக மோசமானது சங்கம் நடத்தி வந்த விடுதியில் தங்கியிருந்த தீண்டப்படாதோர் இனத்தைச் சேர்ந்த மாணவர்களுக்கு அது அளித்து வந்த உதவியேயாகும், இந்த மாணவர்களை எண்ணிப் பார்க்கும்போது மகாபாரதத்தில் வரும் இரண்டு முக்கிய பாத்திரங்களான பீஷமர், கசன் ஆகிய வர்கள்தான் என் நினைவுக்கு வருகின்றனர். பாண்டவர்கள் பக்கம்தான் நியாயமிருக்கிறது, கௌரவர்கள் செய்வது தவறு என்று பீஷ்மர் பாரறிய, படாடோபமாகப் பறைசாற்றினார். ஆனால் இவ்விரு தரப்பினருக்கும் இடையே யுத்தம் மூண்டபோது பீஷ்மர் என்ன செய்தார் தெரியுமா? அவர் கௌரவர்கள் பக்கம் சேர்ந்து கொண்டு பாண்டவர்களை எதிர்த்துப் போரிட்டார். இது எவ்வாறு நியாயம் என்று கேட்ட போது கௌரவர்கள் என்னைப் பராமரிக்கிறார்கள், அவர்கள் போட்ட உப்பைத் தின்றுதான் நான் வளர்ந்தேன், எனவே தான் அவர்களுடன் சேர்ந்து போரிடுகிறேன் என்று கூறுவதற்கு அவர்

வெட்கித் தலைகுனியவில்லை. கசன் தேவர் குலத்தைச் சேர்ந்தவன். ராட்சதர்களுக்கு எதிரான போராட்டத்தில் அவன் ஈடுபட்டிருந்தான். ராட்சதர்களின் குருவுக்கு ஒரு மந்திரம் தெரியும். இறந்துபோன ராட்ச தர்களை இந்த மந்திரத்தின் உதவியால் உயிர் பிழைக்க வைக்க முடியும். தேவேந்திரனுக்கு இந்த மந்திரம் தெரியாததால் இறந்து போன தேவர்களை அவர்களால் மீண்டும் உயிர்ப்பிக்க முடிய வில்லை. இதனால் போரில் தேவர்கள் தோல்வியைத் தழுவிவந்தனர். கசனை ராட்சதர்களின் தலைவனிடம் அனுப்பி எப்படியாவது மந்தி ரத்தை கற்றுக் கொண்டு வருவதற்குத் திட்டமிட்டனர். கசன் இந்த முயற்சியில் ஆரம்பத்தில் வெற்றி பெறவில்லை. இறுதியில் அவன் ராட்சதர்களின் தலைவனுடைய புதல்வியான தேவயானியுடன் ஓர் உடன்பாடு செய்து கொண்டான்; இந்த மந்திரத்தைக் கற்றுக் கொள்ள தேவயானி உதவி செய்தால் அவளைத் தன்னுடைய மனைவியாக ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பதாக கசன் தெரிவித்தான். ஒப்பந்தப் படி தேவயானி தன் பங்கை நிறைவேற்றி விட்டாள். ஆனால் கசன் தன் பங்கை நிறைவேற்ற மறுத்து விட்டான்; அவளுக்கு அளித்த தனது வாக்குறுதியைவிட தனது சமூகத்தின் நலன்களே தனக்கு மிக முக்கியமானவை என்று கூறி கைவிரித்து விட்டான்.

அறநெறி வழுவிய பாத்திரங்களுக்கு பீஷ்மரும் கசனும் உதா ரணங்களாவர் என்பது என் கருத்து; தங்களது சுயநலத்தைப் பூர்த்தி செய்து கொள்வதைத் தவிர அவர்களுக்கு வேறு எந்தக் குறிக்கோளும் இல்லை. ஹரிஜன விடுதியில் தங்கியுள்ள தீண்டப்படாத இனத்தைச் சேர்ந்த மாணவர்கள் பீஷ்மர், கசன் ஆகிய இரு பாத்திரங்களையும் ஏற்று நடித்துவருகின்றனர் என்றுதான் சொல்ல வேண்டும். விடுதி யில் தங்கியிருக்கும்போது அவர்கள் பீஷ்மராக நடித்து திரு. காந்தியை யும் காங்கிரசையும் மண்ணுக்கும் விண்ணுக்குமாக ஏற்றிப் போற்றிப் புகழ்கின்றனர். ஆனால் விடுதியிலிருந்து வெளியே வந்ததும் கசன் பாத்திரத்தை ஏற்று திரு. காந்தியையும் காங்கிரசையும் கடுமையாக சாடுகின்றனர். இதனைக் காண எனக்கு மிகவும் வேதனையாக இருக்கிறது. இந்தத் தார்மிக ஒழுக்கக் கேட்டைவிட தீண்டப்படாத இனத்தைச் சேர்ந்த இளைஞர்களுக்கு மிக மோசமானது வேறு எதுவும் இருக்க முடியாது. ஆனால் அதேசமயம் இது ஹரிஜன சேவா சங்கம் தீண்டப்படாதவர்களுக்குச் செய்துள்ள மிகப் பெரிய தீங்காகும். இது அவர்களது சுதந்திரத்தையே ஆழக் குழிதோண்டிப் புதைத்து விட்டது. இவ்வாறு நடை பெற வேண்டும் என்பதுதான் திரு. காந்தி யின் விருப்பமாகும்.

நான்காவது உதாரணத்தை எடுத்துக் கொள்வோம், சங்கம் சாதி இந்துக்களால் நடத்தப்படுகிறது. இந்த அமைப்பு தீண்டப் படாதவர்களிடம் ஒப்படைக்கப்பட வேண்டும் என்றும், அவர் களால் நடத்தப்பட வேண்டும் என்றும் தீண்டப்படாதோரில் சிலர் கோரினர். சங்கத்தின் நிர்வாகக் குழுவில் தீண்டப்படாதவர்களுக் கும் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும் என்று வேறு சிலர் வலி யுறுத்தினர். ஆனால் இவ்விரு கோரிக்கைகளில் எதையும் ஏற்பதற்கு திரு. காந்தி அறவே மறுத்து விட்டார். வேறு எவரும் கையாள முடியாத குயுக்தியோடு இதற்கு இரண்டு தந்திரமான காரணங்களைக் கூறி னார். ஹரிஜன சேவா சங்கம் என்பது தீண்டாமையை அனுஷ்டிக்கும் பாவத்திற்கு இந்துக்கள் செய்யும் ஒரு பிராயச்சித்தம் என்பது அவரது முதல் வாதம். இந்துக்கள்தான் இதற்குக் கழுவாய் தேட வேண்டும். ஆதலால் சங்கத்தை நிர்வகிப்பதில் தீண்டப்படாதவர்களுக்குப் பங்கு ஏதும் இருக்க முடியாது. இரண்டாவதாக தான் திரட்டியுள்ள பணம் இந்துக்கள் தந்ததேயாகும், தீண்டப்படாதவர்கள் அளித்த பணம் அல்ல, எனவே, நிர்வாகக் குழுவில் இடம் பெறுவதற்கு தீண்டப் படாதவர்களுக்கு எந்த உரிமையும் இல்லை. இவ்வாறு திரு. காந்தி மறுத்ததை வேண்டுமானால் பொறுத்துக் கொள்ளலாம். ஆனால் இதற்கு ஆதரவாக அவர் முன்வைத்த வாதங்கள் மிகவும் அவமதிப் பானவை, மனத்தைப் பெரிதும் புண்படுத்தக்கூடியவை; இதற்குப் பிறகு சுயமரியாதை உள்ள தீண்டப்படாதவன் எவனும் சங்கத்துடன் எத்தகைய ஒட்டும் உறவும் வைத்துக் கொள்ளமாட்டான்; அவ்வாறு செய்வதில் எத்தகைய தவறுமில்லை. ஹரிஜன சேவா சங்கம் என்பது ஓர் அறக்கட்டளை நிறுவனம். தீண்டப்படாதவர்கள் அனுபவ பாத் தியம் உடையவர்கள். எனவே, அறக்கட்டளையின் குறிக்கோள் கள், நோக்கங்கள், அதன் நிதி வசதிகள் முதலியவற்றையும் அதன் குறிக்கோள்கள் முறையாக நடைமுறைப்படுத்தப்பட்டு வருகின்றவா என்பதைத் தெரிந்து கொள்வதற்கு அனுபவபாத்தியஸ்தர்களுக்கு எல்லா உரிமையும் உண்டு என்பதை எந்தச் சட்ட வல்லுநரும் கூறுவார். இன்னும் சொல்லப்போனால் நம்பிக்கை துரோகம் செய்தமைக்காக தருமகர்த்தாவை நீக்குவதற்குக் கூட அவர்களுக்கு உரிமை உண்டு. எனவே, நிர்வாகக் குழுவில் தீண்டப்படாதவர்களுக் குப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்கு மறுக்க முடியாது. காந்தி இதனை ஏற்றுக் கொள்ள மாட்டார் என்பது தெளிவு. அதேசமயம் எவருக்கும் அடங்கி ஒடுங்கி தாழ்ந்து போக விரும்பாத, மற்றவர்களின் தர்ம சிந்தனையில் தனது எதிர்காலத்தைப் பணயம் வைக்க விரும்பாத சுயமரியாதை உள்ள எந்தத் தாழ்த்தப்பட்டவனும் இது விஷயத்தில் திரு. காந்தியுடன் எத்தகைய சச்சரவும் வைத்துக் கொள்ள மாட்டான்.

கயமைத்தனம் என்பது ஒரு நற்பண்பு என்றால் திரு. காந்தியின் வாதம் பிரமாதம் என்பதில் ஐயமில்லை, அதன் பலனை அவரே அனுபவிக்கட்டும் என்று கூற அவன் முற்றிலும் தயாராக இருக்கிறான்.

ஆனால் சங்கத்தை நிர்வகிக்க தீண்டப்படாதவர்கள் அனுமதிக்கப்படாததற்கு இவை உண்மையான காரணங்களாக இருக்க முடியாது. உண்மையான காரணங்கள் வேறு. முதலாவதாக, சங்கம் தீண்டப்படாதவர்களின் பொறுப்பில் விடப்பட்டால், தீண்டப்படாதவர்களைக் கட்டுப்படுத்த திரு. காந்திக்கும் காங்கிரசுக்கும் எந்த வழியும் இருக்காது. தீண்டப்படாதவர்கள் இந்துக்களைச் சார்ந்திருக்கும் நிலைக்கு முற்றுப்புள்ளி வைக்கப்படும். இரண்டாவதாக, தீண்டப்படாதவர்கள் சுதந்திரமானவர்களாகி விட்டால் இந்துக்களிடம் நன்றி விசுவாசம் காட்டுவதை நிறுத்தி விடுவார்கள். இதன் விளைவுகள் திரு. காந்தி என்ன நோக்கத்துக்காக இச்சங்கத்தை ஆரம்பித்தாரோ அந்த நோக்கத்துக்கு முரண்பாடானவையாகி விடும். இந்தியக் கிறித்தவர்கள் செய்வது போல் ஒரு சமயநோக்கு மனோபாவத்தை தீண்டப்படாதவர்களிடையே தோற்றுவிக்கவே அவர் விரும்புகிறார். இதனால்தான் சங்கத்தை தீண்டப்படாதவர்களின் கட்டுப்பாட்டிலும் நிர்வாகத்திலும் ஒப்படைக்க திரு. காந்தி விரும்பவில்லை. தீண்டப்படாதவர்களுக்கு விமோசனம் கிட்ட வேண்டுமென்ற உண்மையான ஆர்வத்தை இது காட்டுகிறதா? திரு. காந்தியை தீண்டப்படாதவர்களின் விடுதலை வீரர் எனப் போற்ற முடியுமா? இந்துக்களின் ஆதிக்கத்திலிருந்து தீண்டப்படாதவர்களை விடுவிப்பதைவிட இந்துக்களின் முந்தானையுடன் அவர்களைப் பிணைக்கும் முடிச்சை மேலும் இறுக்குவதிலேயே திரு. காந்தி மிகுந்த அக்கறை காட்டுகிறார் என்பதை இது காட்டவில்லையா?

திரு. காந்தியின் தீண்டாமை எதிர்ப்பு இயக்கம் தோல்வியடைந்ததற்கு இதுவே காரணங்கள்.

## V

இரத்தினச் சுருக்கமாகக் கூறினால், தீண்டப்படாதவர்கள் இழந்துவிட்ட உடைமையுரிமை ஆவணங்களை திரு. காந்தி மனித குலத்துக்கு திரும்பப் பெற்றுத் தந்தார் என்று கூற முடியுமா? அவ்வாறு அவர் செய்யவில்லை என்பது தெள்ளத்தெளிவு. அந்த உடைமையுரிமை ஆவணங்கள் இன்னமும் இந்நதுக்களிடம்தான் இருந்து வருகின்றன. அவற்றை மீட்டுத் தருவதற்கு அவர் எதுவும் செய்யவில்லை.

தீண்டப்படாதவர்கள் அவற்றைப் பெறுவதற்கும் எவ்விதத்திலும் உதவவில்லை. அதற்குமாறாக, இது விஷயத்தில் எல்லா வகையான முட்டுக்கட்டைகளைத்தான் போட்டு வந்திருக்கிறார். மனித குலத்துக்கு தாங்கள் அளிக்கக் கடமைப்பட்டுள்ள உடைமையுரிமை ஆவணங்களை - அதாவது இந்துக்களின் ஆதிக்கத்திலிருந்து தாங்கள் விடுதலை பெறுவதை - அரசியல் அதிகாரத்தால்தான் பெற முடியுமே அன்றி வேறு எதாலும் முடியாது என்பதை தீண்டப்படாதவர்கள் உணருகின்றனர். ஆனால் மறுபுறம் திரு. காந்தியோ தமது உபதேசமும் இந்துக்களின் ஈகையும் விருப்பார்வமும் எல்லாவிதமான தீண்டாமை நோய்களுக்கும் சஞ்சீவி மருந்தாக சர்வரோக நிவாரணியாக இருக்கும் என்று நம்புகிறார். இந்துக்களின் ஈகையும் விருப்பார்வமும் வற்ற்து வரையாது இருந்துவரும் என்று தீண்டப்படாதோர் நம்ப முடியுமா? சீற்றத்துடன் கூடிய ஈகையால் என்ன பயன்? பழிவாங்கத் துடிக்கும் விருப்பார்வத்தால் என்ன பலன்? இந்துக்களின் மகிழ்ச்சியற்ற ஈகையையும் விருப்பார்வத்தையும் நம்பியிருக்கும்படி தீண்டப்படாதவர்களின் எந்த நண்பர்தான் அவர்களுக்கு அறிவுரை கூற முடியும்? தீண்டாமை என்னும் சாபக்கேடு கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளாகவே இருந்து வருகிறது; இந்த ஆண்டுகளில் இந்துக்கள் தீண்டப்படாதவர்களின் இரத்தத்தை அட்டைகள் போல் உறிஞ்சிக் குடித்துள்ளனர்; அவர்களைச் சிதைத்துச் சின்னாபின்னமாக்கியுள்ளனர்; சொல்லொண்ணா கோரக் கொடுமைகளுக்கு உள்ளாக்கி இருக்கின்றனர்; எல்லா வழிகளிலும் அவர்களை அடித்து மிதித்து துவைத்திருக்கின்றனர்; இரும்புக் காலில் போட்டு நசுக்கியிருக்கின்றார். இந்த இரண்டாயிரம் ஆண்டுகளில் இந்துக்கள் தீண்டப்படாதவர்களின் துன்பத்தைத் துடைக்க என்ன செய்துவிட்டனர்? அவர்களது நல்வாழ்வுக்காக, மேம்பாட்டுக்காக என்ன சாதித்துவிட்டனர்? வெறும் பிச்சைக்காசு 8 லட்சம் ரூபாயை சங்கத்திற்கு வழங்கியுள்ளனர். அதுவும் திரு. காந்தி நாடெங்கும் சுற்றுப்பயணம் செய்து கையில் கப்பறை ஏந்தி வசூலித்த பணம் இது! தீண்டாமையை ஒழிக்கும் திட்டத்தை உண்மையிலேயே செயல்படுத்தும் நல்லெண்ணம் திரு. காந்திக்கு இருந்திருக்குமானால் தீண்டப்படாதவர்களின் அரசியல் அதிகாரக் கோரிக்கையை ஏற்றிருக்க வேண்டும்; இதுதான் அவர்களுக்கு உண்மையிலேயே விடுதலையை, விமோசனத்தைத் தந்திருக்கும். இந்தக் கோரிக்கை மிக நியாயமானது என்பது வெள்ளிடை மலை. தீண்டப்படாதவர்களின் கரங்களில் மட்டும் நிர்வாகம் இருக்குமானால் ஒரு நூற்றாண்டுக் காலம் உபதேசம்

செய்து சாதிக்க முடியாததை ஒரே ஆண்டில் சாதித்துக் காட்ட முடியும் என்பதை ஆறறிவு படைத்த எந்த மனிதனுமே புரிந்து கொள்வான். ஆனால் தீண்டப்படாதவர்களுக்கு அரசியல் அதிகாரத்தை அளிக்கும் கருத்தே திரு. காந்திக்கு வேப்பங்காயாகக் கசக்குகிறது. தீண்டப்படாத வர்களுக்கு உதவி செய்யும் விஷயத்தில் திரு. காந்தி சமூக வழி முறை களில் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தார். அந்த நம்பிக்கை முற்றி லும் பொய்த்துவிட்டதை அவர் நன்கு அறிவார். இவ்வகையில் இனி அரசியல் வழிமுறைகள் மூலம்தான் தீண்டப்படாதவர்களுக்கு விமோசனம் கிட் முடியும். ஆனால் இந்த வழிமுறைகளைப் பயன் படுத்த திரு. காந்தி அனுமதிக்க மாட்டார் என்பதை தீண்டப்படாத வர்கள் நன்கு அறிவார்கள். அப்படியிருக்கும்போது 'திரு. காந்தியைப் பற்றி எச்சரிக்கையாக இருங்கள்' என்று அவர்கள் கூறுவதில் என்ன தவறு இருக்க முடியும்?

அமெரிக்க உள்நாட்டுப் போரின்போது கூட்டரசு, அடிமைத் தனம் எனும் இரண்டு பிரச்சினைகளின்பால் ஜனதிபதி லிங்கன் கடைப்பிடித்த போக்கை இந்தச் சந்தர்ப்பத்தில் நினைவுகூருவது பொருத்தமாக இருக்கும். 1862ல் திரு. ஹோரேஸ் கிரீலேக்கும் ஜனாதிபதி லிங்கனுக்கும் இடையே நடைபெற்ற கடிதப் போக்கு வரத்து[1] இந்தப் போக்கை துலாம்பரமாக வெளிப்படுத்துகிறது. ''இரண்டு கோடி மக்களின் வேண்டுகோள்'' என்று தலைப்பிட்ட அந்தக் கடிதத்தில் திரு. கிரிலே குறிப்பிட்டிருந்ததாவது:

> ''திரு. ஜனாதிபதி அவர்கள், கலகத்தை ஒடுக்குவதற்கு மேற்கொள்ளப்படும் எல்லா முயற்சிகளும், அதனைக் கிளறிவிடும் இலட்சியத்தை ஆதரிப்பதும் பகுத்தறிவுக்கு ஒவ்வாததவையும் வீணானவையுமாகும் என்பதை உணராத தன்னலமற்ற, திடஉறுதி கொண்ட, மதிநுட்பம் வாய்ந்த கூட்டரசு ஆதரவாளர் எவருமே இந்த விரிந்துபரந்த உலகில் இல்லை எனக் கூறலாம்.''

இந்தக் கடிதத்திற்கு ஜனாதிபதி லிங்கன் பின்கண்டவாறு பதிலளித்தார்: -

1. ஆப்பிரகாம் லிங்கன் நூல்கள், தொகுதி XI, பக்கங்கள் XII - XIII

''அடிமைத்தனதத்தைப் பாதுகாத்தாலொழிய கூட்டரசைப் பாதுகாக்க மாட்டோம் என்று கூறுபவர்கள் இருந்தால் அவர்கள் கூறுவதில் எனக்கு உடன்பாடில்லை.

''அடிமைத்தனத்தை அழித்தொழித்தாலொழிய கூட்டரசைப் பாதுகாக்க மாட்டோம் என்று கூறுபவர்கள் இருந்தால் அவர்கள் கூறுவதில் எனக்கு உடன்பாடில்லை.

''எனது தலையாய லட்சியம் கூட்டரசைப் பாதுகாப்பதே அல்லாமல் அடிமைத்தனத்தைப் பாதுகாப்பதோ அல்லது அழிப் பதோ அல்ல.

''எந்த ஓர் அடிமையையும் விடுவிக்காமல் கூட்டரசைப் பாதுகாக்க முடியுமானால் அதனைச் செய்வேன். எல்லா அடிமை களையும் விடுதலை செய்து குடியரசைப் பாதுகாக்க முடியுமானால் அதனைச் செய்வேன் - ஒரு சிலரை மட்டுமே விடுவித்து மற்றவர் களை நிர்க்கதியாகி விட்டு விட்டு குடியரசைப் பாதுகாக்க முடியு மானால் அதனையும் தாராளமாகச் செய்வேன்.''

நீக்ரோக்களின் அடிமைத்தனத்துக்கும் கூட்டரசுப் பிரச் சினைக்குமுள்ள உறவு பற்றி ஜனாதிபதி லிங்கன் கொண்டிருந்த கருத்துகள் இவை. நீக்ரோக்களுக்கு விமோசனம் அளித்தவர் என்று புகழ்பெற்ற ஒருவரைப் பற்றி இவை மிகவும் வேறுபட்டதொரு கண் ணோட்டத்தை அளிக்கின்றன. உண்மையைக் கூறுவதானால் நீக் ரோக்களின் விடுதலையை ஒரு தவிர்க்க முடியாத அத்தியாவசிய மாக அவர் கருதவில்லை. புகழ் பெற்ற கெட்டிஸ்பெர்க் பேருரையை ஆற்றியவர் அரசாங்கம் எவ்வாறு இருக்க வேண்டும் என்று கூறும் போது மக்களால் மக்களுக்காக நடத்தப்படும் மக்கள் அரசாங்கமாக இருக்க வேண்டும் என்று குறிப்பிட்டார். இதையே கூட்டரசு இருக்கு மானால் வெள்ளையர்களால் வெள்ளையருக்காக நடத்தப்படும் கறுப்பர் அரசாங்கம் என்று மாற்றிக் கூறலாம் போலிருக்கிறது. சுய ராஜ்யம் மற்றும் தீண்டப்படாதவர்கள் சம்பந்தமாக காந்தி மேற் கொண்டிருக்கும் போக்கு நீக்ரோக்கள், கூட்டரசு ஆகிய இவ் இரு பிரச்சினைகள் சம்பந்தமாக ஜனாதிபதி லிங்கன் கடைப்பிடித்தப் போக்கை ஒத்ததாக இருக்கிறது. ஜனாதிபதி லிங்கன் எவ்வாறு கூட் டரசை விரும்புகிறாரோ அவ்வாறே திரு. காந்தி சுயராஜ்யத்தை விரும்புகிறார். ஆனால் இந்து சமூக அமைப்பைச் சீர்குலைப்பதை யும், தீண்டப்படாதவர்களின் விமோசனத்தையும் விலையாகக்

கொடுத்து சுயராஜ்யத்தைப் பெற விரும்பவில்லை. ஆனால் அதே சமயம் ஜனாதிபதி லிங்கனோ கூட்டரசைப் பாதுகாப்பதற்கு அவசிய மாயின் நீக்ரோ அடிமைகளை விடுதலை செய்யத் தயாராக இருக் கிறார். ஆனால் திரு. காந்தியின் போக்கு இதற்கு முற்றிலும் மாறு பட்டதாக இருக்கிறது. சுயராஜ்யம் பெறுவதற்கு அத்தியாவசியமான தாக இருந்தால்கூட தீண்டப்படாதவர்கள் அரசியல் விடுதலை பெறு வதை அவர் விரும்பவில்லை. தீண்டப்படாதவர்களுக்கு அரசியல் சுதந்திரம் வழங்குவதை விலையாகக் கொடுப்பதைவிட சுயராஜ்யம் மாண்டுமடிந்து போவதே மேல் என்பதுதான் திரு. காந்தியின் மனப் போக்கு. இதெல்லாம் நடந்து போன கடந்தகால விஷயம், புனா ஒப்பந்தத்தை ஏற்றுக் கொண்டுவிட்ட நிலையில் திரு. காந்தி தீண்டப் படாதவர்களின் அரசியல் கோரிக்கைகளை எதிர்க்க முடியாது, புனா ஒப்பந்தத்தின் உடந்தையாளர்களில் ஒருவர் என்ற முறையில், தீண்டப்படாதவர்கள் இந்தியாவின் தேசிய வாழ்க்கையில் ஒரு தனி சக்தியினர் என்பதை திரு. காந்தி ஏற்றுக் கொண்டிருக்க வேண்டியதே நியாயம். ஆனால் அவ்வாறு நிகழவில்லை. புனா ஒப்பந்தம் திரு. காந்தியின் மனப்போக்கில் எத்தகைய மாறுதலையும் ஏற்படுத்த வில்லை; அரசியல் பாதுகாப்புகள் சம்பந்தமான தீண்டப்படாதவர் களின் கோரிக்கைகள் குறித்து வட்டமேசை மாநாட்டிலும், அதற்கு முன்னரும் பின்பற்றிய அதே போக்கையே இப்போதும் அவர் கடைப்பிடிக்கிறார் என்பதற்கு நிறைய சான்றுகள் உள்ளன. தீண்டப் படாதவர்கள் இந்தியாவின் தேசிய வாழ்வில் ஒரு தனி சக்தியினர், அரசியலமைப்புச் சட்டத்துக்கு அவர்களது ஒப்புதல் தேவை என்று 1940 இல் பிரிட்டிஷ் அரசாங்கம் அறிவித்தபோது திரு. காந்தி அதனை ஆட்சேபித்தார். வைசிராய் லின்லித்கோ, தீண்டப்படாதவர்களை ஒரு தனி சக்தியினராகக் குறிப்பிட்டு அரசியலமைப்புச் சட்டத் துக்கு அவர்களது ஒப்புதல் வேண்டும் என்று கூறியபோது திரு. காந்தி பின்கண்டவாறு குறிப்பிட்டார்:

> "சுதேச மன்னர்களுடனும், முஸ்லீம் லீகுடனும், ஷெட் யூல்டு வகுப்பினருடனும் கூட காங்கிரஸ் உடன்பாட்டுக்கு வர வேண்டுமென்று வைசிராயும், பிரிட்டிஷ் ராஜாங்க மந்திரியும் கூறியிருப்பது சுதந்திரம் பெறுவதற்கு இந்தியா வுக்குள்ள உரிமையை பிரிட்டன் அங்கீகரிப்பதற்கு ஒரு தடையாக இருக்கிறது. இது காங்கிரசுக்கும் மக்களுக்கும் இழைக்கப்படும் பெருந்த அநீதியாகும்."

* *

''ஷெட்யூல்டு வகுப்பினரை இந்த சர்ச்சையில் சிக்க வைத்திருப்பது பிரிட்டிஷ் அரசாங்கம் எதார்த்தத்தைக் காண மறுப்பதையே காட்டுகிறது. இவர்கள் காங்கிரசின் விசேட அக்கறைக்குரியவர்கள், பிரிட்டிஷ் அரசாங்கத்தைவிட இவர்களுடைய நலன்களை மிகச் சிறப்பாகப் பாதுகாக்கும் ஆற்றல் காங்கிரசுக்கு உண்டு என்பதை அவர்கள் அறிவார்கள். தவிரவும், ஷெட்யூல்டு வகுப்பினர் சாதி இந்துக்களைப் போலவே மிகப் பல சாதியினராகப் பிரிந்துள்ளனர். எந்த ஒரு ஷெட்யூல்டு வகுப்பு உறுப்பினரும் அவர்களது எண்ணற்ற சாதியினரை உண்மையிலேயே பிரதிநிதித்துவப் படுத்துவதாகக் கூற முடியாது.''

இவ்வாறு திரு. காந்தி முன்வைத்த வாதம் உப்பு சப்பற்றது. ஷெட்யூல்டு வகுப்பினர்களுக்கு வைசிராய் ஒதுக்கியிருக்கும் பாத்திரத்தை எதிர்க்கும் அவசரத்தில் திரு. காந்தி ஒரு விஷயத்தை மறந்து விட்டார்: ஷெட்யூல்டு வகுப்பினர்கள் மிகப் பல சாதிகளாகப் பிரிந்துள்ளனர், இவற்றில் எந்த ஒரு சாதியும் அவர்கள் அனைவரையும் பிரதிநிதித்துவப்படுத்த முடியாது என்று வாதிடும் திரு. காந்தி முஸ்லீம்களும் இந்தியக் கிறித்தவர்களும் இவ்வாறே பிரிந்துள்ளனர் என்பதை மறந்து விட்டார். முஸ்லீம்கள் (1) சன்னிகள், (2) ஷியாக்கள், (3) மோமின்கள் என்று மூன்று பிரிவுகளாகப் பிரிந்துள்ளனர். இவை ஒவ்வொன்றிலும் ஏராளமான சாதிகள் அடங்கியுள்ளன; இவர்கள் ஒன்றாக அமர்ந்து உணவருந்துவார்களே தவிர தங்களுக்குள் திருமண உறவு வைத்துக் கொள்ள மாட்டார்கள். இதே போன்ற இந்தியக் கிறித்தவர்கள் (1) கத்தோலிக்கர்கள், (2) புராட்டஸ்டென்டுகள் என்று பிரிந்திருக்கிறார்கள். இது மட்டுமல்ல, கத்தோலிக்கர்கள் (1) சாதி கிறித்தவர்கள், (2) சாதி கிறித்தவர்கள் அல்லாதவர்கள் என இரு உபபிரிவுகளாகப் பிரிந்துள்ளனர். கத்தோலிக்கர்களுக்கும் புராட்டஸ்டென்டுகளுக்கும் இடையே உள்ள பல சாதியினர் திருமண உறவு வைத்துக் கொள்வதில்லை; சாதி கிறித்தவர்களும் சாதி கிறித்தவர்கள் அல்லாதவர்களும் ஒன்றாக உணவு அருந்தாதது மட்டுமன்றி, ஒரே கிறித்தவத் திருக்கோவிலுக்கும் செல்லுவதில்லை. திரு. காந்தி புனா ஒப்பந்தம் ஏற்பட ஓர் உடந்தையாளராக இருந்தபோதிலும் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒரு தனி இன அந்தஸ்து அளிக்கப்படுவதை அனுமதிப்பதில்லை என்பதில் மிக உறுதியாக இருக்கிறார்;

இந்த எதிர்ப்புப் போக்கை நியாயப்படுத்த எத்தகைய வாதத்தை யும் முன்வைக்கத் தயாராக இருக்கிறார்.

சுருக்கமாகக் கூறினால், தீண்டப்படாதவர்களைப் பொறுத்த வரையில் திரு. காந்தி இன்னும் போராடும் நோக்குடனேயே இருந்து வருகிறார். அவர் மீண்டும் தொல்லை கொடுக்க முனையக்கூடும். அவரை நம்புவதற்குரிய காலம் இன்னும் வரவில்லை. தீண்டப் படாதவர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்கான மிகச் சிறந்த வழி 'திரு. காந்தியைப் பற்றி எச்சரிக்கையாக இருங்கள்' என்னும் போக்கை மிக உறுதியாகக் கடைப்பிடிப்பதுதான்.

# இயல் 11

# காந்தியம் தீண்டப்படாதவர்களின் தலைக்குமேல் தொங்கும் வாள்

இந்திய சமூக, பொருளாதார வாழ்க்கையின் புனருத்தாரணம் பற்றி இந்தியர்கள் பேசும்போது தனியுரிமை கோட்பாட்டுக்கு எதிராக கூட்டுரிமைக் கோட்பாடு, முதலாளித்துவத்துக்கு எதிராக சோஷலிசம், பழைமைவாதத்துக்கு எதிராக தீவிரவாதம் என்னும் ரீதியிலேயே இதுவரை பேசி வந்திருக்கின்றனர். ஆனால் மிக அண்மைக் காலத்தில் இந்தியாவின் அடிவானத்தில் ஒரு புதிய 'இயம்' தோன்றியுள்ளது. அது காந்தியம் என அழைக்கப்படுகிறது. காந்தியம் என்று எதுவும் இல்லை என்று சமீப காலம் வரை திரு. காந்தி மறுத்து வந்திருக்கிறார் என்பது உண்மையே. இந்த மறுப்பு திரு. காந்தி வழக்கமாக அணியும் தன்னடக்கம் என்னும் அணிகலமே தவிர வேறன்று. எனினும் காந்தியம் இருந்து வருவதை இது எவ்வகையிலும் மறுதலித்து விடவில்லை. காந்தியம் என்ற தலைப்பில் ஏராளமான நூல்கள் வெளியிடப்பட்டிருந்தன; இவற்றிற்கு திரு. காந்தியிடமிருந்து எத்தகைய ஆட்சேபமும் எழுந்ததில்லை, இந்தியாவுக்கு உள்ளேயும் வெளியேயும் இவரது கவனத்தை இது ஏற்கெனவே கவர்ந்துள்ளது. இவருக்கு இதன்மீது அளவு கடந்த நம்பிக்கை; எனவே, மார்க்சியத்துக்கு ஒரு மாற்றாக இதனைக் கருத அவர்கள் தயங்குவதில்லை.

முந்தைய பக்கங்களில் வெளியிடப்பட்டிருந்த கருத்துகளைப் படிக்க நேர்ந்த காந்தியவாதிகள் சிலர் பின்வருமாறு வினவக்கூடும்; தீண்டப்படாதவர்கள் திரு. காந்தியிடம் எதிர்பார்த்த அளவுக்கு அவர்களுக்கு அவர் நன்மை செய்யாதிருக்கலாம்; ஆனால் அதற்காக காந்தியம் தீண்டப்படாதவர்களுக்கு எத்தகைய நம்பிக்கையையும் அளிக்கவில்லை என்று கூற முடியுமா? தீண்டப்படாதவர்களுக்கு ஆதரவாக திரு. காந்தி இடைவிட்டு இடைவிட்டு, மிக மெதுவாக, சில குறுகிய நடவடிக்கைகளை எடுத்து வந்திருப்பதை மட்டுமே நீங்கள்

நினைவில் வைத்திருக்கிறீர்கள், ஆனால் அவர் விளக்கி வந்திருக்கும் கோட்பாடுகளின் ஆற்றல்வளப் பரிமாணத்தை மறந்து விடுகிறீர்கள் என்று காந்தியவாதிகள் என்மீது குற்றப் பத்திரிகை வாசிக்கக்கூடும். ஒரு நீண்ட கோட்பாட்டை விரித்துரைக்கும் ஒருவர் சில குறுகிய நடவடிக்கைகளையே எடுத்துக் கொள்ளும் நிலை சில சமயங்களில் ஏற்படுவதுண்டு, எனினும் அந்தக் கோட்பாடே ஒருநாள் அதன் இயக்காற்றல் காரணமாக, விடப்பட்டுவிட்ட எல்லோருக்கும் பயனளிக்கும் விதத்தில் ஒரு நீண்ட நடவடிக்கையை எடுக்கும்படி நிர்ப்பந்திக்கும் என்ற நம்பிக்கையில் அவரை மன்னித்து விடலாம் என்பதை ஒப்புக் கொள்கிறேன். காந்தியம் என்பது நமது ஆய்வுக்குரிய ஒரு சுவையான விஷயம் என்பதில் ஐயமில்லை. ஆனால் திரு. காந்தியைப் பற்றி அலசி ஆராய்ந்த பிறகு காந்தியத்தைப்பற்றி ஆராய்வது சலிப்பூட்டக்கூடியதாகவே இருக்கும்; எனவே காந்தியத்தையும் தீண்டப்படாதவர்களையும் பற்றி ஆராய்வதை விட்டு விடலாம் என்றுதான் முதலில் நினைத்தேன். ஆனால் அதேசமயம் இந்த விஷயத்தை ஆராய்வதை விட்டுவிடுவதால் ஏற்படக்கூடிய விளைவு மிகவும் துரதிர்ஷ்டவசமானதாக இருக்கும் என்ற உண்மையையும் என்னால் உதாசீனம் செய்ய முடியவில்லை. மேலும், திரு. காந்தியை நான் அம்பலப்படுத்தினானலும், காந்தியவாதிகள் இந்தச் சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்திக் கொள்ளக் கூடும்; தீண்டப்படாதோரின் பிரச்சினைக்குத் தீர்வு காண திரு. காந்தி தவறிவிட்டாலும், தீண்டப்படாதோரின் விமோசனம் காந்தியத்தில்தான் அடங்கியுள்ளது என்று அவர்கள் தொடர்ந்து பிரசாரம் செய்யவும் கூடும். இத்தகைய பிரசாரத்துக்கு இடம் தரலாகாது என்ற காரணத்தால், எனது பழைய முடிவைக் கைவிட்டுவிட்டு காந்தியம் பற்றிய விவாதத்தில் இப்போது இறங்கியுள்ளேன்.

## II

காந்தியம் என்றால் என்ன? அது எதை ஆதரித்து நிற்கிறது? சமூகப் பிரச்சினைகள் குறித்த அதன் போதனைகள் யாவை?

காந்தியம் குறித்த முற்றிலும் கற்பனையானதொரு கண்ணோட்டத்தை சில காந்தியவாதிகள் இட்டுக்கட்டி உருவாக்கி இருக்கிறார்கள் என்பதை முதலில் இங்கு குறிப்பிடுவது அவசியம். இந்தக் கண்ணோட்டத்தின்படி காந்தியம் என்பதற்கு கிராமத்துக்குத் திரும்புவது என்றும், கிராமத்தைத் தன்னிறைவுப் பெறச் செய்வது என்றும்

பொருள். இது காந்தியத்தை ஒரு வெறும் பிராந்தியவாத விஷய மாக்குகிறது. காந்தியம் என்பது பிராந்தியவாதம்போல் அத்தனை எளிமையானதோ, சிக்கலற்றதோ அல்ல என்பது நிச்சயம். காந்தியம் பிராந்தியவாதத்தை விட அதிக உள்ளடக்கத்தைக் கொண்டது. பிராந் தியவாதம் அதன் மிகச் சிறுதிறமான ஒரு பகுதியேயாகும். காந்தியம் ஒரு சமூக சித்தாந்தத்தையும் பொருளாதாரச் சித்தாந்தத்தையும் தன்னுள் கொண்டுள்ளது. காந்தியத்தின் பொருளாதார, சமூக சித் தாந்தத்தைக் கணக்கிலெடுத்துக் கொள்ளத் தவறுவது வேண்டு மென்றே காந்தியத்தைப் பற்றி ஒரு தவறான படப்பிடிப்பினை வழங்குவதையே குறிக்கும். எனவே, காந்தியம் குறித்த ஓர் உண்மை யான சித்திரத்தை அளிப்பது முதலாவதும் தலையாயதுமான தேவை யாகும்.

சமூகப் பிரச்சினை சம்பந்தமான திரு. காந்தியின் போதனை களுடன் தொடங்குவோம். சாதி அமைப்புமுறைதான் இந்தியாவில் பிரதான சமூகப் பிரச்சினையாக இருந்து வருவது தெரிந்ததே. சாதி அமைப்பு முறை குறித்து திரு. காந்தியின் கருத்துகள் என்ன? 1921-22-ல் நவஜீவன் என்னும் குஜராத்தி சஞ்சிகையில் இது குறித்த தமது கருத்துகளை மிக விரிவாக தெரிவித்துள்ளார். இந்தக் கட்டுரை[1] குஜராத்தி மொழியில் எழுதப்பட்டிருக்கிறது. அவரது கருத்துகளின் ஆங்கில மொழியாக்கத்தை கூடிய மட்டும் அவரது சொந்த சொற் களிலேயே இங்கு தருகிறேன். திரு. காந்தி கூறுகிறார்:

''1. இந்து சமுதாயம் இதுவரை தாக்குப்பிடித்து நின் றிருக்கிறது என்றால் சாதி அமைப்பு என்னும் அடித்தளத் தின்மீது அது அமைந்திருப்பதே காரணம்.

''2. சுயராஜ்யத்தின் விதைகள் சாதி அமைப்பு முறை யில்தான் பொதிந்துள்ளன. பல்வேறு சாதிகள் ராணுவத் தின் பல்வேறு படைப்பிரிவுகள் போன்றவை. ஒவ்வொரு படைப் பிரிவும் ஒட்டு மொத்த நலனுக்காகப் பாடுபட்டு வருகிறது.''

1. இது காந்தி சிக்ஷன் எனும் தொடரின் தொகுதி II-ல் 18ஆவது கட்டுரையாக பிரசுரிக் கப்பட்டிருக்கிறது.

"3. சாதி அமைப்பு முறையைத் தோற்றுவிக்கக்கூடிய ஒரு சமூகம் தன்னேரில்லாத ஒழுங்கமைப்பு ஆற்றலைப் பெற்றிருக்கவே செய்யும்.

"4. ஆரம்பக் கல்வியைப் பரப்புவதற்கான ஆயத்த வழிமுறையை சாதி பெற்றுள்ளது. ஒவ்வொரு சாதியும் அந்தச் சாதியைச் சேர்ந்த குழந்தைகளின் படிப்புக்குப் பொறுப்பேற்றுக் கொள்ள முடியும். சாதிக்கு ஓர் அரசியல் அடித்தளம் இருக்கிறது. ஒரு பிரதிநிதித்துவ அமைப்புக்கு ஒரு வாக்காளராக அது பணியாற்ற முடியும். நீதிமன்ற பணி களையும் சாதியால் செய்ய முடியும். ஒரு குறிப்பிட்ட சாதி யைச் சேர்ந்த நபர்களை நீதிபதிகளாகச் செயல்படுவதற்குத் தேர்ந்தெடுத்து, அதே சாதியைச் சேர்ந்த உறுப்பினர்க ளிடையே எழும் தகராறுகளை அவர்களைக் கொண்டு தீர்த்து வைக்க முடியும். சாதிகள் இருப்பதால் பாதுகாப்புப் படையைத் தோற்றுவிப்பது எளிது; ஒவ்வொரு சாதியும் ஒரு படைப்பிரிவை உருவாக்கும்படிச் செய்யலாம்."

"5. சமபந்தி விருந்தோ அல்லது கலப்புத் திருமணமோ தேசிய ஒற்றுமையை வளர்ப்பதற்கு அவசியம் என்று நான் கருதவில்லை. இவ்வாறு ஒன்று சேர்ந்து உணவு அருந்துவது நட்புறவை வளர்க்கிறது என்பதை அனுபவம் மறுக்கிறது: இது உண்மையானால் ஐரோப்பாவில் போர்களே நடந் திருக்க மாட்டா....... இயற்கை உபாதையைத் தீர்த்துக் கொள்வது போன்றே உணவு அருந்துவதும் ஓர் அனுசித மான செயலாகும்; இதிலுள்ள ஒரே வித்தியாசம் இயற்கைக் கடன்களை முடித்த பிறகு நாம் ஓரளவு நிம்மதி பெறு கிறோம்; ஆனால் உணவு அருந்திய பிறகோ மன உலைவு அடைகிறோம். இயற்கைக் கடனை தனிமையில் முடிப்பது போன்றே உணவு அருந்துவதையும் தனிமையில் மேற் கொள்ள வேண்டும்."

"6. இந்தியாவில் உடன்பிறப்புகளின் பிள்ளைகள் தங்களுக்குள் கலப்பு மணம் செய்து கொள்வதில்லை. அவ் வாறு கலப்பு மணம் செய்து கொள்ளாததால் பரஸ்பரம் ஒருவர் மற்றவரிடம் பாசம் காட்டுவதில்லையா? வைஷ்ண வர்களிடையே பல பெண்கள் மிகவும் ஆசாரமானவர்கள்; அவர்கள் குடும்பத்தின் ஏனைய உறுப்பினர்களுடன் சேர்ந்து

சாப்பிடமாட்டார்கள்; பொதுத் தண்ணீர்ப் பானையிலிருந்து தண்ணீர் எடுத்தும் அருந்த மாட்டார்கள். அப்படியிருப் பினும் குடும்பத்தில் பந்தபாசம் இருப்பதில்லையா? பல் வேறு சாதிகளைச் சேர்ந்தவர்கள் சமபந்தி போஜனம் சாப் பிடாததைக் கொண்டும், கலப்புத் திருமணம் செய்து கொள் ளாததைக் கொண்டும் சாதி அமைப்பு முறை மோசமானது என்று முடிவுக்கு வந்துவிட முடியாது.''

''7. சாதி என்பது கட்டுப்பாடு என்பதன் மற்றொரு பெயர். சாதி துய்த்து மகிழ்வதற்கு ஒரு வரையறை நிர்ண யிக்கிறது. ஒருவன் தனது இன்ப நாட்டத்தில் சாதிவரம்பு களை மீறுவதற்கு சாதி அனுமதிப்பதில்லை. சமபந்தி போஜ னங்களையும் கலப்புத் திருமணங்களையும் சாதி தடை செய் திருப்பதன் பொருள் இதுதான்.''

''8. சாதி அமைப்பு முறையை ஒழித்துக் கட்டிவிட்டு, மேற்கத்திய சமூக அமைப்பு முறையைப் பின்பற்ற வேண்டு மானால் இந்துக்கள் பரம்பரைத் தொழில் என்னும் கோட் பாட்டைக் கைவிட்டாக வேண்டும்; சாதி அமைப்பு முறை யின் ஆன்மாவே இந்தப் பரம்பரைத் தொழில் கோட் பாடாகும். பரம்பரைக் கோட்பாடு நிலைபேறுடைய கோட் பாடு; இந்த சாசுவதமான கோட்பாட்டை மாற்றுவது குழப் பத்தைத் தான் உண்டு பண்ணும். ஒரு பிராமணனை அவன் வாழ்நாள் முழுதும் பிராமணன் என்று நான் அழைக்கா விட்டால் அந்தப் பிராமணனுக்கு என்னால் எந்தப் பலனும் இல்லை. ஒவ்வொரு நாளும் ஒரு பிராமணன் ஒரு சூத்திர னாகவும் ஒரு சூத்திரன் பிராமணனாகவும் மாற்றப்பட்டால் பெருங்குழப்பமும் சீர்குலைவும்தான் ஏற்படும்.''

''9. சாதி அமைப்பு முறை சமுதாயத்தின் ஓர் இயல்பான விதிமுறை. இந்தியாவில் அதற்கு மத முலாம் பூசப்பட்டுள்ளது. இதர நாடுகளில் சாதி அமைப்பு முறையின் பயனுடைமை சரி வரப் புரிந்து கொள்ளப்படவில்லை; மேலும் அங்கு அது கட் டுறுதியற்ற, வலுவற்ற நிலைமையிலேயே இருந்து வந்தது. இதன் விளைவாக, சாதி அமைப்பு முறையிலிருந்து இந்தியா எந்த அளவுக்குப் பயனடைந்து வருகிறதோ அந்த அளவுக்கு ஏனைய நாடுகள் பயன் பெற முடியவில்லை.

*இத்தகைய கருத்துகளை நான் கொண்டிருப்பதால் சாதி அமைப்பு முறையை ஒழித்துக்கட்ட முனைந்து நிற்கும் அனைவரையும் எதிர்க்கிறேன்.''*

இவ்வாறு 1922-ல் திரு. காந்தி சாதி அமைப்பு முறையின் பாது காவலராக இருந்தார். நமது விசாரணையை மேலும் தொடரும்போது 1925 ஆம் ஆண்டில் சாதி அமைப்பு முறையை ஓரளவு கண்டிப்பவ ராக திரு. காந்தி மாறியிருந்ததைக் காண்கிறோம். 1925 பிப்ரவரி 3-ஆம் தேதி திரு. காந்தி பின்வருமாறு கூறினார்:

*''தற்கட்டுப்பாடு சாதிக்கு இருப்பதால் அதனை நான் ஆதரித்தேன். ஆனால் தற்போது சாதி என்பது தற்கட்டுப் பாட்டைக் குறிக்கவில்லை; மாறாக ஒரு வரையறையைத் தான் குறிக்கிறது. தற்கட்டுப்பாடு சிறப்பானது, சுதந்திரம் பெறுவதற்கு துணை புரிகிறது. ஆனால் வரையறை என்பது சங்கிலியைப் போன்று பிணைக்கிறது. இப்போதுள்ள நிலைமையில் சாதிகளில் பாராட்டத்தக்க எதுவும் இல்லை. அவை சாஸ்திரங்களின் தத்துவங்களுக்கு மாறாக இருக் கின்றன. சாதிகளின் எண்ணிக்கை முடிவில்லாமல் பெருகி விட்டது. கலப்புத் திருமணங்களுக்குத் தடையும் இருந்து வருகிறது. இது ஏற்றத்துக்கு, பெருமிதத்துக்குரிய நிலை அல்ல. பெரும் இறக்கத்தை, வீழ்ச்சியையே இது குறிக் கிறது.''*

இதிலிருந்து மீள்வதற்கு வழி என்ன என்று கேட்டபோது திரு. காந்தி கூறியதாவது:

*சிறு சிறு சாதிகள் ஒன்றிணைந்து மாபெரும் சாதி யாக உருவெடுப்பதே மிகச்சிறந்த பரிகாரமாகும். இத்தகைய பெரிய சாதிகள் நான்கு இருக்க வேண்டும். பழைய சதுர் வருண முறையைப் புனரமைக்க இது உதவும்.''*

சுருக்கமாகக் கூறினார்ல, 1925-ல் திரு. காந்தி வருண அமைப்பு முறையின் தீவிர ஆதரவாளராக மாறினார்.

பண்டைய இந்தியாவில் நடைமுறையிலிருந்த பழைய வருண அமைப்பு முறையின்படி சமுதாயம் நான்கு அமைப்புகளாகப் பிரிந் திருந்தது; (1) பிராமணர்கள், கல்விகற்றல், கற்பித்தல் இவர்களது

தொழில்; (2) சத்திரியர்கள், போர் புரிதல் இவர்கள் தொழில்; (3) வைசியர்கள், வாணிகம் இவர்களது தொழில்; (4) சூத்திரர்கள், ஏனைய வருணத்தினருக்கு ஊழியம் செய்தல் இவர்களது தொழில், திரு. காந்தி ஆதரிக்கும் வருண அமைப்பு முறை வைதிக இந்துக் கள் பின்பற்றிய பழைய வருண அமைப்பு முறை போன்றதுதானா? திரு. காந்தி தமது வருண அமைப்பு முறையை பின்கண்டவாறு விவரித்தார்[1]:

''1. வருணப் பிரிவினைகள் பிறப்பை அடிப்படையாகக் கொண்டவை என்று கருதுகிறேன்.

''2. சூத்திரன் கல்வி கற்பதற்கோ, ராணுவப் பயிற்சி பெறுவதற்கோ வருண அமைப்பு முறையில் எந்தத் தடையும் இல்லை. அதே போன்று சத்திரியன் மற்ற வருணத்தாருக்கு ஊழியம் செய்யலாம். இது விஷயத்தில் வருண அமைப்பு முறையில் அவனுக்கு எந்தத் தடையும் இல்லை. ஆனால் சதுர்வருண முறை கட்டளையிடுவதெல்லாம் சூத்திரன் கல்வி கற்பதை தனது வாழ்க்கைத் தொழிலாகக் கொள்ளக் கூடாது என்பதுதான். அதேபோன்று சத்திரியன் ஊழியம் செய்வதை வாழ்க்கைத் தொழிலாகக் கொள்ளக் கூடாது. (இவ்வாறே பிராமணன் போர்க்கலையையோ அல்லது வாணிகத்தையோ கற்றுக் கொள்ளலாம். ஆனால் அதனை ஒரு வாழ்க்கைத் தொழிலாகப் பயன்படுத்தலாகாது. வைசியனும் இதே போன்று கல்வி கற்கலாம் அல்லது போர்க் கலையைக் கற்றுக் கொள்ளலாம். ஆனால் அவன் அவற்றை வாழ்க்கைத் தொழிலாகக் கொள்ளக் கூடாது.)

''3. சதுர் வருண முறையானது வாழ்க்கைத் தொழில் சம்பந்தப்பட்டதாகும். ஒரு வருணத்தைச் சேர்ந்தவன் ஏனைய வருணங்களைச் சேர்ந்தவர்களுக்குரிய அறிவாற்றலையோ, விஞ்ஞானத்தையோ, கலையையோ பெறுவதில் தவறு ஏதுமில்லை. ஆனால் அவன் தனது சீவனோபாயத்தைப் பொறுத்தவரையில் அவன் எந்த வருணத்தைச் சேர்ந்தவனோ

---

1. இந்தப் பகுதிகள் இவ்விஷயம் குறித்து திரு. காந்தி எழுதிய ஒரு கட்டுரையிலிருந்து எடுத்தாளப்பட்டிருக்கின்றன; குஜராத்தியில் திரு. காந்தியின் கட்டுரைகள் அடங்கிய வருண வியவஸ்தை என்னும் நூலில் இது மறுபிரசுரம் செய்யப்பட்டிருக்கிறது.

அந்த வருணத்துக்குரிய தொழிலையே மேற்கொள்ள வேண்டும் அதாவது தமது மூதாதையர்களின் பரம்பரைத் தொழிலையே செய்ய வேண்டும்.

''4. சதுர்வருண முறையின் குறிக்கோள் போட்டியையும் வர்க்கப் போராட்டத்தையும் வர்க்க யுத்தத்தையும் தடுப்பதேயாகும். வருண அமைப்புமுறை மக்களின் கடமைகளையும் தொழிலையும் நிர்ணயிப்பதால் அதனை நான் ஆதரிக்கிறேன்.

''5. வருணம் என்பது ஒருவன் பிறப்பதற்கு முன்பே அவனது தொழிலை நிர்ணயிப்பதைக் குறிக்கிறது.

''6. சதுவருண அமைப்பு முறையில் எவனும் தன் விருப்பம் போல் தொழிலைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியாது. அவனது தொழில் பரம்பரை அடிப்படையில் அவனுக்கு நிர்ணயிக்கப்படுகிறது.''

பொருளாதார வாழ்க்கைத் துறையைப் பொறுத்த வரையில் திரு. காந்தி இரண்டு லட்சியங்களை வகுத்துக் கொண்டிருக்கிறார்:

இவற்றில் ஒன்று எந்திரங்களுக்கு எதிர்ப்பு. 1921-ஆம் ஆண்டு வாக்கிலேயே எந்திரங்களின் பால் தனக்குள்ள வெறுப்பை வெளிப்படுத்தினார். 1921 ஜனவரி 19-ஆம் தேதிய யங் இந்தியா இதழில் திரு. காந்தி பின்வருமாறு எழுதினார்:

''முன்னேற்றம் என்னும் கடிகாரத்தின் முள்ளை பின்னோக்கித் தள்ளி வைக்க நான் விரும்புகிறேனா? மில்களின் இடத்தில் கைராட்டையும், கைநெசவும் இடம் பெற வேண்டுமென்று விரும்புகிறேனா? ரயில்வேக்குப்பதில் மாட்டு வண்டி வர வேண்டுமென்று விரும்புகிறேனா? எல்லா எந்திரங்களையும் ஒழித்துக் கட்ட வேண்டுமென்று விரும்புகிறேனா? இந்தக் கேள்விகளை சில பத்திரிகையாளர்களும் பொது மக்களும் கேட்கின்றனர். இவற்றிற்கு எனது பதில் இதுதான்: எந்திரங்கள் ஒழிக்கப்பட்டு வருவதற்காக நான் கண்ணீர் விட்டு அழ மாட்டேன்; அல்லது இதனை ஒரு பேரிடராகவும் எடுத்துக் கொள்ள மாட்டேன்.''

எந்திரங்களிடம் அவர் வைத்திருந்த வெறுப்பையும் எதிர்ப்பையும் சர்க்காவை அவர் பெரிதும் ஏற்றிப் போற்றிப் புகழ்ந்ததிலிருந்தும், கையால் நூற்பதையும் கை நெசவையும் அவர் வெகுவாக ஆதரித்ததிலிருந்தும் தெரிந்து கொள்ளலாம். எந்திரங்களிடம் அவர் கொண்டிருந்த வெறுப்பும் சர்க்காவிடம் அவர் காட்டிய விருப்பும் ஏதோ தற்செயலாக நிகழ்ந்த சமாசாரமல்ல. இது சித்தாந்தம் சம்பந்தப்பட்ட விஷயமாகும். 1925 ஜனவரி 8-ஆம் நாளன்று கத்தியவாரில் நடைபெற்ற அரசியல் மாநாட்டில் ஆற்றிய தமது தலைமை உரையில் திரு. காந்தி இந்தச் சித்தாந்தத்தைப் பின்கண்டவாறு விளக்கிப் பேசினார்:

> ''கணக்கற்று, வரைமுறையற்றுப் பெருகிவரும் உயிரற்ற எந்திங்களை வழிபட்டு தேசங்கள் சோர்வடைந்து விட்டன. உயிர்த் துடிப்புள்ள ஈடு இணையற்ற எந்திரங்களை அதாவது நமது உடல்களைத் துருப்பிடிக்க விட்டு அவற்றை அழித்து வருகிறோம், அவற்றுக்குப் பதிலாக உயிரற்ற எந்திரங்களைப் புகுத்த முயன்று வருகிறோம். நமது சரீரம் முழு அளவுக்குப் பணியாற்ற வேண்டும், பயன்படுத்தப் பட வேண்டும் என்பது ஆண்டவனின் கட்டளை. அந்தக் கட்டளையை நாம் அலட்சியப்படுத்தக் கூடாது. கைராட்டினம் சரீர யக்ஞத்தின் அதாவது உடல் உழைப்பின் மங்களகரமான சின்னமாகும். இந்த யக்ஞத்தைச் செய்யாமல் உணவு உண்பவன் உண்மையில் அதைத் திருடவே செய்கிறான். இந்த வேள்வியைக் கைவிட்டதன் மூலம் நாட்டுக்கு நாம் துரோகிகளானோம்; அதிர்ஷ்ட தேவதையின் முகத்துக்கு நேரே கதவை மூடினோம்.''

ஹிந்த் சுவராஜ் (இந்தியத் தன்னாட்சி) என்னும் திரு. காந்தியின் பிரசுரத்தைப் படித்த எவரும் திரு. காந்தி நவீன நாகரிகத்தின் கடுமையான எதிர்ப்பாளர் என்பதைத் தெரிந்து கொண்டிருப்பார். இந்த நூல் 1908-ல் பிரசுரிக்கப்பட்டது. எனினும் இதற்குப் பின்னரும் அவரது சித்தாந்தத்தில் எந்த மாற்றமும் இல்லை. 1921-ல் எழுதும் போது திரு. காந்தி கூறியதாவது:[1]

1. யங் இந்தியா, 26 ஜனவரி, 1921

''இந்த சிறு பிரசுரம் நவீன நாகரிகம்'' பற்றிய ஒரு கடுமையான கண்டனமாகும். இது 1908 ஆம் ஆண்டில் எழுதப்பட்டது. இந்த விஷயத்தில் எனது கருத்து இன்று என்றைம் விட மிக ஆழமாகவே உள்ளது. 'நவீன நாகரிகத்தை' இந்தியா துறக்குமானால் அதனால் நன்மையே அடையும்.''

திரு. காந்தியின் கருத்துப்படி[1]:

''மேலைய நாகரிகம் சாத்தானின் படைப்பு.''

திரு காந்தியின் இரண்டாவது லட்சியம் ஊழியர்களுக்கும் தொழிலதிபர்களுக்கும், நிலப்பிரபுக்களுக்கும் குத்தகைக்காரர்களுக்கும் இடையேயான உறவில் வர்க்கப்போரும் வர்க்கப் போராட்டமும் கூட ஒழிக்கப்பட வேண்டும் என்பதாகும். ஊழியர்களுக்கும் தொழிலதிபர்களுக்கும் இடையேயான உறவு குறித்த திரு. காந்தியின் கருத்துகள் இந்த விஷயம் பற்றி 1921 ஜுன் 8-ஆம் தேதிய நவஜீவன் ஏட்டில் அவர் எழுதிய கட்டுரையில் விவரிக்கப்பட்டன. அதிலிருந்து சில பகுதிகள் வருமாறு:

''இந்தியாவின் முன்னர் இரண்டு பாதைகள் இருக்கின்றன: ஒரு பாதை 'வலிமையே வெல்லும்' என்ற மேலைய கோட்பாடு; மற்றொரு பாதை 'உண்மையே வெல்லும்' என்ற கீழைய கோட்பாடு. உண்மைக்கு இடர்ப்பாடு ஏதும் கிடையாது; இந்தக் கோட்பாட்டின்படி வலியோரும் நலிந்தோரும் நியாயம் பெற உரிமை உண்டு. முதலில் உழைக்கும் வர்க்கத்தை எடுத்துக் கொள்வோம். தொழிலாளர்கள் வன்முறையின் மூலம் ஊதிய உயர்வு பெறலாமா? அவர்களது கோரிக்கைகள் சட்டப்பூர்வமானவையாக, நியாயமானவையாக இருந்தாலும் வன்முறை போன்ற செயல்களில் அவர்கள் ஈடுபடக் கூடாது. உரிமைகள் பெறுவதற்கு வன்முறை எளிதான பாதையாகத் தோன்றலாம். ஆனால் அது முட்கள் நிறைந்த பாதை என்பது நாளடைவில் நிரூபணமாகும். வாள் எடுத்தவர்கள் வாளாலேயே மாள்வார்கள். நீந்துபவர் பல சந்தர்ப்பங்களில் நீரில் மூழ்கியே இறப்பதைப் பார்க்கிறோம். ஐரோப்பாவைப் பாருங்கள் அங்கு எவரும்

1. தர்ம மந்தன், பக்கம். 65.

மகிழ்ச்சியோடு இருப்பதாகத் தெரியவில்லை, யாரும் மன நிறைவடைந்திருப்பதாகத் தோன்றவில்லை. தொழிலாளிக்கு முதலாளி மீது நம்பிக்கை இல்லை. முதலாளிக்கு தொழி லாளி மீது நம்பிக்கை கிடையாது, இரு தரப்பினருமே வலிமையும் உள்ளுரமும் பெற்றிருக்கின்றனர். காளை களுக்குக்கூட அவை இருக்கின்றன. அவர்கள் இறுதிவரை போராடுகின்றனர். எல்லா இயக்கமும் முன்னேற்றமாகி விடாது. ஐரோப்பிய மக்கள் முன்னேறி வருகிறார்கள் என்று நாம் நம்புவதற்கு முகாந்திரம் ஏதுமில்லை. அவர்களிடம் செல்வம் குவிந்திருக்கலாம். ஆனால் அதைக் கொண்டு அவர்களிடம் தார்மிக அல்லது ஆன்மிகப் பண்புகள் நிறைந் திருப்பதாக அர்த்தமாகி விடாது.

* *

"சரி, அவ்வாறானால் நாம் என்ன செய்ய வேண் டும்? பம்பாயைச் சேர்ந்த தொழிலாளர்கள் ஒரு நேரிய நிலையை மேற்கொண்டுள்ளனர். இது குறித்த எல்லா விவரங்களும் இப்போது என்னிடமில்லை. எனினும் அவர் கள் சிறப்பாகப் போராட முடியும் என்று நம்புகிறேன். ஆலை உரிமையாளர் முற்றிலும் தவறான பாதையில் செல்ல லாம். மூலதனத்துக்கும் உழைப்புக்கும் இடையே நடை பெறும் போராட்டத்தில் முதலாளிகள் பல சந்தர்ப்பங்களில் தவறான போக்கையே கடைப்பிடிக்கின்றனர் என்று கூறப் படுவது உண்டு. ஆனால் உழைப்பு தனது வலிமையை முழு அளவுக்கு வளர்த்து கொண்டு விடும்போது அது மூலதனத்தை விட மூர்க்கத்தனமாகி விடுவதை நான் அறிவேன். மில் முத லாளிகளுக்குள்ள கூர்மதி தொழிலாளர்களுக்கு இருக்கு மானால் அவர்கள் விதிக்கும் நிபந்தனைகளின்படி மில் முதலாளிகள் நடந்து கொள்ளும் நிலை ஏற்படும். ஆனால் தொழிலாளர்களுக்கு அத்தகைய விவேகம் ஒருபோதும் ஏற் படாது. அப்படிப்பட்ட விவேகம் இருக்குமானால் தொழி லாளியே முதலாளியாகி விடுவான். முதலாளிகள் பணத் தின் வலிமையைக் கொண்டு மட்டும் போராடுவதில்லை. அவர்கள் அறிவுத்திறத்தையும் சாமர்த்தியத்தையும் பெற்றி ருக்கிறார்கள்.

"இப்போது நம்முன்னுள்ள கேள்வி இதுதான்: தொழி லாளர்கள் இப்போதுள்ள நிலைமையிலேயே நீடித்து,

ஓரளவு விழிப்புணர்வையும் பெறும்போது அவர்கள் பின் பற்ற வேண்டிய பாதை என்ன? தொழிலாளர்கள் தங்களது எண்ணிக்கைப் பலத்தையோ அல்லது முரட்டுத்தனத்தையோ அதாவது வன்முறையையோ நம்பிக் கொண்டிருப்பது தற் கொலைக்கு ஒப்பானதாகும். இவ்வாறு செய்வதன் மூலம் அவர்கள் நாட்டிலுள்ள தொழில்களுக்கு தீங்குதான் இழைப் பார்கள். இதற்கு மாறாக, அவர்கள் முற்றிலும் நேர்மையான, நியாயமான நிலையை மேற்கொள்வார்களானால், இதன் பொருட்டு கஷ்டநஷ்டங்களையும் அனுபவிக்கத் தயாராக இருப்பார்களேயானால் அப்போது அவர்கள் எப்போதுமே வெற்றிக் கனியைத் துய்ப்பார்கள், அது மட்டுமன்றி தங்கள் முதலாளிகளையே திருத்துவார்கள், தொழில்களை வளர்ப் பார்கள், முதலாளிகளும் தொழிலாளிகளும் ஒரே குடும் பத்தைச் சேர்ந்தவர்கள் போல் இருப்பார்கள்.''

இதே விஷயம் பற்றி, மற்றொரு சந்தர்ப்பத்தில் பேசும்போது அவர் குறிப்பிட்டதாவது[1]:

''இதற்கு முன்னர் வேறு விதமாக இருந்ததில்லை. இந்தியாவின் வரலாறு முதலாளிகளுக்கும் தொழிலாளி களுக்கும் சீர்குலைந்த உறவுகளைக் கொண்ட வரலாறாக இருந்ததில்லை.''

தங்களது பொருளாதார நிலைமையை மேம்படுத்திக் கொள் வதற்கு தொழிலாளர்களுக்கு உதவும் ஓர் ஆயுதம் என்ற முறையில் வேலை நிறுத்தம் பற்றி திரு. காந்தி கொண்டிருந்த கருத்துகள் இங்கு முக்கியமாகக் குறிப்பிடப்பட வேண்டியவை, இது குறித்து திரு. காந்தி பின்வருமாறு கூறுகிறார்.[2]

''எனவே, வெற்றிகரமான பல வேலை நிறுத்தங்களை நடத்தியவன் என்ற முறையில், வேலை நிறுத்தத் தலைவர் களுக்கு வழி காட்டும் பின்கண்ட விதிமுறைகளை மீண்டும் கூறுகிறேன்; இந்தப் பக்கங்களில் இவை ஏற்கெனவே பிரசு ரிக்கப்பட்டிருக்கின்றன:

1. யங் இந்தியா, பிப்ரவரி 23, 1922.
2. யங் இந்தியா, ஆகஸ்டு 11, 1921.

1) உண்மையான குறைகள் ஏதுமின்றி எந்த வேலை நிறுத்தமும் கூடாது.

2) சம்பந்தப்பட்டவர்கள் தமது சொந்த சேமிப்புகளிலிருந்தோ அல்லது பஞ்சு சிக்கெடுத்தல்; நூற்பு, நெசவு போன்ற சில தொழில்களில் தற்காலிகமாக ஈடுபடுவதன் மூலமோ தங்களைப் பராமரித்துக் கொள்ள இயலாதபோது வேலை நிறுத்தம் கூடாது. வேலை நிறுத்தங்கள் பொது மக்களின் நன்கொடைகளையோ அல்லது வேறு அறக் கொடைகளையோ ஒருபோதும் சார்ந்திருக்கலாகாது.

3) வேலை நிறுத்தக்காரர்கள் மாற்றமுடியாத ஒரு குறைந்தபட்சக் கோரிக்கையை முன்வைக்க வேண்டும்; வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவதற்கு முன்னர் அதனை அறிவிக்க வேண்டும்.

''நியாயமான குறைகள் இருந்தபோதிலும், காலவரம்பற்றுத் தாக்குப்பிடித்து நிற்கும் ஆற்றல் வேலை நிறுத்தக்காரர்களுக்கு இருந்தபோதிலும் அவர்களுக்குப் பதிலாக வேலை செய்யக் கூடிய தொழிலாளர்கள் இருப்பார்களேயானால் அந்த வேலை நிறுத்தம் தோல்வியடையக் கூடும். ஆதலால் தனது இடத்தை வேறொருவனைக் கொண்டு எளிதாக நிரப்பிவிட முடியும் என்பதை உணரும் ஒரு புத்திசாலி கூலி உயர்வுக்காகவோ அல்லது வேறு வசதிகளுக்காகவோ வேலை நிறுத்தத்தில் குதிக்க மாட்டான். ஆனால் மனித நேயமும் தேசபக்த மனோபாவமும் படைத்தவன் தனது அண்டை வீட்டுக்காரனின் துயரத்தில் பங்கு கொள்ள விரும்பும்போது, தேவையைவிட சப்ளை அதிகமாக இருந்தாலும் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவான். நான் விவரித்த தன்மை கொண்ட ஒரு வேலை நிறுத்தத்தில் அச்சுறுத்தல், மிரட்டல், தீவைத்தல் போன்றவற்றுக்கு இடமில்லை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. நான் பரிந்துரைத்த சோதனைகளின் அடிப்படையில் பார்க்கும்போது, தங்களுக்கு ஆதரவாக காங்கிரஸ் நிதியையோ அல்லது வேறு எந்தப் பொது நிதிகளையோ வேண்டிப் பெறும்படி வேலை நிறுத்தக்காரர்களுக்கு அவர்களது நண்பர்கள் ஒருபோதும் ஆலோசனை கூற மாட்டார்கள் என்பது தெளிவு. வேலை நிறுத்தக்காரர்களின் பால் உள்ள அனுதாபத்தின் மதிப்பு

அவர்கள் நிதி உதவியை எந்த அளவுக்குப் பெறுகிறார்களோ அந்த அளவுக்குக் குறைந்துவிடும். ஓர் அனுதாப வேலை நிறுத்தத்தின் சிறப்பு அனுதாப வேலை நிறுத்தக்காரர்களுக்கு ஏற்படும் வசதிக் குறைவுகளிலும் அவர்களுக்கு நேரிடும் இழப்பீடுகளிலும்தான் அடங்கியுள்ளது.

பண்ணையாளர்களுக்கும் குத்தகைகாரர்களுக்கும் இடையே யான உறவு குறித்த திரு. காந்தியின் கருத்து யங் இந்தியா பத்திரிகை யின் 1921 மே 18-ஆம் தேதிய இதழில் வெளியிடப்பட்டிருக்கிறது. தங்களுடைய பண்ணையாளர்களுக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்த ஐக்கிய மாகாணங்களின் குத்தகைகாரர்களுக்கு அவர் விதித்த நெறி முறைக் கட்டளைகளின் அடிப்படையில் இது அமைந்துள்ளது.[1] அதில் திரு. காந்தி கூறியிருப்பதாவது:

''ஐ.மா. அரசாங்கம் நடைமுறை வரம்புகளை மீறி வருகிறது; மக்களை அச்சுறுத்தி வருகிறது. அதேசமயம் கிசான்களும் தாங்கள் புதிதாகப் பெற்ற அதிகாரத்தை விவேகமான முறையில் பயன்படுத்த வில்லை. பல ஜமீன்களில் அவர்கள் எல்லை மீறி நடந்து கொண்டிருக் கிறார்கள் என்றும், சட்டத்தைத் தங்கள் கையில் எடுத்துக் கொண் டிருக்கிறார்கள் என்றும், தங்கள் விருப்பப்படி நடந்து கொள்ளாத வர்களிடம் படபடப்பையும் ஆத்திரத்தையும் காட்டியிருக்கிறார் கள் என்றும் கூறப்படுகிறது. அவர்கள் சமூக பகிஷ்காரத்தைத் தவறாகப் பயன்படுத்தி வருகிறார்கள்; அதனை ஒரு வன்முறை ஆயுதமாக மாற்றியிருக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய ஜமீன்தார்களுக்கு தண்ணீர் வழங்கீட்டையும் நாவிதர் போன்றோரின் சேவையையும், இன்னும் சொல்லப்போனால் அவர்களுக்குச் செலுத்த வேண்டிய குத்தகைத் தொகையையும் கூட நிறுத்திவிட்டார்கள் என்றும் கூறப் படுகிறது. கிசான் இயக்கம் ஒத்துழையாமை இயக்கத்திலிருந்து உந்து விசையை, உத்வேகத்தைப் பெற்றுள்ளது; ஆனால் இது அந்த இயக் கத்துக்கு அப்பாற்பட்டது, சுயேச்சையானது. அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய வரிகளை செலுத்தாமல் நிறுத்தி வைக்கும்படி சமயம் வரும்போது கிசான்களுக்கு அறிவுறுத்த நாம் தயங்க மாட்டோம் என்றாலும் ஜமீன்தார்களுக்குச் செலுத்த வேண்டிய குத்தகை பணத்தைச் செலுத்தாதிருக்க ஒத்துழையாமை இயக்கத்தின்

1. அழுத்தமான அச்சுருப் படிவம் மூலத்தில் இல்லை. கிசான் என்பது குத்தகைக்காரரை யும் ஜமீன்தார் என்பது பண்ணையாளரையும் குறிக்கும்.

எந்தக் கட்டத்திலும் நாம் உத்தேசிக்கவில்லை. கிசான் இயக்கம் கிசான்களின் நிலைமையை மேம்படுத்துவதுடனும், ஜமீன்தார்களுக்கும் கிசான்களுக்கும் இடையேயான உறவுகளை வளர்ப்பதுடனும் மட்டுமே நின்று கொள்ள வேண்டும். ஜமீன்தார்களுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தை, அது கருத்துப்பூர்வமானதாக இருந்தாலும் பிசகாது செயல்படுத்த வேண்டும் என்று கிசான்களுக்கு அறிவுரை வழங்கப்பட வேண்டும். ஒரு வழக்கமோ அல்லது எழுத்துப்பூர்வ மான ஒப்பந்தமோ மோசமானதாக இருந்தாலும் வன்முறையின் மூலமோ அல்லது ஜமீன்தார்களைக் கலந்தாலோசிக்காமலோ அதனை நிராகரிக்கக் கூடாது. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஜமீன்தார் களுடன் நேசப்பூர்வமாக விவாதிக்க வேண்டும்; ஓர் உடன்பாட் டிற்கு வருவதற்கு முயல வேண்டும்.''

சொத்துடைமை வர்க்கத்தைப் பகைத்துக் கொள்ள திரு. காந்தி விரும்பவில்லை. அவர்களுக்கு எதிராக ஓர் இயக்கம் நடத்து வதைக்கூட அவர் எதிர்க்கிறார். பொருளாதார சமத்துவக் கோட்பாட் டில் அவருக்கு ஈடுபாடில்லை. சொத்துரிமை வர்க்கத்தைப் பற்றி திரு. காந்தி அண்மையில் குறிப்பிட்டுக் கூறும் போது பொன் முட்டை யிடும் கோழியை அழிப்பதற்குத் தாம் விரும்பவில்லை என்று தெரி வித்தார். உடைமையாளர்களுக்கும் தொழிலாளர்களுக்கும், செல் வந்தர்களுககும் ஏழைகளுக்கும், நிலப்பிரபுக்களுக்கும் குத்தகைக் காரர்களுக்கும், தொழிலதிபர்களுக்கும் ஊழியர்களுக்கும் இடையே யான பொருளாதார முரண்பாட்டைத் தீர்ப்பதற்கு அவர் மிக எளிதான ஒரு வழியைக் கூறுகிறார். அதன்படி, உடைமையாளர்கள் தங்கள் உடைமைகளைப் பறிகொடுக்க வேண்டியதில்லை, மாறாக அவர் கள் தங்களை ஏழைகளின் தர்மகர்த்தாக்களாகப் பிரகடனம் செய்து கொண்டு விட்டால் போதும். இந்த தருமகர்த்தா சொத்து சுய விருப்ப அடிப்படையில் அமைந்தது; ஆன்மீகப் பொறுப்பு மட்டுமே அதற்கு உண்டு.

## III

பொருளாதாரக் கேடுகள் பற்றிய காந்திய ஆய்வில் புதுமை யானது ஏதேனும் உண்டா? காந்தியப் பொருளாதாரம் ஆரோக்கிய மானதா? சாமானிய மனிதனுக்கு, வாழ்க்கை வளமிழந்தவனுக்கு காந்தியம் எத்தகைய நம்பிக்கையை அளிக்கிறது? அவனுக்கு ஒரு மேம்பட்ட வாழ்வை, மகிழ்ச்சி பொங்கும் வாழ்வை, பண்பட்ட வாழ்வை, சுதந்திர வாழ்வை, இல்லாமையிலிருந்து விடுபடும்

சுதந்திரம் மட்டுமன்றி முன்னேறும் சுதந்திரத்தை, அவனுக்குள்ள ஆற்றல்கள் மேலே மேலே உயர்ந்து, மிளிர்ந்து, வளர்ந்து செல்லும் சுதந்திரத்தை வழங்க அது உத்தரவாதம் தருகிறதா?

பொருளாதார சீர்கேடுகளுக்கெல்லாம் எந்திரங்களும் நவீன நாகரிகமும்தான் காரணம் என்று காந்திய ஆய்வு கூறுகிறது. இதில் புதுமை ஒன்றுமில்லை. நிர்வாகமும் கட்டுப்பாடும் ஒருசிலரது கைகளில் குவிவதற்கு எந்திரங்களும் நவீன நாகரிகமும் உதவுகின் றன; எல்லா மூலப் பொருள்களும் தொழிற்சாலைகளும் ஆலை களும் மேலும் ஒரு சிலரது கைகளில் குவிவதற்கு வங்கிகளும் கடன் வசதிகளும் துணைபுரிகின்றன; தங்கள் குச்சில் குடில்களிலிருந்து ஆயிரக்கணக்கான மைல் தொலைவிலுள்ள பிரம்மாண்ட தொழில் களுக்கு ஆதாரபலமாக இருக்கும் பொருட்டு இந்தத் தொழிற்சாலை களிலும் ஆலைகளிலும் வேலை செய்யும் லட்சோபம் லட்சம்பேர் தங்களது கண்ணீரையும் செந்நீரையும் சிந்த வேண்டியிருக்கிறது; எந்திரங்களும் நவீன நாகரிகமும் யுத்தம் சாவு கொள்வதை விட அதிகமானோரை மரண கெபிக்கு அனுப்புகின்றன, எண்ணற்றோரை ஊனமாக்குகின்றன, முடமாக்குகின்றன; பெரிய பெரிய நகரங்கள் வளர்ந்து அவற்றின் புகையம், தூசியும், அழுக்கும், காது செவிடு படும் இரைச்சலும், அசுத்தக் காற்றும், போதிய சூரிய வெளிச்சமில் லாமையும், திறந்தவெளி வாழ்க்கை இன்மையும், நாற்றமெடுக் கும் சேரிகளும், அவற்றின் குப்பை கூளங்களும், பரத்தையர் விடுதி களும் இன்னும் பலவும் விதம் விதமான கொடிய நோய்களைப் பரப்புகின்றன, உடல் நலத்தைப் பெரிதும் சீர்குலைக்கின்றன. இவை எல்லாம் காந்தியம் கூறும் கேட்டுக்கேட்டுக் காது புளித்துப் போன பழைய வாதங்கள். இவற்றில் புதியது எதுவும் இல்லை. இன்னும் சொல்லப் போனால் ரூசோ, ரஸ்கின், டால்ஸ்டாய் போன்றோரின் கருத்துக்களையே காந்தியம் கிளிப்பிள்ளைபோல் திரும்பத் திரும்பக் கூறுகிறது.

காந்தியத்துக்கு ஆதார அடிப்படையாக அமைந்துள்ள கருத்து கள் வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்டவை, நாகரிகம் முதிர்ச்சியடை யாத காலத்திற்குரியவை. இயற்கை வாழ்க்கைக்கு, விலங்கின வாழ்க் கைக்குத் திரும்பிச் செல்லுவதை அது குறிக்கிறது. இக்கருத்துகளின் ஒரே சிறப்பு அவை எளிமையானவை என்பதுதான். இந்தக் கருத் துக்களால் கவரப்படுகின்ற எதையும் எளிதில் நம்பிவிடுகின்ற ஏராள மானோர் எப்போதம் இருப்பார்களாதலால் இத்தகைய எளிய கருத் துகள் மடிவதில்லை; அது மட்டுமல்ல இவற்றைப் பிரசாரம் செய்யக்

கூடிய சில அப்பாவிகள் எப்போதும் இருக்கவே செய்வார்கள். எனி னும் மக்களின் இயலறிவுத்திறன், உள்ளார்ந்த உந்துணர்வு - இது தவறான வழியில் செல்லுவது அரிது - இக்கருத்துக்கள் பயனற்றவை என்பதை இனம் கண்டு விடுகிறது; முன்னேற்றத்தை நாடும் சமு தாயம் இவற்றை நிராகரிப்பதே சாலச்சிறந்தது என்ற முடிவுக்கு வந்து விடுகிறது.

காந்தியப் பொருளாதாரம் மிகவும் தவறானது. எந்திரங்களும் நவீன நாகரிகமும் பல தீமைகளைத் தோற்றுவித்துள்ளன என்பதை ஒப்புக் கொள்ளலாம். ஆனால் இந்தத் தீமைகள் அவற்றுக்கு எதிரான வாதமாகாது. ஏனென்றால் இந்தத் தீமைகளுக்கு எந்திரங்களும் நவீன நாகரிகமும் காரணமல்ல. தனிச் சொத்துரிமையையும் சொந்த சுயநல ஆதாயங்களில் நாட்டம் கொள்வதையும் புனிதமானவையாக, மீற வொண்ணாதவையாக ஆக்கியுள்ள தவறான சமூக அமைப்பே இந்தத் தீமைகளுக்கெல்லாம் காரணம். எந்திரங்களும் நாகரிகமும் ஒவ்வொருவரையும் பயனடையச் செய்யவில்லை என்றால் இதற் கான பரிகாரம் எந்திரங்களையும் நாகரிகத்தையும் கண்டனம் செய் வதில் அடங்கியிருக்கவில்லை; மாறாக, இவற்றின் பலன்களை ஒரு சிலர் மட்டும் அபகரித்துக் கொண்டுவிடாமல், அந்தப் பலன்கள் எல்லோருக்குமே கிட்டச் செய்யும் வகையில் சமுதாயத்தை மாற்றி அமைப்பதில்தான் அந்தப் பரிகாரம் பொதிந்துள்ளது.

காந்தியத்தில் சாமானிய மனிதனுக்கு எதிர்காலம் ஏது மில்லை. அது மனிதனை ஒரு மிருகமாகத்தான் பாவிக்கிறது. உட லமைப்பு, உணவு வகை, இனப்பெருக்கச் செயல்பாடுகளின் ஒரு சில அம்சங்களில் மனிதனுக்கும் விலங்குகளுக்கும் ஓரளவு ஒற்றுமை இருக்கக் கூடும் என்பது உண்மையே. ஆனால் இவையே மனித னுக்கே உரிய தனித்த செயல்பாடுகளாக மாட்டா. மனிதனுக்கே உரிய தனித்தன்மை வாய்ந்த, தனிச்சிறப்பு கொண்ட செயல்பாடு அவனுக்குள்ள பகுத்தறிவேயாகும். மனிதன் எதையும் நுணுகிக் காண் பதற்கும், உள்ளாராய்வதற்கும், சிந்திப்பதற்கும், ஆராய்ச்சி செய்வ தற்கும் பிரபஞ்சத்தின் வனப்புகளை, அழகுகளை, நேர்த்திகளை, சிறப்புகளை கண்டுணர்வதற்கும், தனது வாழ்க்கையை வளமையும் செழுமையும் படுத்திக் கொள்வதற்கும், தனது வாழ்க்கையின் கீழான விலங்கு அம்சங்களைக் கட்டுப்படுத்திக் கொள்வதற்கும் பகுத்தறிவு உதவுகிறது. இவ்வாறு மனிதன் உயிரின அமைப்பில் மிக உன்னத மான, கொடுமுடியான இடத்தை வகிக்கிறான். இது உண்மை யாயின் இதிலிருந்து தோன்றும் முடிவு என்ன? அந்த முடிவு இதுதான்:

ஒரு விலங்கு அதன் உடல் பசிகளைத் தீர்த்துக் கொண்டதும் அதன் வாழ்க்கையின் இறுதிக் குறிக்கோளை அடைந்துவிடுகிறது; அதனால் மனிதன் தனது மனத்தை முழு அளவுக்குப் பண்படுத்திக் கொள்ளாதவரை மனித வாழ்க்கையின் இறுதிக் குறிக்கோள் பூர்த்தியடைந்ததாகாது. சுருக்கமாகக் கூறினால் விலங்கை மனிதனிடமிருந்து பிரித்துக் காட்டுவது பண்பாடு அதாவது கலாசாரம். விலங்குக்கு கலாசாரம் சாத்தியமில்லை; ஆனால் மனிதனுக்கு அது இன்றியமையாதது. எனவே, ஒவ்வொருவரும் ஒரு பண்பட்ட வாழ்க்கை நடத்துவதைச் சாத்தியமாக்குவது மனித சமுதாயத்தின் குறிக்கோளாக இருக்க வேண்டும்; அதாவது வேறு விதமாகக் கூறினால் மனதைப் பண்படுத்துவது என்பது வெறும் உடல் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதிலிருந்து வேறுபட்ட ஒன்றாக இருக்க வேண்டும். இது எவ்வாறு சாத்தியமாகும்?

சமுதாயத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, தனி நபரை எடுத்துக் கொண்டாலும் சரி ஏனோதானோ என்று வாழும் சாதாரண வாழ்க்கைக்கும் பெருமதிப்பு மிக்க வாழ்க்கைக்கும் எப்போதுமே ஓர் இடைவெளி இருந்து வருகிறது. ஒருவர் பெருமை சான்ற வாழ்க்கை வாழ வேண்டுமானால் முதலில் அவர் வாழ்ந்தாக வேண்டும். ஏதேனும் பிழைப்பாதாரத்தைத் தேடிக் கொண்டு, ஏனோ தானோவென்று சாதாரண வாழ்க்கை வாழ்வதற்கே நிறைய நேரமும் சக்தியும் செலவிட வேண்டியிருப்பதன் காரணமாக மனித இயல்புக்கே உரிய தனித்தன்மை வாய்ந்த செயல்பாடுகளுக்கு, அதாவது கலாசார வாழ்க்கை வாழ்வதற்குத் தேவைப்படும் நேரமும் சக்தியும் குறைந்துவிடுகின்றன. அப்படியானால் கலாசார வாழ்க்கை வாழ்வதை எப்படிச் சாத்தியமாக்குவது? போதிய ஓய்வுநேரம் இருந்தாலொழிய இது சாத்தியமல்ல. ஏனென்றால் ஓய்வுநேரம் இருந்தால்தான் ஒருவர் கலாசார வாழ்க்கையில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள முடியும். மனித சமுதாயம் எதிர்நோக்கும் பிரச்சினைகளில் எல்லாம் முக்கியமான பிரச்சினை ஒவ்வொருவருக்கும் எவ்விதம் ஓய்வு நேரத்தை ஒதுக்குவது என்பதேயாகும். ஓய்வுநேரம் என்பது எதைக் குறிக்கிறது? ஓய்வு நேரம் என்பது வாழ்க்கையின் உலகாயதத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்கு அவசியமான உழைப்பையும் முயற்சியையும் குறைப்பதைக் குறிக்கிறது. சரி, ஓய்வு நேரத்தை எவ்வாறு பெறுவது? மனிதனது தேவைகளைப் பூர்த்தி செய்யக் கூடிய பண்டங்களை உற்பத்தி செய்வதற்குத் தேவையான உழைப்பைக் குறைக்கும் ஏதேனும் வழிமுறைகளைக் கண்டுபிடித்தாலொழிய

ஓய்வு நேரம் என்பது முற்றிலும் சாத்தியமில்லை. இத்தகைய உழைப்பை எவற்றால் குறைக்க முடியும்? மனிதனது இடத்தை எந்திரங்கள் நிரப்பினால்தான் இது சாத்தியம். ஓய்வு நேரத்துக்கு வகை செய்வதற்கு வேறு எந்த மார்க்கமும் இல்லை. எனவே, விலங்கு வாழ்க்கை வாழ்வதிலிருந்து கலாசார வாழ்க்கை வாழ்வதைச் சாத்தியமாக்குவதற்கும் எந்திரங்களும் நவீன நாகரிகமும் இன்றியமையாதவை என்பது தெளிவு. எந்திரங்களையும் நவீன நாகரிகத்தையும் ஒருவர் கண்டிக்கிறார் என்றால் அவற்றின் நோக்கத்தையும், மனித சமுதாயம் அடைய முயலும் இறுதிக் குறிக்கோளையும் அவர் புரிந்து கொள்ளவில்லை என்றுதான் அதற்குப் பொருள்.

ஜனநாயகத்தை தனது குறிக்கோளாக ஏற்றுக் கொள்ளாத ஒரு சமுதாயத்துக்கு வேண்டுமானால் காந்தியம் பொருத்தமானதாக இருக்கக்கூடும். ஜனநாயகத்தில் நம்பிக்கை கொள்ளாத ஒரு சமுதாயம் எந்திரங்களின் பாலும் அவற்றை ஆதார அடிப்படையாகக் கொண்ட கலாசாரத்தின் பாலும் அலட்சிய மனோபாவத்தை மேற்கொள்ளக்கூடும். ஆனால் ஒரு ஜனநாயக சமுதாயம் அவ்வாறு செய்ய முடியாது. முந்தைய சமுதாயம் ஒரு சிலருக்கு ஏராளமான ஓய்வு நேரத்துடன் கூடிய கலாசார வாழ்க்கையையும் மிகப் பலருக்கு கடும் முயற்சியும் மட்டுமீறிய உழைப்பும் கொண்ட சிரமமிக்க வாழ்க்கையையும் வழங்குவதோடு திருப்தியடையக் கூடும். ஆனால் ஜனநாயக சமுதாயமோ குடிமக்கள் ஒவ்வொருவருக்கும் மிகுந்த ஓய்வுநேரத்துடன் கூடிய கலாசார வாழ்க்கையை உத்தரவாதம் செய்தாக வேண்டும். மேற்கண்ட ஆய்வு சரியானதாக இருக்குமானால், எந்திரங்கள், மேலும் மேலும் எந்திரங்கள், நாகரிகம், மேலும் மேலும் நாகரிகம் என்பதே ஒரு ஜனநாயக சமுதாயத்தின் கோட்பாட்டுக் கோஷமாக இருக்க வேண்டும் என்பது தெள்ளத் தெளிவு. ஆனால் காந்தியத்தின் கீழோ சாமானிய மனிதன் அற்ப சொற்ப ஊதியத்துக்காக ஓய்வு ஒழிச்சலின்றி, இடைவிடாது மாடாக உழைத்து ஓடாகத் தேய வேண்டும், பேசும் ஒரு மிருகமாக இருந்து வர வேண்டும். சுருக்கமாகக் கூறினால் மிகப் பெரும்பாலான மக்களைப் பொறுத்தவரையில் இயற்கைக்கு மீண்டும் திரும்புவோம் என்ற காந்தியத்தின் கோஷம் ஆடைகள் அணியாத பழைய நிலைக்குத் திரும்புவோம், அழுக்கடைந்த பழைய தோற்றத்துக்கும் குப்பை கூளங்களுக்கும் திரும்புவோம், இல்லாமைக்கும் கல்லாமைக்கும் திரும்புவோம் என்பதையே குறிக்கும்.

வெவ்வேறான சமயவினை முறைகளைப் பொறுத்து வாழ்வின் பிரிவினையையும், சமுதாயம் தனித்தனி வர்க்கங்களாகப் பிரிந்திருப்பதையும் ஒரே வீச்சில் ஒழித்துக்கட்டிவிட முடியாது. எத்தனை எத்தனையோ, சமூக, பொருளாதார மாற்றங்கள் ஏற்பட்டிருந்த போதிலும், சட்டப்பூர்வமான பண்ணை அடிமை வாழ்க்கையும் அடிமைத்தனமும் அகற்றப்பட்டிருந்த போதிலும், ஜனநாயகக் கண்ணோட்டம் எங்கெங்கும் படர்ந்து பரவியிருந்த போதிலும், புத்தகங்கள், செய்திப் பத்திரிகைகள், சுற்றுப்பயணம், பள்ளிக்கூடங்களிலும் தொழிற்சாலைகளிலும் கலந்துரையாடல்கள் போன்றவற்றின் மூலம் விஞ்ஞானமும் பொதுக்கல்வியும் விரிவடைந்திருந்த போதிலும், சமுதாயத்தில் படித்த வர்க்கத்துக்கும் படிக்காத வர்க்கத்துக்கும், நிறைய ஓய்வுநேரமுள்ள வர்க்கத்துக்கும் அல்லும் பகலும் அயராது உழைக்கும் வர்க்கத்துக்கும் இடையே இன்னும் பிளவு இருந்து கொண்டுதானிருக்கிறது.

ஆனால் காந்தியம் வெறும் கோட்பாட்டளவான வர்க்க வேறுபாடுகளுடன் திருப்தியடைந்து விடவில்லை. காந்தியம் வர்க்கக் கட்டமைப்பை வலியுறுத்துகிறது. சமுதாயத்தின் வர்க்கக் கட்டமைப்பையும், அதேபோல் வருமானக் கட்டமைப்பையும் அது புனிதமானவையாகக் கருதுகிறது; இவற்றின் விளைவாக ஏற்படும் ஏழை பணக்காரன், உயர்ந்தவன் தாழ்ந்தவன், முதலாளி தொழிலாளி போன்ற பாகுபாடுகளை சமூக ஒழுங்கமைப்பின் நிரந்தர அம்சங்களாகவும் அது பாவிக்கிறது. சமூக விளைவுகள் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது இதைவிடக் கேடு பயக்கக் கூடியது வேறு எதுவும் இல்லை என்றே கூறலாம். மனோதத்துவ ரீதியில் நோக்கும் போது, வர்க்கக் கட்டமைப்பானது இரு வர்க்கங்களுக்குமே தீங்கு விளைவிக்கக்கூடிய வினைபயன்களை செயற்படுத்துகிறது. சலுகை பெற்ற வர்க்கமும் ஆட்பட்ட வர்க்கமும் ஒன்றுபடக்கூடிய பொது அம்சம் ஏதுமில்லை, வாழ்க்கையின் நம்பிக்கைகளையும் அனுபவங்களையும் பரஸ்பரம் பரிமாறிக் கொள்ளும் வாய்ப்பு ஏதுமில்லை. இந்தப் பிரிவினையால் கீழ்ப்பட்ட வர்க்கம் அனுபவிக்க வேண்டியுள்ள சமூக, தார்மிகத் தீமைகள் கண்கூடானவை, அதுஅவர்களை அடிமைகளாகப் பயிற்றுவிக்கிறது; ஓர் அடிமை மனப்பான்மையிலிருந்து உருவாகக் கூடிய எல்லா மனோதத்துவ உணர்வுகளையும் தோற்றுவிக்கிறது. ஆனால் அதேசமயம் சலுகை பெற்ற வர்க்கமும் தாக்கத்தக்கு உள்ளாகிறது; அந்தத் தாக்கங்கள் உலகாயத ரீதியில் மட்டுப்பட்டவையாகவும், குறைந்த அளவே காணத்தக்கவையாக இருந்தாலும் அவை எதார்த்தமாகவும் வர்க்க அமைப்பின்

விளைவாக ஏற்படும் தனிமையும் ஒதுக்க நிலையும் சலுகை பெற்ற வர்க்கங்களிடம் சமூக விரோதக் கும்பலுக்குரிய மனநிலையை தோற்றுவிக்கின்றன. அவை, தனக்கே உரிய சொந்த நலன்கள் இருப்பதாக உணர்கின்றன; எல்லோருக்கும் எதிராக, அரசின் நலன்களுக்கு எதிராகவும் கூட அவற்றைப் பாதுகாப்பதை ஒரு மேம்பட்ட பணியாகக் கருதுகின்றன. இத்தகைய போக்கு அவற்றின் கலாசாரத்தை வறண்டதாக, வளமற்றதாக ஆக்குகிறது; அவற்றின் கலையை போலியானதாக ஆக்குகிறது; அவற்றின் செல்வத்தை வெறும் பகட்டானதாக ஆக்குகிறது; அவற்றின் பழக்கவழக்கங்களை மனநிறைவற்றவையாக ஆக்குகிறது. நடைமுறை எதார்த்தத்தோடு கூற வேண்டுமானால் ஒரு வர்க்கக் கட்டமைப்பில் ஒருபுறம் வெற்றாரவாரம், டம்பம், தற்பெருமை, இறுமாப்பு, அகந்தை, திமிர், பேராசை, சுயநலம் போன்றவை இருப்பதைப் பார்க்கிறோம்; இன்னொரு புறம் பாதுகாப்பின்மை, கொடிய வறுமை, அவமதிப்பு, இழிவு, சுதந்திர இழப்பு, தன்னம்பிக்கையின்மை, சுயமரியாதை இன்மை போன்றவை நிலவுவதைக் காண்கிறோம். ஜனநாயக சமுதாயம் இத்தகைய தீய விளைவுகள் குறித்துப் பாராமுகமாக இருக்க முடியாது. ஆனால் காந்தியமோ இந்த விபரீத விளைவுகளைப் பற்றி அணுவளவும் கவலைப்படவில்லை. வெறும் வர்க்க வேறுபாடுகளுடன் காந்தியம் திருப்தியடையவில்லை என்று கூறுவது மட்டும் போதாது. வர்க்கக் கட்டமைப்பை காந்தியம் ஆதரிக்கிறது என்று கூறுவது மட்டும் போதாது. காந்தியம் இதற்கு மேலாகவும் எதிர் பார்க்கிறது. காந்தியம் விரும்புவது பொலிவிழந்துபோன, வளமற்ற, கவர்ச்சியற்ற, தளர்ந்து நலிந்து போன, வெறும் உணர்ச்சி அளவிலேயான, எலும்புக்கூடு போன்ற வர்க்கக் கட்டமைப்பை அல்ல உயிர்த்துடிப்பு மிக்க ஒரு சமயம் போன்று செயல்படக்கூடிய வர்க்கக் கட்டமைப்பையே அது விரும்புகிறது. இதில் வியப்படைவதற்கு எதுவுமில்லை. ஏனென்றால் காந்தியத்தில் வர்க்கக் கட்டமைப்பு என்பது தற்செயலான நிகழ்ச்சி அல்ல. அது அதனுடைய அதிகாரப் பூர்வமான சித்தாந்தம். பணக்கார வர்க்கங்கள் தங்கள் சொத்துக்களை ஏழைகளின் தர்ம சொத்துகளாக வைத்திருப்பதற்கு காந்தியம் முன்வைத்துள்ள தர்மகர்த்தா முறை மிகவும் கேலிக்கும் நகைப்புக்குமிடமானதாகும். இதே கருத்தை வேறு எவரேனும் வெளியிட்டிருந்தால் வாழ்க்கையின் கண்கண்ட எதார்த்தங்களை அறியாத கடைந்தெடுத்த அறிவிலி என்று எள்ளி நகையாடியிருப்பார்கள்; சொத்துடைமை வர்க்கங்களுக்கு அறநெறிகளை, ஒழுக்கத் தத்துவத்தை பவ்யமாக, பக்குவமாக எடுத்துரைத்தால் வர்க்கக் கட்டமைப்பு தனக்கு வழங்கியுள்ள பிரம்மாண்டமான அதிகாரங்களை

கீழ்மட்ட வர்க்கங்களுக்கு எதிராகத் தவறான முறையில் பயன்படுத் தாதபடி அந்த வர்க்கங்களைக் கட்டுப்படுத்த முடியும் என்று கீழ் மட்ட வர்க்கங்களிடம் நயவஞ்சகமாகக் கூறி அவற்றை ஏமாற்றும் எத்தர் என்று கடுமையாக சாடியிருப்பார்கள். ஏனென்றால் இந்தச் சொத்துடைமை வர்க்கத்தினர் தணியாத பண ஆசை, ஆதாய வெறி கொண்டவர்கள், எல்லையற்ற அகந்தை கொண்டவர்கள், கோடானு கோடி உழைக்கும் மக்களுக்கு இந்த உலகை கண்ணீர்த் தடாக மாக, இரத்தக்குளமாக ஆக்கியவர்கள், இனி எப்போதும் இவ்வாறே செய்யக்கூடிய கல்நெஞ்சர்கள்.

காந்தியத்தின் சமூகக் குறிக்கோள் சாதியாகவோ அல்லது வருணமாகவோ இருக்கலாம். இவற்றில் எது அதன் குறிக்கோள் என்று திட்டவட்டமாகக் கூறுவது கடினம். என்றாலும் காந்தியத் தின் சமூகக் குறிக்கோள் ஜனநாயகமல்ல என்பதில் எத்தகைய ஐயப் பாட்டுக்கும் இடமில்லை. ஏனென்றால் சாதியை எடுத்துக் கொண் டாலும் சரி, வருணத்தை எடுத்துக் கொண்டாலும் சரி இவை இரண் டுமே அடிப்படையில் ஜனநாயகத்துக்கு எதிரானவை. சாதி அமைப்பு முறையை காந்தியம் வலுவாகவும் நேர்மையாகவும் ஆத ரித்திருந்தால் அது வேறு விஷயம். ஆனால் சாதி அமைப்பு முறைக்கு அவர் அளிக்கும் ஆதரவு நினைத்துப் பார்க்க முடியாத அர்த்தமற்ற, ஆடம்பர ஆர்ப்பாட்டமான வெறும் சொற்சிலம்பமே தவிர வேறு அல்ல. சாதி அமைப்பு முறைக்கு ஆதரவாக திரு. காந்தி முன்வைக்கும் வாதங்ளைப் பரிசீலித்துப் பாருங்கள்; அவற்றில் ஒவ்வொன்றும் புறப்பகட்டானதாக இருப்பதைக் காணலாம். இந்த வாதங்களை எல்லாம் ஏற்கெனவே இந்த இயலின் தொடக்கத்தில் சுருக்கமாகக் கூறியிருக்கிறோம்.

முதல் மூன்று வாதங்கள் இரங்கத்தக்கவை. ஏனைய சமுதாயங் கள் மடிந்து விட்டபோது அல்லது மறைந்து விட்டபோது இந்து சமுதாயத்தால் மட்டுமே தாக்குப்பிடித்து நிற்க முடிந்திருக்கிறது என்ற வாதம் எவ்வகையிலும் பாராட்டதலுக்குரியது அல்ல. அது உயிர்பிழைத்ததற்குக் காரணம் சாதி அல்ல; மாறாக, இந்துக்களை வெற்றி கொண்ட அயல்நாட்டினர் அவர்களை ஒட்டுமொத்தமாகக் கொன்று குவிக்க வேண்டிய அவசியமுமில்லை என்று கருதியதே அதற்குக் காரணம், ஏதோ உயிர்பிழைத்திருப்பதில் எந்தக் கௌர வமும் இல்லை. எந்த அடிப்படையில் உயிர் பிழைத்தார்கள் என்பது தான் முக்கியம். நிபந்தனையின்றி சரணடைவதன் மூலம் ஒருவர் உயிர் பிழைக்கலாம். கோழைத்தனமாகப் பின்வாங்குவதன் மூலம்

ஒருவர் உயிர் பிழைக்கலாம். நிகரற்ற நெஞ்சுரத்தோடு எதிர்த்துப் போராடுவதன் மூலமும் ஒருவர் உயிர் பிழைக்கலாம். இவற்றில் எந்த அடிப்படையில் இந்துக்கள் உயிர் பிழைத்தார்கள்? பகைவர்களை எதிர்த்து வீரத்தோடு தீரத்தோடு போராடி அவர்களை முறியடித்து உயிர்பிழைத்தார்கள் என்றால் அதற்கான பெருமையை திரு. காந்தி கூறும் சாதி அமைப்புக்குத் தரலாம். ஆனால் இந்துக்களின் வரலாறு இழிவினும் இழிவான சரணாகதி வரலாறாகவே இருந்து வந்திருக் கிறது. ஏனைய பல நாட்டினரும் தங்கள் படையெடுப்பாளர்களிடம் சரணடைந்திருக்கிறார்கள் என்பது உண்மையே. ஆனால் அவர்கள் விஷயத்தில் அந்நிய ஆட்சியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்த பிறகே அவர்களது சரணாகதி நிகழ்ந்திருக்கிறது. ஆனால் இந்துக்கள் அந்நியப் படையெடுப்பாளர்களின் தாக்குதலை ஒருபோதும் தாக்குப்பிடித்து நின்றதில்லை. அது மட்டுமல்ல, அந்நிய நுகத்தடியைத் தூக்கியெறி வதற்கு ஓர் எழுச்சியை, கிளர்ச்சியை, கலகத்தைக் கிளர்த்தி விடும் ஆற்றல் தங்களுக்கு இருக்கிறது என்பதைக் கூட அவர்கள் ஒருபோதும் வெளிப்படுத்தியதில்லை. அதற்கு மாறாக, அடிமைத்தனத்தில் சுக போகம் காணவே அவர்கள் முயன்று வந்திருக்கின்றனர். இவ்வகை யில், இந்துக்களின் இந்தப் பரிதாபகரமான, நிராதரவான நிலை மைக்கு சாதி அமைப்பு முறையே முற்றிலும் காரணம் என்றும் வாதிட முடியும்.

பத்தி 4-ல் கூறப்படும் வாதம் எடுத்த எடுப்பில் சரியானதாகத் தோன்றலாம். ஆனால் தொடக்கக் கல்வியைப் பரப்புதல், தகராறு களைத் தீர்த்து வைத்தல் போன்ற பணிகளைச் செய்வதற்கு சாதி தான் ஒரே தகுதியான அமைப்பு என்று கூற முடியாது. உண்மையில் இத் தகைய பணிகளை ஆற்றுவதற்கு சாதி மிக மோசமான சாதனம் என்று அநேகமாகக் கூறலாம். இதனை எளிதாக வசப்படுத்தவும் சுலபமாக ஊழலுக்கு உட்படுத்தவும் முடியும். ஏனைய நாடுகளில் சாதி அமைப்பு முறை இல்லாதபோதிலும் இந்தியாவை விட அங்கு இந்தப் பணிகள் திறம்படச் செய்யப்பட்டுவருகின்றன. 'படைப் பிரிவுகளை உருவாக்குவதற்கு சாதியைப் பயன்படுத்தும் விஷ யத்தைப் பொறுத்தவரை அது முற்றிலும் விசித்திரமான கற்பனை யாகும். சாதி அடிப்படையில் தொழில் செய்வது என்பது நினைத்துப் பார்க்க முடியாத ஒன்றாகும். திரு. காந்தியின் சொந்த மாகாணமான குஜராத்தில் எந்த ஒரு சாதியும் எக்காலத்திலும் ஒரு படைப்பிரிவை உருவாக்கியதில்லை என்பதை அவரே அறிவார். இப்போதைய உலக யுத்தத்திலும் அது அவ்வாறு செய்யவில்லை. கடந்த உலகப்

போரிலும் இது நடைபெறவில்லை. இத்தனைக்கும் அச்சமயம் திரு. காந்தி படைக்கு ஆள் சேர்க்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஏஜண்டாக குஜராத் முழுவதிலும் சுற்றுப்பயணம் செய்தும்கூட எதுவும் செய்ய முடியவில்லை. உண்மையில் சாதி அமைப்பின் கீழ் படைக்குப் பொது ஆள் திரட்டும் பணியைச் செய்வது சாத்தியமல்ல; ஏனென் றால் சாதி அமைப்பு முறையின்படி ஒவ்வொருவரும் அவ ரவரது சாதிக்குரிய தொழிலைத்தான் செய்ய முடியும்.

பத்திகள் 5 மற்றும் 6ல் இடம் பெற்றுள்ள வாதங்கள் அபத்த மானவையாகவும் அருவருக்கத்தக்கவையாகவும் உள்ளன. பத்தி 5ல் காணப்படும் வாதத்தை ஒரு சிறந்த வாதம் என்று எவ்வகை யிலும் கூற முடியாது. குடும்பம் என்பது ஓர் இலட்சிய அமைப்பு என்பதிலும், அக்குடும்ப உறுப்பினர்கள் தங்களுக்குள் திருமணம் செய்து கொள்ளாவிட்டாலும் ஒவ்வொரு உறுப்பினரும் பரஸ்பரம் மற்ற உறுப்பினருடன் பந்தபாசத்துடன் நடந்து கொள்கின்றனர் என் பதிலும் ஐயமில்லை. வைஷ்ணவக் குடும்பத்தில் குடும்பத்தினர் ஒன்றாக அமர்ந்து உணவு அருந்துவதில்லை என்றாலும், அவர்கள் பரஸ்பரம் ஒருவரிடம் ஒருவர் பாசமும் அன்பும் வைத்திருக்கின் றனர் என்பதும் உண்மையே. இவை எல்லாம் எதை நிரூபிக்கின் றன? சகோதரத்துவத்தை நிலைநாட்டுவதற்கு ஒன்றாக அமர்ந்து உண்பதும், கலப்புத் திருமணமும் அவசியமில்லை என்பதை இது நிரூபிக்கவில்லை. சகோதரத்துவத்தை நிலைநாட்டுவதற்கு குடும்பப் பிணைப்பு உணர்வு போன்ற வேறு வழிமுறைகள் இருக்கும்போது ஒன்றாக அமர்ந்து உண்பதும், கலப்புத் திருமணமும் அவசிய மில்லை என்பதையே இது மெய்ப்பிக்கிறது. சாதி அமைப்பு முறை யில் இருப்பது போன்று கட்டுப்பாடுகள் ஏதும் இல்லாத போது கலப்புத் திருமணமும், ஒன்றாக அமர்ந்து உண்பதும் முற்றிலும் அவசியம். குடும்பத்துக்கும் சாதிக்கும் இடையே ஒப்புமை இல்லை. பல்வேறு சாதியினர் ஒன்றாக அமர்ந்து உண்பதும், சாதிவிட்டுச் சாதி திருமணம் செய்து கொள்வதும் அவசியம்; ஏனென்றால் குடும் பத்தினரை ஒன்றாக இணைக்கக்கூடிய இதர பல அம்சங்கள் இருப்பது போன்று, பல்வேறு சாதிகளையும் பிணைக்கக்கூடிய இதர வழிமுறை கள் ஏதும் இல்லை. ஒன்றாக அமர்ந்து உண்பதையும் கலப்புத் திரு மணத்தையும் தடை செய்ய வேண்டும் என்று வலியுறுத்தி இருப் பவர்கள் அதனை ஒப்பீட்டு மதிப்புகள் கொண்ட ஒரு பிரச்சினை யாகவே எடுத்துக் கொண்டுள்ளனர். அவர்கள் அதனை முழுமை யான மதிப்புகள் கொண்ட ஒரு பிரச்சினையாக என்றுமே உயர்த்திய

தில்லை. திரு. காந்திதான் இதனை முதலில் செய்தவர். ஒன்று கலந்து உண்பது நன்மை பயக்கும் என்றாலும் அது மோசமானது; அதனைக் கைக்கொள்ளக்கூடாது. ஏன்? ஏனென்றால் இயற்கைக் கடன்களை முடிப்பது எவ்வளவு அருவருப்பானதோ அவ்வளவு அருவருப் பானது சாப்பிடுவதும்! சாதி அமைப்பு முறைக்கு முட்டுக்கொடுத்து எத்தனையோ பேர் அதனை ஆதரித்திருக்கிறார்கள். ஆனால் அதனை ஆதரிப்பதற்கு இத்தகைய அசாதாரணமான வாதம் முன்வைக்கப் படுவதை இப்போதுதான் முதல் தடவையாகக் காண்கிறேன். இதைப் பார்த்து ''திரு. காந்தியிடமிருந்து எங்களைக் காப்பாற்றுங்கள்'' என்று சனாதனிகர் கூட பிரலாபிக்கக்கூடும். திரு. காந்தி எத்தகைய வெறி பிடித்த இந்து என்பதையே இது காட்டுகிறது. சனாதனிகளான இந்துக் களிலும் மிகவும் சனர்தனிய இந்துக்களையே அவர் விஞ்சிவிட் டார். குகைளில் வாழ்ந்த பழங்கற்கால மனிதனின் வாதம் என்று இதனைக் கூறுவது கூடப் போதாது. சித்த சுவாதீனமில்லாத ஒரு மனிதனின் வாதம் என்றுதான் இதனை உண்மையில் கூறவேண்டும்.

சாதி அமைப்பு முறைக்கு ஆதரவாக பத்தி 7-ல் முன்வைக்கப் பட்டிருக்கும் வாதம் ஒழுக்கத்தை மேம்படுத்தும் கண்ணோட்டத் திலிருந்து பார்க்கும்போது அத்தனை தகைமை சான்றதாக இல்லை. ஒருவன் தன் சாதியைச் சேராத பெண்ணைக் கொண்டு தனது காம இச்சையை நிறைவேற்றிக் கொள்வதை சாதி அமைப்பு முறை தடை செய்கிறுது என்பதில் ஐயமில்லை, அதே போன்று ஒருவன் தனது சாதியைச் சேராதவனது வீட்டில் சமைத்த உணவை உண்டு சுவை மிக்க உணவின் மீது தனக்குள்ள ஆசையை நிறைவேற்றிக் கொள் வதையும் சாதி அமைப்பு முறை தடை செய்கிறது என்பதிலும் சந்தேக மில்லை. சில கட்டுப்பாடுகளை அவற்றில் அர்த்தமிருக்கிறதா, இல்லையா என்று கவனிக்காது கடைப்பிடிப்பதில்தான் ஒழுக்கம் அடங்கியிருக்கிறது என்றால் அப்போது சாதி அமைப்பு முறையை ஓர் ஒழுக்கவாதி முறையாக ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் இந்த எளிதான கட்டுப்பாடுகள் இந்து சமயம் வழங்கியுள்ள ஏராளமான சுதந்திரங்களால் அளவுக்கு அதிகமாகவே சமன் செய்யப்பட்டு விடுகின்றன என்பதை திரு. காந்தி காணத்தவறிவிடுகிறார். ஒருவன் தனது சாதிக்குள் நூறு பெண்களை மணம் செய்து கொள்வதையும், நூறு பரத்தைகளை வைத்துக் கொள்வதையும் இந்து சமயம் தடை செய்யவில்லை. அவன் தன்னுடைய சாதிக்காரர்களுடன் சேர்ந்து எந்த அளவுக்கு வேண்டுமானாலும் தன் பசியைத் தீர்த்துக் கொள் வதையும் அது தடுக்கவில்லை.

பத்தி 8-ல் முன்வைக்கப்பட்டிருக்கும் வாதத்தில்தான் பிரச்சினை முழுவதுமே அடங்கியுள்ளது. பரம்பரைத் தொழில் என்னும் சித்தாந்தம் நல்லதாக இருக்கலாம் அல்லது நல்லதல்லாததாக இருக்கலாம். சிலருக்கு அது உடன்பாடானதாக இருக்கலாம். ஏன் அதனை ஓர் அதிகாரப்பூர்வமான சித்தாந்தமாக உயர்த்த வேண்டும்? அதனை ஏன் கட்டாயமாக்க வேண்டும்? ஐரோப்பாவில் அது ஓர் அதிகாரப் பூர்வமான சித்தாந்தமல்ல; அங்கு அது கட்டாயமுமல்ல, தனி நபரது விருப்பத்துக்கு விடப்பட்டு விடுகிறது. பலர் தங்களது முன்னோர்களின் தொழிலைப் பின்பற்றுகின்றனர்; சிலர் அவ்வாறு செய்வதில்லை, கட்டாய முறையானது சுயவிருப்ப முறையைவிட நன்கு செயல்படுகிறது என்று யார் கூற முடியும்? இந்தியாவிலுள்ள மக்களது பொருளாதார நிலைமையையும் ஐரோப்பிய மக்களின் பொருளாதார நிலைமையையும் ஒப்பு நோக்கி அதனை ஒரு வழிகாட்டியாகக் கொள்வோமாயின், பகுத்தறிவு மனோபாவம் கொண்டோரில் மிகச் சிலரே இந்த அடிப்படையில் அமைந்த சாதி அமைப்பு முறைக்கு ஆதரவளிப்பதைக் காணலாம். தொழிலில் அடிக்கடி நிகழும் மாற்றங்களின் வேகத்துக்கு ஈடு கொடுக்கும் வகையில் துறைச் சொற்களை மாற்றுவதிலுள்ள சிரமத்தைப் பொறுத்தவரையில் அது செயற்கையானதேயாகும். ஒரு குறிப்பிட்ட தொழிலைப் பின்பற்றும் நபர்களைக் குறிப்பிட்டுக் கூறுவதற்கு வகுப்பு அடைமொழிப் பெயர் தேவைப்படுவதிலிருந்துதான் இது எழுகிறது. இந்த அடைமொழிப் பெயர்கள் முற்றிலும் அவசியமற்றவை; எந்தச் சிரமமுமின்றி அவற்றை ஒழித்துக் கட்டிவிட முடியும். மேலும் இந்தியாவில் இன்று என்ன பார்க்கிறோம்? மனிதர்களுடைய தொழில்களும் அவர்களுடைய வகுப்பு அடைமொழிப் பெயர்களும் ஒத்திருப்பதில்லை. ஒரு பிராமணன் மிதியடிகள் விற்கிறான். அவன் ஒரு சாமர் என்ற அழைக்கப்படாதது கண்டு யாரும் கவலைப்படுவதில்லை. ஒரு சாமர் அரசு அதிகாரியாகிறான். அவன் ஒரு பிராமணன் என்ற அழைக்கப்படவில்லையே என்று எவரும் குழப்பமடைவதில்லை. இந்த வாதம் முழுவதுமே ஒரு தவறான கருத்தின் அடிப்படையில்தான் அமைந்திருக்கிறது. தனிநபர் எந்த வகுப்பு அடைமொழிப் பெயரைக் கொண்டிருக்கிறார் என்பது சமுதாயத்துக்கு முக்கியமல்ல; அவர் என்ன பணி புரிகிறார் என்பதுதான் முக்கியம்.

பத்தி 9-ல் எடுத்துரைக்கப்பட்டிருக்கும் கடைசி வாதம் சாதி அமைப்பு முறைக்கு ஆதரவாக நான் இதுவரை கேள்விப்பட்ட வாதங்களிலேயே மிகவும் திகைப்பும் அதிர்ச்சியுமூட்டும் வாதமாகும். அது

வரலாற்று ரீதியில் அறவே தவறானது. மனு ஸ்மிருதியைப் பற்றி ஏதேனும் தெரிந்த எவருமே சாதி அமைப்பு முறை ஓர் இயற்கை யான அமைப்புமுறை என்று கூறமுடியாது. மனு ஸ்மிருதி காட்டுவது என்ன? சாதி அமைப்பு முறை வாள் முனையில் நிலைநாட்டப்பட்டு சட்ட அந்தஸ்து அளிக்கப்பட்ட ஓர் அமைப்பு முறை என்பதையே அது காட்டுகிறது. அது நிலைத்திருக்க, உயிர்வாழ்ந்திருக்க முடிந்தது என்றால், (1) பொது மக்கள் ஆயுதபாணிகளாகாதபடி தடுக்கப் பட்டதும்; (2) கல்வி கற்கும் உரிமை அவர்களுக்கு மறுக்கப்பட்டதும்; (3) சொத்து வைத்துக் கொள்ளும் உரிமை அவர்களிடமிருந்து பறிக்கப்பட்டதுமே இதற்குக் காரணம். சாதி அமைப்பு முறை இயற்கையான அமைப்பு முறை அல்ல, மாறாக உண்மையில் அது ஆளும் வகுப்பினர்கள் அடக்கப்பட்ட வகுப்பினர்மீது வலுக்கட் டாயமாகத் திணித்த ஓர் அமைப்பு முறையேயாகும்.

சாதி அமைப்பு முறையிலிருந்து வருண அமைப்பு முறைக்கு திரு. காந்தி மாறியதானது காந்தியம் ஜனநாயகத்துக்கு எதிரானது என்ற குற்றச்சாட்டில் அணுவளவும் வேறுபாட்டை ஏற்படுத்திவிட வில்லை. முதலாவதாக, சதுர் வருணம் என்னும் கருத்துதான் சாதி கருத்துக்குப் பிறப்பிடமாகும். சாதி என்னும் கருத்து பெருங்கேடு பயக்கக் கூடியதாக இருக்கிறதென்றால், சதுர்வருண கருத்தின் கொடிய நச்சுச் சூழலே இதற்கு முற்றிலும் காரணம். ஒருவர் சதுர்வருண அமைப்பில் நம்பிக்கை வைத்தாலும் சரி, அல்லது சாதி அமைப்பில் நம்பிக்கை வைத்தாலும் சரி இரண்டுமே தீய கருத்துகளாகும். சதுர் வருண அமைப்பு முறையை பௌத்தர்கள் மிகவும் ஈவு இரக்க மின்றித் தாக்கினர்; அந்த அமைப்பு முறையை அவர்கள் இம்மியும் ஆதரிக்கவில்லை. வேதங்களில் பற்றுதல் கொண்ட வைதிக அல்லது சனாதன இந்துக்களால் இந்தத் தாக்குதலுக்கு அறிவார்ந்த முறையில் பதிலளிக்க முடியவில்லை. சதுர்வருண அமைப்பு முறை வேதங் களின் ஆணையின்படி அமைக்கப்பட்டதென்றும், வேதங்கள் பிழை யாதவையாதலால் சதுர்வருண அமைப்பும் பிழையாதது என்றும் மட்டுமே அவர்களால் வாதிட முடிந்தது. இந்த வாதம் வருண அமைப்பு முறையை பௌத்தர்களின் பகுத்தறிவுவாதத் தாக்குதலிலிருந்து பாது காப்பதற்குப் போதுமானதாக இல்லை. வருண அமைப்பு முறை தப்பிப் பிழைத்தது என்றால் பகவத் கீதையே அதற்குக் காரணம்; வருணம் என்பது மனிதனின் உள்ளார்ந்த குண இயல்புகளை அடிப்படையாகக் கொண்டது என வாதித்து, அதற்கு ஒரு தத்துவார்த்த அடித்தளத்தை அது அளித்தது. வருண அமைப்பு முறையை முட்டுக் கொடுத்துத் தாங்கி நிற்பதற்கு சாங்கிய சித்தாந்தத்தை பகவத் கீதை பயன்படுத்திக்

கொண்டது; இல்லையென்றால் முற்றிலும் அர்த்தமற்ற ஒரு கருத்துக்கு அர்த்தமளிக்கும் முயற்சி பிசுபிசுத்துப் போயிருக்கும். வருண அமைப்பு முறைக்கு ஒரு புதிய, எளிதில் நம்பத்தகுந்த அடித்தளத்தை அதாவது உள்ளார்ந்த குண இயல்புகள் என்ற அடித்தளத்தை சாதுர்யமாக வழங்கி பகவத் கீதை அதற்கு புத்துயிரூட்டிற்று:

பகவத் கீதை ஆதரிக்கும் வருண அமைப்பு முறைக்கு குறைந்த பட்சம் இரண்டு சிறப்புகள் உண்டு. வருண அமைப்பு முறை பிறப்பை அடிப்படையாகக் கொண்டது என்ற அது கூறவில்லை. ஒவ்வொருவனது வருணமும் அவனது உள்ளார்ந்த குண இயல்புகளுக்கு ஏற்ப நிர்ணயிக்கப்படுகிறது என்று அது விசேடமாக சுட்டிக்காட்டுகிறது. மகனுடைய தொழில் தந்தையினுடைய தொழிலாக இருக்க வேண்டும் என்றும் அது கூறவில்லை. ஒருவனது தொழில் அவனது உள்ளார்ந்த குண இயல்புகளுக்கு ஏற்ப அமைந்திருக்க வேண்டும். இதன்படி தந்தையின் தொழில் தந்தையின் உள்ளார்ந்த குண இயல்புகளுக்கு ஏற்பவும், மகனின் தொழில் மகனது உள்ளார்ந்த குண இயல்புகளுக்கு ஏற்பவும் அமைந்திருக்க வேண்டும் என்று பகவத் கீதை கூறுகிறது. ஆனால் திரு. காந்தியோ வருண அமைப்பு முறைக்கு ஒரு புதிய வியாக்யானத்தை தந்துள்ளார். இதன் மூலம் வருண அமைப்பு முறையையே அடையாளம் தெரியாதபடி மாற்றிவிட்டார். பழைய வைதிக வியாக்யானத்தின்படி சாதி பரம்பரைத் தொழிலைக் குறித்தது; வருணம் அப்படிச் செய்யவில்லை, திரு. காந்தி தமது மனம் போனப் போக்கில் வருண அமைப்பு முறைக்கு ஒரு புதிய விளக்கத்தைத் தந்திருக்கிறார். திரு. காந்தியின் கருத்துப்படி ஒருவரது வருணம் பிறப்பால் நிர்ணயிக்கப்படுகிறது; வருணத்தின் தொழில் பரம்பரைக் கோட் பாட்டின் அடிப்படையில் தீர்மானிக்கப்படுகிறது; வேறுவிதமாகச் சொன்னல் வருணம் என்பது சாதி என்பதன் மற்றொரு பெயரே ஆகும். திரு. காந்தி சாதியிலிருந்து வருணத்துக்கு மாறியதானது எத்தகைய புதிய புரட்சிகர சித்தாந்தம் உருவானதையும் குறிக்கவில்லை. திரு. காந்தி எப்போதுமே மிகவும் தந்திரக்காரர்; கூர்மதி படைத்தவர். ஒரு குள்ளனுக்குள்ள எல்லா குணங்களும் அவருக்கு உண்டு. ஆனால் அவரது வேடம் வெளியே தெரியாது. ஒரு குள்ளனைப் போல் அவர் வளரவே இல்லை; சாதி சித்தாந்தத்திலிருந்து வெளிவரவே இல்லை.

சமூக, பொருளாதாரப் பிரச்சினைகள் குறித்து திரு. காந்தி சில சமயங்களில் ஒரு பொது உடைமைவாதியைப் போல் பேசுகிறார். காந்தியத்தை நன்கு ஆராய்ந்தவர்கள் அவர் சில சமயங்களில் ஜனநாயகத்துக்கு ஆதரவாகவும், முதலாளித்துவத்துக்கு எதிராகவும்

பேசுவது கண்டு ஏமாந்து விட மாட்டார்கள். ஏனென்றால் காந்தியம் எவ்வகையிலும் ஒரு புரட்சிகரமான சித்தாந்தமல்ல, அது உள்ளடக்கத்தில் பழைமை பேணும் சித்தாந்தம்; இந்தியாவைப் பொறுத்த வரையில், தொல்பழைமைக்குத் திரும்புவோம் என்ற கோஷத்தை தனது பதாகையில் பொறித்துக் கொண்டுள்ள ஒரு பிற்போக்கு சித்தாந்தமேயாகும். இந்தியாவின் செத்துப் போன கடந்த காலத்தை உயிர்ப்பிப்பதே, அதற்குப் புத்துயிரூட்டுவதே காந்தியத்தின் குறிக்கோள்.

காந்தியம் ஒரு புதிர். அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறுவதை அது ஆதரிக்கிறது. நாட்டின் இன்றைய அரசியல் கட்டமைப்பை உடைத்தெறிய வேண்டும் என்பதே அதன் பொருள். ஆனால் அதேசமயம் பரம்பரை அடிப்படையில் ஒரு வகுப்பினர் இன்னொரு வகுப்பினர் மீது ஆதிக்கம் செலுத்துவதை அனுமதிக்கும் ஒரு சமூகக் கட்டமைப்பை முழுமைகெடாது அப்படியே பாதுகாக்கவும் அது விரும்புகிறது; அதாவது ஒரு வகுப்பு இன்னொரு வகுப்பின் மீது நிரந்தர ஆதிக்கம் செலுத்த அனுமதிப்பதையே இது குறிக்கிறது. இந்தப் புதிருக்கான விடைதான் என்ன? இது இந்துக்களின், வைதிகமானவர்களாயினும் சரி, வைதிகமல்லாதவர்களாயினும் சரி முழுமனதான ஆதரவை சுயராஜ்யத்துக்குப் பெறும் திரு. காந்தியின் நடைமுறைத் தந்திரத்தின் ஒரு பகுதியா? கடைசியாகக் குறிப்பிட்டதுதான் திரு. காந்தியின் நடைமுறைத் தந்திரம் என்றால் காந்தியத்தை நேர்மையானதாக, உண்மையானதாகக் கருத முடியுமா? இது ஒருபுறமிருக்க, துரதிர்ஷ்டவசமாக இதுவரை போதிய கவனம் செலுத்தப்படாத காந்தியத்தின் இரண்டு முக்கிய அம்சங்களை இங்கு குறிப்பிடுவது அவசியம். இந்த அம்சங்கள் மார்க்சியத்தைவிட காந்தியத்தை அதிகம் விரும்பத்தக்கதாக்குமா என்பது வேறு விஷயம். ஆனால் மார்க்சியத்திலிருந்து காந்தியத்தை வேறுபடுத்திக் காட்ட இந்த அம்சங்கள் உதவுவதால் அவற்றை இங்கு பரிசீலிப்பது உகந்ததாக இருக்கும்.

காந்தியத்தின் முதலாவது விசேட அம்சம் ஏற்கெனவே தாங்கள் பெற்றிருப்பதைப் பாதுகாத்துக் கொள்ள விரும்புவோருக்கு அதன் சித்தாந்தம் உதவுகிறது; அதே சமயம் தாங்கள் எதைப் பெறுவதற்கு உரிமை பெற்றிருக்கிறார்களோ அதை அவர்கள் பெறாதபடி தடுக்கிறது. வேலை நிறுத்தங்கள் விஷயத்தில் காந்தியத்தின் போக்கையும், சாதி அமைப்பு விஷயத்தில் காந்தியம் வைத்திருக்கும் பெருமதிப்பையும், ஏழைகளின் நலன்களுக்காக செல்வந்தர்கள் அவர்களது தர்மகர்த்தாக்களாக இருக்கும் காந்திய சித்தாந்தத்தையும் ஆராய்ந்த

எவரும் இவையெல்லாம் காந்தியத்தின் கொடிய விளைவுகள் என்பதை மறுக்க முடியாது. இது வேண்டுமென்றே திட்டமிட்டு செய்த சதியா அல்லது தற்செயலானதா என்பது வாதத்துக்குரிய விஷயம். ஆனால் காந்தியம் என்பது வசதி படைத்தவர்களுக்கான, உண்டு களித்து உல்லாசபுரியில் உலாவுவோருக்கான சித்தாந்தமே என்பது அசைக்க மறுக்க முடியாத உண்மை.

காந்தியத்தின் இரண்டாவது விசேட அம்சம் தங்களுக்கு நேர்ந்துள்ள அவப்பேறுகளை, இடர்ப்பாடுகளை ஏற்றுக் கொள்ளும்படி மக்களைத் தந்திரமாக ஏமாற்றி மயக்குவதாகும். போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து என்று அவர்களுக்கு உபதேசம் செய்யப்படுகிறது. இந்தக் கூற்றை அம்பலப்படுத்த இங்கு ஒன்றிரண்டு உதாரணங்களைக் கூறினால் போதுமானது.

இந்து சமய சட்டம் சூத்திரர்கள் (இந்துக்களில் நான்காவது வருணத்தினர்) சொத்து வைத்துக் கொள்வதைத் தடை செய்தது. உலகின் வேறு எந்தப் பகுதியிலும் இல்லாதபடி வறுமையை வலுக் கட்டாயமாகத் திணிக்கும் சட்டமாகும் இது. இது விஷயத்தில் காந் தியம் என்ன செய்கிறது? அது இந்தத் தடையை அகற்றவில்லை. அதற்கு மாறாக, சொத்துரிமையை திரஸ்கரிக்கும் சூத்திரனது அசாத் திய தார்மிகத் துணிச்சலுக்காக அவனை ஏற்றிப் போற்றுகிறது!! திரு. காந்தியின் சொற்களையே இங்கு மேற்கோள் காட்டுவது பொருத்த மாக இருக்கும். அவர் கூறுகிறார்:[1]

> ''சமயக் கடமை என்ற முறையில் மட்டுமே மேல் சாதியினருக்கு ஊழியம் செய்யும் சூத்திரன் ஒருபோதும் சொந்தமாக சொத்து ஏதும் வைத்துக் கொள்ள மாட்டான், உண்மையில் எதையும் தனக்குச் சொந்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை கூட அவனுக்கு இல்லை. அத்தகை யவன் ஆயிரம் முறை வணங்குதற்குரிய தகுதி படைத் தவன்.... தேவர்களே அவன்மீது பூமாரி பொழிவார்கள்.''

தோட்டியிடம் காந்தியம் கடைப்பிடிக்கும் போக்கை இவ்வகையில் மற்றொரு உதாரணமாகக் கூறலாம். ஒரு தோட்டியின் சந்ததி தோட்டியாகத்தான் வாழ்க்கை நடத்த வேண்டும் என்று இந்து

1. வருண வியவஸ்தையிலிருந்து இந்த மேற்கோள் எடுத்தாளப்படுகிறது.

சமயச் சட்டம் விதித்திருக்கிறது. இந்து சமயக் கோட்பாடுகளின்படி, தெருப்பெருக்குதல் என்பது ஒருவரது விருப்பத்துக்குரிய விஷயமல்ல, மாறாக ஒருவர் மீது திணிக்கப்படும் விஷயமாகும்.[1] இவ்விஷயத்தில் காந்தியம்என்ன செய்கிறது? தெருப்பெருக்குவதை சமுதாயத்துக்குச் செய்யும் மிகச்சிறந்த சேவையாக மெச்சி அதனை நிரந்தரப்படுத்த காந்தியம் முயல்கிறது:! திரு. காந்தி கூறியதையே இங்கு மேற்கோள் காட்டுகிறேன்: தீண்டப்படாதோர் மாநாட்டில் அம்மாநாட்டின் தலைவர் என்ற முறையில் பேசும்போது திரு. காந்தி கூறியதாவது:

''மோட்சம் அடைய நான் விரும்பவில்லை. மறுபிறவி எடுக்கவும் நான் விரும்பவில்லை, எனினும் நான் மறுபிறவி எடுக்க நேர்ந்தால் ஒரு தீண்டப்படாதவனாகப் பிறக்கவே விரும்புகிறேன். அப்போதுதான் அவர்களது துன்ப துயரங்களில், இன்னல் இடுக்கண்களில், அவமதிப்புகளில் நான் பங்கு கொள்ள முடியும்; இதன் மூலம் இந்த இரங்கத்தக்க, வெறுக்கத்தக்க அவல நிலையிலிருந்து நானும் அவர்களும் விடுபடப் பாடுபட முடியும். எனவே, நான் பிறப்பதாக இருந்தால் ஒரு பிராமணனாகவோ, சத்திரியனாகவோ, வைசியனாகவோ, அல்லது சூத்திரனாகவோ பிறக்க விரும்பவில்லை, மாறாக ஆதி சூத்திரனாக பிறக்க வேண்டுமென்றே பிரார்த்தனை செய்கிறேன்.

''துப்புறவுத் தொழில் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. எனது ஆசிரமத்தில் பதினெட்டு வயது நிரம்பிய ஒரு பிராமண இளைஞன் இருக்கிறான். ஆசிரமத்தின் தோட்டி சுத்தமாக இருக்க வேண்டுமென்பதைக் கற்றுத்தரும் பொருட்டு அவனே இந்த வேலையை செய்து வருகிறான். அந்த இளைஞன் ஒரு சீர்திருத்தவாதியல்ல. வைதிகத்திலேயே பிறந்து வளர்ந்தவன். ஆயினும் தான் ஒரு திறமையான தோட்டியானாலொழிய தான் மேற்கொண்டுள்ள புனித சேவை பூர்த்தியடைந்ததாகாது என்பதை உணர்ந்தான்; ஆசிரமத்தின் தோட்டி தனது பணியை நன்கு செய்ய வேண்டுமென்றால் தானே அப்பணியைச் செய்து பிறருக்கு வழிகாட்ட வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான்.

---

1. யங் இந்தியா, 27 ஏப்ரல், 1921.

''இதேபோன்று நீங்கள் இந்து சமுதாயத்தை மாசு துடைத்துத் துப்புரவு செய்து வருகிறீர்கள் என்பதை உணர வேண்டும்.''

ஒரு வகுப்பினர் இன்னொரு வகுப்பினர் மீது திட்டமிட்டு வேண்டுமென்றே திணித்துள்ள கொடுமைகளை, குரூரங்களை, அவலங்களை சாசுவதமாக்குவதற்கு காந்தியம் செய்யும் இந்த முயற்சியை விட தவறான பிரசாரத்திற்கு இதையும் விஞ்சும் வேறு மோசமான உதாரணம் எதுவும் இருக்க முடியுமா? சூத்திரர்களுக்கு மட்டுமன்றி எல்லோருக்குமே வறுமை விதியை காந்தியம் உபதேசிக்குமானால் அதுகுறித்து மிக மோசமாகக் கூறக்கூடியதெல்லாம் இது ஒரு தவறான கருத்து என்பதாகத்தான் இருக்கும். அப்படியிருக்கும்போது ஒரு வகுப்பினர்க்கு மட்டும் இந்த விதிமுறை உகந்தது என்று ஏன் பிரசாரம் செய்ய வேண்டும்? இரக்கமற்ற கொடுமையிலும் கொடுமையான பாரபட்சம் என்று கருதப்படக்கூடியதை ஒரு வகுப்பினர் தாமே முன்வந்து ஏற்க வேண்டும் என்று கூறுவது எந்த வகையில் நியாயம்? ஒரு பிராமணன் தோட்டி வேலையை செய்ய நேரிட்டாலும் பிறவித் தோட்டிக்குரிய அவமதிப்புகளுக்கும் அவமானங்களுக்கும், இழிப்புகளுக்கும் பழிப்புகளுக்கும் அவன் ஆளாக வேண்டியதில்லை என்று இந்து சாஸ்திரங்களும் இந்துக் கோட்பாடுகளும் தெள்ளத் தெளிவாகக் கூறியிருக்கும்போது, ஒரு பிராமணன் கூட துப்புறவுத் தொழிலைச் செய்ய சித்தமாக இருக்கிறான் என்று ஒரு தோட்டியிடம் சென்று கூறுவதில் என்ன அர்த்தமிருக்கிறது? இந்தியாவில் ஒருவனை அவன் செய்யும் வேலையைப் பொறுத்து தோட்டி என்று அழைப்பதில்லை. மாறாக பிறப்பின் காரணமாகவே ஒருவன் தோட்டி என்று அழைக்கப்படுகிறான்; அவன் உண்மையிலேயே தோட்டி வேலை செய்கிறானா, இல்லையா என்பதல்ல இங்கு பிரச்சினை. துப்புறவுத் தொழிலில் ஈடுபடுவதற்கு மறுப்பவர்களை இணக்குவிக்கும் நோக்கத்தோடு தோட்டித் தொழில் புனிதமான, சிறந்த தொழில் என்று காந்தியம் பிரசாரம் செய்தால் அதைப் புரிந்து கொள்ள முடியும். ஆனால் ஒரு தோட்டியிடம் சென்று அவனிடம் வீண் தற்பெருமையைக் கிளர்த்திவிட்டு, அவன்தான் அவன் மட்டும் தான் தோட்டி வேலை செய்ய வேண்டும், அது புனிதமான தொழில், அத்தொழிலைச் செய்வதற்கு அவன் வெட்கித் தலைகுனிய வேண்டியதில்லை என்றெல்லாம் எதற்காக உபதேசம் செய்ய வேண்டும்? வறுமை வேறு எவருக்கும்விட சூத்திரனுக்குத்தான் நன்மை பயக்கும், தோட்டத் தொழில் வேறு எவருக்கும் விட தீண்டப்படாதவர்களுக்குத்தான் மிகவும் உகந்தது என்று பிரசாரம் செய்வதும், இந்தக்

கடுமையான சுமைகளை வாழ்க்கையின் தன்விருப்ப குறிக்கோள்களாக ஏற்றுக் கொள்ளும்படி தீண்டப்படாதோரின் பலவீனங்களைப் பயன்படுத்திக்கொண்டு அவர்களை நிர்ப்பந்திப்பதும் நிராதரவான வகுப்பினருக்கு எதிராக இழைக்கப்படும் மிகப் பெரிய கொடுமையாகும், அட்டூழியமாகும். திரு. காந்தி ஒருவரால்தான் இத்தகைய 'திருப்பணியை' எத்தகைய கூச்ச நாச்சமுமின்றி, விளைவுகளைப் பற்றி அணுவளவும் கவலைப்படாமல் செய்ய முடியும். காந்தியம் போன்ற ஓர் 'இயக்கத்தை' நிராகரித்து வால்டேர் கூறிய சொற்களை இங்கு நினைவு கூருவது பொருத்தமாக இருக்கும். அவர் கூறினார்: ''ஒரு சிலர் படும் துன்பம் மற்றவர்களுக்கு இன்பத்தைக் கொண்டு வரும் என்றும், அனைவரும் நன்மை அடைவர் என்றும் கூறுவது எவ்வளவு கொடிய நிந்தை! சிதைந்து அழுகிக் கொண்டிருக்கும் தனது உடலிலிருந்து ஆயிரக்கணக்கான புழுக்கள் உயிர்த்தெழும் என்று தெரிந்து கொள்வது அணு அணுவாக செத்துக் கொண்டிருக்கும் ஒரு மனிதனுக்கு என்ன ஆறுதலை அளிக்க முடியும்?''

கொடுமைகளுக்கு ஆளாவது தங்களுக்கு வழங்கப்படும் சலுகைகள் என அக்கொடுமைகளுக்கு உள்ளானவர்களையே நம்பச் செய்வதுதான் காந்தியத்தின் உத்தி முறையாகும். தவறான நம்பிக்கைகளிலும், தவறான பாதுகாப்பிலும் மக்கள் அமைதியும் ஆறுதலும் அடையச் செய்வதற்கு அபினி போன்று மதத்தை முழு அளவுக்குப் பயன்படுத்திக் கொள்ளக்கூடிய ஓர் 'இயம்' இருக்குமானால் அது காந்தியமேயாகும். ஷேக்ஸ்பியரைப் பின்பற்றிப் பின்வருமாறு கூறுவது பொருந்தும்: நம்பிக்கைத் துரோகமே! சூழ்ச்சியே! உன் பெயர் தான் காந்தியமா.

## IV

இத்தகையதுதான் காந்தியம். காந்தியம் என்பது என்ன என்பதைத் தெரிந்து கொண்டு விட்ட பிறகு, 'காந்தியம் நாட்டின் சட்டமாக்கப்பட்டால் தீண்டப்படாதவர்களின் கதி என்னவாகும்' என்ற கேள்விக்குப் பதிலளிக்க மனக்குழப்பம் காரணமாக தலையைச் சொறிந்து கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை. மிகவும் அடிமட்டத்திலுள்ள இந்துவை அது எவ்வாறு பாதிக்கும்? காந்திய சமூக அமைப்பு நடைமுறைக்கு வருமானால் அவனது நிலை எப்படி இருக்கும் என்பது பற்றி எவ்வளவோ கூறப்பட்டுள்ளது. மிகவும் அடிமட்டத்திலுள்ள இந்துவும் தீண்டப்படாதவனும் சொத்துரிமை இழந்த

வகுப்பைச் சேர்ந்தவர்களாகையால், தீண்டப்படாதவனுடைய நிலைமை ஒன்றும் மேம்பட்டதாக இருக்க முடியாது. இன்னும் சொல்லப்போனால் அவனது நிலைமை மிக மிக மோசமானதாகவே இருக்கும். ஏனென்றால் இந்தியாவில் சாதி இந்துக்களில் மிகவும் கீழ்மட்டத்திலுள்ள இந்துவும் கூட, ஏன் பழங்குடியைச் சேர்ந்தவனும், மலைவாழ் குலமரபுக் குழுவைச் சேர்ந்தவனும்கூட கல்வித் துறையிலும், பொருளாதாரத் துறையிலும் தீண்டப்படாதவர்களை விட எவ்வகையிலும் உயர்ந்த நிலையில் இல்லாதிருந்தாலும் தீண்டப்படாதவர்களுடன் ஒப்பிடும்போது மேம்பட்ட வகுப்பினனாகவே கருதப்படுகிறான். தீண்டப்படாதவர்களை விட மேலானவன் என்ற அவனது உரிமையை இந்து சமுதாயமும் ஏற்றுக் கொள்கிறது. எனவே தீண்டப்படாதர்கள் இப்போது போலவே மிகவும் மோசமான நிலையில், பெரிதும் கீழ் நிலையில் இருந்து வருவார்கள்; பொருளாதாரம் ஏறுமுகம் காணும் நாட்களில், வளமும் செழிப்பும் கொழிக்கும் நாட்களில் அவன் கடைசியாக வேலைக்கமர்த்திக் கொள்ளப்படுபவனாகவும், பொருளாதார மந்தம் சூழும் காலத்தில் வேலையிலிருந்து முதலில் நீக்கப்படுபவனாகவும் இருந்து வருவான்.

இந்த இழி நிலையிலிருந்து, அவல நிலையிலிருந்து தீண்டப்படாதவர்களை கரையேற்ற, அவர்களுக்குக் கைகொடுத்து மேலே தூக்கிவிட காந்தியம் என்ன செய்கிறது? தீண்டாமையை ஒழிப்போம் என்று காந்தியம் முழங்குகிறது. காந்தியத்தின் மிகச் சிறந்த பண்பாக இது போற்றிப் புகழப்படகிறது. ஆனால் நடைமுறை வாழ்க்கையில் இந்த மிகச் சிறந்த பண்பின் பொருள் என்ன? காந்தியத்தின் மிகப் பெரிய அம்சமாகக் கருதப்படும் இந்தத் தீண்டாமை எதிர்ப்பின் மதிப்பை எடைபோடுவதற்கு திரு. காந்தியின் தீண்டாமை ஒழிப்புத் திட்டத்தின் முழு வீச்சையும் புரிந்து கொள்வது அவசியம். இந்துக்கள் தீண்டப்படாதவர்களைத் தொடுவதைப் பொருட்படுத்த மாட்டார்கள் என்பதற்கும் அதிகமாக எதையும் இது அர்த்தப்படுத்துகிறதா? கல்வி கற்பதற்கு தீண்டப்படாதவர்களுக்குள்ள உரிமைக்கு விதிக்கப்பட்டிருக்கும் தடை அகற்றப்படுவதை இது குறிக்கிறதா? இந்த இரு விஷயங்களையும் தனித்தனியாகப் பரிசீலிப்பது நலமாக இருக்கும்.

முதல் விஷயத்தை எடுத்துக் கொள்வோம். தீண்டப்படாதவர்களைத் தொட நேர்ந்த பிறகு ஓர் இந்து நீராடக் கூடாது என்று திரு. காந்தி கூறவில்லை. தீட்டை அகற்றும் ஒரு தூய்மைச் சடங்கு என்ற ரீதியில் திரு. காந்தி இதனை ஆட்சேபிக்கவில்லை என்றால் தீண்டப்

படாதவர்களைத் தொடுவதன் மூலம் தீண்டாமை எப்படி மறைந்து விடுமென்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை, தீண்டுவதால் தீட்டு ஏற்படுகிறது, குளிப்பதன் மூலம் அந்தத் தீட்டை அகற்றி விடலாம் என்ற கருத்தை மையமாகக் கொண்டதுதான் தீண்டாமை என்பது. இது இந்துக்களுடன் சமூக ரீதியில் ஒன்றுபடுவதைக் குறிக்கிறதா? தீண்டாமையை அகற்றுவது என்பது இந்துக்களும் தீண்டப்படாதவர்களும் சமபந்தி விருந்து அருந்துவதையோ அல்லது தங்களுக்குள் கலப்புத் திருமணங்கள் செய்து கொள்வதையோ எவ்வகையிலும் குறிக்கவில்லை என்பதை திரு. காந்தி மிகவும் திட்டவட்டமாக, தெள்ளத் தெளிவாகக் கூறிவிட்டார். தீண்டப்படாதவர்கள் சூத்திரர்கள் என்று வகை பிரிக்கப்படுவதற்குப் பதிலாக ஆதி - சூத்திரர்கள் என்று வகை பிரிக்கப்படுவார்கள் என்பதே திரு. காந்தியின் தீண்டாமை எதிர்ப்பின் பொருளாகும். இதைத் தவிர அதில் வேறு எதுவும் இல்லை. ஆனால் பழைய சூத்திரர்கள் புதிய சூத்திரர்களைத் தங்களுடைய அரவணைப்பிற்குள் ஏற்றுக் கொள்வார்களா என்ற பிரச்சினையை திரு. காந்தி சிந்தித்துப் பார்க்கவில்லை. இவ்வாறு அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை என்றால் தீண்டாமை ஒழிப்பு என்பது ஓர் அர்த்தமற்ற கோட்பாடாகி விடுகிறது; ஏனென்றால் தீண்டப்படாதவர்கள் இன்னமும் ஒரு தனித்த வகுப்பினர்களாகவே கருதப்பட்டு வருவார்கள். தீண்டாமை ஒழிப்பு தீண்டப்படாதவர்களை சூத்திரர்களுடன் இணைத்துவிடாது என்பதை திரு. காந்தி அநேகமாக அறிவார். தீண்டப்படாதவர்களுக்கு திரு. காந்தி ஒரு புதிய, வேறுபட்ட பெயரைச் சூட்டுவதற்கு இதுவே காரணம் என்று தோன்றுகிறது. என்ன நிகழக்கூடும் என்பதை முன்கூட்டி அறிந்தே புதிய நாமகரணம் செய்யப்பட்டிருக்கிறது. தீண்டப்படாதவர்களை ஹரிஜனங்கள் என்று அழைப்பதன் மூலம் திரு. காந்தி ஒரே கல்லில் இரண்டு மாங்காய்களை வீழ்த்தியிருக்கிறார். சூத்திரர்கள் தீண்டப்படாதவர்களை தங்கள் அரவணைப்பில் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்பதை இதன் மூலம் காட்டியிருக்கிறார். இந்தப் புதிய பெயரின் மூலம் அத்தகைய அரவணைப்புக்கு எதிர்நடவடிக்கை எடுத்து அதனை சாத்தியமற்றதாகவும் ஆக்கிவிட்டார்.

இரண்டாவது விஷயத்தைப் பொறுத்தவரையில், கல்வி கற்பதற்கு தீண்டப்படாதவர்களுக்குள்ள உரிமைக்கு இந்து சாஸ்திரங்

1. யங் இந்தியா, பிப்ரவரி 5, 1925.

கள் விதித்திருந்த பழைய தடையை அகற்றுவதற்கும், அறிவுச் செல்வத்தை ஈட்ட அவர்களை அனுமதிப்பதற்கும் காந்தியம் தயாராக இருக்கிறது என்பது உண்மையே. காந்திய சித்தாந்தத்தின்படி தீண்டப்படாதவர்கள் சட்டம் படிக்கலாம், மருத்துவம் பயிலலாம், பொறியியல் கற்கலாம் அல்லது விரும்பிய வேறு எதில் வேண்டுமானாலும் போதனை பெறலாம். அதுவரை சரிதான். ஆனால் தீண்டப்படாதவர்கள் தாங்கள் கற்ற கல்வியையும் பெற்ற அறிவாற்றலையும் பயன்படுத்திக் கொள்ள சுதந்திரம் இருக்குமா? தாங்கள் விரும்பிய வாழ்க்கைத் தொழிலை தேர்ந்தெடுத்துக் கொள்ள அவர்களுக்கு உரிமை இருக்குமா? அவர்கள் வழக்கறிஞராகவோ, மருத்துவராகவோ, பொறியாளராகவோ ஆக முடியுமா? இந்தக் கேள்விகளுக்கு காந்தியம் அளிக்கும் திட்டவட்டமான பதில் 'இல்லை' என்பதுதான்.[1] தீண்டப்படாதவர்கள் தங்களது பரம்பரைத் தொழில்களையே செய்து வர வேண்டும். அந்தத் தொழில்கள் தூய்மையற்றவையாக இருக்கின்றனவே என்பது இதற்கு சமாதானமாகாது: தொழில்கள் பரம்பரையை அடிப்படையாகக் கொண்டிராத காலத்தில் அவை வலிமையின் அடிப்படையில் அமைந்திருந்தன, ஒருவரது விருப்பத்துக்கு அதில் எத்தகைய இடமும் இல்லாதிருந்தது. எனவே ஒரு காலத்தில் முடிவு செய்யப்பட்ட விஷயம் அது தவறாக முடிவு செய்யப்பட்டிருந்தாலும் நிரந்தரமாக முடிவு செய்யப்பட்ட விஷயமே ஆகும் என்பது காந்தியத்தின் வாதம். காந்திய சித்தாந்தத்தின் பிரகாரம் தீண்டப்படாதவர்கள் என்றென்றும் தோட்டிகளாகவே இருக்க வேண்டும். தீண்டப்படாதவர்கள் இதைவிட பழைய வைதிக முறையில் அமைந்த தீண்டாமையை வரவேற்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. தீண்டப்படாதவர்கள் மீது இந்து சாஸ்திரங்கள் படிப்பின்மையைக் கட்டாயமாகத் திணித்ததால் அப்போது தோட்டித் தொழில் பொறுத்துக் கொள்ளக்கூடியதாக இருந்தது. ஆனால் நன்கு கல்வி கற்ற ஒரு தீண்டப்படாதவனை தோட்டித் தொழில் செய்யும்படி காந்தியம் நிர்ப்பந்திப்பது கொடுமையிலும் கொடுமையாகும். காந்தியம் ஒரு சாபக்கேடே தவிர வேறல்ல. காந்தியத்தின் தீண்டாமை எதிர்ப்புத் திட்டம் என்பது வெறும் மாயை. அதில் சத்தும் இல்லை சாரமும் இல்லை.

---

1. இந்த விஷயம் குறித்த திரு. காந்தியின் கருத்துகளை இதே நூல் 441-445 ஆம் பக்கங்களில் காண்க.

## V

தங்களது இறுதி விமோசனத்திற்கு, விடுதலைக்கு வழிவகை செய்யக் கூடியதென தீண்டப்படாதவர்கள் ஏற்றுக் கொள்ளக் கூடியது காந்தியத்தில் வேறு என்ன இருக்கிறது? தீண்டாமைக்கு எதிரான இந்த மாய பிரசாரத்தை ஒதுக்கி விட்டுப் பார்த்தால் காந்தியம் என்பது சனாதனத்தின் மற்றொரு வடிவமே தவிர, வேறல்ல என்பது புலனாகும்; தீவிர வைதிக இந்து சமயத்தின் பண்டைக்காலப் பெயரே இந்த சனாதனம் என்பது. வைதிக இந்து சமயத்தில் இல்லாத வேறு என்ன காந்தியத்தில் இருக்கிறது? இந்து சமயத்தில் சாதி இருக்கிறது, காந்தியத்திலும் சாதி இருக்கிறது. பரம்பரைத் தொழில் சித்தாந்தத்தை இந்து சமயம் ஆதரிக்கிறது; அவ்வாறே காந்தியமும் ஆதரிக்கிறது. இந்து சமயம் பசு வழிபாட்டை மேற்கொள்கிறது. காந்தியமும் அவ்வாறே செய்கிறது. இந்த உலகில் மனிதனது நிலைமையை முன் கூட்டியே நிர்ணயிக்கும் கர்ம சித்தாந்தத்தை இந்து சமயம் விடாப் பிடியாகப் பின்பற்றுகிறது. காந்தியமும் அதையே செய்கிறது. இந்து சமயம் சாஸ்திரங்களின் ஆணை உரிமையை அங்கீகரிக்கிறது. காந்தியமும் அவ்விதமே செய்கிறது. இந்து சமயம் கடவுளின் அவதாரங்களை ஒப்புக் கொள்கிறது. காந்தியமும் அவ்வாறே செய்கிறது. இந்து சமயம் விக்கிரக ஆராதனையில் நம்பிக்கை வைத்திருக்கிறது. காந்தியமும் அவ்விதமே செய்கிறது.[1] காந்தியம் செய்திருப்பதெல்லாம் இந்து சமயத்துக்கும் அதன் சித்தாந்தங்களுக்கும் ஒரு தத்துவார்த்த அடிப்படையை வழங்கியிருப்பதுதான். இந்து சமயம் சில கண்டிப்பான விதிமுறைகளைக் கொண்ட ஒரு தொகுதியாக சிறப்பற்ற முறையில் மொட்டையாக அமைந்திருக்கிறது; மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது பண்பற்ற, செப்பமற்ற ஒரு குரூரமான அமைப்பாகவே அது தோற்றமளிக்கிறது. காந்தியம் அதன் கரடுமுரடான மேற்பரப்பை வழவழப்பாக்கி, அதற்கு தகைமையையும் ஆன்ற மதிப்புடைமையையும் அளிக்கக்கூடிய ஒரு தத்துவத்தை வழங்குகிறது; இவ்வாறு அதனை மாற்றி, அதற்குக் கவர்ச்சி அளிக்கும் விதத்தில் அதனை அழகுபடுத்துகிறது. இந்து சமயத்தின் ஆடையற்ற உருவத்தை மூடி மறைக்க காந்தியம் என்ன தத்துவத்தை முன்வைத்திருக்கிறது? இந்தத் தத்துவத்தை இரத்தினச் சுருக்கமாகக் கூறிவிடலாம். அந்தத் தத்துவம் பின்வருமாறு கூறுகிறது: ''இந்து மதத்தில் உள்ள யாவும் சாலச் சிறந் தவை, இந்து மதத்திலுள்ள அனைத்தும் பொது நன்மைக்கு இன்றி யமையாதவை.'' வால்டேரின் கேண்டட்டை படித்தவர்கள்

---

1. திரு. காந்தியின் சமயக் கோட்பாடுகள் 1921 அக்டோபர் 6-ஆம் தேதிய யங் இந்தியா இதழில் விவரிக்கப்பட்டுள்ளன.

இது மாஸ்டர் பாங்கிலாசின் தத்துவம் என்பதைத் தெரிந்துகொள்வர், அதனை அவர் நையாண்டி செய்ததையும் நினைவு கூருவர். இந்துக்கள் இந்தத் தத்துவம் குறித்து மன நிறைவு அடைந்துள்ளனர் என்பதில் ஐயமில்ல. இது அவர்களுக்கு இசைவானதாக இருக்கிறது என்பதிலும் அவர்களுடைய நலன்களுக்கு உகந்ததாக இருக்கிறது என்பதிலும் சந்தேகமில்லை. ''பூவுலகின் தெய்வம்'' என்று திரு. காந்தியை ஏற்றிப் போற்றியிருக்கிறார் பேராசிரியர் இராதாகிருஷ்ணன். இதனை அவர் உணர்வுபூர்வமாகக் கூறினாரா அல்லது இச்சகத்தால் தூண்டப்பட்டுக் கூறினாரா என்பதை இங்கு நாம் விவாதித்துக் கொண்டிருக்கத் தேவையில்லை. தீண்டப்படாதவர்கள் இதனை எவ்வாறு புரிந்து கொண்டிருக்கிறார்கள்? அவர்கள் பின்வருமாறு புரிந்து கொண்டிருக்கிறார்கள்: ''இன்னலுக்கு ஆளாகியுள்ள வகுப்பினர்களுக்கு ஆறுதல் கூறித் தேற்றுவதற்காக காந்தி என்ற பெயர் கொண்ட இந்தக் கடவுள் வந்தார். அவர் இந்தியாவைக் கண்டார்; எல்லாம் நல்ல முறையில் இருப்பதாகக் கூறாமல், இந்துக்கள் சாதி விதிமுறைகளை நிறைவேற்றினால்தான் நன்மை பயக்கும் என்று கூறி அதனை மாற்றினார். பிறகு அல்லற்படும் இனத்தினரிடம் அவர் இவ்வாறு கூறினார்: 'சாதி விதி முறைகளை நிறைவேற்றுவதற்காகவே நான் வந்திருக்கிறேன்! அவற்றில் இம்மியும் குறைய நான் அனுமதிக்க மாட்டேன்.''

தீண்டப்படாதவர்களுக்கு காந்தியம் என்ன நம்பிக்கை ஒளியை அளிக்கிறது? தீண்டப்படாதவர்களுக்கு இந்து மதம் பெரும் அச்சமூட்டும் ஒரு பயங்கர படுகளமாகத்தான் காட்சி அளிக்கிறது. வேதங்கள், ஸ்மிருதிகள், சாஸ்திரங்கள் ஆகிய இவற்றின் மீறாவொண்ணா புனிதத்தன்மை, அவற்றின் பிழையாத்தன்மை, சாதி என்னும் இரும்புச்சட்டம், ஈவு இரக்கமற்ற கர்ம சித்தாந்தம், பிறப்பைக் கொண்டு ஒருவனது அந்தஸ்தை நிர்ணயிக்கும் அர்த்தமற்ற விதிமுறைகள் போன்ற இவையெல்லாம் தீண்டப்படாதவர்களை நெஞ்சிரக்கமற்று குரூரமாக சித்திரவதை செய்வதற்கு இந்து மதம் வடித்தெடுத்துள்ள கொலைக்கருவிகளாக அமைந்துள்ளன. தீண்டப்படாதவர்களின் வாழ்க்கையை வெடி வைத்துத் தகர்த்து முடமாக்கும், வாட்டி வதைக்கும், சுட்டுப் பொசுக்கும் இதே கொடிய ஆயுதங்கள் காந்தியத்தின் பெட்டகத்தில் மெருகு குலையாது அப்படியே இருப்பதைக் காண்கிறோம். இவ்வாறு இருக்கும்போது காந்தியம் இந்து மதத்தைப் போல் ஒரு கொலைக்களம் அல்ல, அது ஒரு சுவர்க்கம் என்று தீண்டப்படாதவர்கள் எவ்வாறு கூற முடியும்? காந்தியத்திடமிருந்து காத தூரத்துக்கு ஓடிவிடுவது ஒன்றுதான் தீண்டப்படாதவர்கள் இதற்கு எதிராக மேற்கொள்ளும் மிகவும் இயல்பான நடவடிக்கையாக இருக்க முடியும்.

நான் கூறுவதெல்லாம் பழைய பாணி காந்தியத்தைப் பற்றித் தான் என்று காந்தியவாதிகள் கூறக்கூடும். புதிய காந்தியம் ஒன்று இருக்கிறது, சாதியில்லாத காந்தியம் அது. சாதி என்பது காலத்துக்கு ஒவ்வாத ஒரு கோட்பாடு என்று திரு. காந்தி அண்மையில் வெளி யிட்ட அறிக்கை இதற்கு ஆதாரமாகக் கொள்ளப்படுகிறது.[1] திரு. காந்தியின் இந்த அறிவிப்பு சீர்திருத்தவாதிகளை மகிழ்ச்சி கொள்ளச் செய்திருக்கிறது. இந்துக்களிடம் எல்லையற்ற செல்வாக்கு பெற்றி ருக்கும் திரு. காந்தி போன்ற ஒருவர், ஒரு சமூக பிற்போக்காளரின் மிகவும் தீங்கு பயக்கும் பாத்திரத்தை வகித்தவர், சாதி அமைப்பு முறையின் மிகவும் தீவிர ஆதரவாளராக இருந்தவர், நன்மைக்கும் தீமைக்கும் இடையே எத்தகைய பாகுபாடும் காட்டாத வாதங்களை முன்வைத்து சிந்தனையற்ற இந்துக்களை மருட்டி வசியப்படுத்தி யவர், ஏமாற்றியவர் முன்னர் கூறியதை மறுதலிக்க இப்போது முன் வந்தால் யார்தான் மகிழ்ச்சி அடைய மாட்டார்கள்? ஆனால் உண்மை யிலேயே இது பெருமகிழ்ச்சி அடைவதற்குரிய விஷயம்தானா? காந்தியத்தின் தன்மையையே இது மாற்றிவிட்டதா? முன்பிருந்ததை விட இது காந்தியத்தை புதிய, சிறந்த ‘இய’மாக மாற்றி விட்டதா? திரு. காந்தியின் மறுதலிப்பால் மனமகிழ்ந்து போனவர்கள், உணர்ச்சி வசப்பட்டுப் போனவர்கள் இரண்டு விஷயங்களை மறந்து விடு கின்றனர். முதலாவதாக சாதி அமைப்பு முறை காலத்திற்கு ஒவ் வாதது என்றுதான் கூறியிருக்கிறார், அது ஒரு தீமை என்று அவர் கூறவில்லை, அது ஒரு சாபக்கேடு என்று சொல்லவில்லை. திரு. காந்தி சாதியை ஆதரிக்கவில்லை என்று வேண்டுமானால் எடுத்துக் கொள்ளலாம். ஆனால் தாம் வருண அமைப்பு முறையையும் எதிர்ப்பதாக திரு. காந்தி கூறவில்லை. திரு. காந்தியின் வருண அமைப்புமுறை என்பது என்ன? அது சாதி அமைப்பு முறையின் ஒரு புதிய பெயர்; சாதி அமைப்பு முறையின் எல்லா மிக மோசமான அம்சங்களையும் அது தன்னுள் கொண்டுள்ளது.

திரு. காந்தியின் மேலே கூறிய பிரகடனத்தை காந்தியத்தில் எத்தகைய அடிப்படையான மாற்றமும் ஏற்பட்டிருப்பதைக் குறிப்பதாக எடுத்துக் கொள்ள முடியாது. அதால் காந்தியத்தை தீண்டப்படாத வர்களுக்கு ஏற்புடையதாக்க முடியாது. தீண்டப்படாதவர்கள் இன் னமும் பின்வருமாறுதான் கூறிக் கொண்டிருப்பார்கள்: ‘‘ஆண்ட வனே! இந்த மனிதர் காந்திதான் எங்கள் ரட்சகரா?’’

---

1. ஹிந்துஸ்தான் டைம்ஸ், 15, ஏப்ரல், 1995.

## பின் இணைப்பு - I

# தீண்டப்படாதவர்களுக்கான பர்தோலி திட்டம் பற்றி சிரத்தானந்தர்

தீண்டப்படாதவர்களின் மேம்பாட்டுக்காக ஒரு திட்டம் வகுக்கும் பொருட்டு 1922ல் நியமிக்கப்பட்ட காங்கிரஸ் துணைக் குழு குறித்து சுவாமி சிரத்தானந்தருக்கும் காங்கிரஸ் பொதுச் செயலாளரான பண்டித மோதிலால் நேருவுக்கும் இடையே நடைபெற்ற கடிதப் போக்குவரத்து.

### (1) சுவாமிஜியின் கடிதம்

*பெறுநர்,*
*பொதுச் செயலாளர்,*
*அனைத்திந்திய காங்கிரஸ் கமிட்டி,*
*(தங்கல்) டில்லி*

*தீண்டாமை குறித்து அனைத்திந்திய காங்கிரஸ் கட்சியின் செயற்குழுத் தீர்மானங்களைக் கொண்ட தங்களுடைய 331,332 எண்ணிட்ட கடிதங்கள் கிடைக்கப்பெற்றேன் என்பதை நன்றியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். செயற்குழுத் தீர்மானத்தின் வாசகம், பொதுக் குழுவில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை முழுமையாக எதிரொலிக்கவில்லை என்பதை மிக வருத்தத்துடன் குறிப்பிட விரும்புகிறேன்.*

*உண்மை நிலையை விளக்க விரும்புகிறேன். 1922 மே மாதம் 23-ம் தேதி காங்கிரஸ் கட்சியின் அப்போதைய பொதுச் செயலாளர் வித்தல்பாய் படேல் அவர்களுக்கு நான் எழுதிய கடிதம், நாட்டின் முக்கிய நாளேடுகளில் எல்லாம் வெளியிடப்பட்டிருந்தது; அதனைக் கீழே தருகிறேன்:*

*அன்பார்ந்த படேல் அவர்களுக்கு,*

*ஒருகாலத்தில் காந்தியடிகள் தீண்டாமை ஒழிப்பினைக் காங் கிரஸ் கட்சியின் முன்னணித் திட்டங்களில் ஒன்றாக வைத்திருந்*

தார் (''யங் இந்தியா''வின் 1921 மே 2ஆம் தேதி இதழை நோக்குக). ஆனால், தாழ்த்தப்பட்டோர் மேம்பாட்டுப்பணி இப்போது மூலை முடுக்குக்கு ஒதுக்கப்பட்டு விட்டதனை உணர்கிறேன். நமது செயலாக்கம் மிக்க தொண்டர்கள் பலரது கவனம் காதித்திட்டத்தில் ஈடுபட்டுள்ளது; அதற்கெனப் பெருந்தொகையும் ஒதுக்கப்பட்டுள்ளது. தேசியக்கல்வி மேம்பாட்டுக்கென ஒரு சீரிய துணைக்குழு நியமிக்கப்பட்டு அதற்கான நிதிதிரட்டுதற்கெனப் பெரும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இந்நிலையில் தீண்டாமை ஒழிப்பு பின்னிலைக்குத் தள்ளப்பட்டு விட்டது. இதற்கென அகமதாபாத், அகமதுநகர், சென்னை ஆகிய மூன்று நகரங்களுக்கு மட்டும் சிறு தொகைகள் ஒதுக்கப்பட்டுள்ளன. நமது நாட்டில் வாழும் ஆறு கோடி தாழ்த்தப்பட்ட மக்களில் பெரும்பாலோரை அரசு எந்திரம் நமக்கெதிராகத் திருப்பமுனையும் போது காதித் திட்டம் கூட முழுமையாக வெற்றியடைய இயலாதென்றே கருதுகிறேன். வறுமையில் வாடும் தாழ்த்தப்பட்டவர்களான இவ்வுடன் பிறப்புகள் காதிக்குப் பதிலாக மலிவான அன்னியத்துணிகளையே வாங்க முற்படுவர் என்பதை எப்படி செயற்குழு உறுப்பினர்கள் எண்ணிப் பார்க்கத் தவறிவிட்டனர்? எனவே வரும் ஜூன் மாதம் 7ஆம் தேதி லக்னோவில் கூடவிருக்கும் காங்கிரஸ் கட்சியின் பொதுக் குழுக் கூட்டத்தில் பின்வரும் தீர்மானத்தை முன்மொழியக் கருதுகிறேன்:

> ''தாழ்த்தப்பட்டோர் மேம்பாட்டுப்பணிகளுக்காக, காங்கிரஸ் கட்சிப் பொதுக்குழு, மூன்று உறுப்பினர்கள் கொண்ட துணைக்குழு ஒன்றை நியமிக்க வேண்டும். குழுவின் பிரச்சாரப் பணிகளுக்காக ஐந்து லட்சம் ரூபாய் நிதி ஒதுக்கீடு செய்வதுடன், எதிர்காலத்தில் மானியங்கள் குறித்த எல்லா விண்ணப்பங்கள் பற்றியும் முடிவு செய்யும் அனைத்துப் பொறுப்புகளும் துணைக்குழுவிடமே விடப்பட வேண்டும்.''

எனது தீர்மானத்தின் வாசகத்தைச் செயற்குழு பின் வருமாறு மாற்றியமைத்தது:

> ''தாழ்த்தப்பட்டோர் எனப்படும் மக்களின் வாழ்க்கை நிலைமைகளை மேம்படுத்துதற்கான நடைமுறைச் செயல் திட்டங்களை வகுப்பதற்காக சிரத்தானந்தர், திருமதி சரோஜினி நாயுடு, திருவாளர்கள் ஜி.பி. தேஷ் பாண்டே, ஐ.கே. யாஜ்னிக் ஆகிய நால்வர் கொண்ட துணைக் குழுவை,

அனைத்திந்திய காங்கிரஸ் கட்சியின் பொதுக்குழு நிய மிக்கிறது. துணைக்குழு உருவாக்கும் திட்டம் அடுத்த செயற் குழுக்கூட்டத்தில் வைக்கப்பட வேண்டுமென்றும், திட்டச் செயல்பாட்டுக்காக இப்போதைக்கு இரண்டு லட்சம் ரூபாய் நிதிதிரட்ட வேண்டுமென்றும் தீர்மானிக்கப்படுகிறது.''

செயற்குழுவின் திருத்தத்தை அப்படியே ஏற்றுக் கொள்ளு மாறு படேல் என்னிடம் கோரினார்; நான் மறுத்துவிட்டேன். பொதுக் குழு அடுத்த கூட்டத்திலேயே நிதி தேவையை இரண்டு லட்சம் ரூபா யிலிருந்து ஐந்து லட்சம் ரூபாயாகத் திருத்தி, இதில் ஒரு லட்சம் கட்சியின் நிதியிலிருந்து கொடுக்கப்பட வேண்டுமென்றும், எஞ்சிய தொகை நிதி திரட்டல் வாயிலாக அளிக்கப்பட வேண்டுமென்றும் முடிவு செய்தது.

இம்முடிவுக்கு மாறாகத் திரு. இராஜகோபாலாச்சாரியார் செயற்குழுவின் சார்பாக மாற்று ஏற்பாடு ஒன்றைத் தெரிவித்தார். கட்சி நிதியிலிருந்து உடனடியாக ரூபாய் இரண்டு லட்சம் தருவ தற்குப் பதிலாக, திட்டத்திற்குச் செயற்குழு இசைவு தரும்போது, அத்தருணத்தில் இத்திட்டத்திற்காக எவ்வளவு தொகை ஒதுக்க இய லுமோ அவ்வளவு தரலாம் என்பதே அவரது மாற்றுக் கருத்து. அவர் கூறிய சொற்கள் அப்படியே நினைவுக்கு வரவில்லையென்றாலும், அவரது கூற்றின் சாரம் இதுதான் என்பது உறுதி.

இச்சமயத்தில் அவையின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் எதிர்ப்பும் ஆரவாரமும் கட்சியின் நிதியிருப்பு எவ்வளவு என்பதை உடனடியாக அறிவிக்க வேண்டுமென்ற கோரிக்கையும் எழுந்தது. உடனே கட்சித்தலைவர் என்னைத் தனியாக அழைத்துக் கட்சி யின் நிதியிருப்பு அப்போது குறைவாக இருப்பதால், அத்தகவல் கூட்டத்தில் வெளியிடுதல் இயக்கத்தையே பாதிக்கும் என்றும், கூட் டத்தில் காவல்துறை உளவாளிகள் உட்பட வெளியார் பலர் இருப் பதால் எனது திருத்தத்தை வற்புறுத்த வேண்டாம் என்றும் கேட்டுக் கொண்டார். நானும் அதற்கிசைந்து, எனது தீர்மானத்தை வழி மொழிந்தோர் உள்ளிட்ட ஆதரவாளர் பலரின் எதிர்ப்பையும் மீறி, எனது திருத்தத்தைத் திரும்பப் பெற்றுக்கொண்டேன். ஆனால் மறுநாள் நாளேடுகளில் இராஜகோபாலாச்சாரியாரின் திருத்தமின்றி வெளியிடப்பட்டிருந்த தீர்மான வாசகம் எனக்குப் பெரிதும் வியப் பூட்டியது.

பொதுக் குழுவில் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட போது துணைக்குழுவிற்கு அமைப்பாளர் நியமிக்கப்பட வேண்டுமெனச் சில உறுப்பினர்கள் கூறப் பலர் எனது பெயரையே முன்மொழிந் தனர். அப்போது பொதுச்செயலாளர் திரு. விட்டல்பாய் படேல் எழுந்து, ''துணைக்குழு உறுப்பினர் பட்டியலில் சுவாமிஜியின் பெயரே முதலில் இருப்பதால், அவரே துணைக்குழுவின் அமைப்பாளர் என்பது தெளிவு; இதற்கெனத் தனித் தீர்மானம் தேவையில்லை'' என்றார்.

உடனே, நாட்டின் பல்வேறு மாகாணங்களிலிருந்தும் வந் திருந்த உறுப்பினர்கள் பலர் என்னிடம் வந்து தங்கள் மாகாணங் களில் நிலவும் தீண்டாமைக் கொடுமைகளைப் பற்றித்தகவல்கள் தந்து, அங்கு வந்து நேரடியாகப் பார்வையிட வேண்டுமென்று என்னை வேண்டினர். அலகாபாத்திலிருந்து வெளியாகும் ''தி இன்டி பெண்டன்ட்'' என்ற இதழுக்கு ரூ. 25000 நிதியுதவி செய்யச் செயற் குழு முடிவு செய்திருப்பதையும், டெல்லியிலிருந்து வரும் ''காங் கிரஸ்'' எனும் உருது இதழுக்கு ரூ. 10,000/- நிதியுதவி கோரித் திரு வாளர்கள் ஹக்கீம் அஜ்மல்கான், டாக்டர் அன்சாரி ஆகியோர் விடுத்த விண்ணப்பமும் செயற்குழுவின் பரிசீலனையில் இருப்பதை யும் அறிந்து, கட்சியின் நிதிநிலை அப்படியொன்றும் தாழ்வான நிலையில் இருக்காதென்று கருதியதாலும், நேரடிப் பார்வையிடுதல் வாயிலாகத் தகவல் திரட்டுதலே திட்டத்தை நன்கு உருவாக்கத் தேவையான அடிப்படைகளைத் தரும் என்பதாலும், தீண்டாமை ஒழிப்புத் துணைக்குழுவின் தொடக்கச் செயல்பாடுகளுக்கு முன்பண மாக ரூ. 10,000 நிதியொதுக்கித் தருமாறு கட்சித் தலைவருக்குக் கடிதம் எழுதினேன்.

இவ்வளவு நிகழ்ச்சிகளுக்குப் பிறகு, செயற்குழுவின் தீர் மானமாகத் தங்கள் 331 எண்ணிட்ட கடித்தில் குறிப்பிட்டிருந்த வாசக மாவது:

> ''தாழ்த்தப்பட்ட மக்கள் நலப்பணிகளுக்கான திட்டம் வகுப்பதற்காக முன்பணம் கோரி சிரத்தானந்தர் 1922 ஜூன் 8ஆம் தேதி எழுதிய கடிதத்தின் பேரில், துணைக்குழுவின் அமைப்பாளராகக் கங்காதர ராவ் பி. தேஷ்பாண்டே அவர் களைச் செயற்குழு நியமிப்பதுடன், குழுவை விரைவில் கூட்டுமாறு அவரைக் கேட்டுக் கொள்கிறது; சுவாமிஜியின் கடிதம் துணைக்குழுவின் கூட்டத்தில் வைக்கப்படலாம்.''

விளக்கப்படவியலாத கூறு ஒன்றும் இதில் அடங்கியிருப்பது சுட்டப்பட வேண்டும். எனது முதல் கடிதம் கிடைக்கப்பெற்றதாய் பதில் கிடைத்தபின் 1922 ஜூன் 3ஆம் தேதி உடனடியாக மீண்டும் ஹரித்துவாரிலிருந்து எழுதினேன்:

''அன்பார்ந்த படேல் அவர்களுக்கு,

நான், நாளை மறுநாள் ஹரித்துவாரிலிருந்து புறப்பட்டு, ஜூன் 6ஆம் தேதி லக்னோ வந்தடைவேன். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் குறித்த எனது ஆழ்ந்த அக்கறையை நீங்கள் அறிவீர்கள். இந்த நிர்மாணத் திட்டத்தில் பஞ்சாப்பில் கூடக் குறிப்பிடத்தக்க கவனம் ஏதும் செலுத்தப்படவில்லை என்பதை அறிந்து வருந்துகிறேன். உத்திரப்பிரதேசத்தில் இது மிகக்கடுமையான பணியாக இருக்குமென்பதில் ஐயமில்லை. இதில் வேறொரு கடுமையான இடர்ப்பாட்டையும் எதிர்கொள்கிறோம்.

பர்தோலி திட்டத்தின் நான்காவது இனத்தின் கீழ் தரப்பட்டுள்ள குறிப்பில், தீண்டாமைக் கொடுமை மிகுதியாய் நிலவும் பகுதிகளில், அவ்வெளிய மக்களுக்கெனத் தனிக்கிணறுகளும், தனிப்பள்ளிகளும் காங்கிரஸ் கட்சியின் செலவில் நிறுவி நடத்தப்பட வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது. காங்கிரஸ் கட்சிக்கு வலிமை குன்றிய பகுதிகளிலும், காங்கிரஸ் கட்சி உறுப்பினர்களே தாழ்த்தப்பட்ட மக்களுக்கு எதிரான உணர்வு கொண்டவர்களாய் விளங்கும் பகுதிகளிலும் இத்திட்டம் செயலற்றுநிற்கும்; பொதுக்கிணறுகளில் நீர் எடுக்கத் தாழ்த்தப்பட்ட மக்களையும் அனுமதிக்குமாறு அவர்கள் ஊர்ப்பொது மக்களிடையே கோருவார்கள் என நம்புதற்கில்லை. பீஜ்னூர் மாவட்டத்திலுள்ள பொதுக்கிணறுகளில் தாழ்த்தப்பட்ட மக்களும் தண்ணீர் எடுப்பதற்கு எவ்விதத் தடையுமில்லையென அறிகிறேன். ஆனால், பர்தோலித் தீர்மானத்தின் விளைவாகப் புதிய பகுதிகள் பலவற்றில் தாழ்த்தப்பட்டோருக்கெதிரான காழ்ப்புணர்வுகள் தூண்டப்பட்டு வருகின்றன. அண்மைச் சுற்றுப்பயணத்தில் நான் அம்பாலா படைக்குடியிருப்பு, லூதியானா, பாட்டியாலா, லாகூர், அமிர்தசரஸ், ஜாண்டியாலா ஆகிய இடங்களைப் பார்வையிட்ட போது அங்கு தாழ்த்தப்பட்டோர் துயர்துடைப்புப் பணிகள் முற்றிலும் புறக்கணிக்கப்பட்டிருப்பதைக் கண்டேன். டில்லியிலும் அதைச் சூழ்ந்த பகுதிகளிலும் எனது தலைமையில் செயல்படும் 'தலித்தோதார் சபை' மட்டுமே இத்தகைய பணிகளில் ஈடுபட்டு வருகிறது; காங்கிரஸ் கட்சியினர் எதையும் செய்வதில்லை என்பதும்

சுட்டப்பட வேண்டும். பர்தோலித் திட்டத்தின் 4ஆம் பகுதியைத் தக்கவகையில் சீர்திருத்தியமைத்தாலன்றிக் காங்கிரஸ் கட்சியின் திட்டங்களிலேயே தலையாயதான இப்பணி மிகவும் பாதிக்கப் படுமென்று கருதுகிறேன்.

எனவே, காங்கிரஸ் கட்சித் தலைவரின் பார்வைக்கு வைப்ப தற்கு, அவர் அனுமதித்தால் கட்சியின் அடுத்த பொதுக் குழுக் கூட்டத் தில் முன்மொழிவதற்குமான தீர்மான வாசகம் ஒன்றினைக் கீழே தந்தள்ளேன். பர்தோலி தீர்மானத்தின் நான்காவது குறிப்பின் கீழ் காணப்படும் குறிப்புக்கு பதிலாகக் கீழ்வரும் குறிப்பினைப் புகுத்து வதாகத் தீர்மானம் இயற்றலாம்:

தாழ்த்தப்பட்ட மக்களின் கோரிக்கைகளில் (அ) பொது இடங் களில் ஏனைய பொதுமக்கள் அமரும் கம்பளங்களில் தாழ்த்தப்பட் டோரும் அமர அனுமதித்தல் (ஆ) பொதுக்கிணறுகளிலிருந்து தாழ்த் தப்பட்டோரும் நீர் எடுக்க உரிமை தரல், (இ) தாழ்த்தப்பட்டோரின் பிள்ளைகளைத் தேசியப் பள்ளிகள், கல்லூரிகளில் சேர்ந்து படிக்க அனுமதிப்பதுடன், அங்கு மேல்சாதிப்பிள்ளைகளோடு வேறுபாடின் றிப் பழக அனுமதித்தல் ஆகியவற்றை உடனடியாக ஏற்றுச் செயல் படுத்தல் வேண்டும். இத்தகையதோர் தீர்மானத்தின் தேவையை நன்குணர்ந்து, அதனைப் பொதுக்குழு உறுப்பினர்களும் உணர வேண்டுமென விழைகிறேன். பல இடங்களில் தீண்டாமைக் கொடுமைகளுக்கெதிராகத் தாழ்த்தப்பட்ட மக்கள் வெளிப்படை யாக போர்க்கொடி எழுப்பிவரும் இச்சூழலில், இக்கோரிக்கைகளை நாம் ஏற்க மறுத்தால், ஆட்சியாளரின் பிரித்தாளும் சூழ்ச்சிகளுக்குத் தாழ்த்தப்பட்ட மக்கள் எளிதில் பலியாகி விடுவர்.''

1922 ஜுன் 7ஆம் தேதிய லக்னோ மாநாட்டில் எனது மூலத் தீர்மானங்கள் பொதுக் குழுவில் ஏற்று நிறைவேற்றப்பட்டபின், எனது கடிதத்தில் குறிப்பிட்டிருந்தவாறு பர்தோலித் திட்டத்தின் நான்காம் பகுதியின் அடிக்குறிப்புக்கான திருத்தத்தினை அவை முன் வைக்குமாறு பட்டேலை வேண்டினேன். எனது கடித்தைத் துணைக் குழுவுக்கு செயற்குழு அனுப்பவுள்ளது என்றும், பொதுக் குழுவில் அதை வைக்குமாறு வற்புறுத்த வேண்டாமென்றும் அவர் கூறியதை நான் ஏற்றுக் கொண்டேன். எனது முன்மொழிவு தாழ்த்தப்பட்டோர் மேம்பாட்டுத் துணைக்குழுவிற்கு அனுப்பப்படுவதாகக் கூறும் தீர்மானம் எதுவும் எனக்கு இதுவரை தெரிவிக்கப்படவில்லை.

டில்லியிலும் அதைச் சுற்றியுள்ள பகுதிளிலும் தீண்டாமைக்

கொடுமைகள் மிகக்கடுமையாக நிலவுவதால், இதில் உடனடியான கவனம் செலுத்தப்பட வேண்டுமென்பது எனது கருத்து. ஆனால் தீண்டாமையை வேரோடு களைவதற்கான காங்கிரஸ் கட்சியின் செயல்திட்டங்களைப் பற்றி ஆராய்ந்து முடிவு செய்வதைவிட முக்கியமான வேறுபல அரசியல் சிக்கல்களில் செயற்குழுவின் கவனம் மூழ்கியிருப்பதால் துணைக்குழு தனது பணியைத் தொடங்கவே இயலாத சூழலில் உள்ளது. இத்தகைய சூழலில் துணைக்குழு உறுப்பினர் பொறுப்பிலிருந்து எந்த பயனுள்ள பணியையும் ஆற்ற வியலாதவனாயிருப்பதால், அப்பொறுப்பிலிருந்து விலகிக் கொள்கிறேன் என்பதைப் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

டில்லி தங்கள் உண்மையுள்ள,
ஜனவரி 30 சிரத்தானந்த சன்னியாசி

## (2) செயலாளரின் பதில்

அன்பார்ந்த சுவாமிஜி அவர்களுக்கு,

1922 ஜுன் 30ஆம் தேதிய தங்கள் கடிதம் கிடைத்தது. இம்மாதம் (ஜுலை) 18இல் கூடிய செயற்குழு ஒரு தீர்மானத்தின் வாயிலாக, தங்களுக்கு உண்மை விளக்கம் அளித்து தங்களது பொறுப்பு விலகலை மறுபரிசீலனை செய்து விலக்கிக் கொள்ள வேண்டுமாறு என்னைப் பணித்துள்ளது.

நான் சிறையிலிருந்து விடுதலையாவதற்கு முன்பு நடந்த நிகழ்ச்சிகள் பற்றிப் பிறர் வாயிலாகத்தான் அறிய முடியும் என்பதை அறிவீர்கள். ஆனால், 1922 ஜுன் 10ஆம் தேதி நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில் தேஷ்பாண்டேயைக் குழுவின் அமைப்பாளராக நியமிக்கும் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட போது நான் இருந்தேன். துணைக்குழுவின் உறுப்பினர் எவரும் அதன் அமைப்பாளராகச் செயல்பட்டு வருவதாக எனக்குத் தெரிவிக்கப்படவில்லை. துணைக் குழுவுக்கு அமைப்பாளர் நியமிக்கப்பட்டாலன்றிச் செலவுத் தொகையேதும் அனுமதிக்கவியலாது என்பதற்காகச் சம்பிரதாயத் தீர்மானமாகவே தேஷ்பாண்டேயின் நியமனம் நிகழ்ந்து, தொடக்கச் செலவுத் தொகையாக அமைப்பாளரிடம் ரூ. 500 வழங்கவும் முடிவு செய்யப்பட்டது. எனவே, ரூ. 10,000/-க்கு பதிலாக ரூ. 500 எனத் தீர்மானிக்கப் பட்டது தற்செயல் நிகழ்வேயன்றிச் செயற்குழுவுக்கு விருப்ப

மின்மையாலன்று என்பதைத் தாங்கள் உணரவேண்டுகிறேன். எனவே, தீர்மானம் குறிப்பிட்ட வடிவில் நிறைவேற்றப்பட்டதற்கு நான் விளக்கியுள்ள காரணங்களே சரியானவையென்றும், தீண்டாமை நீக்கப்பணிகளுக்காக ரூ. 10,000/- கூட ஒதுக்கச் செயற்குழுவிற்கு மனமில்லை என்று தாங்கள் கருதக்கூடாதென்றும் கேட்டுக் கொள்கிறேன். தாங்கள் துணைக்குழு பொறுப்பேற்றுக் கொண்டுள்ள பணிகள் எத்துணை முக்கியமானவை என்பதையுணரும் செயற்குழு, தங்களது மேலான அறிவுரைகளை ஒருபோதும் புறக்கணிக்காது என்றும் தெளிவுபடுத்த விரும்புகிறேன். தங்கள் கடிதம் முந்தைய செயற்குழுவில் வைக்கப்பட்ட போது ரூ. 500/- முன் பணமாக ஒதுக்கீடு செய்யாமல் விடுபட்டுப்போயிற்றென்பதைச் சுட்டிக்காட்டித் தற்போது நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளதென்பதையும் தங்களுக்கு தெரிவிக்கச் செயற்குழு என்னைப் பணித்துள்ளது. தீண்டாமை ஒழிப்புப் பணியில் தங்களுக்குள்ள நீண்ட அனுபவமும், ஆழ்ந்த அறிவும் துணைக் குழுவின் பணிகளுக்குக் கிடைக்காமல் போகுமெனில், இப்பணிகளுக்கு எத்துணை பேரிழப்பு என்பதைக் கருத்தில் கொண்டும், பொதுநலனை முன்நிறுத்தியும், துணைக்குழுவின் உறுப்பினர் பொறுப்பிலிருந்து விலகுவதான தங்கள் முடிவினை மறு ஆய்வு செய்து, பொறுப்பு விலகலைத் தாங்கள் திரும்பப் பெற்றுக் கொள்வதான நற்செய்தியை எனது அலகாபாத் முகவரிக்கு தந்தி வாயிலாகத் தெரிவிக்க வேண்டுகிறேன். தங்கள் துணைக்குழு கூடி முடிவு செய்யும் தீர்மானங்கள் அனைத்துக்கும் செயற்குழு உரிய மதிப்பளித்துப் பரிசீலனை செய்து உரிய நடவடிக்கை மேற்கொள்ளும் என்பதறிவீர்கள்.

தனியான கிணறுகள், பள்ளிகள் பற்றிய செயற்குழுவின் தீர்மானம் பற்றியும் குறிப்பிட்டுள்ளீர்கள். இது குறித்து முதலில் துணைக் குழு கூடி ஆலோசித்து முடிவு செய்யும் பரிந்துரைகளைச் செயற்குழுவிற்கு அனுப்ப, அவற்றினைச் செயற்குழு பரிசீலித்து ஏற்றுக் கொள்வதே தக்க வழியாகுமெனக் கருதுகிறேன்.

அலகாபாத்திலிருந்து வரும் ''தி இண்டிபென்டெண்ட்'', டெல்லியிலிருந்து வரும் ''காங்கிரஸ்'' ஆகிய இதழ்களுக்கான மானியங்கள் குறித்த தங்கள் தவறான கருத்தை அகற்றுவதும் எனது பொறுப்பாகும். ''தி இண்டிபென்டெண்ட்'' இதழைப் பொறுத்தமட்டில் உத்திரப்பிரதேச மாநிலக் குழுவிற்கு ஏற்கனவே அனுமதிக் கப்பட்ட நிதியிலிருந்து ரூ. 25,000/- கடனாகக் கொடுக்கலாம் என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டதற்கு மேல் வேறெதும்

நிகழவில்லை என்பதையும், ''காங்கிரஸ்'' இதழ் சார்பான விண்ணப் பம் முற்றிலும் மறுக்கப்பட்டு விட்டது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

பம்பாய்,
ஜூலை 23, 1922

தங்கள் உண்மையுள்ள,
மோதிலால் நேரு
பொதுச்செயலாளர்

## (3) சுவாமிஜியின் மறுபதில்

அன்பார்ந்த பண்டித மோதிலால் அவர்களுக்கு,

தாங்கள் பம்பாயிலிருந்து எழுதிய 1922 ஜூலை 23ஆம் தேதிய கடிதம் கிடைத்தது; எனது பொறுப்பு விலகலைத் திரும்பப் பெற்றுக் கொள்ளுமாறு வேண்டியிருந்தீர்கள். எனது முந்தைய கடிதத்தில் நான் சுட்டிக்காட்டியிருந்த உண்மைகள் சில முற்றிலுமாகப் புறக் கணித்து ஒதுக்கப்பட்டிருப்பதால் எனது பொறுப்பு விலகலைத் திரும்பப் பெற்றுக் கொள்ள வியலாதிருக்கிறேன்.

1. துணைக்குழுவின் பணிகளுக்காகக் குறைந்தது 1 லட்சம் ரூபாயாவது கட்சியின் இருப்பு நிதியிலிருந்து வழங்கப்பட வேண்டு மென நான் முதலில் முன்மொழிந்தேன் என்பதும், இதற்குமாறாக, திரு. இராசகோபாலாச்சாரியார் துணைக்குழு, தனது திட்டங்களை உருவாக்கிச் செயற்குழுவின் முன்வைக்கும் சமயத்தில், தீண்டாமை யொழிப்புக்காக அப்போது எவ்வளவு தொகை அளிக்க இயலுமோ அதையளிப்பதாக உறுதிமொழிதந்தால் போதுமெனத் திருத்தம் கொண்டு வந்தார் என்பதும், கட்சித்தலைவர் என்னைத் தனியே அழைத்துக்கட்சியின் அப்போதைய நிதிநிலைமை குறித்து விளக்கி யதன் பேரில் அவரது திருத்தத்தை ஒப்புக்கொண்டேன் என்பதும் உண்மையா அல்லவா என்பதைத் திரு. இராசகோபாலாச்சாரியா ரிடம் விசாரித்து அறிந்துகொள்ள வேண்டுகிறேன். இவை உண்மை யெனில் தீர்மானத்தோடு திருத்தம் ஏன் இடம் பெறவில்லை என் பதற்கான விளக்கம் தேவை.

2. கட்சியின் பொதுக்குழு உறுப்பினர்கள் துணைக் குழுவின் அமைப்பாளராக எனது பெயரையே முன்மொழிந்தார்கள் என்பதும் அப்போது விட்டல்பாய் ஜே. படேல், ''பட்டியலில் சுவாமிஜியின் பெயரே முதலில் இடம்பெற்றுள்ளதால், அவரே துணைக் குழுவின் அமைப்பாளர் என்பது தெளிவு; அதற்கெனத் தனித் தீர்மானம் தேவையில்லை'' எனக் கூறினார் என்பதும் மெய்யா எனப் படேல் அவர்களிடம் விசாரித்தீர்களா? நான் டாக்டர் அன்சாரியிடம் இதைப்பற்றி விசாரித்தபோது, அவர் நானே அமைப்பாளராக நியமிக்கப்பட்டிருப்பதாக 1922 ஜூன் 17 இல் எனக்குக் கடிதம் எழுதியிருந்தார். திரு. அன்சாரி உங்களுடனேயே இருக்கிறார். இதன் உண்மையை அவரிடமே விசாரித்தறிந்து கொள்ளுங்கள். நடந்த நிகழ்ச்சிகளைப் படேல் அவர்கள் மறந்திருக்கமாட்டார் என்றே நம்புகிறேன்.

3. தாழ்த்தப்பட்டோர் மத்தியில் இங்கு எனது உடனடியான அவசரப் பணிகளை எக்காரணத்திற்காகவும் நான் ஒத்திப் போடுதற்கியலாது. எனவே, எனது பொறுப்புவிலகலை அடுத்த செயற்குழுக் கூட்டத்தில் ஏற்றுக்கொள்ள ஆவன செய்யவேண்டுகிறேன். இதனால், விடுதலையுணர்வுடன் தீண்டாமை ஒழிப்புக்கு எனது திட்டத்திற்கேற்பப் பணியாற்ற இயலும். கடந்த ஆண்டு ஜூலை மாதத்திலும் எனது நிலை இதுவே. அமிர்தசரஸ், மியான் வாலி சிறைகளில் நான் பெற்ற அனுபவமும், திரட்டிய தகவல்களும், பண்டை ஆரியர் வாழ்நெறியின் பிரம்மச்சரிய நெறியைக் கடைபிடித்தலின் வாயிலாகவும் தீண்டாமை என்னும் பாவத்தை நாட்டிலிருந்து அகற்றுவதன் வாயிலாகவும் தவிரப் பிறிதெந்த வழிகளாலும் க்ாங்கிரஸ் கட்சியோ அதன் வழிவரும் ஏனைய நாட்டுப்பற்று இயக்கங்களோ நாட்டுக்கு சுயராஜ்யம் பெற்றுத்தரல் இயலாது என்ற எனது நம்பிக்கைக்கு உறுதி சேர்க்கின்றன. தேசியத் தன்னிறைவும், உயிர்த் துடிப்புள்ள வாழ்வும் சுயராஜ்யமின்றி அடையவியலாதவை என்பதால், துறவியாகிய நான் எனது எஞ்சிய வாழ்க்கையைப் பிரம்மச்சரியத்தையும் மெய்யான நாட்டு ஒருமைப்பாட்டையும் பரப்புவதில் கழிக்க எண்ணுகிறேன்.

உங்கள்
சிரத்தானந்த சன்னியாசி.

டில்லி,
ஜூலை 23, 1922

## பின் இணைப்பு : II

# தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கான அரசியல் பாதுகாப்புரிமைகள்

வட்டமேசை மாநாட்டில் டாக்டர் பீம்ராவ் ராம்ஜி அம்பேத்கர் அவர்களும், ராவ்பகதூர் இரட்டை மலை ஸ்ரீநிவாசன் அவர்களும் ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் சிறப்புப் பிரதிநிதித்துவத்திற்கான உரிமைக் கோரிக்கையின் மீது அளித்த பிற்சேர்வான மகஜர்.

சுயாட்சியுடைய இந்தியாவிற்கான அரசியல் அமைப்புச் சட்டத்தில் ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் பாதுகாப்பிற்கான அரசியல் காப்பீடுகளோடு தொடர்புள்ளதும், சிறுபான்மையினர் குழுவின் நடவடிக்கைக் குறிப்புகளின் அச்சிடப்பட்ட பாகத்திற்கு 111-வது பிற்சேர்க்கையாக அமைந்துள்ளதுமான கடந்த ஆண்டு எங்களால் சமர்ப்பிக்கப்பட்ட மகஜரில், ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் சிறப்புப் பிரதிநிதித்துவம் என்பது அத்தகைய பாதுகாப்புரிமைகளில் ஒன்றாக அமையவேண்டும் என்று நாங்கள் கோரியிருந்தோம். ஆனால் நாங்கள் அம்மக்களுக்கு அவசியமானதாகக் கோரிய அந்தச் சிறப்புப் பிரதிநிதித்துவத்தின் விவரங்களை அப்பொழுது நாங்கள் விளக்கவில்லை. அந்த விஷயம் எடுத்துக் கொள்ளப்படுவதற்கு முன்பாகவே, சிறுபான்மையினர் துணைக்குழுவின் நடவடிக்கைகள் முடிந்து விட்டன என்பதுதான் அதற்கான காரணம் ஆகும். சிறுபான்மையினர் துணைக்குழு இந்த ஆண்டில் இவ்விஷயத்தைப் பரிசீலிக்குமானால், அது தேவையான விவரங்களை அளிக்க வேண்டும் எனும் நோக்கத்தில் இந்தப் பிற்சேர்வான மகஜரைச் சமர்ப்பிப்பதன் மூலம், விட்ட குறையைச் சரி செய்திட நாங்கள் எண்ணுகிறோம்.

## 1. சிறப்புப் பிரதிநிதித்துவத்தின் அளவு

### அ. மாகாணச் சட்டமன்றங்களில் சிறப்புப் பிரதிநிதித்துவம்

1. வங்காளம், மத்திய மாகாணங்கள், அசாம், பீகார், ஒரிசா, பஞ்சாப் மற்றும் ஐக்கிய மாகாணங்களில் சைமன் குழுவினாலும் இந்திய மத்தியக் குழுவினாலும் மதிப்பிடப்பட்டுள்ளவாறு ஒடுக்கப்

பட்ட வகுப்பினர் தங்களின் மக்கள் தொகை விகிதத்திற்கு ஏற்றவாறு பிரதிநிதித்துவம் பெற வேண்டும்.

2. சென்னையில் உள்ள ஒடுக்கப்பட்ட வகுப்பினர் 22 சத வீதம் பிரதிநிதித்துவம் பெற்றிட வேண்டும்.

3. பம்பாயில்:

(a) பம்பாய் மாநிலத்தின் ஒரு பகுதியாகச் சிந்து தொடர்ந்து இருக்குமானால் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் 16 சதவீதம் பிரதிநிதித்துவம் பெற்றிட வேண்டும்.

(b) பம்பாய் மாநிலத்திலிருந்து சிந்து பிரிக்கப்படுமானால், அம்மாநிலத்தில் உள்ள முஸ்லீம்களும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரும் மக்கள் தொகையில் சமமாகயிருப்பதால், முஸ்லீம்கள் அனுபவிக்கும் பிரதிநிதித்துவ அளவிற்கு நிகரானப் பிரதிநிதித்துவத்தினை ஒடுக்கப் பட்ட வகுப்பினர் அனுபவிக்க வேண்டும்.

### ஆ. மையக்கூட்டாட்சிச் சட்டமன்றத்தில் சிறப்புப் பிரதிநிதித்துவம்

மையக் கூட்டாட்சிச் சட்ட மன்றத்தின் இரு சபைகளிலும் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் இந்தியாவில் உள்ள தங்களின் மக்கள் தொகை விகிதத்திற்கேற்றவாறு பிரதிநிதித்துவம் பெற்றிட வேண்டும்.

### 1. இட ஒதுக்கீடுகள்

சட்ட மன்றங்களில் பிரதிநிதித்துவ விகிதத்தினைக் கீழ்க் காணும் ஊகங்களின் அடிப்படையில் நிர்ணயித்துள்ளோம்:

1. சைமன் குழுவினாலும் (பாகம் 1, பக்கம் 40) இந்திய மத்தியக் குழுவினாலும் (அறிக்கை, பக்கம் 44) குறிப்பிடப்பட்டுள்ள தாழ்த் தப்பட்ட மக்கள் தொகைக்கான எண்ணிக்கையை, இடங்களைப் பகிர்ந்தளிப்பதற்கான ஒரு அடிப்படையாகக் கொள்வதற்குப் போதிய அளவில் சரியென்று ஏற்றுக் கொள்ளத்தக்கதென நாங்கள் ஊகித் துள்ளோம்.

2. மையக்கூட்டாட்சிச் சட்டமன்றம் இந்தியா முழுவதை யும் உள்ளடக்கி இருக்கும் என்றும், அந்நிலையில் இந்திய

மாநிலங்களிலும், மத்திய அரசால் நிர்வகிக்கப்படும் பிரதேசங் களிலும் விலக்கப்பட்டப் பிரதேசங்களிலும் மேலும் ஆளுநரின் மாகாணங் களிலும் உள்ள ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் மக்கள் தொகை, கூட்டாட்சி சட்ட மன்றத்தில் ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதித்துவ அளவினைக் கணக்கிடுவதற்கு மிகவும் சரியான தொரு கூடுதல் விவரமாக அமையும் என்றும் நாங்கள் ஊகித் துள்ளோம்.

3. பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களின் நிர்வாக எல்லைகள் இன்றுள்ளபடியே தொடரும் என்று நாங்கள் ஊகித்துள்ளோம்.

ஆயின், சில தன்னலக்கட்சியினர் பயமுறுத்துவது போல, ஒடுக்கப்பட்ட மக்கள் தொகை குறித்து நாங்கள் ஊகித்த எண்ணிக்கை கள் சரியில்லை என்று சொல்லப்பட்டால் மற்றும் புதிய மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் கீழ் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் குறைந்த விகிதத்தில் காட்டப்படுவார்களானால் அல்லது மாகாணங்களின் எல்லைகள் மாற்றியமைக்கப்பட்டு, அது தற்போதுள்ள மக்கள் தொகை அளவினைப் பாதிக்குமானால், பிரதிநிதித்துவ விகிதத்தை மாற்றியமைப்பதற்கும், முக்கியத்துவத்தினைக் கோருவதற்கும் கூட ஒடுக்கப்பட்ட வகுப்பினர் உரிமை பெற்றிருக்கிறார்கள். அதே போன்று அனைத்திந்திய கூட்டமைப்பு நடைமுறைக்கு வரவில்லை யென்றால், கூட்டாட்சிச் சட்ட மன்றத்தில் அந்த அடிப்படையில் கணக்கிடப்படும் அவர்களின் பிரதிநிதித்துவ விகிதத்தினை மீண்டும் சரிபடுத்திக் கொள்வதற்கு நாங்கள் சம்மதிக்க விருப்பம் தெரிவிப்போம்.

## 2. பிரதிநிதித்துவ முறை

1. மாகாண மற்றும் மத்திய சட்டமன்றங்களில் ஒடுக்கப் பட்ட வகுப்பினரின் பிரதிநிதிகளை அவர்களின் தனிவாக்காளர் தொகுதி மூலமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமையை அவர்கள் பெற்றிருக்க வேண்டும்.

கூட்டாட்சி அல்லது மத்திய சட்டமன்றத்தின் மேல்சபைக்குப் பிரதிநிதிகளை மாகாண சட்டமன்ற உறுப்பினர்களின் மறைமுக தேர்தல் மூலம் தெரிவு செய்ய முடிவெடுக்கப்படுமானால், விகிதாச் சாரப் பிரதிநிதித்துவம் எவ்வகைப்பட்டதாயிருப்பினும் தாழ்த்தப் பட்டோரின் பங்கினை அவர்களுக்கு வழங்கிட உத்தரவாதமுள்ள ஏற்பாடு செய்யப்படுமேயாயின் தங்களின் மேல்சபைப் பிரதிநிதித்

துவத்தைப் பொருத்தமட்டில் தனி வாக்காளர் தொகுதி கோரும் உரிமையைக் கைவிட அவர்கள் சம்மதிப்பார்கள்.

2. கீழ்க்காணும் நிபந்தனைகள் நிறைவேற்றப்பட்டாலொழிய ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்கானத் தனி வாக்காளர் தொகுதிகள் கூட்டு வாக்காளர் தொகுதிகளாக மாற்றியமைக்கப்படக்கூடாது:

அ. சம்பந்தப்பட்டச் சட்டமன்றங்களில் உள்ள ஒடுக்கப்பட்ட வகுப்புப் பிரதிநிதிகளில் பெரும்பான்மையினர் கோரிக்கையின் பேரில் அந்த மக்களில் வாக்குரிமை பெற்றுள்ள வாக்காளர்களிடையே நடத்தப்படும் வாக்கெடுப்பு அறுதிப்பெரும்பான்மையில் முடியும்போது தனி வாக்காளர் தொகுதி முறை மாற்றியமைக்கப்படலாம்.

ஆ. இருபது ஆண்டுகளுக்குப் பின்பு வயது வந்தோர் எல்லோருக்கும் வாக்குரிமை வழங்கப்படும் வரையில் அத்தகைய வாக்கெடுப்பு செய்யக்கூடாது.

### 3. ஒடுக்கப்பட்ட வகுப்பினர் யாவர் என்பதை விளக்குவதன் அவசியம்

கடந்த காலத்தில் மாகாண சட்டமன்றங்களில் ஒடுக்கப்பட்ட வகுப்பினரைப் பிரதிநிதித்துவம் செய்வதற்கு ஒடுக்கப்பட்ட வகுப்பினரல்லாதவர்கள் நியமிக்கப்பட்டதால் அந்தப் பிரதிநிதித்துவம் பெருமளவு மோசடியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஒடுக்கப்பட்ட வகுப்பைச் சாராதவர்கள் ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதிகளாக நியமனம் பெற்றது நிகழ்ந்துள்ளது. ஒடுக்கப்பட்ட வகுப்பினரைப் பிரதிநிதித்துவம் செய்பவர்களை நியமனம் செய்வதற்கான அதிகாரம் அளிக்கப்பட்டிருந்த ஆளுநர், அந்த அதிகாரத்தை ஒடுக்கப் பட்ட வகுப்பைச் சார்ந்தவர்களை மட்டுமே நியமிப்பதற்குப் பயன்படுத்துமாறு கேட்டுக் கொள்ளப்படவில்லை என்பதுதான் அத்தவறுக்கான காரணம். நியமன முறை, புதிய அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ் தேர்தல் முறையினால் மாற்றப்படவிருப்பதால் இந்த மோசடிக்கு இடமிருக்காது. ஆனால் அவர்களின் சிறப்புப் பிரதிநிதித்துவ நோக்கம் பாதிக்கப்படாமலிருக்கச் சட்டத்திற்குப் புறம்பாக ஏதாவது செய்வதற்கு வழியேதும் விட்டுவைக்கக் கூடாது என்பதற்காக நாங்கள் கோருவதாவது:

1. ஒடுக்கப்பட்ட வகுப்பினர் தனி வாக்காளர் தொகுதிகள் உரிமையை மட்டும் பெற்றிருக்காமல் தங்களினத்தினரால் மட்டுமே பிரதிநிதித்துவம் செய்யப்படும் உரிமையையும் பெற்றிருக்க வேண்டும்.

2. ஒவ்வொரு மாகாணத்திலும் ஒடுக்கப்பட்ட வகுப்பைச் சார்ந்தவர்கள் என்போர் யாவர் என்பதை அங்கே நிலவி வரும் தீண்டாமை முறைக்கும், தேர்தல் நோக்கங்களுக்காகத் தயாரிக்கப் பட்ட பட்டியலில் எந்தப் பெயர் மூலம் குறிப்பிட்டிருக்கின்றனவோ அந்த இனங்களைச் சார்ந்தவர்கள் என்பதைக் குறிக்கும் வகையிலும் கண்டிப்பாக வரையறுத்து விளக்கப்பட வேண்டும்.

### 4. சுட்டுப்பெயர் அல்லது பெயர்க்குறிப்பு

ஒடுக்கப்பட்ட வகுப்பினரைக் குறிப்பதற்குத் தற்போது வழக்கிலிருக்கும் சுட்டுப் பெயர் தொடர்பான இப்பகுதியை அணுகும்போது, தற்போது நிலவி வரும் சுட்டுப்பெயர் அதனைப் பரிசீலித்த ஒடுக்கப் பட்ட வகுப்பு மக்களாலும், அவர்கள் நலனில் அக்கறை கொண்டுள்ள மற்றவர்களாலும் ஆட்சேபிக்கப்படுகின்றது என்பதை நாங்கள் குறிப்பிட விரும்புகின்றோம். இது அவர்களை அவமதிப்பதாகவும், அவமானம் செய்வதாகவும் இருக்கிறபடியால் அரசு அலுவலகக் காரணங்களுக்காக அப்பெயரை மாற்றுவதற்குப் புதிய அரசியலமைப்புச் சட்டம் வரையப்படுவதற்கான இத்தருணத்தைப் பயன் படுத்திக் கொள்வது நல்லது. அவர்கள் ''சாதியற்ற இந்துக்கள்'' ''இந்து மதக் கொள்கை மறுப்பாளர்கள்'' அல்லது ''இந்து மதக் கொள்கையை ஒப்புக்கெள்ளாதவர்கள்'' அல்லது ''ஒடுக்கப்பட்ட வகுப்பினர்'' என்பதற்குப் பதிலாக வேறேதேனும் ஒரு பெயரால் அழைக்கப்பட வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். ஒரு குறிப் பிட்ட பெயரை நாங்கள் வற்புறுத்துவதற்கு எங்களுக்கு அதிகாரமில்லை. நாங்கள் அவைகளை யோசனைக்கு வைக்கத்தான் முடியும். உரிய முறையில் விளக்கமளிக்கப்பட்டால் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் தங்களுக்கு மிகப் பொருத்தமான ஒரு பெயரை ஏற்றுக் கொள்ளத் தயங்க மாட்டார்கள் என்று நம்புகிறோம்.

இந்த மகஜரில் உள்ள கோரிக்கைகளை ஆதரித்து இந்தியாவின் எல்லா இடங்களிலும் உள்ள ஒடுக்கப்பட்ட வகுப்பினரிடமிருந்து ஏராளமான தந்திகளை நாங்கள் பெற்றுள்ளோம்.

## பின் இணைப்பு: III

# சிறுபான்மையினர் ஒப்பந்தம்

### முஸ்லீம்கள், தாழ்த்தப்பட்ட வகுப்பினர், இந்தியக் கிறித்தவர்கள், ஆங்கிலோ - இந்தியர்கள், ஐரோப்பியர்கள் முன்வைத்த வகுப்புப் பிரச்சினைக்கான தீர்வின் ஷரத்துக்கள்

### சிறுபான்மை வகுப்பினரின் கோரிக்கைகள்

1. எந்த ஒரு நபருக்கும் அவரின் பிறப்பு, மதம், சாதி அல்லது சமயக்கோட்பாடு ஆகியவற்றின் அடிப்படையில் அரசாங்கப் பணி, அதிகார அல்லது கௌரவப் பதவி வகித்தல் அல்லது அவர்தம் குடியியல் உரிமைகளை அனுபவித்தல் அல்லது ஏதேனும் வணிகம் அல்லது வாழ்க்கைத் தொழில் மேற்கொள்ளுதல் குறித்து எவ்விதத்திலும் பாரபட்சம் காட்டப்படக்கூடாது.

2. எந்த ஒரு வகுப்பாரையும் பாதிக்கத்தக்க வகையில் சட்டமன்றத்தால் இயற்றப்படும் பாகுபாட்டுச் சட்டங்களுக்கு எதிராகத் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் வகையிலான சட்டரீதியான காப்பு விதிகள் அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட வேண்டும்.

3. பொதுமக்களின் அமைதி மற்றும் ஒழுக்கப் பண்பு ஆகியவற்றின் பராமரிப்புக்குட்பட்டு அனைத்து வகுப்பாருக்கும் முழுமையான சமய சுதந்திரத்திற்கு அதாவது முழுமையான நம்பிக்கை, வழிபாட்டுச் சுதந்திரத்திற்கும், சடங்குகளைக் கடைப்பிடித்தல், பிரச்சாரம், ஒன்றாகக் கூடுதல், மற்றும் கல்வி ஆகியவற்றிற்கான சுதந்திரத்திற்கும் உத்திரவாதமளிக்க வேண்டும்.

சமய மாற்றத்தினாலேயே ஒருவர் யாதொரு குடியியல் உரிமையை அல்லது சலுகையை இழக்கவோ அல்லது தண்டனைக்குள்ளாகவோ கூடாது.

4. சிறுபான்மையினர் தங்களின் சொந்தச் செலவிலேயே அறநிலையங்கள், சமய மற்றும் சமூக நிலையங்கள், பள்ளிகள்

மற்றும் இதரக் கல்வி நிறுவனங்கள் நிறுவுவதற்கும், நிர்வகிப்பதற்கும், கட்டுப்படுத்துவதற்கும், அவற்றில் தங்களின் சமய உரிமையை மேற்கொள்வதற்குமான உரிமை.

5. சிறுபான்மை வகுப்பாரின் மதம், பண்பாடு இனமுறைச் சட்டம் ஆகியவற்றின் பாதுகாப்பிற்காகவும், கல்வி, மொழி, அற நிலையங்கள் ஆகியவற்றின் வளர்ச்சிக்காகவும் அர சாங்கமும், தன்னாட்சி உறுப்புகளும் அளிக்கும் மான்யங்களில் சிறுபான்மை வகுப்பினர்க்குரிய பங்கினைப் பெறுவதற்காகவும் அரசியல் நிர்ணய சட்டத்தில் போதுமான அளவுக்குக் காப்பு விதிகள் உருவமைக்கப் பட வேண்டும்.

6. எல்லாக் குடிமக்களும் குடியியல் உரிமைகளை முழுமையாக அனுபவிப்பதை உறுதி செய்ய வேண்டும். அதைத் தடுத்திடும் நோக்குடன் செயல்படும் எந்தச் செயலையும் அல்லது கடமைப் புறக்கணிப்பினையும் சட்டத்தினால் தண்டிக்கப்படக் கூடிய குற்றமாக்க வேண்டும்.

7. மத்திய, மாகாண அரசுகளில் அமைச்சரவைகளை அமைக்கும்போது முஸ்லீம் வகுப்பைச் சேர்ந்த உறுப்பினர்களையும் கணிசமான எண்ணிக்கையில் உள்ள இதர சிறுபான்மை வகுப்புகளைச் சேர்ந்த உறுப்பினர்களையும் இயன்ற அளவுக்கு அமைச்சரவையில் சேர்த்துக் கொள்வது ஒரு மரபாக்கப்பட வேண்டும்.

8. சிறுபான்மையினர்களின் பாதுகாப்பிற்கும், அவர்களின் முன்னேறறத்திற்கும் மத்திய மற்றும் மாகாண அரசுகளில் சட்ட முறையான துறைகள் அமைக்கப்பட வேண்டும்.

9. எந்த ஒரு சட்டமன்றத்திலும் நியமனம் அல்லது தேர்தல் மூலமாகத் தற்போது பிரதிநிதித்துவத்தினை அனுபவித்துக் கொண்டுள்ள அனைத்து வகுப்பாரும் தனி வாக்காளர் தொகுதிகள் மூலமாக அனைத்துச் சட்டமன்றங்களிலும் பிரதிநிதித்துவம் பெற்றிட வேண்டும். அனைத்துச் சிறுபான்மையினரின் பிரதிநிதித்துவம் பின்னிணைப்பில் குறிப்பிடப்பட்டுள்ள விகிதத்தைக் காட்டிலும் குறைவாக இருத்தல் கூடாது. ஆனால் எந்தப் பெரும்பான்மையினரும்

ஒரு சிறுபான்மையினராகக் குறைக்கப்படவோ அல்லது சமநிலைக்குக் கூடக் கொண்டு வரப்படவோ கூடாது. ஆயினும் பத்து ஆண்டுகள் முடிவுற்ற பிறகு பஞ்சாபிலும் வங்காளத்திலும் உள்ள முஸ்லீம்களும் வேறெந்த மாகாணங்களிலும் உள்ள சிறுபான்மை யினரும் கூட்டு வாக்காளர் தொகுதிகளையோ அல்லது இட ஒதுக்கீட்டுடன் கூடிய கூட்டு வாக்காளர்களையோ ஏற்பது அவர்களின் விருப்பத்திற்குட்பட்டது. அதே போன்று பத்தாண்டுகள் முடிவுற்ற பிறகு மத்திய சட்டமன்றத்தில் யாதொரு சிறுபான்மையினரும் சம்பந்தப்பட்ட ஒப்புதலோடு இடஒதுக்கீட்டுடன் கூடிய கூட்டு வாக்காளர் தொகுதிகளையோ ஏற்பது அவர்களின் விருப்பத்திற்குட்பட்டதாக ஆக்க வேண்டும்.

ஒடுக்கப்பட்ட வகுப்பினரைப் பொறுத்த வரையில் தனி வாக்காளர் தொகுதி முறையினைக் கையாண்டு இருபது ஆண்டுக் கால அனுபவத்திற்கு முன்பும், அதுவும் அந்த வகுப்பாரின் வயது வந்தோர் அனைவருக்கும் நேரிடையான வாக்குரிமை நிறுவப்படும் வரையில் கூட்டவாக்காளர் தொகுதிகளுக்கும் இட ஒதுக்கீட்டு முறைக்கும் மாற்றமேதும் செய்யப்படக்கூடாது.

10. ஒவ்வொரு மாகாணத்திலும் மத்திய அரசைப் பொறுத்தும் அரசுப் பணியாளர் தேர்வாணையம் அமைக்கப்பட வேண்டும். தலைமை ஆளுநர் அல்லது ஆளுநர்களால் நியமனம் மூலமாக நிரப்பப்பட வேண்டிய ஒதுக்கப்பட்ட இடங்கள் ஏதேனும் இருக்குமாயின் அந்த இடங்களின் விகிதத்தைத் தவிர்த்து, எஞ்சியுள்ள அரசுப் பணிகளுக்கான ஆள் எடுப்புப் பணி, அந்தந்தத் தேர்வாணையத்தால்தான் செய்யப்பட வேண்டும். திறமை மற்றும் தேவையான தகுதிகளின் முக்கியத்துவத்திற்கு ஒத்த முறையில் பல்வேறு வகுப்பார் நியாயமான அளவு பிரதிநிதித்துவம் பெற்றிடும் விதத்தில் அத்தகைய தேர்வு செய்யப்பட வேண்டும். தலைமை ஆளுநருக்கும் மற்றும் ஆளுநர்களுக்கும் வழங்கப்படும் அறிவுறுத்தல் பத்திரத்தில் இக்கொள்கைகளை நிறைவேற்றுதற்குரிய அறிவுறுத்தல்கள் சேர்க்கப்பட வேண்டும். அக்காரணத்திற்காக பணிகளின் கூட்டமைவினை அவ்வப்போது மறுசீராய்வு செய்திட வேண்டும்.

*11.* சட்ட மன்றத்தில் நிறைவேற்றப்படும் ஒரு மசோதா எந்தச் சட்டமன்றத்திலாவது ஒரு குறிப்பிட்ட வகுப்பாரைப் பிரதி நிதித்துவம் செய்யும் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கினர் கருத்துப்படி அந்த வகுப்பாரின் சமயத்தையோ அல்லது சமயத்தின் அடிப்படையிலான சமூகப்பழக்கத்தையோ பாதிக்கத்தக்க அல்லது அடிப்படை (ஜீவாதார) உரிமைகளை பாதிக்கத்தக்க மசோதாவாக இருக்குமானால், மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்கள் அதற்கு ஆட் சேபம் தெரிவிப்பதாயின் சட்டமன்னறத்தினால் அம்மசோதா நிறை வேற்றப்பட்ட நாளிலிருந்து ஒரு மாத காலத்திற்குள்ளாக அவைத் தலைவருக்குத் தங்களின் ஆட்சேபங்களை சமர்ப்பிக்கும் உரிமை உண்டு. அவைத்தலைவர் அந்த ஆட்சேபங்களின் தன்மைக்கேற்ற வாறு அவற்றை தலைமை ஆளுநருக்கோ அல்லது ஆளுநருக்கோ அனுப்பி வைக்க வேண்டும். அதன்பின் தலைமை ஆளுநர் அல்லது ஆளுநர் அம்மசோதாவின் செயற்பாட்டினை ஓராண்டுக் காலத்திற்கு நிறுத்தி வைத்து அந்த ஓராண்டு முடிவுற்ற பிறகு அம் மசோதாவை அச்சட்டமன்றம் மேலும் கவனிக்க வேண்டியதற்காகத் திருப்பி அனுப்ப வேண்டும். அம்மசோதா சட்டமன்றத்தினால் மேலும் கவனிக்கப்பட்டு ஆட்சேபங்களுக்கான குறைகளை நீக்கிடவோ, திருத்தியமைக்கவோ சட்டமன்றம் மறுத்தால் ஆளுநர் அல்லது தலைமை ஆளுநர் தமது சம்மதத்தை அளிக்கும் விருப்புரிமையைப் பயன்படுத்தி மசோதாவிற்கு ஒப்புதல் அளிக்கவோ அல்லது மறுக் கவோ செய்யலாம். மேலும் தங்களின் அடிப்படை உரிமைகளில் ஒன்றினை அம்மசோதா மீறுவதாக உள்ளது என்ற காரணத்தினடிப் படையில் அதன் மூலம் பாதிக்கப்பட்ட வகுப்பைச் சார்ந்த இரண்டு உறுப்பினர்கள் அச்சட்டத்தின் செல்லுபடியாகும் தன்மையை உச்ச நீதிமன்றத்தில் எதிர்க்கலாம்.

## சட்டமன்றங்களில் பிரதிநிதித்துவம்

அடைப்புக் குறிகளுக்குள் ( ) இருக்கும் எண்கள் 1931 மக்கள் தொகைக் கணக்கெடுப்புப்படியும் ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் விகிதங்கள் சைமன் அறிக்கைப்படியும்

| — | சபையின் பலம் | இந்துக்கள் | | | முஸ்லீம் | கிறித்தவர் | சீக்கியர் | ஆங்கிலோ-இந்தியர் | மலைவாழினத்தார் | ஐரோப்பியர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | சாதி இந்து | ஒடுக்கப்பட்டோர் | மொத்தம் | | | | | | |
| இந்தியா முழுமையாக (1931) மேலவை... | 200 | (47.5) 101 | (19) 20 | (66.5) 121 | (21.5) 67 | 1 | 6 | 1 | ... | 4 |
| கீழ்சபை ... | 300 | 123 | 45 | 168 | 100 | 7 | 10 | 3 | ... | 12 |
| அசாம் ... | 100 | (48.9) 38 | (13.4) 13 | (62.3) 51 | (34.8) 35 | 3 | ... | 1 | ... | 10 |
| வங்காளம்... | 200 | (18.3) 38 | (24.7) 35 | (43) 73 | (54.9) 102 | 2 | ... | 3 | ... | 20 |
| பீகாரும் ஒரிசாவும்.... | 100 | (67.8) 51 | (14.5) 14 | (82.3) 65 | (11.3) 25 | 1 | ... | 1 | 3 | 5 |

| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பம்பாய் ... | 200 | (68) 88 | (8) 28 | (76) 116 | (20) 66 | 2 | ... | 3 | ... | 13 |
| மத்திய மாகாணங்கள்... | 100 | (63.1) 58 | (23.7) 20 | (86.8) 78 | (44) 15 | 1 | ... | 2 | 2 | 2 |
| சென்னை... | 200 | (71.3) 102 | (15.4) 40 | (86.7) 142 | (7.1) 30 | (3.7) 14 | ... | 4 | 2 | 8 |
| பஞ்சாப் ... | 100 | (15.1) 14 | (13.5) 10 | (28.6) 24 | (56.5) 51 | (13) 1.5 | 20 | 1.5 | ... | 2 |
| ஐக்கிய மாகாணங்கள்... | 100 | (58.1) 44 | (26.4) 20 | (84.5) 64 | (14.8) 30 | 1 | ... | 2 | ... | 3 |

சிந்து மற்றும் வடமேற்கு எல்லைப்புற மாகாணங்கள் மக்கட் தொகையில் முஸ்லீம்கள் சிறுபான்மையினராக உள்ள மாகாணங்களில் அவர்களுக்கு அளிக்கப்படும் அதே விகிதாசாரப் பிரதிநிதித்துவம் சிந்துவில் இந்து சிறுபான்மையினருக்கும் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் இந்து மற்றும் சீக்கிய சிறுபான்மையினருக்கும் வழங்கப்பட வேண்டும்.

## முஸ்லீம்களின் சிறப்புரிமைக் கோரிக்கைகள்

அ. வடமேற்கு எல்லை மாகாணம் மற்ற மாகாணங்களைப் போல், ஆனால் அது ஒரு எல்லை மாகாணமாய் இருப்பதால் அதற்கு வேண்டிய பாதுகாப்புகளுடன், ஒரு ஆளுநரின் மாகாணமாக அமைக்கப்பட வேண்டும். மாகாணச்சட்டமன்ற அமைப்பில் நியமனம் மொத்தத்தில் 10 சதவீதத்தைக் காட்டிலும் அதிகமாகக் கூடாது.

ஆ. பம்பாய் மாநிலத்திலிருந்து சிந்து பிரிக்கப்பட்டுப் பிரிட்டீஷ் இந்தியாவில் உள்ள மற்ற மாநிலங்களைப் போலவே மற்றும் அவைகளின் அடிப்படையிலேயே ஒரு ஆளுநரின் கீழான மாகாண மாக்கப்பட வேண்டும்.

இ. மத்திய சட்டமன்றத்தின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் முஸ்லீம்களின் பிரதிநிதித்துவம் மூன்றில் ஒரு பங்காக இருக்க வேண்டும். மத்தியச் சட்டமன்றத்தில் அவர்களின் பிரதிநிதித்துவம் பின்னிணைப்பில் குறிப்பிடப்பட்டுள்ள விகிதத்தை விடக் குறைவாக இருக்கக் கூடாது.

## ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் சிறப்புரிமைக் கோரிக்கைகள்

அ. நாட்டின் எந்தக் குடிமகனும் குடியியல் உரிமையை அனுபவிப்பதில் தீண்டாமையின் காரணமாக வழக்காறு அல்லது பழக்கமரபு ஆகியவற்றால் திணிக்கப்படும் எவ்விதமான தண்டத் தொகையோ, தீங்கோ அல்லது குறைபாடோ அல்லது குடிமகனுக்கு எதிரான பாகுபாடோ இருக்குமாயின் அது சட்டப்படிச் செல்லாதது என அரசியலமைப்புச் சட்டம் உறுதியாக அறிவிக்க வேண்டும்.

ஆ. ஒடுக்கப்பட்ட வகுப்பிலிருந்து அரசுப் பணிகளுக்கு ஆள் எடுப்பதிலும், காவல் மற்றும் படைத்துறை பணிகளில் சேர்த்துக் கொள்ளும் நல்வாய்ப்பினை நல்குவதிலும் தாராளமான கவனிப்பு வேண்டும்.

இ. பஞ்சாப் நில உடைமை மாற்றச் சட்டத்தின் பலன் பஞ்சாபிலுள்ள ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்கும் வழங்கப்பட வேண்டும்.

ஈ. எந்த ஒரு நிர்வாக அதிகாரியின் காழ்ப்புணர்வு நடவடிக்கை யினாலோ அல்லது நலப்புறக்கணிப்புச் செயலினாலோ பாதிக்கப்

படும் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் தம் குறைகள் களையப்படுவதற்காக ஆளுநருக்கோ அல்லது தலைமை ஆளுநருக்கோ மேல்முறையீடு செய்யும் உரிமை வேண்டும்.

உ. ஒடுக்கப்பட்ட வகுப்பினர் பின்னிணைப்பில் குறிப்பிடப் பட்டுள்ள அளவுக்குக் குறையாத பிரதிநிதித்துவத்தினைப் பெற வேண்டும்.

### ஆங்கிலோ - இந்திய வகுப்பினரின் சிறப்புரிமைக் கோரிக்கைகள்

அ. ஆங்கிலோ- இந்திய வகுப்பினரின் தனி இயல்பான தன்மையைக் கருதி அவர்கள் போதுமான வாழ்க்கைத் தரத்தை மேற்கொள்வதற்காக அவர்களுக்கு அரசு உத்தியோகத்தில் பிரத்தி யேக முக்கியத்துவம் அளிக்கும் விதத்தில் துணைக் குழு எண் - 8 (பணிகள்) ஏற்றுக் கொண்ட உரிமைக் கோரிக்கைகளுக்குத் தாராள மான விளக்கம் அளிக்க வேண்டும்.

ஆ. தமது சொந்தக் கல்வி நிறுவனங்கள் (அதாவது, ஐரோப் பியக் கல்வி முறை) அமைச்சரின் கட்டுப்பாட்டிற்குட்பட்டு தாங்களே நிர்வகிப்பதற்கும் கட்டுப்படுத்துவதற்குமான உரிமை.

தற்போதுள்ள மான்யங்களின் அடிப்படையில் தாராளமான மற்றும் போதுமான மான்ய உதவிக்கும் உதவித் தொகைக்கும் உரிய ஏற்பாடுகள்.

இ. சட்டப்படியான நிலை மற்றும் பரம்பரைக்கான நிருபணம் தேவையெனும் நிபந்தனையின்றி இந்தியாவிலுள்ள மற்ற வகுப் பினர் அனுபவிக்கும் முறைகாண் ஆயத்திற்கு (வழக்கின் சான்றுகளை ஆராய்ந்து தங்களின் தீர்ப்பினை அளிப்பவர்கள், சமமான உரிமை யும், குற்றம் சாட்டப்படும் நபர்கள் ஒரு ஐரோப்பிய அல்லது இந்திய முறை காண் ஆயத்தால் விசாரிக்கப்படுவதற்குமான உரிமையும்.

### ஐரோப்பிய இனத்தவரின் சிறப்புரிமைக் கோரிக்கைகள்

அ. தொழில் மற்றும் வணிக நடவடிக்கைகளில் (செயல் களில்) இந்தியர்களாகப் பிறந்திட்ட குடிமக்களைப் போலவே உரிமைகளையும் உரிமைப் பேறுகளையும் சமமாக அனுபவிக்கும் உரிமை.

ஆ. தற்போது நடைமுறையில் உள்ள குற்றவிசாரணை முறையில் உள்ள உரிமைகளைத் தொடர்வது, அத்தகைய நடைமுறையினைத் திருத்தம் செய்வதற்கோ மாற்றியமைப்பதற்கோ அல்லது சிறுமாற்றம் செய்வதற்கோ ஏதேனும் நடவடிக்கையை அல்லது மசோதாவை தலைமை ஆளுநரின் முன்கூட்டிய ஒப்புதலின்றிச் சட்டமன்றத்தில் முன்னிலைப்படுத்தக் கூடாது.

— மேதகு ஆகா கான் (முஸ்லீம்கள்),
டாக்டர் அம்பேத்கர் (தாழ்த்தப்பட்ட வகுப்பினர்)
ராவ் பகதூர் பன்னீர் செல்வம் (இந்தியக் கிறித்தவர்கள்)
சர் ஹென்றி கித்னே (ஆங்கிலோ-இந்தியர்கள்)
சர் ரோபர்ட்கார் (ஐரோப்பியர்கள்)

## பின் இணைப்பு - IV

# காந்தியின் உண்ணாவிரதம் குறித்து பி.ஆர். அம்பேத்கர் அறிக்கை

***தீண்டப்படாதவர்கள் குறித்தும், அரசியல் சட்டப் பாதுகாப்புகள் வேண்டுமென்ற அவர்களது கோரிக்கைகள் குறித்தும் வட்டமேசை மாநாட்டில் திரு. காந்தி காட்டிய மனப்பான்மை சம்பந்தமாக வெளியிடப்பட்ட அறிக்கை, 19 செப்டம்பர் 1932***

மகாத்மாகாந்தி, சர் சாமுவேல் ஹோர், மற்றும் பிரதமர் ஆகியோரிடையே நடைபெற்ற கடிதப் போக்குவரத்தை அண்மையில் பத்திரிகைகளில் படித்தேன். பிரிட்டிஷ் அரசாங்கம் தானாகவே முன்வந்தோ அல்லது பொதுஜன அபிப்பிராயத்தால் நிர்ப்பந்திக்கப்பட்டோ தனது கருத்தை மாற்றிக்கொள்ளவேண்டும், இல்லையேல் நான் சாகும்வரை உண்ணாவிரதம் மேற்கொள்ளமுடிவு செய்துள்ளேன் என்று திரு.காந்தி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருந்ததைப் படித்துத் திகைப்பும் அதிர்ச்சியும் அடைந்தேன். சாகும்வரை உண்ணாவிரதம் என்ற மகாத்மாவின் அறிவிப்பு என்னை எந்த அளவுக்கு இக்கட்டுக்கு உள்ளாக்கி இருக்கிறது என்பதை எளிதில் புரிந்துகொள்ளலாம்.

வட்டமேசை மாநாட்டில் திரு. காந்தி பேசும்போது வகுப்புப் பிரச்சினை அத்தனை முக்கியத்துவமில்லாத ஒரு சிறு பிரச்சினை என்றே குறிப்பிட்டார். அப்படியிருக்கும்போது இந்தப் பிரச்சினைக்காக அவர் தம் உயிரைப் பணயம் வைப்பதை என்னால் புரிந்துகொள்ளமுடியவில்லை. திரு.காந்தியின் எண்ணப் போக்குடையோரின் மொழியிலேயே கூறுவதானால் வகுப்புப் பிரச்சினை என்பது இந்தியாவின் அரசியலமைப்புச் சட்டம் எனும் நூலின் ஒரு பின்னிணைப்பே அன்றி அது தனி அத்தியாயமல்ல. நாட்டின் சுதந்திரத்தைப் பெறுவதற்காக திரு.காந்தி இத்தகைய மிகத் தீவிரமான நடவடிக்கையை மேற்கொண்டிருப்பாரானால் அது நியாய

மாக இருந்திருக்கும்; வட்டமேசை மாநாட்டு விவாதங்கள் நடைபெற்று வந்தபோது இதைத்தான் அவர் திரும்ப திரும்ப வலியுறுத்தினார். வகுப்புத் தீர்ப்பில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கு விசேடப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டிருப்பதை தமது உயிர்த் தியாகத்துக்கு ஒரு சாக்குப்போக்காக எடுத்துக் கொண் டிருப்பது எனக்கு வேதனையூட்டும் வியப்பை அளிக்கிறது. தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கு மட்டுமன்றி, இந்தியக் கிறித்தவர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள், ஐரோப்பியர்கள், அதே போன்று முகமதியர்கள், சீக்கியர்கள் ஆகியோருக்கும் தனி வாக்காளர் தொகுதிகள் வழங்கப் பட்டிருக்கின்றன. இவ்வாறே நிலப்பிரபுக்கள், தொழி லாளர்கள், வணிகர்கள் ஆகியோர்களுக்கும் தனி வாக்காளர் தொகுதிகள் அறிவிக்கப்பட்டிருக்கின்றன. முகமதியர்களையும் சீக்கியர்களை யும் தவிர இதர வகுப்பினர்களுக்கு தனிப்பிரதிநிதித்துவம் அளிக்கப் பட்டிருப்பதற்கு திரு.காந்தி தம்முடைய எதிர்ப்பைத் தெரிவித் திருக்கிறார். அதேசமயம், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தவிர ஏனை யோர் அனைவரும் தங்களுக்கு வழங்கப்பட்டிருக்கும் தனி வாக் காளர் தொகுதிகளை வைத்துக் கொள்ள அனுமதித்திருக்கிறார்.

தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப் பதற்குச் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடுகளில் ஏற்படக்கூடிய விளைவு கள் குறித்து திரு.காந்தி தெரிவித்துள்ள அச்சம் முற்றிலும் கற்பனை யானது என்பது என் கருத்து. முகமதியர்களுக்கும் சீக்கியர்களுக்கும் தனிவாக்காளர் தொகுதிகள் அளிப்பதால் தேசம் பிளவுபடப் போவ தில்லை எனும்போது தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்குத் தனி வாக்காளர் தொகுதிகள் வழங்குவதால் இந்து சமுதாயம் பிளவு பட்டு விடும் என்று கூறமுடியாது. தாழ்த்தப்பட்டவர்களைத் தவிர ஏனைய வகுப்பினர்களுக்கும் சமூகங்களுக்கும் தனி வாக்காளர் தொகுதிகள் அளிக்கும் ஏற்பாடுகளினால் தேசம் பிளவுபடுமானால் அது அவரது மனச்சான்றை உறுத்தாது.

பெரும்பான்மையினரின் கொடுங்கோன்மையிலிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்வதற்கு சுயராஜ்ய அரசியலமைப்பின் படி விசேட அரசியல் உரிமைகள் பெறுவதற்குத் தகுதிபெற்ற ஒரு வகுப்பினர் எவரேனும் இருப்பார்களேயானால் அவர்கள் தாழ்த்தப் பட்ட வகுப்பினர்தான் என்பதை பலர் உணர்ந்திருக்கிறார்கள் என்பது திண்ணம். உயிர் வாழும் போராட்டத்தில் தாக்குப்பிடித்து நிற்க முடியாத நிலையிலுள்ள வகுப்பினர் இவர்கள், அவர்கள் பிணைக் கப்பட்டுள்ள மதம் அவர்களுக்கு ஒரு கௌரவமான இடத்தை

அளிப்பதற்குப்பதிலாக, அவர்களைத் தொழுநோயாளிகள் போல் நடத்துகிறது; இயல்பான சமூகத்தொடர்புக்கு அருகதையற்றவர்கள் என்று அவர்களுக்கு முத்திரை குத்துகிறது. பொருளாதார ரீதியில் பார்ப்போமானால், தனது அன்றாட ஜீவனத்துக்கு முற்றிலும் உயர் சாதி இந்துக்களை சார்ந்திருக்கவேண்டிய ஒரு வகுப்பாக அது இருந்து வருகிறது; சுதந்திரமாக ஜீவனம் நடத்துவதற்கு அதற்கு எந்த மார்க்கமும் இல்லை. இந்துக்களின் எதிர்ச்சார்பான மனோபாவம் காரணமாக அவர்களுக்கு சகல வழிகளும் அடைக்கப்பட்டுவிட்டன; அது மட்டுமல்ல, தாழ்த்தப்பட்ட வகுப்பினர் வாழ்க்கையில் முன்னேறாத படித் தடுப்பதற்கு இந்துசமயத்தில் எல்லாக் கதவுகளையும் அவர்களுக்கு மூடிவிடுவதற்குத் திட்டமிட்ட முயற்சி மேற்கொள்ளப் பட்டுவருகிறது. கிராமங்களில் சாதாரண இந்தியப் பிரஜைகளாக சிதறுண்டு ஒரு சிறு அமைப்பாக இருந்துவரும் தாழ்த்தப்பட்ட வகுப் பினர் மேற்கொள்ளும் எந்த முயற்சியையும் ஈவு இரக்கமின்றி ஒடுக்குவதற்கு சாதி இந்துக்கள், அவர்கள் என்னதான் தங்களுக்குள் பிளவுபட்டிருந்தாலும், எப்போதும் சதி செய்து வருகின்றனர்.

இந்தச் சந்தர்ப்ப சூழ்நிலைமைகளில், திட்டமிட்ட கொடுங் கோன்மையை எதிர்த்து நடத்தப்பட்டுவரும் வாழ்க்கைப்போராட் டத்தில் வெற்றிபெறும் பாதையில் எத்தனை எத்தனையோ இடர்ப் பாடுகளை எதிர்கொண்டுவரும் ஒரு வகுப்பினர் தம்மைப் பாது காத்துக்கொள்வதற்குள்ள ஒரே மார்க்கம் அரசியல் அதிகாரத்தில் ஓரளவு பங்குபெறுவதுதான் என்பதை நியாயம் உள்ளம்படைத்த எல்லோருமே ஏற்றுக் கொள்வர்.

தாழ்த்தப்பட்ட மக்களின் நலம்விரும்பும் ஒருவர் புதிய அரசிய லமைப்பில் அவர்களுக்கு எவ்வளவு முடியுமோ அவ்வளவு அதி காரத்தைப் பெற்றுத்தருவதற்கு சற்றும் விட்டுக்கொடுக்காமல் போராடு வார் என்றுதான் நினைத்தேன். ஆனால் மகாத்மாவின் சிந்தனைப் போக்குகளே விந்தையானவையாக இருக்கின்றன; புரிந்துகொள் வதற்கு முடியாதவைகளாக இருக்கின்றன. வகுப்புத் தீர்ப்பின்படி தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பெறும் அற்பமான அரசியல் அதிகாரத்தை அதிகப்படுத்துவதற்கு அவர் முயற்சி மேற்கொள்ளாதது மட்டு மன்றி, அவர்கள் பெறக்கூடிய சிறிதளவு அதிகாரத்தையும் அவர் களிடமிருந்து தட்டிப்பறிப்பதற்கு தமது உயிரையே கூடப் பலியிட முன்வந்திருக்கிறார். அரசியல் வாழ்விலிருந்து தாழ்த்தப்பட்ட மக்களை அறவே துடைத்தெறிவதற்கு மகாத்மா செய்யும் முதல் முயற்சி அல்ல இது. சிறிது காலத்திற்கு முன்னர் சிறுபான்மையினர்

ஒப்பந்தம் ஒன்றை செய்துகொள்ள முயற்சி நடைபெற்றது. முஸ்லீம் களும் காங்கிரசும் ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ள அவர் முயன்றார். முஸ்லீம்கள் தங்கள் சார்பில் முன்வைத்த எல்லாப் பதினான்கு கோரிக்கைகளையும் ஏற்க அவர் முன்வந்தார்; இதற்குப் பிரதியாக, தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் சார்பில் நான் முன்வைத்த சமூகப் பிரதிநிதித்துவக் கோரிக்கைகளை எதிர்ப்பதில் தம்முடன் அவர்கள் சேர்ந்து கொள்ள வேண்டும் என்று கோரினார்.

இத்தகையதோர் கருங்காலித்தனமான செயலுக்குத் தாங்கள் உடைந்தையாக இருக்க முடியாது என்று மறுத்து முஸ்லீம் பிரதி நிதிகள் பெருமை. தேடிக்கொண்டனர்; முகமதியர்களும் திரு.காந்தி யும் ஒன்றுபட்டுக் காட்டும் எதிர்ப்பின் விளைவாக ஏற்படக்கூடிய பேரிடரிலிருந்து தாழ்த்தப்பட்டவர்களை அவர்கள் காப்பாற்றினர்.

வகுப்புத்தீர்ப்பை திரு.காந்தி எதிர்ப்பதற்கு என்ன காரணம் என்பதை என்னால் புரிந்துகொள்ளமுடியவில்லை. வகுப்புத் தீர்ப் பானது தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களை இந்து சமுதாயத்திலிருந்து பிரித்துவிடுகிறது என்று அவர் கூறுகிறார். ஆனால் அதேசமயம் இந்துக்களின் தீவிர ஆதரவாளரும் அவர்களது நலன்களை மூர்க்க வெறியோடு ஆதரிப்பவருமான டாக்டர் மூஞ்சே முற்றிலும் வேறுபட்ட தொரு கண்ணோட்டத்தை மேற்கொள்கிறார். லண்டனிலிருந்து திரும்பியதிலிருந்து மூஞ்சே நிகழ்த்தியுள்ள பல சொற்பொழிவுகளில் வகுப்புத்தீர்ப்பு தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களை இந்துக்களிட மிருந்து எவ்வகையிலும் பிரிக்கவில்லை என்று வலியுறுத்தியிருக் கிறார். இன்னும் சொல்லப்போனால், அரசியல் ரீதியாக இந்துக் களிடமிருந்து தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களைப் பிரிக்க நான் செய்துவரும் முயற்சியில் என்னைத் தோற்கடித்துவிட்டதாகக்கூட மார்தட்டிக் கொள்கிறார். இது எப்படியிருந்த போதிலும் வகுப்புத் தீர்ப்புக்கு அவர் சரியான விளக்கத்தைத் தந்துள்ளார் என்றே கருது கிறேன். ஆனால் இதற்கான பெருமை நியாயமாக டாக்டர் மூஞ் சேக்கு சேருமா என்பதை என்னால் கூறமுடியாது. எனவே, தேசிய வாதியும் வகுப்புவாதி அல்ல என்று கருதப்படுபவருமான மகாத்மா காந்தி வகுப்புத்தீர்ப்பை தாழ்த்தப்பட்டவகுப்பினர்கள் சம்பந்தப் பட்டவரை டாக்டர் மூஞ்சே போன்ற வகுப்புவாதிகள் வியாக்யானம் செய்வதற்கு முற்றிலும் மாறானமுறையில் அர்த்தப்படுத்தி இருப்பது வியப்பாக இருக்கிறது. வகுப்புத் தீர்ப்பின் அடிப்படையில் தாழ்த் தப்பட்ட வகுப்பினர் இந்துக்களிடமிருந்து பிரிக்கப்படவில்லை என்று உணரும்போது இது விஷயத்தில் மகாத்மா முற்றிலும் திருப்தி அடைந்திருக்க வேண்டும்; அதுதான் நியாயம்.

வகுப்புத் தீர்ப்பு, இந்துக்களைத் திருப்திப்படுத்தக் கூடியதாக இருப்பது மட்டுமன்றி, தாழ்த்தப்பட்ட மக்களிடையே உள்ளவர்களில் கூட்டுத்தொகுதிகளை ஆதரிக்கும் ராவ்பகதூர் ராஜா, திரு. பாலு அல்லது கோவாய் போன்றோரைத் திருப்திப்படுத்தக் கூடியதாகவும் அமைந்துள்ளது என்று கருதுகிறேன். சட்டமன்றத்தில் திரு. ''ராஜா ஆடிய சொற்சிலம்பம் எனக்கு வேடிக்கையாக இருந்தது. தனிவாக்காளர் தொகுதிமுறையின் தீவிர ஆதரவாளராக இருந்தவர்; இந்துக்களின் கொடுங்கோன்மையை மிகக் கடுமையாக, உக்கிரமாக எதிர்த்தவர்; அப்படிப்பட்டவர் இப்போது கூட்டுவாக்காளர் தொகுதிகளில் நம்பிக்கை வைக்கிறார், இந்துக்களிடம் எல்லையற்ற பரிவையும் பாசத்தையும் காட்டுகிறார்! அவரது இந்தத் திடீர் மனமாற்றத்துக்குக் காரணம் என்ன? வட்டமேசை மாநாட்டில் கலந்து கொள்ள முடியாதுபோனதால் ஏற்பட்ட அஞ்ஞாத வாசத்திலிருந்து வெளிப்பட்டுப் புதுவாழ்வு பெறுவதற்காக அவர் இவ்வாறு செய்தாரா அல்லது அவரிடம் உண்மையிலேயே மனமாற்றம் ஏற்பட்டதா என்பதை என்னால் நிர்ணயிக்க முடியவில்லை; அதுபற்றி விவாதிக்கவும் தயாராக இல்லை.

வகுப்புத்தீர்ப்பை எதிர்ப்பதற்கு திரு.ராஜா இரண்டு காரணங்களை முன்வைக்கிறார்; முதலாவதாக, மக்கட்தொகை அடிப்படையில் பெறக்கூடிய இடங்களின் எண்ணிக்கையைவிட குறைந்த இடங்களை வகுப்புத்தீர்ப்பு தீண்டப்படாதோருக்கு வழங்குகிறது; இரண்டாவதாக, வகுப்புத் தீர்ப்பின் மூலம் தாழ்த்தப்பட்ட மக்கள் இந்து அரவணைப்பிலிருந்து பிரிக்கப்படுகின்றனர்.

அவரது முதல் மனக்குறையை ஒப்புக்கொள்கிறேன். வட்டமேசை மாநாட்டில் தாழ்த்தப்பட்டவர்களைப் பிரதிநிதித்துவப்படுத்தியவர்கள் அவர்களது உரிமைகளைப் பணயம் வைத்து விட்டனர் என்று குற்றம்சாட்டும் திரு.ராஜா இந்திய மத்தியக் கமிட்டி உறுப்பினர் என்றமுறையில் அவர் என்ன சாதித்தார் என்று அவரைக் கேட்க விரும்புகிறேன். அந்தக் கமிட்டியின் அறிக்கையில் தாழ்த்தப்பட்டவர்களுக்கு பின்கண்டவாறு இடங்கள் ஒதுக்கப்பட்டன: சென்னையில் மொத்தம் 150 இடங்களில் 10; பம்பாயில் 14 இடங்களில் 8; வங்காளத்தில் 200 இடங்களில் 8; ஐக்கிய மாகாணங்களில் 182ல் 8; பஞ்சாப் 150ல் 6; பீகார் மற்றும் ஒரிசா 150ல் 6; மத்திய மாகாணங்கள் 125ல் 8; அசாம் 75ல் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் ஆதிவாசிகளுக்கும் 9. மக்கட்தொகை விகிதாசாரத்துடன் ஒப்பிடும்போது தாழ்த்தப்பட்ட மக்களுக்கான இடங்கள் எவ்வளவு மிகக் குறைவாக இருக்

கின்றன என்பதை இதிலிருந்து தெரிந்துகொள்ளலாம்; இது விஷயத்தை மேலும் விரிவுபடுத்த விரும்பவில்லை. இந்த இடங்கள் விநியோகத்தில் ராஜாவுக்கும் பங்கு உண்டு. வகுப்புத் தீர்ப்பை விமர்சிப்பதற்கு முன்னர், மற்றவர்கள்மீது குற்றம் சுமத்துவதற்கு முன்னர் இந்திய மத்தியக் கமிட்டியின் உறுப்பினர் என்ற முறையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களின் சார்பில் இந்த இடவிநியோகத்தை எத்தகைய ஆட்சேபமும் இல்லாமல் எப்படி ஒப்புக்கொண்டார் என்பதை திரு. ராஜா நினைவுகூர வேண்டும். மக்கட் தொகை விகிதாசார அடிப்படையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு இட ஒதுக்கீடு செய்வதே நியாயம், அவர்களது பாதுகாப்புக்கு இது அவசியம் என்று திரு.ராஜா கருதுவாரேயானால் இதனை மத்தியக் கமிட்டியில் வலியுறுத்துவதற்கு வாய்ப்பிருந்தும் அவ்வாறு ஏன் அவர் செய்யவில்லை?

வகுப்புத்தீர்ப்பு தாழ்த்தப்பட்ட வகுப்பினரை சாதி இந்துக்களிடமிருந்து பிரிக்கிறது என்ற அவரது வாதத்தைப் பொறுத்தவரையில் அந்தக் கருத்தை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. தனி வாக்காளர் தொகுதிகள் குறித்து திரு. ராஜாவுக்கு மனச்சான்று ரீதியில் ஏதேனும் ஆட்சேபம் இருக்குமாயின் தனி வாக்காளர் தொகுதிகளில் அவர் போட்டியிட எந்தத் தடையும் இல்லை; அவ்வாறே அவர் தாராளமாகப் போட்டியிடலாம். பொது வாக்காளர் தொகுதிகளில் போட்டியிடவும் அங்கு அவர் வாக்களிக்கவும் உரிமை உண்டு; இதனை அவர் தாரளமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் விஷயத்தில் சாதி இந்துக்களின் மனம் முற்றிலும் மாறியுள்ளது என்று கூரை மீதேறி நின்று கொண்டு உச்சக்குரலில் கூறுகிறார். அவர் கூறுவதை தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நம்பத் தயாராக இல்லாத நிலைமையில் பொது வாக்காளர் தொகுதியில் போட்டியிட்டு வென்று இதனை அவர்களுக்கு மெய்ப்பித்துக் காட்டலாம். தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களிடம் தங்களுக்குப் பரிவும் பாசமும் உண்டு என்று பசப்பிவரும் சாதி இந்துக்களும் திரு.ராஜாவை சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுப்பதன் மூலம் தங்களது நேர்மையை நிரூபிக்கும் வாய்ப்பினைப் பெற்றிருக்கிறார்கள்.

எனவே, வகுப்புத் தீர்ப்பு தனித் தொகுதிகள் வேண்டுமென்று கோருவோரையும், கூட்டுத் தொகுதிகள் வேண்டுமென வலியுறுத்துவோரையும் ஒருசேரத் திருப்திப்படுத்துகிறது எனலாம். இவ்வகையில் பார்க்கும்போது இது ஒரு சமரச ஏற்பாடாகத்

தோன்றுவதால் அதனை ஏற்றுக்கொள்வதே முறை. மகாத்மாவைப் பொறுத்தவரையில் அவர் என்னதான் விரும்புகிறார் என்று எனக்குத் தெரியவில்லை. மகாத்மா காந்தி தனி வாக்காளர் தொகுதி முறையை எதிர்த்த போதிலும் கூட்டு வாக்காளர் தொகுதிகளையும் தனித் தொகுதி முறையையும் அவர் எதிர்க்கவில்லை என்று கருதப்படு கிறது. இது தவறான கருத்தாகும். இன்று அவருடைய கருத்துகள் எத்தகையவையாக இருந்தபோதிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் களுக்கு கூட்டுவாக்காளர் தொகுதிகள் மூலமோ, அல்லது தனி வாக்காளர் தொகுதிகள் மூலமோ விசேடப் பிரதிநிதித்துவம் அளிப் பதை லண்டனில் இருந்தபோது அவர் கடுமையாக எதிர்த்தார். வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் பொதுவாக்காளர் தொகுதிகளில் வாக்களிக்கும் உரிமைக்கு அதிகமாக சட்டமன்றங் களில் அவர்களுக்குத் தனிப்பிரதிநிதித்துவம் அளிப்பது போன்ற வேறு எந்த உரிமைகளையும் அவர் முற்றிலும் எதிர்த்தார். இந்த நிலையைத்தான் அவர்முதலில் மேற்கொண்டார். வட்டமேசை மாநாடு முடிவடையும் தறுவாயில் அவர் என்னிடம் ஒரு திட்டத் தைத் தெரிவித்தார்; அதைப் பரிசீலிக்கத் தயாராக இருப்பதாகவும் கூறினார். இந்தத் திட்டம் அரசியலமைப்புச் சட்ட ஆதரவு இல்லாத வெறும் சம்பிராதய பூர்வமான திட்டம்; இதன்படி தேர்தல் சட்டத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு ஓர் இடம்கூட ஒதுக்கப்படவில்லை.

அந்தத் திட்டம் வருமாறு:

தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த வேட்பாளர்கள் இதர உயர்சாதி இந்து வாக்காளர்களை எதிர்த்துப் பொதுத் தொகுதி யில் போட்டியிடலாம். தாழ்த்தப்பட்ட வேட்பாளர் எவரும் தேர்தலில் தோற்றுப்போனால் அவர் ஒரு தேர்தல் மனுவை தாக்கல் செய்ய வேண்டும்; தீண்டப்படாதவர் என்பதால் தான் தோற்கடிக்கப் பட்டதாக தீர்ப்பைப் பெறவேண்டும். இத்தகைய ஒரு தீர்ப்புப் பெறப்பட்டால் சில இந்து உறுப்பினர்களை அணுகி அவர்களை ராஜினாமா செய்ய இணங்கவைத்து ஒரு காலி இடத்தை உரு வாக்கித் தருவதாக மகாத்மா கூறினார். அப்போது மற்றொரு தேர்தல் நடைபெறும்; ஏற்கனவே தோற்கடிக்கப்பட்ட வேட்பாளரோ அல்லது வேறு எந்த தாழ்த்தப்பட்ட வகுப்பு வேட்பாளரோ இந்து வேட்பாளருக்கு எதிராகப் போட்டியிட்டு தனது அதிர்ஷ்டத்தை சோதித்துப் பார்க்கலாம். அவர் மீண்டும் தோற்கடிக்கப்பட்டால் தான் தீண்டப்படாதவர் என்பதால்தான் தோற்கடிக்கப்பட்டதாக இதே போன்ற தீர்ப்பைப் பெறலாம்; இவ்வாறு அவர் திரும்பத் திரும்ப போட்டியிட்டுக் கொண்டே இருக்கலாம். கூட்டுத் தொகுதி

களும் இட ஒதுக்கீடும் மகாத்மாவை திருப்திப்படுத்தக்கூடும் என்று இப்போது கூட சிலர் கருதிக் கொண்டிருப்பதால்தான் இந்த விவரங்களை இங்கு வெளியிடுகிறேன். மகாத்மா தமது யோசனைகளை வெளியிடாதவரை இந்தப் பிரச்சினை குறித்து விவாதிப்பதில் பயனில்லை என்று நான் ஏன் வலியுறுத்துகிறேன் என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

ஆனால் அதேசமயம், தாமும் தம்முடைய காங்கிரசும் இந்த விஷயத்தில் அவசியமானதைச் செய்யும் என்று மகாத்மா அளிக்கும் வாக்குறுதிகளை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். என் மக்களின் பாதுகாப்பு சம்பந்தப்பட்ட இவ்வளவு முக்கியமான விஷயத்தை பொது இணக்க ஒப்பந்தத்துக்கும் உடன்பாட்டுக்கும் விட்டுவிட நான் தயாராக இல்லை. மகாத்மா சாகாவரம் பெற்றவர் அல்ல; அதேபோன்று காங்கிரசும் என்றென்றும் நீடித்து நிலைத்துநிற்கும் ஒரு சக்தி அல்ல. தீண்டாமையை ஆழக்குழித்தோண்டிப் புதைத்து, தாழ்த்தப்பட்ட வகுப்பினர் உய்வும் உயர்வும் பெறுவதை முழுமுதல் லட்சியமாகக் கொண்டு பாடுபட்ட பல மகாத்மாக்கள் இந்தியாவில் இருந்திருக்கின்றனர்; ஆனால் அவர்களில் ஒவ்வொருவரும் தமது பணியில் தோல்வியே கண்டனர். மகாத்மாக்கள் தோன்றினார்கள், மறைந்தார்கள். ஆனால் தீண்டப்படாதவர்கள் என்றென்றும் தீண்டப்படாதவர்களாகவே இருந்து வருகின்றனர்.

மஹத்திலும் நாசிக்கிலும் நடைபெற்ற சச்சரவுகளில் இந்து சீர்திருத்தவாதிகள் எனப்படுவோர் எந்த லட்சணத்தில் நடந்து கொண்டார்கள் என்ற அனுபவம் எனக்கு இருக்கிறது. தாழ்த்தப்பட்டோரின் நலனில் உண்மையிலேயே அக்கறை கொண்ட எவரும் தாழ்த்தப்பட்ட மக்களை கைதூக்கிவிடும் பொறுப்பை, மேம்பாடையச் செய்யும் சீரிய பணியை இத்தகைய நம்பிக்கை துரோகிகளிடம் ஒப்படைக்க ஒருபோதும் சம்மதிக்க மாட்டார்கள் என்பதை இந்த அனுபவத்தைக் கொண்டு துணிந்து கூறுவேன். நெருக்கடி வேளையில், தங்கள் இனத்தவரின் உணர்ச்சிகளைப் புண்படுத்துவதைவிட தங்கள் கோட்பாடுகளை உதறித் தள்ளிவிடத் தயாராக இருக்கும் சீர்திருத்தவாதிகளால் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு எந்தப் பலனும் இல்லை.

எனவே என்னுடைய மக்களுக்கு அரசியலமைப்புச் சட்டரீதியான பாதுகாப்பு அளிக்கப்படவேண்டுமென்று வலியுறுத்த நான் கடமைப்பட்டிருக்கிறேன். வகுப்புத் தீர்ப்பை மாற்றவேண்டுமென்று திரு.காந்தி விரும்பினால் அதற்கான யோசனைகளை முன்வைப்பதும்,

வகுப்புத் தீர்ப்பு அளித்ததை விட சிறந்த உத்தரவாதத்தை அவை எங்களுக்கு அளிக்கும் என்பதை நிரூபிப்பதும் அவரது பொறுப்பு.

மகாத்மா தாம் உத்தேசித்துள்ள சாகும்வரை உண்ணாவிரத நடவடிக்கையைக் கைவிடுவார் என்று நம்புகிறேன். நாங்கள் தனி வாக்காளர் தொகுதிகளைக் கோருவதன் மூலம் இந்து சமுதாயத்துக்கு எத்தகைய தீங்கும் விளைவிக்கும் எண்ணமும் எங்களுக்கு இல்லை. தனிவாக்காளர் தொகுதிகளை நாங்கள் விரும்புகிறோம் என்றால் அதற்கு அசைக்க, மறுக்கமுடியாத காரணம் உண்டு; எங்கள் கதிப் போக்கு சம்பந்தப்பட்ட விஷயங்களில் சாதிஇந்துக்களின் விருப் பார்வத்தைச் சார்ந்திருக்க வேண்டிய சூழ்நிலையைத் தவிர்க்கும் பொருட்டே இவ்வாறு செய்கிறோம். மகாத்மாவைப் போலவே, நாங்களும் தவறு செய்ய உரிமை கோருகிறோம்; அந்த உரிமையை அவர் எங்களிடமிருந்து பறித்துவிடமாட்டார் என்று நம்புகிறோம். அவர் தம்முடைய சாகும்வரை உண்ணாவிரதத்தை இதைவிட சிறந்த நோக்கத்துக்காக மேற்கொள்ளலாம். இந்துக்களுக்கும் முகமதி யர்களுக்கும் இடையிலும், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் இந்துக் களுக்கும் இடையிலும் நடைபெறும் கலகங்களைத் தடுத்து நிறுத்து வதற்காகவோ அல்லது வேறு எந்த உன்னத நோக்கங்களுக்காகவோ இந்த உண்ணாவிரதத்தை மேற்கொண்டிருந்தால் அவரது நேர்மையை நான் புரிந்துகொண்டிருப்பேன். இந்த உண்ணாவிரத நடவடிக்கை தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நலனுக்கு எவ்வகையிலும் உதவாது, மகாத்மாவின் இந்தச் செயற்பாடு-இது அவருக்குத் தெரியுமோ தெரியாதோ-நாடெங்கிலும் அவரது ஆதரவாளர்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கு எதிராக கொடுங்கோன்மையை, வன்முறையைக் கட்டவிழ்த்து விடுவதில்தான் முடியும்.

இந்து அரவணைப்பிலிருந்து விடுபடுவதற்கு தாழ்த்தப் பட்ட வகுப்பினர் தீர்மானித்துவிட்டால் இவ்வகையான எத்தகைய வல்லந்தமும், நிர்ப்பந்தமும் கொண்டு அவர்களை அந்த அரவணைப் பில் நீடிக்கச் செய்யமுடியாது. இந்து சமயம் அல்லது அரசியல் அதிகாரம் இவற்றில் இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும்படி தீண்டப்படாதவர்களை மகாத்மா கேட்டுக்கொண்டால், அவர்கள் அரசியல் அதிகாரத்தைத்தான் தேர்ந்தெடுப்பார்கள்; இதன் மூலம் மரணத்தின் பிடியிலிருந்து மகாத்மாவைக் காப்பாற்றுவார்கள். அவர் தமது இந்த செயலின் விளைவுகளை அலட்சியமாக நோக்கினா ரானால் இதில் அவர் தகைமை சான்ற வெற்றி பெறுவாரா என்பதில் எனக்கு ஐயமுண்டு. இதில் மற்றொரு முக்கிய விஷயத்தையும் கவ னிக்கவேண்டும். மகாத்மா இந்த வழிமுறையில் இறங்குவதன் மூலம்

கட்டுக்கடங்காத சக்திகளையும் பிற்போக்குச் சக்திகளையும் கட்ட விழ்த்து விடுகிறார்; இந்து சமுதாயத்துக்கும் தாழ்த்தப்பட்ட வகுப் பினர்களுக்கும் இடையே உள்ள பகைமை உணர்வை மேலும் கொம்புசீவி விடுகிறார்; இதன் மூலம் இவ்விரண்டு சமுதாயங்களுக் கும் இடையிலுள்ள பிளவை மேலும் அதிகப்படுத்துகிறார். வட்டமேசை மாநாட்டில் திரு. காந்தியை நான் எதிர்த்தபோது நாட்டில் எனக்கு எதிராக பெரும் கூச்சலும் கூக்குரலும் எழுந்தது; தேசிய லட்சியத்துக்குத் துரோகம் செய்து விட்டவனாக என்னைப் படம்பிடித்துக் காட்டுவதற்கு தேசியப் பத்திரிக்கைகள் எனப்படுப வற்றில் ஒரு சதியே நடந்தது; என் பக்கத்தி லிருந்துவரும் கடிதப் போக்குவரத்து ஒடுக்கப்பட்டது; நடைபெறாத கூட்டங்களையும் மாநாடுகளையும் மிகைப்படுத்தப்பட்ட செய்தி களையும் பிரசுரித்து என் கட்சிக்கு எதிரான பிரசாரம் முடுக்கி விடப்பட்டது. தாழ்த்தப் பட்ட வகுப்பினரது அணிகளில் பிளவு உண்டு பண்ணுவதற்கு ''வெள்ளித் தோட்டாக்கள்'' வரைமுறையற்றுப் பயன்படுத்தப் பட்டன. வன்முறையில் முடிந்த சில மோதல்களும் தலைதூக்கின.

இவையெல்லாம் மீண்டும் பெருமளவில் நடைபெறு வதை மகாத்மா விரும்பவில்லை என்றால் அவர்தமது முடிவை மறுபரிசீலனை செய்து நாசகரமான விளைவுகளை தவிர்க்க வேண் டும்; மகாத்மா இதை விரும்பவில்லை என்றே நினைக்கிறேன். ஆனால் அவருடைய விருப்பத்துக்கும் மாறாக இதைத் தவிர்க்க முடியவில்லை என்றால் இந்த விளைவுகள் பகலும்இரவும்போல் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்வது உறுதி.

இந்த அறிக்கையை முடிப்பதற்கு முன்னதாக, இந்த விஷ யத்தை முடிந்துபோன ஒன்றாகக் கருதுகிறேன் என்று கூறுவதற்கு எனக்கு உரிமை இருந்தபோதிலும் மகாத்மாவின் பிரேரணைகளைப் பரிசீலிக்கத் தயாராக இருக்கிறேன். ஆனால் மகாத்மாவின் உயிரா அல்லது என் மக்களின் உரிமைகளா இவற்றில் ஒன்றைத் தேர்ந் தெடுக்கும் நிலைக்கு அவர் என்னைத் தள்ளமாட்டார் என்று நம்பு கிறேன். ஏனென்றால் என் மக்களைக் குண்டுகட்டாகக் கட்டி தலை முறை காலத்துக்கு சாதி இந்துக்களிடம் ஒப்படைக்க நான் ஒரு போதும் சம்மதிக்க மாட்டேன்.

பி.ஆர். அம்பேத்கர்

# பின் இணைப்பு - V

## திருவாங்கூர் ஆலயப் பிரவேசம்

### மேதகு திருவாங்கூர் மகாராஜா சமஸ்தானத்திலுள்ள கோவில்களைத் தீண்டப்படாதவர்களுக்குத் திறந்து விட்டு 1936 நவம்பர் 12 ஆம் தேதி ஒரு பிரகடனம் வெளியிட்டார். அது கூறுவதாவது:

''நமது சமயத்தின் மெய்ம்மையிலும் வாய்மையிலும் ஆழ்ந்த பற்றுறுதி கொண்டும், அது தெய்வீக வழிகாட்டுதலையும் அனைத்து மடங்கிய சகிப்புத் தன்மையையும் அடிப்படையாகக் கொண்டது என்ற அசைக்க முடியாத உண்மையை ஏற்றுக் கொண்டும், மாறி வரும் தேவைகளுக்கு ஏற்ப நடைமுறையில் அது நூற்றாண்டுக் கால மாகத் தன்னை தகவமைத்துக் கொண்டு வந்திருக்கிறது என்பதை ஐயமற உணர்ந்தும், நமது இந்துப் பிரஜைகளில் எவருக்கும் அவர் களது பிறப்பு, சாதி அல்லது சமூகம் இவற்றின் காரணமாக இந்து தர்மத்தின் ஆதரவும் அரவணைப்பும் எவ்வகையிலும் மறுக்கப் படலாகாது என்பதில் ஆழ்ந்த அக்கறை கொண்டும், உகந்த சூழ் நிலைமைகளைப் பராமரிப்பதற்காகவும் சமய வினை முறைகளும் பழக்க வழக்கங்களும் முறையே கடைப்பிடிக்கப்படுவதற்காகவும் எம்மால் விதிக்கப்படும் நிபந்தனைகளுக்கும் விதிமறைகளுக்கும் உட்பட்டு, எங்களதும் அரசாங்கத்தினதும் ஆதிக்கத்திற்கு உட்பட்ட கோவில்களில் பிரவேசிக்கவோ, வழிபடவோ பிறப்பு அல்லது மதம் காரணமாக எந்த இந்துவுக்கும் இப்போது முதல் எத்தகைய தடையும் இருக்காது என்பதை இதன் மூலம் அறிவிக்கிறோம், ஆணையிடுகிறோம்.''

*இந்தப் பிரகடனம் எத்தகைய ஆன்மீகத்தை அடிப்படையாகக் கொண்டது?*

இந்தப் பிரகடனம் திருவாங்கூர் மகாராஜாவால் அவரது பெயரில் வெளியிடப்பட்டது. ஆனால் திரைமறைவில் இதன் இயக்கு சக்தியாக இருந்தவர் திருவாங்கூர் பிரதமர் சர். சி.பி. ராமசாமி அய்யரே ஆவார். இந்தப் பிரகடனத்திற்குப் பின்னாலுள்ள அவரது செயல் நோக்கங்களை நாம் புரிந்து கொள்ள வேண்டும். 1933லும் சர். சி.பி. ராமசாமி அய்யர் திருவாங்கூரின் பிரதமராக இருந்துவந்தார். இதே 1933ல் தான் குருவாயூர் கோவிலை அனைத்துத் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் திறந்துவிடச் செய்வதற்கு திரு. காந்தி பாடுபட்டு வந்தார்.

ஆலயப் பிரவேசப் பிரச்சினை சம்பந்தப்பட்ட சர்ச்சையில் பங்கு கொண்ட பலரில் சர். சி.பி. ராமசாமி அய்யரும் ஒருவர். இந்த உண்மையை இப்போது யாரும் நினைவு கூர்வதாகத் தெரியவில்லை. ஆனால் இதனை இங்கு நினைவு கூர்வது முக்கியம்; ஏனென்றால் இந்தப் பிரகடனத்தை வெளியிடும்படி அவர் மகாராஜாவைத் தூண்டியதற்கான நோக்கங்களைப் புரிந்துகொள்ள இது உதவும். இந்தப் பிரச்சினையில் 1933ல் அவர் எத்தகைய போக்கினை கடைப்பிடித்தார்? அச்சமயம் அவர் பத்திரிகைகளுக்கு விடுத்த பின்கண்ட அறிக்கையிலிருந்து இதனைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.[1]

''என்னைப் பொறுத்த வரையில் சாதி விதிமுறைகளை நான் கடைப்பிடிப்பதில்லை. எனினும், இப்போதைய ஆலய வழிபாட்டு முறையும் அதன் விவரங்களும் தெய்வீகக் கட்டளைகளை ஆதார அடிப்படையாகக் கொண்டவை என்று நம்புவோர்மனத்தில் இந்த விஷயம் வலுவான, ஆனால் அத்தனை தெளிவற்ற உணர்வுகளைக் கிளர்த்தி விட்டிருக்கிறது என்பதை உணர்கிறேன். சம்பந்தப்பட்ட தரப்பினர் பரஸ்பரம் அனுசரித்துச் செல்வதன் மூலமும், இன்றைய நிலைமையின் எதார்த்தங்களையும் இந்து சமூகத்தின் ஒற்றுமையையும், ஒருமைப்பாட்டையும் பாதுகாக்க வேண்டிய அவசியத்தையும் இந்து சமுதாயத்தைச் சேர்ந்த சமயத் தலைவர்களையும் சமூகத் தலைவர்களையும் உணரச் செய்வதன் மூலமும் மட்டுமே இந்தப் பிரச்சினைக்கு நிரந்தரமாகத் தீர்வு காணமுடியும்.

''அதிரடி முறைகள் இந்த நோக்கத்துக்குப் பயன்பட மாட்டா, உதவ மாட்டா; வேறு எந்த நேரடி நடவடிக்கையும் அரசியல் துறையைவிட இத்துறையில் மிகுந்த தீமையையே விளைவிக்கும். ஆலயப் பிரவேசப் பிரச்சினையை சமபந்தி விருந்து போன்ற பிரச்சினைகளிலிருந்து ஒதுக்கிவிட்டுப் பார்க்கலாம் என்று திரு. காந்தி கூறும் கருத்திலிருந்து மாறுபட வேண்டிய துர்ப்பாக்கிய நிலை எனக்கு ஏற்பட்டுள்ளது. ஆனால் அதேசமயம், தாழ்த்தப்பட்ட மக்களின் சமூக, பொருளாதார மேம்பாடும் முன்னேற்றமும் நமது உடனடியான, அவசரமான வேலைத் திட்டமாக இருக்க வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கர் கூறுவது எனக்கு உடன்பாடானதாக இருக்கிறது.''

1933ல் ஆன்மீக நோக்கங்கள் சர். சி.பி. ராமசாமி அய்யரின் மனத்தைத் தொடவில்லை என்பதை இந்த அறிக்கை காட்டுகிறது. 1933க்குப் பிறகுதான் ஆன்மீக நோக்கங்கள் முன்னணிக்கு வருகின்றன. இந்த ஆன்மீக நோக்கங்கள் 1936ல் அவரது சிந்தனையில் இடம் பெறுவதற்கு ஏதேனும் பிரத்தியேகக் காரணம் உண்டா?

1. ''காங்கிரசும் காந்தியும் தீண்டப்படாதவர்களுக்குச் செய்திருப்பது என்ன'' என்ற டாக்டர் அம்பேத்கரின் நூலிலிருந்து இந்த அறிக்கை இங்கு தரப்பட்டிருக்கிறது.

1936ல் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியை மனத்திற் கொண்டால் தான் இக்கேள்விக்குப் பதிலளிக்க முடியும். அந்த ஆண்டில் ஈழவ சமூகத்தினரின் மாநாடு ஒன்று திருவாங்கூரில் நடைபெற்றது. 1935ல் இயோலாவில் நான் எழுப்பிய மதமாற்றப் பிரச்சினை குறித்துப் பரிசீலிப்பதற்காகவே இந்த மாநாடு ஏற்பாடு செய்யப்பட்டது. ஈழவர் கள் என்பவர்கள் மலபார் எங்கும் பரவியிருக்கும் தீண்டப்படாத சமூகத்தினர். அவர்கள் நன்கு படித்த சமூகத்தினர்; பொருளாதார ரீதி யில் வலுவான நிலையில் இருப்பவர்கள். அத்தோடு அவர்கள் உரிமைக்குக் குரல் கொடுக்கும் சமூகத்தினரும் ஆவர். தங்களது சமூக, மத, அரசியல் உரிமைக்காக அவர்கள் மலபாரில் தொடர்ந்து போராடி வந்திருக்கிறார்கள். ஈழவர்கள் ஒரு மிகப்பெரிய சமூகமாக அமைந்திருக்கிறார்கள். இவ்வளவு பெரிய சமூகத்தினர் இந்துக்களின் அரவணைப்பிலிருந்து பிரிந்து சென்றால் அது இந்து சமூகத்திற்குச் சாவுமணி அடிப்பதற்கு ஒப்பாகும். இத்தகைய நிலைமையில், இந்த மாநாடு இந்த அபாயத்தை உடனடியாக எதார்த்தமாக்கும் கட் டத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. இதுதான் சர். சி.பி. ராமசாமி அய்யரின் மனப்போக்கில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தியது. ஆன்மீக நோக்கங்கள் என்பதெல்லாம் வெறும் சாக்குப் போக்கு, சப்பைக் கட்டு. அவை செயல் புரியத் தூண்டும் சக்திகளாக அமைந்திருக்க வில்லை.

இந்தப் பிரகடனம் எந்த அளவுக்கு மெய்ந்நிகழ்வுகளை மாற்றி யுள்ளது? அது எந்த அளவுக்கு ஒரு பகட்டாரவார நடவடிக்கையாக நீட்டித்தது? திருவாங்கூரில் அப்போது நிலவிய உண்மை நிலவரங் களை அறிந்து கொள்வது சாத்தியமில்லையா? சென்னை சட்டமன் றத்தில் மலபார் ஆலயப் பிரவேச மசோதா பற்றி நடைபெற்ற விவாதத்தின்போது, திருவாங்கூர் சம்பந்தப்பட்ட சில உண்மை விவரங்களை சர். டி. பன்னீர்செல்வம் தெரிவித்தார். அவை உண்மை யாயின், இவை எல்லாம் ஒரு நாடகம் என்பதையே காட்டும்.

சர். டி. பன்னீர் செல்வம் கூறியதாவது:

''இந்த நடவடிக்கைக்கு ஆதரவாகப் பிரதமர் முன்வைத்த வாதங்களில் ஒன்று திருவாங்கூரில் ஆலயங்கள் யாவும் 'தீண்டப் படாதோருக்கு' திறந்துவிடப்பட்டு விட்டன என்பதாகும். எதையும் தன் விருப்பப்படிச் செய்யும் யதேச்சாதிகாரம் கொண்ட மகாராஜா ஓர் உத்தரவின் மூலம் இதனைச் செய்துள்ளார். ஆனால் இந்த உத்தரவு அங்கு எந்த லட்சணத்தில் செயல்படுத்தப்பட்டு வருகிறது? எனக்கு

வந்த தகவல்களின்படி, ஆரம்பத்தில் கரைபுரண்டோடிய உற்சாகத் திற்குப் பிறகு இப்போது ஹரிஜனங்கள் கோவில்களுக்கப் போவதை நிறுத்திவிட்டார்கள்; இதேபோல், கோவில்களுக்குள் ஹரிஜனங்கள் அனுமதிக்கப்படுவதற்கு முன்னர் வழக்கமாக வழிபாடு செய்து வந்த மக்கள் இப்போது கோவில்களுக்கு வந்து வழிபடுவதையே அடியோடு நிறுத்தி விட்டார்கள். ஆலயப் பிரவேச நடவடிக்கை திருவாங்கூரில் உண்மையிலேயே வெற்றி பெற்றுள்ளதா என்பதை அரசாங்கம்தான் தெரிவிக்க வேண்டும்.''

சட்டமன்ற ஒப்புதலுக்காக மசோதா மூன்றாவது முறை கொண்டுவரப்பட்டபோது பலரையும் திடுக்கிட வைக்கும் ஓர் அறிக்கையை சர். டி. பன்னீர் செல்வம் வெளியிட்டார். அவர் கூறியதாவது:

''மூத்த மகாராணிக்குத் தனிப்பட்ட முறையில் சொந்தமான கோவில்கள் இந்தப் பிரகடனத்திலிருந்து விலக்கப்பட்டன என்பது உண்மையா என அறிய விரும்புகிறேன். அவ்வாறு செய்யப்பட்டிருந்தால் அதற்குக் காரணம் என்ன? மேலும், மூத்த மகாராணியின் மகளது திருமணத்தின் போது கோவிலைத் தூய்மைப்படுத்தும் சடங்கை நடத்துவது அவசியமாயிற்று என்று என்னிடம் கூறப்பட்டது. கோவில்களைத் தூய்மைப்படுத்தும் இத்தகைய சடங்குகள் நடந்திருந்தால் ஆலயப் பிரவேசப் பிரகடனத்தின் கதி என்னவாயிற்று?''

இந்த விவரங்களை எல்லாம் பிரதமர் மறுக்கவில்லை; மறுக்கவும் முடியாது என்பது தெளிவு. இவை சர்ச்சைக்கிடமற்றவை என்றால், மலபார் ஆலயப் பிரவேசப் பிரகடனத்தை ஒரு மகத்தான ஆன்மீக சாசனம் என்று வீண்பெருமையடித்துக் கொள்ளாமல் இருப்பது நல்லது.

இந்த ஆலயப் பிரவேச இயக்கம் பற்றித் தாழ்த்தப்பட்ட இன மக்கள் சிலர் கொண்டுள்ள அச்சத்தைப் பற்றி இங்கு குறிப்பிடாமல் இந்த விவாதத்தை முடித்துக் கொள்வது முறையாக இருக்காது. இது முற்றிலும் ஒரு சமூக சீர்திருத்த இயக்கமா அல்லது ஏதேனும் நடைமுறைத் தந்திரமா?

அரசியல் துறையிலும், கல்வித் துறையிலும், ஊதியத் துறையிலும் தாழ்த்தப்பட்ட மக்கள் பெற்றுவரும் விசேட சலுகைகள் அவர்கள் தாழ்த்தப்பட்ட மக்களாக இருப்பதன் காரணமாக வழங்கப்படு

பவையாகும். அவர்கள் தீண்டப்படாதோராக இல்லாது போனால் இந்த விசேட சலுகைகள் சம்பந்தமாக அவர்கள் முன்வைக்கும் உரிமைக் கோரிக்கை உடனே மறுதலிக்கப்படும். தீண்டாமை ஒழிந் தாலும் அவர்கள் எப்போதும் ஏழைகளாகவும் பிற்பட்டவர்களாக வுமே இருப்பர். ஆனால் தீண்டப்படாதோர் என்ற முறையில் அவர் களுக்குள்ள விசேட சலுகைகளை ஏழைகள், பின்தங்கியவர்கள் என்ற முறையில் அவர்கள் பெற முடியாது. அப்படியானால் இந்த ஆலயப் பிரவேசஆர்வலர்களின், ஆதரவாளர்களின் திட்டம்தான் என்ன? இது கோவில்களைத் திறந்துவிடும் திட்டம் மட்டும் தானா அல்லது முடிவாக இந்தச் சலுகைகளைப் பறிக்கும் நோக்கம் கொண்ட திட்டமா? தாழ்த்தப்பட்டோர்களில் சிந்திக்கும் ஆற்றல் படைத்த பலரது மனத்தில் இந்த அச்சம் வேர்கொண்டிருக்கிறது. இந்த அச்சம் உண்மையான அச்சம் என்பதை திருவாங்கூரிலேயே நடைபெற்றுவரும் சம்பவங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம். அகில திருவாங்கூர் புலையர் சேரமர் ஐக்கிய மகாசங்கத்தின் தலை வர்களில் ஒருவர் 1938 நவம்பர் 24ஆம் தேதியிட்ட கடிதம் ஒன்றில் எனக்குப் பின்வருமாறு எழுதுகிறார். அவர் எனக்கு எழுதிய கடிதத் தின் முழு வாசகத்தையும் கீழே தந்திருக்கிறேன்:

முகாம் மைய நாடு, 24.11.1938
கொல்லம்

பெறுநர்
டாக்டர் அம்பேத்கர்
பம்பாய்

மதிப்பிற்குரிய ஐயா,

உங்களது மேலான ஆலோசனையைப் பெறுவதற்காகப் பின் கண்ட விவரங்களைதங்கள்கவனத்திற்குக்கொண்டு வருவதற்கு மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். இந்த சமஸ்தானத்தைச் சேர்ந்த ஹரிஜன மக்கள் ஏற்றுவரும் எல்லாத் தன்ப துயரங்களையும் திட்டவட்ட மான முறையில் தங்களிடம் தெரிவிப்பது எனது தலையாயக் கடமையாகக் கருதுகிறேன்.

1. மாட்சிமை தங்கிய மகாராஜா வெளியிட்ட ஆலயப் பிர வேசப் பிரகடனம் ஹரிஜனங்களுக்கு ஒரு வரப்பிரசாதம் என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்த ஆலயப் பிரவேசத்தைத் தவிர்த்து இதர எல்லா சமூகக் கொடுமைகளுக்கும், அநீதிகளுக்கும் ஹரிஜனங்கள் ஆளாகி வருகிறார்கள். இந்தப் பிரகடனம் எங்களுக்கு மேற்கொண்டு சலுகைகள் அளிக்கப்படுவதற்கு ஒரு தடையாக இருந்து வருகிறது

என்றே கூற வேண்டும். ஹரிஜனங்களின் நிலையை மேம்படுத்துவதற்கு அரசாங்கம் எந்த நடவடிக்கைகளையும் எடுத்துக் கொள்வதில்லை.

2. இங்குள்ள 15 லட்சம் ஹரிஜனங்களில் மிகச் சிலர் பட்டதாரிகள், அரைடஜன் பேர்பட்ட மேற்படிப்புப் படித்தவர்கள், 50 பேர் பள்ளி இறுதிப் படிப்பைப் பூர்த்தி செய்தவர்கள், சுமார் 200 பேர் தாய்மொழிச் சான்று பெற்றவர்கள். அரசாங்கம் பொதுப் பணியாளர் ஆணையத்தை அமைத்திருந்த போதிலும் ஹரிஜனங்கள நியமிக்கப் படுவது மிகவும் குறைவு. எல்லா நியமனங்களும் சவர்ணர்களுக்கு அளிக்கப்படுகின்றன. ஒரு ஹரிஜன் ஒன்று அல்லது இரண்டு வாரங்களுக்குத்தான் நியமிக்கப்படுகிறான். பொதுப் பணியாளர் விதிகளின் படி மனுதாரர் மீண்டும் ஒரு வருடத்திற்குப் பிறகுதான் விண்ணப் பித்துக் கொள்ள முடியும். ஆனால் அதேசமயம் ஒரு சவர்ணர் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட ஆண்டுகளுக்கு நியமிக்கப்படுகிறான். நியமனங்களின் பட்டியல் சட்டமன்றத்தில் சமர்ப்பிக்கப்படும்போது, நியமனங்களின் எண்ணிக்கை வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தின் படி காட்டப்பட்டிருக்கும்; ஆனால் எல்லா ஹரிஜனங்களின் ஒட்டு மொத்தப் பதவிக் காலமும் ஒரு சவர்ணரின் பதவி காலத்துக்கு இணையாக இருக்கும். இந்த மோசடியில் அதிகாரிகளுக்கும் பெரும் பங்குண்டு. இவ்வாறு பொதுப்பணியாளர்துறை சவர்ணர்களின் பொதுச் சொத்தாகி விட்டது. எந்த ஹரிஜனும் இதனால் பலன் அடைவதில்லை.

3. ஒவ்வொரு ஹரிஜனுக்கும் மூன்று ஏக்கர் நிலம் தரப்பட வேண்டும் என்று ஒரு சில ஆண்டுகளுக்கு முன்னர் மகாராஜா உத்தரவிட்டார், ஆனால் அதிகாரிகள் சவர்ணர்களாக இருப்பதால் இத்தகைய ஆணைகளை நிறைவேற்ற அவர்கள் எப்போதுமே விரும்புவதில்லை. நகரங்களுக்குப் பக்கத்தில் மேய்ச்சலுக்காக பரந்த அளவில் நிலம் வழங்க அரசு தயாராக இருந்தும் ஹரிஜனங்களுக்கு ஒரு துண்டு நிலம் கூடக் கிடைக்கவில்லை. ஹரிஜனங்கள் இன்னமும் சவர்ணர்களின் வளாகங்களுக்குள்தான் வசித்து வருகின்றனர்; அங்கு எண்ணற்ற துன்பதுயரங்களுக்கு உள்ளாகி வருகின்றனர். ஏராளமான நிலம் 'ரிசர்வ்' நிலமாக அதாவது தனித்து ஒதுக்கி வைக்கப் பட்டநிலமாக இருந்தும், அவற்றிலிருந்து தங்களுக்கு நிலம் வழங்கக் கோரும் ஹரிஜனங்களின் விண்ணப்பங்களுக்கு எந்த முக்கியத் துவமும் தரப்படுவதில்லை, அவற்றை ஏறெடுத்தும் பார்ப்பதில்லை. பெரும்பான்மையான நிலங்களை சவர்ணர்களே கவர்ந்து கொள் கின்றனர்.

4. ஒவ்வோர் ஆண்டும் சட்டமன்ற உறுப்பினர் தேர்தலின் போது, ஒவ்வொரு ஹரிஜன சமூகத்திற்கும் ஓர் உறுப்பினர் வீதம் சட்டமன்றத்திற்கு அரசாங்கம் சட்டமன்ற உறுப்பினர்களை நியமிக்கிறது. ஹரிஜனங்களுக்குள்ள தேவைகளையும் குறைகளையும் கோரிக்கைகளையும் ஆர்வ விருப்பங்களையும் முன்வைப்பதற்காக இந்த உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டாலும், அவர்கள் அரசாங்க இயந்திரத்தோடு இயந்திரமாக, அதாவது சவர்ணர் அதிகாரிகளின் கைப்பொம்மைகளாகி அவர்களுக்குத்தான் ஆதாயம் தேடித் தருகின்றனர். இவ்வாறு ஹரிஜனங்களின் குறைகளைத் தீர்ப்பதற்கு எந்த வழியும் இல்லாமற் போகிறது.

5. திருவாங்கூரிலுள்ள எல்லா ஹரிஜனங்களும் வயல்களிலும் வளாகங்களிலும் பணிபுரியும் தொழிலாளர்களே ஆவர். அவர்கள் சவர்ணர்களின் ஏவலர்கள், வேலையாட்கள்; அவர்கள் மிருகங்களைப் போல் நடத்தப்படுகிறார்கள்; அவர்களை ஆதரிப்பதற்கு, அரவணைத்துக் கொள்வதற்கு, பேணுவதற்கு, பாதுகாப்பதற்கு யாரும் இல்லை. சமஸ்தானத்தின் பெரும்பாலான பகுதிகளில் ஒவ்வொரு ஹரிஜனுக்கும் நாள் ஒன்றுக்கு ஓரணாதான் கூலியாகத் தரப்படுகிறது. திருவாங்கூர் சமஸ்தானத்தின் பல்வேறு பகுதிகளிலுள்ள தொழிற்சாலைகளில் பணியாற்றும் தொழிலாளர்களும் சரி, அரசு அதிகாரிகளும் சரி எல்போருமே சவணர்கள்தான்; தற்போது அவர்கள் பொறுப்பாட்சிக்காகப் போராடி வருகிறார்கள். அரசாங்கத்திலும் ஆலைகளிலும் தங்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்க வேண்டும் என்று தற்போது நாடெங்கும் ஹரிஜனங்கள் கோரி வருகிறார்கள். ஆனால் திருவாங்கூரில் நடைபெறும் கிளர்ச்சியே சவர்ணர்களின் கிளர்ச்சியாக இருக்கிறது; அரசு உத்தியோகங்களிலிருந்தும் தொழிற்சாலைகளிலிருந்தும் ஹரிஜனங்களை விரட்டியடிக்க அவர்கள் சதி செய்து வருகிறார்கள். தங்களுக்கு அதிக ஊதியமும் கூடுதல் சலுகைகளும் தரப்பட வேண்டுமென்று வற்புறுத்தி வருகிறார்கள். ஆலைத் தொழிலாளர்களின் கிளர்ச்சியால் திருவாங்கூர் மக்கள் எரிச்சலடைந்திருக்கும்போது, ஹரிஜனத் தொழிலாளர்கள் விஷயத்தில் அவர்கள் அணுவளவும் அக்கறை எடுத்துக் கொள்வதில்லை. ஹரிஜனத் தொழிலாளிக்கு மிகமிகக் குறைந்த ஊதியமே தரப்படுகிறது; அதேசமயம் ஆலைத் தொழிலாளர்களோ இவர்களைப் போல் மும்மடங்கு அதிக ஊதியம் பெறுகிறார்கள்.

6. பசி பட்டினியாலும் போதிய வாழ்க்கை வசதியின்மையாலும் உடலும் உள்ளமும் மெலிந்து நலிந்து போன ஹரிஜனக்

குழந்தைகள் சரிவரப் படிப்பில் கவனம் செலுத்த முடியாமல் தேர்வு களில் தோல்வியைத் தழுவ வேண்டிய நிலையில் இருக்கின்றனர். பிரகடனத்திற்கு முன்னர் உயர்நிலைப் பள்ளிகளில் ஹரிஜன மாண வர்களுக்கு ஆறு ஆண்டுக் காலத்துக்குப் பல்வேறு சலுகைகள் அளிக்கப்பட்டு வந்தன; இது இப்போது மூன்றாண்டுக் காலமாகக் குறைக்கப்பட்டு விட்டது; இதனால் பல மாணவர்கள் தங்கள் படிப்பை இடையிலேயே நிறுத்த வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது.

7. தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கென ஒரு தனி இலாகா இருக் கிறது. இதன் தலைவராக திரு. சி.ஓ. தாமோதரன் என்பவர் இருக் கிறார் (பிற்பட்ட வகுப்பினரின் பாதுகாவலர் இவர்). ஆண்டு தோறும் இவ்விலாகாவின் செலவினங்களுக்கென பெரும் தொகை ஒதுக்கப் படுகிறது. ஆனால் ஆண்டு இறுதியில் பார்த்தால் மூன்றில் இரண்டு பங்கு தொகை செலவிடப்படாமல் காலாவதியாகிப் போயிருக்கும். இப்படிப்பட்ட மகா புத்திசாலி இவர்! எனினும் அவ்வப்போது முறைப் படி அரசாங்கத்துக்கு தவறாமல் அறிக்கைகள் சமர்ப்பித்து விடுவார். பணத்தைச் செலவிடுவதற்கு வழியில்லை என்று தமது மனச்சான்றை அடகு வைத்து அந்த அறிக்கைகளில் கூறி வைப்பார் இந்தப் புண்ணி யவான்! தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கென ஒதுக்கப்படும் தொகை யில் 95 சதவிகிதத்தை அதிகாரிகளின் சம்பளம் விழுங்கிவிடும்; எஞ்சிய 5 சதவிகிதம்தான் தாழ்த்தப்பட்ட மக்களின் நலனுக்கு! அதிலும் இந்த இலாகாவைச் சேர்ந்த அதிகாரிகள் எப்போதும் சவர் ணர்களாகவே இருப்பார்கள். திருவாங்கூரில் மூன்று பகுதிகளில் அர சாங்கம் இப்போது தாழ்த்தப்பட்டோருக்காக சில குடியிருப்புகளைக் கட்டப்போகிறது. இது சம்பந்தப்பட்ட அதிகாரிகளும் சவர்ணர்களே. இந்தத் திட்டம் எதிர்பார்த்த அளவு வெற்றி பெறாது என்பது என் அபிப்பிராயம்; ஏனென்றால் இதன் பொருட்டு அதிகம் செலவிடா மல் அரசு கருமித்தனம் செய்கிறது. கொச்சி சமஸ்தானம் ஹரிஜன நலனுக்காக 1 ரூபாய் செலவிடும் போது திருவாங்கூர் அரசாங்கம் ஓரணாதான் செலவிடுகிறது.

திருவாங்கூர் பிரஜைகளில் பெரும்பாலோர் பொறுப்பாட்சிக் காக 'சமஸ்தான காங்கிரஸ்' என்ற அமைப்பின் தலைமையில் தற்போது போராடி வருகிறார்கள். இந்த செல்வாக்கு மிக்க அமைப் பின் தலைவர்கள் நாயர்கள், முகமதியர்கள், கிறிஸ்துவர்கள், ஈழவர் கள் ஆகிய சமஸ்தானத்தின் நான்கு பிரதான சமூகங்களைச் சேர்ந்த வர்கள். சமஸ்தான காங்கிரசின் தலைவரான திரு. தாணுபிள்ளை விடுத்துள்ள அறிக்கையில், தாழ்த்தப்பட்ட இனத்தினருக்கு விசேட

சலுகைகள் அளிக்கப்படும் என்று உறுதி கூறினார். சமஸ்தான காங் கிரசின் போக்கு எப்படியிருக்கும் என்பதைத் தெரிந்து கொள்ளும் சந்தர்ப்பத்திற்காக தாழ்த்தப்பட்ட மக்களின் தலைவர்கள் அனை வரும் காத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் இந்தத் தலைவர்களின் வாக்குறுதிகள் எதார்த்தமானவை அல்ல என்பதை இப்போது நாங்கள் புரிந்து கொண்டு விட்டோம்.

தாழ்த்தப்பட்ட இனத்தவரின் நலனை இந்தத் தலைவர்கள் புறக்கணித்து விட்டார்கள் என்பதில் எனக்கு இப்போது எந்த ஐயமும் இல்லை. தேசியக் கோட்பாடுகளின் அடிப்படையில்தான் சமஸ்தான காங்கிரஸ் ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் இப்போது அது ஒரு வகுப்பு வாத அமைப்பாகி விட்டது. வகுப்புவாத உணர்வே தற்போது இந்தத் தலைவர்களிடம் மேலோங்கி இருக்கிறது. ஒவ்வொரு பொது மேடை யிலும், அறிக்கையிலும், கட்டுரையிலும் இந்த நான்கு பிரதான சமூகத் தினரைப் பற்றி மட்டுமே குறிப்பிடுகிறார்கள். எங்களைப் பற்றிய சிந்தனையே அவர்களுக்கு அடியோடு இல்லை. திருவாங்கூரில் அரசியல் கிளர்ச்சியைத் தலைமை தாங்கி நடத்திவரும் தலைவர் களின் இந்த விபரீதப் போக்கை வைத்துப் பார்க்கும்போது, பொறுப் பாட்சி ஏற்பட்டால் தாழ்த்தப்பட்ட இனத்தவரின் நிலைமை முன் னென்றையும் விட வருந்தத்தக்கதாக, இரங்கத்தக்கதாக, துயரந்தரத் தக்கதாக ஆகிவிடும் என்றே அஞ்சுகிறேன்; ஏனென்றால் பொறுப் பாட்சி ஏற்படும்போது அரசாங்கத்தின் உடைமை முழுதும் மேலே கூறிய சமூகத்தினரின் பிடிக்குள் வந்துவிடும், அப்போது இந்த சமூகத் தினர் தாழ்த்தப்பட்ட மக்களின் உரிமைகளையும் சலுகைகளை யும் விழுங்கி ஏப்பமிட்டு விடுவார்கள். சமஸ்தான காங்கிரசின் செயற்குழுக் கூட்டங்களில் மூன்றில் இரண்டு பங்கு நேரம் ஆலப் புழை கயிறு ஆலை வேலை நிறுத்தம் பற்றிய விவாதத்திற்கு செல விடப்பட்டது; ஆனால் அதே சமயம் சொல்லொண்ணாத் துன்ப துயரங்களை, இக்கட்டுகளை அனுபவித்துவரும் ஹரிஜனத் தொழி லாளர்களைப்பற்றி இக்கூட்டங்களில் ஒரு வார்த்தை கூடச் சொல்லப் படவில்லை; எல்லோரும் வாயடைத்துப் போய் இருந்திருக்கிறார் கள். ஆலைத் தொழிலாளர்கள் சவர்ணர்கள் என்பதும், பொறுப் பாட்சி பெறுவதற்கு நடத்தப்பட்டு வரும் கிளர்ச்சி ஒருவகையான ஹரிஜன - எதிர்ப்பு இயக்கம் என்பதுமே இதற்குக் காரணம். சவர்ணர் களின் நிலைமையை மேம்படுத்துவதே சமஸ்தான காங்கிரசின் ஒவ் வொரு தலைவரது நோக்கமாக இருந்து வருகிறது. தங்கள் முன் னேற்றத்திற்காக தாழ்த்தப்பட்ட இனத்தவரை யார் பலியிடுவது என்பதில் பிரதான சமூகங்களிடையே ஒருவிதப் போட்டி நிலவுவது போல் தோன்றுகிறது.

*இத்தகையதுதான் இந்த சமஸ்தானத்திலுள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் அவலநிலை, துயரநிலை, வேதனை நிலை. இங்கு எங்கள் உரிமைகளை நிலைநாட்டிக் கொள்வதற்கான வழிவகைகள் என்ன? இந்த சந்தர்ப்பத்தில் தாங்கள் மனமுவந்து தங்களது மேலான ஆலோசனையைக் கூறி உதவ வேண்டுகிறேன். உங்கள் பதிலை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.*

*உங்கள் உண்மையான,*
***ஸ்ரீ நாராயணசுவாமி.***

*ஆலயப் பிரவேசத் திட்டத்தின் நோக்கம் தாழ்த்தப்பட்ட மக்களுக்குச் சட்டரீதியாக உள்ள உரிமைகளை முடிவாகப் பறிப்பது தான் என்றால், அப்போது இந்த இயக்கம் ஆன்மீகமானதல்ல என்பது மட்டுமல்ல, மிகவும் விஷமத்தனமானதுமாகும் என்பதும் தெள்ளத் தெளிவு. எனவே, தாழ்த்தப்பட்ட மக்களை பின்வருமாறு எச்சரிப்பது நேர்மை உள்ளம் படைத்த அனைவரது உறுதியான கடமையாகும்: 'காந்தியைப் பற்றி உஷாராக இருங்கள்!''*

## பின் இணைப்பு - VI

# தீண்டப்படாதவர்களை ஒரு தனி சக்தியாக அங்கீகரித்தல்

இந்திய அரசியல் சட்டத்தில் தீண்டப்படாதவர்களின் நிலை குறித்து பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அறிவிப்பு

### முன்னுரை

இந்தியாவின் தேசிய வாழ்க்கையில் ஷெட்யூல்டு வகுப்பினர் ஒரு தனி சக்தி என்றும், அதிகாரம் இந்தியர்கள் கைகளுக்கு மாற்றப் படுவதற்கு முன்னர் புதிய அரசியலமைப்புச்சட்டத்திற்கு அவர்களது அங்கீகாரத்தைப் பெறுவது அவசியம் என்றும் 1944 ஆகஸ்டு 15 ஆம் தேதி வேவல் பிரபு திரு.காந்திக்கு எழுதிய பதில் கடிதத்தில் குறிப் பிட்டிருந்தார். இது குறித்து பத்திரிகைகளில் பல விமர்சனங்கள் வெளிவந்திருந்தன. இந்நிலைமையில் வைசிராய்களும் ராஜாங்க மந்திரிகளும் ஏற்கனவே வெளியிட்டிருந்த அறிவிப்புகளை இங்கு நினைவு கூறுவது அவசியமாகிவிட்டது. கிரிப்ஸ் யோசனைகள் ஷெட்யூல்டு வகுப்பினரை ஒரு தனிசக்தியாக அங்கீகரிக்கவில்லை, அவர்களது சம்மதத்தை அவசியமானதாக்கவில்லை என்ற அனு மானத்தின் அடிப்படையிலேயே இந்த விமர்சனம் அமைந்துள்ளது. கிரிப்ஸ் யோசனைகள் ''இன மற்றும் சமய சிறுபான்மை''யினரைப் பற்றியே குறிப்பிடுகின்றன என்று எடுத்துக்கொண்டு, ஷெட்யூல்டு வகுப்பினர் ஒரு தனி இனத்தினரோ அல்லது ஒரு சமய சிறுபான்மை யினரோ அல்ல என்று வாதிக்கப்படுகிறது.

இந்த விமர்சனம் எவ்வளவு அபத்தமானது என்பதைச் சுட்டிக்காட்ட வேண்டிய அவசியம் இல்லை. ஷெட்யூல்டு வகுப் பினர் உண்மையில் சமயரீதியான சிறுபான்மையினரே ஆவர். இந்து சமயம் தனது தீண்டாமை சித்தாந்தத்தின் மூலம் ஷெட்யூல்டு வகுப்பினரை இந்துக்களின் பிரதான அமைப்பிலிருந்து பிரித்து விட்டது; இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும், இந்துக்களுக்கும் சீக்கி யர்களுக்கும் அல்லது இந்துக்களுக்கும் கிறித்தவர்களுக்கும் இடையே நிலவும் பிரிவினையைவிடவும் உண்மையானதாகவும் பரந்ததாகவும்

இந்தப் பிரிவினையை இது ஆக்கிவிட்டது. தீண்டாமைக் கோட்பாட்டைபோல் பிரிவினைக்கு வழிசெய்யும் வேறொரு கோட்பாட்டை நினைத்துப்பார்க்கவும் முடியாது. ஷெட்யூல்டு வகுப்பினர்களுக்கு அரசியல் உரிமைகளை மறுப்பதற்கு சாக்கு போக்குகளைத் தேடி வரும் மனக்காழ்ப்பு கொண்டவர்கள்தான் இவ்வகையான செப்படி வித்தையில் ஈடுபடமுடியும். வேவல் பிரபுவின் அறிக்கையை கொள்கைப் பிறழ்வு எனக் கருதுபவர்கள் பிரிட்டிஷாரிடமிருந்து இந்தியர்களின் கைகளுக்கு அதிகாரத்தை மாற்றும் எண்ணம் தோன்றிய காலத்திலிருந்தே ஷெட்யூல்டு வகுப்பினர் சம்பந்தமாக மன்னர்பிரான் அரசு எத்தகைய நிலையை மேற்கொண்டு வந்திருக்கிறது என்பதை முற்றிலும் மறந்துவிட்டதாகவே தோன்றுகிறது. பொறுப்பாட்சியைப் பரிந்துரைக்கும் மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை வெளியிடப் பட்ட 1913 ஆம் ஆண்டு முதலே பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு திட்ட வட்டமான நிலையை மேற்கொண்டு வந்துள்ளது. அதாவது ஷெட்யூல்டு வகுப்பினரின் நிலைமை போதிய அரசியலமைப்புச் சட்டவிதி களால் பாதுகாக்கப்படுகிறது என்ற திருப்தி ஏற்படாதவரை எத்தகைய சந்தர்ப்பத்திலும் இந்தியர்கள் கைகளுக்கு அதிகாரம் மாற்றித் தரப்படமாட்டது என்ற நிலையை அது எடுத்து வந்துள்ளது. 1917 முதல் 1941 வரை ராஜாங்க மந்திரிகளும் இந்திய வைசிராய்களும் வெளியிட்ட ஏராளமான அறிக்கைகளில் சிலவற்றைப் பின்வரும் பக்கங்களில் தந்துள்ளோம். ஷெட்யூல்டு வகுப்பினரை நாட்டின் தேசிய வாழ்வில் ஒரு தனியான, முக்கியமான சக்தியாக அங்கீகரிப்பதும், எந்தப் புதிய அரசியலமைப்புச் சட்டத்திற்கும் அவர்களது அங்கீகாரம் அவசியம் என்பதும் புதிய பிரேரணைகள் அல்ல என்பதை இவற்றிலிருந்து தெரிந்துகொள்ளலாம். இந்த இரண்டு பிரேரணைகளுமே கிரிப்ஸ் யோசனைகள் முன்வைக்கப்படுவதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே மன்னர்பிரான் அரசாங்கத்தின் பொறுப்பு வாய்ந்த பிரதிநிதிகளால் அதாவது ராஜாங்க மந்திரி, வைசிராய் ஆகிய இருவராலும் அறிவிக்கப்பட்டிருக்கின்றன. 1940 ஆகஸ்டு 14ல் திரு. அமெரி வெளியிட்ட அறிக்கையும், அதேபோன்று 1940 ஜனவரி 10ல் லின்லித்தோ பிரபு வெளியிட்ட அறிக்கையும் இவ்வகையில் இங்கு குறிப்பிடத்தக்கவையாகும். இந்த அறிக்கைகளை எல்லாம் படித்துப் பார்த்தால் அரசியல் உரிமைகள் சம்பந்தமான ஷெட்யூல்டு வகுப்பினரின் கோரிக்கையை மறுக்க முயல்பவர்கள் தங்கள் பிரசாரம் அறிவீனமானது, விஷமத்தனமானது என்பதை உணர்வார்கள் என்று நம்பலாம்.

## (1)

### இந்திய அரசியலமைப்புச் சீர்திருத்தம் பற்றிய 1917 ஆம் வருட மாண்டேகு- செம்ஸ்போர்டு அறிக்கையிலிருந்து ஒரு பகுதி

155. உழவனுக்கு அரசியல் கல்வி ஊட்டுவதை மிகவும் விரைவுபடுத்தமுடியாது என்பதையும் அது ஒரு கடினமான இயக்க நிகழ்வாக இருக்கும் என்பதையும் நாங்கள் எடுத்துக் காட்டியிருந் தோம். இந்தப் பணி பூர்த்தியடையும்வரை அவனைவிட வலுவான வர்களின், தந்திரசாலிகளின் ஒடுக்குமுறைக்கு அவனது நலன்களை அவன் கைகளிலேயே பத்திரமாக ஒப்படைக்கலாம் அல்லது அவனது நலன்களை சட்டமன்றங்கள் பிரதிபலித்து அவற்றைப் பரிசீலிக்க லாம் என்பது தெளிவாகும்வரை அவனைப் பாதுகாக்கும் அதி காரத்தை நாமே வைத்துக் கொள்ள வேண்டும். தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கும் இது பொருந்தும். அவர்களுடைய பிரதிநிதித் துவத்திற்காக மிகச்சிறந்த ஏற்பாடுகளைச் செய்ய நாம் உத்தேசித் துள்ளோம், இதன் மூலம் இறுதியில் அவர்களும் சுய பாதுகாப்பு விஷ யத்தைக் கற்றுக்கொள்வார்கள். ஆனால் அவர்களுடைய நலன்கள் பாதிக்கப்படுகின்றன, பொதுவான முன்னேற்றத்தில் அவர்களுக்குப் பங்கில்லை என்று தெரியவந்தால் அவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பை நாமே ஏற்றுக்கொள்ள வேண்டும்.

## (2)

### வாக்குரிமை குறித்த சவுத்பாரோ குழுவின் அறிக்கை பற்றி இந்திய அரசாங்கம் 1919 ஏப்ரல் 23 ஆம் தேதியிட்ட ஐந்தாவது அறிக்கையிலிருந்து ஒரு பகுதி.

13. இந்த நலன்கள் உத்தியோக சார்பற்ற நியமனத்தால் பிரதிநிதித்துவப்படுத்தப்பட வேண்டும் என்ற குழுவின் கருத்தை அந்த அறிக்கையில் நாங்கள் அலசி ஆராய்துள்ளோம்.

பொதுவாக இந்தப் பிரேரணைகளை ஏற்றுக்கொள்கிறோம். எனினும் குழு செலுத்தியுள்ள கவனத்தைவிடவும் அதிக கவனம் செலுத்த வேண்டிய ஒரு வகுப்பு இருக்கிறது. இந்திய அரசியலமைப்புச்

| மாகாணத்தின் பெயர் | தாழ்த்தப்பட்ட இனத்தவர் | ஆங்கிலோ இந்தியர்கள் | இந்தியக் கிறித்தவர்கள் | தொழிலாளர்கள் | விலக்கப்பட்ட பகுதிகள் | ராணுவ நலன்கள் | தோட்டத் தொழில், சுரங்கத் தொழில் நீங்கலாக தொழில் துறை நலன்கள் | தொல் குடியினர் | குடியமர்ந்த வங்காளிகள் | மற்றவர்கள் | மொத்தம் | மொத்த உறுப்பினர் எண்ணிக்கையில் சதவிகிதம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| சென்னை | 2 | - | - | - | 2 | - | - | - | - | 2 | 6 | 5 |
| பம்பாய் | - | 1 | 1 | 1 | - | - | - | - | - | 2 | 6 | 5 |
| வங்காளம் | 1 | - | 1 | 1 | - | - | - | - | - | 22 | 5 | 4 |
| ஐக்கிய மாகாணங்கள் | 1 | 1 | 1 | - | - | - | - | - | - | 2 | 5 | 4 |
| பஞ்சாப் | - | 2* | 1 | - | - | 1 | - | - | - | 2 | 6 | 7 |
| பீகாரும் ஒரிசாவும் | 1 | 1 | 1 | 1 | - | - | 1 | 1 | 1 | 2 | 9 | 9 |
| மத்திய மாகாணங்கள் | 1 | 1* | - | - | 2 | - | - | - | - | 1 | 5 | 7 |
| அசாம் | - | 1* | 1 | 1 | 1 | - | - | - | - | 1 | 5 | 9 |
| மொத்தம் | 7 | 7 | 6 | 4 | 5 | 1 | 1 | 1 | 1 | 14 | 47 | - |

* ஐரோப்பியர்களும் ஆங்கிலோ-இந்தியர்களும்

| — | மொத்த மக்கள் தொகை | தாழ்த்தப்பட்டவர் களின் மக்கள் தொகை | மொத்த இடங்கள் | தாழ்த்தப்பட்டவர் களின் மொத்த இடங்கள் |
|---|---|---|---|---|
| | (10 லட்சத் தில்) | (10 லட்சத் தில்) | | |
| சென்னை | 39.8 | 6.3 | 120 | 2 |
| பம்பாய் | 19.5 | .6 | 113 | 1 |
| வங்காளம் | 45.0 | 9.9 | 127 | 1 |
| ஐக்கிய மாகாணங்கள் | 47.0 | 10.1 | 120 | 1 |
| பஞ்சாப் | 19.5 | 1.7 | 85 | - |
| பீகார் மற்றும் ஒரிசா | 32.4 | 9.3 | 100 | 1 |
| மத்திய மாகாணங்கள் | 12.2 | 3.7 | 72 | 1 |
| அசாம் | 6.0 | 0.3 | 54 | - |
| மொத்தம் | 221.4 | 41.9 | 791 | 7 |

சீர்திருத்தங்கள் குறித்த அறிக்கை தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குள்ள பிரச்சினையை தெளிவாக அங்கீகரித்துள்ளது; அவர்களுக்கு உரிய மதிப்பு அளிக்கப்படும் என்று உறுதி தந்துள்ளது. ''அவர்களுடைய பிரதிநிதித்துவத்துக்காக மிகச் சிறந்த ஏற்பாடுகளைச் செய்ய உத்தே சித்திருக்கிறோம்.'' குழுவின் அறிக்கையில் ''இந்துக்களும் - மற்ற வர்களும்'' என்று வருணிக்கப்பட்டிருக்கும் சாதிகள் பல்வேறு வகைகளில் வரையறுத்துக் கூறப்பட்டிருந்தாலும் அவையெல்லாம் ஒரே மக்களையே குறிக்கின்றன. அவர்கள் எந்த அளவுக்கு விலக்கி வைக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது குறித்து பலதரப்பட்ட கருத்துகள் கூறப்பட்ட போதிலும் அவர்கள் எல்லோரும் ஏறத்தாழ சென்னை பஞ்சமர்களின் நிலையிலேயே இருக்கின்றனர்; அவர்கள் இந்து சமுதாயத்துக்கு வெளியே இருக்கின்றனர். அவர்கள் மக்கட் தொகையில் ஏறத்தாழ ஐந்தில் ஒரு பங்கினர்களாக இருந்து வருகின்றனர். மார்லி-மிண்டோ சட்டமன்றங்களில் அவர்கள் இடம் பெறவே இல்லை. குழுவின் அறிக்கை தாழ்த்தப்பட்ட இனத்தினரைப் பற்றி இரண்டு இடங்களில் தான் குறிப்பிடுகிறது; அதுவும் திருப்திகரமான வாக்காளர் தொகுதிகள் இல்லாததால் அவர்களது நியமனத்துக்கு வழிசெய்யப்பட்டிருப்பதாக அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. இந்த மக்களின் நிலை குறித்தோ அல்லது தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்வதற்கு அவர்களுக்குள்ள ஆற்றல் பற்றியோ அறிக்கையில் விவாதிக்கப்படவில்லை. அவர்களுக்கு முழு பரிந்துரைக்கும் நியமன எண்ணிக்கையையும் அது கூறவில்லை. நியமன இடங்களைக் கட்டுப்படுத்துவது பற்றி அறிக்கையின் 24 ஆவது பாரா குறிப் பிட்டிருக்கிறது. தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களை இதில் சம்பந்தப் படுத்தி எதுவும் கூறப்படவில்லை. இந்த வகுப்பினர்களுக்குப் பின் கண்டவாறு பிரதிநிதித்துவம் அளிக்கலாம் என்று குழு பரிந்துரைத் திருக்கிறது.

இந்தப் புள்ளி விவரங்களே நிலைமையை நன்கு விளக்கும். பிரிட்டிஷ் இந்தியாவின் மொத்த மக்கட்தொகையில் ஐந்தில் ஒரு பங்கினருக்கு எண்ணூறு இடங்களில் ஏழு இடங்கள் ஒதுக்கப்பட வேண்டும் என்று பரிந்துரைக்கப்படுகிறது. எல்லா சட்டமன்றங்களி லும் ஏறத்தாழ ஆறில் ஒரு பங்கு விகிதத்திலுள்ள அதிகாரிகள் தாழ்த்தப்பட்டோரின் நலன்களைக் கவனத்தில் கொள்வார்கள் என்று கூறப்படுவது உண்மையே; ஆனால் இத்தகைய ஏற்பாட்டை சீர்திருத்த அறிக்கை குறிக்கோளாகக் கொள்ளவில்லை என்பது நமது கருத்து. தாழ்த்தப்பட்ட வகுப்பினரும் தற்காத்துக் கொள்ளும் பாடத்தைக்

கற்றுக் கொள்ளவேண்டும் என்று சீர்திருத்த அறிக்கையைத் தயாரித்தவர்கள் குறிப்பிட்டிருக்கின்றனர். அறுபது அல்லது ஏழுபது சாதி இந்துக்களைக் கொண்ட ஒரு சட்டமன்றத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஓர் உறுப்பினரைச் சேர்த்துக் கொண்டாலே இந்தப் பலன் கிட்டும் என்று நம்புவது வெறும் பிரமையாகும். அறிக்கையின் பத்திகள் 151, 152, 154, 155ல் தெரிவிக்கப்பட்டிருக்கும் கோட்பாடுகளை நன்கு பயன்படுத்திக் கொள்வதற்குத் தீண்டப்படாதவர்களைப் பரந்த மனப்பான்மையுடன் நடத்துவது அவசியம். ஒவ்வொரு மன்றத்திலும் தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதிகள் போதிய எண்ணிக்கையில் இருக்க வேண்டும் என்று கருதுகிறோம்; அப்போதுதான் முற்றிலும் செயலற்றவர்களாகி விடாதபடி அவர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள முடியும்; அதேசமயம் கூட்டு நடவடிக்கை எடுப்பதற்கான ஆற்றலை ஓரளவு பெருக்கிக் கொள்ள முடியும். சென்னையைப் பொறுத்தவரையில் அவர்களுக்கு ஆறு இடங்கள் தரப்பட வேண்டும் என்று பரிந்துரைக்கிறோம்; வங்காளம், ஐக்கிய மாகாணங்கள், பீகார், ஒரிசா ஆகிய மாகாணங்களில் நான்கு இடங்களும், மத்திய மாகாணங்களிலும் பம்பாயிலும் இரண்டு இடங்களும், இதர இடங்களில் ஒன்றும் அவர்களுக்கு தர வேண்டும். இவ்வாறு பார்க்கும் போது குழுவின் அறிக்கை மாற்றப்பட வேண்டும் என்று கருதுகிறோம்.

★ ★

## *(3)*

### *சட்டக்கமிஷன் நியமனம் குறித்து 1927 மார்ச் 30 ஆம் தேதி இந்தியா மந்திரி என்ற முறையில் பிர்கென்ஹெட் பிரபுக்கள் சபையில் நிகழ்த்திய உரையிலிருந்து ஒரு பகுதி*

.... .... தாழ்த்தப்பட்ட வகுப்பினர் விஷயத்தை இப்போது எடுத்துக் கொள்கிறேன். இந்தியாவில் 6 கோடி தாழ்த்தப்பட்ட மக்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய நிலைமை முன்னர் போல் அத்தனை மோசமானதாகவும் துயரமிக்கதாகவும் இல்லாவிட்டாலும் அது இன்னமும் மோசமானதாகவும் துயரமிக்கதாகவும் இருந்து வருகிறது. எல்லா சமூக உறவுகளிலிருந்தும் அவர்கள் துண்டிக்கப்பட்டிருக்கின்றனர். சூரிய ஒளிக்கும் அவர்களை வெறுப்போர்களுக்கும்

இடையே இந்தத் தாழ்த்தப்பட்ட மக்கள் வந்துவிட்டால் அவர்களை வெறுப்போருக்கு அந்த சூரியனே கூட உருக்குலைந்து போனதாக, கறைபட்டுப் போனதாகத் தோன்றும். அவர்கள் தங்கள் தாகத்தைத் தணித்துக் கொள்ள வேண்டுமானால் மைல் கணக்கில் நடக்க வேண்டும். அவர்கள் காலம் காலமாக, தலைமுறை தலைமுறையாக ''தீண்டப்படாதவர்கள்'' என்றே வேதனை மிக்க முறையில் அறியப் பட்டு வந்திருக்கின்றனர். அவர்கள் ஆறு கோடிப் பேர் இந்தியாவில் இருக்கின்றனர். அவர்களது ஒரு பிரதிநிதியை இந்தக் கமிஷனில் நான் சேர்த்துக் கொள்ள வேண்டாமா? இந்த வகுப்பைச் சேர்ந்த ஓர் உறுப்பினர் இடம் பெறாத ஓர் கமிஷனை நான் நியமிக்க மாட்டேன்; ஒரு ஜனநாயக நாட்டிலுள்ள வேறு எவரும் நியமிக்க மாட்டார்கள்; எதிர்த் தரப்பினர் கூட இதனை பரிந்துரைக் க மாட்டார்கள்; நான் குறிப்பிடும் பல்வேறு பிரதிநிதிகளும் பங்கு கொள்ளும் ஒரு மன்றத்தில் எந்த விஷயத்தையும் முன்வைத்து விவாதித்து முடிவெடுப்பதற்கு இந்த வகுப்பினருக்குப் பிரதிநிதித்துவம் தருவது அவசியம்.

## (4)

### சைமன் கமிஷன் அறிக்கையிலிருந்து ஒரு பகுதி, தொகுதி II

78........... எந்த மாகாணத்திலும் வாக்களிக்கத் தகுதி பெற்ற தாழ்த்தப்பட்ட இனத்தோரின் எண்ணிக்கையை மதிப்பிடுவது சாத்தியமாக இல்லை. வாக்களிக்கும் தகுதி கணிசமாகக் குறைக்கப்படும் பட்சத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பு வாக்காளர்களின் வீதாசாரம் அதிகரிக்கும் என்பதில் ஐயமில்லை. எனினும் இவ்வாறு வாக்களிக்கும் தகுதியைக் குறைத்தாலும் கூட ஏதேனும் விசேட வழிவகை ஏற்பாடு செய்யாமல் பொதுத் தொகுதிகளில் தாழ்த்தப்பட்ட இனத்தவர்கள் தங்கள் சொந்தப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கச் செய்வதற்கு வாய்ப்பில்லை என்பது தெளிவு. தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தங்கள் அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்தித்தான் முன்னேற முடியும். எனவே, இந்த நிலைமையில், இதர சக்திகள் அவர்களது ஆதரவை நாடிப் பெறும் அளவுக்கும், அவர்களது தேவைகளை ஆழ்ந்து கவனிக்கும் அளவுக்கும் அவர்கள் போதிய முக்கியத்துவம் ஈட்டுவதைப் பொறுத்துத்தான் இந்த முன்னேற்றம் அமைந்திருக்கும் என்பது கண்கூடு.

★★

80 .... ... ஆகவே, தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மொத்த மக்கட் தொகை விகிதாசார அடிப்படையில் அவர்களுக்கு இடங்களை ஒதுக்கீடு செய்ய நாங்கள் பரிந்துரைக்கவில்லை என்பதை இங்கு கவனிக்க வேண்டும். எனினும், இப்போது நாங்கள் பரிந்துரைத்துள்ள இட ஒதுக்கீட்டு விகிதாசாரம் தாழ்த்தப்பட்ட வகுப்பினரைச் சேர்ந்த சட்டமன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கையைக் கணிசமாக அதிகப்படுத்துவதற்கு வகைசெய்யும். வறுமையும், படிப்பின்மையும் அவர்களிடையே மிகப் பரவலாக இருப்பதைக் காண்கிறோம். இப்படிப்பட்ட நிலைமையில், போதிய தகுதி வாய்ந்த உறுப்பினர்கள் பெரும் எண்ணிக்கையில் உடனடியாகக் கிடைப்பார்களா என்பது மிகுந்த ஐயத்துக்கிடமானதாக இருக்கிறது. தாழ்த்தப்பட்டவர்களின் பிரதிநிதிகள் என்று சொல்லிக் கொண்டு திறமையற்றவர்களும், நேர்மையற்றவர்களும், மேல் சாதியினருக்கு அடிவருடிகளாக இருக்கக் கூடியவர்களும் பெரும் எண்ணிக்கையில் சட்டமன்றத்தை நிரப்புவதைக் காட்டிலும் மிகவும் தகுதி வாய்ந்த, பொறுக்கியெடுத்த, மணிமணியான உறுப்பினர்கள் அம்மக்களின் பிரதிநிதிகளாக வருவது எவ்வளவோ மேல். பல்வேறு வகையான பிரதிநிதிகளிடையே இடங்களை மறு-விநியோகம் செய்வதற்கு தற்போது முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது. ஆனால் இந்த மறுவிநியோகம் நிரந்தரமானதாக இருக்க முடியாது; இதை மாற்றுவதற்கு வழிவகை செய்யப்பட வேண்டும். ஆனால் நாங்கள் தெரிவித்துள்ள யோசனை இப்போதைக்குப் போதும் என்று நினைக்கிறோம். அதிலும் குறிப்பாக இட ஒதுக்கீட்டின் மூலம் தமது கருத்தைப் பிரதிபலிப்பது என்பது அவ்வாறு ஒதுக்கப்படாத இதர இடங்களைக் கைப்பற்றும் சாத்தியக் கூறை விலக்கிவிடவில்லை என்பதை இங்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறோம்.

★★

## 5

### (அரசியல் அமைப்புச் சீர்திருத்தம் பற்றி (சைமன் கமிஷன் வழிகாட்டிய அடிப்படையில்) இந்திய அரசிடமிருந்து வந்துள்ள குறிப்பிலிருந்து பகுதி)

**35. தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கான பிரதிநிதித்துவம் :-** தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு பிரதிநிதித்துவம் அளிப்பது பற்றி கமிஷன் கொடுத்துள்ள ஆலோசனைகளை மாகாண அரசுகள் அதிகம்

விமர்சித்துள்ளன. ஒவ்வொரு மாகாணத்திற்கும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் பற்றி வரையறையை வகுத்துக் கொடுப்பதில் உள்ள கஷ்டம், நியமன முறையில்லாமல் இந்த வகுப்பிற்கு விசேஷ பிரதிநிதித்துவம் அளிக்கும் எந்தத் திட்டத்திலும் பிரிக்க இயலாததாக அமைந்துள்ளது போலும்; ஆனால், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் களுக்கான அபேட்சகர்களுக்கு அங்கீகாரம் அளித்து நற்சாட்சிப் பத்திரம் வழங்க வேண்டிய பிரத்தியேக சிக்கலான (இக்கட்டான) ஒரு கடமையை கவர்னருக்கு கமிஷனின் ஆலோசனைகள் முன்வைக் கின்றன; கமிஷன் முன்வைக்கும் விகிதாசார பிரதிநிதித்துவம் - அதாவது, மாகாணங்களின் தேர்தல் தொகுதியின் மொத்த மக்கள் தொகையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் விகிதாசாரத்தில் முக்கால் பங்கு வீதம் என்பது - மிக அதிகம் என்று தோன்றலாம். ஐக்கிய மாகாண அரசு கணக்கீடு வருமாறு: அந்த மாகாணச் சட்டமன்றத்தில் இந்த வகுப்பி னரை இப்பொழுது பிரதிநிதித்துவப்படுத்தும் நியமனமான ஒரே ஒரு உறுப்பினர் இடத்தில், கமிஷனின் ஆலோசனைப்படி நாற்பது உறுப் பினர்களுக்குக் குறையாமல் சட்டமன்றத்திற்கு தேர்ந்தெடுக்கப் படும் நிலை ஏற்படும். தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு பிரதிநிதித்து வம் அளிப்பதற்கான முழுப் பிரச்சினையும் வாக்குரிமை கமிட்டி யால் கவனமாக அலசி ஆராயப்படவேண்டும். இந்தக் கட்டத்தில் நாங்கள் தெளிவாக எடுத்து கூற விரும்பும் கருத்து என்னவெனில், நடைமுறைக்கு சாத்தியமானது என்று கருதப்படும் விதத்தில் அவர் களுக்கு (தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு) சிறந்த முறையில் போது மான பிரதிநிதித்துவம் உறுதியாக அளிக்கப்பட வேண்டுமென்பதே. அந்த வகுப்பினரிடையே சில கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன என்றாலும், அண்மையில் நடந்த தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் அமைப்புகளின் கூட்டங்கள் தனித் தேர்தல் தொகுதிகள்மீது அவற் றிற்குள்ள நம்பிக்கையை மீண்டும் உறுதிப்படுத்தியுள்ளன.

★★★

## (6)

## (வாக்குரிமை பற்றி) 1932 லோதியன் கமிட்டிக்கு அளிக்கப்பட்ட செயல்பாட்டு விதிமுறைகளிலிருந்து

3. மாகாணக் கவுன்சில்களுக்கு உறுப்பினர்களைத் தேர்ந் தெடுக்கும் வாக்காளர்களின் எண்ணிக்கை தற்பொழுது இந்திய

மாகாணங்களின் மொத்த மக்கள் தொகையில் 3 சதவிகிதத்திற்கும் குறைவானதே என்பதைத் தாங்கள் அறிவீர்கள்; இந்த குறுகிய வாக்குரிமையின் கீழ் மக்கள் தொகையில் பெரும்பான்மையோரும் சமுதாயத்தின் பல அதிக எண்ணிக்கையுள்ள முக்கியப் பகுதியினரும் சட்டமன்றங்களில் பயனுள்ள பிரதிநிதித்துவம் பெறமுடியாமல் போகும் என்பது தெளிவானதே. சில தனி ஒதுக்கீடுகளுக்கும் பாது காப்புகளுக்கும் உட்பட்டு பொறுப்புள்ள பெடரல் சர்க்கார் என்ற கோட்பாடு மேன்மைதங்கிய மன்னர் சர்க்காரால் ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது. தங்களின் சொந்தக் கொள்கைகளை தங்கள் வட்டாரத் தில் நிறைவேற்றுவதில் வெளித்தலையீடோ அதிகார ஏவலோ இல்லாத மிக அதிகபட்சம் சாத்தியமான அளவில் சுதந்திரமாக இயங்கும் உரிமை பெற்று கவர்னர்களின் மாகாணங்கள் பொறுப் பாக ஆட்சி செலுத்தப்படும் அங்கங்களாக ஆக வேண்டு மென்று முடிவு செய்யப்பட்டுள்ளது. இந்த சூழ்நிலைமைகளில், பொறுப்பு ஒப்படைக்கப்படும் சட்டசபைகளின் வாக்காளர்களின் எண்ணிக்கை விரிவுபடுத்தப்பட வேண்டும் என்பது அவசியம் என்பது தெளி வாகிறது; இந்த சட்டசபைகள் பொது ஜனங்களைப் பிரதிநிதித் துவப்படுத்துவதாக இருக்க வேண்டும்; சமுதாயத்தின் எந்த முக்கிய பகுதியும் தனது தேவைகளையோ கருத்துக்களையோ வெளிப் படுத்தும் வாய்ப்பு இல்லாமல் போகக்கூடாது.

***

6. மாநாட்டில் பல்வேறு விஷயங்கள் பற்றி நடந்த விவாதங்களிலிருந்து தெளிவாவது என்னவெனில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு பிரதிநிதித்துவம் அளிக்கப் போதுமான பாது காப்பை புதிய அரசியல் சட்டம் வகுக்க வேண்டுமென்பதும் நிய மனம் மூலம் பிரதிநிதித்துவம் அளிக்கும் முறை இனிப் பொருந் தாது என்பதுமாகும். தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு தனியான தேர்தல் தொகுதிகள் ஒதுக்க வேண்டுமா என்பது பற்றி கருத்து வேறு பாடு உள்ளது என்பது தாங்கள் அறிந்ததே. தங்கள் கமிட்டியின் அலசி ஆராய்வு இந்தப் பிரச்னை பற்றி முடிவு எடுப்பதற்கு உதவும் முறையில் அமைய வேண்டும்; வாக்காளர்களின் எண்ணிக்கை யில் பொதுவான விரிவாக்கம் மூலம் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சாதாரண (பொது) பொதுத் தொகுதிகளில் எந்த அளவு வாக்களிக் கும் உரிமையைப் பெறலாம் என்பதையும் நீங்கள் சுட்டிக்காட்ட

வேண்டும். மறுபுறத்தில், பொதுவாகவோ அல்லது ஜனத்தொகையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஒரு தெளிவான தனியான தன்மை கொண்டவர்களாக உள்ள மாகாணங்களிலோ, அவர்களுக்கு தனித் தொகுதிகள் முடிவாக தீர்மானிக்கப்பட வேண்டுமா? வாக்காளர் பட்டியல் விரிவாக்கப்பட வேண்டும் என்ற பொதுப் பிரச்னையை உங்கள் கமிட்டி ஆய்வு செய்யும்போது தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு தனிப் பிரதிநிதித்துவம் பற்றிய முறையை வகுக்க புள்ளி விவரங்கள் உங்களுக்குக் கிடைக்கும்.

★★

## (7)

**இந்தியாவின் வைஸ்ராயும் கவர்னர் ஜெனரலுமான மேன்மை தங்கிய லார்ட் லின்லித்கோ 1939 அக்டோபர் 17-ம் தேதி வெளியிட்ட அறிக்கையிலிருந்து:**

''இந்தியாவின் எதிர்காலப் பெடரல் சர்க்காரின் திட்டம் பற்றிய பரிசீலனையை மீண்டும் துவக்கும் காலம் வரும்போது, நான் இப்பொழுது குறிப்பிடப்பட்ட காலம் சென்ற இந்திய விவகார அமைச்சர் பார்லிமென்டில் அமுலாக்குவதற்கான திட்டம் பற்றி அளித்த வாக்குறுதியை அமுல் நடத்த முடிவு செய்யும்போது, அன்றுள்ள சூழ்நிலைமைகளின் வெளிச்சத்தில், 1935-ம் ஆண்டுச் சட்டத்தில் உள்ளடக்கிய திட்டத்தின் விவரங்கள் எந்த அளவிற்கு பொருத்தமாக இருக்கும் என்பதை புனர்பரிசீலனை செய்ய வேண்டியது அவசியமாகும்.

யுத்தமுடிவிற்குப்பின் சமுதாயத்தின் பல்வேறு பிரிவினர்களின், சமூகங்களின், நலன்களின் பிரதிநிதிகளுடனும், இந்திய சமஸ்தான ராஜாக்களுடனும், விரும்பக்கூடிய மாற்றங்களை உருவாக்குவதில் அவர்களின் உதவியையும் ஒத்துழைப்பையும் பெற பேச்சுவார்த்தைகள் நடத்த நாங்கள் மிகவும் விருப்பமுடையவர்களாக இருப்போம் என்று கூற மே.த. மன்னர் சர்க்கார் எனக்கு அதிகாரம் வழங்கியுள்ளது.''

## (8)

### பிரபுக்கள் சபையில் இந்திய விவகார மந்திரி லார்ட் ஜெட்லண்டு, 1939 நவம்பர் 7ம் தேதி சமர்ப்பித்த அறிக்கையிலிருந்து:

''இந்தியாவில் இனவாரியான, மதவாரியான சிறுபான்மை யினர் உள்ளனர் என்பது இந்த விஷயத்திற்கு பொருத்தமானதல்ல வென்றும், இந்தியர்கள் தாங்களாகவே உருவாக்கும் அரசியல் சட்டத் தின் மூலம் சிறுபான்மையினருக்கு அவர்கள் ஏற்றுக் கொள்ளக் கூடிய அவர்களின் உரிமைகளுக்கு பாதுகாப்பைப் பெற வேண்டு மென்பதே காங்கிரசின் நோக்கமாக இருந்து வந்துள்ளது. இந்த கொள்கையை காங்கிரஸ் மேலும் முரணின்றி எடுத்து வந்துள்ளது.

காங்கிரஸின் இந்த நிலையை ஏற்றுக் கொள்வது சாத்திய மல்ல என்று மேன்மை தங்கிய மன்னர் சர்க்கார் கருதுகிறது. இந்தியாவுடனான நீண்டகால பிரிட்டிஷ் தொடர்பு, அந்த நாட்டின் மீது தங்களுக்குள்ள கடமைப் பொறுப்புகளை மே.த. மன்னர் சர்க்காருக்கு அளித்துள்ளன; அந்நாட்டின் எதிர்கால சர்க்காரை உரு வாக்குவதில் அக்கறையின்மையை காட்டுவதன் மூலம் தங்கள் கடமைப் பொறுப்புகளை அது ஒதுக்கித்தள்ளி விட முடியாது. இந்தியாவின் எல்லாக் கட்சிகளுடனும் நலன்களுடனும் கவர்னர் - ஜெனரல் அண்மையில் மேற்கொண்ட விவாதங்களின் சந்தேகத்திற்கு இடமற்ற ஒரு மிக முக்கிய விளைவு என்னவெனில், இந்தியாவில் தங்கள் நிலையை சிந்தனை எதுவுமில்லாமல் மே.த. மன்னர் சர்க்கார் கைவிட வேண்டுமென்று அளிக்கப்பட்ட ஆலோசனை இந்திய மக்களின் பெரும்பாலான பகுதியினருக்கு ஏற்புடைய தாக இல்லை என்பது.''

★★★

## (9)

**வைஸ்ராயும் கவர்னர் ஜெனரலுமான மே.த. லார்ட் லின்லித்கோ, பம்பாய் ஓரியண்ட் கிளப்பில் 1940 ஜனவரி 10ல் ஆற்றிய உரையிலிருந்து:**

''இந்திய ஐக்கியத்தின் நலன்களுக்கான எந்த அரசியல் சட்ட அமைப்பிலும் இந்திய சமஸ்தானங்களை உட்படுத்த வேண்டும் என்பது அத்தியாவசிய தேவை என்பதை நாம் மறக்கக் கூடாது.

சிறுபான்மையினரின் விடாப்பிடியான கோரிக்கைகள் உள்ளன.

அவற்றில் இரண்டை நான் குறிப்பிட வேண்டும்:- பெரும் எண்ணிக்கையில் உள்ள முஸ்லீம் சிறுபான்மையினர், தீண்டப் படாத ஜாதியினர்; இந்த சிறுபான்மையினருக்கு சென்ற காலத்தில் அளித்த வாக்குறுதிகள் உள்ளன; அவர்களின் நிலை பாதுகாக்கப் பட வேண்டும்; அந்த உத்திரவாதங்கள் நிறைவேற்றப்பட வேண்டும்.

★★★

## (10)

**(பிரிட்டிஷ்) காமன்ஸ் சபையில், 1940 ஆகஸ்டு 14ல் இந்திய விவகார மந்திரி திரு. எல்.எஸ். அமெரி ஆற்றிய உரையிலிருந்து:**

''காங்கிரஸ் தலைவர்கள் ஒரு போற்றற்குரிய ஸ்தாபனத்தை கட்டி வளர்த்துள்ளனர்; அது இந்தியாவின் திறமை வாய்ந்த அரசியல் இயந்திரமாகும் ........ இந்தியாவின் அரசியல் வாழ்வின் (முக்கிய) பிரதான பகுதியினர் எல்லோருக்குமாக தான் பேசுவதாகக் கூறிக் கொள்ளும் காங்கிரஸ் உண்மையில் அது பேசுவதில் வெற்றி பெற்றிருக்குமானால் - வெற்றி பெற்றிருக்கக் கூடுமானால் - அவர்களின் கோரிக்கை எவ்வளவு தீவிரமுடையதாக இருந்தாலும், பல அம்சங்களில் நம் பிரச்சினை இன்று இருப்பதை விட மிக

அதிகம் இலகுவானதாக இருந்திருக்கும். பிரிட்டிஷ் இந்தியாவில் அவர்கள் மிகப் பெரிய தனிக் கட்சியாவர்; அதன் காரணமாக இந்தியாவிற்காக பேசுவதாகச் சொல்வதை இந்தியாவின் சிக்கலான தேசிய வாழ்வில் உள்ள பல மிக முக்கியமான பகுதியினர் மறுக்கின்றனர். இந்த மற்றவர்கள் எண்ணிக்கையில் மட்டுமே சிறுபான்மையினராக மட்டுமின்றி எதிர்கால இந்திய அரசியல் வாழ்வில் தாங்கள் தனிமையான அங்கங்கள் என்று உரிமை கோருகின்றனர். இவர்களில் மிக முதன்மையானவர்கள் (பெரும் எண்ணிக்கையில் உள்ள) மகத்தான முஸ்லீம் சமூகத்தினர் பூகோள அடிப்படையில் அமைந்துள்ள வாக்கு தொகுதிகளில் பெரும்பான்மை வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் நிர்ணய சபை வரையும் அரசியல் சட்டத்தோடு அவர்களுக்கு எந்த சம்பந்தமும் இல்லை. வெறும் எண்ணிக்கையில் பெரும்பான்மையினராக செயல்படுவோருக்கு எதிராக அரசியல் அமைப்பு சம்பந்தமான எந்த விவாதத்திலும் பங்கு பெறும் அங்கமாக அவர்கள் உரிமை கோருகின்றனர். தாழ்த்தப்பட்ட (தீண்டப்படாத) ஜாதியினர் என்று அறியப்படும் மகத்தான முக்கிய பகுதியினருக்கும் இது பொருந்தும். அவர்கள் சார்பில் திரு காந்தி எடுத்துக் கொண்ட அக்கறையுடன் கூடிய முயற்சிகள் இருந்தபோதிலும், ஒரு சமுதாயம் என்ற முறையில் காங்கிரஸ் பிரதிநிதித்துவப்படுத்தும் பிரதான இந்து சமூகத்திற்கு வெளியில்தான் அவர்கள் இருக்கிறார்கள்.''

★★★

## *(11)*

### காமன்ஸ் சபையில் இந்திய விவகார அமைச்சர் மே.த. திரு. எல்.எஸ். அமெரி 1941 ஏப்ரல் 23ம் தேதி ஆற்றிய உரையிலிருந்து:

''இந்தியாவின் எதிர்கால அரசியல் சட்டம் இந்தியர்கள் தங்களுக்காகவே வரையப்பட வேண்டும்; பிரிட்டிஷ் சர்க்காரால் அல்ல. இந்தியாவின் எதிர்கால அரசியல் சட்டம் சாராம்சத்தில் இந்திய அரசியல் சட்டமாக, இந்தியாவின் நிலைமைகள், இந்தியத் தேவைகள் பற்றிய இந்திய கண்ணோட்டத்திற்கு ஏற்ப வகுக்கப்பட வேண்டும். ஒரு அத்தியாவசியமான நிபந்தனை என்னவெனில், அரசியல் சட்டமும் அதை உருவாக்கும் அமைப்பும்

இந்தியத்தேசிய வாழ்வின் பிரதான பகுதியினரிடையே ஏற்படும் ஒப்பந்தத்தின் அடிப்படையில் அமைய வேண்டும்.''

### (12)

**இந்தியாவின் வைஸ்ராயும் கவர்னர் - ஜெனரலுமான மே.த. லார்ட் வின்லித்கோ 1940 ஆகஸ்ட் 8ம் தேதி வெளியிட்ட அறிக்கையிலிருந்து:**

''முன் வந்துள்ளவை இரண்டு விஷயங்கள். அந்த இரண்டு பற்றியும், தங்கள் நிலையை தெளிவாக்க மே.த. மன்னர் அரசாங்கம் விரும்புகிறது. முதலாவது, எந்த எதிர்கால அரசியல் அமைப்புத் திட்டத்திலும், சிறுபான்மையினர் நிலை பற்றியதாகும். இந்தியத் தேசிய வாழ்வில் பெரிய, சக்திவாய்ந்த பகுதிகளால் நேரடியாக மறுக்கப்படும் எந்த சர்க்கார் அமைப்பையும் இந்தியாவில் சமாதானத்திற்கும் நல்வாழ்வுக்கும் இன்றுள்ள தங்கள் பொறுப்பு களை மாற்ற அவர்கள் (மே.த. மன்னர் சர்க்கார்) சிந்திக்க முடியாது என்பது சொல்லாமலே தெரியும். அத்தகைய சர்க்காருக்காகப் பணி யும்படி செய்ய நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தும் அத்தகைய சக்திகளுடன் அவர்கள் (சர்க்கார்) உடன்பட முடியாது.''

## பின் இணைப்பு - VII

# சிறுபான்மையினரும் விசேடப் பிரதிநிதித்துவமும்

**விசேடப் பிரதிநிதித்துவ முறையின் சமத்துவமின்மையைப் பற்றி மாண்டேகு - செம்ஸ்போர்ட் அறிக்கையும் சைமன் கமிஷனும் வெளியிட்ட கருத்துக்கள்.**

| |
|---|
| சிறுபான்மையின ருக்குப் பிரதிநிதித் துவம் |

163. தேர்தலில் முக்கியமான சிறு பான்மையினர் பிரதி நிதித்துவப்படுத்தப்

பட வேண்டும் என்று ஆலோசனை கூறப்படுகிறது. முகமதியர் களுக்கு மட்டுமே பின்னால் குறிப்பிடப் பட்டுள்ள ஒரு திட் டத்தை இது குறிப்பதாகத் தோன்றுகிறது; பொதுத் தொகுதியிலும் அத்துடன் அவர்களது தனி (விசேஷ)த் தொகுதியிலும் வாக் களிக்க அவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. மற்ற சில சமுதாயத் தினருக்கும், அதாவது சீக்கியர் போன்றவர்களுக்கு முகமதியர் களுக்கு வழங்கப்பட்ட சலுகையை வழங்க மறுப்பதிலுள்ள கஷ் டத்தைப் பற்றி பிறிதோரிடத்தில் குறிப்பிட்டுள்ளோம். இந்தத் திட்டத்தைத் தயாரித்தவர்கள், பல்வேறு மாகாணங்களிலும் முஸ்லீம் வாக்காளர்களுக்காக ஒதுக்கப்பட வேண்டிய விசேஷ தொகுதிகள் பற்றியும் ஒப்புக் கொண்டுள்ளனர். விவாதங்களைத் தவிர, இந்த எண்ணிக்கைகள் எந்த அடிப்படையில் வகுக்கப்பட்டன என்பது எங்களுக்குத் தெரியாது. எல்லா மாகாணங்களிலும், முகமதியர் கள் பெரும்பாலோராக உள்ள மாகாணங்களிலும் கூட, தனித் தொகுதிகள் முன் வைக்கப்பட்டன. எங்கெல்லாம் எண்ணிக்கை யில் அவர்கள் பலம் குன்றியிருக்கிறார்களோ, அங்கு யோசனை கூறப்பட்ட விகிதாச்சாரம் அவர்களின் எண்ணிக் கைக்கும் இன்றையப் பிரதிநிதித்துவத்திற்கும் அதிகமாகவே உள்ளது. அதேசமயம், எங்க ளுக்கு எழுதியுள்ள அநேகமாக எல்லா முகமதியர்களின் அமைப்பு களும் அது மேலும் அதிகப்படுத்தப்பட வேண்டுமென்று எங்களை வலியுறுத்தியுள்ளன. இத்தகைய விசேஷ சலுகை ஆட்சேபனைக்கு உட்படும்; இனி வேறு எந்த சமூகத்தினராவது தனிப்பிரதிநிதித் துவம் வேண்டுமென்று உரிமை கோரினால், முகமதியர்கள் அல்லாத வர்களின் தொகுதிகளைக் குறைப்பதன் மூலமே திருப்தி செய்ய முடியும்; அல்லது முஸ்லீம்களுக்கும் முஸ்லீம் அல்லாதவர்களுக்கு மான தொகுதிகளை விகிதாச்சார அடிப்படையில் குறைக்க வேண் டும்; எத்தகைய முறையைக் கையாள வேண்டு மென்பதில் இந்து, முஸ்லீம் கருத்துக்களில் ஒருமைப்பாடு வராமல் போகும் வாய்ப் புண்டு. எனவே, கீழே நாங்கள் விளக்கியுள்ள காரணங்களுக்காக, முகமதியர்களுக்கு தனிப்பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும் என்ப தற்கு நாங்கள் ஒப்புதல் அளிக்கும் அதே சமயத்தில் எங்கள் முன்னால் வைக்கப்பட்டுள்ள ஆலோசனைகள், மற்ற நலன்கள் மீது என்ன பிரதிபலிப்பை ஏற்படுத்தும் என்பதை கண்டறியும்வரை, எங்கள் அங்கீகாரத்தை ஒத்திவைக்கிறோம், அவர்களுக்கும் நியாய

மான முறையில் ஒதுக்கீட்டிற்கான ஏற்பாட்டையும் செய்துள்ளோம். தங்கள் சொந்த விசேஷத் தொகுதியிலும், அதே சமயம் பொதுத் தொகுதியிலும் முகமதியர்கள் வாக்காளர்களாக இருக்கக்கூடாது என்ற திட்டத்தை வகுத்தவர்களுடன் நாங்கள் உடன்படுகிறோம்; இது சம்பந்தமாக இன்றுள்ள ஏற்பாடுகளை மாற்ற முஸ்லீம் லீக் ஒப்புக்கொண்டதை நாங்கள் வரவேற்கிறோம்.''

## 2

## இந்திய சட்டக் கமிஷன் அறிக்கையிலிருந்து ஒரு பகுதி, தொகுதி II

★★★

### முகமதியர்களுக்கான இடங்களின் எண்ணிக்கை

பத்தி 85. பல்வேறு மாகாணங்களின் சட்ட மேலவைகளில் முகமதியர்களுக்கு ஒதுக்கப்படும் இடங்களின் விகிதாசாரப் பிரச்சினை பற்றி இப்போது பார்ப்போம்.

நாம் ஏற்கெனவே சுட்டிக்காட்டியதுபோல் ஒவ்வொரு மாகாணத்திலும் முகமதிய சமூகத்துக்கு ஒதுக்கப்படும் இடங்களின் விகிதாசாரம் பற்றி இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்குமிடையே ஏற்பட்ட ஓர் உடன்பாடு லக்னோ ஒப்பந்தத்தில் இடம் பெற்றிருந்தது; இப்போதைய மாகாண சட்டமன்றங்களில் இந்த உடன்பாட்டின் படி முகமதியர்களுக்கு இடங்கள் ஒதுக்கப்பட்டன. ஆனால் பிரதிநிதித்துவப் பிரச்சினைக்கு ஒரு நியாயமான அடிப்படையாக லக்னோ ஒப்பந்தம் இருதரப்புகளாலும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இரு தரப்புகளும் பரஸ்பரம் முன்வைத்த வாதங்கள் 70ஆம் பத்தியில் தரப்பட்டிருக்கின்றன. இரு தரப்புகளும் புதிதாக ஓர் உடன்பாட்டுக்கு வருவதற்கு முயற்சிப்பார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. இத்தகைய உடன்பாடு ஏற்படாத நிலைமையில், தனித்தொகுதி முறை நீடிக்கிறது என்ற அனுமானத்தின் அடிப்படையில் 'இது

விஷயத்தில் மற்றவர்கள் ஏதேனும் உடன்பாடு காண வேண்டிய நிலைமை ஏற்பட்டது. மொத்தம் எட்டு மாகாணங்களில்* ஆறில் முஸ்லீம் சிறுபான்மையினர் பலவீனமாக இருக்கிறார்கள் என்பதைக் கருத்திற் கொண்டு பார்க்கும்போது, இந்த மாகாணங்களில் முகமதியர்களுக்கு இப்போது அளிக்கப்பட்டு வரும் விசேடப் பிரதிநிதித்துவம் தொடர்வதே சிலாக்கியம் என்று நமக்குத் தோன்றுகிறது. ''பொதுத்'' தொகுதிகளிலிருந்து (ஐரோப்பியர்களுக்கான பொதுத் தொகுதிகள் நீங்கலாக) அவர்களுக்கு ஒதுக்கப்படும் இடங்களின் விகிதாசாரம் இப்போதிருப்பது போன்று நிர்ணயிக்கப்படும். ஆனால் முகமதியர்களுக்கு இதைவிட அதிகப் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும் என்ற ஒரு கோரிக்கை (மேலே உள்ள பத்தி 70 ஐயும் இந்த இயலின் இறுதியிலுள்ள அட்டவணை VII ஐயும் பார்க்க) முன்வைக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆறு மாகாணங்களில் இப்போது முஸ்லீம்களுக்கு அளிக்கப்பட்டுள்ள பிரதிநிதித்துவம் முழு அளவுக்குப் பாதுகாக்கப்பட வேண்டும் என்றும், வங்காளத்திலும் பஞ்சாபிலும் தனி வாக்காளர் தொகுதிகள் மூலம் தற்போது அளிக்கப்படும் பிரதிநிதித்துவ முறைக்குப் பதிலாக தங்களது மக்கட்தொகை விகிதாசார அடிப்படையில் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும் என்றும் வலியுறுத்தப்படுகிறது. இது இவ்விரு மாகாணங்களிலும் முகமதியர்களுக்கு ஒரு நிலையான, மாற்றமுடியாத பெரும்பான்மையை அளிக்கும். இதற்கு மேல் நாங்கள் செல்ல முடியாது. ஆறு மாகாணங்களில் அவர்களுக்கு விசேடப் பிரதிநிதித்துவம் தொடரும் அதேசமயம் பஞ்சாபிலும் வங்காளத்திலும் இப்போது பின்பற்றப்படும் இட ஒதுக்கீட்டு முறையிலிருந்து விலகிச் செல்லுவது சாத்தியமல்ல. இவ்வாறு முகமதியர்கள் கோருவது நியாயமல்ல. ஏனென்றால் இதன் மூலம் அவர்கள் இப்போது அனுபவித்துவரும் சலுகை தொடர்வதோடு இந்துக்கள், சீக்கியர்களின் எதிர்ப்புக்கிடையே பஞ்சாபிலும், வங்காளத்திலும் அவர்களது பெரும்பான்மையைத் திணிப்பதாகிறது. அதே சமயம் பரஸ்பர உடன்பாட்டின் பேரில் வங்காளத்தில் தனித்தொகுதிகள் ஒழிக்கப்

* பர்மா பிரச்சினை இங்கு எழவில்லை.

பட்டு, இந்த மாகாணத்திலுள்ள ஒவ்வொரு சமூகமும் கூட்டுத் தொகுதி வாக்காளர்களின் ஆதரவை நாட வேண்டிய நிலை ஏற்பட்டால் அப்போது இதை அடிப்படையாகக் கொண்டு முஸ்லீம்கள் சிறுபான்மையினராக உள்ள ஆறு மாகாணங்களிலும் அவர்கள் தற்போது அனுபவித்துவரும் விசேடப் பிரதிநிதித்துவத்தை ரத்து செய்ய எந்த நடவடிக்கையும் நாங்கள் எடுத்துக்கொள்ள மாட்டோம். இதே போன்று, பஞ்சாபில் முஸ்லீம்களும் சீக்கியர்களும் இந்துக்களும் கூட்டு வாக்காளர் தொகுதிகள் மூலம் தேர்தலில் ஈடுபடத் தயாராக இருந்தால் இங்கும் மற்ற ஆறு மாகாணங்களில் தனி வாக்காளர் தொகுதிகள் மூலம் முகமதியர்கள் பெற்றுவரும் விகிதாசார முறையை இதனுடன் இணைக்க முயல்வோம்.

இந்தக் கடைசி யோசனையின் மூலம், இவ்விரண்டு வழிகளில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் நல்வாய்ப்பை முஸ்லீம் சமுதாயத்தினருக்கு அளிக்கிறோம். தனி வாக்காளர் தொகுதிகள் அதிகரிப்பதை மட்டுப்படுத்தவும், இதற்கு மாற்றான தேர்தல் முறையை நடைமுறையில் சோதித்துப் பார்க்கவும் நாங்கள் விரும்புகிறோம்.

## பின் இணைப்பு VIII

# கிரிப்ஸ் திட்டம்

### இந்தியத் தலைவர்களுடன் விவாதிப்பதற்கான நகல் பிரகடனம்

இந்தியாவின் எதிர்காலம் சம்பந்தமாக அளிக்கப்பட்ட வாக்குறுதிகள் நிறைவேற்றப்படாதது குறித்து இந்த நாட்டிலும் இந்தியாவிலும் தெரிவிக்கப்பட்டுள்ள கவலைகளை மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசாங்கம் கருத்தில்கொண்டு, இந்தியாவில் கூடிய விரைவில் சுயாட்சியை ஏற்படுத்துவதற்கு தாங்கள் மேற்கொள்ளப்போகும் நடவடிக்கைகளைத் திட்டவட்டமாகவும் தெளிவாகவும் தெரிவிப்பதென முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஒரு புதிய இந்தியக் கூட்டரசை உருவாக்குவதே எமது குறிக்கோள். மன்னர்பால் கொண்ட பொது விசுவாசத்தால் பிரிட்டனுடனும் இதர குடியேற்ற நாடுகளுடனும் இணைந்த ஒரு குடியேற்ற நாடாக இந்தியா அமைந்திருக்கும்; எல்லா அம்சங்களிலும் அவற்றுக்குச் சமமாக அது திகழும்; தனது உள்நாட்டு, வெளிநாட்டு விவகாரங்களில் அது எவ்வகையிலும் யாருக்கும் கீழ்ப்பட்டதாக இருக்காது.

எனவே, மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசாங்கம் பின்கண்ட பிரகடனத்தை வெளியிடுகிறது:

அ. போர் நடவடிக்கை முடிந்த உடனேயே இந்தியாவுக்கு ஒரு புதிய அரசியல் சட்டத்தை உருவாக்கும் கடமை வழங்கப்பட்ட ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட அமைப்பை பின்வருமாறு விளக்கப்பட்ட விதத்தில் இந்தியாவில் நிறுவ நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஆ. அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கும் அமைப்பில் மாகாணங்கள் பின்கண்ட விதத்தில் பங்கொடுத்துக் கொள்ள வகை செய்ய வேண்டும்.

இ. இவ்வாறு வகுத்தளிக்கப்படும் அரசியலமைப்புச் சட்

டத்தை கீழ்க்கண்ட நிபந்தனைகளின்படி ஏற்கவும் உடனடியாக அதனைச் செயல்படுத்தவும் மன்னர்பிரான் அரசு சம்மதிக்கின்றது:

I. புதிய அரசியலமைப்பை ஏற்கத் தயாராக இல்லாத பிரிட்டிஷ் இந்தியாவைச் சேர்ந்த எந்த ஒரு மாகாணமும் தனது இப்போதைய அரசியல் சட்டரீதியான நிலையைத் தக்கவைத்துக் கொள்ள உரிமை அளிக்கப்படவேண்டும்; அது விரும்பினால் பின்னர் சேருவதற்கு வகை செய்யப்பட வேண்டும்.

இவ்விதம் புதிய அரசியலமைப்பில் சேராத மாகாணங்கள் விரும்பும் பட்சத்தில் இந்தியக் கூட்டரசுக்குள் அதே அந்தஸ்தை அளிக்கக்கூடிய ஒரு புதிய அரசியலமைப்ப அவை உருவாக்கிக் கொள்வதற்கு மன்னர்பிரான் அரசு சம்மதிக்கும்; கீழ்க்கண்ட ஒத்த நடைமுறைகள் இது விஷயத்தில் பின்பற்றப்படும்.

II. மன்னர்பிரான் அரசும் அரசியலமைப்பை உருவாக்கும் அமைப்பும் பேச்சுவார்த்தைகள் நடத்தி ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திடும். பிரிட்டிஷாரிடமிருந்து இந்தியர் கைகளுக்கு பொறுப்பை முற்றிலுமாக மாற்றுவதால் எழக்கூடிய எல்லா முக்கிய விஷயங்களும் இந்த ஒப்பந்தத்தில் இடம் பெற்றிருக்கும்; மன்னர்பிரான் அரசு அளித்த வாக்குறுதிகளுக்கு இணங்க இன மற்றும் சமய சிறுபான்மையினரைப் பாதுகாப்பதற்கு ஒப்பந்தத்தில் வகை செய்யப்படும்; ஆனால் பிரிட்டிஷ் காமன் வெல்த்தின் இதர உறுப்பு நாடுகளுடனான தனது உறவை எதிர்காலத்தில் தீர்மானிக்கும் விஷயத்தில் இந்தியக் கூட்டரசுக்குள்ள அதிகாரம் எவ்வகையிலும் கட்டுப்படுத்தப்பட மாட்டாது.

புதிய அரசியலமைப்புச் சட்டத்தைப் பின்பற்ற ஓர் இந்திய சமஸ்தானம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், அதனுடனான ஒப்பந்த ஏற்பாடுகளைத் திருத்தியமைப்பது சம்பந்தமான பேச்சு வார்த்தைகள் நடத்தப்பட வேண்டும்; ஏனென்றால் புதிய அரசிய லமைப்பில் இவ்வாறு செய்வது அவசிய மாகலாம்.

ஈ. பிரதான சமூகங்களின் கருத்தைப் பிரதிபலிக்கும் தலைவர் கள் போர் முடிவடைவதற்குள் வேறு ஏதேனும் ஏற்பாடு குறித்த ஓர் உடன்பாட்டுக்கு வந்தாலொழிய அரசியலமைப்பை உருவாக்கும் அமைப்பு பின்கண்டவாறு அமைந்திருக்கும்:

போர் முடிவில் மாகாண சட்டமன்றங்களுக்குத் தேர்தல்கள் நடத்துவது அவசியமாகக்கூடும்; அவ்வாறு தேர்தல்கள் நடைபெற்று முடிவுகள் தெரியவந்த உடனேயே மாகாண சட்டமன்றங்களின் கீழ்ச்சபைகளது உறுப்பினர்கள் அனைவரும் அடங்கிய ஒரு தேர்தல் குழுமம் அமைக்கப்படும்; அந்தக் குழுமம் மாகாண பிரதிநிதித்துவ அடிப்படையில் அரசியலமைப்பை உருவாக்கும் அமைப்பினைத் தேர்ந்தெடுக்கும். இந்தப் புதிய அமைப்பின் உறுப்பினர்கள் எண் ணிக்கை தேர்தல் குழுமத்தின் மொத்த உறுப்பினர்கள் எண்ணிக்கை யில் பத்தில் ஒரு பங்காக இருக்கும்.

இந்திய சமஸ்தானங்கள் பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகள் விஷயத்தில் போன்றே அவற்றின் மொத்த மக்கட்தொகை விகிதா சாரத்துக்கு ஏற்ப தங்கள் பிரதிநிதிகளை நியமிக்கும்படிக் கேட்டுக் கொள்ளப்படும்.

உ. தற்போது இந்தியாவை எதிர்நோக்கும் நெருக்கடியான கட்டத்தின்போதும், புதிய அரசியலமைப்புச்சட்டம் வகுக்கப்படும் வரையிலும் மன்னர்பிரான் அரசு தனது உலகப்போர் முயற்சியின் ஒரு பகுதியாக இந்தியாவைப் பாதுகாக்கும் பொறுப்பையும், அதற் கான கட்டுப்பாட்டையும் திசைவழியையும் தன்னிடமே வைத்துக் கொள்ளும் பொறுப்பையும் தவிர்க்க முடியாதபடி ஏற்கவேண்டும்; ஆனால் இந்தியாவின் ராணுவ, தார்மிக, பொருளாயத வளங்களை முழு அளவுக்கு ஒருங்கு திரட்டும் பணி இந்திய மக்களின் ஒத்துழைப் புடன் இந்திய அரசாங்கத்தின் பொறுப்பாக இருக்கவேண்டும். இந்திய மக்களின் பிரதான பகுதியினரது தலைவர்கள் தங்கள் நாட்டின், காமன்வெல்த்தின், ஐக்கிய நாடுகளின் கலந்தாலோசனையில் உட னடியாகவும் பயனுறுதியுள்ள முறையிலும் பங்கு கொள்ள வேண் டும் என்று மன்னர் பிரான் அரசு விரும்புகிறது, வேண்டுகிறது.

எதிர்காலத்தில் இந்தியாவின் சுதந்திரத்திற்கு உயிர்நாடியான, இன்றியமையாத ஒரு பணியை நிறைவேற்றுவதில் இதன் மூலம் அவர்கள் தங்களது செயலூக்கமிக்க, ஆக்கப்பூர்வமான உதவியைச் செய்தவர்களாவார்கள்.

# இயல் IX

## கிரிப்ஸ் யோசனைகளுக்கு எதிர்ப்புகள்

### கிரிப்ஸ் யோசனைகள் தீண்டப்படாதவர்களை எப்படிப் பாதிக்கும் என்பதை விளக்கி பி.ஆர். அம்பேத்கர் வெளியிட்ட அறிக்கை

யுத்த மந்திரிசபையின் யோசனைகள் மன்னர் பிரான் அரசாங்கத்திடம் ஏற்பட்டுள்ள திடீர் மாற்றத்தைக் காட்டுகின்றன. சிறுபான்மையினரின் உரிமைகள் மீது படையெடுப்பு என்று அவர்களே கண்டித்த யோசனைகளை இப்போது முன்வைத்திருப்பது வலிமை பெறுவதற்கு நேர்மையை அறவே பலி கொடுக்கப்பட்டிருப்பதையே புலப் படுத்துகிறது. இதனை மூனிச் மனோபாவம் எனக் கூறலாம்; மற்றவர்களைப் பலி கொடுத்துத் தங்களைக் காப்பாற்றிக் கொள்வதுதான் இந்த மனோபாவத்தின் சாராம்சம். இந்த மனோபாவம்தான் இந்த யோசனைகளில் மேலோங்கியிருப்பதைக் காண்கிறோம். புதிய அரசியலமைப்பை உருவாக்கும் திசைவழியில் இந்தியா முன்னேறுவதற்கு மன்னர்பிரான் அரசு முன்வைத்த யோசனைகளை இந்தியர்கள் வரவேற்காதது குறித்தும், இதனால் சர் ஸ்டாப்போர்டு கிரிப்ஸின் தூது தோல்வியடைந்தது குறித்தும் அமெரிக்கர்களும் பிரிட்டிஷ் மக்களும் திகைத்துப் போய்விட்டதாகக் கூறப்படுகிறது. அமெரிக்கர் களை அவர்களது போக்குக்காக மன்னித்து விடலாம்; ஆனால் பிரிட்டிஷ் மக்களும் சர் ஸ்டாப்போர்டு கிரிப்சும் உண்மையை நன்கு அறிந்தவர்கள். மிகச் சிறந்த யோசனைகள் என்று கூறி மன்னர் பிரான் அரசாங்கம் இப்போது முன்வைத்துள்ள இதே யோசனைகள்தான் ஒரு சில மாதங்களுக்கு முன்னர் மன்னர்பிரான் அரசால் மிக மோச மானவை என்று வன்மையாகக் கண்டிக்கப்பட்டு நிராகரிக்கப்பட்டவை என்ற உண்மை சரிவர உணரப்படவில்லை என்றே தோன்றுகிறது. இந்த உண்மையை உணர்ந்தவர்கள் மன்னர் பிரான் அரசு தனது முந்திய பிரகடனங்களுக்கு மாறாக இப்போது அரசியலமைப்புச் சட்டம் நோக்கிய முன்னேற்றத்தைப் பற்றிப் பேசுவதும், திடீரென்று அதற்கான முயற்சியில் இறங்கியிருப்பதும் மிகவும் வெட்கக் கேடானது என்ற கூறவே செய்வார்கள். கிரிப்ஸ் யோசனைகள் மூன்று பகுதிகளைக் கொண்டவை. அவை வருமாறு: (1) இந்தியாவுக்கு ஒரு அரசிய

லமைப்புச் சட்டத்தை உருவாக்கித் தரும் உரிமை கொண்ட ஓர் அரசியல் நிர்ணய சபை ஏற்படுத்தப்படும். இந்த சபையில் இடம் பெறுவோரில் பெரும்பாலோர் விரும்பும் அரசியலமைப்புச் சட்டத்தை வகுத்துத் தரும் முழு அதிகாரத்தை இச்சபை பெற்றிருக்கும்; (2) இந்தப் புதிய அரசியலமைப்பில் இந்தியாவின் தற்போதைய மாகாணங்கள் அனைத்தும் இடம்பெற மாட்டா; அந்த அரசியலமைப்புக்குக் கட்டுப்படத் தயாராக இருக்கும் மாகாணங்கள் மட்டுமே அதில் இடம் பெறும். புதிய அரசியல் அமைப்பில் சேரு வதற்கோ அல்லது சேராமல் இருப்பதற்கோ மாகாணங்களுக்கு உரிமை வழங்கப்படும். இது பொதுஜனவாக்கெடுப்பின் மூலம் தீர்மானிக்கப்படும். சாதாரண பெரும்பான்மையைக் கொண்டே இந்த விஷயம் முடிவு செய்யப்படும்; (3) அரசியல் நிர்ணய சபை பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டும். இன மற்றும் சமய சிறுபான்மையினரின் பாதுகாப்புக்கும் பந்தோபஸ்துக்கும் இந்த ஒப்பந்தத்தில் வழிவகை செய்யப்படும். இத்தகைய ஒப்பந்தம் கையெழுத்தான பிறகு பிரிட்டிஷ் அரசாங்கம் தனது அரசுரிமையை விலக்கிக் கொள்ளும்; இதன் பிறகு, அரசியல் நிர்ணய சபை வகுத்துத் தந்த அரசியல் அமைப்புச் சட்டம் நடைமுறைக்கு வரும்.

இதுதான் மன்னர் பிரான் அரசாங்கம் சமர்ப்பித்த திட்டத்தின் சத்தும் சாரமும்.

அரசியல் நிர்ணய சபை சம்பந்தமான யோசனை புதியது ஒன்றுமல்ல. போர் வெடித்ததும் காங்கிரஸ் அரசியல் நிர்ணய சபை சம்பந்தமான ஒரு யோசனையை முன்வைத்தது. காங்கிரஸ் பிரரேபித்த இந்த யோசனை அச்சமயம் மன்னர்பிரான் அரசாங்கத்தால் நிராகரிக்கப்பட்டது இங்கு கவனிக்க வேண்டிய விஷயமாகும். அரசியல் நிர்ணய சபை சம்பந்தமாக 1940 ஆகஸ்டு 14ஆம் தேதி காமன்ஸ் சபையில் திரு. அமெரி பின்வருமாறு கூறினார்:

''காங்கிரஸ் தலைவர்கள் ... சிறப்பு மிக்க ஒரு ஸ்தாபனத்தை, மிகவும் ஆற்றல் வாய்ந்த ஓர் அரசியல் எந்திரத்தை இந்தியாவில் உருவாக்கி இருக்கிறார்கள். அவர்கள் மட்டும் இந்திய தேசிய வாழ்க்கையின் எல்லா சக்திகளுக்காகவும் பேசுவதில் வெற்றி பெற்றிருந்தால், அவர்களது கோரிக்கைகள் என்னதான் அதிகமாக இருந்தாலும் நமது பிரச்சினை பல அம்சங்களில் இன்று எளி தானவை

யாக இருந்திருக்கும். அவர்கள் இன்று பிரிட்டிஷ் இந்தியாவில் எண்ணிக்கை ரீதியில் தனிப் பெரிய கட்சியாக இருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்த அடிப்படையில் இந்தியா வுக்காகப் பேசும் உரிமை அவர்களுக்கு இல்லை என்று இந்தியா வின் சிக்கலான தேசிய வாழ்வில் இடம் பெற்றுள்ள முக்கியமான சக்திகள் மறுக்கின்றன. இச் சக்திகள் தம்மை வெறும் எண்ணிக்கை அடிப்படையிலான சிறுபான்மையினராக அல்லாமல் எந்த எதிர் கால இந்தியக் கொள்கையிலும் தனித்தன்மை வாய்ந்த சக்திகளாகக் கருத வேண்டும் என்று வலியுறுத்துகின்றன. இத்தகைய சக்திகளில் மாபெரும் முஸ்லீம் சமுதாயம் முன்னணியில் இருக்கிறது. பூகோள ரீதியான தொகுதிகளில் பெரும்பான்மை வாக்குகளால் தேர்ந் தெடுக்கப்படும் ஓர் அரசியல் நிர்ணய சபையால் வகுத்தளிக்கப் படும் அரசியலமைப்புச் சட்டத்துக்கும் தமக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை என்று அவர்கள் கூறுகின்றனர். எந்த அரசியலமைப்புச் சட்ட விவாதங்களிலும் தங்களை ஒரு தனிச் சக்தியாகக் கருதப்பட வேண்டும் என்று அவர்கள் கோருகின்றனர். வெறும் எண்ணிக்கை அளவிலான பெரும்பான்மையினரின் செயற்பாடுகளுக்கு எதிரான ஒரு தனித்த சக்தி என்ற நிலையைத் தங்களுக்கு உத்தரவாதம் செய்யும் ஓர் அரசியலமைப்புச் சட்டத்தை மட்டுமே ஏற்க அவர்கள் உறுதி கொண்டுள்ளனர். ஷெட்யூல்டு வகுப்பினர் எனப்படும் ஒரு மாபெரும் அமைப்புக்கும் இது பொருந்தும். தங்கள் சார்பில் திரு. காந்தி எத் தகைய முயற்சிகளை மேற்கொண்டு வந்தாலும் காங்கிரசால் பிரதி நிதித்துவப்படுத்தப்படும் பிரதான அமைப்பான இந்து சமுதாயத் துக்கு வெளியேதான் ஒரு சமூகம் என்ற முறையில் தாங்கள் இருந்து வருவதாக அவர்கள் உணர்கின்றனர்.''

1941 ஆகஸ்டு 8ஆம் தேதி வைசிராய் வெளியிட்ட அறிவிப் புக்கு விளக்கம் அளித்துப் பேசுகையிலேயே திரு. அமெரி மேற் கண்டவாறு கூறினார். இந்த அறிவிப்பில் சிறுபான்மையினருக்கு மன்னர் பிரான் அரசாங்கம் சார்பில் பின்கண்ட உறுதிமொழியை அவர் அளித்தார்:-

> ''இப்போது இரண்டு முக்கிய விஷயங்கள் நம்முன் எழுந் துள்ளன. இந்த இரண்டு விஷயங்கள் குறித்து தங்கள் நிலை யைத் தெளிவுபடுத்தும்படி மன்னர் பிரான் அரசாங்கம் என் னைப் பணித்துள்ளது. முதல் விஷயம் எந்த எதிர்கால அரசிய லமைப்புத் திட்டம் சம்பந்தமாகவும் சிறுபான்மையினரின் நிலை குறித்ததாகும்... இந்தியாவின் தேசிய வாழ்க்கையிலுள்ள பெரிய, ஆற்றல் மிக்க சக்திகள் ஏற்காத எவ்வகையான

அரசாங்க அமைப்பு முறைக்கும் அவர்கள் (மன்னர் பிரான் அரசாங்கம்) இந்தியாவின் சுபிட்ச வாழ்வு, சமாதானம் சம்பந்தமாக தங்களுக்குள்ள பொறுப்புகளை, கடமைகளை மாற்ற முடியாது என்பது சொல்லாமலே விளங்கும். இத்தகைய ஓர் அரசாங்கத்தை ஏற்றுக் கொள்ளும்படி இந்த சக்திகளை நிர்ப்பந்தப்படுத்தும் எந்த முயற்சிக்கும் அவர்கள் உடந்தையாகவும் இருக்க முடியாது.''

அரசியல் நிர்ணய சபையை அமைக்க வேண்டும் என்ற கோரிக்கை சம்பந்தமாக 1941 ஏப்ரல் 23ஆம் தேதி பேசும்போது அமெரி பின்வருமாறு குறிப்பிட்டார்:-

''இந்தியாவின் எதிர்கால அரசியலமைப்பை பிரிட்டிஷ் அரசாங்கத்தால் அல்லாமல், இந்தியர்கள் தாங்களாகவே வகுத்துக் கொள்ள வேண்டும். இந்தியாவின் எதிர்கால அரசியலமைப்பு அடிப்படையில் ஓர் இந்திய அரசியலமைப்பாக இருக்க வேண்டும்; இந்திய நிலைமைகளையும் இந்தியாவின் தேவைகளையும் குறித்த இந்தியக் கண்ணோட்டத்துக்கு இணங்க அது வகுக்கப்பட வேண்டும். இதிலுள்ள ஒரு முக்கியமான விஷயம் என்னவென்றால் அரசியலமைப்பும் சரி, அதனை வகுக்கும் அரசியல் நிர்ணய சபையும் சரி இந்தியாவின் தேசிய வாழ்க்கையின் பிரதான சக்திகளிடையே ஏற்பட்ட உடன்பாட்டின் விளைவாக தோன்றியவையாக இருக்க வேண்டும்.''

இவைதான் அரசியல் நிர்ணய சபை சம்பந்தமாக மன்னர் பிரான் அரசாங்கம் தெரிவித்த கருத்துகளும், அவர்கள் அளித்த உறுதி மொழிகளாகும். பாகிஸ்தான் உருவாக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கையைப் பொறுத்தவரையில், இது முஸ்லிம் லீக் முன்வைத்த கோரிக்கை. இந்தக் கோரிக்கையும் மன்னர் பிரான் அரசாங்கத்தால் நிராகரிக்கப்பட்டது. இது குறித்து 1940 ஆகஸ்டு 1ல் காமன்ஸ் சபையில் திரு. அமெரி பேசும்போது குறிப்பிட்டதாவது:

''காங்கிரஸ் ராஜ்யம் அல்லது இந்து ராஜ்யம் எனப்படும் அபாயங்களுக்கு எதிரான கருத்துப்போக்கு இந்தியாவை இந்து அரசுப் பகுதி என்றும் முஸ்லீம் அரசுப்பகுதி என்றும் முற்றிலுமாகப் பிரிக்க வேண்டும் என்று முஸ்லீம்கள் தரப்பிலிருந்து கோரிக்கை முன்வைக்கும் அளவுக்கு வளர்ந்து விட்டது. இத்தகைய கோரிக்கைக்கு ஏற்பட்டுள்ள கடும் எதிர்ப்பைப் பற்றி நான் எதுவும் கூறத் தேவையில்லை. நிரந்தரமான சிறுபான்மை

யினர் பிரச்சினையை அதற்குத் தீர்வு காணாமலேயே சிறு பிரதேசங்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினையாக அது மாற்றி விட்டது என்பதை மட்டுமே இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.''

1941 ஏப்ரல் 23ஆம் தேதி காமன்ஸ் சபையில் பேசும்போது இந்தப் பிரச்சினை குறித்து அமெரி பின்வருமாறு கூறினார்:

''பாகிஸ்தான் கோரிக்கைக்கு குறுக்கே நிற்கும் மிகப்பெரும் நடைமுறை சிக்கல்களைப் பற்றி இங்கு நான் கூற வேண்டிய தில்லை. இந்தியாவின் அடிப்படை ஒற்றுமை சீர்குலைக்கப் படுவதிலுள்ள பயங்கர அபாயங்களை எடுத்துரைப்பதற்கு 18ஆம் நூற்றாண்டிய இந்தியாவின் துயரமிக்க வரலாற்றையும் இங்கு நான் நினைவு கூர வேண்டியதில்லை; இன்று நம் கண் முன்னேயே காணும் பால்கன் நாடுகளின் கசப்பான அனுப வத்தை நான் எடுத்துரைக்க வேண்டியிதில்லை. இந்த வகையில் பார்க்கும்போது, இந்திய நாட்டுக்கு நாங்கள் அளித்துள்ள ஒற் றுமைதான் இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மிகப் பெரிய சாதனையாகத் திகழ்கிறது. அதற்காக நாங்கள் பெருமித மடைகிறோம்.''

அரசியல் நிர்ணய சபை குறித்தும், பாகிஸ்தான் குறித்தும் ஓராண்டுக்கு முன்னர்வரைகூட மன்னர்பிரான் அரசாங்கம் இத் தகைய கருத்துகளைத்தான் கொண்டிருந்தது.

அப்படியிருக்க இப்போது அரசியல் நிர்ணய சபையை அமைப்பது சம்பந்தப்பட்ட யோசனையை முன்வைத்திருப்பது காங் கிரஸைத் திருப்திப்படுத்துவதற்காகவும், பாகிஸ்தான் சம்பந்தப்பட்ட யோசனை முஸ்லீம் லீகை திருப்திப்படுத்துவதற்காகவும்தான் என்பது தெளிவு. சரி, இனி தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் நிலை என்ன? இரத்தினச் சுருக்கமாகக் கூறினால் அவர்கள் கைகளும் கால் களும் கட்டப்பட்டு சாதி இந்துக்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக் கின்றனர். இந்துக்கள் அவர்களுக்கு ரொட்டிக்குப் பதிலாக கல்லைத் தருகின்றனர். அரசியல் நிர்ணய சபை என்பது தாழ்த்தப்பட்ட வகுப்பினரைப் பொறுத்த வரையில் ஓர் ஏமாற்றுவித்தையே ஆகும். அரசியல் நிர்ணய சபையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் நிலை பற்றி எந்த சந்தேகமும் இல்லை; அரசியல் நிர்ணய சபையின் அரசியல் திட்டம் சம்பந்தமாகவும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் களின் பிரதிநிதிகள் எவரும் இருக்க மாட்டார்கள்; ஏனென்றால் இதற்கு வகுப்புவாரி ஒதுக்கீடு எதுவும் நிர்ணயிக்கப்படவில்லை.

அப்படியே தாழ்த்தப்பட்ட இனத்தோரின் பிரதிநிதிகள் இடம் பெற்றாலும் அவர்கள் எத்தகைய நிர்ப்பந்தமுமின்றி, சுதந்திரமாகவும், தீர்மானமாகவும் வாக்களிக்க முடியாது. ஏனென்றால், முதலாவதாக, தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதிகள் மிகவும் சிறுபான்மையினர்களாக இருப்பார்கள். இரண்டாவதாக, அரசியல் நிர்ணய சபையின் எல்லா முடிவுகளும் ஏகமனதான வாக்குகளால் நிறைவேற்றப்பட வேண்டும் என்பதில்லை. எந்த ஒரு பிரச்சினையும் அது எத்தனை அரசியல் சட்டரீதியானதாக இருந்தாலும் அது பற்றி முடிவு எடுப்பதற்கு பெரும்பான்மை வாக்குகள் இருந்தாலே போதும். இத்தகைய நிலைமையில் அரசியல் நிர்ணய சபையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் குரல் எடுபாடு என்பது தெளிவு. மூன்றாவதாக மன்னர் பிரான் அரசு தெரிவித்துள்ள யோசனைகளின்படி, அரசியல் நிர்ணய சபைக்கு விகிதாரப் பிரதிநிதித்துவ அடிப்படையில் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் இப்போதைய முறை அரசியல் நிர்ணய சபைக்கு தாழ்த்தப்பட்ட இனப் பிரதிநிதிகளை நியமிக்கும் உரிமையை சாதி இந்தக்களுக்கு வழங்குகிறது. இத்தகைய தாழ்த்தப்பட்ட இனப் பிரதிநிதிகள் சாதி இந்துக்களின் கைக்கூலிகளாகவே இருப்பார்கள். நான்காவதாக, அரசியல் நிர்ணய சபையில் காங்கிரஸ்காரர்களே பெரும் எண்ணிக்கையில் இருப்பார்கள்; அவர்கள்தான் ஆதிக்கம் செலுத்தும் பெரும்பான்மை கட்சியினராக இருப்பார்கள்; இதனால் அச்சபையில் தங்கள் திட்டங்களை நிறைவேற்றக்கூடியவர்களாக இருப்பார்கள். தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் சமூக முன்னேற்றத்துக்குப் பாடுபட்டு வருபவர் என்று திரு. காந்தி என்னதான் வருணிக்கப்பட்டாலும், தாழ்த்தப்பட்டவர்கள் இந்திய தேசிய வாழ்க்கையில் ஒரு தனித்த, வேறுபட்ட சக்தியினர் என்று அரசியலமைப்புச் சட்டத்தில் அங்கீகரிக்கப்படுவதை அவர் முற்றிலும் எதிர்ப்பார். இத்தகைய சூழ்நிலையில், அரசியல் நிர்ணய சபையில் உள்ள பெரும்பான்மைக் கட்சியின் திட்டம் இப்போதைய அரசியலமைப்புச் சட்டத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு வழங்கப்பட்டுள்ள பாதுகாப்புகளை ஒழித்துக்கட்டி விடும். அரசியல் நிர்ணய சபையின் இயல்பை உணர்ந்தவர்கள் எவரும் மன்னர் பிரான் அரசு தான் தெரிவித்துள்ள யோசனைகள் மூலம் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களை அநேகமாக ஓநாய்களின் முன் எறிந்து விட்டனர் என்ற முடிவுக்கே வருவர். தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கு அரசியல் சட்டப் பாதுகாப்புகளை வழங்க அரசியல் நிர்ணய சபை மறுத்துவிட்டாலும் அதனால் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு எந்தப் பாதகமும் ஏற்பட்டு விடாது, ஏனென்றால் மன்னர் பிரான் அரசாங்கம் தனது யோசனைகளில் ஒரு நிபந்தனையைப்

புகுத்தியுள்ளது. அதாவது அரசியல் நிர்ணய சபை பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் ஓர் உடன்பாடு செய்து கொள்ள வேண்டும் என்று நிர்ணயித்துள்ளது. தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் நலன்களைப் பாதுகாப்பதே இந்த முன்னெச்சரிக்கையான நடவடிக்கையின் நோக்கம் என்று சிலர் வாதிக்கலாம். இந்த ஒப்பந்த யோசனை ஐரிஷ் சிக்கலுக்குத் தீர்வு காணுவதற்கு மன்னர் பிரான் அரசு மேற்கொண்ட திட்டத்திலிருந்து கடன் வாங்கப்பட்டதாகவே தோன்றுகிறது. மன்னர் பிரான் அரசு எத்தகைய பாதுகாப்புகளை இந்த ஒப்பந்தத்தில் சேர்க்கும் என்பது பற்றி இந்த ஒப்பந்த யோசனை எதுவும் கூறவில்லை. இது ஒரு முக்கியமான விஷயம், ஏனென்றால் புதிய அரசியலமைப்பின் படி தாழ்த்தப்பட்ட மக்களின் நலன்களைப் பாதுகாப்பதற்கு அவசியமான அரசியல் பாதுகாப்புகளின் தன்மை, எண்ணிக்கை, அவற்றைக் கையாளும் முறை போன்ற விஷயங்களில் மன்னர் பிரான் அரசுக்கும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் இடையே கருத்து வேறுபாடு எழக்கூடும். இரண்டாவது முக்கியமான விஷயம் இந்த ஒப்பந்தத்திற்கு ஆதார பிரமாணமாக இருக்கப்போவது என்ன என்பதாகும். இந்த ஒப்பந்தம் அரசியல் நிர்ணயசபை வகுத்துத் தரும் அரசியலமைப்புச் சட்டத்தின் ஒரு பகுதியாக இருக்குமா? ஒப்பந்தத்துக்கு முரணாக அரசியலமைப்புச் சட்டத்தில் இடம் பெற்றிருக்கும் எந்த விதியும் செல்லுபடியற்றதாக ஆக்கப்படுமா? அல்லது இந்த ஒப்பந்தம் இரண்டு அரசாங்கங்களுக்கிடையேயான அதாவது இந்திய தேசிய அரசாங்கத்துக்கும் மன்னர் பிரான் அரசாங்கத்துக்கும் இடையேயான வெறும் சம்பிரதாயபூர்வமான ஒப்பந்தமாக மட்டுமே இருக்குமா? இந்த ஒப்பந்தம் முதலில் கூறிய வகையைச் சேர்ந்ததாக இருக்குமாயின் அது நாட்டின் சட்டமாக இருக்கும், இந்திய அரசாங்கத்தின் சட்ட இசைவாணை அதற்கு ஆதார அடிப்படையாக இருக்கும். இவ்வாறின்றி, இந்த ஒப்பந்தம் இரண்டாவது வகையைச் சேர்ந்ததாக இருக்குமாயின் அது நாட்டின் சட்டமாக இருக்க முடியாது, அதற்கு எவ்வித சட்ட வலுவும் இருக்காது என்பது தெளிவு. அதன் பிராமணம் அரசியல் பிராமணமாகவே இருக்கும். ஐரிஷ் சுதந்திர அரசு விஷயத்தில் நடந்தது போன்ற காரணங்களுக்காக, ஓர் ஒப்பந்தம் தேசிய அரசாங்கத்தால் வகுக்கப்பட்ட அரசியலமைப்புச் சட்டத்தை மீறிச் செல்ல முடியாது. இத்தகைய ஒப்பந்தத்துக்குப் பின்னாலுள்ள ஒரே இசைவாணை அரசியல் இசைவாணையே ஆகும். இத்தகைய இசைவாணையைப் பயன்படுத்துவது அரசாங்கத்தின் இயல்பையும் பொது மக்களின் அபிப்பிராயத்தையும் பொறுத்திருக்கும் என்பது தெளிவு. இந்த அடிப்படையில் பார்க்கும்போது பின்கண்ட கேள்விகள் எழு

கின்றன: (1) ஒப்பந்த விதிகளைச் செயல்படுத்துவதற்கு மன்னர் பிரான் அரசிடம் எத்தகைய வழிமுறைகள் இருக்கின்றன? (2) இரண்டாவதாக, ஒப்பந்த விதிகளின்படி நடந்து கொள்ளுமாறு இந்திய அரசாங்கத்தை நிர்ப்பந்தப்படுத்த மன்னர்பிரான் அரசு இந்த வழிமுறைகளைப் பயன்படுத்தத் தயாராக இருக்குமா? முதல் கேள்வியைப் பொறுத்த வரையில், ஒப்பந்தத்தை இரண்டு வகைகளில் செயல்படுத்தலாம்; படைபலத்தைப் பயன்படுத்துதல், வாணிகப் போர் நடத்துதல். படைபலத்தைப் பொறுத்தவரையில் இப்பணிக்கு இந்திய சைன்யத்தின் சேவை கிட்டாது. அது முற்றிலும் புதிய இந்திய தேசிய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்கு மாற்றப்படும். எனவே, ஒப்பந்தத்தை அமல்படுத்துவதற்கான இந்த வழிமுறையை மன்னர்பிரான் அரசு பயன்படுத்த முடியாது. ஒப்பந்தப்படி செயல்படுமாறு தேசிய அரசாங்கத்தை நிர்ப்பந்தப்படுத்த மன்னர்பிரான் அரசு தனது சொந்தப் படைகளை அனுப்பும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. அதேபோன்ற வாணிகப்போரும் சாத்தியமில்லை. இது தற்கொலைக்கு ஒப்பான கொள்கையாகும். நில ஆண்டுத் தொகைகளை வசூலிப்பது சம்பந்தமாக ஐரிஷ் குடியரசுடன் நடைபெற்ற ஐரிஷ் போர் அனுபவம் காட்டுவது என்ன? கடைக்காரர்களை ஏராளமாகக் கொண்ட ஒரு தேசம் இதை அனுமதிக்காது; எனவே, இந்த ஒப்பந்தம் ஒரு வெத்துவேட்டாகத்தான் இருக்கப் போகிறது. இந்தியர்கள் வரவேற்பார்கள் என்ற நம்பிக்கையில் மன்னர்பிரான் அரசாங்கம் இந்தப் பிரேரணைகளை முன்வைத்திருக்கிறது. ஆனால் ஒரு சில மாதங்களுக்கு முன்னர் தாங்களே வன்மையாகக் கண்டித்து நிராகரித்த அதே யோசனைகள் இப்போது இந்தியர்கள் முன் ஏன் வைக்கப்படுகின்றன என்பதை மன்னர் பிரான் அரசும் சரி, சர் ஸ்டாபோர்டு கிரிப்சும் சரி எவ்வகையிலம் விளக்கவில்லை. அரசியல் நிர்ணய சபை அமைப்பதற்கு நாங்கள் அனுமதிக்க மாட்டோம், ஏனென்றால் அது சிறுபான்மையினருக்கு நிர்ப்பந்தம் கொடுக்கும் ஓர் ஏற்பாடாக இருக்கும் என்று ஓர் ஆண்டுக்கு முன்னர் மன்னர் பிரான் அரசாங்கம் அறிவித்தது. ஆனால் இப்போது அரசியல் நிர்ணய சபை அமைப்பதை அனுமதிப்பதற்கும் சிறுபான்மையினரை வல்லந்தப்படுத்துவதற்கும் அது தயாராக இருக்கிறது. பாகிஸ்தான் உருவாக நாங்கள் அனுமதிக்க மாட்டோம், ஏனென்றால் அது இந்தியாவைத் துண்டாடிவிடும் என்று ஓராண்டுக்கு முன்னர் மன்னர் பிரான் அரசாங்கம் கூறிற்று. இன்று இந்தியாவை இரு கூறாகப் பிரிப்பதை அனுமதிக்க அவர்கள் தயாராக இருக்கிறார்கள். ஒரு மாபெரும் சாம்ராஜ்யத்தின் அரசாங்கம்

சிறிதும் கூச்சநாச்சமின்றி கோட்பாட்டை எவ்வாறு காற்றில் பறக்க விடுகிறது என்பது தெரியவில்லை. யுத்தத்தின் விளைவாக மன்னர் பிரான் அரசாங்கம் மிகுந்த கிலி அடைந்து போயிருக்கிறது என்பது தான் இந்தக் கேள்விக்கு விடையாக இருக்க முடியும். பிரிட்டிஷ் அரசு நம்பிக்கை இழந்துபோனதன் விளைவே இந்தப் பிரேரணைகள். காங்கிரஸ் முன்வைத்த கோரிக்கைகளையும் லீக் முன்வைத்த கோரிக்கைகளையும் ஒப்பிட்டுப் பார்த்தால், இந்த யோசனைகளின் மூலம் அக்கட்சிகளுக்கு அளித்துள்ள சலுகைகளை எண்ணிப் பார்த்தால் மன்னர்பிரான் அரசாங்கம் எந்த அளவுக்குப் பெரும் பீதியடைந்திருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம். இந்தியாவுக்கான அரசியல் அமைப்புச் சட்டம் ஓர் அரசியல் நிர்ணய சபையால் சாதாரண பெரும்பான்மை வாக்குகளைக் கொண்டு உருவாக்கப் பட வேண்டும் என்று காங்கிரஸ் கோரிற்று. ஆனால் காங்கிரசின் இந்தக் கோரிக்கை சிறுபான்மையினரை வல்லந்தப்படுத்துவதாக இருந்தால் அதற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் உடைந்தையாக இருக்காது என்று வைசிராய் அறிவித்தபோது, காங்கிரஸ் காரியக் கமிட்டி 1940 ஆகஸ்டு 22ல் நடைபெற்ற அதன் கூட்டத்தில் பின்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றிற்று:

''எந்த சிறுபான்மையினரையும் வல்லந்தப்படுத்துவது குறித்து காங்கிரஸ் என்றுமே எண்ணியதில்லை. அவ்வாறு செய்யும்படி பிரிட்டிஷ் அரசாங்கத்தை ஒரு போதும் வலியுறுத்தியதும் இல்லை. அவ்வாறிருக்கும்போது முறைப்படித் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட அரசியல் நிர்ணய சபை மூலம் அரசியலமைப்புச் சட்டம் வகுக்கப்பட வேண்டும் என்ற காங்கிரசின் கோரிக்கை ஒரு நிர்ப்பந்த நடவடிக்கையாக தவறாக சித்திரிக்கப்பட்டிருப்பதையும், சிறுபான்மையினர் பிரச்சினை இந்தியர்களின் முன்னேற்றத்திற்கு மிகப்பெரும் தடைக்கல்லாக ஆக்கப்பட்டிருப்பதையும் கண்டு கமிட்டி மிகவும் வருந்துகிறது.''

காரியக் கமிட்டி மேலும் கூறியதாவது:-

''சிறுபான்மையினரின் உரிமைகள் அவர்களுடைய தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுடன் உடன்பாடு கண்டு முழு அளவுக்குப் பாதுகாக்கப்பட வேண்டும் என்று காங்கிரஸ் வலியுறுத்துகிறது.''

*சிறுபான்மையினரின் உரிமைகள் பற்றிய முடிவு அரசியல் நிர்ணய சபையின் அதிகார வரம்பிற்குள் கொண்டுவரப்பட வேண்டும் என்று காங்கிரஸ் கூட கோரவில்லை என்பதையே இது காட்டுகிறது. எனினும் இந்த சிறுபான்மையினர் உரிமைகள் குறித்த பிரச்சினைக்கு முடிவு காணும் கூடுதல் உரிமையை மன்னர் பிரான் அரசாங்கம் அவர்களுக்கு அளித்தது. பாகிஸ்தான் பிரச்சினையிலும் இதேபோக்கு கடைப்பிடிக்கப்பட்டதைக் காணலாம். பாகிஸ்தான் உடனடியாக உருவாக்கப்பட வேண்டும் என்று முஸ்லீம் லீக் கோரவில்லை. முஸ்லீம் லீக் கோரியதெல்லாம் அரசியலமைப்புச் சட்டம் அடுத்தமுறை திருத்தியமைக்கப்படும்போது முசல்மான்கள் பாகிஸ்தான் பிரச்சினையை எழுப்புவதைத் தடுக்கக் கூடாது என்பதேயாகும். ஆனால் இப்போதைய யோசனைகள் மேலும் ஒரு படி மேலே சென்று, பாகிஸ்தானைத் தோற்றுவிக்கும் உரிமையை முஸ்லிம் லீகுக்கு அளித்துள்ளன. இவை அரசியலமைப்பு சம்பந்தப்பட்ட யோசனைகள், இந்துக்களும், முசல்மான்களும், தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களும், சீக்கியர்களும் முழுமனதோடு பங்கு கொள்ளக் கூடிய ஒரு யுத்தத்துக்கு இந்தியாவை வழிநடத்திச் செல்லும் நோக்கம் கொண்டவை. அப்படியிருந்தும் சர் ஸ்டோபோர்டு கிரிப்ஸ் மன்னர் பிரான் அரசாங்கத்தின் அனுமதியுடனோ அல்லது அனுமதி இல்லாமலோ பிரதான கட்சிகளுக்கும் சிறு கட்சிகளுக்கும் இடையே பாரபட்சம் காட்டினார். எவற்றின் சம்மதம் அவசியமோ அவை பிரதான கட்சிகள் எனப்படுகின்றன; எவற்றுடன் கலந்தாலோசனை செய்வது மட்டும் போதுமானது என்று கருதப்படுகிறதோ அப்படிப்பட்ட கட்சிகள் சிறு கட்சிகள் எனப்படுகின்றன. கட்சிகளை வேறுபடுத்திக் காண்பதில் இது ஒரு புது வகையான முறையாகும். மன்னர் பிரான் அரசாங்கமோ, வைசிராயோ தமது முந்திய அறிக்கைகளில் இதை ஒருபோதும் குறிப்பிட்டதில்லை. ''இந்தியாவின் தேசிய வாழ்க்கையில் பிரதான சக்திகளின் சம்மதம்'' பற்றி அறிவிப்பு குறிப்பிட்டுள்ளது.''*

*தாழ்த்தப்பட்ட வகுப்பினரைப் பொறுத்த வரையில், எந்த ஓர் அறிக்கையிலும் முஸ்லீம்களுக்கு தரப்பட்டுள்ள இடத்துக்குக் கீழான இடம் தரப்பட்டதை நான் பார்த்ததில்லை. 1941 ஜனவரி 10ஆம் தேதி பம்பாயில் வைசிராய் நிகழ்த்திய உரையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரை முசல்மான்களுடன் இணைத்துக் கூறியிருப்பதைக் காணலாம். அவரது உரையிலிருந்து ஒரு மேற்கோளை இங்கு தருகிறேன்:*

''சிறுபான்மையினர்கள் இடையறாது பல கோரிக்கைகளை வலியுறுத்தி வருகின்றனர். இவர்களில் மாபெரும் முஸ்லீம் சிறுபான்மையினரையும் ஷெட்யூல்டு வகுப்பினரையும் முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். கடந்த காலத்தில் சிறுபான்மையினருக்கு பல உத்தரவாதங்கள் அளிக்கப்பட்டிருக்கின்றன. அவர்களது நிலை பாதுகாக்கப்பட வேண்டும்; இந்த உத்தரவாதங்கள் நடைமுறைப் படுத்தப்பட வேண்டும் என்பதில் ஐயமில்லை.''

ஆனால் இப்போது பரஸ்பரம் பகைமையை உண்டு பண்ணக் கூடிய வகையில் சிறுபான்மையினர் பிரித்துக் காட்டப்படுகின்றனர்; இதனால் அவர்கள் கீழ் நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கின்றனர். அரசியலமைப்பு ரீதியில் பார்க்கும்போது நாட்டில் இது அமைதிக்கேட்டையும் விசுவாசமின்மையுமே தோற்றுவிக்கும். ஏற்கெனவே இதர நண்பர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடிவு செய்து விட்டவர்களின் நட்பைப் பெறுவதற்காக செய்யப் படும் இந்த முயற்சியில் தங்களது உண்மையான நண்பர்களை இழக்க நேரிடும் என்பதை பிரிட்டிஷார் கவனத்தில் கொள்ள வேண்டும். மன்னர்பிரான் அரசு திடீர் குட்டிக்கரணம் அடித்துள்ளதையே இந்த கிரிப்ஸ் யோசனைகள் காட்டுகின்றன. சிறுபான்மையினர் மீது தொடுக்கப்படும் படையெடுப்பு என்று தாங்களே வருணித்த அதே யோசனைகளை இப்போது முன்வைத்திருப்பது வலிமை பெறுவதற்காக நேர்மை பலியிடப்பட்டிருப்பதையே காட்டுகிறது. இது மூனிச் மனோபாவமே தவிர வேறல்ல; தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக மற்றவர்களைப் பலியிடுவதே இந்த மனோபாவத்தின் சாரமாகும். இந்த மனப்போக்கே இந்த யோசனைகளில் ஆதிக்கம் செலுத்துகிறது. இவற்றைத் திரும்பப்பெற்றுக் கொள்ள வேண்டும் என்பதே பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு நான் கூறும் யோசனையாகும். நேர்மைக்கும் நீதிக்கும் அவர்களால் போராட முடியவில்லை என்றால், தாங்கள் அளித்த வாக் குறுதிகளைக் காப்பாற்ற முடியவில்லை என்றால் அவர்கள் வாய்மூடி மௌனமாக இருப்பதே உசிதம். அதன் மூலம் குறைந்த பட்சம் தங்களது மரியாதையையும் கௌரவத்தையுமாவது காப்பாற்றிக் கொள்ளலாம்.

★ ★ ★

*பின் இணைப்பு - X*

# வேவல் பிரபுவுக்கும் திரு. காந்திக்கும் இடையே நடைபெற்ற கடிதப் போக்குவரத்து

## *1. 1944 ஜுலை 15ல் திரு. காந்தி வைசிராய்க்கு எழுதிய கடிதம்*

*அன்பார்ந்த நண்பர் அவர்களே*

*நியூஸ் கிரானிக்கல் பத்திரிக்கையைச் சேர்ந்த திரு. கெல்டருக்கு நான் அளித்த பேட்டியின் அதிகாரபூர்வமான பிரதிகள் இப்போது இந்தியப் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்டிருப்பதை நீங்கள் பார்த்திருப்பீர்கள் என்பதில் ஐயமில்லை. நான் பத்திரிகைகளில் தெரிவித் திருந்தபடி, பிரதானமாக நீங்கள் பார்க்க வேண்டும் என்பதற்காகவே அவை பிரசுரிக்கப்பட்டன. ஆனால் திரு.கெல்டர் நல்ல நோக்கத்தோடேயே அந்தப்பேட்டிக்கு அவசரப்பட்டுப் பிரதானம் கொடுத்து விட்டார். வருந்துகிறேன். எனினும் 1944 ஜுன் 17 ஆம் தேதிய என் கடிதத்தில் அடங்கியுள்ள வேண்டுகோள்களில் ஒன்றை ஏற்பதற்கு இந்தப் பேட்டி துணைபுரியுமானால் நலமாயிருக்கும்.*

*தங்கள்*
*(ஒப்பம்) எம்.கே. காந்தி*

## *2. திரு.காந்திக்கு வைசிராய் அளித்த பதில், 22 ஜுலை 1944*

*''அன்பார்ந்த திரு. காந்தி அவர்களுக்கு,*

*உங்களுடைய ஜுலை 15ஆம் தேதியிட்ட கடிதத்திற்கு நன்றி. திரு. கெல்டருக்கு நீங்கள் அளித்த பேட்டியையும், அதனைத் தொடர்ந்து நீங்கள் தந்துள்ள விளக்கங்களையும் பார்த்தேன். நீங்கள் ஒரு திட்டவட்டமான, ஆக்கப்பூர்வமான கொள்கையை முன்வைத்தால் அதனை மகிழ்ச்சியோடு பரிசீலிப்பேன் என்று கடந்த கடிதத்*

தில்கூறியிருந்ததைத் திரும்பக் கூறுவதைத் தவிர இப்போது பய னுள்ள முறையில் என் கருத்தை வெளியிட முடியும் என்று நான் நினைக்கவில்லை.

தங்கள் அன்புள்ள
(ஒப்பம்) வேவல்''

### 3. 1944 ஜூலை 27 ஆம் தேதி வைசிராய்க்கு காந்தி எழுதிய கடிதம்

அன்பார்ந்த நண்பர் அவர்களுக்கு,

தங்களது 22 ஆம் தேதிய கடிதம் எனக்குப் பெரும் ஏமாற் றத்தை அளித்தது. எனினும் ஏமாற்றத்துக்கு இடையேயும் செய லாற்றப் பழகிப் போனவன் நான். இத்துடன் என் உருப்படியான யோசனையை முன்வைத்திருக்கிறேன்.

இப்போதைய மாறிய நிலைமைகளில், 1942 ஆகஸ்டு தீர் மானத்தில் குறிப்பிடப்பட்டிருந்த வெகுஜன சட்டமறுப்பு இயக் கத்தை நடத்த இயலாது என்பதையும், இந்தியாவுக்கு உடனடியாக சுதந்திரம் அளிக்கும் ஒரு பிரகடனத்தை வெளியிட்டு, யுத்தம் நடை பெற்று வரும் காலத்தில் இந்தியாவுக்கு கூடுதல் நிதிச்சுமையை ஏற்படுத்தாத வகையில் இப்போதுபோல் ராணுவ நடவடிக்கைகள் தொடரும் என்ற நிபந்தனையின்பேரில் மத்திய சட்டமன்றத்துக்குப் பொறுப்புக்கூறக் கடமைப்பட்டுள்ள ஒரு தேசிய அரசாங்கம் அமைக்கப் படுமானால் யுத்த நடவடிக்கைகளுக்கு காங்கிரஸ் தனது முழு ஒத்துழைப்பை அளிக்கும் என்று அறிவிக்கும்படி காரியக்கமிட்டிக் குப் பரிந்துரை செய்ய நான் தயாராக இருக்கிறேன். உடன்பாடு காணும் விருப்பம் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு இருக்குமானால் கடிதப் போக்குவரத்துக்குப் பதிலாக நேசபூர்வமான பேச்சு வார்த்தை கள் நடைபெறுவது உகந்ததாக இருக்கும். ஆனால் நான் உங்கள் கைகளில் இருக்கிறேன். ஒரு கௌரவமான உடன்பாட்டுக்கு சிறி தளவு நம்பிக்கை இருக்கும்வரை உங்கள் கதவுகளைத் தொடர்ந்து தட்டிக் கொண்டுதான் இருப்பேன்.

மேற்கூறிய கடிதத்தை எழுதி முடித்த பிறகு பிரபுக்கள் சபையில் முன்ஸ்டர் பிரபு நிகழ்த்திய சொற்பொழிவைப் பார்த்தேன். பிரபுக்கள் சபையில் அவர் தந்துள்ள தொகுப்புரை ஓரளவு என் பிரேரணையை ஒத்ததாக இருக்கிறது. இந்தத் தொகுப்புரை பரஸ்பர நேசபூர்வமான விவாதத்துக்கு ஓர் அடிப்படையாக இருக்க முடியும்.

தங்கள் மனமார்ந்த
(ஒப்பம்) எம்.கே.காந்தி''

### 4. 1944 ஆகஸ்டு 15 ஆம் தேதியிட்டு திரு. காந்திக்கு வைசிராய் எழுதிய பதில் கடிதம்

''அன்புள்ள திரு. காந்தி அவர்களுக்கு,

உங்கள் ஜூலை 27ஆம் தேதிய கடிதம் கிடைத்தது. நன்றி. உங்களுடைய பிரேரணைகள் வருமாறு:

(i) காரியக் கமிட்டிக்குப் பின்கண்டபடி பரிந்துரைக்க நீங்கள் பொறுப்பேற்றுக்கொள்வீர்கள்: (அ)''மாறிய நிலைமைகளில், 1942 ஆகஸ்டு தீர்மானத்தில் உத்தேசித்திருந்த வெகுஜன சட்டமறுப்பு இயக்கம் நடத்தப்படுவது சாத்தியமல்ல'' ஆ. ''யுத்தமுயற்சிக்கு பின்கண்ட நிபந்தனைகளின்படி காங்கிரஸ் முழு ஒத்துழைப்பை அளிக்கும்: (ii) மன்னர்பிரான் அரசாங்கம் (அ) இந்தியாவின் சுதந்திரத்தை உடனடியாக பிரகடனம் செய்யவேண்டும்; (ஆ) யுத்தம் நடைபெற்று வரும் காலத்தில் இந்தியாவுக்கு கூடுதல் நிதிச்சுமையை ஏற்படுத்தாத வகையில் இப்போது போல் ராணுவ நடவடிக்கைகள் தொடரும் என்ற நிபந்தனையின்பேரில், மத்திய சட்டமன்றத்துக்குப் பொறுப்புக் கூறக்கடமைப்பட்டுள்ள ஒரு தேசிய அரசாங்கம் அமைக்கப்படுமானால் யுத்த நடவடிக்கைகளுக்கு காங்கிரஸ் தனது முழு ஒத்துழைப்பை அளிக்கும்.''

இந்தியப்பிரச்சினைக்கு ஓர் உடன்பாடு காணுவதற்கு மன்னர்பிரான் அரசாங்கம் மிகவும் ஆவலோடு இருக்கிறது. ஆனால் விவாதத்திற்கு அடிப்படையாக நீங்கள் முன்வைத்துள்ள பிரேரணைகள் போன்றவை மன்னர்பிரான் அரசாங்கத்துக்கு முற்றிலும் ஏற்புடை

யவை அன்று; கடந்த ஜூலை 28ஆம் தேதி காமன்ஸ் சபையில் திரு. அமெரி தந்த அறிக்கையைப் படித்திருப்பீர்களேயானால் இதை நீங்கள் தெரிந்து கொண்டிருக்கலாம். 1942 ஏப்ரலில் சர் ஸ்டாபோர்டு கிரிப்சுக்கு மௌலானா அபுல் கலாம் ஆசாத் சமர்ப்பித்த பிரேரணைகளைப்போன்றே இவை இருக்கின்றன. மன்னர்பிரான் அரசாங்கம் அவற்றை நிராகரிப்பதற்கு அப்போது என்ன காரணங்கள் இருந்தனவோ அதே காரணங்கள் இப்போதும் இருக்கின்றன.

3. இந்தக் காரணங்களை எல்லாம் விவரமாகத் திரும்பிக் கூறிக்கொண்டிராமல், அச்சமயம் மன்னர்பிரான் அரசாங்கம் தெளிவாகக் கூறியதை உங்களுக்கு நினைவுபடுத்துகிறேன்.

அ. போர்முடிந்தபிறகு இந்திய தேசிய வாழ்வின் பிரதான சக்திகள் கலந்தாலோசித்து ஓர் உடன்பாடான அரசியலமைப்பை வகுக்கவேண்டும், தேவையான ஒப்பந்த ஏற்பாடுகளை மன்னர்பிரான் அரசுடன் செய்து கொள்ள பேச்சுவார்த்தைகள் நடத்தப்படவேண்டும்;

ஆ. நீங்கள் தெரிவித்திருப்பதுபோல் மத்தியசட்டமன்றத்திற்குப் பொறுப்புக்கூறக்கடமைப்பட்டுள்ள ஒரு ''தேசிய அரசாங்கத்தை'' அமைக்கவேண்டுமானால் அரசியலமைப்புச் சட்டத்தில் திருத்தம் செய்யப்பட வேண்டும்; ஆனால் யுத்தம் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது இந்தத் திருத்தத்தைச் செய்வது சாத்தியமல்ல. இன, சமய சிறுபான்மையினரதும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரதும் நலன்களைப் பாதுகாக்கும் தங்கள் கடமைகளைப் பூர்த்தி செய்வதும், அதேபோன்று இந்திய சமஸ்தானங்களுடன் தங்களுக்குள்ள ஒப்பந்தக் கடமைகளை நிறைவேற்றுவதுமே இந்த நிபந்தனைகளின் நோக்கமாகும்.

4. மேலே கூறிய நிபந்தனைகளின் அடிப்படையில்தான், தற்போதைய அரசியலமைப்புச் சட்டவரம்புக்குள் செயல்படக்கூடிய ஓர் இடைக்கால அரசாங்கத்தில் பங்குகொள்ளும்படி மன்னர்பிரான் அரசு இந்தியத் தலைவர்களுக்கு அழைப்பு விடுத்துள்ளது. யுத்தம் முடிவடையும்வரை பாதுகாப்புக்கும் ராணுவ நடவடிக்கைகளுக்குமான பொறுப்பை அரசின் இதர பொறுப்புகளிலிருந்து பிரிக்க முடியாது என்பதையும், யுத்தம் முடிவடைந்து புதிய அரசியலமைப்புச்

சட்டம் நடைமுறைக்கு வரும்வரையிலும் மன்னர்பிரான் அரசும், கவர்னர்-ஜெனரலும் அனைத்துத் துறையிலும் தங்கள் பொறுப்புக் களை வகித்து வருவார்கள் என்பதையும் முற்றிலும் தெளிவுபடுத்த விரும்புகிறேன். யுத்த செலவுகளில் இந்தியாவின் பங்கைப் பொறுத்த வரையில் இது மன்னர்பிரான் அரசும் இந்திய அரசாங்கமும் கூடிப் பேசி முடிவு செய்ய வேண்டிய விஷயமாகும். இரு தரப்புகளில் எவரேனும் ஒருவரது வேண்டுகோளின் பேரில்தான் தற்போதைய பொருளாதார ஏற்பாடுகளை மறுபரிசீலனை செய்ய முடியும்.

5. இத்தகைய சூழ்நிலைமைகளில், நீங்கள் தெரிவித்துள்ள யோசனையின் அடிப்படையில் விவாதம் நடத்துவது எத்தகைய பலனையும் அளிக்காது என்பது தெள்ளத்தெளிவு. எனினும் இந்துக் கள், முஸ்லீம்கள், முக்கியமான சிறுபான்மையினர் ஆகியோரின் தலைவர்கள் தற்போதைய அரசியலமைப்புச் சட்ட வரம்புக்குள் உருவாக்கப்படும் ஓர் இடைக்கால அரசாங்கத்தில் ஒத்துழைக்கத் தயா ராக இருப்பார்களேயானால் நல்ல முன்னேற்றம் காணமுடியும் என்று நம்புகிறேன். இத்தகைய ஓர் இடைக்கால அரசாங்கம் வெற்றி பெறவேண்டுமானால், அது அமைக்கப்படுவதற்கு முன்னர் புதிய அரசியலமைப்பு எந்த முறையில் உருவாக்கப்பட வேண்டும் என்பது குறித்து இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் ஏனைய முக்கிய சக்திகளுக்கும் இடையே கொள்கை அளவில் ஓர் உடன்பாடு ஏற் படுவது அவசியம். இத்தகைய ஓர் உடன்பாட்டுக்கு வருவது முற்றி லும் இந்தியர்கள் சம்பந்தப்பட்ட விஷயம்.

இப்போதுவிட இந்தியத்தலைவர்கள் நெருக்கமாக வரும் வரை இதில் நான் எந்த உதவியும் செய்யமுடியும் என்று நான் நம்ப வில்லை. சிறுபான்மையினரது பிரச்சினைகள் எளிதானவை அல்ல என்பதை உங்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன்; பரஸ்பரம் விட்டுக் கொடுப்பதன் மூலமும் சகிப்புத்தன்மையின் மூலமும்தான் இப்பிரச் சினைகளுக்குத் தீர்வு காண முடியும்.

6. யுத்தம் முடிந்தபிறகு இடைக்கால அரசாங்கம் எவ்வளவு காலம் நீடிக்கும் என்பது புதிய அரசியலமைப்புச்சட்டம் வகுக்கப் படும் வேகத்தைப் பொறுத்துள்ளது. ஒரு புதிய அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்குவதில் ஒத்துழைக்க இந்தியத் தலைவர்கள் தயா

ராக இருக்கும்பட்சத்தில் அத்தகைய அரசியலமைப்புச்சட்டத்துக் கான பூர்வாங்கப் பணிகளை அவர்கள் இப்போதே தொடங்க லாம். அரசியலமைப்புச் சட்டத்தை வகுக்கும் முறைபற்றி அவர்கள் உண்மையான உடன்பாடு காணமுடியுமானால் யுத்தத்திற்குப் பிறகு இது விஷயத்தில் இறுதி முடிவுகள் எடுப்பதற்கும், மன்னர்பிரான் அரசுடன் ஒப்பந்த ஏற்பாடுகளைச் செய்துகொள்வதில் உடன்பாடு காணுவதற்கும் நேரத்தை வீணாக செலவிடும் நிலைமை ஏற்படாது. இவை எல்லாவற்றிலும் முக்கிய பொறுப்புகள் இந்தியத் தலைவர் களுடையதே என்பதை இறுதியாக எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

உங்கள் விநயமுள்ள
(ஒப்பம்) வேவல்

# பின் இணைப்பு - XI

# ஷெட்யூல்டு வகுப்பினரின் அரசியல் கோரிக்கைகள்

அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளத்தின் காரியக் கமிட்டிக் கூட்டம் சென்னையில் ராவ்பகதூர் என்.சிவராஜ் பி.ஏ,.பி.எல்., எம்.எல்.ஏ தலைமையில் 1944 செப்டம்பர் 23 ஆம் தேதி நடைபெற்றது. புதிய அரசியலமைப்பில் தீண்டப்படாதோர்களுக்கு அளிக்கப்படவேண்டிய பாதுகாப்புகள் குறித்து இக்கூட்டத்தில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### தீர்மானம் - 1

பொருள்: ஷெட்யூல்டு வகுப்பினரை ஒரு தனி சக்தியாக அங்கீகரித்தல்

ஷெட்யூல்டு வகுப்பினர் இந்தியாவின் தேசிய வாழ்வில் முக்கியமான தனி சக்தியினர் என்றும், இந்தியர்களுக்கு அதிகாரத்தை மாற்றுவதற்கு இந்தியாவின் அரசியலமைப்புக்கு அவர்களது சம் மதத்தைப் பெறுவது அவசியம் என்றும் 1944 ஆகஸ்டு 15 ஆம் தேதி திரு.காந்திக்கு எழுதிய கடிதத்தில் மேதகைய வைசிராய் குறிப்பிட் டிருந்தார். கிரிப்ஸ் யோசனைகளில் வரையறுத்துக் கூறப்பட்டிருக்கும் நிலையிலிருந்து மன்னர்பிரான் அரசு விலகிச்செல்லுவதை இது காட்டுகிறது என்று இந்தியப் பத்திரிகைகளில் சில குற்றம் சாட்டி யுள்ளன. இத்தகைய பிரசாரத்தைக் கண்டு கமிட்டி தனது நேர்மை யான சீற்றத்தை வெளியிடுகிறது; ஷெட்யூல்டு வகுப்பினர் இந்தியா வின் தேசியவாழ்வில் ஒருதனித்த, வேறுபட்ட சக்தியினர் என்பதை திட்டவட்டமான முறையில் கமிட்டி மிகவும் வலியுறுத்திக்கூறு கிறது; கிரிப்ஸ் யோசனைகளின் கருத்து வட்டத்துக்கு உட்பட்டு, சீக்கியர்களையும் முஸ்லீம்களையும் விடவும் அவர்கள் உண்மை யிலேயே சமயரீதியில் ஒரு சிறுபான்மையினர் என்பதையும் கமிட்டி எடுத்துக்காட்ட விரும்புகிறது. திரு.காந்திக்கு எழுதிய கடிதத்தில் வேவல்பிரபு கூறியிருந்ததே ஆரம்பம் முதல் மன்னர்பிரான் அரசாங்

கத்தின் நிலையாக இருந்துவருகிறது என்பதை காரியக் கமிட்டி சுட்டிக் காட்ட விரும்புகிறது; 1917 ஆம் ஆண்டு வாக்கிலேயே மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை இந்த நிலையை மிகத் தெளிவாக விளக்கியிருக்கிறது; அத்தோடு பொறுப்பாட்சியை இந்திய அரசியல் பரிணாமத்தின் இலட்சியம் எனவும் அது தெளிவுபடுத்தி இருக்கிறது; மேலும் வட்டமேசை மாநாடு, கூட்டு பார்லிமெண்டரிக் கமிட்டி ஆகியவற்றில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு தனிப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டிருப்பது, மற்றும் 1935 ஆம் வருடம் இந்திய அரசாங்க சட்டம் போன்ற நடவடிக்கைகள் மூலம் ஷெட்யூல்டு வகுப்பினர் இந்துக்களிடமிருந்து தனித்ததொரு சிறுபான்மை சமூகத்தினர் என்பதை மன்னர் பிரான் அரசாங்கம் உறுதிப்படுத்தியுள்ளது. எனவே, மன்னர்பிரான் அரசாங்கத்தின் கொள்கையிலிருந்து இது ஒரு பிறழ்வு என்று குற்றம் சாட்டுவது தவறான, விஷமத்தனமான பிரசாரம் என்று கூறுவதில் காரியக்கமிட்டிக்கு எந்தத் தயக்கமும் இல்லை; அரசியலமைப்புச் சட்டப் பாதுகாப்புகள் தங்களுக்கு வேண்டும் என்னும் நியாயமான கோரிக்கையை ஷெட்யூல்டு வகுப்பினர் முன்வைத்திருக்கின்றனர்; இந்தக் கோரிக்கையைத் தோற்கடிக்கும் பொருட்டே ஷெட்யூல்டு வகுப்பினரின் பகைவர்கள் இந்த சூழ்ச்சியில் இறங்கியிருக்கின்றனர் என்று கமிட்டி கருதுகிறது; இந்துக்களுக்கும் ஷெட்யூல்டு வகுப்பினர்களுக்கும் இடையே அமைதியும் நல்லெண்ணமும் நிலவுவதற்காகவும், இந்தியாவின் அரசியல் லட்சியம் விரைவில் ஈடேறுவதற்காகவும் இந்த உண்மையை ஏற்றுக்கொள்ளும்படி எல்லா இந்திய அரசியல் தலைவர்களையும் முக்கியமாக இந்துத் தலைவர்களை காரியக் கமிட்டி கேட்டுக்கொள்கிறது.

### தீர்மானம் - 2

பொருள்: ஷெட்யூல்டு வகுப்பினர் சம்பந்தமாகவும்
அரசியலமைப்பு சம்பந்தமாகவும்
மன்னர்பிரான் அரசாங்கத்தின் அறிவிப்பு

சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்புக்கு ஷெட்யூல்டு வகுப்பினரின் சம்மதத்தைப் பெறுவது ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்ததாகவும், இந்தியர் கைகளுக்கு ஆட்சி அதிகாரத்தை மாற்று

ஒரு முக்கிய நிபந்தனையாகவும் கருதுவதாக மன்னர் பிரான் அர சாங்கம் வெளியிட்டுள்ள அறிவிப்பை அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் காரியக் கமிட்டி வரவேற்கிறது; இந்த அறிவிப்பை மேதகு வைசிராய் அண்மையில் உறுதி செய்திருப் பதையும் அது வரவேற்கிறது. ஆனால் அதேசமயம் நாட்டிலுள்ள காங்கிரஸ் மற்றும் ஏனைய அரசியல் அமைப்புகளின் போக்கையும் காரியக் கமிட்டி மன்னர் பிரான் அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறது; மன்னர்பிரான் அரசின் இந்த அறிவிப்பு உண்மையானதல்ல, செயல்படுத்தும் நோக்கத்துடன் அது வெளியிடப் படவில்லை, மாறாக அதிகார மாற்றத்தை ஒத்திப்போடவே இந்தத் தந்திரோபாயம் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது, ஷெட்யூல்டு வகுப் பினருடன் ஓர் உடன்பாடு காண பெரும்பான்மை சமுதாயம் சித்தமாக இல்லாதிருப்பதற்கு இதுவே காரணம் என்று காங்கிரசும் பிற கட்சி களும் பிரசாரம் செய்கின்றன. இத்தகைய கூற்று ஆதாரமற்றது என்று காரியக் கமிட்டி கருதுகிறது; இத்தகைய ஐயத்துக்கு இடம் தராதபடி நடந்து கொள்ளும்படி மன்னர் பிரான் அரசை அது வலியுறுத்துகிறது; எக்காலத்திலும் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் இந்த அறிவிப்பின்படி நடந்துகொள்வோம் என்று தெளிவுபடுத்தும்படியும் அது அரசைக் கேட்டுக்கொள்கிறது.

## தீர்மானம் 3

### பொருள் : அரசியல் சட்டப்பாதுகாப்புகளின் இயல்பு

பின்கண்ட நிபந்தனைகளை நிறைவேற்றாத எந்த அரசிய லமைப்புச் சட்டமும் ஷெட்யூல்டு வகுப்பினர்களுக்கு ஏற்புடைய தல்ல:-

அ) அது ஷெட்யூல்டு வகுப்பினரின் சம்மதத்தைப் பெற் றிருக்க வேண்டும்;

ஆ) ஷெட்யூல்டு வகுப்பினரை ஒரு தனித்த, வேறுபட்ட சக்தியாக அது அங்கீகரிக்க வேண்டும்;

இ) பின்கண்ட நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு இதில் வழிவகை செய்யப்பட்டிருக்க வேண்டும்:

*1) ஷெட்யூல்டு வகுப்பினரின் உயர்நிலைக் கல்வி, பல்கலைக் கழகக் கல்வி, மேற்கல்வி ஆகியவற்றிற்கு மாகாண மற்றும் மத்திய அரசு வரவு செலவுத் திட்டத்தில் ஒரு குறிப்பிட்ட தொகை ஒதுக்கப்பட வேண்டும்.*

*2) ஒரு குடியேற்ற ஆணையத்தின் மூலம் ஷெட்யூல்டு வகுப்பினரின் தனிக் குடியேற்றங்களை அமைப்பதற்கு அரசு நிலங்கள் ஒதுக்கப்பட வேண்டும்.*

*3) ஷெட்யூல்டு வகுப்பினரின் தேவைகளையும், எண்ணிக்கையையும், முக்கியத்துவத்தையும் பொறுத்து பின்கண்டவற்றில் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும்:-*

i) *சட்ட மன்றங்கள்,*

ii) *ஆட்சித்துறை,*

iii) *நகரசபைகள், உள்ளாட்சி மன்றங்கள்,*

iv) *அரசுப் பணித்துறை*

v) *அரசுப் பணித்துறை ஆணையம்.*

*4) இவற்றை சட்ட மன்றங்கள் அல்லது ஆட்சித் துறை மாற்றவோ, திருத்தவோ, ரத்து செய்யவோ முடியாத அடிப்படை உரிமைகளாக அங்கீகரிக்க வேண்டும்,*

*5) அடிப்படை உரிமைகள் பற்றிய பாதுகாப்பு விதிகள் செயல்படுவது குறித்து அவ்வப்போது அறிக்கை சமர்ப்பிப்பதற்கு 1935ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின் 166ஆவது பிரிவின் படி ஆடிட்டர் - ஜெனரல் அந்தஸ்துக்கு சமமான ஓர் அதிகாரி நியமிக்கப்பட வேண்டும்; ஒரு சமஷ்டி நீதிமன்ற நீதிபதி எவ்வாறு, எந்தக் காரணங்களுக்காக பதவியிலிருந்து நீக்கப்படுகிறாரோ அவ்வாறே அவசியம் ஏற்படும் போது இந்த அதிகாரி நீக்கப்படுவதற்கு வழிவகை செய்யப்பட வேண்டும்.*

## தீர்மானம் - 4

### பொருள் : வகுப்புத் தீர்வு

வகுப்புப் பிரச்சினைக்கு ஒரு தீர்வு காண வேண்டும் என்று அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் காரியக் கமிட்டி மிகவும் ஆவலாக இருக்கிறது; ஆனால் அதே சமயம், இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே ஓர் உடன்பாடு காண்பதற்கு திரு. காந்தியும் திரு. ஜின்னாவும் இரகசிய பேச்சு வார்த்தைகள் நடத்தி வருவதை அது வன்மையாகக் கண்டிக்கிறது. ஒரு பகுதியினரிடையே மட்டும் ஏற்படும் வகுப்பு உடன்பாடு எல்லா வகைகளிலும் தீங்கானது என்று காரியக் கமிட்டி அபிப்பிராயப்படு கிறது. இது தீங்கானது, ஏனென்றால் இத்தகைய உடன்பாடு இதர சமூகங்களின் ஜீவாதார நலன்களை உதாசீனம் செய்கிறது. இது தீங் கானது, ஏனென்றால் தங்களுடைய நலன்களுக்குப் பாதகமான முறை யில் இரண்டு சமூகங்கள் ஒரு வஞ்சகமான உடன்பாட்டை செய்து கொண்டுவிட்டனவோ என்ற ஐய உணர்வை ஏனைய சமூகங்க ளிடையே தோற்றுவிக்கிறது. இது இன்னொரு வகையிலும் தீங் கானது; ஏனைய சமூகங்களை எல்லாம் விட்டுவிட்டு ஒரு குறிப் பிட்ட சமூகத்தை மட்டும் பொறுக்கியெடுத்து, அதன் பாதுகாப்புக் குத் தேவையில்லாத, ஆனால் அதன் செல்வாக்குக்கு அடிப்படை யான விசேட சலுகைகளை அந்த சமூகத்துக்கு வழங்குவது அனை வரும் சமம் என்ற கண்ணோட்டத்தில் பார்க்கும்போது அந்தஸ்தில் வேற்றுமைகளைத் தோற்றுவிக்கிறது; இது நியாயமற்றதும் வருந்தத் தக்கதுமாகும். பொது வாழ்க்கையில் எந்த இரகசியமும் கூடாது என்று இடைவிடாது உபதேசம் செய்து வந்த திரு. காந்தி இந்து- முஸ்லீம் உடன்பாடு காணுவதற்கு இரகசிய பேரத்தில் இறங்கியிருப் பது கண்டு காரியக் கமிட்டி வியப்படைகிறது. வகுப்புப் பிரச்சினைக் குத் தீர்வு காண வேண்டுமென்றால் சம்பந்தப்பட்ட தரப்பினர்கள் ஒளிவுமறைவின்றி, இரகசியமாக அன்றி பகிரங்கமான முறையில் பேச்சு வார்த்தைகளில் ஈடுபட வேண்டும், தத்தமது நலன்களைப் பற்றி பரஸ்பரம் மனம் விட்டுப் பேச வேண்டும், இதுவே வகுப்புப் பிரச்சினைக்குத் தீர்வு காணுவதற்கு சரியான, நேர்மையான வழி முறையாக இருக்க முடியும் என்று கமிட்டி கருதுகிறது.

## தீர்மானம் - 5

### பொருள் : அரசியலமைப்பைத் திருத்தியமைத்தல்

சிறுபான்மையினரின் பிரதிநிதித்துவம் சம்பந்தமாக தற்போதைய அரசியலமைப்புச் சட்டத்திலுள்ள ஷரத்துகள் எத்தகைய விவேகமான கோட்பாடு அடிப்படையிலும் அமைந்திருக்கவில்லை என்று அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் காரியக் கமிட்டி கருதுகிறது. இப்போதுள்ள ஏற்பாட்டின்படி சில சிறுபான்மையினர் தங்களுடைய மக்கட் தொகை விகிதாசாரத்துக்கு ஏற்ற பிரதிநிதித்துவத்தைக் கூடப் பெறவில்லை; அதேசமயம் வேறு சில சிறுபான்மையினருக்கு அவர்களது வரலாற்று முக்கியத்துவத்தையும் ராணுவ முக்கியத்துவத்தையும் அடிப்படையாகக் கொண்டு அவர்களது மக்கட்தொகை விகிதாசாரத்துக்கும் அதிகமாகவே பிரதிநிதித்துவம் தரப்பட்டுள்ளதைக் கமிட்டி காண்கிறது. இத்தகைய கோரிக்கைகளை அங்கீகரிப்பது இதர சிறுபான்மையினரின் நலன்களுக்கு தீங்கு விளைவிக்கும், சமூக, ஜனநாயகக் குறிக்கோளுக்கு இது முரணானது, இத்தகைய ஒரு போக்கை ஒரு போதும் அனுமதிக்கக்கூடாது என்று காரியக் கமிட்டி கருதுகிறது. சில குறிப்பிட்ட சிறுபான்மையினருக்கு விசேடப் பிரதிநிதித்துவம் அளிக்கப்படுவதை மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கையும் சைமன் கமிஷனும் கண்டித்திருக்கின்றன என்பதையும் கமிட்டி இந்த சந்தர்ப்பத்தில் சுட்டிக்காட்ட விரும்புகிறது. இந்தியாவின் அடுத்த அரசியலமைப்புச் சட்டம் குடியேற்ற நாடு என்ற முறையிலான இந்தியாவின் அரசியலமைப்புச் சட்டமாக இருக்குமாதலால் சிறுபான்மையினர் சம்பந்தமான அரசியலமைப்புச் சட்ட விதிகள் மாற்றப்பட வேண்டும், அனைத்து சிறுபான்மையினரும் சமம் என்ற கோட்பாட்டுக்கு இசைந்ததாக அவை இருக்க வேண்டும் என்று கமிட்டி கோருகிறது.

## தீர்மானம் - 6

### பொருள் : சட்டமன்றங்களிலும் ஆட்சித்துறையிலும் பிரதிநிதித்துவம்

பிரதிநிதித்துவம் விஷயத்தில் ஒரு சமூகத்துக்கும் இன்னொரு சமூகத்துக்கும் இடையே எத்தகைய பாரபட்சமும் பாகுபாடும்

காட்டப்படுவதை ஷெட்யூல்டு வகுப்பினர் பொறுத்துக் கொள்ள மாட்டார்கள்,. முஸ்லீம் சமூகத்தினரது கோரிக்கைகள் விஷயத்தில் கடைப்பிடிக்கப்படும் அதே கோட்பாடுகளின் அடிப்படையில், அதே வழிமுறைகளின் அடிப்படையில் மாகாண சட்டமன்றங்களிலும், மத்திய சட்ட மன்றத்திலும், மாகாண நிர்வாகத்திலும், மத்திய நிர்வாகத்திலும் இட ஒதுக்கீடு செய்யப்பட வேண்டும் என்று அவர்கள் கோருவார்கள் என்பதை அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் காரியக் கமிட்டி திட்டவட்டமாகவும், தெள்ளத் தெளிவாகவும், ஆணித்தரமாகவும் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறது.

## தீர்மானம் - 7

### பொருள் : வாக்காளர் தொகுதிகள்

கூட்டுவாக்காளர் தொகுதிகள் முறை ஷெட்யூல்டு வகுப்பினர்கள் தங்களுடைய உண்மையான திறமையான பிரதிநிதிகளை சட்டமன்றங்களுக்கு அனுப்புவதற்கு அவர்களுக்குள்ள உரிமையைப் பறித்து விடுகிறது, அதே சமயம் இந்து பெரம்பான்மையினரின் எடுப்பார் கைப்பிள்ளைகளாக, கைக்கூலிகளாக இருப்பதற்குத் தயாராக இருக்கும் ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்த உறுப்பினர்களை வேட்பாளர்களாக நியமிப்பதற்கு நடைமுறையில் உரிமை பெற்றுள்ளனர் என்பதை கடந்த தேர்தல் அனுபவம் மெய்ப்பித்திருக்கிறது என அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் காரியக் கமிட்டி கருதுகிறது. எனவே, கூட்டு வாக்காளர் தொகுதிகள் மற்றும் இட ஒதுக்கீட்டு முறையை ரத்து செய்துவிட்டு அதற்குப் பதிலாக தனி வாக்காளர் தொகுதி முறையைக் கொண்டுவர வேண்டும் என்று சம்மேளனத்தின் காரியக் கமிட்டி கோருகிறது.

## தீர்மானம் - 8

### பொருள் : ஆட்சித்துறைக் கட்டமைப்பு

அனைத்து வகையான செல்வமும், சொத்துகளும், வணிகமும், தொழிலும் பெரும்பான்மை சமூகத்தினரின் கைகளில் குவிந்திருப்பது மட்டுமன்றி, முழு அரசு நிர்வாகமும் கூட பெரும்பான்மை சமூகத்தினரின் கட்டுப்பாட்டில் இருந்து வருகிறது, இதுவன்றி இச் சமூகத்

தைச் சேர்ந்தவர்களே அரசுப் பணித்துறையில் உயர் பதவிகள், கீழ்ப் பதவிகள் முதலிய எல்லாப் பதவிகளையுமே ஏகபோகமாக்கிக் கொண்டிருக்கின்றனர் என்பதை அகில இந்திய ஷெட்யூல்டு வகுப் பினர் சம்மேளனத்தின் காரியக் கமிட்டி கருத்திற் கொள்கிறது. இதை மிகவும் அபாயகரமான போக்காக காரியக் கமிட்டி பார்க்கிறது. இந்தச் சந்தர்ப்ப சூழ்நிலைமைகள் எல்லாம் ஒன்றுசேர்ந்து சிறு பான்மையினரின் குரல் வளையைப் பிடித்து நெரிப்பதற்கு, அவர் களது முதுகில் ஏறி அமர்ந்து ஆதிக்கம் செலுத்துவதற்கு பெரும் பான்மையினருக்கு முழு அதிகாரம் வழங்குவதால் இது சிறுபான்மை யினரை மிகுந்த அச்சம் கொள்ளச் செய்துள்ளது. இந்த ஆதிக்கப் பிடி, வர்மப்பிடி அச்சம் 1935ஆம் வருட இந்திய அரசாங்க சட்டத் தில் நிர்வாகத்துறை சம்பந்தமாக இடம் பெற்றுள்ள அரசியலமைப்புச் சட்ட விதிகளால் மேலும் அதிகரித்துள்ளது. சட்டசபையிலுள்ள பெரும்பான்மையினர் சிறுபான்மையினரின் விருப்பத்தைக் கணக்கி லெடுத்துக் கொள்ளாமலேயே அரசாங்கம் அமைப்பதை இந்த விதிகள் அனுமதிக்கின்றன.

ஒரு மாற்று ஆட்சித் துறை அமைப்பு இல்லாத நிலைமையில் பார்லிமெண்டரி ஆட்சி முறை ஏற்கப்பட வேண்டியிருப்பினும் பார்லி மெண்டரி அமைச்சரவை முறையை அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் வன்மையாக, திட்டவட்டமாக எதிர்க் கிறது. ஏனென்றால் இது நிர்வாக அதிகாரத்தை பெரும்பான்மை வகுப்பினரிடம் ஒப்படைக்கிறது; ஏற்கெனவே ஆட்சி பரிபாலனத் துறையில் நுழைந்து ஆழமாகக் காலூன்றிவிட்ட பெரும்பான்மை வகுப்பினர் சிறுபான்மையினருக்கு ஆபத்தானவர்களாக இருந்து வருகின்றனர். எனவே, பார்லிமெண்டரி அமைச்சரவை முறை இந்திய நிலைமைகளுக்கு ஏற்றதல்ல, அதற்குப் பதிலாக, சிறுபான்மை யினருக்குப் பந்தோபஸ்து உணர்வை ஊட்டக்கூடியதும், அவர் களது ஆர்வ விருப்பங்களைக் கணக்கிலெடுத்துக் கொள்ளக்கூடியது மான அமைச்சரவை அமைப்பதற்கு வழி செய்யக்கூடிய வேறொரு முறையைக் கொண்டுவர வேண்டுமென்று காரியக் கமிட்டி கருதுகிறது.

மாகாணங்களிலும் மத்தியிலும் ஆட்சி பின்வருமாறு அமைக்கப் பட வேண்டும் என்று காரியக் கமிட்டி வலியுறுத்துகிறது:-

i) அமைச்சரவை ஒரு பிரதமரையும் இதர அமைச்சர் களையும் கொண்டதாக இருக்க வேண்டும்; அரசியலமைப்புச் சட்டத்தில் வரையறுத்துக் கூறியுள்ள விகிதாசார அடிப்படையில்

பொது சமூகத்தினரையும் சிறுபான்மை சமூகங்களையும் சேர்ந் தவர்களாக இவர்கள் இருக்க வேண்டும்.

ii) பொது சமூகத்தைச் சேர்ந்த பிரதமரும் அமைச்சர் களும் சபை முழுவதாலும் ஒற்றை மாற்றுவாக்கு முறை மூலம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

ii) சிறுபான்மை வகுப்பினர்களைப் பிரதிநிதித்துவப் படுத்தும் அமைச்சர்கள் பல்வேறு சமூகங்களையும் பிரதிநிதித்துவப் படுத்தும் உறுப்பினர்களால் ஒற்றை மாற்று வாக்கு முறை மூலம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

iV) அமைச்சரவை உறுப்பினர்கள் சட்ட மன்ற உறுப்பினர் களாக இருக்க வேண்டும், கேள்விகளுக்கு பதிலளிக்க வேண்டும், வாக்களிக்க வேண்டும், விவாதங்களில் பங்கெடுக்கக் கொள்ள வேண்டும்.

V) அமைச்சரவையில் ஏற்படும் எந்தக் காலி இடங் களும் மூல நியமன விதிகளுக்கு இணங்க நிரப்பப்பட வேண்டும்.

vi) அமைச்சரவையின் பதவி காலம் சட்டசபையின் பதவி காலத்துடன் முடிவடையும்.

## தீர்மானம் - 9

### பொருள் : அரசுப் பணித்துறைகள்

ஓர் அரசாங்கத்தை ஆட்களைக் கொண்டதாக அல்லாமல் சட்டங்களைக் கொண்டதாக திட்டமிடுவது விரும்பத்தக்கதுதான் என்றாலும் ஓர் அரசாங்கம் எவ்விதம் ஒழுங்கமைக்கப்பட்டாலும் அது ஆட்களைக் கொண்டதாகவே இருக்கும் என்பதை மறந்து விடக்கூடாது. இவ்வாறு இருப்பதால், ஓர் அரசாங்கம் நல்ல அரசாங்கமா, கெட்ட அரசாங்கமா என்பதும், பொது விவகாரங்கள் நிர்வாகம் எந்த அளவுக்கு அரசியல் சார்பற்றதாக, பாரபட்சமற்ற தாக அமைந்துள்ளது என்பதும் சட்டத்தைப் பரிபாலனம் செய்ய நியமிக்கப்படுபவர்களது உணர்வையும், கண்ணோட்டத்தை யும், நேர்மைப் போக்கையுமே பொறுத்திருக்கும். சாதி வெறியும், குறுகிய மனோபாவமும், நேர்மையின்மையும், ஷெட்யூல்டு வகுப் பினர்கள் பால் பகைமையும் குரோதமும் வெறுப்பும் கொண்டவர்கள்

ஆதிக்கம் செலுத்தும் இப்போதைய நிர்வாகத்திடமிருந்து ஷெட்யூல்டு வகுப்பினர் ஒருபோதும் பாதுகாப்பையும், நியாயத்தையும், பரிவையும் பெற முடியாது என்று திடமான முடிவுக்கு அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் வந்திருக்கிறது. எனவே, முஸ்லீம் சமூகத்தினருக்குள்ள அதே விகிதாசாரத்தில் அரசுப் பணித் துறைகளில் இட ஒதுக்கீடு பெறுவதற்கு ஷெட்யூல்டு வகுப்பினருக்குள்ள உரிமை அரசியல் சட்ட ரீதியில் அங்கீகரிக்கப் பட வேண்டும் என்று காரியக் கமிட்டி கோருகிறது.

## தீர்மானம் - 10

### பொருள் : கல்வி வசதி பெறும் உரிமை

ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்தவர்கள் அதிகார வலிமை படைத்த பதவிகளில் இருந்தாலொழிய ஷெட்யூல்டு வகுப்பினர் கடந்த காலத்தில் போலவே அரசாங்கத்தினதும் பொதுமக்களதும் அவமதிப்புக்கும், அநீதிக்கும், ஏளனத்துக்கும், பழிப்புக்கும், நையாண்டிக்கும் தொடர்ந்து ஆளாகி வரவே செய்வார்கள் என்று அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் காரியக் கமிட்டி உணர்கிறது. எனவே, ஷெட்யூல்டு வகுப்பினரிடையே உயர் கல்வியும், மேற்கல்வியும் பரவுவது ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்தது என்று காரியக் கமிட்டி கருதுகிறது. ஆனால் இத்தகைய மிக முன்னேற்றமடைந்த கல்வியைப் பெறுவது ஷெட்யூல்டு வகுப்பினர்களின் சக்திக்கு அப்பாற்பட்டது என்பதை மறுக்க முடியாது. இது விஷயத்தில் அரசாங்கத்துக்கு மிகப் பெரும் பொறுப்பு இருக்கிறது, இப்பணிக்கு அது போதிய நிதி ஒதுக்குவது அவசியம் என்று கமிட்டி நம்புகிறது. இவ்வாறு செய்வதை அரசியலமைப்புச் சட்டம் மாகாண மற்றும் மத்திய அரசாங்கங்களின் முக்கிய கடமையாக்க வேண்டும். அரசியலமைப்புச் சட்டத்தில் நிர்ணயித்துக் கூறியுள்ளவாறு ஷெட்யூல்டு வகுப்பினரின் கல்விக்காக அதிலும் குறிப்பாக அவர்களது முன்னேற்றமடைந்த கல்விக்காக மாகாண அரசாங்கங்களும் மத்திய அரசாங்கமும் அவற்றின் வருடாந்தர வரவு செலவுத் திட்டத்தில் குறிப்பிட்ட தொகைகளை ஒதுக்க வேண்டும்; இதனை தங்களது வருவாயில் முதல் செலவினமாக அவை கருத வேண்டும்.

## தீர்மானம் 11

பொருள் : தனிக் குடியேற்றங்கள்

அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் பின்வருமாறு கருதுகிறது:-

அ) ஷெட்யூல்டு வகுப்பினர் ஜீவனோபாயத்துக்கு வழியின்றி, இந்துக்களுடன் ஒப்பிடும்போது சிறு எண்ணிக்கையினராக இந்து கிராமத்தின் புற எல்லைகளில் அந்நியர்கள் போல் வாழ்ந்து வரும் வரை அவர்கள் தொடர்ந்து தீண்டப்படாதவர்களாகவே இருந்து வருவார்கள்; இந்துக்களின் ஈவு இரக்கமற்ற, நெஞ்சீரமற்ற அடக்குமுறைக்கும் ஒடுக்குமுறைக்கும் ஆளாகி வருவார்கள், அவர்களால் சுதந்திரமான, முழு நிறைவான வாழ்க்கை வாழ முடியாது.

ஆ) சாதி இந்துக்களின் கொடுங்கோன்மையிலிருந்தும், அரக்கத்தனமான ஒடுக்குமுறையிலிருந்தும் அதிலும் சுயராஜ்யத்தில் இந்த அவலம் மேலும் அதிகரிக்கக்கூடிய சாத்தியக்கூறு இருக்கும் போது, ஷெட்யூல்டு வகுப்பினரை சிறப்பாக, திறம்படப் பாதுகாப்பதற்காகவும், அவர்களது மன உரத்தை, திறத்தை முழு வளர்ச்சி பெறச் செய்வதற்காகவும், அவர்களுக்குப் பொருளாதாரப் பாதுகாப்பும் சமூக பந்தோபஸ்தும் அளிப்பதற்காகவும், அத்தோடு தீண்டாமையை வேரோடு வேரடி மண்ணோடு வெட்டி சாய்ப்பதற்காகவும் அரசியல் சட்டத்தில் பின்கண்ட வழிவகை ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும் என்று காரியக் கமிட்டி கோருகிறது:-

1) ஷெட்யூல்டு வகுப்பினரை இப்போதைய அவர்களது இருப்பிடங்களிலிருந்து இடமாற்றம் செய்வதற்கும், இந்து கிராமங்களுக்கு அப்பால், அவற்றுடன் எவ்வகையிலும் ஒட்டும் உறவும் இல்லாத தனி ஷெட்யூல்டு வகுப்பு கிராமங்களை அமைப்பதற்கும்;

2) ஷெட்யூல்டு வகுப்பினர்களை அந்தப் புதிய கிராமங்களில் குடியமர்த்துவதற்கும் ஒரு குடியேற்ற ஆணையத்தை அமைப்பதற்கு அரசியலமைப்புச் சட்டத்தில் வழிவகை செய்யப்பட வேண்டும்.

3) சாகுபடிக்கு லாயக்கானவையும், வேறு எவரும் குடியேறாதவையும், உழுது பண்படுத்தக் கூடியவையுமான எல்லா

அரசு நிலங்களும் ஷெட்யூல்டு வகுப்பினரின் புதிய குடியேற்றங்களை உருவாக்கும் நோக்கத்திற்காக இந்த ஆணையத்தின் பொறுப்பில் விடப்பட வேண்டும்.

4) ஷெட்யூல்டு வகுப்பினரின் குடியேற்றத் திட்டத்தைப் பூர்த்தி செய்யும் பொருட்டு, நிலங்களைக் கைப்பற்றும் சட்டத்தின்படி தனி நபர்களிடமிருந்து புதிய நிலங்களை வாங்குவதற்கு ஆணையத்துக்கு அதிகாரம் அளிக்கப்பட வேண்டும்.

5) இந்தப் பணியை நிறைவேற்றுவதற்காக ஆண்டுக்குக் குறைந்தபட்சம் 5 கோடி ரூபாய் குடியேற்றத்துக்கு மானியத் தொகையாக வழங்கப்பட வேண்டும்.

## தீர்மானம் 12

''அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரிடம் முழு நம்பிக்கை வைக்க ஒருமனதாக முடிவு செய்கிறது; சம்மேளனத்தின் சார்பிலும் ஷெட்யூல்டு வகுப்பினர் சார்பிலும் இதர அரசியல் கட்சிகளுடனோ அல்லது அவற்றின் தலைவர்களுடனோ அவசியம் நேரிடும்போது பேச்சுவார்த்தைகள் நடத்துவதற்கு அவருக்கு அதிகாரம் அளிக்கிறது.''

★★★

## பின் இணைப்பு XII

## பிரிட்டிஷ் இந்தியாவின் மாகாணங்களில் சிறுபான்மையினரின் வகுப்புவாரி மக்கட் தொகை

| மாகாணங்கள் | மொத்த மக்கட் தொகை | முஸ்லீம்கள் | | தாழ்த்தப்பட்ட வகுப்பினர் | | இந்தியக் கிறித்தவர்கள் | | சீக்கியர்கள் | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | மக்கட் தொகை | சத விகிதம் | மக்கட் தொகை | சத விகிதம் | மக்கட் தொகை | சத விகிதம் | மக்கட் தொகை | சத விகிதம் |
| ஆஜ்மீர் - மேர்வாரா | 583,693 | 89,899 | 15.4 | இல்லை | - | 3,895 | .8 | 867 | .15 |
| அந்தமான் நிக்கோபார் | 33,768 | 8,005 | 23.7 | இல்லை | - | 779 | 2.3 | 744 | 2.2 |
| அசாம் | 10,204,733 | 3,44,479 | 33.7 | 679,291 | 6.6 | 37,750 | .4 | 3,464 | .03 |
| பிரிட்டிஷ் பலுச்சிஸ்தான் | 501,631 | 438,930 | 87.5 | 5,102 | 1.0 | 2,633 | .5 | 11,918 | 2.3 |
| வங்காளம் | 60,306,525 | 33,005,434 | 54.7 | 7,878,970 | 13.0 | 110,923 | .2 | 16,281 | .03 |
| பீகார் * | 36,340,151 | 4,716,314 | 12.9 | 4,840,379 | 13.3 | 24,693 | .07 | 13,213 | .04 |
| பம்பாய் | 20,849,840 | 1,920,368 | 9.2 | 1,855,148 | 8.9 | 338,812 | 1.6 | 8,011 | .04 |
| மத்திய மாகாணங்கள் & பேரார் * | 16,813,584 | 783,697 | 4.7 | 3,051,413 | 18.1 | 48,260 | .3 | 14,996 | .09 |
| குடகு | 168,726 | 14,780 | 8.8 | 25,740 | 15.3 | 3,309 | 2.0 | இல்லை | — |
| டில்லி | 917,939 | 304,971 | 33.2 | 121,693 | 13.3 | 10,494 | 1.1 | 16,157 | 1.8 |
| சென்னை | 49,341,810 | 3,896,452 | 7.9 | 8,068,492 | 16.4 | 2,001,082 | 4.06 | 418 | .001 |
| வ.மே.எ.மா. | 3,038,067 | 2,788,797 | 91.8 | இல்லை | - | 5.426 | .2 | 57,989 | 1.9 |

இந்தியர்களாகவே இருப்பர்; யுத்தசபையின் உறுப்பினர் என்ற தமது அந்தஸ்தை வைசிராய் பாதுகாப்பார். பிரிட்டிஷ் இந்தியாவைப் பொறுத்தவரை இதுவரை வைசிராய் கவனித்து வந்த வெளிவிவகாரத் துறையை நிர்வாகசபையிலுள்ள ஓர் இந்திய உறுப்பினரிடம் ஒப் படைப்பதற்கும் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

தவிரவும், ஏனைய குடியேற்ற நாடுகளில் செய்திருப்பது போன்று, இந்தியாவில் பிரிட்டனின் வர்த்தக நலன்களையும் ஏனைய நலன்களையும் கவனித்துக்கொள்ளும் பொருட்டு இந்தியாவில் ஒரு பிரிட்டிஷ் ஹைக் கமிஷனரை நியமிக்கவும் திட்டமிடப்பட்டிருக் கிறது.

இத்தகைய ஒரு நிர்வாகசபை தன்னாட்சி திசைவழியில் எடுத்துக்கொள்ளப்படும் ஒரு திட்டவட்டமான முன்னேற்ற நட வடிக்கையாக இருக்கும் என்பதிலும் ஐயமில்லை. இந்த சபை ஏறத் தாழ முற்றிலும் இந்தியர்களைக் கொண்டதாகவே இருக்கும்; நிதித் துறை உறுப்பினரும் உள்துறை உறுப்பினரும் முதல தடவையாக இந்தியர்களாகவே இருப்பர். தவிரவும், அரசியல் தலைவர்களைக் கலந்தாலோசித்த பிறகே நிர்வாக சபை உறுப்பினர்களை கவர்னர்-ஜெனரல் நியமிப்பார்; எனினும் அவர்களது நியமனத்துக்கு மாட் சிமை தங்கிய சக்கரவர்த்தியின் அங்கீகாரத்தைப் பெற வேண்டி யிருக்கும்.

தற்போதைய அரசியலமைப்புக் கட்டுக்கோப்புக்குள் நிர்வாக சபை செயல்படும்; கவர்னர்-ஜெனரல் அரசியல் சட்ட ரீதியான தமது கட்டுப்பாட்டு அதிகாரத்தைச் செலுத்துவார் என்பதில் ஐயமில்லை; ஆனால் இத்தகைய அதிகாரம் நியாயமற்ற முறையில் பிரயோகிக்கப் பட மாட்டாது.

இந்த இடைக்கால அரசாங்கம் இறுதியான அரசியலமைப்பு ஏற்பாட்டுக்கு எவ்வகையிலும் இடையூறாக, குந்தகமாக இருக்கக் கூடாது என்பதை நான் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

இந்தப் புதிய நிர்வாக பையின் பிரதான பணிகள் பின்கண்ட வாறு அமைந்திருக்கும்:

முதலாவதாக, ஜப்பான் முற்றிலுமாகத் தோற்கடிக்கப்படும் வரைஜப்பானுக்கு எதிரான யுத்தத்தை முழு ஆற்றலோடு நடத்துவது.

இரண்டாவதாக, ஒரு புதிய நிரந்தரமான அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்குவது குறித்து உடன்பாடு ஏற்பட்டு, அது நடை முறைக்கு வரும்வரை யுத்தப் பிற்காலத்தில் எதிர்ப்படும் பல்வேறு வகையான பணிகளை நிறைவேற்றும் வகையில் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தை நடத்திச் செல்லுவது.

மூன்றாவதாக, இத்தகைய ஓர் உடன்பாட்டை எய்துவதற் கான வழிதுறைகளை இந்த இடைக்கால அரசாங்கம் பரிசீலிப்பது, இந்த மூன்றாவது பணி மிக முக்கியமானதாகும். ஒரு நீண்டகாலத் தீர்வு காண வேண்டிய அவசியத்தை நானும் மன்னர்பிரான் அரசும் பெரிதும் உணர்ந்திருக்கிறோம் என்பதையும், இப்போது முன் வைக்கப்பட்டிருக்கும் இப்பிரேரணைகள் நீண்டகாலத் தீர்வு காணு வதற்குத் துணை புரியும் என்பதையும் பெரிதும் தெளிவுபடுத்த விரும்பு கிறேன்.

இத்தகைய ஒரு நிர்வாக சபையை அமைப்பதற்கான சிறந்த வழிவகைகளை நான் பரிசீலித்து வருகிறேன்; இது விஷயத்தில் எனக்கு ஆலோசனை கூற பின்கண்டவர்களை வைசிராய் மாளிகைக்கு அழைப்பதெனத் தீர்மானித்திருக்கிறேன்:

மாகாண அரசாங்கங்களில் தற்போது பிரதமர்களாகச் செயல் பட்டு வருபவர்கள் அல்லது இந்திய அரசாங்கச் சட்டம் 93 ஆவது பிரிவின் கீழுள்ள மாகாணங்களில் ஏற்கெனவே பிரதமர்களாகச் செயல்பட்டு வந்தவர்கள்.

மத்திய சட்டமன்றத்தில் காங்கிரஸ் கட்சியின் தலைவராக இருப்பவர்; அதேபோன்று முஸ்லீம் லீகின் துணைத் தலைவராக இருப்பவர்; மேலவையில் காங்கிரஸ் கட்சியின் தலைவராக இருப் பவர்; அதே அவையில் முஸ்லீம் லீகின் தலைவராக இருப்பவர்; இவர்களை அன்றி கீழவையில் தேசியக் கட்சி மற்றும் ஐரோப் பியக் குழுவின் தலைவர்கள்.

இரண்டு பிரதான அரசியல் கட்சிகளின் பிரபல தலைவர் களான திரு. காந்தி மற்றும் திரு. ஜின்னா.

ஷெட்யூல்டு வகுப்பினர்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதற்கு ராவ் பகதூர் என். சிவராஜ், சீக்கியர்கள் சார்பில் மாஸ்டர் தாராசிங்.

இந்தக் கனவான்களிடம் இன்று அழைப்பிதழ்கள் தரப்படுகின்றன; ஜுன் 25 ஆம் தேதி இந்த மாநாட்டை சிம்லாவில் கூட்டுவதற்கு முடிவு செய்யப்பட்டிருக்கிறது. டில்லியை விட சிம்லா குளிர்ச்சியாக இருக்கும்.

அழைப்பிதழ்கள் அனுப்பப்பட்டவர்கள் அனைவரும் மாநாட்டில் கலந்து கொண்டு, எனக்கு உறுதுணை புரிவார்கள் என்று நம்புகிறேன். இந்தியாவின் எதிர்காலத்தை இறுதியாக முடிவு செய்யும் திசைவழியில் முன்னேற்றம் காண விழையும் இந்தப் புதிய முயற்சியில் என்மீதும் இவர்கள் மீதும் மிகப்பெரும் பொறுப்பு விழுந்துள்ளது.

இந்தக் கூட்டம் வெற்றி பெறுமானால், மத்தியில் புதிய நிர்வாகசபை அமைப்பது சம்பந்தமாக ஓர் உடன்பாட்டுக்கு வர முடியும் என்று நம்புகிறேன். மேலும் அரசியலமைப்புச் சட்டத்தின் 93 ஆவது பிரிவின் கீழ் தற்போது நிர்வகிக்கப்படும் மாகாணங்களில் அமைச்சரவைகள் மீண்டும் பதவியேற்பது சாத்தியமாகும் என்றும், இந்த அமைச்சரவைகள் கூட்டு அமைச்சரவைகளாக இருக்கக் கூடும் என்றும் நம்புகிறேன்.

துரதிர்ஷ்டவசமாக இந்தக் கூட்டம் தோல்வியுறுமானால், சம்பந்தப்பட்ட கட்சிகள் உடன்பாட்டிற்கு வரும்வரை இப்போது போலவே நாம் நிர்வாகத்தை நடத்தி வருவோம். இதர ஏற்பாடுகள் குறித்து உடன்பாட்டுக்கு இயலவில்லை என்றால் இந்தியாவின் நலனுக்காக சிறந்த பணியாற்றியுள்ள இப்போதைய நிர்வாக சபையே தொடரும்.

எனினும் கட்சித் தலைவர்கள் என்னுடனும் பரஸ்பரம் தங்களுக்குள்ளும் ஒத்துழைக்கும் உளப்பூர்வமான நோக்கத்தோடு பிரச்சினையை அணுகினார்களேயானால் இந்தக் கூட்டம் வெற்றியடையும் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. இந்தியா தனது இலட்சியத்தை அடைவதற்கு உதவ வேண்டும் என்ற மிக மெய்யான ஆர்வம் பிரிட்டனிலுள்ள பொறுப்பு வாய்ந்த அனைத்துத் தலைவர்களிடமும், ஒட்டுமொத்தத்தில் பிரிட்டிஷ் மக்கள் எல்லோரிடமும் காணப்படுகிறது; இந்த ஆர்வமே இந்தப் பிரேரணைக்குப் பின்னால்

கூறலாம்; இவ்வாறே, அரசியல் மனோபாவம் படைத்த ஒவ்வொரு இந்தியன் மனத்தையும் இது புண்படுத்தியிருக்கும் என்பதில் ஐய மில்லை. ''சாதி இந்துக்கள்'' என்று அவர் பயன்படுத்திய பதத்தைத் தான் இங்கு குறிப்பிடுகிறேன். அரசியல் ரீதியில் பேசுவதானால் ''சாதி இந்து'' என்று எவரும் இல்லை என்றே கூறுவேன்; அதிலும் அர சியல் சுதந்திரத்திற்காகப் பாடுபடும் காங்கிரஸ் இந்தியா முழுவதை யும் பிரதிநிதித்துவப்படுத்துகிறது. இந்து மகாசபையைச் சேர்ந்த வீர சவர்க்காரோ அல்லது டாக்டர் சியாம பிரசாத் முகர்ஜியோ சாதி இந்துக்களைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறார்களா? சாதி வேறு பாடின்றி அவர்கள் அனைத்து இந்துக்களையும் பிரதிநிதித்துவப் படுத்தவில்லையா? இந்த இந்துக்களில் தீண்டப்படாதோர் எனப்படு வோரும் அடங்கவில்லையா? அவர்கள் தங்களைச் சாதி இந்துக்கள் என்று கூறிக் கொள்ள முடியுமா? நான் அவ்வாறு நினைக்கவில்லை. அரசியல் மனோபாவம் படைத்த இந்துக்களில் சாதிவேறுபாடு காட்டும் மதிப்பிற்குரிய பண்டிட் மாளவியாஜி கூட மற்ற இந்துக் களிடமிருந்து வேறுபடுத்தித் தம்மை சாதி இந்து என்று அழைத்துக் கொள்ள நிச்சயம் மறுக்கவே செய்வார். இந்து சமுதாயத்தில் பிற் போக்குச் சக்திகள் இருப்பதை நான் அறிவேன்; இருப்பினும் எல்லா சாதிவேறுபாடுகளையும் ஒழித்துக்கட்ட வேண்டும் என்பதே இந்து சமயத்தில் தற்போது நிலவிவரும் போக்காகும். எனவே, விவரம் தெரியாமல்தான் வைசிராய் இந்தப் பதத்தைப் பிரயோகித்திருக்கிறார் என்று நினைக்கிறேன். இந்து சமுதாயத்தின் உணர்வுகளை வேண்டு மென்றே புண்படுத்த வேண்டும் அல்லது அதனைப் பிளவுபடுத்த வேண்டும் என்ற எண்ணம் வைசிராய்க்கு இருந்திருக்காது என்றே கருதுகிறேன். அரசியல் விழிப்புணர்வு கொண்ட இந்துக்களின் மனத்தை இது பெரிதும் புண்படுத்தும், இதனால் பல அரசியல் விளைவுகள் ஏற்படக்கூடும் என்பதால்தான் இந்தப் பிரச்சினையைச் சுட்டிக் காட்ட வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது; இல்லையென்றால் இதனைப் பெரிதாக எடுத்துக் கொண்டிருக்க மாட்டேன்.

ஆரம்பத்திலேயே பிளவு போக்குகளுக்கு எத்தகைய இடமும் தராமல், உகந்த அரசியல் சூழ்நிலையில் உத்தேச மாநாடு நடை பெறுமானால் அது பயனுள்ள பணியாற்ற முடியும். மாநாட்டுக்கு அழைக்கப்பட்டிருப்போர் அனைவரும் இந்திய சமுதாயத்தின் பல் வேறு பகுதியினரைப் பிரதிநிதித்துவப் படுத்துவோராக அல்லாமல் இந்தியாவின் இலட்சியத்தை ஈட்டுவதில் ஒன்றுபட்ட இந்தியர் களாகச் செயல்பட வேண்டும்.

புலாபாய் - லியக்கத் அலி ஒப்பந்தத்தை இந்தக் கண்ணோட்டத்திலிருந்துதான் நான் பார்க்கிறேன்; நடைபெறவிருக்கும் வைசிராயின் மாநாட்டுக்கு இது வலுவான அடித்தளங்களை இடும் என்று நம்புகிறேன். திரு. புலாபாய் தேசாயின் பிரேரணை வைசிராயின் வானொலி உரை போன்று வண்ணப்பகட்டானதாக இல்லாதிருக்கலாம். இந்தப் பிரேரணை குறித்து திரு. புலாபாய் தேசாய் என்னைக் கலந்தாலோசித்தபோது, அவருக்கு ஆலோசனை கூறுவதில் நான் ஆற்றிய பங்கு பற்றி நான் வெட்கப்படவில்லை. வகுப்புச் சிக்கலைத் தீர்ப்பதற்கு உதவக்கூடியது அவரது பிரேரணை என்று கருதினேன். இந்தப் பிரேரணையை ஏன் ஏற்க வேண்டுமென்பதற்கான காரணங்களை காரியக்கமிட்டி உறுப்பினர்களிடம் எடுத்துக் கூறி அவர்களை இணங்க வைக்க முயல்வதாக திரு. புலாபாய் தேசாய்க்கு உறுதி கூறினேன். இந்தப் பிரேரணையில் சம்பந்தப்பட்ட இரு தரப்புகளும் தத்தமது நலன்களை உரிய முறையில் பிரதிபலித்து, சுதந்திர இந்தியாவைத் தமது பொது லட்சியமாகக் கொண்டிருப்பார்களேயானால் எல்லாம் நல்ல விதமாக முடியும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

இத்துடன் நான் நிறுத்திக் கொள்கிறேன்; இதற்கு மேல் காரியக் கமிட்டிதான் நடவடிக்கை எடுக்க வேண்டும். இந்தப் பிரச்சினைகள் குறித்த காங்கிரசின் கருத்துகளை அதன் உறுப்பினர்கள்தான் தெரிவிக்க வேண்டும்.



# சிறப்புப் பெயரகராதி

★ ★ ★

